# அம்மா

## ரா.கணபதி



ஸமுன்மீலத் ஸம்வித் கமல மகரந்தைக ரஸிகம்
பஜே ஹம்ஸ த்வந்த்வம் கிமபி மஹதாம் மானஸ சரம் ।
யதாலாபாத் அஷ்டாதசகுணித வித்யா பரிணதி:
யதாதத்தே தோஷாத் குணமகிலம் அத்ப்ய: பய இவ ॥

• • •

அற்புத ஹம்ஸத் தம்பதியாம்!
அறிவுக்கமல மது அருந்துவராம்!
அருளுடை மனப்பொழில் நீந்துவராம்!
அருங்கலை அனைத்தும் அளிப்பவராம்!
அற்பர்நம் குற்றமாம் அப்பினை நீக்கி
சொற்பமே காணும் குணப்பால் கொள்ளும்.
அன்ன வடிவான அன்னையை அண்ணலை
அன்புடன் உன்னி இன்புறுவோமே!

ஆதிசங்கரர் அருளிய ஸௌந்தர்ய லஹரீ
(ச்லோ.38)

சாந்தாம் சாரத பார்வணேந்து வதனாம்
பத்மாஸனே ஸம்ஸ்திதாம்
பக்த்யா பாவன ராமக்ருஷ்ண
சரணாம்போஜாம் பஜந்தீம் சிவாம் |
ஸம்ஸாரானல தக்த பக்த ஹ்ருதயே
சச்வத் க்ருபா வர்ஷணீம்
அம்பாம் நிஸ்துல கிர்த்தனீய சரிதாம்
ஸ்ரீ சாரதாம் பாவயே ||

(தேவி சாரதாமணி தியானம்)

• • •

சாந்தை, சரத்கால சந்திர முகத்தினள்,
சாற்றறும் பதுமாசனத்தினில் வீற்றவள்
பாவனர் ராமகிருஷ்ணரின் பதமலர்
பக்தியுடன் பணி பரமசிவை அவள்,
அனலென பவத்தீ அல்லல்செய் உள்ளத்தில்
அனவரதம் அருள் மழையினைப்
பொழிபவள்,
நிகரிலை இவளது வாழ்வெனப் போற்றிப்
பகரரும் சரிதைகொள் சாரதை
அம்பிகை,
நினைவினை நெஞ்சினுள்
நிறைத்திடு வோமே!









# படித்துறையிலே...

புண்ணிய தீர்த்தத்தின் படித்துறையில் நிற்கிறோம். அலை எழாத தெளிந்த திருக்குளம் அது. தடாகத்தைப் பார்க்கும்போதே ரம்மியமாக இருக்கிறது. ஆனாலும் குளத்தில் அழுந்திக் குளித்துப் பழகாதவருக்கு உரிய கூச்சமும் உண்டாகிறது. புண்ணிய தீர்த்தத்தில் காலை வைத்துப் பிரவேசிப்பதா, தெளிந்த தடாகத்தில் துளைந்து கலக்கலாமா என்று மனக் கலக்கம் உண்டாகிறது. சாரதையின் சரிதை மகத்தான புண்ணிய தீர்த்தம்.

சொல்லினுக்(கு) எளிதாகவும் நின்றிடாள்
சொல்லை வேறிடம் செல்ல வழிவிடாள்

என்று கவி பாடியது போல, வார்த்தையில் வடிக்க முடியாத சரிதத்தை எழுதச் செய்து விட்டாள். ''வேதாந்திகளுக்குப் பிரம்மசூத்திரம் — உபநிஷதம் — கீதை ஆகியவை 'பிரஸ்தான த்ரயம்' என்ற முப்பெரும் பிரமாண நூல்களாவது போல், ராமகிருஷ்ண பக்தர்களுக்கு குருமகராஜ் — தூய அன்னை — விவேகானந்தர் ஆகிய மூவர் சரிதங்கள் பிரஸ்தான த்ரயமாகும். இவற்றில் இரண்டினை எழுதியதால் மூன்றாவதையும் எழுதி நிறைவு செய்ய வேண்டும்'' என்று மயிலை ராமகிருஷ்ண மடத்துப் பிரம்மசாரி தயாள் வலியுறுத்தியதை மறுக்க இயலவில்லை. அசட்டுத் துணிச்சலுடன் தடாகக் 'கரைக்கு வந்தாகிவிட்டது!

அவளது சரிதைக்கு நிகரில்லை (நிஸ்துல சரிதாம்)' என்கிறது, சாரதாமணி தேவியின் தியான சுலோகம். இது உபசார வார்த்தை அல்ல. மெய்யாகவே, மற்ற பல மகாபுருஷர்களின் வரலாறுகளிலிருந்து மாறுபட்டு, தனித்தன்மையுடன் நிற்பது சாரதையின் சரிதை. 'மகா' புருஷர்கள் என்னும்போதே, அதில் சாமானிய மக்களுக்கு அப்பாற்பட்ட மகிமையின் பேரொளி வீசுகிறது. ஆனால் சாரதையின் வாழ்வில் இப்படிப்பட்ட ஜாஜ்வல்லியம் இல்லை. அற்புதங்கள் இயற்றிய மகான்களிடையே, அற்புதங்களை எல்லாம் அள்ளி விழுங்கிவிட்டு, இவளா விழுங்கியவள் என்றுகூடத் தெரியாதபடி, எளிமையிலும் எளிமையாக வாழ்ந்தாள் சாரதா தேவி. மகிமையின் பேரொளியைவிட எளிமையின் சாந்த ஒளியும், அன்பின் தண் ஒளியுமே அவள் வாழ்வில் அதிகம்.

உலக மினுமினுப்பை விட்டு மற்ற மகாபுருஷர்களின் வரலாறுகளில் நாம் பிரவேசிக்கும்போது, மின்விளக்கு அலங்காரம் கொண்ட உல்லாசப் பூங்காவிலிருந்து, அடுக்கடுக்காக லட்ச தீபம் ஏற்றிய ஆலய சந்நிதிகளுக்குள் போகிற உணர்வு உண்டாகும்எனலாம். நெருக்கமான அந்தத் தீப வரிசைகளைக் கண்டபின், காற்றோட்டமான வெளிப் பிராகாரத்துக்கு வரும்போது, நம்மை அறியாமலே தலை தூக்கி வானத்தைப் பார்க்க, அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில்லென்று நட்சத்திரங்கள் தென்படும்போது எப்படிப்பட்ட நிம்மதி கிடைக்கும்? அந்த நிம்மதி சாரதையின் சரிதையில் கிடைக்கிறது. பரிபூரண எளிமைதான் அதற்குக் காரணம்.

எளிமை என்பதால் குண விசேஷங்களில் குறைந்தது என்று அர்த்தம் அல்ல. குண விசேஷங்கள் அடர்ந்து செறிந்த போதிலும் எளிமையாக இருக்கும் அதிசயம் அவ்வாழ்க்கை. அதை வார்த்தையில் சொல்லப் புகுந்தால் அடர்த்தி நீர்த்துப் போய்விடும். தண்ணீரைக் காட்டிலும் ஓர் அணு அதிகமாகப் பிராணவாயு அடர்ந்திருப்பது ஹைட்ரஜன்—பெர்—ஆக்ஸைட். சீசாவுக்குள் அதைப் பார்த்தால் தண்ணீரைப் போலவே தெளிவாக, எளிமையான பண்டமாகத்தான் தோன்றும். உண்மையிலோ நீரைவிட அதன் சக்தி பெரிது. அழுக்குகளை நொடியில் கரைத்து அகற்றிவிடும். சீசாவில் அதைப் பத்திரமாக மூடியிட்டுக் காப்பாற்றியாகவேண்டும். கொஞ்சம் திறந்து வைத்தாலும் அதிகப்படி பிராணவாயு ஓடியே போய்விடும். சாரதா சரிதத்தை மனத்துள் பத்திரமாகப் பொதிந்து வைத்துக் கொண்டால் சித்தத்தின் அழுக்கெல்லாம் போகும். வாக்கில் வெளிக்கொண்டு வந்தாலோ அதன் எளிமை அடர்த்தி போய்விடும்.

இங்கே எழுத்தில் விரிய இருக்கும் கதை வாசகர்களுக்கு அற்புதமாக, அதிசயமாக, வியப்பாக, விநோதமாக இருக்கலாம். இந்த அம்சங்களில் 'உண்மை சாரதை'யைவிடக் 'கதை



சாரதை'க்கு அடர்த்தி அதிகம். பெரிய சாந்த சமுத்திரமாக, பிரேமைக் கடலாக அடிமட்டத்தில் இருந்தவள் மேற்பரப்பிலே எழுப்பிய அதிசய அலைகளைத்தான் நாம் எழுத்தில் அதிகம் பார்ப்போம். அடிமட்டத்துக்குச் செல்லவோ, சென்ருலும் அதை வர்ணிக்கவோ வார்த்தைக்குத் திராணி இல்லை. அடியில் இருப்பது அநுபவம், மேலே தெரிவது சம்பவம். சம்பவங்களை ஊடுருவி அநுபவத்தைப் பக்தியுடன் தியானித்து, இச்சரிதையை வாசகர்கள் பூர்த்தி செய்து கொள்ள வேணும்.

எளிமையால் மட்டும் சாரதையின் சரிதை தனித்து நிற்கவில்லை. வேறு பல விதங்களிலும் அது 'நிஸ்துல'மானது. அதிலே பல புதுமைகள். அவள் இல்லறம் நடத்தியவள்; ஆனுல் அதில் உலகோர் நடத்தும் 'தாம்பத்தியம்' கிடையாது. பதிதேவர் மறைந்த பின்பும் அவள் கைம்பெண் கோலம் போடவில்லை; கைவளையலைக் கழற்ருத சுமங்கலியாகவே இருந்தாள். சுமங்கலியான போதிலும் அவள் சந்நியாசினி. அவ்வாறெனில், சந்நியாச தீக்ஷை பெற்ருளா? இல்லை. காவி உடுத்தாளா? இல்லை. ஆனுல் விவேகாநந்தர், பிரம்மாநந்தர் போன்ற சந்நியாச சிம்மங்கள் அவள் எதிரிலே வரவே கூசும் அளவுக்குத் துறவிலே கொழுந்து விட்டெரிந்தாள். அவளது அநுமதியுடன் துறவு பூண்ட சீடர்கள் பலர் பரம ஞானிகளாயினர். 'சீடர்கள்' என்ருல் அவள் குரு ஸ்தானம் வகித்தவளா? வகித்தாள். ஆனுல் அதிலும் புதுமை. 'இதோ உபதேசம்' என்று அவள் புத்தகம் எதுவும் எழுதிய [illegible]; மேடையில் ஏறி ஒரு பிரசங்கம் [illegible]ய்ததில்லை; அறிக்கை விட்டதில்லை. அ[illegible]ளே உபதேசமாக வாழ்ந்தாள். மற்ற குருமார்களுக்காகச் சீடர்கள் மெய் வருத்தம் பாராமல் சேவை செய்வர். இவளோ சீடர்கள் செய்யாமல் விட்ட மந்திர ஜபத்தைத் தானே இரவு பகல் பாராமல், உடற்பிணியைப் பாரா[illegible]ல், மரணப் படுக்கையில்கூட லட்ச லட்சமாக ஜபித்தாள். ஏன்? சீடர்கள் [illegible]ன்பதற்கு மேல் அவர்கள் இவளது [illegible]ந்தைகள்; குரு என்பதற்குமேல் [illegible] அவர்களுக்கு அம்மா. தாம்பத்[illegible] புரியாத சாரதை மலடிதான். [illegible] அவளைப்போல் அன்றும், இன்[illegible] இனியும் எண்ணற்றவர்களுக்கு அம்மாவாக இருந்தது, இருப்பது, இருக்கப் போவது யாருண்டு?

அதிசய சுமங்கலி, அதிசய சந்நியாசினி, அதிசய குரு. அதிசயங்களை விழுங்கி விட்டு, அதிசயமில்லாத சாமானிய அம்மாவாக 'தெய்வமே' என்று இருந்தாள். ஆனுலும் அவளே தெய்வம் எனக் கொண்டு அவளை முறைப்படி வழிபட்டவர்களும் உண்டு. அவர்களுக்கு அதிசய தெய்வமாக இருந்தாள். சாரதாமணி அஷ்டோத்தர சத நாமாவளியில் ''பக்த கிங்கரி'' என்பது ஒரு பெயர். பக்தர்கள்தாம் தெய்வத்துக்குக் கைங்கரியம் செய்வது வழக்கம். இந்த அதிசய தெய்வமோ தனது அடியாருக்கே அடியாளாக இருந்தாள். அவர்கள் அவளைச் சம்பிரதாயப்படி பூஜிக்க எல்லா ஏற்பாடுகளும் செய்யும்போது, அவளோ அவர்களுக்காக அடுப்படியில் சப்பாத்தி இட்டுக்கொண்டிருப்பாள். அவளை அலங்கார பீடத்தில் வைத்துப் பூஜை செய்வார்கள். பூஜை முடிந்தவுடனேயே அவள் அவர்களுக்கு இலை போடுவாள்; வயிறு முட்டப் பரிமாறுவாள்; அவர்கள் உண்ட எச்சில் இலைகளையும் எடுப்பாள். போதாக் குறைக்கு, கிணற்றடியில் சமையல் பாத்திரங்களையும், அவளுக்கே பூஜை செய்ய உபயோகித்த பாத்திரங்களையும் 'நெற நெற' என்று தேய்க்கத் தொடங்கிவிடுவாள். 'கைவருந்தி **உழைப்பவர்** தெய்வம்' என்று சரஸ்வதி தேவியைப் பாடினுர் பாரதி. இதுவோ 'கைவருந்தி **உழைத்த** தெய்வ'மாக இருந்தது. இவளையும் சரஸ்வதி தேவி என்றே ராமகிருஷ்ணர் கூறினுர். அதிலும் அதிசய சரஸ்வதி! இந்த சரஸ்வதிக்குக் கடைசி வரையில் கையொப்பமிடக் கூடத் தெரியாது.

எப்படியானுலும், சரஸ்வதி என்று சாட்சாத் பரமஹம்ஸரே சொன்னபின் அவள் அவதார வியக்திதான், சந்தேகமில்லை. நம்மைப் போல் கரும கதிக்கு ஆளாகிப் பிறந்து பிறந்து மறையும் ஜீவனு அவள்? நாஸ்திகர்கள்கூட அப்படிச் சொல்லத் தயங்குவார்கள். பக்குவம் பெற்ற ஒருசில பக்தர்களுக்கு அவளே தன் தெய்வத் தன்மையை ஆணி அடித்தது போல் வியக்தமாக வெளிப்படுத்தியதுமுண்டு.

தர்ம ஸம்ஸ்தாபனம் என்ற பொதுக் காரியத்துக்காகவே அவதார புருஷர்கள் உதிப்பார்கள். பொதுவான தர்மத்தில்



குறிப்பாகச் சில அம்சங்களை ஒவ்வோர் அவதாரமும் வலியுறுத்தும். ராகவன் தர்மத்தை வலியுறுத்தினான், கோவிந்தன் பிரேமையை வலியுறுத்தினான், ஆதி சங்கரர் ஞானத்தை வலியுறுத்தினார், மாருதி சேவையை வலியுறுத்தினான். ஆதி சங்கரரும் மாருதியும் தனியே வந்து போனார்கள். ராகவன் ஜானகியுடன் வந்தான். கோவிந்தனுடன் கோபியர், ருக்மிணி, பாமை எல்லோரும் வந்தனர். ராமகிருஷ்ணருடன் சாரதை வந்தாள். ஆனால் அவர் ஆதிசங்கரரைப் போல் சந்நியாசியாகவும், மாருதியைப் போல் நைஷ்டிகப் பிரம்மசாரியாகவும் வாழ்ந்தார். சாரதை மனமொப்பி அனுமதித்ததால்தான் அவர் அப்படி வாழ முடிந்தது. எனவே, ராமகிருஷ்ணரை ராமகிருஷ்ணராகவே விட்டு வைத்திருந்த பெருமை அவளுடையது. மனம் மாசுபடாமலே மண வாழ்வு நடத்த முடியும் என்ற உன்னத உண்மையை விளக்குவதற்காகவே இப்படி இருவராக வர நேர்ந்தது. இந்த உண்மையை இரட்டை — அவதாரத்தால் நிரூபித்ததோடு, அவர்கள் தனித் தனியாகவும் சில குறிப்பிட்ட அவதார காரியங்களைச் செய்தனர். உலகாயதம் பரவிய உலகில் ஆத்மிகத்தையும், சமயச் சழக்கு நிறைந்த சூழலில் சர்வ மதங்களின் சத்தியத்தையும் வாழ்ந்து காட்ட பரமஹம்ஸ ராமகிருஷ்ணரின் அவதாரம் ஏற்பட்டது. சாரதை எளிமையை வாழ்ந்து காட்டவே வந்தாள். அதோடு பெண்கள் பெண்களாகவே இருக்க வேண்டும் என்பதையும் வாழ்ந்து காட்டினாள்.

இப்போது கல்வி, பதவி, சமூக இயல் முதலியவற்றில் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வந்திருப்பதற்கு சாரதையின் அவதாரமே வழி வகுத்தது என்று பலர் — மதிப்புக்குரிய பெரியோர்களும்கூட — பேசியும் எழுதியும் இருக்கிறார்கள். இவர்களுடன் பணிவுடன் பிணங்க முற்படுகிறேன். ஆண்களோடு பெண்கள் லௌகிக விஷயங்களில் போட்டியிட வேண்டுமென அவள் கடுகளவும் விரும்பியதாகச் சான்று இல்லை. ஒரேயடியாக மூடநம்பிக்கைகளைப் பிடித்துக் கொண்டும், ஊர் வம்பை உழக்கால் அளந்து கொண்டும் இருட்டில் தள்ளப்பட்டிருந்த அக்காலப் பெண்களுக்கு சாரதை ஓர் அழுத்தமான எதிர்வெட்டு [illegible]ப்பதில் ஐயமில்லை. ராமகிருஷ்ணருக்குச் சரிநிகர் சமானமாக அவள் உயர்ந்ததும் வாஸ்தவம். ஆனாலும் அப்படி உயர வேண்டும் என அவள் லவலேசமும் சங்கற்பம் செய்து போட்டியிடவில்லை. அந்த ஞான நிலையில் போட்டி என்ற வார்த்தையே அசம்பாவிதம். இப்போது பெரிதாகப் பேசப்படும் பெண்கள் முன்னேற்றம் ஞானத் துறையில் ஏற்பட்டதல்ல. லௌகிகத்தில்தான் போட்டி. இந்தப் போட்டியில் ஈடுபடுவதைவிடப் பெண்ணானவள் பெண்ணாகவே இருப்பதுதான் அவளுக்கும் அழகு, உலகுக்கும் க்ஷேமம் என்பதே சாரதா சரிதத்தில் நான் காண்கிற உண்மை. இந்தச் சரிதை முடிந்தபின் நீங்களே இவ்விஷயத்தில் முடிவு கட்டலாம். ஆதரிச மகளாக, ஆதரிச மனையாளாக, ஆதரிச சோதரியாக, ஆதரிச அன்னையாக, எந்த லௌகிகப் போட்டியும் இன்றி அமரிக்கையாக வாழ்வு நடத்தினாள் தேவி. உலக வாழ்வு ஒரு மாயம் என்பதை உள்ளத்தின் அடியில் உணர்ந்தவள் அவள். எனினும் விவகாரத்தில் உலக வாழ்வைப் புறக்கணிக்காமல், பரம எளிமையுடன் மற்றவர்களுக்கு உதாரணமாக வாழ்ந்து காட்டினாள். எனவே, லௌகிகமாகப் 'போட்டி'யிடுவதில் அவளுக்கு இடமேயில்லை. ஞானத் துறையில் வேதகால பிரம்மவாதினிகளைப்போல ராமகிருஷ்ணருடனும், மற்ற பக்தர்களுடனும் அத்யாத்ம விஷயங்களை விசாரம் செய்தாள். அப்போதும் தொன்றுதொட்டு ஸ்திரீ லட்சணமாகக் கூறப்படும் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு ஆகியவற்றை அவள் விட்டாளில்லை. 'லஜ்ஜா படாவ்ருதே' என்று அவளைத் துதிக்கிறார் அபேதாநந்தர். 'நாணத்தினால் முக்காடிட்டவளே' என்பது இதன் பொருள். அவளது முகத்தையே முதுமையில்தான் ஆண் மக்கள் பார்த்திருக்கிறார்கள். அவள் அப்படி அடங்கி வாழவேண்டும் என்றுதான் ராமகிருஷ்ணரும் திரும்பத் திரும்ப வலியுறுத்தினார்.

அறிவிலிகளாகவும், கட்டுப்பெட்டிகளாகவும் இல்லாமலே பண்டைய பாரத மகளிர் பெண்மைப் பண்புகளைக் காத்தனர். இடைக்காலத்தில் பாரத ஸ்திரீ குலத்துக்கு ஏற்பட்டிருந்த இருட்டடிப்பு சாரதை தோன்றிய பின்னர் மறைந்தது. இருட்டு போச்சு என்பதால், ஒரேயடியாக விளக்கை மேலே திருப்பிவிட்

டுக் கொள்வதற்கு அவள் முன்னோடி என்று ஆகாது. கும்மிருட்டின் புழுக்கத்தைவிடப் பெரிய வெளிச்சத்தின் சூடு அதிகக் கொடுமையானது.

ஆதிகால அவதாரங்கள் மிக்க சக்தியுடன் செயலாற்றின. அப்போதெல்லாம் மக்களில் ஒரு பகுதியினரே அதர்மத்தில் ஈடுபட்டனர். மற்றவர்கள் அந்த அதர்மம் நீங்குவதற்காக அவதாரம் நிகழ வேண்டுமென மனமுருகிப் பிரார்த்திப்பார்கள். அவதாரமும் நிகழும். தர்மம் அடியோடு நலியாத அந்தச் சூழலில் அவதாரத்தின் சக்தி நன்கு பொலிந்தது. அவதார வியக்தி தர்மத்தை நிலைநிறுத்தியபின் நீண்ட நாள் தர்ம வாழ்வு நீடித்தது. சமீப காலத்தில் அதர்மம் சர்வ வியாபகமாகிவிட்டதால் அவதாரத்தின் சக்தி கொந்தளித்துப் பொலிவதில்லை. மூளையின் சிறப்புக்குப் பெயரெடுத்த இந்தக் காலத்தில், பராசக்தி நம்மைக் கேலி செய்வதேபோல் தன்னை ஒடுக்கிக் கொண்டு அவதரிக்கிறாள். நம்முடைய நுண்ணிய மூளை அவளது நுண்ணிய அவதாரத்தைப் பெருமளவு புரிந்து கொள்ளவே தவறிவிடுகிறது. தர்மங்கள் அடியோடு போய்விடாமல் ஓரளவு காத்து, அதன் நினைவையாவது மீண்டும் ஏற்படுத்திய திருப்தியுடன் அவதார வியக்தியும் மறைந்து போகிறது. சாரதை மறைந்து அரை நூற்றாண்டு தான் ஆகிறது. அதற்குள் இன்னொரு சாரதை அவதரிக்க அவசியம் ஏற்பட்டு விட்டது! இந்தச் சமயத்தில் அந்தப் பழைய சாரதையின் சரிதத்தையாவது நினைவுக்குத் தந்து கொள்வோமே!

இப்போதுதான் பழமைக்கும் பழைய சாரதையான சரஸ்வதிக்கு நவராத்திரியில் பூஜை செய்தோம். மது, கைடபன், மகிஷாசுரன், சண்டன், முண்டன், சும்பன், நிசும்பன் ஆகிய அசுரரை வதம் செய்து தர்மத்தை நிலைநாட்ட சாக்ஷாத் அம்பிகை பல உருவங்களில் அவதரித்ததை நவராத்திரி நினைவு படுத்துகிறது. இந்தத் தீய சக்திகளை வதைத்ததுமட்டுமல்ல. ''இனியும் தீமை ஓங்குகிறபோதெல்லாம் தோன்றி அதைக் களைவேன்'' என்று அம்பாள் அமிருத வாக்குத் தந்தாள்:

இத்தம் யதா யதா பாதா தானவோத்தா
பவிஷ்யதி ।
ததா ததாவதீர்யாஹம் கரிஷ்யாம்யரி
ஸம்க்ஷயம் ॥

சரத் காலத்தில் நிகழும் இந்த நவராத்திரிக்கே சாரத நவராத்திரி எனப் பெயர். சரத் கால சந்திரனாக வாழத்தான் அவாவினாள் ஸ்ரீ சாரதாமணி. 'அதுவும் போதாது. அந்தச் சந்திரனில் உள்ள களங்கமும் என்னிடம் இருக்கக்கூடாது' என்று பிரார்த்தித்தாள். களங்கமே இல்லாததால்தான் அவளை ''தூய அன்னை'' (Holy Mother) என்றே சொல்கிறோம்.

தூய்மையை விஞ்சியது அவளது தாய்மை. தூய்மையால் பதிவிரதைகளின் திலகமானாள். அந்தப் பதிவிரதத்தைவிடப் பெரிதாக 'புத்திர விரதம்' என்ற ஓர் அதிசயத்தையும் அநுஷ்டித்துக் காட்டினாள். பெறாமலே பெற்ற புத்திரர்களிடம் அன்பு செய்யும் விரதத்தில் பதியின் ஆணையைக்கூடப் பணிவுடன் புறக்கணித்தாள். இந்த அம்சத்தில் ராமகிருஷ்ணரினும் சிறந்து நின்றாள் அவள். அவரால் பாவியரின் ஸ்பரிசத்தையும் தாங்க முடியாது. அவளுக்கோ பாவி — புண்ணியசாலி என்ற பேதமேயில்லை. குற்ற நீரைக் களைந்து குணப் பாலைக் கொள்வதில் சாரதா ஹம்ஸம் பரமஹம்ஸத்தைவிடப் பெரியது. காரணம் தன்னை அம்மாவாக்கிக் கொண்டதுதான்.

இந்தத் தாயன்பு காரணமாகத்தான் அவளைப் பைத்தியக்காரி ஸுரபாலாவும் பிடிவாதக்காரி ராதுவும் பாடாய்ப் படுத்திப் பம்பரமாய்ச் சுழற்ற முடிந்தது. பிரஸன்ன குமாரும், காளிகுமாரும் அவளை இம்சித்ததற்கெல்லாம் இடம் தந்தது இந்த அன்புதான். தாயன்பினாலேயே இந்தச் சரிதையில் சோதனைகளும் சோகங்களும் ஏற்பட்டன. தாயன்பினாலேயே அவள் சோதனையைச் சாதனையாகவும், சோகத்தைச் சுகமாகவும் ஆக்கிக் கொண்டாள். சோதனையும் சோகமும் அன்பெனும் சாந்தத் தடாகத்தில் சிறு அலைகளாகவே எழும்பி, அடுத்த விநாடி இடம் தெரியாமல் மடங்கி விழுந்து மறைந்தன.

தடாகத்தில் இறங்காமல் இன்னமும் உங்களைப் படித்துறையில் காக்க வைப்பது தவறுதான். வாருங்கள், ''குள்ளக் குளிரக் குடைந்து நீராடுவோம்!''

(தொடரும்)



# கண்ணைப் போற்றுவோம்!

கண்ணிருந்தும் காணுதோரை அன்றுடம் பார்க்கிறேம். ஆயின், உங்களுக்குத் தெரியுமா? காடராக்ட் என்ற கண் நோயினுல் பாதிக்கப்பட்டு நூறு இந்தியர்களில் இருவர் கண் பார்வை இழக்கின்றனர்! வேறு பல நோய்களினுல் குருடானவர்களேயும் சேர்த்துக் கொண்டால் இந்தச் சதவீதம் மேலும் அதிகரிக்கும்.

போஷாக்கான உணவு பற்றிய அறிவின்மையாலும், தொத்துநோய்களாலும் சிறுவர் சிறுமியருக்குக் கண்கள் பாதிக்கப்படுகின்றன. குறைந்த செலவிலேயே சத்துள்ள ஆகாரம் பெற முடியும். ஆயின் இதுபற்றிய விஷயஞானம் நம் மக்களிடம் இருப்பதில்லே—பரிதாபம்.

காடராக்ட் என்ற நோயினுல் மட்டுமே பார்வை இழந்துள்ள நாலு லட்சம் தமிழர்களில் ஐம்பதாயிரம் பேர்களே ஆபரேஷன் செய்து கொண்டு மீண்டும் கண் பார்வை பெறுகின்றனர். இருக்கிற ஒருசில கண் ஆஸ்பத்திரிகள் கண் நோய் உள்ளவர்களுக்குச் சிகிச்சை அளிக்கப் போதவே போதாது என்பது ஒருபுறமிருக்க, பெரிய நகரங்களில் உள்ள இந்த மருத்துவ மனேகளுக்குக் கிராம மக்கள் எங்கே வரப்போகிறுர்கள்? பணவசதி ஏது? மேலும் காடராக்ட் நோயினே சஸ்திர சிகிச்சையினுல் குணப்படுத்திக் கொண்டு பார்வையை மீண்டும் பெறலாம் என்ற விவரமே இக் கிராம மக்களுக்குத் தெரியாதே!

இந்நிலேயில் அவர்கள் வருவதற்காகக் காத்திராமல் கண் ஆஸ்பத்திரிகளே அவர்களிடம் போனுல்தான் பலன் ஏற்படும்.

இதை மனத்தில் கொண்டுதான் கண் சிகிச்சை முகாம்கள் 1961 முதல் இயங்கி வருகின்றன. அவ்வாண்டில் இரண்டு நடமாடும் கண் ஆஸ்பத்திரிகளுக்கு அரசு அனுமதி வழங்கியது. இவை சென்னே, மதுரை மாவட்டங்களில் இயங்க உத்தரவாகியது.

**ஸ்ட்ரெச்சரில் உள்ள நோயாளியைத் தூக்கிச் செல்ல இந்தியா ஸிமெண்ட்ஸ் மானேஜிங் டைரக்டர் திரு நாராயணனும் உதவுகிறுர்.**



தமிழக அரசு மட்டுமின்றி இதற்குப் பிரிட்டிஷ் அரசும் பண உதவி செய்தது. மேலும் பிரிட்டன் ஒரு நடமாடும் மருத்துவ மனேயையும் அதற்குரிய உபகரணங்களேயும் நன்கொடையாக வழங்கியது.

கண் சிகிச்சையில் நிபுணரும், மதுரை எர்ஸ்கைன் ஆஸ்பத்திரியில் பணியாற்றுபவருமான டாக்டர் ஜி. வேங்கடசாமி இதுவரை ஐம்பத்திரண்டு கண் சிகிச்சை முகாம்களே நடத்தி ஆயிரமாயிரம் மக்களின் நன்றிக்குப் பாத்திரமாகி யிருக்கிறுர்.

அண்மையில் இவர் நடத்திய முகாம் கல்லிடைக்குறிச்சியிலும் அதன் சுற்று வட்டாரத்திலுமாகும். இதற்கு அவர் திரு எஸ். என். என். சங்கரலிங்க அய்யரின் முழு ஒத்துழைப்பையும் பெற்றது அவ்வட்டாரத்தின் மக்கள் செய்த பாக்கியமேயாகும்.

இந்தியா ஸிமெண்ட்ஸ் கம்பெனி தயாரிக்கும் சங்கர் பிராண்ட் சிமெண்ட் பலருக்கும் தெரிந்ததே. அந்தக் கம்பெனியின் டைரக்டர் சங்கரலிங்க அய்யர். இவரைத் தலேவராகக் கொண்டு "சங்கர் தர்ம ஸ்தாபனம்" என்ற பெயரில் ஓர் அறக் கட்டளே நீண்ட நாட்களாகவே நடந்து வருகிறது. இலவச மருத்துவ மனேகள், பிரசவ விடுதிகள், அங்கஈனர்களுக்கான அனுதை இல்லங்கள் போன்ற வற்றை நிறுவுவது அந்த அறக் கட்டளேயின் குறிக்கோள்.

தற்போது கல்லிடைக்குறிச்சியில் நடைபெற்ற கண் சிகிச்சை முகாமுக்கு இந்தியா ஸிமெண்ட்ஸாரின் மானேஜிங் டைரக்டர் நாராயணன் முதல் கடைநிலே ஊழியர் மகாதேவன் வரை பலப் பலரும் தங்கள் ஒத்துழைப்பை நல்கினர். திலக் உயர்நிலேப் பள்ளி மாணவர்களும் உபாத்தியாயர்களும் உதவி புரியக் காத்திருந்தனர். அருகில் உள்ள ஆஸ்பத்திரிகள், சுகாதார நிலேயங்கள் ஆகியவையும் தோள் கொடுக்கத் தயாராயிருந்தன. போலீசார் தொண்டாற்றத் திரண்டனர். கல்லிடைக்குறிச்சி, களக்காடு, ஆழ்வார்குறிச்சி, முக்கூடல், சேரன்மாதேவி ஆகிய ஊர்களில் பத்து நாட்களுக்குள்ளாக ஆறுயிரத்து ஐந்நூற்று இருபத்திரண்டு நோயாளிகள் பரிசோதனேக்குள்ளாயினர். இவர்களில் ஆபரேஷன் தேவைப்பட்டவர்கள் கல்லிடைக்குறிச்சிக்குத் தருவிக்கப்பட்டனர். அங்கு ஒரே நாளில் எண்ணூற்று ஒன்பது காடராக்ட் ஆபரேஷன்கள் நடந்தன! — வெற்றிகரமாக! இதர நோய்களுக்கான ஆபரேஷன்கள் நூற்றி

**திரு சங்கரலிங்க அய்யர் டாக்டர் வேங்கடசாமியுடனும் டாக்டர் ராம அய்யருடனும் அளவளாவுகிறுர்.**



## அவசரமான
## காலைவேளையில்
## ஐந்து செகண்டு
## ஒதுக்குங்கள்






**புத்துயிரளிக்கும்
நெஸ்கா:பே
ஒரு கப் தயாரித்து
அருந்துங்கள்!**




முற்றிலும் சுத்தமான
காப்பி—தென்னிந்திய
காப்பி விதைகளிலிருந்து
தயாரிக்கப்பட்டது

# நெஸ்கா:பே

**உணர்ச்சி ஊட்டும் நெஸ்கா:பே
ஊக்கமளித்திடும் நெஸ்கா:பே!**

NCE 6367

ஒரு நெஸ்லே தயாரிப்பு

# 1. சங்கு ஒலித்தது!

> மனிதர் தம்மை அமரர்களாக்கவே
> ஆற்றல் கொண்ட பராசக்தியன்னை நல்
> அருளினால் ஒரு கன்னிகையாகியே...
>
> -- பாரதியார்




ஜயராம்பாடி என்பது வங்கத்தில் பங்குரா மாவட்டத்தில் ஒரு கிராமம். அவ்வளவாகச் செழிப்பற்ற பங்குரா மாவட்டத்தில் ஜயராம்பாடியில் மட்டும் தானிய லக்ஷ்மியின் கடாட்சம் அதிகம். இயற்கை அன்னையின் நாட்டியமும் அங்கு விசேஷமாகப் பொலிந்தது. தெளிந்த நீரோடு ஆமோதர் என்ற ஓடை ஜயராம்பாடியை அணைத்து ஓடும். ஆங்காங்கே அது சுழித்து ஓடும் ஆழ்ந்த பகுதிகளில் மீன் வளம் அதிகம் உண்டு. வங்காளிகளில் பிராமணர்கள் உட்பட எல்லோருக்கும் இந்த 'ஜலபுஷ்ப'த்தில் ருசி உண்டு. அது அந்தத் தேசாசாரம். கிராமத்தின் வடக்கே ஆமோதர் நதி அழகிய தீபகற்பத்தை அமைத்துத் தந்தது. அங்கே பச்சென்று வானோங்கிய விருட்சங்கள், உழைப்பாளிகளான மக்களை 'வா' என்றழைத்துக் குளிர் நிழல் தந்தன. பசுமையின் பறக்கும் ரூபமாகப் பலவித புள்ளினங்கள் அங்கு நிறைந்திருக்கும். பசுமையின் குரலை அவை பாடிப் பரப்பும். சாதுக்கள் அங்கு ஓடையிலே ஸ்நானம் செய்துவிட்டு ஆனந்தமாக அமர்ந்திருப்பார்கள். அவர்களது மனத்தின் காருண்யத்துக்கு அந்தப் பசும் சோலை வெளி உருவம் எனில், அதே மனத்தில் நிலவிய வைராக்கியத்துக்குச் சின்னம் போல் அப்பசுமைக்குப் பக்கலிலேயே ருத்ரபூமியும் இருந்தது.

பசுமைக்கு — ஜீவசக்திக்கு ஆதாரமான அம்பாள், அனைத்தையும் அழிக்கும் காளியாக, சிம்மவாஹினியாக, ஜயராம்பாடியில் கோயில் கொண்டிருந்தாள். வங்காளிகள் சக்தி வழிபாட்டில் தலைசிறந்து நிற்பவர்கள். நாம் அம்பாளைப் பொதுவில் லலிதையாக ஸௌம்ய ரூபத்தில் வழிபடுகிறோம். வங்காளிகள் மகாகாளியாகவே வழிபடுவார்கள்.

சிம்மவாஹினியை ஜயராம்பாடியின் நாயகியாக ஆக்கியவர் கேலாராம் முகர்ஜி. வங்காளத்தில் பிராமணர்களை முகோபாத்தியாயர் (முகர்ஜி), வந்தி





யோபத்தியாயர் (பானர்ஜி), சட்டோ பாத்தியாயர் (சட்டர்ஜி) என்ற பிரிவு களாகக் குறிப்பிடுவார்கள். முகோபாத் தியாயப் பிரிவைச் சேர்ந்தவர் கேலா ராம். ஒருசில நூற்றுண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர். பரம பக்தர், சிஷ்டர். அவர் வாழ்ந்த காலத்தில் வங்கம் பௌத்த மதத்திலிருந்து மீண்டும் ஹிந்து சமயத் துக்குத் திரும்பிக் கொண்டிருந்தது.

புத்தரின் போதனையில் உருவம் படைத்த கடவுளுக்கு இடமே இல்லை. ஆனுல் பௌத்தம் பொதுமக்களின் மதமாவதற்குப் புத்தரே கடவுளாக்கப் படவேண்டியிருந்தது. ராமாயண, பாரதக் கதைகளைத் தழுவி புத்தரின் ஜாதகக் கதைகள் உருவாயின. அதுவும் போதாமல் ஹிந்துமதத்தில் பல தெய்வ மூர்த்தங்களை வழிபடுவதுபோல், பௌத்தத்திலும் பல தேவதைகள் கூறப்பட்டு, அவற்றுக்கு வழிபாட்டு முறைகள் வகுக்கப்பட்டன. அவற்றில் 'தர்மம்' என்பது ஒன்று. பூர்வத்தில் ஜயராம்பாடியின் சமய வாழ்வுக்கு மையமாக இருந்தது 'தர்ம'த்தின் ஆலயம்தான். நாளடைவில் பௌத்த மும் ஹிந்து மதமும் பின்னிப் பிணைந் தன. தர்மம் ஹிந்துக்களுக்கும் தெய்வ மாயிற்று. 'தர்ம'த்துக்கு வழிபாடு நடத்துவதற்கென்றே சைதன்ய சிம்மன் என்ற விஷ்ணுபூர் அரசன் உத்தம அந்தணராகிய கேலாராம் முகர்ஜியை ஜயராம்பாடிக்கு அனுப்பி வைத்தான். அவருக்கு ஆறு காணி பூமியும் சாசனம் செய்தான்.

கேலாராமின் குலதெய்வம் ராமன். அவரது இஷ்டதெய்வம் சிம்மவாஹினி. இதிலும் ஒரு பொருத்தம், அவ ருடைய பெயரிலேயே 'ராமன்' இருக் கிருன். அவரை அனுப்பிய மன்னன் பெயரில் 'சிம்மம்' இருக்கிறது!

கேலாராமும் அவரது சந்ததியாரும் தங்களது நல்லியல்புகளால் ஜயராம்பாடி மக்களைக் கவர்ந்தனர். அவர்களையே மக்கள் புரோகிதராகவும், அர்ச்சகராகவும் கொண்டனர். இது காரணமாக அவர்களது இஷ்ட தெய்வமான சிம்மவாஹினிக்கும் யோகம் அடித்தது. ஏற்கனவே அந்தக் கிராமத்தில் இரண்டாம் பட்சமாக விளங்கிய சிம்மவாஹினி ஆலயம் இப்போது சிறப்புப் பெறலாயிற்று. கேலாராம் வந்தபின்பு ஹிந்து சமய உணர்வு அங்கு அதிகமாயிற்று. எனவே, அந்த ஹிந்துக்களின் வழிபாட்டில் 'தர்மம்' இடம் பெற்ற போதிலும், 'அசல்' ஹிந்து தெய்வமான சிம்மவாஹினிக்கு 'மௌசு' அதிகமாயிற்று. அவளே அந்த ஊரின் முக்கியமான தெய்வமானாள். ஆயினும் சிம்மவாஹினி ஒரு சாமானியக் குடிசையிலேயே குடிகொண்டிருந்தாள். வங்கத்தில் சிறிய கோயில்கள் வீடுபோலவே தோற்றமளிக்கும். எளிய மக்களுக்கு ஏற்ற எளிய தெய்வங்கள். (நம் 'அம்மா'வினால் ஜயராம்பாடி பெருமை பெற்றபின், இப்போது சிம்மவாஹினிக்கும் சற்றே விசாலமான ஆலயம் ஏற்பட்டிருக்கிறது.)

சிம்மவாஹினி குடிசையில் இருந்தபோதே 'தர்ம'த்துக்குச் செங்கல்லால் கட்டிய கோயில் இருந்தது. 'தர்மம்' என்றால் அந்த விக்கிரகம் எப்படியிருக்கும், அதற்கு எத்தனை கைகள், என்னென்ன ஆயுதங்கள் வைத்திருக்கும் என்ற கேள்விகள் எழுகின்றன அல்லவா? தர்மத்துக்குக் கையும் கிடையாது, காலும் கிடையாது, ரூபமே கிடையாது. நாலு கால்களுடன்கூடிய ஒரு மணைப் பலகையைத்தான் 'தர்மம்' என்று வழிபட்டனர். மணைப் பலகை, நம் பக்கத்தில் ஏழை எளியவர்கள் வழிபடும் மஞ்சள் பூசிய செங்கல், வடக்கே புரிஜகந்நாதம் போன்ற ஸ்தலங்களிலுள்ள 'அங்கலட்சணமற்ற மூர்த்தங்கள் — இவற்றைப் பார்த்தால் தீஞ்சுவை உணர்வுபெற்ற நமக்கு பக்தி ஏற்படாமல் இருக்கலாம். ஆனாலும் கோடாநு கோடி மக்கள் இவற்றை வழிபட்டு, அருள் பெற்று வருகிறார்கள்.

தவம், தூய்மை, தயை, சத்தியம் என்ற நாலு கால்கள் கொண்டது தர்மம் என்று நமது சமய நூல்கள் கூறுகின்றன. பரமேசுவரனைத் தாங்கும் நாலு கால் கொண்ட ரிஷபம் தர்மத்தின் வடிவமே. சிம்மவாஹினியான காளியைத் தாங்கும் சிம்மமும் தர்ம வடிவமே. உயர்ந்த அநுபூதியில் ஞானிகள் ரிஷபமாக, சிம்மமாகக் கண்டதையே, நாலு கால் மணையாகப் பாமரர்கள் வணங்கினர். ஜயராம்பாடி ஹிந்து கிராமமானபின் 'தர்மம்' ஹிந்து தெய்வமாகி விட்டது. இப்போது அதற்கு 'யாத்ரா ஸித்திராயன்' என்று பெயர் வைத்துவிட்டனர். அம்மக்கள் யாத்திரை போவது அபூர்வம்தான். யாத்திரையை நல்லபடி முடித்துத் திரும்புவது அதைவிட அபூர்வம். கல்கத்தாவிலிருந்து சுமார் அறுபதே மைலில் உள்ள கிராமம் அது. ஆனால் இந்தக் கதை தொடங்கும்போது இந்த அறுபதே மைல்களைக் கடக்க மூன்று, நாலு நாட்கள் பிடிக்கும். காட்டு வழி. ஒரே கள்ளர் பயம். பணக்காரர்கள் தாம் வண்டியோ பல்லக்கோ வைத்துக் கொள்ள முடியும். மற்றவர்கள் நடந்து தான் செல்ல வேண்டும். ஆனால் அப்படிச் செல்கிறவர்களும் மிகக் குறைவு. ஏனெனில், அம்மக்கள் கல்கத்தா செல்வதற்கு அவசியமே இருக்கவில்லை. இந்த நாள் 'வசதி'களோடு ஒப்பிட்டால் அன்றைய ஜயராம்பாடியில் சுகவாழ்வுக்கு ஏதுமே இல்லை என்றுதான் தோன்றும். ஆனாலும் அந்தக் காலத்தில் — 'அந்த'க் காலம் என்பது வேறேதோ யுகத்தையோ, சகாப்தத்தையோ குறிப்பிடவில்லை; ஒரு நூற்றாண்டுக்கு முந்தைய காலம்தான் அது — மக்களுக்குத் தங்கள் கிராம எல்லையை விட்டு வெளிச் செல்ல வேண்டிய தேவையே இருக்கவில்லை. வேண்டிய நெல்லும், கோதுமையும், கரும்பும், காய்கறியும், பருப்பு வகைகளும், மிளகாயும், மஞ்சளும் அந்தக் கிராமத்திலேயே கிடைத்தன. வங்காளிகளுக்கு மெத்தப் பிடித்த இனிப்புக்கள் வாங்க வேண்டுமானால் மூன்றே மைலில் காமார்புகுர் இருந்தது. (ராமகிருஷ்ணர் என்ற இனிப்பு பிறந்த ஊர் அதுதான்!) துணிமணி, உப்பு, மசாலாப் பொருட்கள் வாங்க வேண்டுமானால் ஐந்து மைலில் உள்ள கோதுல்பூர் அல்லது கயாபாத்—பதன் கஞ்ஜுக்குப் போவார்கள். அந்த மக்களுக்கு வாழ்க்கை நடத்த இதைத் தவிர வேறெதுவுமே தேவையாக இருக்கவில்லை. இன்று இத்தனை வசதிகளுடன் நாம் இருப்பதைவிட நிம்மதியாகவும், திருப்தியாகவும் வாழ்ந்தார்கள். அவர்கள் எப்போதேனும் கல்கத்தாவுக்குச் சென்றாலும் அதை ஏதோ அக்கரைச் சீமைக்குப் போவது போல் கருதி (அதுவும்கூட இன்று தண்ணீர் பட்ட பாடாகிவிட்டது) ஸ்வாமிக்கு நேர்ந்து கொண்டுதான் கிளம்புவார்கள். எனவேதான் யாத்திரைகளை

நல்லபடி முடித்துக் கொடுக்க யாத்ரா ஸித்திராயனுக்கு ஒரு தெய்வம் அவர்களுக்குத் தேவைப்பட்டது.

**ரா**மசந்திர முகர்ஜி அத்தகைய ஒரு யாத்திரைக்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். 'யாத்திரை' என்றவுடன் வழிபாட்டை லட்சியமாகக் கொண்ட பயணம் என்று எண்ண வேண்டாம். வழிபாட்டுக்கு அல்ல, வயிற்றுப்பாட்டுக்காகவே ராமசந்திர முகர்ஜி ஜயராம் பாடியிலிருந்து கல்கத்தா செல்வதற்கு உத்தேசித்திருந்தார்.

அவர் கேலாராமின் பரம்பரையில் வந்தவர். பாரம்பரிய குண நலன்கள் அவரிடம் கூடுதலாகவே பொலிந்தன. ராமா ராமா என்று சொல்லிக் கொண்டே இருப்பார். நேர்மையாளர். ஆசாரக்காரர். ஆனாலும் எல்லோருக்கும் சமமான அன்பை வழங்குவதில் குறைவில்லை. வங்காள வழக்கப்படி இந்த ஆசாரப் பிராமணரும் குழாய் பிடித்துப் புகைப்பார். வீட்டு வழியே போகிறவர்களையும், '' தம்பீ, ஒரு இழுப்பு இழுத்துவிட்டுப் போ'' என்று பரிவுடன் அழைத்து உட்கார வைத்து அவர்களிடம் குழாயைக் கொடுத்து, அதில் புகையிலையைத் திணித்துக் கொண்டே யிருப்பார்.

இந்தப் புருஷுக் கைக்கே இத்தனை தாராளம் என்றால் அந்த இல்லத்துப் பெண்மணியின் கையைக் கேட்க வேண்டுமா? ராமசந்திரரின் மனைவி சியாமசுந்தரிக்கு இதயம் சொக்கத் தங்கம். சொக்கத் தங்கம் என்றால் பித்தலாட்டம் சேராதது என்பது நேர் அர்த்தம். 'ஆடகம்' என்ற பொன்னோடு 'பித்தளை' சேர்ந்தால் 'பித்தலாடகம்'-'பித்தலாட்டம்' என்று பொது வழக்கில் சொல்வது. சியாமசுந்தரி 'வஞ்சனையின்றி, பகையின்றி, சூதின்றி' வளர்ந்தவள். உலக வாழ்வின் 'சாதுரியம்' ஏதும் அவளுக்குத் தெரியாது. அவளுக்குத் தெரிந்தது, கிராமத்துக் கட்டையான தன் உரமேறிய உடம்பால் உழைத்து, வந்தவர்களுக்கு அன்னம் பாலிப்பதுதான்.

'' என் அம்மா லக்ஷ்மியென்றே சொல்லணும். வருஷம் முழுதும் அந்தந்தப் பருவத்தில் கிடைக்கும் பண்டங்களை வாங்கி வீட்டை சுபிட்சமாக வைத்திருந்தாள். 'இந்த அகம் பகவானுக்கும் பாகவதாளுக்கும் என்றே ஏற்பட்டது' என்று சொல்லிக் கொண்டு எல்லாருக்கும் வாரி வாரிக் கொடுப்பாள்'' என்று தன் அம்மாவைப் பற்றி நம் அம்மா சொல்லியிருக்கிறாள்.

இதென்ன பாப்பா மலர் கதை போல இப்படி ஒரு நல்ல அப்பா அம்மாவா என்று எண்ண வேண்டாம். இந்த உலகில் அறிவு, ஆற்றல், ஞானம், வித்தை இவற்றில் பெரியவர்களாகச் சிலர் இருப்பது போல், இந்தச் சிறப்புக்கள் விசேஷமாக இல்லாமலே முழுக்க முழுக்க நல்லவர்களாகவும் ஒரு சிலர் இருக்கத்தான் செய்கிறார்கள். பெரிய தவத்தாலும், பிரம்மசரியத்தாலும், சத்தியத்தாலும் அடையப்படுகிற பிரம்மலோகத்தைச் சூதும், பொய்யும், வஞ்சனையுமற்ற இந்த எளிய நல்லவர்களும் பெறுகிறார்கள் என்கிறது பிரச்ன உபநிஷதம். மகாத்மாக்கள் வந்து பிறப்பதற்கென்றே இப்படிப்பட்ட உத்தம கிருகங்கள் சிலவும் இருக்கும்.

ராமசந்திரருக்கு மூன்று தம்பிகள். எல்லோரும் ஒன்றாகவே வாழ்ந்தனர். எல்லோரும் சேர்ந்து வாழும் அவிபக்த குடும்ப முறையே அப்போது நம் தேசத்தில் எங்கும் நிலவி வந்தது. இது பெரிய குடும்பம்தான். அதில் தலைமகன், தலைமகள் இருவருமே பரம தயாளுக்கள். ஆனால் அப்படித் தயாளம் காட்டும்படியாக அந்தக் குடும்பத்துக்குச் சொத்து சுதந்திரம் கிடையாது.

எனவே, கஷ்டதசை வந்தது. கஷ்டதசையிலும் முடிந்த மட்டும் அன்ன தானம் செய்து வந்தனர்.

இப்போது ராமசந்திர முகர்ஜிக்குப் பெரிய 'பொருளாதார நெருக்கடி.' கல்கத்தாவுக்குப் போய் ஏதோ ஒரு விதத்தில் பணம் திரட்டி வரத் தீர்மானித்தார். யாத்திரைக்கு ஆயத்தம் செய்தார்.

கிளம்புவதற்கு முதல் நாள் அவருக்கு ஒரு கனவு. கனவு என்று தள்ளிவிட முடியாத கனவு. இந்தப் பொய்யான உலகத்தில் நனவு என்று சொல்லும் விழிப்பு நிலையில் நடக்கிறவற்றைவிட அவரது உள்ளத்தை வெள்ளமாக மகிழ்ச்சியில் நனைத்த கனவு அது.

ஆனந்த சாகரத்தின் மதகைத் திறந்துவிட்டது போல் தமது முதுகில் ஏதோ ஒரு வெள்ளம் வந்து கனமாகப் படிந்திருப்பதை ராமசந்திரர் உணர்கிறார். கழுத்தை வளைத்துப் பார்க்கிறார். பார்த்த கண்கள் பார்த்தபடி நிலைக்குத்திட ஆசைப்படுகின்றன. ஆனாலும் அந்தப் பிரகாசம் கண்களைக் கூச வைக்கிறது.

பெண் குழந்தை ஒன்று அவரறியாமலே பின்புறமாக வந்து அவரது முதுகைக்கட்டிக்கொண்டிருக்கிறது. ஸ்வர்ண விக்கிரகம் போல் தகதகக்கிறது அதன்



தேகம். விலை மதிக்கவொண்ணுத வைர வைடூரிய ஆபரணங்கள் அணிந்திருக்கிருள் சிறுமி — 'என் தேக காந்தியில் எந்த ரத்தினமும் எடுபடாது' என்று காட்டுவதற்கே போல். நகைகளுக்கெல்லாம் மேலான நகையாக அவளது திருமுகத்தில் புன்னகை கொழிக்கிறது. ஒரே அழகு, ஒரே அன்பு. அவை ராமசந்திரரைக்கட்டி இறுக்குகின்றன. அதே சமயத்தில் இது சாதாரண விஷயமல்ல என்ற விலவிலப்பு உண்டாகிறது. ஆனுலும் விலக முடியவில்லை. விலக மனசு இடம் தராதது மட்டும் காரணமல்ல; அந்தப் பெண்ணே அவர் விலகிப் போகாதவாறு அவரை இறுகக் கட்டி இருக்கிருள்.

போயும் போயும் தன்னையா இந்த அற்புதக் குழந்தை அணைத்து விளையாடுகிறது? அடையாளம் தெரியாமல் இங்கே வந்து விட்டதா?

ராமசந்திரர் ஆச்சரியத்துடன் அந்தக் குழந்தையிடம், ''நீ யாரம்மா? எங்கே வந்தே?'' என்கிருர்.

''உங்காத்துக்குத்தான் வந்திருக்கேன். உன்கிட்டத்தான் வந்திருக்கேன்'' என்கிறது பாலை வக்கணையாக.

தாமரை போன்ற நேத்திரத்தை விரித்து அதற்குள் குண்டு வண்டுபோல் குறுகுறுக்கும் விழிகளால் விநோதமாகப் பேசுகிருள் குழந்தை.

ராமசந்திரருக்கு உடல் குலுங்குகிறது.

நித்திரை கலைகிறது.

ஸ்வர்ண வர்ணத்தில் வந்த அந்தப் பெண் யார்?

'' ஹிரண்யவர்ணும் ஹரிணீம், ஸுவர்ண ரஜதஸ்ரஜாம் '' என்று அவரது உள்ளம் ஸ்ரீஸூக்தத்தைக் கிசுகிசுக்கிறது.

அப்புறம் அவர் கல்கத்தாவுக்குப் போனதும், அங்கே ஏதோ திரவிய லாபமடைந்து திரும்பியதும் சாதாரண விஷயங்கள்.

அவர் அடைந்த உண்மை லாபம்—ஆத்ம லாபம் அந்தக் குழந்தையேதான்.

இந்தச் சம்பவம் நடந்தபோது சியாமசுந்தரி ஜயராம்பாடியில் இல்லை. அங்கிருந்து மேற்கே ஒரு மைலில் இருந்த ஷியாட் என்னும் கிராமத்துக்குச் சென்றிருந்தாள். ஷிஹார் என்பது அதன் பெயர்; ஷியாட் என்றே கிராம ஜனங்கள் சொல்வார்கள். அஃதுதான் சியாமசுந்தரியின் பிறந்தகம்.

ஜயராம்பாடியில் லீலை செய்த பாலை அங்கும் விளையாடினுள்.

சியாமசுந்தரி கனுக் காணவில்லை. நன்ருகக் கண்களை விழித்துக் கொண்டே யிருந்தாள். அந்தி மங்கி விட்டது. ஜயராம் பாடிக்குத் திரும்பும் வழியில் குயவர்களின் சூளைப் பக்கத்தில் ஒரு வில்வ மரத்தடியில் சியாமசுந்தரி அமர்ந்து விட்டாள் தனியளாக.

வானத்தில் நட்சத்திரங்கள் பூத்தது போல், அந்த மௌனத்தில் கிணுகிணு என மணிநாதம் பூத்தது.

சப்தம் வந்த திசையில் கண்ணுல் துழாவினுள் சியாமசுந்தரி.

விருட்சத்தில் வழுக்கிக் கொண்டே இறங்கி வந்தாள் ஒரு குழந்தை. அவளது 'சீர் சிறக்கும் மேனி பசேல் பசேலென, நூபுரத்தின் ஓசை கலீர் கலீரென' சியாமசுந்தரியை நெருங்கி நெருங்கி, இன்னும் நெருங்கி வந்தாள்.

அவள் அடி எடுத்து வைக்க வைக்க, இவள் இதயத்திலேதான் அதென்ன நெருக்கம்!

கிட்டத்தில் வந்த குழந்தை, கபடமறியாத சியாமையின் கழுத்தில் தனது கொழு கொழுக் கையை வளைத்து அப்படியே கட்டிக் கொண்டது.

அந்த இனிமையை சியாமசுந்தரியால் தாங்கவே முடியவில்லை.

சியாமசுந்தரிக்கு ஏன் இப்படி இருட்டிக் கொண்டு வருகிறது? வெளி இருட்டு அவ்வளவும் அவளுக்குள் புகுகிறதா? அல்லது அந்த இருட்டேதான் பிரகாசமா — கருத்த காளியேதான் உதய சூரிய வண்ணத்து லலிதையும் என்பதே போல்? அவளை அந்த ஒளிக் குழந்தையே இருள் உருவில் ஆட்கொள்கிறதா? இல்லை, அவள்தான் அதை உட்கொள்கிருளா? சியாமசுந்தரியின் இதயத்தில் நெருக்கமாக இருந்த ஸ்வர்ணசுந்தரி இப்போது அவளது உதரத்தில் சியாமள சுந்தரியாகப் புகுந்து விட்டாற் போல் இருக்கிறது!

மூர்ச்சித்து விழுந்தாள் சியாமசுந்தரி.

அவளைக் காணுமல் வீட்டார் அலறிப் புடைத்துக் கொண்டு வந்து பார்த்தனர். அவர்கள் சுசுரூஷை செய்தபின் தான் அவளுக்கு மயக்கம் தெளிந்தது.

அன்றிலிருந்து சியாமசுந்தரியிடம் தான் எப்பேர்ப்பட்ட அமானுஷ்யமான தெளிவு குடிகொண்டது?

ஜயராம்பாடிக்குத் திரும்பிய சியாமசுந்தரியைப் பார்த்து ஊரே ஆச்சரியப்பட்டது. 'சியாமா மாமிக்கு என்னமா அழகிட்டிருக்கு, பாத்தியா? பெண் தான் பிறக்கும்' என்று பெண்டுகள் பேசிக் கொண்டனர். அந்த 'மகா லக்ஷ்மி'க்குத் துணியும் மணியுமாக ஏகப் பரிசுகள் தந்தனர்.





# மகா "கனம்" பொருந்திய மறை விழா

செப்டம்பர் முதல் தேதியிலிருந்து மூன்று வாரங்கள் கூட்டம் கூட்டமாக மகாஜனங்கள் தியாகராய நகர் சிவ விஷ்ணு ஆலயத்துக்குச் சென்றவண்ணம் இருந்தனர். அங்கு என்ன பிரமோத்ஸவமா? இல்லை. இசைக் கச்சேரியா? அதுவும் இல்லை. கதாகலாக்ஷேபமா? அதுவும்கூட இல்லை. இத்தனைக்கும் ஆதாரமான வேத பாராயணம்தான் கூட்டம் கூட்டமாக மக்களைக் கவர்ந்திருந்தது. வேத பாராயணத்துக்கு எத்தனை ஆகர்ஷணம் உண்டு என்பது நிதரிசனமாகத் தெரிந்தது.

கிருஷ்ண யஜுர் வேதத்தை சம்பூர்ணமாக ''கனம்'' என்ற பத்ததியில், வேத பர்வதமாக விளங்கும் ஆந்திர தேச வித்துவான்கள் நால்வர் பாராயணம் செய்தனர். வேத மந்திரங்களின் பதங்களை முன்னும் பின்னுமாக மாற்றி மாற்றிப் பின்னல் கோலாட்டம் இடுவதுபோல் அமைக்கிற ஒரு முறைக்கு ''கனம்'' என்று பெயர். இயற்கையாகவே கம்பீர எழில் வாய்ந்த வேதமந்திரங்கள் ''கன''மாக ஓதப்படும்போது எலும்புக் குருத்துக்குள்ளேயே பிரவேசித்து நம்மைச் சிலிர்க்க வைக்கின்றன. கனம் சொல்வதில் அதிசய ஆற்றல் பெற்ற பிரம்ம ஸ்ரீமான்களான கனசிகரம் கலுபல்லி வேங்கட நாராயண கனபாடிகள், குனபுலி லக்ஷ்மி நரசிம்ம கனபாடிகள், சிட்டி சுப்பிரமணிய கனபாடிகள், கன சூடாமணி ஜி. ஆஞ்சநேய கனபாடிகள் ஆகிய ஆந்திர வித்துவான்கள் ஸ்ரீ காமகோடி ஆசாரியாளின் அநுமதிப்படி சென்னைக்கு வந்து, கிருஷ்ண யஜுர் வேதம் முழுவதையும் பொழிந்து தள்ளியது சென்னையின் பாக்கியம். இந்தப் பாக்கியத்தை உணர்ந்து, நகரப் பெருமக்கள் இந்த சத்பாத்திரங்களுக்கு உரிய சம்மானங்களைச் செய்தனர். மேலும் பல பேட்டைகளிலும் 'கனம்' கனஜோராக நடக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

பல பிரிவினைச் சக்திகளுக்கிடையே சமயமும், பக்தியும், கீதமும், வேதமும்தாம் தேசத்தை ஒன்றுக்கி வருகின்றன என்பதற்கு ஆந்திர அந்தணோத்தமர்கள் ''கன''த்தை கானம் செய்தே சென்னையைக் கவர்ந்ததும் ஒரு சான்றாயிற்று.

---

அந்த அழகின் அமாநுஷ்யத் தன்மை ராமசந்திரருக்குத் தெற்றெனத் தெரிந்தது. அன்றிலிருந்து அவள் தலைச்சனைப் பெற்றெடுக்கும் வரையில் அவர் அவளுக்கு அருகிலேயே வந்தாரில்லை. எட்ட நின்றே மானசிகமாக வணங்குவார்.

மாதங்கள் ஓடின. வங்காளிக் கணக்கில் பௌஷ்ய மாதம். நமது மார்கழி. தேதி எட்டு. (1853 டிசம்பர் 22). அன்று குரு வாரம். இருள் விரிகிற சமயத்தில், வெள்ளை வெளேரென்று ஒரு சங்கு ராமசந்திர முகர்ஜியின் வீட்டு வாசலில் ஓங்காரத்தை ஒலித்தது. புதுப் பிரஜை ஒன்று இந்த மண்ணிலே உதித்திருக்கிறது என்பதே அந்த சங்கநாதத்தின் அர்த்தம். (தொடரும்)

# எதிர்ப்பிலே கண்ட வெற்றி

அமரர் 'கல்கி' அவர்கள் எழுதிய 'கள்வனின் காதலி'யில் கல்யாணி காதலனைக் கேட்கிறாள்: "மனிதர்கள் ஏன் இவ்வளவு சின்னத்தனமாக நடந்து கொள்கிறார்கள்? நமது காதல் ஈடேற ஏன் இத்தனை இடைஞ்சல்கள்?"

முத்தையன் பதில் கூறுகிறான்: "நமக்குத் தொல்லை தரும் அவர்கள் மகராஜன்களாய் இருக்கட்டும்! ஏனெனில், எதிர்ப்பிலே காணும் வெற்றியிலேதான் கண்ணே, இன்பம் இருக்கிறது!"

அடையாறு புற்றுநோய் மருத்துவமனையின் சரித்திரத்தை ஆராயும்போது நமக்குக் கல்கி அவர்கள் எழுதியதன் முழுப் பொருளும் விளங்குகிறது.

இந்த மருத்துவமனை எழும்பத்தான் எத்தனை இடையூறுகள்! எவ்வளவு சில்லறைத் தொல்லைகள்! எத்துணை அற்பத்தனமாகப் பலர் நடந்து கொண்டிருக்கிறார்கள்! ஆயினும், இத்தனையையும் எதிர்த்துச் சமாளித்து வெற்றி கண்டதால், இந்த மருத்துவமனையில் ஆரம்ப முதல் இருந்து நிர்வகித்து வருவோருக்கு இன்று ஏற்படும் பெருமிதமோ சொல்லில் அடங்காததல்லவா!

ஒருமுறை அரசினரின் மான்யம் வந்து சேரக் காலதாமதமானபோது காரியதரிசி டாக்டர் சாந்தா, அதற்குரிய அதிகாரியை அணுகினார். அப்போது அந்தச் சர்க்கார் ஊழியர், "உங்களுக்கு அது ஆஸ்பத்திரியாக இருக்கலாம்; ஆனால் என்னைப் பொறுத்த வரையில் அது கவனிக்கப்பட வேண்டிய எத்தனையோ ஃபைல்களுள் ஒன்று!" என்று சொல்லி அனுப்பி விட்டார்.

ஏன், இந்த மருத்துவ மனையின் ஸ்தாபகர் ஸ்ரீமதி முத்துலக்ஷ்மி ரெட்டிக்கு ஏற்பட்ட அனுபவத்தைத்தான் பாருங்களேன்: "ஆஸ்பத்திரிக்கென்று நிலம் ஒதுக்குவது என்பதென்னவோ முடிவாகி விட்டது. மவுண்ட் ரோட்டையொட்டித் தேனாம்பேட்டைப் பகுதியில் உள்ள விசாலமான இடத்தை இதற்கென்று தரக் கூடாதா?" என்று கேட்டார் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி.

அரசு ஊழியர் பதிலளித்தார்: "அதெல்லாம் முடியாது! அடையாற்றில் உள்ள இந்த இடத்தை ஏற்பதானால் சொல்லுங்கள்; இல்லையென்றால் போய் வாருங்கள்!"

"பக்கிங்ஹாம் கால்வாய்க்கு அருகில் உள்ள இந்த இடத்தில் கட்டடங்கள் எழுப்புவது உசிதமில்லை என்று இன்ஜினியர்கள் சொல்கிறார்களே! ஏன், மவுண்ட்ரோட்டை ஒட்டியுள்ள அந்த இடத்தை ஒதுக்குவதில் உங்களுக்கு என்ன சிரமம்?" என்று கேட்டார் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி.

"ஆ! அங்கே கால்ஃப் ஆட்ட மைதானம் அமையவிருக்கிறது; அதைத் தருவதா? நோ, நோ!" என்று அடித்துச் சொன்னார் அதிகாரி.

'ஆமாம், புற்றுநோய் சிகிச்சையைவிட கால்ஃப் ஆட்டம் ரொம்ப முக்கியமானதுதான்' என்று டாக்டர் முத்துலக்ஷ்மி முணுமுணுத்துக் கொண்டே அவர் மனமுவந்து கொடுத்ததைப் பெற்றுக் கொண்டு வந்து சேர்ந்தார்.

இன்னொரு சந்தர்ப்பத்தில் இயக்குனர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி இதைவிடக் கொடூரமான சொற்களைக் கேட்க நேர்ந்தது. அதுவும் அரசினரின் மருத்துவத் துறை உயர் அதிகாரியிடமிருந்தே! "பணமில்லையா? பணமில்லையானால் ஆஸ்பத்திரியை மூடிவிட்டுப் போங்களேன், ஐயா!" என்றார் அந்தப் பெருமகன்!





☐ ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு விஜயம். அவருக்கு வலதுபுறம் டாக்டர் சாந்தாவும் டாக்டர் கிருஷ்ணமூர்த்தியும்.

☐ சஸ்திர சிகித்சை.



# அம்மா

ரா. கணபதி

## 2. "அதோ என் அகத்துக்காரர்!"

மன்னுயிர் புவனம் ஏனை மற்றுள பொருளுக் கெல்லாம்
அன்னையாய் உதவிநாளும் அவற்றினை வளர்த்து நிற்பாள்
தன்னையும் வளர்ப்பார் உண்டோ? வளர்ந்தது சழக்கே! அந்தக்
கன்னிதன் அருளின் நீர்மை காட்டினள் போலும் அன்றே

(கந்தபுராணம் - பார்வதிப் படலம்)

சியாமசுந்தரிக்கு சீமந்த புத்திரி பிறந்த தினத்தில் பல விசேஷங்கள் உண்டு. அது மாதங்களில் சிறந்தது என மாதவனே சொன்ன மார்கழி ம்ாதம். அதைத் தேவர்களின் வைகறைப் பொழுது எனச் சொல்வார்கள். சூரியன் வடக்கு நோக்கிப் பயணம் தொடங்கும் நாளை தேவர்கள் துயில் கலைந்து எழுகிற தினம் என்பார்கள். மகரசங்க்ரமணம் — சங்க்ராந்தி — அல்லது பொங்கல் பண்டிகை என்பது அன்று தான். இப்போது நம் பஞ்சாங்கக் கணக்குப்படி ஜனவரி மத்தியில் சங்கிரமணம் வந்தாலும், உண்மையில் வான நூல் கணக்குப்படி டிசம்பர் 22ந் தேதியே சூரியன் தனது வடக்கு நோக்கிய பயணத்தைத் தொடங்கி விடுகிறுன். நவீன மனப்பான்மை கொண்ட ஸ்வாமி விவேகாநந்தர் பழைய பஞ்சாங்கப்படி சங்க்ராந்தியன்று பிறந்தார். பழைமையே வடிவெடுத்த அம்மா, நவீனக் கணக்குப்படி மகராயணமாகிய டிசம்பர் 22ந் தேதியன்று உதித்தாள். தேவர்கள் துயில் கலைந்து, அருள் செய்வதற்காக விழிப்புப் பெறும் நாளில் பொருத்தமுடன் பிறப்புக் கொண்டாள்.

பூமத்ய ரேகைக்கு வடக்கே உள்ள தேசங்களில் வெகு நீண்ட இரவுப் பொழுது முடிகிற தினம் அதுவே. எத்துணைப் பொருத்தம் !

தேவர்களின் உதயகாலமாயினும் நம் உலகில் அவள் பிறந்தது இரவு விரிகிற சமயத்திலேதான். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பிராம்ம முகூர்த்தம் எனப்படும் வைகறையில் அவதரித்தார். வெளி உலகுக்குப் பிரகாசமான உண்மைகளைக் காட்ட வந்தவர் பலபலவென விடியத் தொடங்கும் வேளையில் பிறந்தார். உள்ளுக்குள்ளேயே அமிழ்ந்து அடங்கும் உண்மைகளைக் காட்டுவதற்காக வாழ்ந்த அம்மா, இயற்கையன்னை வெளிச்சங்களை உள்ளே வாங்கிக் கொண்டு இருள் படுதாவை விரித்துக் கொள்ளும்போது ஜனனம் கொண்டாள். இரவோடு இரவாகக் கலந்து சியாமசுந்தரியின் மணி வயிற்றில் பிரவேசித்தவள், அதே அந்தி மயக்கத்தில் உலகில் வெளி வந்தாள்.

நம் சீமையில் சுக்ரவார சாயரட்சையை எவ்வளவு மங்களமாகக் கொள்கிறேமோ, அதுபோல் குருவார மாலை வேளையை வங்காளத்தில் போற்றுவர். சக்தி வழிபாட்டில் ஈடுபட்ட

தாந்திரிகர்களும், பொதுமக்களும் புனித மார்கழியில், வியாழன் அந்தி முடிவில் சிம்மவாஹினி ஆலயத்துக்குக் கூட்டமாகச் சென்று பிரார்த்தனை செலுத்தி வீடு திரும்புகையில், சியாமசுந்தரி பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

'' அம்மாவையே உரிச்சு வைச்சிருக்கு '' என்று சொல்லி ஊர்ப் பெண்கள் ஆனந்தப்பட்டனர்.

அம்மா, அம்மாவைப் போலன்றி எப்படி இருப்பாள் ?

குழந்தைக்கு நாமகரணம் செய்ய வேண்டிய நாள் வந்தது. ஜோதிடர் ஜாதக ரீதியில் பெயரைக் கணித்தார். ''டாகூர்மணி'' என்று பெயரிடச் சொன்னார்.

டாகூர் என்றால் இறைவன் என்று பொருள். இறைவனின் மனத்தில் மன்னுகிற, மின்னுகிற ரத்தினமான தேவியே 'டாகூர் மணி'. ஸ்ரீ பரமஹம்ஸ ராமகிருஷ்ணரை இன்றும் வடநாட்டில் அத்யந்த பக்தர்கள் 'டாகூர்', 'டாகூர்' என்றே சொல்கிறார்கள். நம் கதையின் நாயகி பிறந்த பொழுது பொருத்தமாக அமைந்தது போலவே, பெயரும் பொருத்தமாக அமைந்து விட்டது.

அந்தக் குடும்பத்தில் இரண்டு பெயர்கள் வைக்கிற வழக்கம் உண்டு. அதன்படி, 'க்ஷேமங்கரி' என்று இன்னொரு பெயர் வைத்தார்கள். க்ஷேமத்தையே செய்பவள் என்று அர்த்தம். க்ஷாமம் மூடிய நாட்டில் அம்மாவைப் போல க்ஷேமம் செய்தவர் யாருண்டு?

மூன்றுவதாக இன்னொரு பெயரும் முளைத்தது. அதுவே நிலைத்து நின்றது. குழந்தையையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள் சியாமசுந்தரியின் சித்தி. பேறு பார்ப்பதற்காகவோ அல்லது குழந்தை பிறந்த சுபச் செய்தி விசாரிப்பதற்காகவோ வந்தவர்களில் அந்தக் கிழவியும் ஒருத்தி.

அவள் கண்களில் கண்ணீர் பெருகி வந்தது. சியாமசுந்தரியைப் பார்த்துக் கரகரத்த குரலில், '' அந்தக் 'கடன்



காரி' மாதிரியே இருக்கு. அவ பெயரையே வைத்துக் கூப்பிடருயா?'' என்று கேட்டாள்.

சமீபத்தில்தான் சித்தி அருமைப் பெண் சாரதாமணியை இழந்திருந்தாள். புத்திரசோகத்துடன் சித்தி கேட்டுக் கொண்டதை சியாமசுந்தரியால் மறுக்க முடியவில்லை.

மறைந்துபோன தனது ஒன்றுவிட்ட சகோதரியான சாரதாமணியின் பெயரையும் குழந்தைக்குச் சூட்டினுள் சியாமசுந்தரி.

ஆகா, 'சாரதா' என்ற நாமத்துக்கு உள்ள பெருமையைத்தான் என்னென்பது ?

'சாரதா' என்ற நாமத்தில் ஆதி சங்கராசாரியர்களுக்கு ஒரு தனி ஈடுபாடு. சிருங்ககிரியில் சாரதா பீடத்தை ஸ்தாபித்தார். காமகோடி பீடத்தை அதிஷ்டித்து அவர் காஞ்சியில் ஸ்தாபித்த மடத்துக்கு சாரதா மடம் என்றே பெயரிட்டார்.

உருவமும் பெயருமற்ற பிரம்மமே ஜீவன் என அறிவதற்கு உபாயமாக ஞான மார்க்கத்தை வகுத்த ஆதி சங்கரர், அந்தப் பிரம்மம் பல உருவில், பல பெயரில் எடுத்துக் கொண்ட தெய்வ வடிவங்கள் அனைத்தையும் கிரமப்படி வழிபடும் முறைகளைத் தொகுத்து, 'பிரபஞ்சஸாரம்' என்ற உத்தம நூலை அருளியிருக்கிறுர். அந்த நூலில் முதல் சுலோகமாக கலைவாணித் துதியை அளிக்கிறுர். அங்கு கலைவாணியை 'சாரதா' என்றே பெயரிட்டு அழைக்கிறுர்.

''சாரதா தேவி நமது சித்தத்தின் அழுக்கை எல்லாம் நீக்கி அதைப் பரிசுத்தமாக்குவாளாக!'' என்கிறுர்.

**விதரது பரிசுத்திம் சேதஸ சாரதா வ :**

என்ற ஆசாரிய வாக்கைத் தூய அன்னையின் அடியார்கள் மந்திரம் போலவே ஜபிக்கலாம் !

ஸ்தூல உலகம், கர்ம பலன் இவற்றை நீக்கும் பிரம்ம வித்யாரூபிணி தான் 'சாரதா' என்று இதற்கு விரிவுரை கூறுகிறுர் பகவத்பாதரின் சீடரான ஸ்ரீ பத்மபாதாசாரியர்கள்.

குளிர்ந்த சரத்காலத்தில் ஆராதனை பெற்று, குளிர அருள் வழங்கும் அம்பாளை 'சாரதை' என்பார்கள். வங்கத்தில் 'ஸாரதா' என்றே சொல்கிறுர்கள். ஸாரமான ஆத்ம ஞானத்தின் தாயகியான சரஸ்வதி தேவியே ஸாரதா என்று விளக்குகிறுர்கள்.

* * *

தலைச்சன் குழந்தையானபடியால் ராமசந்திர முகர்ஜியும், சியாமசுந்தரியும் சாரதையை வெகு செல்லமாக வளர்த்தனர். குழந்தையைப் பற்றி அவர்களுக்கு முன்கூட்டியே தெய்விகமான சூசகங்கள் இருந்தனவே, அப்படிப்பட்ட தெய்வக் குழந்தையை அவர்களால் சகஜமாக வளர்க்க முடிந்ததா என்ற கேள்வி எழலாம்.

சகஜமாகவே வளர்த்தார்கள். இது பராசக்தியின் பெரிய மாயைகளில் ஒன்று. ஸ்காந்த புராணத்தில் பார்வதியின் குழந்தைப் பருவ வருணனையில் இது அழகாகக் கூறப்படுகிறது.

பார்வதி ஆவிர்பவித்தபோது அவள் சாட்சாத் பரப்பிரம்ம சக்தியே என்று ஹிமவானுக்கும், அவனது மனையாளான மேனைக்கும் தெரியும். ஆனுலும் அவர்கள் அவளை வாத்ஸல்யத்துடன், வாஞ்சையுடன் 'இவள் தங்களுடைய பெண்' என்ற நெருக்கமான எண்ணத்துடனேயே வளர்த்தனராம்.

'தன்னைக் குறித்து அவர்களுக்கு உண்டான மெய்யான அறிவை அம்பாளே போக்கிவிட்டாள். இந்த மாயையால் ஞானமிழந்த பெற்றோர் அவளைத் தங்கள் குழந்தைதானுக்கும் என்றே எண்ணி வாத்ஸல்யத்துடன் வளர்த்தனர்' என்கிறுர் ரிஷி.

மாயையைப் போக்கி ஞானத்தைத் தரவே உலகுக்கு வந்தவள், தன்னைப் பற்றிய ஞானத்தைப் பெற்றோரிடமிருந்து போக்கி, அவர்களுக்கு ஒரு மாயத்தை உண்டாக்குவதைத்தான் முதல் லீலையாகச் செய்தாள்!

மண்ணுண்ட வாயில் ஈரேழு புவனத்தையும் யசோதைக்குக் காட்டிய கோவிந்தனும், உடனுக்குடனே அந்தத் தெய்விகத்தை அவளது சித்தத்திலிருந்து மறைத்து, அவளிடம் கெஞ்சலையும், கொஞ்சலையும், ஏன், திட்டும் அடியும் கூடப் பெற்றதைப் பாகவதம் கூறுகிறது.

தெய்வம் அவதாரம் எடுக்கும்போது மனிதரோடு மனிதராக வாழவே விரும்புகிறது. தன்னைக் கண்டு பயந்து



பக்தி செய்தால் அதற்குத் திருப்தி உண்டாவதில்லை. தன்னை அன்பு உள்ளங்கள் அணுகிக் கொஞ்சிச் செல்லம் கொடுக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறது. அவர்களது பயபக்தியை மாயையால் மறைத்து வாஞ்சையாக மாற்றுகிறது.

தெய்வத்துக்கும் இப்படி ஓர் ஆசை உண்டு என்பது சரிதானு? அல்லது நெருங்கி அன்பு செய்வதன் இன்பத்தை எளிய அடியார்கள் அநுபவிக்க வேண்டும் என்றே தன் தெய்விகத்தை மூடி மறைத்துக் கொள்ளுமோ என்னவோ? அந்த அடியார்களை அது அடியோடு ஏமாற்றி விடுவதில்லை. அவ்வப்போது தன் தெய்விகத்தைக் காட்டிவிடுகிறது; உடனுக்குடன் மூடி மறைக்கிறது.

க்ஷேமங்கரி என்று குழந்தைக்குப் பெயரிட்டது அப்போதைக்கப்போதே அந்தக் கிராமத்தின் விஷயத்தில் மெய்யாயிற்று. அந்த வருடப் பொங்கலின்போது எதிர்பாராத அறுவடை கிடைத்திருந்தது. அதன் பின்பே ஜயராம்பாடியின் செழிப்பு ஓங்கலாயிற்று. பச்சை நிறைந்த கிராமத்தில் பச்சைக் கிளியாக வளர்ந்தாள் குழந்தை. ஆம், அவள் மிழற்றும் மழலை கிளிக் குஞ்சின் குரலாகவே இருந்தது.

ராமகிருஷ்ணர், விவேகாநந்தர், சாரதை மூவருக்குமே சாரீர மாதுரியம் பொது அம்சமாக இருந்தது.

ஓம் கர்ண பியூஷ ஸுஸ்வராயை நம:

என்பது அம்மாவின் அஷ்டோத்தரத்தில் ஒரு நாமம். 'காதுக்கு அமுதான இனிய குரல் படைத்தவள்' என்று பொருள்.

ஆனல் கிளிக் குஞ்சின் பரபரப்பும் துருதுருப்பும் இவளிடம் இம்மியும் இல்லை. குழந்தைப் பருவத்துக்கு ஒவ்வாத விசித்திரமான அமைதியும் நிம்மதியும் அவளிடம் குடிகொண்டிருந்தன.

வீட்டிலோ அமைதியும் நிம்மதியும் குலைகிற அளவுக்கு வறுமை வலுத்தது.

கிராமத்தில் செழிப்பாயினும், வீட்டில் தரித்திரம் தாண்டவமாடிற்று. நிறைந்த உள்ளமும், குறைந்த செல்வமும் கொண்ட குடியாக இருந்தது அது.

நெல் வருவாய் போதாமல், பருத்தியும் பயிரிட்டார் ராமசந்திரர். ஊராரின் மதிப்பைப் பெற்றிருந்த அந்த இல்லத் தலைவி சியாமசுந்தரியே பருத்தித் தோட்டத்துக்குச் சென்று காய்கள் பறிக்கும் நிலை ஏற்பட்டது.

குழந்தையைத் தூக்கிக் கொண்டு போவாள். நிழலில் மகவைப் படுக்க வைத்துவிட்டுக் காய் பறிக்கத் தொடங்குவாள்.

விழித்துக் கொண்ட சாரதா, அம்மா என்ன செய்கிறுள் என்று கவனமாகப் பார்த்துக் கொண்டிருப்பாள்.

மூன்று வயசாகும்போதே அம்மாவுக்கு உதவுவதற்காகத் தானும் கிளம்பிவிட்டாள். சின்னஞ் சிறு சிவப்பு முன்னங் கால்கள் மேலும் சிவக்க, எம்பி எம்பிப் பருத்திக் காய்களை அவளும் சேகரிப்பாள்.

வீட்டுக்குப் போனதும் சியாமசுந்தரி பஞ்செடுத்துத் தக்ளியில் நூல் நூற்று, பூணூலாக்குவாள். பூணூலை நாலு வீட்டில் கொடுத்துத் தட்சிணை பெருமளவுக்கு ஏழைமை மிகுந்திருந்தது.

குழந்தையும் தக்ளியை வைத்துக் கொண்டு நூற்பதற்கு முயலுவாள். இல்லாத சிரமமும் படுவாள். காலக்கிரமத்தில் பிஞ்சுப் பருவத்திலேயே பஞ்சு நூற்கத் தெரிந்து கொண்டுவிட்டாள்.

தெய்வ சாரதையின் கையில் நூல் (சுவடி) உண்டு; குழந்தை சாரதையின் கையிலும் நூல் இருந்தது. அது அறிவின் அடையாளம், இது உழைப்பின் அடையாளம். இந்த உழைப்பிலிருந்து பிறக்கிற பூணூல் பக்திக்கு அடையாளம்.

சாரதாமணியின் வாழ்க்கைத் தத்துவம் முழுதும் இதில் அடங்கிவிட்டது.

பயனென்னுமல் உழைக்கச் சொன்னுள்
பக்தி செய்து பிழைக்கச் சொன்னுள்

என்பதுதான் அந்தத் தத்துவம். அவள் வாழ்நாள் முழுவதும் அதைத்தான் செய்தாள். பாலப் பருவத்திலிருந்து தொடங்கி உழைப்போ உழைப்போ அப்படி ஓர் உழைப்பு உழைத்தாள். எஞ்சிய நேரம் முழுதும் பக்திதான்.

நவராத்திரி கொலுவில், பிரபஞ்ச வஸ்துக்கள் அனைத்துக்கும் பொம்மை செய்து வைத்து மகிழ்கிறோம். பராசக்தி





சென்னைக்கடுத்த மணலியில் பெட்ரோலியம் சுத்திகரிப்புத் தொழிலை அனுசரித்து வேகமாக நிறுவப்பட்டு வரும் பல ரசாயனத் தொழிற்சாலைகளில் முக்கியமான நாக்பால் - அம்பாடி பெட்ரோ - கெமிகல் தொழிற்சாலை சென்ற செப்டம்பர் 18ம் தேதி தமிழ்நாடு மாநில கவர்னர் திரு கே. கே. ஷா அவர்கள் தலைமையில், முதல் அமைச்சர் டாக்டர் மு. கருணாநிதி அவர்களால் கோலாகலமாகத் தொடங்கி வைக்கப்பட்டது. சுமார் ஐந்து கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டு, அமெரிக்காவில் இத் துறையில் மிகப் பிரபலமடைந்துள்ள விட்கோ கெமிகல் கார்ப்பரேஷனின் தொழில் நுட்பக் கூட்டுறவுடன் அமைக்கப்பட்ட இத் தொழிற்சாலை கண்ணைக் கவரும் விதத்தில் 55 ஏக்கர் நிலப்பரப்பில் கம்பீரமாக ஓங்கி நிற்கிறது.

இந்த நிறுவனத்தின் உயர் நிர்வாகஸ்தர்கள் பிரபல தொழிலதிபர்களான ஸர் ஏ. ராமஸ்வாமி முதலியார், திரு ஏ. எம். எம். அருணாசலம், திரு எஸ். ஆர். நாக்பால், திரு வி. டி. சௌகூல் போன்றவர்கள் கண்ணும் கருத்துமாகத் தொழிலை வளர்க்கும் பொறுப்பை ஏற்றுள்ளனர்.

---

தந்திருக்கிற பிரபஞ்சம் முழுவதையுமே பொம்மையாக ரசிக்கிறது குழந்தை.

> சந்திரன் என்றொரு பொம்மை - அதில்
> தண்ணமுதம் போல் ஒளி பரந்தொழுகும்

அல்லவா? அம்புலி 'பொம்மை' சாருவுக்கு மிகவும் பிடிக்கும். அது போலவே வெளுப்பாக ஆக ஆசைப்படுவாள். வெளுப்பு என்றால் வெறும் உடம்பின் வெளுப்பு அல்ல!

ஆமோதர் நதிக் கரைக்குச் சென்று அந்த நதிப் பொம்மை நளினமாக ஓடுவதை ரசிப்பாள்.

> சுறவுகள் மீன்வகைகள் - எனத்
> தோழர்கள் பலவும் இங்(கு) எனக்களித்தாள்

என்று மீனினங்களோடு மகிழுவாள்.

> ஞால முற்றிலும் நிறைந்தே - மிக
> நயந்தரு பொம்மைகள் எனக்கெனவே

சிம்மவாஹினி தந்திருப்பதாகக் கருதி ஆனந்தமாக வளர்ந்தாள். அம்பாள் தரும் அழகிய பிரபஞ்ச பொம்மை போதாமல், தானே பொம்மை செய்தும் விளையாடினாள். 'அம்மா அப்பா' விளையாட்டு விளையாடுவாள். அவள்தான் எப்போதும் அம்மா. குழந்தைக்குள்ளேயே 'அம்மா ஆசை' குமுறிக் கொண்டிருந்தது போலும். சம வயதுக் குழந்தைகளிடையே ஓர் அம்மாவின் கௌரவத்துடன் அவள் தனித்து நின்றாள். அவள் விஷமம் செய்த நாளே கிடையாது. விஷமம் செய்கிற மற்றக் குழந்தைகளுக்கும் புத்தி சொல்வாள். விளையாட்டில் சண்டை வந்துவிட்டால் அவள் அப்போதே சமாதானம் செய்துவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பாள்.

அம்மா அப்பா விளையாட்டைவிட, பூஜை விளையாட்டுத்தான் அவளுக்கு மிகவும் பிடித்தது. களிமண்ணை 'அமுக்கு திமுக்கு' என்று பிசைந்து தானே பொம்மையாக்கி விடுவாள். ராமகிருஷ்ணருக்குக் குழந்தைப் பருவத்திலேயே அற்புதமாகப் பொம்மை செய்யும் ஆற்றலிருந்ததும் இங்கு நினைவு வருகிறது.

'இது லக்ஷ்மி', 'இது காளி' என்று தன் பொம்மைகளுக்குப் பெயர் வைத்துப் பூஜை ஆரம்பித்துவிடுவாள். ஏகமாகப் புஷ்பங்களையும், வில்வ பத்திரங்களையும் பறித்து வந்து தனது புஷ்பக் கரத்தால் தூவுவாள்.

'ஜகத்தாத்ரி' என்ற பெயரில் காளிக்கு நடைபெற்ற பூஜை ஒன்றின் போது குழந்தை அப்படியே கண்களை மூடிக் கொண்டு தன்மயமாக அமர்ந்து விட்டாள்.

ஹல்தேபுகுர் என்ற கிராமத்தைச் சேர்ந்த ராமஹ்ருதயர் என்ற பெரியவர் குழந்தை சாரதையை இந்த நிலையில் கண்டு அதிசயித்தார். வெகு நீண்ட நேரமாகியும் சாரதையின் சாரஸ தளம் போன்ற இமைகள் திறந்தபாடில்லை. மண்ணினால் செய்த பொம்மையின் முன்னால் பால்கோவாவினால் செய்த பொம்மையாக அவள் அமர்ந்து விட்டாள். திடீரென்று, 'எது காளி, எது ராமசந்திர முகர்ஜியின் பெண்?' என்ற ஐயப்பாடே ராமஹ்ருதயருக்கு உண்டாகிவிட்டது.

உடம்பில் ஓர் உதறல் எடுத்தது.

அச்சத்துடன் அங்கிருந்து நழுவி விட்டார்.

* * *

சியாமசுந்தரியின் பிறந்தகம் இருந்த 'ஷியாட்' எனப்படும் ஷிஹாருக்கு ஒரு முறை குழந்தை சாரதை சென்றிருந்தபோது, ஹ்ருதயராம் முகர்ஜியின் வீட்டில் நாமசங்கீர்த்தனம் நடந்தது. பெரியவர்களோடு குழந்தையும் அதற்குச் சென்றாள்.

சங்கீர்த்தனம் முடிந்தபின் அங்கு வந்திருந்தவர்கள் யாவரும் அந்த அழகுக் குழந்தையை, சமர்த்துக் குழந்தையை மாற்றி மாற்றி எடுத்துக் கொஞ்சினார்கள்.

கிழவி ஒருத்தி சாரதையை மடியில் அமர்த்திக் கொண்டு, ''என்ன அதிசயக் குழந்தையடி அம்மா இது! தடிமாடு மாதிரி வயசாகிற நமக்கே பஜனையில் கொஞ்ச நாழிக்கு மேலே பொருந்தி இருக்க முடியல்லே. இந்தப் பச்சைக் குழந்தை என்னமா சங்கீர்த்தனத்திலேயே மனசைக் கொடுத்துண்டு உட்கார்ந்திருந்தது?'' என்று சிலாகித்து விட்டு, சாரதையிடம் செல்லமாக, ''ஏண்டீ சிறுக்கி, பஜனை கேட்கிற பாட்டியா நீ! பஜனை பார்க்கத்தான் வந்தியா, இல்லே, உன் அகமுடையான் இங்கே வந்திருக்கானான்னு துப்புத் துலக்க வந்தியா? சொல்லுடீ, திருட்டுக் கள்ளி!'' என்றாள்.

கிராமாந்தரக் கிழவிகளுக்கே உரிய முறையில் கேலி செய்தாள்.

அங்கே ஒரே சிரிப்பு ஆரவாரம் எழுந்தது.

சாரதை பட்டு முகத்தை அந்தப் பாட்டியின் தோளிலே புதைத்துக் கொண்டது.

''என்னடீ, வெட்கம்! ஆத்துக்காரரைப் பார்த்துட்டீயா? அடியே.... அடியே..... நான் சமர்த்துப் பாட்டியோன்னோ, எனக்கும் உன் அகத்துக்காரரைக் காட்டுவாயாம்! இங்கே வந்திருக்கிற இத்தனை பேருலே எந்த மகராஜன் எங்க சாரு கையைப் புடிக்கப் போறான்னு தெரிஞ்சுக்கிறேன்'' என்று கிழவி குழைந்தாள்.

சாரதை சட்டென்று கிழவியின் தோளிலிருந்து முகத்தை எடுத்துக் கொண்டாள். தன்னுடைய இரண்டு 'துக்குணியூண்டு'க் கைகளையும் தூக்கி, விரல்களைக் கோத்துக் கொண்டு, ஆள்காட்டி விரல்களை மட்டும் நீட்டி, ''அதோ, என் அகத்துக்காரர்!'' என்று காட்டினாள்.

அவள் காட்டிய திசையில் எல்லாப் பெண்களின் கவனமும் சென்றது.

கும்மாளி சடேரென்று ஓய்ந்தது.

'இத்தனை சூட்டிகையான சாரு போயும் போயும் இந்தப் பைத்திய கதாயியையா புருஷனாகக் காட்டவேண்டும்?' என்ற எண்ணம் அவர்கள் மனத்தில் எழுந்தது.

சாருவோ வைத்த விழி வாங்காமல் அந்தப் 'பைத்திய' கதாயியையே பார்த்துக் கொண்டிருந்தது.

யார் அந்தப் பைத்திய கதாயி?

(தொடரும்)


பெண்கள் என்றாலே
குறிப்பிட்ட சில
நாட்களில் அசௌ
கரியமும் வேதனையும்
இருக்கக்கூடும்.
ஸாரிடான் அவற்றி
லிருந்து விடுதலை
அளித்து அவர்களைப்
புத்துணர்வோடும்
மகிழ்வோடும்
இருக்கச் செய்கிறது.
ஸாரிடான்

# பாபர் சக்கரவர்த்தியின் சபதம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

இந்தியாவில் மொகலாய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தவன் பாபர் சக்கரவர்த்தி. 1524-ஆம் வருஷத்தில் பாபர் தனக்கு இணையாக மற்றொரு மகா வீரனைப் போர்க்களத்தில் சந்தித்தான். இவன் இராணாசங்கன் என்னும் இரஜபுத்திர மன்னன். இவ்விருவருக்கும் கனுவா என்னுமிடத்தில் பெரிய யுத்தம் நடந்தது. பாபருடைய சைனியங்கள் தோல்வியடைந்து வந்தன. மேலும் தன் வீரர்கள் முறிபடிக்கப்பட்டு ஓடுவதை பாபர் பார்த்தான்.

அச்சமயத்தில் பாபர் ஒரு பெரிய தீர்மானம் செய்தான். "இனிமேல் மதுவைக் கையாலும் தொடுவதில்லை" என்று அவன் சபதம் கூறினான். பொன்னாலும் வெள்ளியாலுமான அவனுடைய மதுக் கோப்பைகளை யெல்லாம் உடைத்தெறிந்து அந்தத் துண்டுகளையெல்லாம் ஏழைகளுக்குத் தானம் செய்துவிடும்படி கட்டளை யிட்டான்.

அதே சமயத்தில் அவனுடைய பிரதான போர்வீரர்களில் 300 பேர் தாங்கள் குடிக்க வைத்திருந்த மதுவைத் தரையில் கவிழ்த்துவிட்டு "இனி மதுவைத் தொடுவதில்லை" என்று விரதம் எடுத்துக் கொண்டார்கள்.

"விமோசனம்" மார்கழி 1929
ஆசிரியர்:
சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்
(நன்றி: குமரி மலர்)

# அம்மா

## ரா. கணபதி

### 3 கதாயி

பித்தரே என்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
-- சுந்தரர், திருக்கருகாவூர் பதிகம்

குழந்தை சாருவின் சித்தம் கவர்ந்த பித்தரான அந்த 'கதாயி'தான் நம் கதாநாயகர்.

கதாயி என்பது செல்லப் பெயர். கதாதர சட்டோபாத்தியாயர் என்பது அவருடைய முழுப் பெயர்.

இப்போது அவரை உலகம் பைத்திய மாக எண்ணினாலும், இந்தப் பிள்ளை பிறந்ததே தங்கள் பெரும் பாக்கியம் என்று ஆதியில் அவரது பெற்றோர் வியந்து மகிழ்ந்திருக்கிறார்கள்.

காமார்புகுரைச் சேர்ந்த எளிய அந்தணர்களான க்ஷுதிராமுக்கும் சந்திரமணிக்கும் வாய்த்த சத்புத்திர பாக்கியம்தான் கதாதரர். க்ஷுதிராமும் சந்திரமணியும் அந்தக் குழந்தை கயா க்ஷேத்திரநாதனை நாராயணனின் அருட்பிரசாதம் எனக் கண்டு கொண்டு, அதற்கு கதாதரன் என்று பெயரிட்டனர்.

புரளும் குழலும், குழலனைய தீங் குரலுமாகக் குழந்தை கதாதரன் இயற்கை அன்னையின் மடியில் வளர்ந்தான். மாந் தோப்புகளிலும், வயல் வரப்புக்களிலும் அவனது பாலப் பருவம் தவழ்ந்து விளையாடிற்று. அம்பிகை உலகெங்கிலும் பரப்பியுள்ள அழகுகளையெல்லாம் அப்போதே கதாதரன் உணரத் தொடங்கினான். ஆறுவது வயதில் கருமுகில்களின் பின்னணியில் தூய வெண்ணிற நாரைகள் பறப்பதைக் கண்டபோது, தன் உணர்விழந்து அழகுகளின் ஆதாரமான அம்பிகையிலேயே தோய்ந்தான் கதாதரன்.

பள்ளிப் படிப்பை விரும்பாத பாலன் கதாதரன் தெய்விகமான இசையிலும் தெய்வக் கதைகளை விவரிக்கும் நாடகத்திலும் ஈடுபாடு கொண்டிருந்தான். நாடகத்தில் சிவ வேஷம் தாங்கியவன் தன் நிலையை இழந்து சிவத்திலேயே லயமானான். சஞ்சரித்துக் கொண்டேயிருக்கும் சாது ஜனங்களின் சங்கத்தில் குதூகலித்தான். தேவ தேவியரைத் தியானிக்கத் தொடங்கிய அளவிலேயே மனசு குவிந்துவிடும் உயரிய நிலை கதாதரனுக்கு இரத்தத்தில் ஊறியிருந்தது.

க்ஷுதிராம் காலகதிக்கு இலக்கானார். குடும்பத்தின் வறுமை பயங்கரமாயிற்று. கல்வி கற்று ஏதேனும் ஒரு தொழிலை நடத்த வேண்டிய அவசியம் கதாதரனுக்கு ஏற்பட்டது. கல்கத்தாவில் சம்ஸ்கிருத பாடசாலை நடத்திக் கொண்டிருந்த தனது தமையரான ராம குமாரரைச் சென்றடைந்தான் பதினாறு வயது கதாதரன். அவர் அவனை லௌகிகக் கல்வி கற்குமாறு தூண்டினார். கதாதரன் சிந்திக்கலானான்: 'பள்ளிப் படிப்பினால் நான் மேலும் தூய்மை பெறுவேனா? அது என் பக்தியை வளர்க்குமா? கடவுளுக்குப் பயந்து என் தந்தை எளிய வாழ்வு வாழ்ந்தாரே—அதைப் போல நானும் வாழ இந்தக் கல்வி சிறிதேனும் உதவுமா? அஞ்ஞானத்தையும், போக போக்கிய அபிலாஷையையும் வென்று, பரம்பொருளை நுகர இந்த எழுத்தறிவு உபயோகமாகுமா?'

'ஆகவே ஆகாது' என்று உறுதியாக மறுமொழியை கதாதரனின் உள்ளம் அளித்தது. 'அப்படியானால், எழுத்தறிவில்லாவிடினும் கடவுளைக் காணும் பாதையில் செல்வதே யல்லவா சாலச் சிறந்தது?' என்று அவன் மனசு திட சங்கல்பம் பூண்டது.

சகோதரரிடம் கூறினான் கதாதரன்; ''சப்பாத்தியும் வெண்ணெயும் சம்பாதித்துத் தரும் படிப்பை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது? இதயத்தில் ஒளியை நிரப்பித் திருப்தியூட்டும் ஞானம் அல்லவா எனக்குத் தேவைப்படுகிறது?''



ராமகுமாரர் ஒன்றும் விடை சொல்ல இயலவில்லை.

இந்தச் சமயத்தில் ராணி ராஸமணி என்ற கரையர் குலச் சீமாட்டி கல்கத்தாவை அடுத்த தக்ஷிணேசுவரத்தில் பவதாரிணி எனும் தேவி காளிக்கு ஓர் ஆலயம் எடுத்தாள். 'பவதாரிணி' என்றால் சம்சாரக் கடலிலிருந்து மோக்ஷ இன்பத்துக்குக் கடத்துவிப்பவள். இவ்வாலயத்தின் அர்ச்சகராக ராமகுமாரர் நியமிக்கப்பட்டார். கதாதரர் ராமகுமாரருடன் தக்ஷிணேசுவரம் வந்தடைந்தார். அதாவது, கரையில் கிடந்த மீன் மீண்டும் சாகரத்தில் சேர்ந்து விட்டது.





ராமகுமாரர் 1856ம் ஆண்டு காலமானார். கதாதரரே அர்ச்சகரானார். அப்போது அவருக்கு வயது இருபது.

ஆரம்ப காலத்தில் அவர் சமய நூல்களை அறிந்திருக்கவில்லை. நானாவித ஆன்ம சாதனைகளின் நுணுக்கங்களை அறிந்திருக்கவில்லை. அவருக்கு முறைப்படி உபதேசம் கூறி வழி காட்டுபவர்களும் அப்போது இல்லை. எனினும் அவரிடமே அற்புதமான ஒன்று இருந்தது. அம்பிகையைக் காண வேண்டும் என்று அவரது உள்ளத்தின் அடிவாரத்திலிருந்து பிரவகித்த ஆர்வம்தான் அந்த அற்புதம். 'அழுதாலுன்னைப் பெறலாமே' என்று மணிவாசகர் கூறியவாறு நெட்டுயிர்த்துக் கதறி அழ அறிந்திருந்தார் கதாதரர். சின்னஞ் சிறு குழந்தை தாய்க்காக எப்படி அலறுகிறதோ அப்படியே காளி மாதாவின் தரிசனத்துக்காக அலறலானார் கதாதரர்.



அதிகாலையில் கோமளமான குளிரொளியில் கங்கைத் தடத்தோடு நடந்து செல்வார் கதாதரர் — தேவியின் நினைவே நிறைந்தபடி. பகலெல்லாம் பூஜையிலும், பஜனையிலும், பிரார்த்தனையிலுமே செல்லும். மாலையின் நளினமான தண்ணொளியில் மீண்டும் கங்கா தீரத்தோடு சஞ்சரிப்பார் கதாதரர் — அம்பிகையின் எண்ணமே உள் முழுதும் பூரித்தபடி. அப்புறம் இரவு முழுவதும் அம்பாள் தியானம் தான். இப்படி வாழ்க்கையில் ஒவ்வொரு விநாடியும் திவ்விய தரிசனத்துக்காகவே தவமிருந்தார் கதாதரர். அந்த தரிசனம் மட்டும் கிட்டியபாடில்லை. தவத்தின் உக்கிரமும் ஏறியது. 'ஆகா, இன்னும் ஒருநாள் சென்று விட்டது! அம்மா, நான் உன்னைக் காணவில்லை.

என் அல்ப ஆயுளில் மேலும் ஒரு தினம் கழிந்துவிட்டது. நான் சத்தியத்தைத் தரிசிக்கவில்லை. பொழுது வீணாகிறது. 'ஐயோ, வீணாகிறதே!' என்று அரற்றித் துடியாகத் துடித்தார் கதாதரர்.

'நீ அன்னையாக இருந்தால் என்னை இப்படித் தவிக்க விடுவாயா? அப்படியானால் அம்பிகையே கிடையாதா? நீ ஒரு கற்பனைதானா? மதம் என்பது ஒரு மாயம்தானா?' என்றெல்லாம் நீராளமாக நெஞ்சம் உருகக் கேட்பார் கதாதரர். உடனேயே ஞானியர்களும், பக்தர்களும் அவரது மனக் கண் முன் வரிசை வரிசையாக வந்து நிற்பார்கள். ஞானப் பிழம்பில் ஜொலிப்புப் பெற்ற அந்த அறிவுச் செல்வர்களையும், அம்பிகையின் அருள் வெள்ளத்தில் அளைந்த அந்த அன்புச் செல்வர்களையும் நினைந்தவுடன் அவரது ஐயங்கள் நீங்கும். தவக் கனலை மேலும் விசிறி உக்கிரமாக்குவார்.

ஒரு நாள் தாங்கொணாத துயரம் அவரை நெரித்தது. அம்பாளைக் 'காணாமல் இதென்ன வாழ்க்கை? தெய்வத்தைப் பாராமலே எதற்காக உயிர் வாழ வேண்டும்?' என்ற எண்ணம் கொழுந்து விட்டெரிந்தது. உடலில் உயிர் தரிக்க முடியாமல் நிலை தடுமாறிய கதாதரர் பவதாரிணியின் சந்நிதிக்கு வந்தார். அங்கு தொங்கிக் கொண்டிருந்த வாளைக் கையில் எடுத்துக் கொண்டார். இன்னும் ஒரு விநாடிதான் இந்தப் பாடு! அப்புறம் அந்த வாள் அவருக்கு அமைதி அளித்து விடும்.

அந்த ஒரு விநாடிக்குள் மகத்தான சம்பவம் நடந்து விட்டது. எந்தச் சம்பவத்துக்காகக் கதாதரர் வேக்காட்டில் வெந்து கொண்டிருந்தாரோ அந்தச் சம்பவம் நிகழ்ந்தே விட்டது!

சந்நிதி முழுவதும் பரம பாவனமானதோர் ஒளி பாய்ந்தது. அந்த ஒளி எங்கிருந்து வந்தது? இதோ, இந்த பவதாரிணியிட மிருந்தேதான் வந்தது. **ஆம், அங்கு பவதாரிணியின் விக்கிரகம் நிற்கவில்லை. பவதாரிணியே நின்றாள்.**

அஞ்ஞானிகளுக்குக் கறு நிறத்தவளாகத் தோன்றும் காளி மாதா, ஞானியான கதாதரருக்கு ஒளி மயமாகக் காட்சி அளித்தாள். எட்ட இருந்து பார்க்கும்போது கடல் நீர் கறுநிறமாகத் தெரிகிறது. கையில் எடுத்தாலோ? நமக்கெல்லாம் எட்ட இருக்கும் அன்னைத் தெய்வம் அப்படித்தான் கதாதரரின் கைக்கே வந்து விட்டாள்!

அவளுடைய மேனி அழகின் ஒளியைச் சொல்வதா? அவள் மனத்தில் கொப்புளிக்கும் அருளின் ஒளியைச் சொல்வதா?

கோர காளியாம் பவதாரிணியின் மேனி அழகையும், அருளழகையும் பற்றிச் சொல்வது நம் தக்ஷிண தேச வாசகர்களில் பலருக்கு வியப்பாக இருக்கலாம்.

காளி மாதாவிடம் எழும் உள் கனிந்த பக்தியைத் தத்துவ விளக்கத்தில் பூரணமாகக் கொண்டு வர முடியாது. எனினும் ஓரளவேனும் விளங்கிக் கொள்ள முயலுவோம்.

சத்திப் பேய்தான் தலையொடு தலைகள் முட்டிச் - சட்டச்
சடசட சட்டென் றுடைபடு தாளங் கொட்டி - அங்கே
எத்திக்கினிலும் நின்விழி யனல்போய் எட்டித்-தானே
எரியுங் கோலங் கண்டே சாகும் காலம்
அன்னை ! அன்னை ! ஆடுங்கூத்தை
நாடச்செய்தாய் என்னை !

என்று கவி பாரதியார் பாடிய ரௌத்ராகாரக் கோலம் கொண்டவள் காளி. 'ரௌத்திராகாரம்' என்றாலும் போதாது; ஏனெனில் ருத்ரனையே காலின் கீழ் போட்டு மிதித்தபடி ஆடுபவள் காளி.

ஸர்வமங்கள மூர்த்தியாக ஆடும் நடராஜனுடைய திருவடியின் கீழும் ஓர் உருவம் உண்டு. அபஸ்மார புருஷன் அவன். அதாவது, ஸ்மரிக்கத் தகாத—நினைக்கத் தகாதவற்றின் உருவம் அவன். நடராஜ நிலையில் நினைக்கத் தகுந்த வஸ்து, நினைக்கத் தகாத வஸ்து என்ற பேதம் கிடையாது. நினைவு என்பதே தகாத வஸ்து என்கிற நிச்சலன, அத்வைத, ஆத்மானந்த நிலை அது. நினைவை அழித்து நிஷ்டை தருவதற்கு அடையாளமாக முயலகனை மிதித்து ஆடுகிறான் ஞான மூர்த்தியான நடராஜன்.

அவன் அப்படி ஞான மூர்த்தியாக இருந்துவிட்டால் பிரபஞ்சம் என்ன ஆவது? அவனுடைய சக்தி பிரபஞ்ச விளையாட்டை ஓயாமல் நிகழ்த்தி மகிழ்கிறது. நடராஜனின் உடுக்கு உலக சிருஷ்டியையும், அவனது அபய ஹஸ்தம் பரிபாலனத்தையும், அக்கினியானது சம்ஹாரத்தையும் செய்து கொண்டேதான் இருக்கின்றன. தன்னிலேயே திளைத்த ஞான மூர்த்திக்கு துஷ்ட நிக்ரஹம், சிஷ்ட பரிபாலனம் ஏதுமே இல்லை. ஆனாலும் பரம்பொருள் எதிலும் பற்றாமல் தனித்திருக்கும் போதே, அதன் சக்தி இந்த உலக நாடகத்தை நடத்தி துஷ்ட நிக்ரஹம், சிஷ்டபரிபாலனம் என்ற இரு விதங்களி

லும் அநுக்கிரகம் புரிந்து வருகிறது. இந்த அநுக்கிரகத்தின் இரண்டு வடிவங்கள்தாம் லலிதையும் காளியும். லலிதமான வடிவம் கொண்டபோது எது லலிதையாக, திரிபுரஸுந்தரியாக, ராஜராஜேசுவரியாக, காமகோடி காமாக்ஷியாக வந்ததோ, அதுவே கோர ரூபம் கொண்டு சண்டியாக, சாமுண்டியாக, மகிஷமர்த்தினியாக, துர்காபரமேசுவரியாக, மகா காளியாக ஆயிற்று.

நினைவை மிதித்தால் ஆனந்த ஆத்மாநுபவமான நடராஜன்; நினைவற்ற நடராஜனை மிதிப்பதே உலகைக் காக்கும் அருள்; அதன் வடிவமே காளி. லலிதை இப்படி மிதிப்பதாகச் சொல்லாமல், பரமசிவனையே ஆசனமாகக் கொண்டு அதன் மீது அமர்ந்திருக்கிறாள் என்று நளின எழில் தோன்றச் சொல்கிறோம்.

தீமையைப் பொசுக்குவேன் என்று காட்டுவதற்கே காளி கொடிய ரூபம் கொண்டாள் என்றும் சொல்லலாம். கொடியவர்களுக்கே அவள் கொடியவள். அடியவர்களுக்கு அருள்பிரவாகம். இல்லாவிடில் வங்கத்திலே சின்னக் குழந்தைகள்கூட இந்த கோரரூபிணியை 'அம்மா, அம்மா' என்று தொட்டுக் கொஞ்சி அன்போடு வழிபடுமா?

அழகு — கோரம், நன்மை — தீமை எல்லாவற்றுக்கும் ஒரே பராசக்திதான் காரணம். நல்லதை மட்டுமே கடவுள் செய்தார்; கெட்டதைச் சைத்தான் செய்தான் என்று நம் மதம் சொல்லவில்லை. இரண்டும் ஒன்றிடமிருந்தே உண்டாயின. இதை உணர்த்தவே கோர காளியை வழிபடுகிறோம்.

நினைவற்ற பிரம்மத்திடம் எப்படியோ ஒரு நினைவு வந்ததால் பிரபஞ்சம் என்ற தோற்றம் ஏற்பட்டது. இந்தத் தோற்றத்துக்குள் தருமம் நிலவ வேண்டும் என்பதற்காகத் தீமையை அழித்து நல்லதைச் செய்கிறாள் பராசக்தி. ஆனால் இந்தப் பிரபஞ்சத் தோற்றமே அடியோடு அழிந்தால்தான் உயிரினம் பிரம்மத்துடன் இரண்டறக் கலக்க முடியும். எனவே பொதுவாக, உலகைப் பொறுத்தமட்டில் தீமையை அழித்துத் தருமத்தை நிலைநாட்டும் காளி, மெய்யடியார்கள் விஷயத்தில் தருமத்தையும் நல்லதையும்கூட அழித்து, சர்வ சம்ஹாரிணியாகி அவர்களை நினைவற்ற நிலையில் சேர்க்கிறாள். பவம் என்றால் சம்ஸாரம், உலக வாழ்க்கை. அதில் நன்மை தீமை இரண்டும் உண்டு. நம் உடம்பில் தைத்த ஒரு முள்ளை இன்னொரு முள்ளால் கல்லி எடுத்துப் பின்னர் இரு முள்ளையும் வீசி எறிவது போல், முதலில் தீமையை நன்மையால் களைந்து, பிறகு அந்த நன்மையையும் சேர்த்துத் தூக்கி எறிந்தாலே சம்ஸாரத்திலிருந்து விடுதலை பெறலாம். இவ்வாறு 'பவ'த்திலிருந்து கடத்துவிப்பவளே பவதாரிணியான காளி மாதா. கறுப்பாக இருப்பதால் காளி எனப் பெயர். நிறமற்ற அகண்ட வானம் நமக்குக் கறுப்பாகத் தெரிவதுபோல், அஞ்ஞான தசையில் அவளைக் கறுப்பாகக் காண்போம்; ஞானம் வந்தால் ஆகாய ரூபமான, சித் — அம்பரமான, நடராஜனே அவள் என உணருவோம். காளி என்றால் காலஸ்வரூபிணி என்றும் பொருள். காலம் என்ற ஒன்றைப் படைத்து அதனுள் நம்மை ஆட்டுவிக்கும் அவளேதான், மெய்யடியார் விஷயத்தில் கால ஸம்ஹாரிணியாகி, அவர்களைக் காலம் கடந்த பரமநிலையில் சேர்க்கிறாள். அவளருள் பெற்றவர்கள்—கதாதரர் போன்ற மகா புருஷர்கள் — தங்களுக்குள் நன்மை, தீமை இரண்டையும் அழித்து விட்டாலும், காலம் என்ற ஒன்றில் கட்டுப்பட்டாற் போல் இவ்வுலகில் உருக்கொண்டு உலவுகையில் இவ்வுலகுக்கு நன்மை மட்டுமே செய்வார்கள்.

மாடியிலிருந்து கீழே இறங்குவதற்கு உதவுகிற அதே ஏணி, கீழே இருப்பவரை மாடிக்கு ஏற்றவும் உபயோகப்படுகிறது. பரப்பிரம்மத்தை உலகுக்கு அநுக்கிரகம் புரியுமாறு சலன நிலைக்கு இறக்குகிற அநுக்கிரக சக்தியான காளி மாதாவே, உலகினரைப் பிரம்ம நிலைக்கு உயர்த்தும் ஞான சக்தியாகவும் இருக்கிறாள்.

காளி மாதா வேறு பிரம்மம் வேறு அல்ல. பிரம்மம் வேறு, அதன் அநுக்கிரக சக்தி வேறு, ஞான சக்தி வேறு என்று எண்ணலாகாது. பால் வேறு, அதன் வெண்மை வேறு, இன்சுவை வேறு என்பார்களா? பூ வேறு, அதன் மணம் வேறு, வடிவம் வேறு என்பார்களா? தீபம் வேறு, அதன் சூடு வேறு, ஒளி வேறு என்பார்களா?

மதுரமே வடிவான கதாதரர் இறுதி மூச்சுவரை 'காளி காளி' என்றே வாழ்ந்ததால் காளியைப் பற்றி இவ்வளவு சொல்ல வேண்டியதாயிற்று. இப்போது அவர் காளியின் அழகு வெள்ளத்தில், அருள் வெள்ளத்தில் ஆழ அமிழ்ந்ததைச் சிறிதேனும் புரிந்து கொள்ள முடிகிறதல்லவ

அருளொளியில் திக்குமுக்காடிப் போனார் கதாதரர்.

ஆஹா! அவரது பாக்கியத்தை என்னென்பது! எந்த மகா சக்தி இத்தனை ஆயிரம் அண்டங்களையும் இத்தனை கோடி ஜீவராசிகளையும் இத்தனை யுக யுகாந்தரங்களாகப் படைத்துக் காத்து ரக்ஷித்து அருளி வருகிறதோ, அந்த மகா சக்தியைக் கண்ணுக்கு நேராக, நாம் ஒருவரை யொருவர் பார்ப்பது, போல், ஓர் உருவத்தில் கண்டு, அதன் மகத்தான அன்பினைப் பிரத்தியட்சமாக அநுபவித்தார் கதாயி!

* * *

**வா**சகர்களே! இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் நம்பிப் படியுங்கள்! பிராண வாயுவுக்கு வழி தரும் இதயக் கதவுகளை நன்கு திறந்து வைத்துக் கொண்டு, விஷ வாயுவுக்கு வழி திறக்கும் மூளை வாதத்தை மூடித் தாழிட்டுவிட்டுப் படியுங்கள்!

கதாதரரைப் போல நாம் யாரும் தெய்வத்தைக் காணத் துடிக்கவில்லை; கதறவில்லை; உயிரை விடத் துணியவில்லை. அவ்வாறிருக்க அவருக்கு ஏற்பட்ட அநுபவத்தில் நாம் ஐயம் கொண்டால் அது எவ்வளவு அபசாரமாகும்? எங்கோ ஒரு பரிசோதனாலயத்தில் யாரோ ஒரு விஞ்ஞானி ஜடப் பொருளை வைத்துக் கொண்டு சோதனை நடத்தித் தனது முடிவுகளை வெளியிட்டால் உடனே அவற்றை நாம் ஒப்புக் கொண்டு விடுகிறோம். அந்தச் சோதனைகளை நாமே நடத்திப் பார்க்க வேண்டும் என்று எண்ணுவதில்லை. தம்மையே பரிசோதனாலயமாகவும், தாமே சோதிக்கப்படும் பொருளாகவும் கொண்டு நம்முடைய ஞானச் செல்வர்கள் புரிந்த சாதனை முடிவுகளை ஏற்க மட்டும் ஐயம் கொள்ளலாமா? விஞ்ஞானிகளில் ஒருவர் கண்ட முடிவு தவறு என்று இன்னொரு காலத்தில் வரும் விஞ்ஞானி கூறுகிறார். நியூடனின் ஒளிக்கதிர்க் கொள்கை உள்படப் பல மாபெரும் விஞ்ஞான முடிவுகள் இந்தக் கதிக்கு ஆளாகி யிருக்கின்றன. ஆனால் ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாக எல்லா ஞானிகளும் கண்ட முடிவு மட்டும் ஒன்றாகவே இருந்திருக்கிறது. அவற்றை நம்பத் தயங்கலாமா?

ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாக உலகெங்கிலுமுள்ள ஞானிகள் யாவரும் கண்ட முடிவுகள் ஒன்றேதான் என்று நிரூபிக்கவே கதாதரரின் அவதாரம் நிகழ்ந்தது. அன்னையின் தரிசனத்துடன் அவதாரப் பணி மலரத் தொடங்கியது.

* * *

**'நோ**க்கறிய நோக்கும்' 'நுணுக்கறிய நுண்ணுணர்வு'மான தேவி பராசக்தியைப் பௌதிகக் கண்களால் எவ்வளவு காலம் காண இயலும்? கதாதரர் தம் நினைவிழந்து தரையில் சாய்ந்தார். அப்புறம் அன்று என்ன நடந்தது, மறு நாள் முழுவதும் என்ன நிகழ்ந்தது என்பதேதும் கதாதரருக்குத் தெரியாது. வர்ணிக்கவொண்ணாத ஓர் ஆனந்தக் கடல் அவர் அகத்தே மதர்த்துத் திமிர்த்து மங்கள நாதத்துடன் அலைவீச, அந்த அலைத் தொட்டிலிலேயே தியான துயிலிருந்தார் கதாதரர்.

மக்கள் ஒருவரை யொருவர் பார்ப்பது போல அம்பிகையை நேருக்கு நேர் கண்ட பின் கதாதரர் தெய்விக போதையிலேயே ஆழ்ந்து விட்டார். பரவச நிலையிலும், சர்வ சகஜமான நிலையிலும் கூட அவர் கண்டறியாதன காணத் தொடங்கினார். தேவ சக்திகள் உருவெடுத்து வந்து அவருடன் உறவாடின. அவரும் அவற்றுடன் உரையாடி மகிழ்ந்தார். களிப்புக் கடலில் மூழ்கிக் கிடந்த கதாதரரின் செயல்கள் சுற்றியிருந்தோருக்குச் சற்றும் பொருளாகவில்லை. அவர் ஏன் சிரிக்கிறார், ஏன் அழுகிறார் என்பதெல்லாம் அவர்களுக்குப் புதிராக இருந்தன. அவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டதாக முடிவு கட்டி விட்டார்கள்.

இதைப் பற்றியும் கதாதரர் வருத்தப்படவில்லை. அவர் வருந்தியது வேறொன்றுக்காக. தேவியின் தரிசனம் கிடைத்த போதிலும் அது தமக்கு இடையறாமல், அநவரதமும் கிடைக்கவில்லையே என்பதுதான் அவரது வருத்தம். 'நான் அரைமனதாகத்தான் தவமிருந்தேனா? என்னுடைய பக்தி போதாதா?' என்று தம்மையே தாம் குடைந்து கொண்டார். முன்னைவிடத் தீவிரமாக, தியாக அவரது தரிசன நாட்டம் பற்றியெரிந்தது. அதன் பலனையும் காலக்கிரமத்தில் பெற்றே விட்டார். சாக்ஷாத் சர்வேசுவரியின் திருக்கோலம் நினைத்த போதெல்லாம் கண்களில் கட்டி நின்றது; இதயத்தில் ஆனந்தத்துக்குக் கரை கட்டி நின்றது.

விக்கிரகத்தில் தேவதையைக் காண்பது நமக்கு எவ்வளவு இயலாத காரியமோ, அவ்வளவுக்கு விக்கிரகத்தில் தேவியைக் காணாமலிருப்பது கதாதரருக்கு இயலாத காரியமாயிற்று.

பரப்பிரம்ம ஸ்வரூபிணி எவளோ, பிரம்மத்தை மறைக்கும் மாயை எவளோ, ஞானம் அஞ்ஞானம் அனைத்தும் எவளோ, கருணை கடுமை அனைத்தும் எவளோ, அழகு அவலம் அனைத்தும் எவளோ, இன்பம் துன்பம் அனைத்தும் எவளோ — அப்பேர்ப்பட்ட பராசக்தி உயிரும் உடலும் கொண்டு எளிய கதாயி முன், அன்பு கதாயி முன் நின்ருள்; மந்த ஹாஸம் புரிந்தாள்; கருணை துளும்ப நோக்கினுள்; அமிருத மயமாகப் பேசினுள். விக்கிரகத்தின் கழுத்தில் ஒரு ஹாரத்தை கதாதரர் சரி செய்தாராஞல் அவரது புறங் கையில் ஒரு குளிர் காற்றுக் குறுகுறுக்கும். ஆம், அந்தப் புறங் கைக்கு அருகேயுள்ள தேவியின் திரு நாசி விரிந்து மலர்ந்து பரப்பும் சுவாஸக் காற்றின் குளுமைக் குறுகுறுப்புத்தான் அது. சிலேயின்பாதத்தில் அவர் நீண்ட நேரம் சிரம் பதித்து வணங்கியிருந்தால் அவர் செவிகளில் தேன் சொட்டுக்கள் விழும். மயானருத்தின் கலியாண சுந்தரேசுவரனுகி எந்தப் பாதங்களில் நலங்கு இட்டானே அந்தத் தனது சரண கமலங்களை அம்பாள் நலுங்காமல் பொருத்திக் கொள்ளும்போது அவற்றில் தரித்த நூபுரங்கள் அசைய அவற்றின் முத்துப் பரல்கள் எழுப்பும் இன்னெலிதான் அந்தத் தேன் சொட்டுக்கள்.

தெய்வத்துக்கும் மானுடனுக்கும் உள்ள தொலைவு குறைந்து கொண்டே வந்து தாய்க்கும் சேய்க்குமுள்ள நெருக்கம் ஏற்பட்டது. கதாதரர் அம்பாளுடனேயே வாழ்ந்தார்; அம்பாளிலேயே வாழ்ந்தார்.

அம்பாள் என்பது யார்? அன்பு தானே?

அந்த அன்பின்முன் இக உலக ஆசைகள் யாவும் தீ முன் பஞ்சுப் பொதியாக பஸ்மீகரமாயின. அன்புக்கு ஆண் என்றும் பெண் என்றும் பேதமுண்டா? அன்புமயமான கதாதரரை ஆண், பெண் என்ற பகுப்பு அண்ட முடியுமா?

ராஸமணியின் சயஸ்தானத்தைப் பரிபாலித்து வந்த மதுரநாத விசுவாஸர் கதாதரரைப் பலவிதத்தில் பரீட்சித்துப் பார்த்துக் காமமகற்றிய தூயர் அவர் என்று கண்டார். 'எந்த தேவி எல்லா உயிரினங்களிடத்திலும் பெண்மையாகத் திகழ்கிருளோ, அந்தத் தேவிக்கு வணக்கம், வணக்கம், முக்காலும் வணக்கம்' என்ற ஸப்தசதீ மந்திரத்தை கதாதரர் முற்றிலும் உன்னி உணர்ந்து வாழ்ந்தார். பெண்களெல்லாமே தேவியாகத் தெரிபவரிடம் காமம் எப்படித் தலைகாட்ட முடியும்?

**கா**மமே தெரியாத அந்த இருபது பிராயத்து கதாயியைத்தான் கள்ளமறியாக் குழந்தை சாரதை, ''அதோ என் அகத்துக்காரர்'' என்று இரு கரங்களையும் தூக்கிக் காட்டிக் கூறினுள்.

ஷியாடைச் சேர்ந்த ஹ்ருதயராம் முகர்ஜி, கதாயிக்கு அத்தங்காள் மகன். அவ்விருவர் குடும்பத்துக்கும் நெருங்கிய பந்தம் உண்டு. அநேகமாக ஹ்ருதயர் தக்ஷிணேசுவரத்தில் கதாயி 'மாமா' வுடனேயேதான் இருப்பார்.

இப்போது ஹ்ருதயரின் சொந்தக் கிராமமாகிய ஷியாடில் சங்கீர்த்தனம் நடந்த போது அங்கு கதாதர சட்டர்ஜியும் வருகை தந்திருந்தார்.

மற்றவர்களுக்குப் பஜனை என்பது தற்கால சாந்தியாகத்தான் இருந்தது; அல்லது பஜனை நேரத்திலும்கூட மனசு ஓடாத ஓட்டமெல்லாம் ஓடிக் கொண்டிருந்தது. கதாதரரோ அதில் ஆழப் புதைந்து விட்டார்.

உருக்கி வார்த்த பொன்னில் செதுக்கினுற் போன்ற மேனியில், கண்களிலிருந்து வடியும் நீர்த் துளிகள் முத்து மாலையை அணிவித்து அழகு செய்ய, அற்புதமாக அழுது கொண்டும், அற்புதமாகச் சிரித்துக் கொண்டும் சங்கீர்த்தனத்தில் சொக்கியிருந்தார் கதாயி.

மற்றவர்களுக்குப் பைத்திய சேஷ்டையாக இருந்த அந்த அற்புதங்கள் சின்னஞ் சிறிய சாரதாமணியை மட்டும் புனிதமான பிரேம பாசத்தில் கட்டிப் போட்டன.

'ஐயய்யே! இந்த மரத்தின் பட்டை சொர சொரவென்று இருக்கு' என்று சொல்லிக் கொண்டு அந்த மகிழ மரத்திடமிருந்து மற்றவர்கள் அப்பால் போனுர்கள். சாரு என்கிற ஒரு சிறிய முல்லைக் கொடி உள்ளுணர்ச்சி உந்தித் தள்ள அந்த மகிழ மரத்தைப் போய்ப் பற்றிக் கொண்டது. அதைப் பற்றிக் கிறுகிறுவென்று வளர்ந்தது. மகிழத்துக்கும் மகிழ்ச்சியாயிற்று; முல்லைக்கும் மகிழ்ச்சியாயிற்று. இந்தக் கொடிதான் மகிழம் பூவைப் புஷ்பிக்கிறதா, அல்லது அந்த மரம்தான் முல்லை மலரைப் பூக்கிறதா! என்று வித்தியாசம் கண்டு கொள்ள முடியாமல் விருட்சமும் லதையும் பிணைந்து அநுபவ மலர்களைச் சொரிந்தன.

(தொடரும்)



# அறிவுக்கு வழி அடைப்பு

## ராஜாஜி

கடமையை மறந்த வானர ராஜனுக்கு
வடமொழியில் இளையபெருமாள் சொன்
னதியாதெனின் அறம்பொருள் இன்பம் மூன்றையுமழிக்கும்
மதியைக் கொல்லும் மதுபானம்.

பானாத் அர்த்தஸ்ச தர்மஸ்ச காமஸ்ச பரிஹீயதே
पानात् अर्थश्च धर्मश्च कामश्च परिहीयते।

வடக்கு தெற்கு என்பதில்லை உண்மைக்கு
வடமொழி தென்மொழி என்பதுமில்லை
அழிந்த அறிவைத் திருத்த மூளையே சாதனம். அது
அழிந்த பின் அறிவுக்கந்த வழியில்லை.
வள்ளுவர் சொன்னதிதுவே:

களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

சுருக்கெனக் குத்தும்படி வள்ளுவர் சொல்லுகிறார்
நீருக்குள் ஆளைத்தேடத் தீவட்டியோ விளக்கோ எப்படி உதவும்?
நீரில் அணைந்து போகுமல்லவா? என்கிறார் –
அறிவுக்கு மூளையே வழி. அது கெட்டுப் போனபின்
மூளையைக் கெடுத்துக் கொண்ட மனிதனுக்கு
அறிவு புகுத்த வழியில்லை
வழியடைப்பு உண்டாகி விடுகிறது.



# 4. பொம்மைக் கலியாணம்

மண்ணுக்குள் எவ்வுயிரும் தெய்வம் என்றால்
மனையாளும் தெய்வமன்றோ? மதிகெட்டீரே...
காதல் செயும் மனைவியே சக்தி கண்டீர்
கடவுள்நிலை அவளாலே எய்தவேண்டும்
-பாரதியார்: சுயசரிதை



அம்மா
ரா. கணபதி

“ஆள்காட்டி விரல் என்பது பெருமாளாகிய பகவானைக் காட்டும் விரல். ‘தத்’ — ‘அது’ என்று வேதம் சுட்டிக் காட்டுகிற பொருளைத்தான் ஆள்காட்டி விரல் குறிப்பிடுகிறது. ‘நான்’ ‘நான்’ என்று தன்னையே மார்பில் குத்திக் காட்டிக் கொள்வது கட்டை விரல். கட்டை விரல் அளவுக்கே ஜீவாத்மாவுக்குள் சித் சக்தி விளங்குகிறது என்று வேதம் சொல்கிறது. பரமாத்மாவைக் காட்டும் ஆள்காட்டி விரல், ஜீவாத்மாவைக் குறிக்கும் கட்டை விரல், இரண்டையும் சேர்த்துவிட்டால் சின் முத்திரை — இரண்டும் ஒன்றுதான் என்ற அத்வைதத்தைக் குறிக்கும் முத்திரை” என்று ஸ்ரீ காமகோடி பெரியவாள் கூறியிருக்கிறார்.

பரமாத்மாவைக் காட்டும் அந்த விரலால்தான் தன் அகத்துக்காரரை, ‘ஆள் காட்டி’ விட்டாள் குழந்தை சாரதாமணி. இரண்டு கைகளையும் கோத்துக் கொண்டு காட்டியதால் அப்போதே மனம் குவிந்து அவருக்கு சர்வ சமர்ப்பண அஞ்சலியும் செலுத்தி விட்டாள் போலும் !

அவள் அந்தப் ‘பைத்திய’த்தைக் காட்டியதை மற்றவர்கள் அப்போதைக்கு ரசிக்காவிட்டாலும், அதைக் குழந்தை விளையாட்டாக விரைவிலேயே மறந்து போனார்கள். கதாதரரோ தம்மை மையமாக வைத்து அப்படி ஒரு விளையாட்டு நடந்ததைத் தாம் அறிந்ததாகவே காட்டிக் கொள்ளவில்லை. விளையாடிய குழந்தையும் அதை மறந்தாற் போலவே ஜயராம்பாடிக்குப் போய்ச் சேர்ந்தாள்.

* * *

ஜயராம்பாடியில் அந்த இளசான கைகளும் கால்களும் மீண்டும் உழைக்கத் தொடங்கிவிட்டன.

சாருவிடம் யாரும் ‘இன்ன வேலை செய்’ என்று பணிக்க வேண்டிய அவசியமே இருக்கவில்லை. தானாகவே, ஏதோ ஓர் உள்ளுணர்ச்சியில் செய்வது போல் ‘பரபர’ வென்று ஒன்றையெடுத்து ஒரு வேலையில் ஈடுபடுவாள் சாரதாமணி.

அம்மா ‘அகத்தில் இல்லாத’ சமயங்களில், சிற்றன்னையை முந்திக் கொண்டு, அந்தப் பச்சைக் குழந்தை சமையலிலும் ஈடுபடும். அடுப்பும், அதற்கு மேலிருக்கும் சோற்றுப் பானையுமாகச் சேர்ந்து ஏறக் குறைய அவளுடைய கழுத்தளவு உயரத்துக்கு வந்துவிடும். பானையில் கரண்டியை விட்டுக் கிளறுவது அந்தக் குழந்தைக்கு எத்தனை சிரமமாயிருந்திருக்கும்? பனித்துளி பரவிய கமல மலர்போல் முகத்தில் வியர்வை அரும்பக் குழந்தை எழும்பி எழும்பிப் பானையைக் கிண்டுவாள். அந்தப் பசுங் குழந்தை பருக்கையைக் கவனமாக எடுத்து வெந்துவிட்டதா என்று குட்டி விரலால் நசுக்கிக் கொட்டைக் கண்களால் பார்க்கிற காட்சி ஒரு சித்திரமாகவே அகக் கண்ணில் விரிகிறது. சோற்றுப் பானையை அடுப்பிலிருந்து இறக்குவது மட்டும் அவளால் நிச்சயம் முடியாத காரியம்.

“அப்பா, அப்பா” என்று கூப்பிடுவாள். ராமசந்திரர் ஓடிவருவார்.

தமது அருமந்தப் பெண் யாரும் சொல்லாமலே சோறாக்கி விட்டு, வியர்வையும், கரிப் புகையுமாகப் பெருமையுடன் நிற்பதைப் பார்த்துத் தாமும் பூரிப்பார். சோற்றுப் பானையைத் தாமே அடுப்பிலிருந்து இறக்கி வைப்பார்.

“கையில் ஏதும் சுட்டுக் கொள்ளவில்லையேடி, கண்ணா” என்று கேட்டு அந்தத் துளிர்க் கைகளை — அயராத வேலையில் தடித்துப் போகவிருக்கும் துளிர்க் கைகளை — விரித்துப் பார்ப்பார்.

அதில் 'அன்ன ரேகை' என்று ஏதாவது ஓடிற்றோ என்னவோ? அன்னம் பாலிக்கவே வந்த அன்னை யின் கை அது.

'அன்னம்' என்றால் 'ஹம்ஸம்' என்ற அர்த்த மும் இருக்கவே இருக்கிறது. அது வேறு கதை என்கிறீர்களா? அன்பு அன்னமும் உதர அன்னமும் ஒன்றானது தான் இந்த 'அம்மா'வின் கதை.

* * *

**ப**சுக்களுக்குக் கோரைப் புல் பிடுங்குவதற்காகப் போவாள் சாரு. ஆமோதர் ஆற்றைத் தவிர, பாடுஜ்யே புகுர் என்றும், புண்ய புகுர் என்றும் ஏரிகளும் உண்டு ஜயராம்பாடியில். ஏரிப் படுகை சொத சொதவென்றிருக்கும். அந்தச் சொத சொதப்பில் ஒருவிதமான கோரைப்புற்கள் வளமாக வளரும். பசுக்களுக்கு இந்தப் புல்லில் மிகுந்த பிரியம். சாருவுக்குப் பசுக்களிடம் மிகுந்த பிரியம். தன் பட்டுப் பாதங்கள் தண்ணீரில் ஊறிச் சேற்றுப் புண் உண்டான



யும் பொருட் படுத்தாமல், அந்த உளையில் இறங்கிப் புல் பிடுங்குவாள் குழந்தை. நகத்தில் அழுக்குப் படாத நாசூக்குக்காரர்கள் அம்மாவின் கதையில் குறிப்பாக இந்த உழைப்பின் மகிமையைக் கவனிக்க வேண்டும். உழைப்பில் சேருகிற அழுக்கு அழுக்கே அல்ல; அது உள்ளத்தை ஸ்படிகமாக்கு கிற அழுக்குநீக்கியாக்கும்!

கத்தை கத்தையாகப் புல்லை மார்போடு சேர்த்து — கோமள உடம்பிலே அந்தப் புல் படுகிறபோது ஏற்படுகிற அரிப்பையும் பொருட்படுத்தாமல்-கரையிலே கொண்டு வந்து போடுவாள்.

மறுபடியும் தண்ணீரில் இறங்குவாள். கழுத்தளவு நீர் வருகிறவரையில் சென்று விடுவாள். மீண்டும் ஒரு கத்தை கரை வந்து சேரும்.

''அடி சாரு, என்னமா அதுக்குள்ளே இத்தனை புல் கொண்டு வந்து போட்டே?'' என்று ஆச்சரியப்படுவாள் சியாமசுந்தரி.

சாரு அதற்குப் பதில் சொல்லாமல் ஓர் அழுத்தமான சிரிப்பை மட்டும் செப்பு உதடுகளில் இறுகப் புதைத்துக் கொள்வாள்.

'கவடு தெரியாத' சாருவின் இந்தச் சிரிப்பில் மட்டும் கவடு சுவடு விடுக்கிறதே! 'என்ன, அழுத்தலான சிரிப்பு' என்று வியந்துகொள்வாள் சியாமா.

அந்தச் சிரிப்பிலே புதைத்துக் கொண்ட அழுத்தமான இரகசியத்தை வெகு காலத்துக்குப் பிறகுதான் அன்னை சாரதாமணி அவிழ்த்து விட்டாள். அன்னை சொல்வாள்:

''என்னால் எப்படி அவ்வளவு சீக்கிரத்தில் அவ்வளவு புல் சேகரிக்க முடிகிறது என்று மற்றவர்கள் ஆச்சரியப்பட்டனர். விஷயம் இதுதான். நான் ஒரு முறை புல் கற்றையைக் கரையில் வைத்துவிட்டு, ஏரிப் படுகைக்குள் மறுபடியும் போனேனோ இல்லையோ, உடனேயே அங்கே ஒரு பெண் இன்னொரு கற்றைப் புல்லை என் கையில் திணிப்பாள். அந்தப் பெண் எப்படி இருப்பாள் தெரியுமா? அசல் என் அச்சாகவே இருப்பாள்! புல் பிடுங்குவதில் மட்டுமின்றி எல்லாக் காரியத்திலும் அவள் எனக்கு உதவி செய்வாள். குழந்தைப் பருவம் முழுவதும் அவள் அனவரதமும் என்னுடனேயே இருந்தாள், வேலை செய்தாள், விளையாடினாள், ஆடிப் பாடினாள். அசலார் யாராவது வருகிற அரவம் கேட்டால் உடனே அந்தர்தானமாகி விடுவாள்.''

இப்போது தெரிகிறதா, கவடற்ற சாரு எத்தனை ரகசியங்களை ஒளித்துக் கொண்டு கவடு செய்தது என்று?

சாரதையுடனே தத்ரூபம் அவளாகவே இருந்து உதவி செய்தது அம்பிகையின் சேடிகளில் ஒருத்தி; அம்பிகை உலகுக்கு வந்தவுடன் அந்தச் சேடியும் பணி புரிய உடன் வந்தாள் என்று சாதுக்கள் விளக்கம் தருகிறார்கள்.

* * *

**சா**ரதாமணிக்குத் தம்பி, தங்கைகள் பிறந்தார்கள். 'சமர்த்து, தலைச்சனைப் பெண்ணாகப் பெற்றுக் கொண்டாள்' என்ற பொது வழக்கு சியாமசுந்தரியின் விஷயத்தில் நூற்றுக்கு நூற்றிருபது சதவிகிதம் மெய்யாயிற்று. 'முன்னண்ணை'க் குழந்தையான சாரு தம்பி, தங்கைகளைச் சவரணையாகப் பார்த்துக் கொண்டாள். குழந்தைக் காரியம் என்பது மிகவும் சள்ளை பிடித்த ஒன்று. குழந்தையிடம் இருக்கிற மாதுரியத்தினாலேயே இந்தத் தொல்லையைத் தாயால் ஏற்க முடிகிறது. இங்கோ அந்தக் குழந்தைகளின் மாதுரியத்தை விடக் குழந்தைகளுக்குத் தொண்டு செய்த சாரதையின் மாதுரியம் பெரிதாக இருந்தது.

குழந்தைகளைக் கவனித்துக் கொண்டதோடு, சிற்றப்பாக்களுக்கும் உரிய பணிவிடைகளைத் தவறாது செய்வாள். அது அவிபக்த குடும்பம் என்றும், ராமசந்திரரின் சோதரர்கள் அவருடனேயே வாழ்ந்தனர் என்றும் முன்னமே கண்டிருக்கிறோம் அல்லவா? 'சிறிய தந்தை' என்பவரை வாஸ்தவத்திலேயே தந்தைக்கு அடுத்தபடியாகக் கருதித் தொண்டு செய்தாள் குழந்தை. இதைப் பற்றிப் பிற்காலத்தில் தூய அன்னை குறிப்பிடுகையில், ''நான் என் சித்தப்பாக்களுக்கு மனசு வித்தியாசமில்லாமல் சுசுருஷை செய்த மாதிரி, இந்தக் காலத்துப் பெண்கள் செய்வார்களா என்பது சந்தேகம்'' என்பாள்.

'இந்தக் காலத்துப் பெண்கள்' என்று அவள் குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு நாலைந்து தலைமுறைகள் ஓடிவிட்டன. உறவு உணர்ச்சியும் அடியோடு போய் விட்டது!

* * *

**சா**ரு பஞ்சு நூற்கும்போது, அதன் துசும்புகள் தலையிலிருந்து கால்வரையில் ஒட்டிக் கொள்ளும். 'நசுக் நசுக்' என்று சின்ன நாசி தும்மும். நெல் குத்துகிற இடத்தில் கிளறிக் கொடுக்கும்போது தவிடும் உமியும் சிறிய



ரூபத்தை அபிஷேகம் செய்யும். தானியத்திலிருந்து சிறு பூச்சிகள் கிளம்பிக் குழந்தையை மொய்த்துக் கொள்ளும். அடுக்களையின் கழிவு நீரில் பாவாடை நனைந்து கனமாக ஒட்டிக் கொள்ளும். புல் பிடுங்கும் இடத்தில் சேறு தெறித்து உடம்பெல்லாம் வறவறவென்று பிடித்துக் கொள்ளும். இத்தனை அழுக்கினிடை புது மலராக மனத்தை வைத்துக் கொண்டு, அன்பு மணம் வீசிக்கொண்டு வளர்ந்தாள் குழந்தை சாரு. 'ஒரு குழந்தை செய்கிற காரியமாவா இருக்கு? கலியாணம் பண்ணிக் கொடுத்தா நறுவிசா ஒரு குடும்பத்தையே மேய்ச்சுக் கட்டிடுவா போலிருக்கு' என்று ஊர் வியந்து பேசிற்று.

* * *

கலியாணப் பேச்சும் வந்தது.

அப்போது சாருவுக்கு வயசு ஐந்தரை.

காமார்புகுரிலிருந்து பெண் பேச வந்திருக்கிறார்கள்.

ஆம், சாக்ஷாத் கதாதர சட்டர்ஜியின் வீட்டிலிருந்தேதான்!

காமமகற்றிய தூயரான கதாதரருக்கு எப்படிக் கலியாணம் பேசினர்கள்; அவருக்குத் தெரியாமலே இப்படிச் செய்து விட்டார்களா, என்று எண்ணலாம்.

உண்மை இதற்கு நேர்மாறானது. சாக்ஷாத் கதாதரரேதான் இந்தப் பெண்ணைத் தமக்குப் பேசுவதற்காக அனுப்பி வைத்தார்.

பக்தி பரவசத்தில் ஜொலித்த உள்ளத்துடனும், அந்தப் பரவசத்தைத் தாங்க முடியாமல் இளைத்துப் போன காஞ்ச பௌதிக உடலுடனும் காமார்புகுருக்கு வந்து சேர்ந்தார் கதாதரர். பிள்ளையின் ஆவேசத்தைச் சந்திரமணியால் புரிந்து கொள்ள முடியவில்லை. 'ஊரெல்லாம் பைத்தியம் என்று சொல்கிறதே, உண்மையிலேயே இவனுக்குப் பைத்தியம்தானோ?' என்று தவியாய்த் தவித்தது தாயுள்ளம்.

''அம்மா, அம்மா'' என்று அலறுவார் கதாதரர்.

விழுந்தடித்துக் கொண்டு அவரிடம் ஓடிவருவாள் சந்திரா தேவி.

'' அம்மா வந்திருக்கேன்டா, கதாயீ'' என்று அருகே அமர்வாள்.

அவளையே மலங்க மலங்கப் பார்ப்பார் கதாதரர். ''நீ.... நீயா அம்மா? ஆமாம், **நீயும்** அம்மாதான், எல்லாரும் அம்மாதான்.

யாதேவீ ஸர்வ பூதேஷு
மாத்ரு ரூபேண ஸம்ஸ்திதா''

என்று சொல்லிக் கொண்டே அப்படியே ஜகன்மாதாவின் அருட்சுழலில் சிக்கி, சொக்கிவிடுவார், கதாதரர்.

சந்திரமணி வைத்தியர்களை வரவழைத்தாள். வைத்தியத்துக்கு அடங்கவில்லை அந்த அதிசய 'பைத்தியம்'. அப்புறம் மந்திரவாதிகளை வரவழைத்தாள். அவர்களது உச்சாடனத்துக்குப் பயந்து ஓடவில்லை, அந்த அற்புதப் 'பேய்'. மருத்துவரும், மாந்திரிகரும் படுத்திய பாட்டை யெல்லாம் பொறுமையாக ஏற்றுக் கொண்டார் கதாதரர்.

திடீரென்று வியாதி சமனமாயிற்று. பேய் ஓடிவிட்டது. கதாதரர் பரம சாந்தமானர். அவரது மகா பெரிய அம்மா அவருடைய உடலில் ஒவ்வோர் அணுவுக்குள்ளும், அவரது ரத்தத்தின் ஒவ்வொரு துளிக்குள்ளும், அவரது உள்ளத்தின் இண்டு இடுக்குகளிலெல்லாம் அன்பு மயமாகத் தன்னை அலர்த்திக் கொண்டு விட்டாள் போலும். எனவே அம்மாவை எங்கோ வெளியே தேடி அலற வேண்டிய அவசியமே அவருக்கு இல்லை.

பிள்ளை சிறிது அடங்கி யிருக்கிற இந்தச் சமயத்தில் சந்திரமணிக்கு ஒரு யோசனை தோன்றியது. கதாதரருக்குத் தெரியாமலே மூத்த பிள்ளை ராமேசுவரருடன் ஆலோசனை செய்தாள். இருவரும் ஒரு முடிவுக்கு வந்தனர். கதாயி கொஞ்சம் 'சமர்த்தாக'த் தொடங்கி யிருக்கும்போதே அவருக்கு ஒரு கலியாணத்தைச் செய்துவிட்டால், அவரது சித்தத்தை உலகத்திலேயே இழுத்து வைக்கலாம் என்பதுதான் அந்த முடிவு.

கதாயிக்குத் தெரியாமலே திருமணத்தை நிச்சயம் செய்து விட்டு, முகூர்த்தம் வைத்தான பிறகு அவரிடம் சொல்லிக் கொள்ளலாம் என்று தாயும் மகனுமாகச் 'சூழ்ச்சி' செய்தார்கள்.

ஆனல், ஏனோ கதாதரருக்கு ஒரு பெண்ணுவது குதிரவில்லை. இதற்கு இரண்டு காரணங்கள் சொல்லலாம். ஒன்று, கதாயியின் 'பைத்தியம்' பற்றி வெளி உலகு ஓரளவு அறிந்திருந்தது. இரண்டாவது, வங்கத்துப் பிராமணர்கள் பெண்களுக்கு எதிர் ஜாமீன் தருவது வழக்கம். வசதியற்ற சந்திரமணியால் கணிசமான வதூதக்ஷிணை கொடுக்க இயலாததால் பெண் வீட்டார் அவர்களுடன் சம்பந்தம் செய்து கொள்ள முன்வரவில்லை.



இந்த இரண்டுக்கும் மேலாக அம்பாளுடைய சங்கற்பம் என்ற மூன்ருவது காரணம் — அல்லது அதுதான் முழு முதற் காரணம் — இருந்தது.

**''யாதேவி ஸர்வ பூதேஷு மாத்ரு ரூபேண ஸம்ஸ்திதா''** என்று அம்பாளிடம் சிரித்துப் பாடினர் கதாயி.

அம்பாளும் பதிலுக்குச் சிரித்துப் பாடினுள்:

**''பத்னீம் மனேரமாம் தேஹி**
**மனே வ்ருத்தா நுஸாரிணீம் l**
**தாரிணீம் துர்கஸம்ஸார ஸாகரஸ்ய**
**குலோத்பவாம் ll''**

அம்மா பிள்ளை இரண்டு பேரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

'எல்லா உயிர்களிடமும் (ஸர்வ பூதேஷு) அன்னையாகத் திகழுபவள் தேவி' என்கிறது துர்கா ஸப்த சதீ, அதே ஸப்த சதீயின் பூர்வ பாகத்தில் தான் 'பத்னீம் மனேரமாம் தேஹி' என்ற சுலோகமும் உள்ளது.

''உள்ளத்துக்கு உகப்பான மனைவியை எனக்களிப்பாய். அவள் நற்குலத்தில் உதித்தவளாக இருக்கவேண்டும். என் மனத்தின் போக்கையே அநுசரிப்பவளாய் இருக்க வேண்டும். என்னை சம்ஸாரம் என்கிற துக்க ஸாகரத்திலிருந்து கடத்துவிப்பவளாக இருக்க வேண்டும்'' என்பது அந்த சுலோகத்தின் அர்த்தம். சம்ஸாரத்திலிருந்து கடத்துவிப்பவளே பவதாரிணி.

சாதாரணமாக மனைவி என்பவள் தான் ஒருவனை சம்ஸாரத்தில் ஆழப் புதைப்பவள். ஆனல் 'ஸர்வ பூதேஷு' உள்ள தேவியை மனைவியினுள்ளும் பார்த்து, மனைவியையே பவதாரிணியாக்கிக்கொண்டு, சம்ஸாரத்திலிருந்து விடுதலை பெறவும் முடியும் — இப்படிப்பட்ட மனைவியை அளிக்குமாறு தேவியிடம் பக்தன் கோருகிறன் 'ஸப்த சதி' யில். ஆனல் இதுவரை புராண இதிகாசங்களில் இந்த வரத்தை மெய்யாலுமே அம்பாளிடம் எந்த பக்தனும் கேட்டுப் பெற்றதாக விருத்தாந்தம் இல்லை. பூர்வத்தில் என்றுமே காணுத இந்த அற்புதத்தை கதாதாரர்தான் செய்து காட்ட வேண்டும் என்பது அம்பாளின் சங்கற்பமாயிருந்தது.

இந்த அற்புதம் செய்வதற்கு கதாதரர் ஒருவர் மட்டுமே போதாது. சித்திரம் எழுதச் சுவர் ஒன்று வேண்டுமே! தாளம் போட இரண்டு கைகள் வேண்டுமே! கதாதரரின் அற்புத பிரமச்சரியத்துக்கும் துறவுக்கும் தாய்ச் சுவராக நிற்க ஒரு பெண் வேண்டும். அவரது ஆத்ம சங்கீதத்துக்குத் தாளம் போட அவருக்கு இன்னெருத்தி கை கொடுக்க வேண்டும்.

அப்படிப்பட்ட ஒருத்தியை, சாதாரண லௌகிகக் கலியாணத்தையே எண்ணிய சந்திரா தேவியும் ராமேசுவரரும் கண்டு பிடித்துவிட முடியுமா?

அம்பாளே அந்தப் பெண்ணின் இருப்பிடத்தை கதாயிக்குத் தெரிவித்தாள்.

* * *

ஒரு நாள் சந்திரமணியும் ராமேசுவரரும் தங்களது விவாகப் பிரயத்தனங்கள் தோற்றே வருவது பற்றி விசனித்துக் கசமுசவென்று பேசிக் கொண்டிருந்தார்கள்.

உள்ளேயிருந்து கதாதரர் புன்னகை வழியும் பொன் முகத்துடன் வெளி வந்தார்.

''ஏன் கிடந்து அலட்டிக்கொள்கிறீர்கள்? எனக்கான அகமுடையாள் ஜயராம்பாடியில் ராமசந்திர முகர்ஜியின் வீட்டில் வைக்கோல் துரும்பைச் சுற்றிக்கொண்டு காத்திருக்கிறள். அங்கே போங்கள்'' என்றர்.

வங்கத்தில் வெள்ளரி முதலிய பழங்களில் செழுமையாக வளருவதை பகவானுக்கு அர்ப்பணம் செய்வார்கள். அப்படிப்பட்ட பழங்களைக் கொடியிலேயே அடையாளம் தெரிந்து கொள்வதற்காக அதன் மீது ஒரு வைக்கோல் துரும்பைச் சுற்றி வைப்பார்கள். இவ்விதமே சாரதையை கதாதரருக்கென வைக்கோலைச் சுற்றி வைத்திருந்தாளாம் அம்பிகை!

சந்திரமணிக்கும் ராமேசுவரருக்கும் சந்தோஷம் தாங்க முடியவில்லை. கலியாணத்துக்குப் பிள்ளை சம்மதிப்பதே சந்தேகம் என்று அவர்கள் பயந்து வந்த போது, அந்தப் பிள்ளையே பெண்ணின் வீட்டை அடையாளம் சொல்லி விட்டதே!

* * *

பெண் பேசப் போனர்கள்.

விந்தையைப் பாருங்கள்! கதாயியின் பைத்தியத்தைப் பற்றி ராமசந்திரர் ஓர் ஆட்சேபணையும் எழுப்பவில்லை. முந்நூறே ரூபாய்தான் வதூதக்ஷிணை தரப்படும் என்பதற்கும் ஆட்சேபிக்கவில்லை. இவற்றுக்கெல்லாம் மேலாக அவரது அருமந்தப் பெண்ணுக்கு அப்போது வயசு அஞ்சரை தான்; கதாயிக்கோ வயசு இருபத்தி மூன்று. இருவருக்குமிடையே



பதினெட்டு பிராயம் வித்தியாசம் இருந்ததையும் அவர் பொருட்படுத்தவில்லே.

இதில் அம்பாளின் திருக்கரம் வேலே செய்கிறது என்று அந்தப் புண்ணியாத்மா மோப்பம் பிடித்திருப்பார் போலும்! திருமணத்துக்கு இசைவு தந்து விட்டார்.

* * *

**1859**-ம் வருடம் மே மாதம். சௌபாக்கியவதி சாரதாமணிக்கும், சிரஞ்சீவி கதாதர சட்டோபாத்தியாவுக்கும் 'ஈசுவர கிருபையை முன்னிட்டு, பெரியோர்கள் நிச்சயித்தபடி' விவாக சுபமுகூர்த்தம் நடந்தேறியது. உலகம் முழுவதற்கும் ஈசுவரி கிருபை பொழிய உத்தேசித்து இந்த அற்புதத் திருமணத்தை நிச்சயித்திருந்தாள்.

ஏழை வீட்டுக் கலியாணமாக, வெகு அடக்கமாக நடந்தது உலகுக்கு ஒரு புதுயுகம் தொடங்கி வைத்த அந்த விவாகம். பிள்ளே வீட்டிலிருந்து கதாதரர், ராமேசுவரர் ஆகிய இருவரும் தான் வந்திருந்தனர். ஆனுல் ஊர் பெண்டுகள் அருமைச் சாருவின் கலியாணத்துக்குத் திரளாக வந்திருந்தனர்.

விவாக மந்திரங்கள் ஆத்மிகத்தையும் லௌகிகத்தையும் பாவும் ஊடுமாகப் பிணேப்பவை. இதுவோ லௌகிகக் கலப்பே இல்லாத விவாகம். தன் மனேவியுடன் பௌதிகச் சேர்க்கை கொண்டு புத்திர சம்பத்தை விருத்தி செய்வது பற்றிப் பல மந்திரங்களே ஓதுவான் மணமகன். இந்த மந்திரப் பொருளே நடைமுறையாக்குவதற்கு உறுதிகொள்ளவே முதலில் கங்கணம் கட்டிக் கொள்கிருன். 'கங்கணம் கட்டிக்கொண்டு' ஒரு காரியத்தில் இறங்குவது என்ருலே முழு மூச்சுடன் அதில் ஈடுபடுவது என்று பொது வழக்கில் அர்த்தமாகிவிட்டதே!

கதாதரர் எப்படி இந்த மந்திரங்களேக் கூற முடியும்? சத்தியத்தில் தோய்ந்த அவர், வேத மந்திரங்களே அக்னி முகத்தில் பொய்யாக மொழிய முடியுமா? பின் எப்படி அவர் கங்கணத்தைக் கட்டிக் கொண்டு நிம்மதியாக அமர்ந்திருக்கிருர்?

கதாயி சிரிப்பாகச் சிரித்தார். பக்கத்திலேயே குழந்தை சாரு 'தஸா புஸா' என்று புடவையைச் சுற்றிக் கொண்டு, மாமியார் அனுப்பி வைத்திருந்த கூடை நகைகளேக் குலுங்க அணிந்து கொண்டு அமர்ந்திருந்தது.

நேற்று வரை பொம்மைக் கலியாணம் செய்து விளேயாடிய அந்தப் பெண்ணே இப்போது கலியாணப் பெண்ணுக, தந்தப் பொம்மை போல் அமர்ந்திருந்தது. ஆமாம், அம்பாள் இஷ்டப்படி விளேயாடட்டும் என்று தங்களே அவளது கைப்பொம்மைகளாகவே ஆக்கிக் கொண்ட தம்பதியல்லவா இவர்கள்?

கதாயி சிரிக்கிருர் — கைக் கங்கணத்தைப் பார்த்து.

சுமங்கலிப் பெண்கள் தீபக் குச்சிகளே ஏற்றிக் கொண்டு புது மணத் தம்பதியைச் சுற்றி வருகிருர்கள்.

அதில் ஒரு குச்சியிலிருந்து சுடர்கள் பறக்கின்றன!

பறந்து வந்து நேரே கதாயியின் கங்கண நூலில் தெறிக்கின்றன. அந்தச் சரடு கிறுகிறு வென்று பற்றிக் கொண்டு எரிகிறது.

கதாயி விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டே கங்கணத்தைச் சிறுகச் சிறுக அவிழ்க்கிருர்; தீயும் பையப் பையப் பரவிச் சரடு முழுதும் பொசுங்குகிறது!

அந்தக் கலியாணத்தைத் தன் உத்தேசப்படியே புதிய விதத்தில் நிறைவேற்றி விடுவது என்று தேவி பராசக்தி 'கங்கணம் கட்டிக்' கொண்டு விட்டாள்!

(தொடரும்)

### கல்கத்தாவில் நடந்தது ...!

சமீபத்தில் கல்கத்தாவில் உள்ள 'எம்ப்ளாயீஸ் ஸ்டேட் இன்ஷூரன்ஸ்' அலுவலகத்தில் நடந்த சம்பவம் இது. அங்கு வேலே பார்ப்பவர்கள் தினமும் காலேயில் குறித்த நேரத்துக்கு வராமல் மிகவும் தாமதமாக வந்துகொண்டிருந்தார்கள். இதைத் தடுப்பதற்காக நகரிலுள்ள சமூகநல சங்கம் ஒன்று முயற்சி எடுத்தது.



(மாணவர்களால் நடத்தப்படும் சங்கம் அது.) திடீரென்று ஒரு நாள் காலே 10 மணிக்குச் சங்கத்தைச் சேர்ந்த மாணவர்கள் பலர் அந்த ஆபீசுக்குள் நுழைந்து அங்குள்ள நாற்காலிகளில் அமர்ந்து வேலேசெய்ய ஆரம்பித்துவிட்டனர். வழக்கம்போல் 11-30 மணிக்கு அந்த அலுவலக ஊழியர்கள் சாவகாசமாக வந்தபோது எல்லோருடைய நாற்காலிகளிலும் மாணவர்கள் உட்கார்ந்திருப்பதைப் பார்த்துப் பிரமித்து விட்டார்கள். மாணவர் தலேவர் அவர்களிடம் கூறியது: "இந்த முறை இதோடு விட்டு விடுகிறேம். இனிமேல் நீங்கள் இந்த மாதிரி தாமதமாக வந்தால் நாங்கள் நிரந்தரமாக உங்கள் நாற்காலிகளில் உட்கார்ந்துவிடுவோம். உண்மையாக வேலே செய்ய விரும்பும் பலருக்கு உங்கள் இடங்கள் கிடைக்கட்டும்."

ஆதாரம்: 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'
தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

# எல்லா உயிர்களின் திருப்திக்காக....

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

தேவதைகளை உத்தேசித்த யாகங்கள், பிதிருக்களை உத்தேசித்த தர்ப்பணம், சிராத்தம் இவற்றை விடாமல் செய்ய வேண்டும். இவற்றோடு தெய்வத்தை உத்தேசித்த பூஜை, அதிதிகளை உத்தேசித்து அன்னமிடுதல், சகல ஜீவராசிகளையும் உத்தேசித்த வைசுவதேவம் இவற்றையும் நம் முன்னோர்கள் செய்து வந்தனர். நீங்கள் இவற்றைச் செய்கிறீர்களோ இல்லையோ, காதினாலாவது இவற்றைப் பற்றிக் கேட்டால் நல்லது. எத்தனையோ படித்திருக்கிறீர்கள், படிக்கிறீர்கள். எந்தெந்தத் தேசத்துச் சரித்திரங்களையோ தெரிந்து கொண்டிருக்கிறீர்கள். நம் தேசத்தில் யுகாந்தரமாக இருந்து வந்த தர்மங்களையும், அவற்றின் பெயர்களையாவது, நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்றே இதைச் சொல்கிறேன். 'வைசுவதேவம்' என்பது இவற்றில் ஒன்று. அது என்ன என்று சொல்கிறேன்.

நமக்கு இந்த உடம்பு இருப்பதால் எத்தனை ஜீவராசிகளுக்கு எத்தனை உபத்திரவம் விளைவிக்கிறோம் ? நம் வீட்டைச் சுத்தமாக வைத்திருப்பதாகப் பெருமையுடன் எண்ணுகிறோம். ஆனால் யோசித்துப் பார்த்தால் ஒவ்வொரு வீடும் ஒரு கசாப்புக் கடையாகத்தான் இருக்க வேண்டியிருக்கிறது. 'ஒரு கசாப்புக் கடை அல்ல; ஐந்து கசாப்புக் கடைகள்' என்கிறது தர்மசாஸ்திரம்.

அந்த ஐந்து என்ன?

**பஞ்சஸூனா க்ருஹஸ்தஸ்ய வர்தந்தே (அ) ஹரஹ : ஸதா /**
**கண்டினீ பேஷணீ சுல்லீ ஜலகும்ப உபஸ்கர: //**

அரிவாள்மணை (கண்டினீ) ஒரு கசாப்புக் கடை. அதில்தானே காய்கறிகளை நறுக்குகிறோம் ? காய்கறிகளும் உயிருள்ளவைதாம். அவற்றை வதைக்குமிடம் ஒரு கசாப்புக் கடை. இரண்டாவது, அம்மி, யந்திரம், உரல், நெல் மிஷின் இத்யாதி (பேஷணீ). இவற்றில்தான் கருணையே இல்லாமல் தானியங்களை அரைக்கிறோம். மூன்றாவது அடுப்பு (சுல்லி). நெருப்பிலே பல பூச்சிகள் விழுந்து சாகின்றன. ஓர் இடத்தில் நெருப்பைப் போடுகிறோம், அங்கே ஓர் எறும்பு ஊர்ந்து கொண்டிருக்கும். நெருப்பு பட்டவுடன் அது பொசுங்கிப் போகிறது. இப்படியே குடத்தை ஓரிடத்தில் வைக்கிறோம், கீழே எறும்போ வேறு பூச்சியோ இருந்தால் நசுங்கிப் போகிறது. குடம் முதலிய ஜல பாத்திரங்களில் ஈரம் இருப்பதால் வெயில் காலத்தில் எறும்பு முதலியன அதை மொய்த்துக் கொள்கின்றன. அவற்றை நாம் கொல்ல நேருகிறது. இதனால் 'ஜலகும்ப'த்தையும் ஒரு கசாப்புக் கடையாக வைத்தார்கள். கடைசியில் 'உபஸ்கரம்' என்பது ஒரு கசாப்புக் கடை. 'உபஸ்கரம்' என்றால் துடைப்பக் கட்டை. பெருக்கும் போது எத்தனை ஜீவராசிகளை வதைக்கிறோம்?

நமக்கு ஒரு தீங்கும் இழைக்காத பிராணிகளை நாம் இத்தனை ஹிம்சைக்கு ஆளாக்க நேருகிறது. யோசித்துப் பார்த்தால் இத்தனை ஜீவராசிகளுக்கு இத்தனை உபத்திரவத்தை உண்டாக்கிக் கொண்டு வயிற்றை வளர்க்கிறோமே என்று துக்கம் உண்டாகிறது. ஆனால் இதெல்லாம் நம்மால் தவிர்க்க முடியாத விஷயங்கள். நம்மை மீறிச் செய்கிற இந்தத் தோஷங்களுக்குப் பிராயச்சித்தம் உண்டு. அப்படிச் செய்கிற பிராயச்சித்தமே 'வைசுவதேவம்' என்பது.

நம்மால் ஹிம்சைக்கு ஆளான ஜீவராசிகளுக்கெல்லாம் நல்ல கதி கிடைக்க வேண்டும், நம்மைப் பகவான் மன்னிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் எல்லா உயிர்களின் திருப்திக்காகவும் வைசுவ தேவ பலி கொடுக்கப்படுகிறது. இந்த விசுவத்தில் எவ்வளவு பிராணிகள் உண்டோ, நாய், காக்கை, சமூகப் பிரஷ்டன் உள்பட எல்லோருக்கும், எல்லாவற்றுக்கும் வைசுவதேவத்தில் பலி உண்டு. வைசுவதேவம் செய்தால் நாம் செய்கிற பல தோஷங்கள் விலகும்.

வைசுவதேவம், பூஜை, தேவயக்ஞம், மநுஷ்ய யக்ஞம் (விருந்தோம்பல்), பிதுரு யக்ஞம் (தர்ப்பணம் முதலியன) ஆகிய அனைத்தையும் பிரம்ம புத்திரர்களான ரிஷிகள் முதற்கொண்டு யாவரும் யுகம் யுகமாகப் பண்ணிக் கொண்டு வந்தார்கள். ஆதி காலத்திலிருந்து நம் தாத்தா காலம் வரையில் சாஸ்திரப் பிரகாரம் எல்லோரும் இவற்றை ஒழுங்காகச் செய்து வந்தார்கள். பிரளய காலம் வரையில் இவை அவிச்சின்னமாக (முறிவுபடாமல்) நடந்து வரவேண்டும். ஆனால் நம் நாளில் இந்த இழையைக் கத்திரித்துவிட்ட 'பாக்கிய'த்தை அடைந்திருக்கிறோம். அநாதிகாலமாக வந்துள்ள அநுஷ்டானங்களைக் கபளீகரம் செய்துவிட்டு, நம்மோடு மட்டுமல்லாமல், நம்முடைய பின் சந்ததியாருக்கும் நன்மை விளையாமல் தடுத்துவிட்டிருக்கிறோம்.

நான் எத்தனையோ அநுஷ்டானங்களைச் சொல்கிறேனே, அவற்றில் எவ்வளவு நாம் பண்ணுகிறோம், எவ்வளவு பண்ணவில்லை, எவ்வளவு பண்ண முடியும் என்று யோசித்துப் பாருங்கள். எல்லாவற்றையும் பண்ண முடியாவிட்டாலும், ஜீவனோபாயத்தை அநுசரித்து, முடிந்தவைகளையாவது தவறாமல் பண்ண வேண்டும்.



கண்டும், துதிகளில் கேட்டும் மகிழ்கிறோம்.

மக்களோடு மக்களாக வாழ்ந்து, தேக இச்சை அடியோடு அற்றுப்போன பூரண பரிசுத்தத்தை மக்களுக்கு வாழ்ந்து காட்டுவதற்காக கதாதரரும் சாரதாமணியும் இவ்வுலகுக்கு மானுட சரீரத்துடனேயே வந்திருந்தார்கள். அஞ்சாவது வயசில் அக்கினி சாட்சியாக கதாயியைக் கரம் பிடித்தாள் சாரு.

ஆத்மாவோடு ஆத்மா கூடியது.

* * *

ஜயராம்பாடியில் புண்ணியபுகுர் என்ற ஏரிக் கரை அருகே சுந்தர நாராயணனுக்கு ஒரு கோயில்—அதாவது குடிசை — உண்டு. ஆமை வடிவில் உலகை எல்லாம் தாங்கும் தர்ம ஸ்வரூபமாக அங்கு சுந்தர நாராயணன் குடி(சை)கொண்டிருப்பான். பக்கத்திலேயிருந்த ஓர் அறைதான் அந்தக்

# அம்மா

ரா. கணபதி

## 5. விசிறினுள், அன்பை வீசினுள் !

அஞ்சு வயசினிலே அறியாப் பருவத்திலே
பிஞ்சிலே கூடினேண்டீ -- கிளியே
பிரிய மனம் இல்லையே (நாட்டுப் பாடல்)

அஞ்சு வயசில் சரீர 'இன்பம்' எனப்படும் துன்பத்தைப் பற்றி ஏதுமே அறிவதற்கில்லை. ஆனுல் உண்மையாக உள்ள ஒரே இன்பம் எதுவோ, அந்த பகவானைக் கலக்கும் இன்பத்தை அஞ்சு வயசிலேயே அநுபவித்தாள், முருகனுக்காக உருகிய வள்ளியம்மை. பர்வத ராஜகுமாரியாக வந்த பராசக்தியும் சரியாக ஐந்தாவது வயதில் சிவத்துக்காகத் தவம் இருக்கத் தொடங்கினுள். முருகன் — வள்ளி, பரமேசுவரன் — பார்வதி இவர்களின் சரீரங்களே தத்துவ மயமானவை. எனவே தான் முருகனும் வள்ளியும், ஈசனும் தேவியும் அணைந்த திருக்கோலத்தை, இணைந்த திருக்கோலத்தைச் சிற்பங்களில் கிராமத்தின் பள்ளிக்கூடம். அந்த அறையின் ஈசான்ய மூலையில் ஒரு கறுப்புக் கல் பிரதிஷ்டையாகி இருந்தது. அதை 'ஷஷ்டி தேவி' என்பார்கள்.

ஷஷ்டிதேவி புத்திர சம்பத்தை அநுக்கிரகிக்கும் தெய்வம்.

புது மணத் தம்பதியரை அங்கு அழைத்துவந்து வணங்கச்செய்வார்கள்.

மொட மொடக்கும் புது வஸ்திரமும், சந்தனமும், புஷ்பமுமாக அங்கு கதாயியும் சாருவும் அழைத்து வரப்பட்டனர். புத்திர சம்பத்து என்ருல் என்னவென்றே அந்த மணப் பெண்ணுக்குத் தெரியாது. மணமகனுக்கோவெனில் மகத்தான ஒரே ஒரு 'மாதா சம்பத்'தைத்தான் தெரியும்.

கதாயிக்கு இதெல்லாம் அம்பாளின் லீலாவிநோதம் என்று வெட்டவெளிச்சமாகத் தெரிந்தது. ஷஷ்டி தேவியை எல்லாப் புது மணமகனைப் போலவும் வணங்கினுர். 'இந்த உலகில் வேறெந்த

அம்மாவும் பெற்றெடுக்காத அத்தனை லக்ஷம் குழந்தைகளைச் சாரு பெருமலே பெற்றெடுக்க வேண்டும்' என்று ஷஷ்டி தேவியிடம் புஷ்டியாக வேண்டிக் கொண்டாரோ, என்னவோ?

*   *   *

கலியாணமானதற்கு மறு நாள் மாலை சாருவையும் அழைத்துக் கொண்டு பிள்ளை வீட்டார் கிருகப் பிரவேசத்துக்காகக் காமார்புகுர் திரும்பினர். சாருவின் சித்தப்பா ஈசுவர சந்திர முகர்ஜி அவளைத் தூக்கிக்கொண்டே போனார்!

காமார்புகுரில் ஈச்சம் பழங்கள் குலை குலையாகத் தொங்கின. சாரதாவுக்கு அவற்றைப் பறித்துத் தின்ன மாட்டோமா என்று ஆவல்!

மான் குட்டிபோல் மருண்டு வந்து நின்ற மாற்றுப் பெண் சாரதையை சந்திரமணி தேவி மிகுந்த அன்புடன் வரவேற்றாள். சுமங்கலிகள் ஆரத்தி சுற்றினர். ஒருசில உறவினர்களுக்குச் சிறிய விருந்து நடந்தது.

*   *   *

இரவு அடுக்களையிலிருந்து விம்மல் ஒலி கேட்டது.

கதாயி எழுந்து வந்து பார்த்தார்.

''அம்மா, அம்மா, அழாதே அம்மா'' என்று அன்னை சந்திரமணியை ஆசுவாசம் செய்தார்.

பல ஆண்டுகளுக்குமுன் பதிதேவர் மறைந்து போனதையும், சென்ற ஆண்டு ஜேஷ்ட புத்திரன் ராமகுமாரன் மாண்டு போனதையும் பெண்களுக்கே உரியபடிக் கலியாண சமயத்தில் நினைவுகூர்ந்து அம்மா அழுகிறாள் என்றே எண்ணினார் கதாதரர்.

''இதெல்லாம் அம்பாள் சங்கற்பம் அம்மா. இதற்கு அழக்கூடாது. நீ விவேகியாச்சே! எப்பவோ முடிஞ்சு போனதை நினைச்சு ஏன் அம்மா இப்படி



மூசு மூசுன்னு அழறே?'' என்று வாஞ்சையுடன் சமாதானப்படுத்தினர்.

சந்திரா தேவி கரகரத்த குரலில் சொன்னுள் : ''பழைய கஷ்டத்துக் கெல்லாந்தான் மனசைப் பாருங்கல் லாக்கிண்டுட்டேனே! இன்னிக்குக் கஷ்டத்துக்காகத்தான் இப்போ அழறேன். இந்தப் பச்சைக் குழந்தை, அஞ்சு வயசுப் பிஞ்சு, அது இங்கே வந்த ஒரு நிமிஷம் தான் தயங்கி நின்னுதே தவிர, அடுத்த நிமிஷமே எங்கிட்ட 'அம்மா'ன்னு ஆசையா வந்து ஒட்டிண்டுடுத்து. அந்தக் குழந்தைக்கு நம்பிக்கைத் துரோகம் பண்ண....'' — சந்திரமணியால் மேலே பேச முடியவில்லே.

தன் பக்கத்தில் ஒட்டிக் கொண்டிருக்கும் மாற்றுப் பெண்ணின் தூக்கம் கலேயாமல் தட்டிக் கொடுக்கலானுள்.

அப்போதுதான் கதாயி தமது 'பாரியாள்' அங்கே உறங்குவதையே கவனித்தார்.

சிம்னி விளக்கொளியிலும்கூட அவள் அணிந்து கொண்டிருந்த கூடை நகைகளும் மினுக்கிட்டன.

அம்மா அழுதது எதற்காக என்று அவருக்குப் புரிந்துவிட்டது.

கதாதரருக்கும் பரிதாபமாக, அநுதாபமாகத்தான் இருந்தது.

மாற்றுப் பெண்ணுக்கு நகை நட்டுகள் செய்து போடச் சந்திரமணிக்கு வசதியில்லே. காமார்புகுரில் பெரிய தனவந்தரான லாஹாவின் வீட்டிலிருந்து நகைகளே இரவல் வாங்கி ஜயராம்பாடிக்கு அனுப்பியிருந்தாள். அந்த நகைகளேத் தான் சாரு ஆசை ஆசையாக அணிந்து கொண்டிருந்தது. நாளேக்கு நகையை எல்லாம் சொந்தக்காரர்களிடம் திருப்பி ஆக வேண்டும். அந்த நகை எல்லாம் தனக்கே தனக்கு என்று நம்பிக்கொண்டிருக்கும் குழந்தையை எப்படி வஞ்சிப்பது?

இந்தத் துக்கம்தான் பதியும், புத்திரனும் மாண்டுபோனதைவிடப் பெரிய துயரமாகச் சந்திராவை உலுக்கியது.

கதாயி ஏதுமே பேசவில்லே. சாக்ஷாத் பவதாரிணிக்கு அபிஷேகம் செய்யும் முன்பு எப்படி அவளது திருவாபரணங்களேக் கழற்றுவாரோ, அப்படியே தூங்குகிற சாரதாமணி அணிந்திருந்த நகைகளேக் கழற்றத் தொடங்கினர்.

தூக்கத்தில் துவளும் அந்த இளம் கழுத்தை ஒரு தந்தை போலத் தூக்கிச் சங்கிலிகளேயும், அட்டிகையையும் கழற்றினர். ஒருக்களித்துப் படுத்திருந்த சாருவின் மேல் காதுக் கம்மலேக் கழற்றியபின், மறுபுறம் அந்த மதி முகத்தைத் திருப்பினர். அந்தப் பக்கத்தைத் தரையில் அழுந்த வைத்துப் படுத்திருந்ததால் கதுப்புக் கன்னத்தில் வைரத்தோடு ஆழப் புதைந்து செம்புத் தோடுபோல் புள்ளி புள்ளியாகச் சிவக்க வைத்திருந்தது. அந்தத் தோட்டையும் நிச்சலனமாகக் கழற்றினர். சந்தனக் கட்டை போன்ற கரங்களிலிருந்து கல் வளேயல்களே உருவினர். குஞ்சு விரல்களில் மின்னிய மோதிரங்களே ஒவ்வொன்றுகக் கழற்றினர். அவை சற்றே பிடிப்பாக இருந்ததால் குழந்தை விழித்துக் கொண்டுவிடும்போல் சிணுங்கியது. தட்டிக் கொடுத்துக் கொண்டே 'திருவரங்கசுத்தி' செய்தார்.

அத்தனே நகைகளேயும் அம்மாவின் கையில் அள்ளிப் போட்டார் !

கிண்டாகக் கனத்த நகைகளின் பளுவில் சந்திரமணியின் கை தொய்ந்தது. இதயம் அதைவிடத் தொய்ந்தது.

**கா**லேயில் அடுப்படியில் காரியமாக இருந்த சந்திராவிடம் சாரு 'ஓ'வென்று அழுதுகொண்டு வந்தது. திடீரென்று வானத்தில் நட்சத்திரங்களெல்லாம் மறைந்து, மழைப் போர்வை கொண்டாற்போலிருந்தது, அவளேப் பார்க்க.

''அம்மா, நான் இங்கே...இங்கே... (தன் திவ்விய அங்கங்களேத் தொட்டுக் காட்டி) அப்புறம் இங்கே... போட்டுண்டிருந்த நகையெல்லாம் எங்கேம்மா? திருடன் கொண்டு போய்ட்டானு?'' என்று கேட்டு விசித்து அழுதாள், அழத் தகாத அருமைச் சாரு.

சந்திராதேவி மாற்றுப் பெண்ணே அப்படியே வாரி மடியில் வைத்துக் கொண்டு தடவிக் கொடுத்தாள். ''கண்ணம்மா, அந்த நகையெல்லாம் விஷக் கல்லுலே பண்ணினதாம். அதைக் கொஞ்சநாழிதான் போட்டுக்கலாமாம். அப்புறம் உடம்பெல்லாம் சிரங்கு வந்திடுமாம். அதனுலேதான் எங்க சாருவுக்கு இந்தச் சனியெல்லாம் வேண்டாம்னு தூக்கிப் போட்டுட்டேன். கதாயி இருக்கான் பாரு, அவனுக்கு ஒங்கிட்டே ரொம்ப ஆசை. அப்புறம் ஒனக்கு அவன் எப்படிப்பட்ட நகையெல்லாம் பண்ணிப் போடப் போறுன் தெரியுமா ? இந்த விஷ நகை போச்சேன்னு நீ அழவே கூடாது. என்ன, நீ சமர்த்துச் சாருதானே?'' என்றுள்.

''ஆமாம், நான் சமர்த்துச் சாருதான், அழவேமாட்டேன்'' என்று சொல்லிக்கொண்டே வெறிச்சிட்டுப் போன விரல்களேப் பார்த்துக் கொண்டு தேம்பியது குழந்தை.



சந்திரமணி மகா புண்ணியவதி. அவளுடைய வாக்குப் பொய்யாகவில்லை. பிற்காலத்தில் கதாதரர் சாரதைக்கு எப்பேர்ப்பட்ட விலை மதிப்பற்ற ஆபரணங்களை எல்லாம் பூட்டி அணி செய்தார்? அன்பு, அடக்கம், பக்தி, ஞானம், தவம், சீலம் இப்படிப்பட்ட அற்புத மணிகளையெல்லாம் சாரதாமணிக்கு அணிவித்தார் அல்லவா? அதுமட்டுமல்ல. பொன்னையும் மண்ணையும் ஒன்றாகவே கருதிய அந்த வைராக்கிய சீலர் தாயின் வார்த்தைகளை நினைவு வைத்திருந்து மெய்யாலுமே சாரதைக்குப் பொன்னாபரணங்களும் செய்து போட்டார்.

ஈச்சம் பழத்தைச் சாப்பிட்டுச் சாருவின் இச்சை பூர்த்தியாயிற்று. நகையை மறந்து சமாதானம் அடைந்தாள். ஆனால் அவளது சிற்றப்பா ஈசுவர முகர்ஜி சமாதானமடையவில்லை.

எள்ளுருண்டையாகக் குதித்தார் அவர். "ஏதோ நீங்களேதான் நகை போட்டிருக்கேள்னு நினைச்சுண்டிருந்தோம். ஏமாத்திப்புட்டேளே! கன்யா சுல்கமும் முந்நூறு ரூபாய்ப் பிச்சைக் காசுதான் தந்தேள். எங்க கொழந்தை அப்படி ஒண்ணும் உதவாக்கரை இல்லை. போதும், உங்க சம்பந்தம். இப்பவே எங்காத்துப் பெண்ணை அழைச்சுண்டு போறேன்" என்று ரகளை கட்டினார்.

சாரதாமணியை உப்பு மூட்டை தூக்கிக் கொண்டு கிளம்பிவிட்டார்.

"அடா ராமு, அடே கதாயி! சம்பந்திப் பிராமணர் கோவிச்சுண்டு போறாரேடா, போய்ச் சமாதானப்படுத்தி அழைச்சுண்டு வாங்கோடா!" என்று கதவிடுக்கிலிருந்து குரல் கொடுத்தாள் சந்திரா.

ராமேசுவரர் அசையவில்லை.

கதாயி இடித்த புளியாக அமர்ந்திருந்தார். "சங்கடப்படும்படியா ஒண்ணுமே நடக்கலேம்மா. கலியாணம்ங்கிறது தீர்ந்துபோன விஷயம்தானே? அதை இல்லைன்னு அவாளாலே மாத்திவிட முடியாதோன்னோ?" என்று நிம்மதியாக, நிதானமாகக் கேட்டார். விவாகரத்து என்பதாக ஒன்றை ஹிந்துக்கள் சொப்பனத்தில்கூட எண்ணிப் பாராத காலம் அது.

தம்பி செய்த காரியம் ராமசந்திர முகர்ஜிக்குப் பிடிக்கவில்லை. சாரதை பிறப்பதற்கு முன்பே சர்வாலங்கார பூஷிதையாக அவருக்குத் தரிசனம் தந்திருந்தாள். எனவே, இப்போது அவளுக்கு நகை போடுவதையோ, கழற்றுவதையோ அவரால் பெரிய விஷயமாக நினைக்கவே முடியவில்லை.

எனவே கதாதரர் சொன்னபடியே, இந்த விவகாரம் துளிக்கூட சங்கடத்துக்கு இடம் இல்லை என்பதுபோல் எளிதில் தீர்ந்துபோயிற்று.

1860ம் வருடம் டிஸம்பர் மாதத்தில் கதாதரர் ஜயராம்பாடிக்கு இரண்டாம் முறையாகச் சென்றார். சாரதைக்கு ஏழாவது பிறந்த தினம் வந்தது. அதற்கெனவே வங்கத்து வழக்கப்படி அவர் வேட்டகம் சென்றார்.

சாரு தன் அகத்துக்காரரைப் பார்த்து இப்போது சுமார் ஒன்றரை வருடமாகியிருந்தது. ஆனாலும் அவளுக்கே இனம் தெரியாத வகையில் அவரைப் பற்றி ஒரு புனித நினைவு அவளுள் கமழ்ந்து கொண்டே இருந்தது.

கதாயி வீட்டுக்குள் வந்தாரோ இல்லையோ, ஏதோ ஓர் ஆவேசம் சாரதையைப் பற்றிக் கொண்டது. யாரும் சொல்லாமலே அந்தக் குழந்தை ஒரு கும்பம் நீர் கொணர்ந்தாள். பதியின் பாதங்களைக் கழுவித் தலையில் புரோக்ஷித்துக் கொண்டாள்.

"ஹம்மா" என்று சொல்லிக் கொண்டே கதாயி விசுப்பலகையில் அமர்ந்து கொண்டவுடன், சாரு தானாகவே விசிறியைத் தூக்கிக்கொண்டு போய் அவருக்கு விசிறலானாள்.

ஊர்ப் பெண்டுகள் எல்லாரும் வந்து சூழ்ந்து கொண்டு கேலி பேசினார்கள். "முளைச்சு மூணு இலை விடலை. இந்தச் சாரு செய்யற 'முத்ஸட்டை'யைப் பாத்தேளோ? அகமுடையானுக்குச் சொக்குப் பொடின்னா போடறா!" என்றார்கள்.

தூய கதாயி இந்தத் தமாஷை ரசித்தார். "மூணு இலை விடாத கொழந்தையா அவ? கதாதர பட்டாச்சாரியாருடைய தர்மபத்தினியாக்கும்! டேய், ஹ்ருதே! உனக்கு மாமியடா அவள். விழுந்து நமஸ்காரம் பண்ணு" என்றார்.

கதாயியுடன் வந்திருந்த ஹ்ருதயராம் முகர்ஜி மேல் வேஷ்டியை இடுப்பில் கட்டிக் கொண்டு சாரதா 'மாமி'க்கு நமஸ்காரம் செய்ய வந்தார்.

இத்தனை நாழி வெட்கமறியாமலிருந்த குழந்தை, அந்த 'மாமா' தனக்கு நமஸ்காரம் பண்ண வந்தவுடன் லஜ்ஜையுடன் உள்ளே ஓடினாள்.

ஹ்ருதயர் விடாமல் அவளைத் தேடிச் சென்று தண்டனிட்டார்.



சாரு மீண்டும் வெளியில் வந்தாள். அவளையும் கதாயியையும் மாற்றி மாற்றிப் பார்த்துக் கண் பனிக்க நின்றுள் பானு மாமி. பரமபக்தி வாய்ந்த பானு ஜயராம்பாடிக்கே 'மாமி'!

''ஹ்ருதயராம், நீங்கள் பாக்கிய சாலி! உறவுமுறையை வைத்துக் கொண்டு சாரதையை நமஸ்கரித்துவிட்டீர்கள். நாங்கள் அப்படி நமஸ்காரம் பண்ண முடியலே'' என்று கூறிவிட்டு, சாருவைப் பார்த்துப் பழைய காலத்துப் பாட்டு ஒன்றைப் பாடினுள்:

தித்திக்கும் அழகுப் பெண்ணே — உனக்குப்
பித்தன்தான் மாலையிட்டானே?

பிக்ஷாடனனை மணந்த பார்வதியைப் பார்த்து அவளது அன்னை மேனை பாடிய பாட்டு அது. கண்ணீர் வழிய அர்த்தபுஷ்டியுடன் பாடினுள் பானு.

ஜயராம்பாடி அப்போது அந்த அர்த்தத்தைப் புரிந்துகொள்ளவில்லை!

**க**தாயி திரும்புகையில் சாரதையையும் சம்பிரதாயப்படி காமார்புகுருக்குக் கூட்டி வந்தார்.

''சாரதே! காமார்புகுரில் யார் இருக்கா, அங்கே ஏன் போறேம்னு தெரியுமா?'' என்று அவளை வினவினுர்.

''ஓ, தெரியுமே'' என்று கண்களை அகல விரித்தாள் குழந்தை. ''அங்கே இன்னொரு அம்மா இருக்கா. நம்பளுக்குக் கலியாணமோல்லியோ? அதனுலே தான் ஒங்க ஊருக்குப் போறேம்'' என்று நீட்டி முழக்கினுள்.

''ஆமாம், 'நம்பளுக்கு' எப்பக் கலியாணம்?'' என்று கண்ணைச் சிமிட்டினுர் கதாயி.

''இப்பத்தான் கலியாணம்; இன்னிக்குத்தான் கலியாணம்.''

''அசடே! 'நம்பளுக்கு'க் கலியாணமாகி ஒண்ணரை வருஷமாயிடுத்து. இப்போ ஒனக்கு வயசு ஏழு. அஞ்சு வயசிலேயே ஒனக்குக் கலியாணமாயிடுத்து. இப்பத்தான் கலியாணம்னு யார் கிட்டேயும் உளறி வைக்காதே.''

''உளறமாட்டேன். நீங்க சொன்ன மாதிரியே சரியாச் சொல்லுவேன்'' என்று தலையை ஆட்டினுள் தேவி.

''என்ன சொல்லுவே?'' — பரீட்சை வைத்தார் கதாயி.

''எனக்கு இப்போ வயசு ஏழு; அஞ்சு வயசிலேயே கலியாணமாயிடுத்துன்னு சொல்லுவேன்'' — பளிச்சென்று பதில் சொன்னுள் சாரு.

பெண்டாட்டியின் புத்திசாலித்தனத்தில் புருஷனுக்குக் கொள்ளைப்பெருமை.

காமார்புகுரிலிருந்து சிறிது காலத்திலேயே கதாதரர் தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்பி விட்டார்; தக்ஷணமே மனைவியை மறந்தும் விட்டார்.

**சா**ரதை ஜயராம்பாடிக்குத் திரும்பினுள்.

தன்னையொத்த குழந்தைகள் பள்ளிக்குச் செல்வதைப் பார்த்து விட்டுத் தானும் கிளம்பினுள்.

பள்ளியில் குழந்தைகள் கக்கத்தில் இடுக்கிய இலையும் (இலைதான் அவர்களுக்கு 'சிலேட்'), துணியில் முடிந்த டிஃபனுமாகப் பெருமையுடன் குழுமியிருந்தார்கள்.

அந்தக் குழந்தைகளுக்கு டிஃபன் என்ன தெரியுமா? அவல் பொரிதான். 'முடி' என்று வங்கத்தில் சொல்வார்கள். அந்த 'முடி'யைப் போடும் டிஃபன் பாத்திரம் என்ன தெரியுமா? அவர்கள் உடுத்தியிருக்கும் துண்டில் — அல்லது பாவாடையிலேயே — ஒரு மூலைதான். துணியின் மூலையில் 'முடி'யை முடிந்திருப்பார்கள்.

இந்தத் தேசத்தில் இரண்டு தலைமுறைக்கு முன்பு வரையில் இப்படிப் பட்ட எளிமை இருந்தது; மக்களுக்குத் திருப்தியும் நிம்மதியும் இருந்தன.

சாரு சில நாட்கள் இப்படி 'முடி'யை முடிந்தபடி பள்ளிக்குப் போய் வந்தாள்.

பிறகு 'கலியாணமான பெண், இப்படியெல்லாம் திரியக்கூடாது' என்று அம்மா சொன்னதை ஒப்புக் கொண்டு பள்ளியிலிருந்து நின்று விட்டாள்.

**1864**ம் ஆண்டு. சாரதைக்கு வயது பதினென்று.

ஊரிலே பெரிய பஞ்சம் வந்தது. 'வங்கத்து வற்கடம்' என்று அதைப் பற்றிச் சொல்வார்கள்.

பஞ்சத்தில் மக்கள் பரிதவிப்பதை ராமசந்திரரால் காணச் சகிக்கவில்லை. தாம் அறுவடை செய்திருந்த நெல்லை அப்படியே ஏழைகளின் அன்னதானத்துக்குச் செலவிட்டார். அரிசி புழுக்குவதும், தானியங்களோடு சேர்த்து அதைக் கிச்சுடியாகச் சமைப்பதுமே சியாமாவுக்கும் சாரதைக்கும் வேலை ஆயிற்று.

''சாருவுக்கு மட்டும் சுத்த அன்னமாக வடித்துப் போடு; பாக்கி நம் எல்லோருக்கும் புழுங்கரிசிக் கிச்சுடிதான்'' என்று சியாமையிடம் ராமசந்திரர் உத்தரவு போட்டுவிட்டார்.

எத்தனையோ மிராசுதார்களுக்கும், ஜமீன்தார்களுக்கும் இல்லாத பெரிய



மனசு ஏழை ராமசந்திரருக்கு இருந்தது. வயிறு காய்ந்த ஏழைப் பட்டாளம் 'அன்னதாதா' என்று வாழ்த்திக் கொண்டு அவரது குடிலை மொய்த்தது.

சாருவின் சந்திர முகத்தைப் பார்த்தாலே அவர்களுக்குப் பாதி பசி தீரும். அவள் பரிந்து பரிந்து பரிமாறினால் அன்னபூர்ணேசுவரியே உணவிட்டது போல், உதரம் மட்டுமின்றி இதயமும் நிரம்பி வெளியேறுவார்கள்.

'டோம்' என்று சொல்லப்படும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த பெண்ணொருத்தி பசிக் கொடுமையில் வெறிபோல் ராமசந்திரர் வீட்டுக்குள் பிரவேசித்தாள். செக்கச் சிவந்து பிதுங்கியிருந்த அவளது கண்களில் மாட்டுத் தொட்டியில் நிரம்பியிருந்த தவிட்டுக் கழிவு நீர்தான் நேரே தெரிந்தது. ஓடினாள் அவ்விடம். முரட்டுத் தவிட்டைத் தோண்டி எடுத்து அவசரம் அவசரமாக விழுங்கலானாள்.

'' கிச்சுடியிருக்குடியம்மா ! தவிட்டைத் தின்னுதே !'' என்று சாரதை கூவியதுகூட முதலில் அவள் காதில் விழவில்லை. நாலு பிடி தவிடு உள்ளே போனபின்தான் அவளது காதடைப்புப் போய்க் குரலே கேட்டது.

அந்த ஹரிஜனப் பெண்ணுக்குச் சம்பிரமமாக இலை போட்டாள் சாரதை. கொதிக்கக் கொதிக்கக் கிச்சுடியைக் கொண்டு வந்து பரிமாறினாள். உண்பதற்கு அவள் எப்படிப் பறக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டு விசிறிகொண்டு வந்து, ஆவி பறக்கும் கிச்சுடியை விசிறினாள். ஒரு விசிறி போதாது என்று இரண்டு கைகளில் இரண்டு விசிறிகளை வைத்துக்கொண்டு, தடுமாற்ற மில்லாமல் இரண்டு கைகளாலும் விசிறினாள் இனிமையே உருவான சாரதாம்பிகை.

இப்படி எத்தனை ஏழைகளுக்கு இரட்டை விசிறி மரியாதையைச் செலுத்தினாள்? ராஜாக்களுக்கு இரட்டைச் சாமரம் இரட்டுவது மரியாதை எனில் தீனர்களுக்கு இது அதைவிடப் பெரிய மரியாதை அன்றோ?

அன்று யாரும் சொல்லாமலே பதிதேவருக்கு விசிறினாள். இன்று பட்டினிப் பட்டாளத்தின் உணவை இரு கைகளாலும் விசிறினாள். அது பாதிவிரத்தியம்; இது அம்மா தத்துவம். இந்த இரண்டும் பின்னிப் பிணைந்ததே சாரதையின் சரிதை.

**ப**தின்மூன்றும் பருவத்தில் சாரதாமணி மீண்டும் காமார்புகுருக்கு வந்தாள். அப்போது கதாதரர் தக்ஷிணேசுவரத்தில் இருந்தார். சந்திரமணி தேவியும் பிள்ளையுடனேயே தக்ஷிணேசுவரத்தில்தான் இருந்தாள். காமார்புகுரில் சாரதாவின் மூத்த மைத்துனர் ராமேசுவரரும், அவரது மனைவி, குழந்தைகளும்தான் இருந்தனர்.

மதனிக்குச் சாருவைப்போல் சுருசுருப்புக் கிடையாது. சாரதைக்கோ காலையில் எழுந்தவுடனேயே குளித்தாக வேண்டும். பெண்களுக்கு என்று பிரத்தியேகமாக இருந்த புறக்கடைக் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு அப்படியே யோசனையில் நின்றாள் சாரதை. 'கசகசவென்று இன்னும் எத்தனை நாழி குளிக்காமலிருப்பது? மன்னி எப்போது வருவாரோ? அது மட்டும் காத்திருப்பதா? தனியாகத் தடாகத்துக்குப் போகலாம் என்றாலோ, மணமானவள், பதின்மூன்று வயசானபின் அப்படிச் செல்வது யுக்தமில்லை. வெட்டியாகக் காலைவேளையில் குளிக்காமல் வேலையோ, பூஜையோ ஏதுமே செய்ய முடியவில்லையே! சிம்மவாஹினி, இதென்ன சங்கடமடி தாயே' என்று குறைப்பட்டுக்கொண்டு நின்றாள்.

திடீரென்று எங்கிருந்தோ எட்டுப் பெண்கள் அவள் முன் வந்து நின்றார்கள். அதில் நாலு பேர் பிரிந்து அவளுக்கு முன்பாக அணிவகுத்து நின்றார்கள்.

ஏதோ ஓர் உள்ளுணர்ச்சி சாரதையைப் பிடித்துத் தள்ள அவள் ஐந்தாமவளாகப் போய் நடுவில் நின்றாள்.

எட்டுப் பேரில் மீதமிருந்த நாலு பெண்கள் அவளுக்குப் பின்னே வரிசையாக நின்றனர்.

நவதுர்கைகளைப்போல் அந்த ஒன்பது பேருமாக ஹால்தார்புகுர் ஏரிக்குச் சென்றனர். நீராடினர். குடத்தில் நீரெடுத்துக் கொண்டு திரும்பினர்.

வீட்டுப் புறக்கடை வந்ததுதான் தாமதம், அந்த எட்டுப் பேரும் எப்படித் திடீரென வந்தனரோ, அவ்வாறே திடீரென மறைந்தும் விட்டனர்.

அன்று மட்டுமல்ல. சாரதை அம்முறை காமார்புகுரிலிருந்த அத்தனை தினங்களும் இப்படியே நடந்தது.

அவர்கள் யார் என்று சாருவுக்குத் தெரியவில்லை. ஆனால் ஏனோ அவர்களிடம் அவள் அது பற்றிக் கேட்கவுமில்லை. அவர்களும் துணை வந்தது தவிர, ஒரு வார்த்தை பேசவில்லை.

'ஜகன்மாதாவுக்கு எட்டுப் பாங்கியர் பணிவிடை புரிவார்கள்' என்று இந்நிகழ்ச்சியைக் கூறும் ஸ்வாமி கம்பீராநந்தர் குறிப்பிடுகிறார். (தொடரும்)



# டார்ஜீலிங்

தி. சா. ராஜு

சென்னைக்கு உதகமண்டலம், தில்லிக்குச் சிம்லா, கல்கத்தாவுக்கு டார்ஜீலிங்.

'டோர்ஜே' என்று திபேத்திய மொழியில் இந்திர வின் செங்கோலுக்குப் பெயர். 'லிங்' என்ருல் கிராமம். தேவர் தலைவனின் செங்கோல் இந்த இடத்தில் ஓர் இடி உருவத்தில் விழுந்ததாக ஒரு கர்ண பரம்பரைக் கதை வழங்குகிறது. இன்றும் அந்த இடத்தை ஹிந்துக்களும் புத்தர்களும் வழிபடுகிருர்கள்.

கடல் மட்டத்திலிருந்து எண்ணுயிரம் அடி உயர முள்ள இந்த இடத்தை அணுக அறுபது மைல் நீள முள்ள நெடுஞ்சாலை உள்ளது. ரயில் பாதையும் நெடுஞ் சாலையும், சமாந்திரமாகவும் ஒன்றையொன்று பின்னிக் கொண்டும் கிடக்கின்றன. நீல நிற ரயில் பெட்டிகளிலோ



அல்லது சாலை வழியாகவோ செல்லும்போது எதிர்ப் படும் காட்சிகள் எழில் மிக்கவை.

அவ்வப்போது யானைக் கூட்டங்கள் தென்படுகின்றன. சிறுத்தையோ மற்ற வனவிலங்குகளோ எப்போதாவது தான் கான முடியும். பற்பல சலசல அருவிகள். அந்த நீரை மூங்கில் குழாய் மூலம் பல குடியிருப்புக்களுக்குக் கொண்டு போகின்றனர் மலைவாசிகள்.

டார்ஜீலிங் டீ உலகப் பிரசித்தி. தேயிலைத் தோட்டங் களில் பணி புரியும் தொழிலாளிகள் பெருமளவு ஆதி வாசிகள்தாம். பல மலை இடுக்குகளில் தேனடைகள் தொங்குகின்றன. ஒவ்வொன்றும் யானைக் காதளவு. சில ஐந்தடி விட்டம்கூட இருக்கிறது. பெரிய அடையி லிருந்து அறுபது பவுண்டு வரையில் தேன் எடுத்ததாக மலைவாசி நண்பர் கூறினர். ஆனல் அந்தத் தேனீக் களோ வன்மம் மிக்கவை. யாஹ்யாகானை விடக் குரூர மானவை. மைல்கணக்கில் மக்களைத் துரத்திக் கொண்டு வந்து கொட்டுமாம். பாடிங்டன் என்ற வெள்ளைக்கார எஞ்சினீயர் ஒரு தரம் அவைகளிடம் சிக்கிக் கொண்டு தப்பி ஓடி நீரில் மூழ்கிஞராம். அங்கேயும் அவரைச் சூழ்ந்து கொண்டனவாம் தேனீக்கள். பாவம், அவர் தேனுக்கு ஆசைப்பட்டு ஜல சமாதி அடைந்தார்.

நமது அண்டை நாடான நேபாளம் வலிமை கொண் டிருந்த போது பல சமயங்களில் இந்தியாவைப் பதம் பார்த்திருக்கிறது. அவர்களுடைய ஆக்கிரமிப்புப் படைகள் மேற்கு இமாலயப் பகுதியில் காங்டா வரையில் சென்று மன்னன் சன் சார் சந்தை உலுக்கியிருக்கின்றன. நேபாளிகள் டார்ஜீலிங்கின் ஜனத் தொகையில் எழுபது விழுக்காடு. இவர்கள் தீவிரமான சமயப் பற்று உடையவர்கள். மலைவாசிகளான காரணத்திஞல் உடல் உழைப்புக்கு அஞ்சாதவர்கள். துயரங்களை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள் ளும் இயல்பு உடையவர்கள். உண்மையானவர்கள். நல்ல படை வீரர்கள் — வேறு எந்தத் தொழி லுக்கும் அவர்களுடைய தாய்நாடு வாய்ப்புத் தராததால்.

எழில்மிக்க டார்ஜீலிங் மேற்கு வங்கத்தின் ஒரு மாவட்டம். அதன்





- ரயில் பாதை.
- கோர்க்காலி தாயும் - சேயும்.
- கூம் - புத்த மடாலயம்.

எல்லை சீன, நேபாளம் திபேத், சிக்கிம் ஆகிய நாடுகளைத் தொடு கிறது. இவ்வளவு காலம் இந்த மாவட்ட மக்கள் வங்காளிக ளுடன் வாழ்ந்தும் அவர்களுடன்

# உறங்காதீர ஊரைக் காக்கும் தமிழர்களே!



யாராண்டால் என்னவென்று அயர்ந்துறங்கும் மக்களிடை
சாராய வல்லரக்கன் ஏறினான் ராஜபீடம்
வள்ளுவர் வாக்கியம் காற்றிலே பறந்தது
சோற்றுக்குத் திண்டாட்டம் வயிற்றுக்குக் கஞ்சியில்லை
எழுந்தது கொண்டாட்டம் சாராயக் கடைகளிலே
போற்றவோ தமிழ்நாட்டரசை சாராய சகாப்தம் ஸ்தாபித்த
மாதர்கள் மானத்துக்கும் ஊரினமைதிக்கும் [ஆட்சியை?
தீமை இயற்றினர் தெளிவிலா மதியினர்
மது விலக்கைத் தள்ளி விட்டு மது விலங்கு
போட்டு விட்டார் வரம் பெற்ற முதல்வர்
எதுவாயின் என்னவென்றுறங்காதீர்
மதுசூதனன் எச்சரிக்கை இதுவாகும்
விரும்பாதன நடக்கும் ஈசன் சோதனைகள்
இரும்பு பண்டமாவது செம்மட்டியினடியால்
கரும்பை வெல்லமாக்குவது ஆலையில் கசக்கியே
கல்மேலடித்தே துணியை வெளுப்பான் வண்ணான்
பல்வேறு வேதனை ஆண்டவன் சோதனையே
கருணைக் கடவுளினருளைப் பெற்று
எய்துவோம் விலங்கினின்று விமோசனம்
மதுசூதனன் பணிந்துரை மனதிற்கொண்டு
எழுமின் ஊரைக் காக்கும் தமிழ் மக்களே
கொள்ளைக் காரனுக்குக் கதவைத் திறந்து
உள்ளே வா என்றழைப்பது போல்
கள்ளையும் சரக்கையும் வாய்க்குள் செலுத்தாதீர்
விரித்த மது வலையில் விழாதீர்
என்னன்புக்குரிய தென்னக மக்களே!
செல்லும் வழியில் கடை யிருந்தாலும்
நல்ல விளக்குகள் கண்ணைக் கவர்ந்தாலும்
கிட்ட நெருங்காதே கெட்ட கள்ளண்டை
என்னன்புக்குரிய தென்னக மகனே!
எல்லாரும் வந்திருக்க நீ மட்டும் வாராய்
குடிக்கத் தடையில்லை முன்னே போல்
பிடிக்காசை மிச்சம் செய்யவாவெனக் கிள்ளுவான்
கடைக்காரன் பேச்சுக்கு ஏமாற வேண்டாம்
என் அன்புக்குரிய தென்னக மகனே!

மதுசூதனன்



# பூஜை



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

ஒவ்வொரு குடும்பத்திலும் ஈசுவர பூஜை நடக்க வேண்டும்.

சௌகரியப்பட்டவர்கள் விஸ்தாரமான பூஜைகளை எடுத்துக் கொண்டு செய்யலாம். சௌகரியமில்லாவிடில் சுருக்கமாகச் செய்தாலும் போதும். பத்தே நிமிஷம் போதும். ஆபீஸுக்குப் போகிறவர்களும் இப்படி சுருக்கமாகவாவது பூஜை என்று ஒன்றைச் செய்ய வேண்டும். எல்லாக் குடும்பத்திலும் ஒரு மணி சத்தம் கேட்க வேண்டும்.

ஈசுவரன், அம்பாள், விஷ்ணு, விநாயகர், சூரியன் இந்த ஐந்து பேருக்கும் மூர்த்தி வைத்துப் பூஜை செய்ய வேண்டும். இதற்குப் பஞ்சாயதன பூஜை என்று பெயர். அங்கங்களோடு கூடிய விக்கிரகங்களாக இல்லாமல், இந்த ஐந்தையும் இயற்கையாகவே கிடைக்கும் ஐந்து வஸ்துக்களில் ஆவாகனம் செய்து பூஜை செய்வது ஒரு சம்பிரதாயம்.

ஈசுவரனுக்குரிய பாண லிங்கம் நர்மதை நதியில் ஓங்கார குண்டத்தில் கிடைக்கிறது. அம்பிகையின் ஸ்வரூபமான ஸ்வர்ணமுகி சிலா என்ற கல் ஆந்திராவில் ஸ்வர்ணமுகியாற்றில் கிடைக்கிறது. அது தங்க ரேக் ஓடிய கல். விஷ்ணுவின் வடிவமான ஸாலக்கிராமம் நேபாளத்தில் கண்டகி நதியில் அகப்படுகிறது. சூரியனுக்குரிய ஸ்படிகம் தஞ்சாவூரில் வல்லத்துக்குப் பக்கத்தில் கிடைக்கிறது. விநாயகருக்கு உருவமான சோணபத்ரக் கல், கங்கையிலே கலக்கிற சோணபத்ர நதியில் அகப்படுகிறது. ஆக, இந்த ஐந்தையும் ஓரிடத்தில் வைத்தால் இந்தத் தேசம் முழுவதையுமே வைத்தது போலாகும்.

இந்த ஐந்தில் ஒன்றுக்காவது கண், மூக்கு, காது இல்லை. எனவே, இடுக்குகளில் அழுக்கேறுவது கிடையாது. அபிஷேகம் செய்து துடைக்க நாழியே ஆகாது. எல்லாம் சின்னச் சின்ன கற்கள். எல்லாமாகக் கொஞ்சம் இடத்தைத்தான் அடைத்துக் கொள்ளும்.

பெரிய பூஜா மண்டபம்கூடத் தேவை இல்லை. ஒரு சின்ன சம்புடத்தில் போட்டு வைத்துவிடலாம். ஆவாஹனம் பண்ணி, நாலு உத்தரிணி தீர்த்தத்தில் அபிஷேகம் பண்ணி, சந்தனம் குங்குமம் அக்ஷதை வைத்து, அர்ச்சனை செய்து, நைவேத்தியம் காட்டலாம்.

வெளியூருக்குப் போகும்போதுகூடப் பத்து நிமிஷம் இப்படிப் பூஜை செய்வதில் சிரமமில்லை. வெளியூரில் அர்ச்சனைக்குப் பூ கிடைக்குமா என்று கவலைப்பட வேண்டாம். வில்வத்தையும் துளசியையும் உலர்த்தி வைத்துக் கையில் எடுத்துப் போனால் ஈசுவரனையும் விஷ்ணுவையும் அதனாலே அர்ச்சிக்கலாம்; மற்றவர்களுக்கு அக்ஷதையால் அர்ச்சனை செய்யலாம். நைவேத்தியத்துக்குச் சுத்தமான அன்னம் வெளியூர்களில் கிடைக்குமா என அலட்டிக் கொள்ள வேண்டாம். காய்ந்த திராக்ஷைப் பழத்தைக் கையோடு வைத்திருந்து நிவேதித்து விடலாம்.

ஐந்து மூர்த்திகள், துளஸி — வில்வ பத்திரங்கள், திராக்ஷை, அக்ஷதை இந்த எல்லாவற்றையுமே கையடக்கமாக ஒரே சம்புடத்தில் போட்டு வைத்துக்கொண்டு விடலாம்.

பூஜை என்பதற்காகப் பெரிய சிரமம் எதுவும் தேவையில்லை; மனசு இருந்தால் வெகு சுலபத்தில் எல்லாரும் எங்கேயிருந்தாலும் பூஜை செய்யலாம் என்பதற்காக இவ்வளவு சொன்னேன்.

வீட்டிலே இருந்தால் 'மகா நைவேத்தியம்' எனப்படும் அன்னத்தை ஸ்வாமிக்குக் காட்ட வேண்டியது அவசியம்.

நாம் அநுபவிப்பதற்காகப் பிரபஞ்சம் முழுவதையும் ஈசுவரன் நமக்கென விட்டிருக்கிறார். பலவிதமான போக்கிய வஸ்துக்களை வெளியிலே உண்டாக்கி, அவற்றை அநுபவிக்கிற இந்திரியங்களை நம்மிடம் வைத்திருக்கிறார். எனவே, நாம் அநுபவிப்பதை எல்லாம் அவருக்குச் சமர்ப்பித்துவிட்டே உபயோகித்துக் கொள்ள வேண்டும். உண்மையில் அவருக்கே என்று அன்னத்தைக் கொடுத்து விடுகிறோமா? வெறுமே அவரிடம் காட்டுகிறோம்; பிறகு நாம்தான் புசிக்கிறோம்.

நைவேத்தியம் செய்தால் ஸ்வாமி எங்கே சாப்பிடுகிறார் என்று சிலர் கேலியாகக் கேட்கிறார்கள். நிவேதனம் என்றால் ஸ்வாமியைச் சாப்பிடச் செய்வது என்று அர்த்தமே இல்லை. 'நிவேதயாமி' என்றால், 'அறிவிக்கிறேன்' என்றுதான் அர்த்தமேதவிர 'உண்பிக்கிறேன்' என்று அர்த்தமல்ல. 'அப்பனே, இந்த வேளைக்கு உன் கருணையில் நீ இந்த அன்னத்தைக் கொடுத்திருக்கிறாய்' என்று அவனுக்குத் தெரிவித்துவிட்டு அவனுடைய நினைவோடு உண்ண வேண்டும். அவன் அருள் இல்லாவிட்டால் இந்த அரிசி எப்படி விளையும்? ஸயன்ஸ் நிபுணர் அரிசி வகைகளை ஆராய்ந்து பெரிய பெரிய புஸ்தகங்கள் எழுதலாம்; ஆனால் அவரால் ஒரு மணி அரிசியைச் செய்ய முடியுமா? பரமேசுவரனால் கொடுக்கப்பட்டதை அவனுக்குக் காட்டாமலே நாம் அநுபவித்தால் திருடர்களாவோம்.

எங்கும் இருக்கும் அவன், நாம் இருக்கச் சொல்லும் இடத்திலும் நாம் கிரகிக்கும்படி வந்து நிற்பான். கல், மண், செம்பு முதலிய எந்த பிம்பத்தில் வைத்துக் கூப்பிட்டாலும் வருவான். அப்படிப்பட்ட யோக்கியதையும், கருணையும் அவனுக்கு நிச்சயமாக இருக்கிறது. இல்லை என்றால் அப்படிப்பட்ட ஸ்வாமி நமக்கு வேண்டவே வேண்டாம்.

அவனைப் பூஜை என்று வைத்து ஒவ்வொரு குடும்பத்திலும் கூப்பிட்டு, அவனால் கொடுக்கப்பட்டதை உபயோகிக்கிறோம் என்று அன்னாடம் அறிவிக்க வேண்டும். இப்படிச் செய்து வந்தால் ஈசுவரப் பிரசாதமாக அர்ப்பிக்கத் தக்கதைத் தவிர வேறெதையுமே நாம் உபயோகிக்கக்கூடாது என்ற பக்குவம் நாளடைவில் உண்டாகும்; நல்லவர்களாவோம்!

# 6. சந்நியாசிக் கணவர்; கன்னித் தாயார்!

....அன்னையே!
பின்னையும் கன்னி என மறைபேசும்
ஆனந்த ரூப மயிலே!
— தாயுமானவர்

சாரதாமணிக்கு நீராடித் திளைப்பதில் தனித்ததோர் ஆனந்தம்! ஐயராம்பாடியில் இருந்தவரை ஆமோதர் நதியில் ஆர அமர முழுகி ஆனந்திப்பாள். ஆமோதர் ஆற்றை அவள் 'கங்கை' 'கங்கை' என்றே கூறுவாள்.

இப்போது காமார்புகுரில் ஹால்தார் புகுர் ஏரியில் விந்தை நங்கையர் எண்மருடன் நீராடும்போது நீந்தவும் கற்றுக் கொண்டாள்.

சுத்தமாக ஸ்நானம் செய்து, ஈர முடியைப் பிழிந்து நுனியில் மட்டும்




முடிச்சிட்டு, தண்புனலாடியதற்கு மாற்ருகக் காலைச் சூரியனின் கதகதப்பில் திளைத்துக் கொண்டு, கண்ணுடி நெற்றியில் சிந்தூரக் குங்குமத்தோடும், துடியிடையில் குடத்தோடும், திவ்விய மங்கையர் எட்டுப்பேர் புடைசூழ சாரதை வீடு திரும்பிய காட்சி என்ன அழகு?

'ஒரகத்தி' என்ற பதம் பண்டைய நாட்களில் சகோதரர்கள் தங்கள் மனைவியரோடும் குழந்தைகளோடும் ஒரே அகத்தில் இணைந்திருந்த பந்துத்வத்தைக் குறிப்பதாகும். சாரதை 'மதனியோ, மாதாவோ' என்றபடி ஒரகத்திக்கு அடங்கியும், அவளுக்கு உதவியாகவும் சிட்டுப் போலக் காரியங்களைச் செய்வாள். அப்போது சாரதையின் கணவர், மாமியார் இருவருமே காமார்புகுரில் இல்லை. எனினும் பெண்ணுகப் பிறந்தவர்களுக்குப் புக்ககம் என்ற ஒன்றிடம் பிறந்தகத்தைப் போலவே பிரியத்தை வைக்கப் பழக்குவது பாரதப் பண்பு. இதன்படியே சியாமசுந்தரி தேவி, சாரதாவைக் காமார்புகுரில் மைத்துனர் ராமேசுவரரின் அகத்துக்கு அனுப்பி வைத்திருந்தாள். புக்ககத்தினரை அரவணைத்து, வெகு நல்ல பெயர் வாங்கிக் கொண்டாள் சாரு.

சாரதையைவிடப் பத்து வயது சிறியவள் ராமேசுவரரின் பெண் லக்ஷ்மி. 'சித்தி சித்தி' என்று லக்ஷ்மி தன்னையே சுற்றி வருமாறு செய்துவிட்டாள் சாரு.

இப்படிச் சில காலம் புக்ககத்திலிருந்துவிட்டு ஜயராம்பாடிக்குத் திரும்பினுள். அங்கு சில காலம் இருந்துவிட்டு மீளவும் காமார்புகுருக்கு வந்தாள். புகுந்தவிடம், பிறந்தவிடம் இரண்டுக்கும் பொலிவூட்டி வந்தாள்.

பிறந்த இடத்தில் அவளால் பொலிவு இருந்தாலும் வேறு விதத்தில் நலிவும் ஏற்பட்டு வந்தது. சியாம சுந்தரிக்குப் பல குழந்தைகள் பிறந்தன. அவற்றில் சில குழந்தைகள் குழிக்குப் போயின.

புத்திர சோகத்தில் அம்மா கதறிப் புலம்பியது சாரதையின் மலர் மனத்தை வாட்டி எடுத்தது. சியாமா பெற்றுப் போடுவாளே தவிர அக் குழந்தைகளை எடுத்து வளர்த்தது முழுவதும் சாருதான். பட்டு மேனியும், பவள உதடுகளும், வண்டுக் கண்களுமாக விளையாடிய சின்ன உருவங்கள் மண்ணிலே மட்கியது சாரதையின் அடிவயிற்றில் சுரீலென்று எரிந்தது.

அடிவயிற்றில் கண்ட நோவுக்கு மேலாகக் கோமள சாரதையின் நுண்ணிய இதயத்தின் அடியிலும் ஒரு பலமான அடி விழுந்து நோவு உண்டாக்கியது. அவளது கணவரைப் பற்றி ஊரார் பேசிக் கொண்ட பேச்சுக்கள் அவளைத் தாக்கித் துன்புறுத்தின. ''சாரு ஆமடையானுக்குப் பைத்தியம் முத்திப் போச்சு தெரியுமோ? அம்பாளுக்காக அரைச்ச சந்தனத்தைத் தானே பூசிக்கிருராம். அம்பாளுக்கு நைவேத்தியம் பண்ணறதுக்கு முன்னுடியே பாயசத்தைத் தான் குடிச்சுட்டு அப்புறம் விக்கிரகத்தின் வாயிலே கிண்ணத்தைக் கொண்டு போய் வைக்கிருராம். சியாமா மாமியோட தங்க மனசுக்கு இப்படியா ஒரு மாப்பிள்ளை வாய்க்கணும்? சமர்த்துக் கண்ணு சாருவுக்கு இப்படியா ஒரு வெறி ஆமடையான் வாய்க்கணும்?'' என்று ஊரிலே பேசியது சாரதையை உலுக்கியது.

அந்த ஊரிலே பல பெண்களுக்குக் கலியாணமாயிற்று. அந்தக் கலியாணங்களுக்குச் சாரு சென்ருல் நூறு நூறு கண்கள் தன்னைப் பரிதாபத்துடன் மொய்ப்பதை உணருவாள். அந்தப் பரிதாபமே அவளுக்குப் பெரிய தாபமாக இருந்தது. சியாம சுந்தரியின் பெருமூச்சுக்கள் அந்தத் தாபத்தைத் தூண்டி விடும் காற்ருயின.

ராமசந்திரர் மனத்தில் என்ன இருந்ததோ, பகவானே அறிவார். எப்போதும்போல் அமைதியாகவே இருந்தார்.

தராசில் ஒரு தட்டு கீழே போகும் போது இன்ளெரு தட்டில் பளுவை வைத்தால் அது மீண்டும் சம மட்டத்துக்கு எழும்புகிறது. இப்படியே மனச் சுமையை லேசாக்கிக் கொள்ள உழைப்புச் சுமையை அதிகமாக்கிக்கொண்டாள் சாரதாமணி.

பாலப் பருவத்தில் கால பாசத்துக் குத்தப்பிய தம்பி தங்கைகளுக்குப் பல் தேய்த்துவிட்டு, ஸ்நானம் செய்வித்து, உணவூட்டி, அவர்களது உடைகளைத் தோய்த்து — இப்படிப் பம்பரமாகச் சுற்றிச் சுற்றி உழைத்தாள். காதம்பினி என்ற தங்கையும், பிரஸன்ன குமார், உமேஷ்சந்திரன், காளிகுமார், வரதாப் பிரஸாத், அபயசரண் என்ற தம்பிகளும் ஆசை அக்கா சாருவை அனவரதமும் எதிர்பார்த்தார்கள். யந்திரமாக மட்டும் உழைக்காமல் மனம் பெருக்கும் அன்பின் ஈரத்தையும் பிழிந்து பணி செய்தாள் சாரதை.

இப்படியும் ஒரு சாதாரண மானுடப் பெண்ணுல் உழைக்க முடியுமா என்று சியாமசுந்தரிக்கு நம்பவே முடியவில்லை.

''என் கண்ணே, நீ யாருன்னே தெரியல்லையேடி அம்மா! உன்னை நான் புரிஞ்சுப்பேனு, சொல்லு ராஜாத்தி'' என்று ஒரு நாள் தன் பெண்ணைப் பற்றிய அற்புத உணர்வுடன் கேட்டாள்.

பெற்ற தாயிடம் கற்ற வித்தை பலிக்காது என்பார்களே! சாரதைக்குக் 'குளிர்' கண்டது — அம்மா தன் ரகசியத்தைத் துப்புத் துலக்கி விடுவாளோ?

சட்டென்று அதை மறைக்கு முகமாக ''ஆமாம், உனக்கு என்னைப் புகழறது தவிர வேறு என்ன வேலை? நான் யாருன்னு என்ன கேள்வி வேண்டிக் கிடந்தது? நான் யாரு? யாரா இருக்க முடியும்? எனக்கு என்ன அம்பாளாட்டம் நாலு கை முளைச்சிருக்கா என்ன? அப்படியே நான் அம்பாளாவே யிருந்தாலும் உன்னைத் தேடிண்டுதான் வந்து பிறக்கணுமா என்ன?'' என்ருள்.

மறைத்துப் பேச வேண்டும் என்று நினைத்து, ரகசியத்தை மேலும் அம்பலமாக்கி விட்டாள்.

''அதென்னவோ, தேடிண்டு வந்திருக்கியே'' என்று தாரை தாரையாகக் கண்ணீர் வடித்துக் கூறினுள் சியாமா. ''இந்த ஜன்மாவிலே நான் இத்தனை பாடு பட்டதற்கு, இனிமே எனக்கு ஜன்மாவே வேண்டாம்னுதான் சொல்லணும். ஆனு ஒவ்வொரு ஜன்மாவிலேயும் நீ என் வயிற்றில் பிறப்பாயேயானுல் எத்தனை ஜன்மாவும் எடுப்பேன்'' என்று திணறினுள்.

சாரதை இந்த மண்ணுலகத்துக்கும், தன்னுடைய மணித்வீபத்துக்கும் இடையில் அவதிப்பட்டாள், அந்த ஒரு நொடிப் பொழுதிலே! இரண்டு உலகத்திடையும் சமநிலை காணுமல் நிர்தாட்சிண்யமாகப் பேசினுள்:

''என்ன சொன்னே! என்னை மறுபடி வேறே கீழே இழுத்துண்டு வரப் போறயா? நான் திரும்பத் திரும்ப வரணும், நீ பெற்றுப் போடற குஞ்சு குளுவான்களுக்கு ஊழியம் செய்யணும் — அப்படித்தானே!'' என்று உறுமினுள்.

சாரு அப்படி உறுமியது சியாமாவுக்கு அதிசயத்திலும் அதிசயமாக இருந்தது. அவளையே உற்றுப் பார்த்தாள். சாருவின் அன்புப் பணி அவளை அன்னைத் தெய்வமாகக் காட்டிக் கொடுத்தது எனில், இப்போது அவள் அன்னைத் தெய்வத்தை மறைப்பதற்காக சிம்ம கர்ஜனை செய்தபோது அவளில் சிம்மவாஹினியையே கண்டாள் சியாமை.

''ஆமாம், மகளே! மறுபடி நானும் பிறக்கணும், நீயும் எனக்குப் பெண்ணுகப் பிறக்கணும்'' என்ருள் — அம்பாளிடம் வேண்டிக் கொள்ளும் குரலில்.

சாரதை அழுக்கு மூட்டையையும், தோய்க்கும் தடியையும் எடுத்துக் கொண்டு கிணற்றடிக்கு விரைந்தாள்.

துள்ளிக் குதித்து விளையாடிய நாட்கள் தீர்ந்தன.

சாரதாமணியின் பால லீலைகளிலிருந்து விடைபெறும்போது நமக்கு நெஞ்சு சிறிது கனக்கத்தான் செய்கிறது. கண்ணபெருமான் பெரியவரான பின்புதான் ருக்மிணி, சத்தியபாமாவை மணந்து அன்பைப் பரப்பினர், பாண்டவர்களுடன் கூடிக் களித்து இன்பம் பரப்பினர், பகவத் கீதையை உபதேசித்து ஞானம் பரப்பினர். ஆயினும் குட்டிக் கிருஷ்ணனின் லீலைகளிலிருந்து விடைபெற்று பிருந்தாவனத்திலிருந்து மதுராபுரிக்கு ''ஸ்ரீமத் பாகவதம்'' தாண்டு

கையில் நெஞ்சு சிறிது கனக்கத்தான் செய்யும். பெரிய சாரதாமணி தேவி எத்தனையோ அரும் செயல்களைச் செய்து அன்பைப் பரப்பியது வாஸ்தவம். இருந்தாலும் குழந்தை சாருவின் மென்மையும் மதுரமும் தூய்மையும் அலாதியானவைதாம்!

குழந்தை தேகம் போயிற்று. இப்போது சாரதாமணி பதினலு வயசுப் பருவ மங்கையானள்.

ஆனல் — இங்குதான் அவதார ரகசியம் இருக்கிறது — பருவத்தின் அரிப்பு ஏதுமே அவளுக்கு உண்டாகவில்லை.

இனப் பெருக்கம் என்பதே இயற்கையின் முதற்பெரும் நியதி. தாவரமாயினும், கிருமியாயினும், மிருகமாயினும் எதுவுமே தன் இனத்தைப் பெருக்கிக் கொள்ளவே துடிக்கிறது. அதனல்தான் இந்த மாயா லோகம் மாயாமல் நடந்து வருகிறது. இதற்கு அடிப்படையாகவே சரீர இன்பத்தை மானுட மனத்துக்குள் விதைத்திருக்கிருள் மகா மாயை.

இனப் பெருக்கத்தில் மனம் வைக்காமல் ஆதி மூலத்திலேயே சில வியக்திகள் மீண்டும் ஒடுங்குவதற்கும் பராசக்தி அருள் பாலிக்கிருள். இவர்கள் பௌதிகமாகக் குழந்தைகளைப் பெறுவதில்லை என்பதோடு, தாங்கள் பெருத பல குழந்தைகளிடம் கருணை கொண்டு தங்களைப் போலவே அவர்களும் பிறப்பு இறப்பிலிருந்து விடுபட வழி காட்டுகிருர்கள்.

ஒரு ஜன்மாவில் இந்திரிய நிக்கிரகத்தை நீண்ட காலம் பயின்றும் முக்தி நிலையைப் பெருத ஒரு சாதகர் மீளவும் ஜன்மம் எடுக்கும்போது, அவரிடம் பல இயற்கை வேகங்கள் பிறப்பிலிருந்தே சமனம் அடைந்திருக்கும். கீதை கூறும் இவ்வித யோகப் பிரஷ்டர்கள் மறு ஜன்மாவில் தங்களது சாதனையை விட்ட இடத்திலிருந்து தொடங்குவர்.

யோகப் பிரஷ்டர்களைத் தவிர, பகவானே உருவெடுத்து வந்து பிறக்கும் அவதார புருஷர்களுக்கும், உலகை நல்வழிப் படுத்துவதற்காக பகவான் அனுப்பி வைக்கும் தூதர்களுக்கும் பிரகிருதி வேகங்கள் தொடக்கத்திலிருந்தே இரா.

சாரதாமணிக்குத் தேக இச்சை அடியோடு இல்லை.

ஆயினும் ஒரு விந்தை! அம்மாவாக வேண்டும் என்ற ஆசை மட்டும் அவளுள் கிளர்ந்தது. சிறிய பொறி மகா ஜோதியாக வளருவது போல் இந்த ஆசை நாளா வட்டத்தில் கொழுந்து விட்டெரியவும் தொடங்கியது.

'அம்மா அம்மா' என்று அழைக்கும் இளம் குரலுக்காக அவாவியது சாரதையின் உள்ளம்.

அவள் குழந்தையாக இருக்கும் போதே அம்மா விளையாட்டு விளையாடியவள். குழந்தைப் பருவத்தைத் தாண்டியவுடனேயே அம்மாப் பருவத்துக்கு ஆர்வம் கொண்டுவிட்டாள்.

சரீர போகம் கசந்தது அவளுக்கு; ஆனல் புத்திர சம்பத்தை மட்டும் எண்ணும்போதே இனித்தது.

இது எப்படிச் சாத்தியம்?

**சா**தனையின் முடிவாக எய்தப்படுவது எதுவோ அதுவே 'சாத்தியம்' எனப்படும். பற்பல சாதனைகளைச் செய்த கதாதரர்தான் சாரதாமணியின் அற்புத ஆசையையும் சாத்தியமாக்கப் போகிருர்!

சாரதாமணி கணவனைக் கண்டிராத இந்த ஏழு வருஷ இடைக் காலத்தில் கதாதரரை அம்பாள் படுத்தி வைத்த பாட்டைச் சொல்லி முடியாது; அவருக்கு அவள் அள்ளி அளித்த ஆனந்தத்தையும் அளவிட முடியாது. நானுவிதமான சாதனை சமுத்திரங்களின் அடிவரை கதாதரரை முக்கி முக்கி எடுத்து, அந்த ஆழத்திலிருந்த முத்துக்களைச் சரம் சரமாக அவருக்கு அணிவித்து அலங்கரித்தாள் அவருடைய மகா பெரிய அம்மா.

அந்த அம்மா, தான் பவதாரிணி என்ற உருவத்தில் மட்டுமில்லை என்பதை அவருக்கு உணர்த்தினள். அத்தனை தெய்வ வடிவங்களாகவும் இருப்பது ஒரே மகா சக்தி என்பதை கதாதரர் உணர்ந்து, எல்லா தெய்வ மூர்த்திகளையும் தரிசித்து, சம்பாஷித்து, அநுபவித்து ஆனந்திக்குமாறு செய்தாள். ஹிந்து சமயத்தின் நீண்ட சரித்திரத்தில் கதாதரரைப் போல் சகல தெய்வங்களையும் ஒன்ருக வழிபட்ட மகான்களை அரிதாகவே காண்கிருேம்.

அதுமட்டுமல்ல, பகவானுக்குத் தாசனுக இருந்து அவனது மேன்மையை அநுபவிக்கலாம்; தோழனுக இருந்து அவனது நேசத்தை அநுபவிக்கலாம்; காமினியாக இருந்து அவனது பிரேமையை அநுபவிக்கலாம்; தாயாக இருந்து அவனது எளிமையை அநுபவிக்கலாம்; குழந்தையாக இருந்து அவனது தாய்மையை அநுபவிக்கலாம்; அவனுகவே ஆகி அவனது சாந்தத்தை அநுபவிக்கலாம். ஒவ்வொரு மெய்யடியார்

இவற்றில் ஒவ்வொரு வகையில் பக்தி செலுத்திப் பரமனை அடைந்ததாகக் காண்கிறோம். கதாதரரோ எனில் தாம் ஒருவரே இத்தனை பாவங்களிலும் பகவானை அநுபவித்தார்.

இதில் அவருக்கு முக்கியமான குருவாக இருந்தவள் பைரவி பிராம்மணி என்ற யோகேசுவரி.

தெய்வத்தைப் பெண் வடிவில் அம்பாளாக வழிபட்ட கதாதரர், பெண்ணைப் பிறந்த பைரவி பிராம்மணியிடமே தந்திர — யோக சாதனைகளைப் பயின்றது குறிப்பிடத் தக்கது. அதோடு, அவர் தாமே முழுக்க முழுக்கப் பெண்ணின் பாவத்தில் தோய்ந்து அம்பிகைக்குச் சேடியாக இருந்து வழிபட்டார்; ராதையாகிக் கண்ணனை வழிபட்டார். அவர் பெண்ணுக்குத் தந்த பெருமையின் சிகரமாகவே சாரதாமணி பிற்காலத்தில் மகோன்னத அன்னையாக எழுச்சி கொண்டாள்.

பைரவி பிராம்மணிக்குக் கதாதரரிடம் ஒருபுறம் தாயன்பு; மறுபுறம் பகவானிடம் வைப்பது போன்ற பக்தி. அது ராமசந்திரனிடம் கௌசல்யாதேவி வைத்த அன்பு; கிருஷ்ணனிடம் யசோதை வைத்த அன்பு.

அந்த ராமசந்திரனும், கிருஷ்ண மூர்த்தியும் சேர்ந்த ராமகிருஷ்ணரே கதாதரர் என்று பைரவி பிராம்மணி ஒரு மகத்தான பண்டித சதஸில் பிரகடனம் செய்தாள்.

தக்ஷிணேசுவர ஆலயத்தை எழுப்பிய ராணி ராஸமணியின் மாப்பிள்ளையும், அந்த ஆலயத்தை நிர்வகித்து வந்தவருமான மதுரா நாதரின் அழைப்பை மறுக்க முடியாமலே அந்த வித்வத் சதஸிலே பண்டிதோத்தமர்கள் குழுமியிருந்தார்கள். அவர்களுக்கு முதலில் கதாதரரைப் பற்றி உயர்ந்த அபிப்பிராயம் ஏதும் இருக்கவில்லை. அவரை வெற்று ஆவேசத்துக்கு ஆளாகும் பலவீனப் பிரகிருதி என்றே அவர்களில் பலரும் எண்ணினர். ஆனால் இப்போது கதாதரரின் பரவச பாவங்களைக் கண்ணுக்கு நேராகக் கண்டதிலும், பைரவி பிராம்மணி காட்டிய சாஸ்திரப் பிரமாணங்களைக் கேட்டதிலும் அவர்களுடைய பழைய அபிப்பிராயம் பறந்தோடிற்று! இவர் ஓர் அவதார புருஷரே எனத் தெளிந்தனர்.

('ராமனாகவும் கிருஷ்ணனாகவும் வந்தவனே இவர்' என்று பைரவி பிராம்மணி நிலைநாட்டி விட்டாள். இனி நம் கதா நாயகரை கதாதரர் என்று கூறாமல் 'ராமகிருஷ்ணர்' என்று கூறுவதே பொருத்தமன்றோ?)

ராமகிருஷ்ணர் நிஷ்கபடக் குழந்தையாகச் சிரித்தார். "அவதாரமோ இல்லையோ — அது கிடக்கட்டும்; மகா பெரியவாளான நீங்கள்ளாம் நான் பைத்தியம் இல்லைன்னு ஒப்புக்கறேளோன்னோ? அந்த மட்டும் பேஷ், பேஷ்" என்று சொன்னார்.

அவதார புருஷர் என்பதாகப் பகவானின் பிரதியாகச் சிலர்தான் வருவார்கள். ஆனால் அவதாரத்துக்குக் காரணமான ஈசுவரனுக்கும் மேம்பட்ட சச்சிதானந்த பரப்பிரம்மமாக அனைவருமே ஆக முடியும். உண்மையில் நாம் காண்கிற அனைத்தும் பிரம்மம்தான். மாயையினால் நம்மை வேறாக நினைக்கிறோம். ஞான சாதனையால் மாயையை நீக்கிவிட்டால் பிரம்மமாகவே ஆகிவிடலாம் — இதுதான் வேதாந்தம். பகவானைப் பல பாவங்களில் அநுபவித்து பக்தி செய்ததன் எல்லை நிலமாக, தானே அவனாகிவிடுவதுதான் வேதாந்த சாதனை,

இந்த வேதாந்தத்தில் ராமகிருஷ்ணரைப் பயிற்றுவித்து, அவதார ராமகிருஷ்ணரை, பரப்பிரம்ம பரமஹம்ஸராக்குவதற்காக தக்ஷிணேசுவரத்துக்கு வந்து சேர்ந்தார் மகான் தோதாபுரி.

அவரே ராமகிருஷ்ணருக்கு சந்நியாசம் தந்தவர்.

குழந்தை சாரதை மாலையிட்டுத் தன்னை மணாளனாக்கிக் கொண்ட நினைப்பே இல்லாமல் ராமகிருஷ்ணர் சந்நியாச தீக்ஷை வாங்கிக்கொள்கிறார்!

மனைவியின் நினைவு இல்லாவிட்டாலும் தன்னைப் பெற்ற தாயின் நினைவு அவருக்குப் போகவில்லை. ஆதிசங்கரர், பட்டினத்தடிகள் போன்ற வைராக்கிய பர்வதங்களுக்கும் தாயன்பு மாறாமலே இருந்ததுபோல, ராமகிருஷ்ணருக்கும் அன்னையிடம் தனித்ததொரு பாசம் இருந்தது. தெய்வமாம் பவதாரிணி, குருவாகிய பைரவி பிராம்மணி, அன்னையாகிய சந்திரமணி, பத்தினி சாரதாமணி என்றிப்படிப் பெண்ணன்பின் பல சாயல்களிலேயே தமது அவதாரத்தை அலர்த்திக் காட்டியவர் ராமகிருஷ்ணர்.

ஜேஷ்ட புத்திரன் ராமகுமாரர் மறைந்த துயரத்தை ஆறாத வடுவாகக் கொண்டிருந்தாள் சந்திரமணி. அவளது செல்ல கதாயி சந்நியாசியாகிவிட்டான் என்றால் அந்த வடு மீண்டும் பச்சைப் புண்ணாகிவிடும். இதை ராமகிருஷ்ணர் உணரத் தவற வில்லை.



தாம் சந்நியாசம் கொள்வது ரகசிய மாகவே இருக்க வேண்டும் என குருவைக் கேட்டுக் கொண்டார். துரீயாசிரமம் ஏற்ற பின்பும் தாம் காஷாயம் அணியாமல் சாதாரண வேட்டியைக் கச்சத்துடன் அணிய அநுமதி பெற்ருர்.

தோதாபுரி அநுமதிபூர்வமாகச் சிரித்தார். ''நீ அம்மா என்பவளேக் காரணம் காட்டி இப்படிக் கேட்கிருய். நான் இன்னெரு காரணத்துக்காகவும் இதை வரவேற்கிறேன். உண்மையான சந்நியாசம் காஷாயத்திலும், முண்டனத்திலும் இல்லே; அது மனத்தில் இருப்பது. பக்கத்தில் பத்தினியை வைத்துக் கொண்டே சந்நியாசியாக இருப்பது தான் சந்நியாசத்தின் உச்சநிலே. இந்த உச்ச நிலேயை இந்த உலகுக்கு நீதான் பிரத்தியட்சமாக வாழ்ந்து காட்ட வேண்டும். நீ வெளி உலகம் அறியச் சந்நியாசியாகிவிட்டால், அதன்பின் வீட்டுக்குச் சென்று மனேவியுடன் இருந்து கொண்டே துறவை அநுஷ்டித்துக் காட்ட முடியாது. எனவே, இப்போதைக்குச் சிகை களேந்து, உபவீதம்நீக்கி, காஷாயம் புனேந்து, விரஜா ஹோமம் செய்து நீ சந்நியாச தீக்ஷை கொண்டாலும், இது நம்மோடு ரகசியமாக இருக்கட்டும். பிற்பாடு நீ கிருஹஸ்தனேப் போலவே வீட்டுக்குப் போ. அங்கு உன் புனிதத்தை நிலே நாட்டு'' என்ருர் தோதாபுரி.

சந்நியாச தீக்ஷை பெற்று மகா வாக்கியங்களேப் பெற்ற ராமகிருஷ்ணர், அந்த வாக்கியங்களின் பொருளான பரம்பொருளிலேயே இரண்டறக் கலந்து சமாதி நிலேயை அடைந்தார். அந்த மகத்தான அத்வைத நிலேயில் ஆறு மாதங்கள் அப்படியே ஊறிக் கிடந்தார்.

அதன்பின் உலக சமய சரித்திரத்திலேயே கண்டிராத புனித தாம்பத்தியத்தை அவர் தொடங்குமுன், அவரை உலகம் முன்னேடியாகக் கொள்ளத்தக்க இன்னெரு சாதனேயிலும் அவரைத் தோய்த்து எடுத்தாள் அம்பிகை. அதாவது, ஹிந்து மதத்தினர் வழிபடும் சகல தெய்வங்களும் ஒரே பராசக்தியின் வடிவங்கள்தாம் என்று அவர் மூலம் உணர்த்தியது மட்டுமின்றி, ஹிந்து மதத்தைப் போலவே சகல மதங்களும் ஒரே மகாசக்தியின் சத்தியத்தைப் பற்பல கோணங்களில் காண்கிற அநுபவம்தான் என்பதையும் இந்த அருமைப் பிள்ளே மூலமே லோகத்துக்கு நிருபித்துக் காட்டினுள் தேவி. கிறிஸ்துவ மதம், இஸ்லாம் முதலியவற்றின் ஆசரணேகளேயும் அவர் வழுவறப் பின்பற்றி அவற்றின் மூலமும் ஆத்ம சாந்தி என்ற இலட்சியத்தைப் பிரத்தியட்சமாக அடைந்தார்.




அவள்: நான் நிற்கிறேனே! நீங்க எழுந்து உதவி செய்யப்படாதா?

ஒருவர்: அம்மையே! இது ஒருத்தர் தனியா செய்யற உதவியில்லே. நாலுபேர் கூட்டா சேர்ந்து செய்ய வேண்டிய காரியம். அதனால்தான் யோசனே பண்ணிக்கிட்டு உட்கார்ந்திருக்கேன்.

அவர் சாந்த நிலேயில் அழுந்திவிட்டால் உலகுக்கு பக்தி ஆவேசத்தை, புனித இல்லற வாழ்வை, எளிய உபதேசங்களே அளிப்பது யார்? எனவே, அவரை வியாதிப் பிண்டமாக்கினுள் சர்வேசுவரி. குண்டலினியைக் கிளப்பிக் கொண்டு யோக சாதனே செய்ததால் அவரது வயிறு எரிந்து புண்ணுகிவிட்டது. அவரது ஜீரண சக்தி அடியோடு பாதிக்கப்பட்டது.

தக்ஷிணேசுவர ஆலய நிர்வாகி மதுரா நாதர் ராஜ வைத்தியம் செய்தார். ஏதோ சிறிது பலன் இருந்தது. 'இடம் மாறி இருந்தால் நல்லது' என்ருர்கள்.

ராமகிருஷ்ணர் காமார்புகுருக்கு வந்து சேர்ந்தார்.

ஹ்ருதயரும் பைரவிப் பிராம்மணியும் உடன் வந்தனர்.

சாரதாமணியும் அங்கு வந்தாள்.

சந்நியாசிக் கணவரும், கன்னிமை குலேயாமலே தாய்மையை விரும்பும் மனேவியும் மறுபடி சந்தித்தனர்!

ஏதுமறியா சாரதை தூய அன்பின் திரு உருவமாக நிற்க, மதுரபாவ சாதனேகளில் தேறிய பைரவி பிராம்மணியின் உள்ளத்திலோ அசூயையின் இருட்சாயல் விழுந்தது! (தொடரும்)




**ஒரே ஒரு சலவையில்**
**ஸூப்பர் ஸர்ஃப்,**
**வேறெந்த சலவைப்**
**பவுடரையும் விட**
**அதிக வெண்மை தருகிறது!**

அமோகமான சலவைத் திறன் படைத்தது ஸூப்பர் ஸர்ஃப். கண்மறைவான அழுக்குகளையும் அகற்றிவிடும். காண்போர் பொருமைப்படும் கற்பனை கடந்த வெண்மை. கேட்பானேன், இந்தியாவின் தலைசிறந்த ரகம்: ஸூப்பர் ஸர்ஃப்!

**ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்**
(வெண்மையூட்டும் சாதனம் எதுவும் சேர்க்கத் தேவையில்லை)

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-SU. 116-140

# பரோபகாரம்

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

பிதிர்கடன், பரமேசுவர பூஜை, தேவ யக்ஞம், எல்லா ஜீவராசிகளுக்கும் உணவு படைப்பது ஆகியவற்றை வைதிக மதம் விதிக்கிறது. திருவள்ளுவரும் இதே தர்மத்தைத் தான் விதித்திருக்கிருர் :

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றுங்கு
ஐம்புலத்துஆறு ஓம்பல் தலை

வேதம் கூறும் தர்மங்களுள் யாகத்தில் ஹிம்சை இருக்கக் கூடுமாதலால் அதைத் திருவள்ளுவர் கண்டிக்கிருர் என்று சிலருக்கு அபிப்பிராயம். கிழ்க்கண்ட குறளை மேற்கோள் காட்டுகிருர்கள் :

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர் செகுத்து உண்ணுமை நன்று

'ஹவிசை அக்னியில் ஆஹுதி செய்து ஆயிரம் யாகம் செய்வதைவிட, ஒரு பிராணியையும் வதைத்து உண்ணுமலிருப்பது சிரேஷ்டம்' என்று இதன் அர்த்தம். என் அபிப்பிராயம், திருவள்ளுவர் வைதிக அநுஷ்டானங்கள் அனைத்திலும் பூரண நம்பிக்கை கொண்டவர் என்பதே. காவிரியின் பெருமையைச் சொல்ல வந்த ஒருவர், 'ஆயிரம் கங்கையைவிட ஒரு காவிரி உயர்ந்தது' என்று சொன்னுல், கங்கையும் உயர்ந்தது என்றே ஆகும். காவிரியைச் சிலாகித்துப் பேச விரும்புகிற ஒருவர், 'ஆயிரம் சாக்கடையைவிட ஒரு காவிரி உயர்ந்தது' என்று சொல்வாரா? அப்படியே திருவள்ளுவர் அஹிம்சையைச் சிலாகித்துப் பேசும்போது 'ஆயிரம் யாகத்தைவிட அஹிம்சை உயர்ந்தது' என்ருல் யாகமும் உயர்ந்தது என்றே அர்த்தமாகும். இந்தக் குறள் இல்லற இயலில் சொல்லப்படவில்லை; துறவற இயலிலேயே சொல்லப்பட்டிருக்கிறது. துறவிக்கு யாகத்தில் அதிகாரம் இல்லை; அவனுக்கு வைதிக மதம் பூரண அஹிம்சையை விதித்திருக்கிறது. உலகத்துக்கெல்லாம் உபயோகமான ஒரு கிரந்தத்தைத் தந்திருக்கும் திருவள்ளுவர் வைதிகத்தை ஆட்சேபிக்கும் நாஸ்திகர் அல்லர். திருவள்ளுவர் 'விருந்து' என்று சொல்கிற விருந்தோம்பல் வைதிக மதத்தில் மநுஷ்ய யக்ஞம் எனப்படும். விருந்தோம்பல் என்பதை அன்னதானம் எனக் கொள்ளலாம்.

ஒவ்வொரு குடும்பத்திலும் சமைப்பதற்காகப் பானையில் அரிசி போடும்போது ஒரு பிடியை ஏழைகளுக்கு என்று ஒரு கலயத்தில் போட்டுவிட வேண்டும்; இப்படிப் பல குடும்பங்களில் தினமும் போட்டு வைப்பதைப் பேட்டைக்குப் பேட்டை சேகரித்து, உணவாக்கி, ஆங்காங்குள்ள ஆலயத்தில் நிவேதனம் செய்து, ஏழைகளுக்கு அளிக்க வேண்டும். ஒரு பிடி அரிசியோடு ஒரு பைசாவும் தினந்தோறும் போட வேண்டும். சேகரித்த அரிசியைச் சமைப்பதற்கான விறகுக்கும், சாதத்தில் சேர்த்துக் கொள்ள மிளகுப் பொடியோ அல்லது வேறு ஏதாகிலும் வியஞ்சனமோ தயாரிப்பதற்கும், சமையல் பாத்திர வாடகைக்கும் — இப்படிப்பட்ட மேல்செலவுகளுக்காகத்தான் அந்த ஒரு பைசா. இந்தத் திட்டத்தை நடத்திக் காட்டுவது பெரிய பரோபகாரம். பசித்து வந்த ஏழைகளுக்கு ஈசுவரன் கோயிலில் இப்படிப் பிரசாதம் கிடைக்கிறது என்ருல் வயிறும் மனசும் குளிரும். இதனுல் கோயிலுக்கு வருகிற வழக்கம் ஏற்பட்டு பக்தியும் வளரும். வெறுமே 'சாப்பாடு' என்றில்லாமல், ஈசுவரனுக்கு நிவேதனமான 'பிரசாதமாக' இருப்பதால் அந்த அன்னம் சித்தசுத்தி அளிக்கும்.

அன்னதானம் பரோபகாரத்தில் ஓர் அம்சமே. பரோபகாரம், சமூக சேவை, சோஷல் ஸர்வீஸ் என்று இந்த நாட்களில் ஆர்ப்பாட்டமாகப் பிரகடனம் பண்ணுவதை, முற்காலத்தில் எந்தப் பகட்டுமில்லாமல் சுபாவமாகவே மக்கள் செய்து வந்தனர். இதற்கு 'பூர்த்த' தர்மம் என்று ஒரு பெயர். ஜனங்களுக்காகக் கிணறு, குளம் வெட்டுவது. அவர்களின் ஆத்ம க்ஷேமத்துக்காகக் கோயில் கட்டுவது, அன்னதானம், நந்தவனம் அமைப்பது எல்லாம் 'பூர்த்தம்'. இதில் கிணறு, குளம் வெட்டுவது முதலில் சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல் தான் பேச்சுவழக்கில்கூட, 'அவன் என்ன செய்து கொண்டிருக்கிருன் ? வெட்டிக் கொண்டு இருக்கிருனு ?' என்கிறோம். 'வெட்டுவது' அவ்வளவு பெரிய தர்மம். தாகமெடுத்த பசுக்களும் மற்ற பிராணிகளும் வந்து நீர் அருந்துவதற்காகக் கிராமத்துக்கு வெளியே மேய்ச்சல் பூமியில் ஒரு குளம் வெட்டினல் எவ்வளவோ புண்ணியம். ஒரு கிராமத்தில் அல்லது பேட்டையில் இருக்கிற சகலரும் — பணக்காரர் ஏழை என்ற வித்தியாசமில்லாமல், உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கிற வித்தியாசமில்லாமல் — ஒன்று சேர்ந்து மண்வெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு இப்படிப்பட்ட சரீரப் பிரயாசையுள்ள பரோபகார சேவைகளில் ஈடுபட வேண்டும். இதனுல் சமூக ஒற்றுமையும் அதிகமாகும். புத்தி சுத்தமாகக் கல்வி, மனசு சுத்தமாக தியானம், வாக்கு சுத்தமாக சுலோகம் இப்படி யெல்லாம் இருக்கின்றன அல்லவோ? சரீரம் சுத்தமாவதற்கு அதனுல் சேவை செய்ய வேண்டும். உழைக்க உழைக்க சித்தசுத்தியும் வரும். எல்லாருடனும் சேர்ந்து மண்ணை வெட்டும்போது அகங்காரத்தையும் வெட்டி எடுத்ததாகும். குளத்தில் தண்ணீர் ஊறுவதைவிட நம் இருதயத்தில் ஊறுகிற அன்பே முக்கியம். வெளிவேஷம், டெமான்ஸ்ட்ரேஷனே வேண்டாம். அவரவரும் பிறருக்குத் தெரியாமல் ஏதாவது ஒற்றையடிப் பாதைக்குப் போய் அங்கேயிருக்கிற கண்ணுடித் துண்டுகளை அப்புறப்படுத்தினுல்கூடப் போதும் — அதுவே பரோபகாரம் ; சித்த சுத்தி என்கிற ஆத்ம லாபமும் ஆகும்.

பகவத் ஸ்வரூபமாக எல்லோரையும் நினைத்து, நமக்குக் கர சரணுதிகள் தந்துள்ள பகவானுக்குப் பிரீதியாக அந்தக் கரசரணங்களைக் கொண்டு பரோபகாரம் செய்வோம்.

# அம்மா

## ரா. கணபதி

### 7. வெளிமழையும், உள்மழையும்!

வானமாய் நின்று இன்ப மழையாய் இறங்கி எனை வாழ்விப்பது உன் பரம் காண்!

— தாயுமானவர்

ராமகிருஷ்ணர் பைரவி பிராம்மணியுடனும், ஹ்ருதயராமருடனும் தக்ஷிணேசுவரத்திலிருந்து காமார்புகுருக்குப் புறப்படுமுன் பவதாரிணியின் சந்நிதியில் மனம் பாகாகக் கரைந்து நின்றார்.

பெற்ற தாயிடம் பேசுகிற குழந்தையாக வாய்விட்டுச் சொன்னார்:

''என் அம்மாடி! ஊருக்குப் போறேன். அங்கே என் அகத்துக்காரியும் வருவா. அவளுக்கு லவலேசம்கூட என்கிட்டக் காமம் ஏற்பட்டுவிடக் கூடாது. உங்கிட்ட சொல்லிட்டேன். அப்புறம் உன் இஷ்டம். உனக்கு எதுவும் சொல்லவே வேண்டாம். ஆனா இப்படி நான் உருகிக் கண்ணும் கண்ணீருமாச் சொல்லணும்னு உன் லீலா மனசுலே ஒரு ஆசை. அதனாலே என்னை இப்படிக் கேக்க வைக்கிறே... தாயே, நான் வரேன். 'வரேன்'னு உன்னை விட்டுட்டா போறேன்? என்னமோ உளர்றேன்....'' என்று சிரித்துக்கொண்டே, மின்னலைப் பிழிந்து செய்தாற்போன்ற தமது ஒளித்திருமுகத்தை அமிருதக் கண்ணீரில் நனைத்துக்கொண்டு வெளியே வந்தார்.

சாரதாமணி காமார்புகுருக்கு வரப் போகிறாள் என்பதே பைரவி பிராம்மணிக்குப் பிடிக்கவில்லை. நல்ல மரத்தில் புல்லுருவி பாய்ந்தது!

பொதுப்படையாகப் பேசுவதுபோல் ராமகிருஷ்ணரிடம் பல விஷயங்களைப் பேசிக் கொண்டே நடந்தாள் பைரவி. அதனிடையில், ''ஒருவன் அத்யாத்ம மார்க்கத்திலே போறச்சே, அதுக்கு அவனுடைய தர்மபத்தினி தடங்கல் செய்யறான்னு வெச்சுப்போம். புருஷன் தன்னோடு லோக ரீதிக்கு ஒப்ப நடக்கலைன்னா 'தற்கொலை செய்துப்பேன்' என்றே அவள் பயமுறுத்தறதா வெச்சுப்போம். இவனோ அவளோடு கிருஹஸ்தாசிரமம் வகிக்கிறதா மந்திரபூர்வமா பிரமாணம் பண்ணினவன். இப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலே அவனுக்கு எத்தனை பெரிய பிரச்னை ஏற்படும்?'' என்றாள்.

ராமகிருஷ்ணரை 'பயமுறுத்தி', சாரதாமணியை வரவொட்டாமல் தடுப்பதற்கே இப்படித் தந்திரமாகப் பேசினாள் பிராம்மணி.

ராமகிருஷ்ணருக்கு சாக்த-வைஷ்ணவ தந்திரமெல்லாம் போதித்த பிராம்மணியின் இந்த அசட்டுத் தந்திரம் அவருக்குப் புரியாமற் போகவில்லை. ஆனாலும் புரிந்துவிட்டது என்று பட்டவர்த்தனமாகக் காட்டாமல், அவளைப் போலவே ஒளித்துப் பேசினார்:

''அத்யாத்ம மார்க்கத்திலே ஒருத்தனுக்கு உண்மையான நாட்டம் வந்துட்டா, அப்புறம் பெண்டாட்டி தற்கொலை பண்ணிக்கிறதாச் சொன்னாலும் அவனைத் தடுத்து நிறுத்த முடியாது''— இவ்வாறு சொல்லிவிட்டு, பைரவியின் இதயத்துக்குள் துளைக்கும்படி குறுகுறுவென்று அவளைப் பார்த்தபடி தொடர்ந்தார்: ''ஆனா, ஒண்ணு நிச்சயமாச் சொல்வேன் பைரவியம்மா! ஒருத்தனுக்கு அம்பாளிடத்திலே வாஸ்தவமான பக்தி இருந்தா, தேவி அவனை இப்படிப்பட்ட பிரச்னையிலே தள்ளவேமாட்டா. அவனுடைய பத்தினியும் அவனுக்கு அநுகூலமா இருக்கும்படியே அருள்பண்ணுவா.''

பைரவியின் குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுத்தது.

ஏழாண்டுகளுக்குப் பின் வந்துள்ள 'கதாயி'யைப் பார்க்க காமார்புகுர் வாசிகள் ஆவல்மீதூறக் கூடினர். கதாயி பெரிய ராமகிருஷ்ணராகி விட்டாரா, அல்லது பைத்தியமாகிவிட்டாரா என்று தெரிந்து கொள்வதில் அவர்களுக்கு ஆர்வம். ஆனால் அவர் எப்படியிருந்தாலும், 'தங்கள்' கதாயி என்று அவரிடம் அன்பைக் கொட்டுவதற்கே அந்த நல்ல கிராமவாசிகள் கூடினர்.

ஜொலிக்கின்ற தேகமும், கருணையில் நனைந்த கண்ணும், உலகில் ஒட்டாத நகை இழையிடும் திரு வாயுமாக ராமகிருஷ்ணர் பிரவேசித்தவுடனேயே அவர்களுக்கு அவரது பைத்தியத்தைப் பற்றிய ஐயங்கள் பறந்தன; அவரது மகிமை பற்றிய மதிப்பில் பிறந்த பய உணர்ச்சியும் ஓடிப் போயிற்று. 'தங்கள்' கதாயியேதான் என்று நெருங்கி வந்து அமர்ந்தனர்.

எட்டத்திலேயே நின்று, முக்காட்டைச் சிறிதே திறந்து அவரைப் பார்த்தாள் சாரதாமணி.

அவரது தோற்றத்தைக் கண்ட மாத்திரத்திலே எல்லையில்லாத அன்பையும், சுயநலம் என்பதே இம்மியும் கலக்காத துறவையும் பிரத்தியட்சமாக நுகர்ந்தாள் சாரதாமணி.

விவரம் தெரிந்தபின் இப்போது தான் அவள் அவரை முதலாவதாகப் பார்க்கிறாள். முதற் பார்வையிலேயே 'சுயம்' போயிற்று. சுயநலமே இல்லாத அன்பு இவளிடமிருந்து அவர்பால் பொங்கிக் கொண்டு எழுந்தது. அவர் தான் தனக்குச் சகலமும்; அவரே தன் பிராணபதி; அவரே தன் ஆத்மநாயகன் என்று தெரிந்துகொண்டுவிட்டாள்.

பிராணபதி, ஆத்மநாயகன் என்பதை யெல்லாம் வேறெந்த மொழியிலாவது பெயர்க்க முடியுமோ? தேகத்தின் பதியையும், சரீரத்தின் நாயகனையும்தான் உலகம் பொதுவில் அறிந்திருக்கிறது. ஆனால் நம் தேசத்துப் பெரியவர்கள் 'பிராண நாயகன்' என்று ஒருவனைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்! பரம பக்தர்கள் ஈசுவரனையே பிராண நாயகனாக்கிக் கொண்டு அவனது நாயகியானார்கள். ஆனால் மநுஷ்யசரீரம் கொண்ட சாரதை மநுஷ்ய சரீரம் கொண்ட ராமகிருஷ்ணரைப் பிராண காந்தனாகக் கொண்டதற்கு ஈடு உண்டா?



அவளது பிராணனின் மூலத்தி லேயே ஓர் அமிருதசரஸின் ஊற்றுக் கண்கள் திறந்து கொண்டன.

''அவரை அப்போ பார்த்ததிலிருந்து என் இருதயத்துக்குள்ளே ஓர் ஆனந்த கும்பத்தை ரொப்பி வெச்சுட்ட மாதிரியே அனவரதமும் இருந்தது. துளிக்கூட மாருத அந்தத் தெய்விக ஆனந்தத்தை என் மனசு எப்படி மொண்டு மொண்டு குடிச்சுதுங்கறதை வார்த்தையாலே கோடி காட்டக்கூட முடியாது'' என்று பிற்காலத்தில் நம் அம்மா மொழிந்திருக்கிருள்.

வயிற்றுக்கு நிறைவு தருகிற சிசு பத்து மாதமானல் வயிற்றைக் காலி செய்துவிட்டு வெளியே போய்விடும். ஆனல் ராமகிருஷ்ணர் சாரதையின் இதயத்தில் வைத்த ஆனந்த நிறைவு என்றுமே அவளைவிட்டு நீங்கவில்லை.

அவரது பாங்குதான் முதலில் அவ ளுக்குத் தெரிந்தது; பிறகுதான் சரீரம் தெரிந்தது. 'இப்படி இளைத்துவிட் டாரே! என்னமோ பெரிய பெரிய சாதனையெல்லாம் பண்ணினுராமே, அத ஞல்தான் இளைத்தாரா? அந்தச் சாதனை யெல்லாம் எனக்குப் புரியாது. ஆனல் இளைத்திருப்பது மட்டும் புரிகிறது. என்னை அதுவே உருக்குகிறது. இந்த உருக்கத்துக்குள்தான் எத்தகைய தூய பிரேமை!'

சாரதாமணி முக்காட்டுடனே வந்து ராமகிருஷ்ணருக்கு நமஸ்கரித்தாள்.

எந்தப் பருவ மங்கையும் எந்த யௌவன புருஷனுக்கும் அவ்வளவு பாவனமாக நமஸ்கரித்திருக்க முடியாது!

''சாரதா, இவாளெல்லாம் நம்ப மநுஷ்யாள்! நான் இவாளோடே தான் லூட்டி அடிச்சுண்டு இருப்பேன். 'புது மாட்டுப் பொண்ணு'ன்னு நீ உள் ளேயே இருந்துடாதே. நீ அடங்கியிருக் கறதுதான் எனக்குப் பிரீதி. வெளியிலே சுத்தாமே அகத்தோடுதான் இருக் கணும். ஆன ரொம்பக் கட்டுப்பெட் டியா இருந்துடாதே. நம் மநுஷ்யா ளோடே நீயும் சேர்ந்துண்டு நான் பண் ணற ரகளையை யெல்லாம் ரசிச்சுண்டு இரு'' என்று கூறினுர் ராமகிருஷ்ணர்.

ஒவ்வொரு அக்ஷரத்திலும் அன் பைத் துளும்பத் துளும்ப நிரப்பிப் பேசி ஞர். எந்த யௌவன புருஷனும் எந் தப் பருவ மங்கைக்கும் தரமுடியாத பாவன அன்பு அது.

''இந்தா, இதோ இவாளுக்கு நமஸ் காரம் பண்ணு. இவாதான் பைரவிப் பிராம்மணிங்கிற மகா யோகினி. என் குரு. எங்கம்மா மாதிரி நெனச்சு, மாட்டுப் பொண்ண இவாளுக்குக் கைங் கரியம் பண்ணு. பரம புண்ணியம் கிடைக்கும்'' என்ருர் ராமகிருஷ்ணர்.

தன்னைப் போலவே பெண்ணுகப் பிறந்தும், தான் கனவில்கூட நினைக்க முடியாத பெரிய நிலைகளை அடைந்த பைரவியிடம் சாரதைக்கு பயமும் மதிப் புணர்ச்சியும் உண்டாயின. நடுங்கிக் கொண்டே நமஸ்கரித்தாள்.

பைரவியை சாரதாவுக்கு மாமியார் ஸ்தானத்தில் வைத்தார் ராமகிருஷ்ணர். சாரதையின் மாமியார் சந்திரமணி உண்மையில் அவளுக்கு அம்மாவாகவே இருந்தாள். பைரவியோ மாமியார் என் கிற ஓர் 'அந்தஸ்தை' அப்போதே தன் மனத்தில் ஏற்படுத்திக் கொண்டாள்.

மாமியார் வெளியில் அந்தஸ்தைக் காட்டினுலும் அந்த அந்தஸ்துக்கு அடிப் படையாக ஒரு பெரிய குறைவுணர்ச்சி யும் தாபமும் ஆசாபங்கமும் இருக்கும். இது மனேதத்துவ விஷயம். தான் எடுத்து வளர்த்த பிள்ளையின் வாழ் வில் புதிதாக முக்கியத்துவம் பெற இன்னெருத்தி வந்தவுடன் தாய் மன சில் எதையோ பறிகொடுத்த துக்கம் ஏற்படுகிறது. துக்கத்தில் சித்தம் சிதறு கிறது. புது மாற்றுப் பெண்ணிடம் அர்த்தமில்லாத கசப்பு ஏற்படுகிறது. அந்தஸ்தைக் காட்டி அதிகாரம் செய் யத் தலைப்படுகிருள்.

பக்குவ ஜீவிகளுக்கு இத்தகைய எண் ணங்கள் ஏற்படுவதில்லை. சந்திரமணிக்கு ஏற்படவில்லை. ஆனல் பைரவி பிராம் மணிக்கு ஏற்பட்டு விட்டது!

அதுதான் யோக மாயை என்பது! மகாமாயா தேவி இந்த மகா யோகினி யையே ஆட்டி வைக்கலானுள்!

எத்தனையோ அரும் சாதனைகளைச் சாதித்த பைரவிக்கு அன்பைச் சாதிக் கத் தெரியவில்லை. அவளுக்கும் 'எனது' என்ற ஆசை விட்டபாடில்லை. ராம கிருஷ்ணரைத் தனது சொத்தாக நினைத்து வாஞ்சை வைத்துவிட்டவள் அவள். அவருக்கோ ஆசையே தெரி யாது; அன்புதான் தெரியும். அந்த அன்புக்கு இப்போது ஒரு பங்காளியாக வந்து நின்ற சாரதையைப் பிராம் மணி போட்டியாகவே எண்ணினுள்.

பிற்பாடு தனிமையில் ராமகிருஷ்ண ரிடம், ''அப்பனே, உன் மனைவி நன்ருக வளர்ந்துவிட்டாள். அவளைப் பார்த்தால் எந்தப் புருஷ மனசும் சஞ்சலிக்கும். நீ ஜாக்கிரதையா யிருக்கணும்'' என்ருள்.

அவளது உள்நோக்கம் அவருக்கா தெரியாது?

வெறுமே புன்னகை புரிந்தார்.

'என்னை அவதார புருஷன் என்று மகாபட்ட வித்வத் சபைக்கு நிரூபித்துக் காட்டினுயே! ஆனல் நீ உன் மனத்தில் என்னைப் பற்றி அப்படி நினைக்கவில் லையோ? அவதார புருஷன் பெண்மோகத் துக்கு ஆளாக முடியுமா? பெண்கள் எல்

லாரையும் சர்வேசுவரியின் வடிவமாகப் பார்க்கிற எனக்கா உபதேசம் செய்கிருய்?' என்றெல்லாம் ராமகிருஷ்ணர் அவளைக் கேட்டிருக்கலாம்; ஆனுல் கேட்கவில்லை. 'அவளுக்கு ஒரு பாடத்தை அம்பாள் புகட்டிக் கொண்டிருக்கிருள். கட்டி நன்ருகப் பழுத்த பின்தான் அதை அம்பாள் அறுப்பாள். இப்போதே தாம் நேரடியாகத் தலையிடக் கூடாது' என்பதால் அடங்கி யிருந்தார்.

கோவிந்தனைச் சுற்றி கோப கோபியர் சூழ்ந்தது போல் தம்மைச் சூழ்ந்திருந்த மக்களுடன் இரவெல்லாம் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தார் ராமகிருஷ்ணர். பெரிய பெரிய விஷயங்களை எளிய உவமைகளால், இனிய கதைகளால் விளக்கிப் பேசினுர். தங்கள் கதாயி — பைத்தியம் என்று நினைக்கப்பட்ட கதாயி — இத்துணை மதுரமாகப் பேசுவதைக் 'கள்ளால் மயங்குவது போலே கண்மூடி வாய்திறந்தே' அவர்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

எத்தனையோ மகா அநுபூதிகளில் திளைத்த அவதார புருஷன் அந்த எளிய மக்களை விடக் கொஞ்சம் கூடத் தம்மை உயர்ந்தவராக நினைக்காமல் அணுக்கத்தில் அமர்ந்து பேசினுர்.

அவர் பேசிய தெல்லாவற்றுக்கும் சாரம் என்ன? பகவானிடத்தில் பக்தி, மக்களிடத்தில் பிரேமை இவற்றைக் குழைத்து வாழ வேண்டும் என்பதே.

''நீங்கள்ளாம் வீடு வாசலை விட்டுட்டு ஓடிடணும்கிறது இல்லை; வீட்டிலிருந்து கொண்டே சுத்தமா வாழலாம். நம்ப அகத்து மனுஷாளுக்குச் செய்ய வேண்டியதைச் செய்யறதில் தப்பில்லை. ஆனு மற்ற மனுஷாளை வித்தியாசமா நினைக்கக்கூடாது. 'இவாதான் நம்ப மனுஷா' என்று வீட்டிலே பாசத்தை வெச்சுக் கூடாது...''

''அதெப்படி கதாயி முடியறது? நமக்கு நெருக்கமா இருக்கிறவாகிட்டத் தனியான பாசத்தை எப்படி ஏற்படுத்திக்காம இருக்க முடியும்?'' என்ருன் பாலியத் தோழன் கயாவிஷ்ணு.

''முடியும் கயா, முடியும். அதுக்குத்தான் பகவத் பக்தி வேணும்கிறது. பலாச் சுளையை எடுக்கச்சே பிசின் கையிலே ஒட்டிக்கிற மாதிரி, வீட்டுக் காரியத்தைச் செய்யறச்சே பாசம் ஒட்டிக்கத்தான் செய்யும். ஆனல் பலாச் சுளை எடுக்கிறவா கையிலே விளக்கெண்ணெய் பூசிண்டுதான் சுளையை எடுக்கரு. பலாப் பிசின் அப்போ ஒட்டறதே யில்லை. மனுஷ பாசப் பிசின் ஒட்டாம இருக்கிறதுக்காக ஈசுவர பக்தி என்கிற எண்ணெயைத் தடவிக்கணும்.''

பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

என்ற பொய்யா மொழியைத்தான் அவ வேறுவிதத்தில் சொன்னுர்.

''நான் சொல்றது சாரதாவுக்குப் புரியறதோ என்னவோ?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

சாரதை பக்தி என்று விசேஷமாக ஏதும் செய்யவில்லை. வீட்டுக் காரியத்திலேயேதான் அனவரதமும் ஈடுபட்டிருந்தாள். ஆயினும் அவளுள் பாசம் என்கிற சுய உணர்வு கலந்த மாயை ஆழமாகப் புகவில்லை. இது அதிசயமில்லையா? அவதார வியக்திகளுக்கும் சாதாரண மானுடர்களுக்கும் உள்ள வித்தியாசம் இது.

ராமகிருஷ்ணர் கேட்டதற்கு சாரதை ஏதும் பதில் சொல்லவில்லை. முக்காட்டுக்குள் மௌனமாக இருந்தாள் — அவதாரத்தை அம்பலப்படுத்தாமல் ஒரு முக்காட்டைப் போட்டுக் கொண்டிருந்த சாரதை.

உள்ளே யிருந்து மதனி மெல்லக் குரல் கொடுத்தாள். ''சாரதா கொழந்தை. அவளுக்கு என்னத்துக்குத் தத்துவ போதனை யெல்லாம். அதுக்கு இன்னும் வயசு வரவேண்டாமோ?''

''மன்னி அவர்களே! நீங்க வெண்ணெய் கடைஞ்சு எடுக்கறேளே, காலங்கார்த்தாலே எடுப்பேளா, மத்தியான்னம் எடுப்பேளா?'' என்று மலர்ந்து கேட்டார் ராமகிருஷ்ணர்.

கேள்வியின் பொருள் மதனிக்கு விளங்க வில்லை. ''நன்னு யிருக்கே, மத்தியானத்திலே வெண்ணெய் எடுக்க முடியுமோ? கடையறச்சேயே சூடேறி வெண்ணெய் உருகிடுமே! காலங்காத்தாலேதான் கடைவா'' என்ருள் மதனி.

''அப்படிச் சொல்லுங்கோ. வயசு ஏறி லௌகிகச் சூடெல்லாம் ஏறின பிற்பாடு மனசைக் கடைஞ்சு பக்தியை எடுக்கறது கஷ்டம். உலகச் சூடு ஏற ஆரம்பிக்கிறதுக்கு முன்னேயே, கொழந்தைப் பிராயத்திலேதான் பக்தியைக் கடைஞ்சு எடுக்கணும்'' — மற்றவர்களைப் பார்த்து ராமகிருஷ்ணர் தொடர்ந்தார்: ''மன்னி மட்டுமில்லை. பொதுவா எல்லோருமே பாலியத்திலேயும் யௌவனத்திலேயும் லௌகிகமா இருந்துட்டு, வயோதிகத்திலே பகவான் கிட்டத் திரும்பினுல் போறும்னுதான் நினைக்கிரு. இது அடியோடு தப்பு. பகவானை முதலிலே தெரிஞ்சுண்டுட்டு அப்புறம்தான் உலகத்துக்குத் திரும்பணுமே தவிர, உலகத்திலே திரிஞ்சுட்டு பகவான்கிட்டே திரும்ப முடியாது. பகவானைத் தெரிஞ்சுண்ட அப்புறம் லோகத்தைப் பார்த்தாத்தான் அதன் உண்மை ஸ்வரூபம்

தெரியும்; அதுக்கும் நல்லது செய்யலாம், தனக்கும் நல்லது பண்ணிக்கலாம்.''

''பகவானைத் தெரிஞ்சுண்டா, அப்புறம் லோகமே மாயையின்னு வெறுத்துடுவாளாமே? அதுக்கு எப்படி நல்லது செய்யறது?'' என்று கேட்ட பைன் வீட்டுப் பெண், சட்டென்று தன் நாக்கைக் கடித்துக் கொண்டு, ''நீங்க ஒருத்தர் என்னமோ காளி மாதாவைப் பார்த்த பிற்பாடும் எங்ககிட்டல்லாம் பிரியமாவே இருக்கேள்! எல்லாரும் உங்களைப்போல இருப்பாளா?'' என்று முடித்தாள்.

''சரி, நான் சொல்றதைக் கவனமாக் கேளுங்கோ. உலகம் வெறும் ஸைபர் தான். இதையே பெரிசா நினைச்சு உழண்டுண்டு இருந்தா ஒரு நாளும் நிம்மதி, திருப்தி, சந்தோஷம், ஆத்ம சாந்தி கிடையாதுதான். என் ஜகன் மாதாவை அநுபவிச்சா, அந்த அநுபவ நிலையிலே உலகம் ஸைபராகத்தான் ஆயிடறது. ஜகன்மாதாங்கிற ஒண்ணே ஒண்ணுதான் உண்மையா இருக்குன்னு தெரியறது. ஆனா அந்த அநுபவ நிலையிலிருந்து இறங்கி உலகத்தைப் பார்க்கச்சே அந்த ஒண்ணின் நினைவும் இருக்கு; இந்த ஸைபரின் நினைவும் பக்கத்திலேயே வரது. வெறும் ஸைபர் ஒண்ணுக்குப் பக்கத்திலே வந்தா 'பத்து'ன்னு ஆயிடறதோன்னோ? அப்படியே சர்வேசுவரியோட சேர்ந்த நினைவிலே உலகத்தைப் பார்க்கச்சே அதுக்கும் மதிப்பு வந்துடறது. இப்படிப் புரிஞ்சுண்டா உலகத்துக்கும் மதிப்புத் தந்து அதற்கான நல்லதைச் செய்ய முடியறது. ஆகக் கூடி முதல்லே பகவானைத் தெரிஞ்சுண்டுட்டு அப்புறம் லோக விவகாரத்துக்குத் திரும்பறதுதான் முறை. என்ன பிரஸன்னு மாமி, நான் சொல்றது சரிதானே? நீங்க பல ஊரெல்லாம் போய்ப் பார்த்தேளே! அப்ப முதல்லே ஒரு சத்திரத்தைத் தேடிப் பிடிச்சு உங்க பெட்டி படுக்கையை யெல்லாம் இறக்கிட்டுத் தானே, நிம்மதியா ஊர் சுத்தினேள்? இந்த உலகத்துக்கு வந்திருக்கிற நாமும் முதலில் நம் மனசும் உடைமைகளும் தங்கியிருக்கிறதுக்கு மகாகாளி என்கிற விடுதியைப் பிடிச்சுக்கணும்; அப்புறம் லௌகிகத்திலே வேடிக்கை பார்க்கலாம். ஆனா, ரொம்பவும் வேடிக்கையிலே இறங்கிப் பொழுதைக் கழிச்சுடக் கூடாது. அப்பப்போ விடுதிக்குப் போய் 'ரெஸ்ட்' பண்ணிக்கத்தான் வேணும். இல்லாட்டா புகை சூழ்ந்த அறையிலே எவ்வளவு ஜாக்கிரதையாயிருந்தாலும் கொஞ்சமாவது கரி ஏறுகிற மாதிரி, நம்மேலே மாயை கரியைப் பூசிடத்தான் செய்யும்...''

ராமகிருஷ்ணரை இடைமறித்தாள் பிராம்மணி. ''அப்பனே! இப்போ சொன்னியே, அது நூற்றிலே ஒரு வார்த்தை. புகை மூடின ரூமிலே எத்தனை ஜாக்கிரதையா யிருந்தாலும் உடம்பிலே கரி ஏறத்தான் செய்யும். ஸ்திரீ சங்கம் என்பது இப்படிப் பட்டதுதானே?''

அவரைப் பாக்குவெட்டியில் பிடித்து விட்டதாக இறுமாந்து பேசிய அவளுக்குப் பதிலாகப் பாக்கின் உவமையையே கூறினார் ராமகிருஷ்ணர்: ''பைரவியம்மா! நீங்க சொல்றது வாஸ்தவம் தான். ஸ்திரீ சங்கத்துக்குச் சபலிக்கச் செய்யும் சக்தி ஜாஸ்திதான். ஆனா மனசு பச்சைப் பாக்கா இருக்கற வரைக்கும்தான் அது இந்தச் சபல ஓட்டிலே ஒட்டிண்டிருக்கும். என் அம்பிகையோட கதகதப்பான கிருபைக் கிரணம் உள்ளே புகுந்து, மனசை உலர்த்தி, காய்ஞ்ச பாக்காக்கி விட்டால், மேல் தோலிலிருந்து அது அப்படியே பிரிஞ்சு விடும். ஆட்டிப் பார்த்தா அப்போ பாக்குப் பழத்துக்குள்ளே பருப்பு தனியாக ஆடும். மனுஷ மனசை ஒரு இரும்பு ஆணியா வெச்சுப்போம். பத்தினிங்கிற ஒரு சின்ன காந்தத் துண்டை — பத்தினிக்குக் 'காந்தா'ன்னே பேர் — கிட்டக் கொண்டு வந்தா மனசு அதிலே போய்த்தான் ஒட்டிக்கும். வாஸ்தவம். ஆனால் இந்த உலகங்களை எல்லாம் ஒண்ணையொண்ணு ஆகர்ஷிக்கும்படியா பண்ணிண்டிருக்கே ஒரு பெரிய காந்தம், என்னோட சர்வேசுவரி என்கிற காந்தம் — அந்தக் காந்தத்துக்கு முன்னாடி இரும்பு ஆணியை உருட்டி விட்டா அப்புறம் இந்த இத்தனூண்டு பத்தினிக் காந்தம் என்ன பண்ணும்?''

பைரவி தனிமையில் குடைந்தபோது ராமகிருஷ்ணர் கம்பீரமாக மௌனம் சாதித்தார். இப்போது அவள் பொதுச் சபையில் குடைந்தபோது கம்பீரமாக, ஆனால் மறைமுகமாக, பதில் சொன்னார். அவள் அந்த எளிய மக்களின் உள்ளத்தில் விஷம் ஏற்றிவிடக் கூடாதல்லவா?

பைரவியை நேருக்கு நேராகப் பார்த்துக்கொண்டு, ''ஸ்திரீ — புருஷ வித்தியாசமே தெரியாத பரமஹம்ஸாளுக்கு எந்தச் சூழ்நிலையிலும் ஆபத்து இல்லை.



அவா அஞ்சு வயசுக் குழந்தை மாதிரி'' என்றார் பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்.

அவரை ஐந்தாம் வயசில் மணந்த சாரதை உடலால் ஐந்து வயசுக்காரியாகவே நின்று கொண்டு இப்போது மனத்தால் தாயாக அவாவுகிறாள். இவர் முப்பத்திரண்டாவது வயதிலும் ஐந்து பிராயப் பிள்ளையாக மட்டுமே இருக்கிறார். தாம் காளி மாதாவின் பிள்ளை என்பது தவிர ஒன்றும் தெரியாத முப்பத்திரண்டு வயதுக் குழந்தை இது.

''கதாயி, நீ என்ன அழகா எல்லாம் சொல்றே! நீ எங்களோடேயே இருந்து நிறைய நிறைய உபதேசம் பண்ணிண்டே இரு. நாங்க தெரிஞ்சுக்க வேண்டியது ரொம்ப இருக்கு...'' என்று உருக்கத்துடன் கூறினாள் தனியம்மாள்.

''ரொம்பத் தெரிஞ்சுக்க வேண்டிய அவசியமே இல்லேம்மா. நான் கூட ஒண்ணுமே தெரிஞ்சுக்காம இருக்கச்சே தான் அம்பாள் அநுக்கிரகத்தை அடைஞ்சேன். என் அம்மா கிட்ட பக்தியா யிருக்கணும், அவள் விட்ட வழின்னு இருக்கணும். இதை மட்டும் தெரிஞ்சுண்டு அநுஷ்டானத்திலே கொண்டுவந்துட்டாப்போறும். பிறத்தியாருக்கு உபதேசம் பண்ணறவா நிறைய சாஸ்திரமெல்லாம் படிக்கணும். ஏன்னு, மற்றவா பல தினுசு சந்தேகம் கேப்பா. அதையெல்லாம் போக்கணும். ஆனு, அவாவாளும் தான் சம்ஸாரத்துலே ருந்து விடுபடறதுக்குக் கொஞ்சம் படிச்சுத் தெரிஞ்சுண்டு அதை ஒருமுகமாக அநுஷ்டிச்சாலே போதும். தற்கொலை பண்ணிக்கிறதுன்னு ஒரு சின்ன ஊசியை முழுங்கினுக்கூடப் போதும்; ஆனு இன்னெருத்தனைக் கொலை பண்ணறதுன்னு கத்தி, கபடா எல்லாத்தையும் தூக்கிண்டுன்னு போக வேண்டி யிருக்கு? கொலைக்குச் சொல்கிறதுதான் அமிருதமாகிறதுக்கும் பொருந்தறது'' என்று கூறிச் சிரித்தார் ராமகிருஷ்ணர்.

சிரிப்பு பலத்துக் கொண்டே வந்தது.

ஏன் இப்படிச் சிரிக்கிறார்?

அவருக்குப் பைத்தியம் என்று தக்ஷிணேசுவரத்துக்காரர்கள் சொன்னது மெய்தானே?

ராமகிருஷ்ணர் பகபக்வென்று சிரித்துக்கொண்டிருந்தார்.

வெளியிலே பெருங் காற்று சுழித்துக் கொண்டு சிரித்தது. இடிகள் கர்ஜித்து அட்டகாசம் செய்தன. மின்னல்கள் பளிச்சிட்டு, வானமா தேவியின் சிரிக்கும் உதடுகளாக நெளிந்தன.

ராமகிருஷ்ணரின் சிரிப்பு ஓய்ந்தது.

முத்து முத்தாக அவரது கண்களிலிருந்து கண்ணீர் உதிர்ந்தது.

பெருங் காற்று நின்றது.

இடிகள் ஓய்ந்தன.

மின்னல்கள் மறைந்தன.

மழை பெய்ய ஆரம்பித்தது.

எல்லோரும் அப்படியே தூங்கிப் போனார்கள்.

ராமகிருஷ்ணர் பாவ சமாதியிலே ஆழ்ந்தார்.

**கா**லையில் மழை ஓய்ந்திருந்தது.

சமாதி கலைந்த ராமகிருஷ்ணர் காலைத் தென்றலைப் போலவே காலை வீசி பூதிர் கால் என்ற கால்வாய்க்குச் சென்றார்.

எங்கும் தண்ணீர் ஊறிக் கிடந்தது.

மழையாகப் பொழியா விட்டாலும் வானில் அப்பிக் கிடந்த முகில் கூட்டத்தில் நீரின் செறிவு பிதிர்ந்திருந்தது.

அது, இரவு முழுவதும் உபதேச மழை பொழிந்த ராமகிருஷ்ணரின் உள்ளத்துக்குள் இப்போதும் உபதேச உண்மைகள் மழைச் சூல் கொண்டிருப்பது போல் இருந்தது.

ஏரி விளிம்பு வரை நிரம்பி யிருந்தது. ஏரிக் கரை யெல்லாம் நீர் ஊறிய சொதசொதப்பு.

தெரு மண்ணிலும் ஜலம் ஊறி யிருந்தது.

மரங்கள் பச்சைப் பசேலென்று மரகத மயமாக நனைந்து நின்றன.

புற்கள் ஜல பிந்துக்களைக் கிரீடமாக அணிந்து ராஜ கம்பீரமாக நின்றன. சாய்ந்து கிடந்த புற்களும் கூட ஸோபாவில் சாய்ந்த ராஜாக்களைப் போல ஒய்யாரமாகத் தோன்றின.

பூமி, அதில் தோன்றிய செடி கொடி மரங்கள், பூமியின் சூழல், வானம்— எங்கும் ஈரம் பாரித்துக் கிடந்தது.

மரத்திலிருந்து நீர்த் துளிகள் ராமகிருஷ்ணர் மீது ஜிலு ஜிலுவெனக் குலுங்கி விழுந்தன.

ராமகிருஷ்ணரின் உடல் குலுங்கியது. அந்த அநுபவத் தருவின் கண்களிலிருந்து நீர்ச் சொட்டுக்கள் விழலாயின.

விக்கி விக்கி அழுதார்.

நீர் எடுப்பதற்காகக் கும்பத்துடன் வந்த சாரதை அவரைப் பார்த்தாள்.

இதயத்திலே ஆனந்த கும்பம்; இடுப்பிலே நீர்க் கும்பம் — அவளுக்குள்ளும் வெளியும் ஒரே ஈரம் ஊறிக் கிடந்தது.

அவரையே பார்த்தபடி அசையாமல் நின்றாள். (தொடரும்)





# சடங்குகள்



## ஜகத்குரு காஞ்சிகாமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

**நா**ன் சொல்கிற கர்மாநுஷ்டானங்கள், பூஜை முதலியனவெல்லாம் 'வெறும்' சடங்கு தானே என்று கேட்பவர்கள் இருக்கிறார்கள். ஆத்மாநுபவம் என்பது உள் விஷயம். இவை எல்லாமோ வெளிக் காரியங்கள். இவை எப்படி ஆத்மாநுபவத்துக்கு உதவும் என்பது அவர்களுடைய சந்தேகம்.

உண்மையில் ஆத்மாநுபவம் பெற்றுவிட்டால் சடங்கே தேவையில்லைதான். ஆனால் உண்மையான ஆத்மாநுபவம் நமக்கு வந்து விட்டதா, அதற்கு நாம் பக்குவப்பட்டுவிட்டோமா என்று அந்தரங்கசுத்தமாகப் பார்த்துக் கொண்டால் நாம் அதற்கு எவ்வளவோ தொலைவில் நிற்கிறோம் என்று தெரியும். எத்தனையோ ஜன்மாக்கள் எடுத்து, எத்தனையோ கர்மாக்களைச் செய்து, அத்தனை பூர்வ வாசனைகளாலும் நம் உண்மை ஸ்வரூபமான ஆத்மானந்தத்தை மூடிக் கொண்டிருக்கிறோம். சத்கருமம் செய்தும், சத்வாஸனைகளைப் பெருக்கிக் கொண்டும் பழைய துஷ்கர்மங்களையும், துர்வாஸனைகளையும் போக்கிக் கொள்ள வேண்டும். பிறகு கர்மா தானே நின்று போகும். ஆத்ம தியானத்தில் இறங்கலாம். அதுவரையில் 'வெறும்' சடங்கு என்று சொல்கிற கர்மங்கள், பூஜை எல்லாம் நமக்குப் பிரயோஜனமானவையே.

எனவே, சாமானிய மக்கள் சாஸ்திரப் பிரகாரம் விதிக்கப்பட்ட எல்லாச் சடங்குகளையும் வழுவற அநுஷ்டிப்பதே நல்லது. இவற்றால் என்ன பயன் என்பவர்களுக்கு நிதரிசனமாகச் சில பலன்களைக் காட்டலாம். இன்னின்ன கர்மங்களை இப்படியிப்படி தவறின்றிச் செய்ய வேண்டும் என்று ஒருவன் கூர்ந்த கவனத்துடன் செய்கிறபோது அவன் மனசில் ஐகாக்கிரியம் (ஒருமுகப்படுத்துதல்) ஏற்படுகிறது. பிறகு ஆத்ம தியானம் செய்வதற்கு இவ்வாறு மனம் ஒருமைப்படுவது அத்தியாவசியமாகும். அதோடு சாஸ்திரம் கூறுவதுபோல்தான் இருக்க வேண்டும் என்று அவன் உறுதியாக இருப்பதால் ஓர் ஒழுங்குக் கட்டுப்பாட்டுக்கு (Discipline) உட்படுகிறான். இதைச் சாப்பிடக் கூடாது, இந்தப் போக்கிய வஸ்துக்களை அநுபவிக்கக் கூடாது என்றெல்லாம் சாஸ்திரப் பிரகாரம் நடப்பது வைராக்கியத்துக்குப் பெருத்த சகாயம் செய்கிறது. எத்தனை சிரமங்கள் இருந்தாலும் குற்றம் குறை இன்றிச் சாஸ்திரப்படி சடங்குகளைச் செய்யும் போது சங்கல்ப பலமும் (Will-power) உண்டாகிறது. சொந்த அபிப்பிராயமில்லாமல் சாஸ்திரம் சொல்வதே வழி என்று இருப்பதால் அடக்கம், எளிமை எல்லாம் உண்டாகின்றன.

ஆக 'வெறும்' சடங்கு என்று சொல்லப்படுவதைத் தவறாமல் அநுஷ்டிப்பதால் சித்த ஐகாக்கிரியம் (மன ஒருமைப்பாடு), கட்டுப்பாடு, வைராக்கியம், சங்கல்ப பலம், அடக்கம் இத்தனை நல்ல விஷயங்கள் உண்டாகின்றன; மொத்தத்தில் ஒழுக்கத்துக்கு (Morality) வழி உண்டாகிறது. நன்னடத்தையும் ஒழுக்கமும் இல்லாமல் ஆத்ம தியானமும், ஆத்மாநுபவமும் உண்டாகவே முடியாது. புத்தர் சடங்குகளை விதிக்கவில்லை. ஆனால் அவரும் ஒழுக்கத்தை — சீலத்தை — மிகவும் வற்புறுத்தினார். நேரு பஞ்சசீலம், பஞ்சசீலம் என்று சொல்லி வந்தாரே, அந்த சீலம் பௌத்தர்களுக்கு மிகவும் முக்கியம். வைதிக சடங்குகள் இல்லாமலே புத்தர் சீலத்தை மட்டும் வற்புறுத்தினார். பூர்வமீமாம்சகர்களோ, வைதிக கர்மங்களே போதும், ஈசுவரனைப் பற்றிக் கூடக் கவலைப்பட வேண்டாம் என்றார்கள். ஆனால் நம்முடைய சநாதன தர்மத்தில் சடங்குகள் (கர்மங்கள்), அவற்றின் மூலம் சீலம், அதோடு ஈசுவர பக்தி, பிற்பாடு ஆத்ம ஞானம் என்கிற ரீதியில் எல்லாம் இணைத்துத் தரப்படுகிறது. வெறுமே சீலம் வராது. பால் வேண்டும் என்றால் பசுவை வைத்துப் போஷிக்க வேண்டும். பசுவை வைத்துப் போஷித்தால் பால் கிடைப்பது மட்டுமின்றிச் சாணமும்தான் கிடைக்கும்; வைக்கோல் கூளமும்தான் சேரும். அப்படியே கர்மங்களைச் செய்தால்தான் சீலம் வரும்; அதோடு விரும்பத் தகாதவை என்று சிலருக்குத் தோன்றுகிற சில விளைவுகளும் உண்டாகலாம். சாணத்தையும் கூளத்தையும் சுத்தப்படுத்திவிட்டுப் பசுவைப் போஷித்து வருவதே புத்திசாலித்தனம். சடங்குகளின் உண்மைப் பயனை இவ்விதமே பெறவேண்டும்.

உண்மையான ஆத்ம தியானத்துக்குச் சடங்கு வேண்டாம் என்பது போல் ஈசுவரன் என்ற மூர்த்தியும் வேண்டாம்தான். ஆனால் அது உயர்நிலையில்தான். ஆரம்பத்திலேயே வேண்டாம் என்று இருக்க முடியாது. முதலில் ஈசுவரன் மிகவும் தேவை. அதற்கு எத்தனையோ காரணங்கள். குறிப்பாக ஒன்றைச் சொல்கிறேன். நன்மை எல்லாம் நிறைந்த மூர்த்தியாக நமக்கு ஓர் ஆதரிச உதாரணம் தேவைப்படுகிறது. தொன்றுதொட்டு ஈசுவரனை இப்படிப்பட்ட அனந்த கல்யாண குண மூர்த்தியாகத்தானே பாவித்து வந்திருக்கிறோம்? 'ஈசுவரன்' என்றவுடன் அவரிடம் கெட்ட குணம் ஏதுமே இருக்காது என்று தானே நமக்கு நிச்சயமாகத் தோன்றுகிறது? அழகு, கருணை, சக்தி, ஞானம் எல்லாவற்றிலும் பூரணமாக ஒன்று உண்டு என்றால் அது ஈசுவரன் என்ற கருத்துத்தான். மனோதத்துவப்படி நாம் எதை நினைத்துக்கொண்டேயிருக்கிறோமோ அதுவே ஆகிறோம். ஈசுவரனின் கல்யாண குணங்களையே எண்ணுவதால் நம்மிடமுள்ள தோஷங்கள் நீங்கி நாமும் நல்லவர்களாகிறோம்.

எனவே சடங்கு, பூஜை இவற்றால் உண்டாகிற மற்ற பலன்களோடு, அவை நம்மை நல்லவர்களாக்க மிகுந்த உதவி புரிகின்றன.



# அம்மா

ரா. கணபதி

## 8. அவதாரம் எனும் அரிய புதிர்

மானுட உடலை அடைந்துள்ள நானே பொருட்களின் மகேசுவரனாக அவற்றை ஆளுபவன் என்ற உயர்ந்த பாவத்தைப் புரிந்து கொள்ளாமல், அறிவற்றோர் என் அவதாரத்தை அவமதிப்பர் ...... ஆனால் பார்த்தா! மகாத்மாக்களோ எனில் எனது தெய்விக உள்ளியல்பைத் தேடிப் புரிந்து கொண்டு, மனத்தில் வேறு எண்ணமின்றி என்னையே பொருட்களின் ஆதி என்றும், அழிவற்றவன் என்றும் கண்டுகொண்டு பஜிக்கிறார்கள்.

- ஸ்ரீமத் பகவத் கீதை 9 - 11, 13

'பூதிர்கால்' என்ற கால்வாய் சலசல வென அரித்து ஓடும் மதுரத்வனி,

மரங்களிலிருந்து மழை நீர் சொட்டும் இனிய ஒலி,

மழையில் மலர்ந்த புது வாழ்வில் மகிழ்ச்சி கொண்ட பட்சிகளின் கலகல த்வனி,

தவளைகளின் கோஷ்டி சங்கீர்த்தனம்,

ஆகிய இந்த அழகிய ஓசைகளின் மத்தியில் பேசாமலே நின்றனர் ராம கிருஷ்ணரும், சாரதையும்.

ஆனால் அங்கு தம் அருமை மாமாவைத் தேடிக் கொண்டு வந்த ஹ்ருதயர் மௌனத்தைக் கலைத்து விட்டார்.

''என்ன மாமா, கண்ணெல்லாம் சிவந்திருக்கு. மூக்கை வேறே உறிஞ்சறேள். அழுதேளா? ராத்திரியும் அழுதேளா, என்ன சமாசாரம்?'' என்று வினவினார் ஹ்ருதயர்.

அவ்வளவுதான், ராமகிருஷ்ணர் உற்சாகமாகப் பேசலானார்:

''ராத்திரி ஏன் அழுதேன் தெரியுமா? அவாவாளும் தங்களைக் கடைத்தேற்றிக் கொள்ளக் கொஞ்சம் படிப்பு போறும்; உபதேசம் செய்யறவாளுக்குத்தான் நிறைய படிப்பு வேணும்னு சொன்னேனே? நான் இத்தனை பேருக்கு இத்தனை உபதேசம் பண்ணறேனே, நான்மட்டும் என்ன பெரிசா படிச்சுட்டேன்? படிக்கா விட்டாலும் என் வழியா உபதேசம் தரணும்னு அம்மா சங்கல்பம் பண்ணிட்டா. அதனாலே மேகம் வர்ஷிக்கிறமாதிரி என்னைப் பேச வைக்கிறா. நானா பேசறேன்? களஞ்சியத்திலேருந்து வேலைக்காரன் படிப்படியா நெல்லை அளந்து போட்டுண்டேயிருப்பான். நெல் சரிஞ்சுண்டேயிருக்கும். இவன் அளந்து போடுவான். ஆனா இவனா நெல்லைப் பண்ணினான்? அல்லது அந்த நெல் இவனுக்குத்தான் சொந்தமா? இந்த சர்வசாதாரண கதாயியை எங்கம்மா கருவியாக்கிண்டு இப்படிப் பேச வைக்கிறாளேன்னுதான் ராத்திரி சிரிச்சேன்; அழுதேன்.

''இப்போ ஏன் அழுதேன் தெரியுமா? இதோ பாரு, எங்கே பார்த்தாலும் மழை ஜலம் ஊறிக் கிடக்கு. என்னோட சர்வேசுவரியும் இப்படித்தான் சர்வத்திலேயும் ஊ...றியிருக்கா. ஆமாண்டா ஹ்ருதே! எங்கம்மாவுடைய சைதன்ய விலாஸம் ஊறாமல் அண்ட பகிரண்டத்திலேயும் ஒரு பரமாணுகூடக் கிடையாதுடா. அதோ பாரு, மழை ஜலத்திலே முழுகிட்டு, உடம்பைச் சிலிர்த்துண்டு அந்தக்

காக்கா உக்காந்திருக்கே, அப்படித் தான் இந்த உலகம் முழுக்க, இதிலே இருக்கிற சாதுக்கள் துஷ்டாள், பசு பட்சி, மரம் மட்டை, மலே அலே எல்லாம் எங்கம்மாவோடே சக்திலே அப்படியே சிலிர்த்துண்டு இருக்காப்பலே எனக்குத் தெரியறது. நல்லது - கெட்டது, அழகு - கோரம், ஞானம் - அஞ்ஞானம், பிரேமை-துவேஷம், ஆஸ்திகம்-நாஸ்திகம் எல்லாத்திலேயும் எங்கம்மா தான் உயிருக்கு உயிரா ஊறிக் கிடக்கான்னு பிரத்தியட்சமாகப் பார்த்துட்டு ஆனந்தபாஷ்பம் கொட்டினேண்டா, ஹ்ருதே! வெள்ளையாயிருக்கிற மேகமே தான் கறுப்பா ஆகி, நிறமில்லாத மழையைக் கொட்டறது. அப்படியே எங்கம்மா கௌரியே மகா காளியாகி நிர்குண அநுபவத்தை மழையாக் கொட்டுவா. மழைக்கு நிறமில்லாட்டாலும் இத்தனை நிறமுள்ள செடியும் கொடியும் பூவும் காயும் அதிலேருந்து தானே வந்தன? அந்த மாதிரி நிர்குண அம்மாதான் இத்தனை குணங்களாவும் ஆயிருக்கான்னு பிரத்யட்சமா புரிஞ்சுண்டு அழுதேன். இந்த மழையிலே எத்தனையோ தாவரங்களுக்குக் கிளுகிளுன்னு புதுசா உயிர் வந்திருக்கு; நண்டும் நத்தையும் மீனும் கொசுவும் தவளையும் களகளன்னு வளர்றது. கெட்ட கிருமி, நல்ல ஜீவராசி எல்லாம் ஒரே மழையிலே உண்டாறது. மழையிலே பச்சுனு உயிரும் தழைக்கிறது; காலராவும் உண்டாறது. சில பூச்சிகள் மழையிலே உண்டாகிறதுகள், சில பூச்சிகள் மழையிலேயே செத்தும் போறதுகள். எனக்கு இந்த மழை பரப்பிரம்ம சக்தியாகவும், மகா மாயையாகவும் இருக்கிற எங்கம்மா காளியாவேதாண்டா தெரியறது!''

ராமகிருஷ்ணர் பேசவே முடியாமல் பரவசத்தில் திணறினர்.



......நந்தம்மை ஆளுடையாள
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையே!

என்று மாணிக்கவாசகரும் மழையைத் தேவியின் திரு வடிவமாகவே பாடினர்.

ராமகிருஷ்ணருக்கு பாவ சமாதி கூடிவிட்டால் சிலசமயங்களில் தடாலென்று விழுந்துவிடுவார். அவரது உடம்பு விரைத்துப் போகும். இப்போது இவ்வாறு நடந்துவிடப் போகிறதே என்று ஹ்ருதயர் பயந்தார்.

ஆனால் ராமகிருஷ்ணரோ பரம சாந்தராக, சற்றே காய்ந்திருந்த ஓரிடத்தில் போய் அமர்ந்து கொண்டார். ஆனந்த ரூபியாக விளங்கினர்.

மாமாவையும் மாமியையும் தனியே விட்டுவிட்டு ஹ்ருதயர் நகர்ந்தார்.

அவர்கள் மௌனமாக இருக்கும் போதே, இத்தொடருக்கு ஜீவாதாரமான சில சர்ச்சைகளை நாம் கவனித்து விடுவோம்.

எல்லாவற்றுக்குள்ளும் 'எங்கம்மா' தான் ஊறிக் கிடக்கிருள். உண்மை, குணம், குறி, கிரியை ஏதுமே இன்றித் தான் பரப்பிரம்மம் கிடந்தது. அதிலே எப்படியோ சிருஷ்டி என்கிற ஒரு சிந்தனை வந்தது. அந்தச் சிந்தனைக்குத் தான் மகா மாயை என்று பேர். அது தான் 'எங்கம்மா'. ஒன்ருன பிரம்மம் 'எங்கம்மா'வான தன் சக்தியைத் தானே உணர்ந்து பலவாகத் தோற்றம் எடுத்தது. அப்படித் தோன்றும்போதே, இந்தப் பலவற்றிலிருந்து ஒன்றுக்குத் திரும்பி ஒன்றுகிற ஞானத்தையும் தோற்றுவித்தாள் 'எங்கம்மா'. பலவாகத் தோன்றும் உலகைக் கடந்து ஒன்றேயான அகண்ட ஆன்மாவில் ஜீவன் பிரவேசிப்பதற்கு அவள் வழி வைத்திராவிட்டால் ஜீவர்கள் விடுபடுவதற்கு முடியாமலே அல்லவா போயிருக்கும்? ஆனல் மகாமாயையாகத் தோன்றும்போதே, மகா காருண்யாசாலினியாகவும், மகா ஞானம்பிகையாகவும் அவள் தோன்றினள்.

எல்லாவற்றுக்குள்ளும் தான் ஊறியிருந்தாலும், எல்லாவற்றையும் அந்த உள்ளுக்குள் அவள் முழுக்கிக் கொள்ளவில்லை; மேற்பரப்பில் பெரும்பான்மை ஜீவர்களிடம் 'மனம்' என்பதாக ஒன்றைச் சுதந்திரச் சொத்து போல் கொடுத்து, அந்த மேல்மட்டத்திலேயே அவர்களை மிதக்க விடுகிருள். மனம் இருக்கிற வரையில் எண்ணங்கள், காரியங்கள் இருந்து கொண்டுதான் இருக்கும். எண்ணமும் காரியமும் உள்ளளவும் சம்ஸாரத்திலிருந்து விடுபட்டு எண்ணமற்ற, செயலற்ற, சாசுவத நிலைக்குத் திரும்ப முடியாதுதான்! இவ்வாறு மன மாயையால் பிறந்து பிறந்து இறந்து கொண்டிருப்பவர்களை விடுவிக்க வழிகாட்டுவதற்காக அவளே அவதாரங்கள் கொள்கிருள். எல்லாமே 'எங்கம்மா' என்ருலும், இந்த அவதார வியக்திகள் விசேஷமாக 'எங்கம்மா' ஆவர். தம்மை மறந்துள்ள பல 'எங்கம்மா'க்களுக்குத் தங்களை உணர்த்த வந்துள்ள சில 'எங்கம்மா'க்களே அவதாரங்கள். மற்ற ஜீவராசிகளுக்குத் தனி மனம் என்று ஒன்று சுதந்திரமாகச் செயல்படுவது போல் அம்பாள் வேடிக்கை காட்டுகிருள். வேடிக்கைக்கு ஆளாவதும் அவளே தான்! தனி மனத்தினல் சுயப் பற்று என்ற ஒன்றை உண்டாக்கிக் கொண்டு, அதற்காகக் காரியங்களைச் செய்து, கர்மங்களை அனுபவிக்கப் பிறந்து பிறந்து சாகிருள் எண்ணிறந்த ஜீவராசிகளாக.

ஜீவனின் மனம் என்பது தவிர அவளுக்கென்றே ஒரு மனம் இருக்கிறது. அதில் ஜீவமனத்துக்கு இருப்பதுபோன்ற சுயப்பற்று இம்மியும் கிடையாது. அம்பிகையின் மனத்தில் பரநலம் என்ப தொன்றே உண்டு; அநுக்கிரகம் ஒன்றே உண்டு. ஜீவ மனத்தின் சம்பந்தமில்லாமல், நேரே இந்த அநுக்கிரக மனத்திலிருந்து அவதார வியக்திகளை உண்டாக்கி அனுப்புகிருள். அவர்கள் பரநலமே செய்கிருர்கள்.

ராமகிருஷ்ணரும், சாரதையும் இப்படி எங்கம்மாவின் அநுக்கிரக மனத்திலிருந்தே கறந்த பாலைக் கறந்தபடி கொடுப்பதுபோல் நேராக வந்தவர்கள்.

'ராமகிருஷ்ணரே அம்பாளின் அவதாரம் எனில் அவர் எதற்காகப் பக்தி செய்தார்! அவரும் ஏன் அம்பாளின் தரிசனம் கிடைக்காமல் தவித்தார்? ரஸ கனமாகத் தரிசனம் கிடைத்த போது அவரது உடலால் அதைத் தாங்க முடியாமலிருந்தது ஏன்?

'சாரதை அவதார வியக்தி எனில் அவளுக்குப் பல விஷயங்கள் தெரியாமலிருந்தது ஏன்? அவள் தான் ஓர் அவதாரம் என்று உணர்ந்த சந்தர்ப்பங்கள் அரிதாகத்தானே காணப்படுகின்றன?'

— இந்தத் தொடர் தொடங்கியபின் சிலருக்கு இந்த ஐயங்கள் எழுந்திருக்கின்றன. விதண்டாவாதம் செய்கிற நாஸ்திகர்களைப் பற்றி நமக்குக் கவலை இல்லை; ஆனல் ஆஸ்திகர்களின் உண்மையான ஐயங்களைக் கூடியமட்டும் தீர்க்கப்

பார்ப்பதே கடமை. எனவே, அவதார ரகசியங்களை நாம் முற்றிலும் அவிழ்க்க முடியாதாயினும் ஓரளவுக்கு விடை கண்ட பின்னரே மேலே தொடருவது யுக்தமாகும்.

''தூய பசும் பொன்னைக் கொண்டு நகைகள் செய்ய முடியாது. அது மிகவும் மிருதுவானது. எனவே, அதில் சிறிது செம்பைக் கலந்து பிருவாக்கியே நகை செய்வார்கள். இவ்வாறே பூரண ஞானப் பொன்னுக இந்த உலகில் ஒருவர் உலவி உத்தாரணம் செய்ய முடியாது. அதில் சிறிதே மாயைச் செம்பைக் கலந்துதானுக வேண்டும்'' என்பது ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு.

ஒரு குறிப்பிட்ட வேகத்தை ஒரு வஸ்து கடந்துவிட்டால் அதன்பின் அதனுல் பூமியின் ஆகர்ஷண சக்திக்கு உட்பட்டிருக்க முடியாது. அது விண்வெளிக்குத் தாவிவிடும். இவ்வாறே பூரண தெய்விகத்தால் இந்த உலகில் மனித உடல் தரித்து இருக்க முடியாது போலும். எனவே, எண்ணற்ற ஜீவர்களாக வந்து தனித் தனி மனங்களைக் கனத்த போர்வையாகப் போர்த்தித் தன்னையே அவித்துக் கொள்ளும் பராசக்தி, அவதார வியக்தியாக வரும் போதும் தனது நேர் மனத்துக்கு மேல் பரப்பில் ஒரு மாயா மனத்தைப் போர்த்திக் கொள்கிருள். ஆனுல் இது கனத்த போர்வை அல்ல. சல்லாத் துணிதான். கறந்த பால்தான். ஆனுல் அதன் மேலும் பாலை மறைத்து ஒரு நுரை இருக்கிறதல்லவா? அப்படியே அவதாரங்களுக்கும் சிறிது மாயைப் போர்வை இருக்கும். கனத்த மாயையால் நாம் எப்போதுமே நம்முள் இருக்கும் பராசக்தியை மறந்திருக்கிருேம் எனில், அவ்தாரங்களும் மெல்லிய மாயையால் அதை மறந்தாற் போலிருப்பார்கள். அப்போது அவர்கள் செய்கிற காரியங்களைப் பார்த்து, 'இவர்களும் ஜீவ பாவத்தில்தானே இருக்கிருர்கள்' என்று சொல்வது முறையல்ல.

பொன்னேடு செம்பைச் சேர்க்கலாமே ஒழிய இரும்பைச் சேர்க்கமாட்டார்கள். சேர்த்தால் பொன்னின் தன்மை அடியோடு போய்விடும். அவ்விதமே அம்பாளின் வித்யா மாயையில் உலகத்தினருடைய அவித்யா மாயையின் அவ்வளவாகத் தோஷமற்ற குணங்கள் தாம் சேரும். காமம், குரோதம், பொய், புனைசுருட்டு, தனது பிரபாவத்தைத் தம்பட்டம் அடித்துக் கொள்வது இதெல்லாம் அவ்தார புருஷர்களின் அண்மையிலேயே வரா. ஏதோ சில சில்லறை மாயா குணங்களே அவர்களிடம் காணப்படுமே அன்றி, ஆழ்ந்த மோகமேதும் அவர்களிடம் இராது.

ராமகிருஷ்ணர் அவதாரமானுல் ஏன் பக்தி செய்தார், மற்ற சாதனைகள் செய்தார் என்பது ஒரு கேள்வி. ஓர் ஆதரிச பக்தனுக, ஓர் ஆதரிச சாதகனுக அவதரித்துக் காட்ட வேண்டும் என்று பராசக்தி திரு உள்ளம் கொண்டிருக்கக் கூடும். அப்போது அவள் சகலவிதமான பக்தி பாவங்களையும் நிகழ்த்திக் காட்டத்தானே வேண்டும்?

சாதாரண வியக்திகள் தங்களது கர்மத்தை அழித்துக் கொண்டால்தான் பகவத் தரிசனம் பெற முடியும். அவ்விதம் கர்மத்தை அழித்துக் கொள்ள எத்தனையோ அழுகை அழுதாக வேண்டும். இதை உணர்த்துவதற்காக ஓர் அவதாரம் கொண்ட ராமகிருஷ்ணர், பூர்வ கர்மம் இல்லாத போதும் அழுது காட்டி, தரிசனம் பெற்ருர்.

சாதாரண வியக்திகளின் உடலால் பக்தியின் உன்னத நிலையில் ஏற்படும் மகா பாவங்களைத் தாங்க முடியாது; ஆயினும் உடலையும் பொருட்படுத்தாது அந்த பாவங்களை விரும்பி ஏற்ருல் அவர்கள் பேரானந்தத்தில் முழுகுவர் என்பதை நேரில் காட்டுவதற்காகத் தேவியே ராமகிருஷ்ணராக வந்து, மனித தேகத்தால் தாங்க முடியாத பரவச அநுபவங்களை நுகர்ந்தாள்.

'ஒன்றும் தெரியாத எளியவளாக வாழ்ந்து உலகுக்கு அன்பை மலர்த்திக் காட்ட வேண்டும்' என்ற திருஉளக் கருத்துடன் சாரதையாகத் தேவி உருக் கொண்டிருப்பின், சாரதை எப்படி 'ஸர்வக்ஞை'யாக இருக்க முடியும்?

'நான் நாராயணன் என்பதையே மறந்து ஆதரிச மனிதனுக வாழ வேண்டும்' என்று கருதிப் பராசக்தி ஸ்ரீ ராமனுகப் பிறக்கவில்லையா? ஜீவர்கள் தாம் ஈசுவரனே என்று உணர வேண்டும் என்பது அத்வைதம். இங்கோ அதற்கு நேர்மாருக ஈசுவரனுன ராமன் தேவாதியரிடம், ''நான் என்னைச் சாதாரண மனிதனுகத்தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்ருன்.

புருஷ அவதாரங்களில் ராமனைப் போல், பெண்களில் சாரதை எனலாம். கதாதரரை 'ராம-கிருஷ்ணர்' என்பது சிவபெருமானை 'கௌரி — சங்கரன்' என்று சதியைச் சேர்த்துச் சொல்வது போலாகும். ஈசுவரனில் ஒரு பாதி அம்பாள் என்பதுபோல் 'ராமகிருஷ்ண' பெயரில் முதல் பாதி சாரதைக்கே விசேஷமாகப் பொருந்தும். ராமகிருஷ்ணர் கிருஷ்ணனுக, பிரேம ஸ்வரூபியாக இருந்தார், ஞான போதனை தந்தார், கிருஷ்

ணனைப் போலவே அவருக்குக் குடும்ப வாழ்வு விசேஷமாக இருக்கவில்லை. சாரதையோ ராமனைப் போல் குடும்பத்தில் இருந்துகொண்டு, அதற்காக வாழ்ந்தாள். குடும்பத்தில் இருப்பவர்களுக்கு நேர்மை, பொறுமை, அன்பு, ஒழுக்கம், தர்மம், சத்தியம் இவற்றை ஸ்ரீ ராமன் வாழ்ந்து காட்டியது போல் வாழ்ந்தாள். சாதாரணமான ஒரு குடும்பப் பெண் எப்படியிருக்க வேண்டுமோ அதைப் போதிக்கவே பராசக்தி அந்த வடிவத்தில் வந்தாள். அப்போது அதற்குப் போதுமான ஞானத்தை மட்டுமே வைத்துக் கொண்டாள். ஆசிரியர் பட்டதாரியாக இருந்தாலும்கூட முதல் வகுப்பு மாணவனுக்குப் பாடம் சொல்லித் தருவது என்றால் அதற்குரிய புஸ்தகத்தைத்தானே தாமும் வைத்திருப்பார்; அதைத்தானே அவரும் படித்துப் பார்ப்பார் ?

'அதெப்படி ஸர்வக்ஞையான தேவியால் பலவற்றை மறக்க முடியும்? பொதுவாக நாம் ஒன்றை மறக்க வேண்டும் என்று நினைக்கும் போதே அதன் நினைவு வரத்தானே செய்கிறது? எனவே, 'ஞாபகமாக ஒன்றை மறப்பது சாத்தியமல்லவே?' என்கிறீர்களா ? நம்மால் ஒன்றை 'ஞாபகமாக' மறக்க முடியாதுதான். ஆனால் சர்வேசுவரியால் சகலமும் முடியும். அவளால் ஒன்று முடியாதென்றால் அப்போது அவள் சர்வேசுவரியே அல்ல.

காளிதாஸன் எழுதிய சாகுந்தல நாடகத்தில் துஷ்யந்தன் சகுந்தலையை மறந்து போகிறான். காளிதாஸனே துஷ்யந்தனாக வேஷம் போட்டுக் கொண்டிருந்தாலும் சகுந்தலையை மறந்ததாகத்தான் நடித்திருப்பார். 'இவரே எழுதிய நாடகம் — இவர் எப்படி சகுந்தலையை மறக்க முடியும்?' என்று கேட்கலாமா? இந்தப் பிரபஞ்சம் முழுவதும் 'எங்கம்மா' எழுதுகிற நாடகம். அதில் தனது பிரபாவங்களைத் தானே மறந்தாற்போலவும் அவள் ஒரு பாத்திரம் தாங்கி நடிக்க முடியும். அவதார வடிவில் வரும் போது அவள் ஒரு குறிப்பிட்ட பாத்திரமாகவும் இருப்பாள்; ஒரொரு சந்தர்ப்பங்களில் சகல பாத்திரங்களையும் படைத்த ஆசிரியராகவும் தன்னைக் காட்டிக் கொள்வாள். துஷ்யந்த வேஷம் தரித்த காளிதாஸனிடமே திரை மறைவில் இன்னொரு பாத்திரம் தனது வசனங்களைக் கேட்டுக் கொண்டால் அவர் சொல்லியும் தருவார் அல்லவா? அப்படியே மறைவிலே மெய்யடியார்களுக்குத் தன் தெய்விகத்தை வெளியிட்டு அவர்களுக்கான மார்க்கத்தைப் போதித்தாள் சாரதை.

சர்வமும் சாத்தியமான ஈசுவர சக்தி, 'ராமகிருஷ்ணராகத் தோன்றி இத்தனை ஆண்டுகள் இப்படி இப்படி இருக்கப் போகிறேன்; சாரதையாகத் தோன்றி இத்தனை வருடங்கள் இந்தமாதிரி எல்லாம் வாழப்போகிறேன்' என்று சங்கற்பித்திருக்குமாயின், அதன் பின் அவர்களைப் பற்றி ஏன், எப்படி, எதற்காக என்றெல்லாம் நாம் துருவுவதில் பொருள் என்ன?

'ஒன்றும் படித்தறியா கதாயியாவேன்; படிப்பு இல்லாவிட்டாலும் தூய்மையாலேயே மகா காளியைத் தரிசித்து, அதன் பின் படிப்பறிவில் வராத பேரறிவை எல்லாம் பெற முடியும் என்று கதாயி மூலம் காட்டுவேன்' என்று பராசக்தி திருவுளம் கொண்டனள் போலும். தனக்குத் தானே நெற்களஞ்சியத்தைச் சரித்துவிட்டுக் கொண்டு அளந்து போட்டாள். அவளே ஒன்றும் தெரியாத சாரதையாக வந்து, படிப்பில் விசேஷமாக ஒன்றும் தெரியாமலே என்றும் அன்பில் வாழ எண்ணினாள். இந்த அவதாரத்தில் நெல்லை அதிகம் சரிக்கவும் இல்லை, அளக்கவும் இல்லை. ராமகிருஷ்ணரின் பக்தி பரவசங்களும் இவ் வாழ்விலே அடங்கித்தான் இருந்தன.

மல்லிகைப் பூ தானே நன்றாகத் திறந்து மலர்வது போல் சில அவதாரங்கள் தமது அவதாரத் தன்மையைத் தாமே நன்கு மலர்த்திக் காட்டும். வாமனனும் நரசிம்மனும் கண்ணனும் இப்படிப்பட்டவர்கள். தாமரையில் புற இதழ்களைப் பிறர் கையால் விரித்து மலர்த்துவது போல் பக்தர்கள் விரித்துப் பார்த்துப் பூரணத்துவத்தை அநுபவிக்கிற அவதாரங்களும் உண்டு. சங்கர பகவத்பாதர்கள், ராமகிருஷ்ணர் ஆகியவர்கள் இப்படிப்பட்டவர். சம்பகமோ முழு மலரான பின்னும் தன் இதழ்களைத் திறப்பதேயில்லை. மடலவிழாத ஒரு மொட்டின் தோற்றத்திலேயேதான் இருக்கும். நாம் மலர்த்த முற்பட்டாலும் பிய்ந்து போகும். சாரதாமணி இப்படித்தான் இருந்தாள். தோற்றத்தில் மடல்விழ்ந்து காட்டாவிட்டாலும் சம்பகத்தின் மணமாக அவளிடமிருந்து கமகமத்த அவதாரத் தன்மையைப் பக்தர் உலகம் புரிந்து கொள்ளும்.

மதிப்புக்குரிய ஒருவர் பின்கண்ட கருத்தைத் தெரிவிக்கிறார்: ''ராமகிருஷ்ணரும், சாரதையும் 'அவதாரம்' 'அவதாரம்' என்று திரும்பத்

திரும்ப எழுதாதீர்கள்! அவதாரம் என்று அப்பட்டமாகச் சொல்லிவிட்டால், அதன் பின் அவர்கள் செய்த எந்தக் காரியத்திலும் பெருமை இல்லை. சாதாரண மனிதர்கள் இப்படியெல்லாம் இருப்பதுதான் பெருமை.''

இந்தக் கருத்தில் நியாயம் இருக்கிறது. ஆனால் வெளிப் போராட்டங்களில் ஒரு பாத்திரம் எப்படி நடக்கிறது என்பதை விட, உட் போராட்டத்தின் எதிரெதிர்ச் சக்திகளைச் சமாளித்துச் சமநிலை அடைவதில்தான் மானுட பாத்திரங்களின் பெருமை வெளியாகிறது. உட்போராட்டம் என்பதாக எதுவுமே இன்றி, பிறந்த தினத்திலிருந்தே ராமகிருஷ்ணரும் சாரதையும் சத்ய—தர்ம—சாந்தி — பிரேமைகளின் மூர்த்தங்களாக இருந்தார்கள். அவர்களுக்குப் பிரகிருதி வேகங்களில் பிரதானமான சரீர இச்சை தினையளவும் ஏற்பட்டதில்லை. எத்தனையோ உட் போராட்டங்களுக்குப் பின்னரே சாதாரண மக்கள் பெறுகிற ஆத்ம சம்பத்துக்களை அவர்கள் சுபாவத்திலேயே அள்ளிச் சொரிந்து கொண்டு வந்திருந்தனர். பாலப் பருவத்திலிருந்தே அவர் பக்தி பரவசத்துக்கு மூர்த்தியானார்; அவளோ, சேவைக்கு ரூபகமானாள். இப்படிப் பட்டவர்களை மனமாயைக்கு ஆட்பட்டு சம்ஸாரத்தில் சுழன்று கொண்டே, எதிர் நீச்சுப் போட்டு வெற்றிகண்ட உன்னத மானுடர்களாக மட்டும் வருணிப்பது எப்படிப் பொருந்தும்?

அப்பட்டமாக அவதாரம் என்று எழுதாமல், வாசகர்களே தொனிப் பொருளாக உணரும்படி கோடி காட்டுவதில் இலக்கியச் சுவை அதிகம் இருக்கலாம். ஆனால் பக்திக்கு முன் உடல், பொருள், ஆவி அனைத்தையும் பலிதர வேண்டும் என்பது போல், இலக்கியச் சுவையையும் பலி தந்தால் அதுவும்கூடத் தகுமே!

இத்தனை விரிவான விளக்கமும்கூட சாரதா சரித்திரத்தின் இலக்கியச் சுவையைக் குறைப்பதாகத் தோன்றலாம்! எங்கம்மாவின் லீலா விபூதிகளில் ராமகிருஷ்ணர் திளைத்திருந்த பூதிர்காலுக்குத் திரும்பலாம்.

முதல் நாள் இரவு மழையில் கால்வாய் கரைக்கு மேலே வழிந்தபோது வெளியில் வந்த மீன்களில் ஒன்று நில இடுக்கு ஒன்றில் மாட்டிக் கொண்டிருக்கிறது! இப்போது தண்ணீர் வடிந்து விட்டது. இடுக்கிலே மாட்டிக்கொண்ட மீன் ஈரத்தில் தன் உயிரை இறுக்கிப் பிடித்துக் கொண்டு துடிக்கிறது.

ராமகிருஷ்ணர் ஒரே பரிவு மயமாக எழுந்திருந்து வந்தார்.

மீன் மாட்டிக் கொண்டிருந்த நிலப் பிளவு கால்வாய்வரையில் எட்டியிருப்பதைப் பார்த்தார். திருப்திப் புன்னகை புரிந்து கொண்டார்.

தமது கால் பெருவிரலால் அந்த இடுக்கிலேயே மீனை அங்குலம் அங்குலமாக நுந்தித் தள்ளிக்கொண்டு வந்தார். கடைசியில் மீனைக் கால்வாய்க்கே கொண்டு வந்துவிட்டார்!

பிரவாகத்தை அடைந்ததுதான் தாமதம். மீன் தன் வாலை வளைத்துஆனந்தக் குதியல் போட்டுக் கொண்டு அதற்குள் முழுகிவிட்டது. பூரித்து நின்றார் ராமகிருஷ்ணர்.

ஓர் அற்ப ஜீவனுக்கு இத்துணை பரிவு காட்டும் பதியைக் கண் பனிக்கப் பார்த்து நின்றாள் சாரதை. குடத்திலும் செம்பிலும் நீர் முகர்ந்து அவற்றை ஒன்றன் மேல் ஒன்றாக வைத்துக் கொண்டு வந்து நின்ற சாரதையை அவரும் ஒரு புதிய நினைவோடு பார்த்தார். 'இவளும் தன் இடத்தை விட்டு வெளிவந்து மாட்டிக்கொண்டிருக்கிறாள். இவளை இவளுடைய இடத்துக்கு நுந்தி நுந்தித் தள்ளவேண்டும்' என்று எண்ணி அவளை நேருக்கு நேர் பார்த்து நிர்மலமாகச் சிரித்தார் ராமகிருஷ்ணர்.

இரட்டைச் சல்லாவுடன் நிற்கிற அவதாரத்தின் ஒரு சல்லாவை எடுக்க முடிவு செய்தார். 'உலகத்தில் இத்தனை ரூபங்களையும் முக்காடாகப் போட்டுக் கொண்டு எங்கம்மா அவற்றின் இடுக்கால் என்னைப் பார்க்கிறாள்' என்று கூறியவர் அவர். அவற்றில் முக்காடிட்ட சாரதையும் ஒரு விசேஷமான எங்கம்மா எனக் கண்டார். அவளது விசேஷத்தைத் தம்மைக் கொண்டு மலர்த்திக் கொள்ளத் திரு உளம் கொண்டிருக்கிறாள் எனக் கண்டு மலர்ந்து சிரித்தார்.

அந்த அற்புதச் சிரிப்பைக் கண்ட சாரதைக்கு ராமகிருஷ்ணரிடம் ஒரு ஸ்வாதீனம் வந்தது. ''என்ன சிரிக்கிறேள்?'' என்று தன் மௌனத்தைக் கலைத்து, இனிக்கக் கேட்டாள்.

''உன்னை நீயாக்கறத்துக்குப் பாடம் ஆரம்பிக்கட்டுமா?'' என்று கேட்டார் ராமகிருஷ்ணர்.

''ஊம்'' என்று ஆமோதித்துத் தலையை ஆட்டினாள் சாரதை.

ஈரம் செறிந்திருந்த காமார்புகுர் நிலத்தில் பலர் விதைகளை நட்டனர். ஈரம் செறிந்த சாரதையின் நெஞ்சில் வித்தை நடத் தொடங்கினார் ராமகிருஷ்ணர். (தொடரும்)

# அம்மா



ரா. கணபதி

## 9. ஆசாரியக் கணவர் சிஷ்ய மனைவி

ஞான போதனையே வித்தைகளின் அரசு. அது அதிநுட்பமானது. பவித்திரமானது. உத்தமமானது. நேர்முகமாக அநுபவிக்கத் தக்கது. தரும மயமானது. கடைப்பிடிப்பதற்கு இனியது. என்றும் மாறாமலிருப்பது.

அதை உனக்கு உபதேசிப்பதற்காக மெய்ப்பொருளை அநுபவித்த ஞானிகள் வருவார்கள். அவர்களுக்குப் பணிவிடை செய்து, உபதேசத்தைப் பணிவுடன் உன்னிக் கேட்டு உய்த்துணருவாயாக!

--- ஸ்ரீமத் பகவத்கீதை 9, 2; 4, 34.

'தற்கொலைக்கு ஊசி போதும், பிறரைக் கொல்லக் கத்தி கபடா வேண்டும்; தன்னைத் தானே கடைத்தேற்றிக் கொள்ளச் சிறிது படிப்பறிவு போதும்; பிறருக்கு உபதேசிக்க நிறையப் படிப்பறிவு வேண்டும்' என்றவரல்லவா ராமகிருஷ்ணர்?

சாரதாமணிக்குக் கத்தியும் கபடாவும் வேண்டாம். ஆனால் எதிர்காலத்தில் அவளிடமிருந்து ஞான போதனை பெறவும் பலர் வருவார்கள். தம்மைத் தேடி நாஸ்திகர்களும், சந்தேகப் பிரகிருதிகளும் உட்பட ஏராளமானவர் வரப்போவது போல் இல்லை. சாரதையைத் தேடி வரப்போகிறவர்கள், தாமே விரும்பிப் 'பலி' யாகிறவர்கள். அவர்களைக் 'கொல்வதற்கு' — அதாவது, அவர்களின் அகங்காரத்தைக் கொல்வதற்கு — அவளுக்குச் சில சிறிய ஆயுதங்களையாவது தர வேண்டும் என எண்ணம் கொண்டார் ராமகிருஷ்ணர். அதற்கு அவளைத் தயார்ப்படுத்தவே போதனையைத் தொடங்கினார்.

ஆகா, சாரதாவும் ராமகிருஷ்ணரும் எத்தனை விதமான பாவன உறவுகளில் தொடர்பு கொண்டார்கள்? வெளிப் பார்வைக்குக் கணவன் — மனைவி; இவரது உள்ளுக்குள்ளோ மகன் — தாய் என்றே எண்ணினார்; அவள் உள்ளுக்குள்ளே தெய்வம் — அடியாள் என்று கருதினாள்; இப்போது குரு — சிஷ்யர்களாகிறார்கள். பிறகு இவர் பக்தராகவும் அவள் அம்பாளாகவும் ஆவதையும் பார்க்கப் போகிறோம்.

யாக்ஞவல்கிய மகரிஷி தமது தூய பத்தினி மைத்ரேயிக்கு உபதேசம் செய்த உபநிஷத காலம் மீண்டும் உயிர்கொண்டது. சாரதை காமார்புகுரில் சிறிது காலமே ஏட்டுக் கல்வி பயின்றாள். அக்காலத்தில் பெண்களுக்குத் தாய்மார்கள் சொல்லித் தருகிற பாடல்களிலேயே புராண இதிகாச போதனையும், பண்பு போதனையும் நடந்து விடும். தயிர் கடைந்து கொண்டே அம்மா பாடுவாள். குழந்தை கேட்டுக் கேட்டுக் கற்றுக் கொண்டு விடும்; அதன் மனத்தையும் கடைந்தாகி விடும். 'பாவுல்'கள் என்கிற நாடோடிக் கூட்டம் வீடு வீடாக வந்து யாசகம் கேட்கும்போது, அரிய பெரிய உபதேசங்களையும், கதைகளையும் பாட்டிலே தந்துவிட்டுப் போய்விடுவார்கள். 'யாத்ரா' எனப்படும் தெருக்கூத்துப் போன்ற நாடகங்களும் கல்வியை உள்ளடக்கியவையே. இவ்வாறு உழைப்பிலே குழைத்தும், கலையிலே இழைத்தும் வழங்கப்பட்ட கல்வியைச் சாரதையும் பெற்றிருந்தாள். இப்போது மகா குருவான பகவான் ராமகிருஷ்ணரிடம் 'படிக்க'த் தொடங்கினாள். சாரதைக்குப் பெரிய வேதாந்த, தந்திர, யோக சாஸ்திரங்களை ராமகிருஷ்ணர் போதிக்கவில்லை. கத்தி கபடாவே கிடையாது. எளிய போதனைகளையே தந்தார். அவள் ஓயாமல் உழைக்கிற உழைப்புக்கு ஊக்கம் தந்தார். அந்த உழைப்பிலேயே பல உவமைகளைத் தேடி உபதேசம் தந்தார். தனியாகப் புத்தகம், வகுப்பு, பாடம் என்றில்லாமல் உலகில் நிகழும் சகல சம்பவங்களுக்குள்ளும் பாடங்களை யாத்து அவளுக்குப் போதித்தார்.

"சாரதே! மழை ஜலத்தைப் பார்த்தியா, அது மேட்டு நிலத்திலே தங்கி நிற்கிறதே யில்லை. பள்ளமா இருக்கிற இடங்களைத் தேடித்தான் போய்த் தேங்குகிறது. அதுமாதிரிதான், தங்களை உசத்தியா நினைச்சுண்டு, தற்பெருமை

யும் கர்வமும் பிடிச்சவாகிட்டே ஈசுவர கிருபை நிற்காது; பணிவாக இருக்கிறவா கிட்டத்தான் அது தேங்கி நிற்கும்'' என்று படிப்புக்கு அக்ஷராப்பியாசம் தொடங்கினர்.

போதிக்கப்படாமலே, அவளுக்குப் பணிவும், அவர் உபதேசித்த மற்ற பல பண்புகளும் தெரியும். ஆனல் அந்தப் பணிகளேயும், பண்புகளேயும் பற்றி அவர் விளக்குவது போல் அவளுக்கு எடுத்துச் சொல்லத் தெரியாது. மல்லிகைப் புஷ்பத்திடம், 'உன்னுடைய சுகந்தத்தைப் பற்றி வியாசம் எழுது' என்றல் அதற்கு எழுதத் தெரியுமா? அப்படித்தான் இருந்தாள் சாரதை. ஆனல் எதிர்காலத்தில் பிறரை உத்தேசித்து அவள் சிறிது சிறிது விளக்கவும் அறிந்திருக்க வேண்டும் என்றே அவா போதனையைத் தொடங்கினர்.

நீரை ஏந்திக்கொள்ளும் பள்ளம் போலவே அவரது உபதேசத்தை ஏந்திக் கொண்டது சாரதையின் உள்ளம்.

அவர் சொன்னதை உன்னிப்புடன் செவிமடுத்த சாரதை, ''நீங்க சொன்னதிலேருந்து எனக்கு இன்னென்னுகூடத் தோண்றது...'' என்று கூறி அவரது முகத்தைப் பார்த்தாள் ஆர்வமாக. அவருக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லே. ''ஊம், ஊம், சொல்'' என்று ஊக்கி உற்சாகப்படுத்தினர்.

''ஜலம் பள்ளத்தை நோக்கிப் பாயறது. அதோ பாருங்கோ, அங்கெல்லாம் ஜலம் வற்றிக் கொண்டே இருக்கு. சூரியனின் கிரணம்தானே அந்த ஜலத்தை மேலே தூக்கிண்டு போறது? மனுஷ மனசு கீழேதான் போகும்; ஆனல் ஸ்வாமியோட அநுக்கிரகம் அதை மேலே தூக்கிண்டு...'' — மகா பெரிய அகத்துக்காரரிடம் தானும் பெரிய விஷயம் பேசுகிறேமே என்றெண்ணிக் கண்களே மூடிக் கொண்டாள் சாரதை.

மூடிய கண்களுடன், பாலாக விளங்கிய அந்த முகத்தில் சூரிய கிரணங்கள் இன்னெனப் படிந்தன.

''சபாஷ், சபாஷ், பலே பேஷ்!'' என்று ஆர்ப்பரித்தார் ராமகிருஷ்ணர். அற்புதமான சிஷ்யரைக் கண்டுபிடித்து விட்டால் குரு அடைகிற ஆனந்தத்துக்கு ஈடு உண்டா? சத்குரு கிடைக்க வேண்டும் என்று சிஷ்யன் ஏங்குவது போல் சத்தான சிஷ்யன் கிடைக்கவேண்டும் என்று ஏங்கும் குரவர்களும் உண்டே!

''சூரிய ரச்மி தன்னேத் தூக்கறதுக்கு ஜலம் எந்தத் தடையும் உண்டாக்கிக்கல்லே. ஆனல் பகவான் அநுக்கிரகம் கிடைக்க முடியாதபடி ஜீவன் எத்தனேயோ தடைகளே உண்டாக்கிக்கிறன். ஜனங்களுக்காக உழைக்கிறது, பகவானே நினேச்சுப் பிரார்த்திக்கிறது — இந்த இரண்டும்தான் தடையை விலக்கும்...''

சாரதை குறுக்கிட்டாள்: ''ராத்திரி கூடச் சொன்னேனே, 'உலகத்துக்காகவும் உழைக்கணும், ஆனு புகை மூட்டத்திலே இருக்கிற மாதிரி அதுலேயே இருந்துட்டா ஆபத்து, அப்பப்போ வீட்டை விட்டுட்டு மூணு நாளாவது ஏகாந்த தியானம் பண்ணணும்'னு...''

ராமகிருஷ்ணர் அவளே அகழ்ந்து விடுவது போல் பார்த்தார். இவள் உலகத்தை விட்டு மூன்று நாட்கள் ஏகாந்த தியானம் என்று அமர்ந்தால் என்ன ஆகும்? ஏக அந்தமாக, முடிவான ஒன்றேயாக அப்படியே ஒடுங்கிவிடுவாள்! இவள் உலகத்தில் இருக்க வேண்டியவள்தான்.

''ஆமாம், ஆனல் நீ வீட்டை விட்டுப் போகவே வேண்டாம். தினந்தோறும் வீட்டிலேயே தெய்வ ஞாபகத்தை விடாமல் தியானம் செஞ்சாலே போதும்'' என்றர் ராமகிருஷ்ணர்.

இருவரும் வீடுநோக்கி நடந்தார்கள். ''குடத்து மேலே செம்பை வெச்சுண்டு வருகிறே; என்னுடை பேசிண்டு இருக்கே; எதிரே வரதையெல்லாம் பார்க்கிறே. ஆனலும் குடங்கள் உருளாமலும் ஏதோ ஓர் உள் நினேவிலே அதைக் கவனிச்சுண்டேதானே இருக்கே! அப்படியேதான் காரியங்கள் எத்தனே இருந்தாலும் உள் நினேவு ஒண்ணு அம்பாளேச் சுற்றியே இருக்கணும். ஒரு கையினலே கம்பத்தை இறுக்கிப் பிடிச்சுண்டு, இன்னெரு கையை இஷ்டத்துக்கு வீசியபடி குழந்தைகள் கிறு கிறுன்னு சுற்றும் பாரு, அந்த மாதிரி ஒரே சமயத்திலே ஒரு கை சர்வேசுவரியிடமும், ஒரு கை உலகத்துக்குன்னும் பழக்கிக்கணும். அன்னன்னிக்கும் உலக வேலே ஒயறப்போ இரண்டு கையாலும் அம்பாளின் பாதார விந்தங்களே அழுந்தப் பிடிச்சுக்கணும்...''

வீடு வந்துவிட்டது.

சாரதை சமையற்கட்டுக்குப் போய் விட்டாள்.

அவர் சொன்னதெல்லாம் அவளுக்குள் பயிராகத் தொடங்கின. முதலில் அன்பைக் கொட்டி அவளது மனத்தை நன்ருக ஈரமாக்கி விட்டுப் பிறகு அவர் தூவிய உபதேச விதைகள் ஜம்மென்று முளேவிட்டன. விதை தூவிய பூமியும் மிக உயர்வானதாயிற்றே!

'லௌகிகத்தில் ஈடுபட்டவா மனசு ஈர நெருப்புக் குச்சி மாதிரி. ரொம்பத் தேச்சாத்தான் நெருப்பு வரும். சுத்தமான மனசைப் பட்டும் படாமலும் உரசினலே போறும், ஞான அக்னி

பிடிச்சுண்டுடும்' என்று ராமகிருஷ்ணர் கூறுவதுண்டு. சாரதை அப்படிப்பட்ட காய்ந்த குச்சியாக இருந்தாள்.

ஒரு விதத்தில் ஈரம், இன்னொரு விதத்தில் அடியோடு ஈரமின்மை! ஆம், பிறர் என்று வரும்போது ஈரம், சுயம் என்கிறபோது ஈரமின்மை!

மகான்கள் ஆயிரமாயிரம் மக்களுக்கு உபதேசிக்கிறார்கள். ராமகிருஷ்ணரும் எத்தனையோ பேர்களுக்கு உபதேசித்தார். ஆனால் உபதேசத்தை அப்படியே பிடித்துக் கொண்டவர் ஆயிரத்தில் ஒருவர்தாமே!

''மலய மாருதம் வீசறப்போ, வஜ்ரம் உள்ள மரங்களெல்லாம் அந்தக் காற்றை உள்ளுக்குள்ளே வாங்கிக்கும்; உடனே அந்த மரங்கள் சந்தனமாயிடும் —இப்படி ஒரு நம்பிக்கை. மூங்கில், வாழை, பப்பாளி மாதிரி வஜ்ரமில்லாத மரங்களெல்லாம் எத்தனை மலய மாருதம் வீசினாலும் அப்படியேதான் இருக்குமாம். உள்ளுக்குள்ளே ஓர் அழுத்தம் — வஜ்ரம் மாதிரி உறுதி— இருக்கிறவா மகான்களோடே உபதேசத்தை உறிஞ்சிண்டு ஞான சந்தனமா வாசனை வீசறா; உள்ளத்திலே உறுதியே இல்லாம, பொத்தலா இருக்கறவாளுக்கு எத்தனை உபதேசமும் பிரயோஜனப்படறதில்லே'' என்று ராமகிருஷ்ணர் முன் கட்டில் பைரவி பிராம்மணியிடம் கூறிக் கொண்டிருந்தார்.

அந்த வாக்குகள் மலயமாருதமாக சாரதையின் வஜ்ர உள்ளத்தில் புகுந்து அவளில் அறிவின் பரிமளத்தைப் பரிணமிக்கச் செய்தது.

ஆம், ஒரு விதத்தில் சாரதையின் மனசு மிக மிக மிருதுவான அனிச்ச மலர்; இன்னொரு விதத்திலோ கல்லைப் போல் கனத்த வஜ்ரம். பிறருக்கு மலர்; தனக்குத் தானே வஜ்ரம்!

பைரவி பிராம்மணியோ மாறாக மற்றவர்களிடம் வஜ்ரமாக இருந்தாள்.



வஜ்ரத்தை வைரம் என்றும் சொல்லுவார்கள். இவள் சாரதையிடம் அர்த்தமில்லாத வைரம் பாராட்டினுள். உள்ளுக்குள்ளே சிறு வேதனையும் தாங்க முடியாத மலராக அவதிப்பட்டது பைரவியின் மனம். 'தான் உயர்ந்தவள்' என்று அவள் எண்ணியவுடன் அந்த உயர்ந்த மேட்டில் தங்காமல் பகவத் கிருபை வெளியேறத் தொடங்கி விட்டது!

பூஜைக்கு ஆயத்தம் செய்யலானுள் பிராம்மணி.

''அம்மா, உங்கள் பூஜைக்கு என்ன நிவேதனம் செய்ய வேண்டுமோ, உத்தரவிடுங்கள், செய்கிறோம்!'' என்று ராமேசுவரரின் மனைவியும், சாரதாமணியும் பணிவுடன் கேட்டுக் கொண்டனர்.

''நீங்கள்ளாம் தொட்டதை நான் நைவேத்தியம் பண்ணறதுக்கோ, சாப்பிடறதுக்கோ இல்லே. சுயம்பாகம் பண்ணிப்பேன். எனக்கு வேண்டிய வஸ்துவெல்லாம் கொடுத்துடுங்கோ'' என்ருள் பிராம்மணி கடுமையாக.

''அவா கேக்கறதை யெல்லாம் கவனிச்சுக் கொடுங்கோ. முக்கியமா அவாளுக்கு மிளகாயும், மற்ற கார தினுசுகளும் நிறைய வேணும். வஞ்சனையில்லாமல் அந்த வியஞ்சனங்களெல்லாம் இடிச்சுத் தாங்கோ'' என்ருர் ராமகிருஷ்ணர். சுரீலெனப் பேசும் பைரவிக்கு நிறையக் கார வஸ்துக்கள் கொடுக்கச் சொன்னபோது உள்ளுக்குள் சிரித்துக் கொண்டே யிருந்தார் அவர். அந்த உள் சிரிப்பை பிராம்மணியோ, சாரதாமணியோ, அவளது ஓரகத்தியோ புரிந்து கொள்ளவில்லே.

''சாரு, பைரவியம்மாவுக்குப் பூர்விகம் கிழக்கு வங்காளம். அதனுலே அவாளுக்குக் காரம் நிறைய வேணும். ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு ருசி. குழந்தையிலே நீ ஈச்சம் பழத்தை ஓயாமத் தின்னுவே. எனக்குச் சில மசாலாவிலே பிரீதி. இவாளுக்குக் காரம் வேண்டியிருக்கு. இப்படியேதான் பக்தி பண்ணறதிலேயும் பல மார்க்கம்.''

சாரு உணவு சமைக்கிருள்; இவர் அவளது உள்ளத்தைச் சமைக்கிருர்!

''என்ன, கிச்சுடி பண்ணப் போறயாக்கும்! அரிசி, உருளைக் கிழங்கு, பருப்பு எல்லாத்தையும் பானையிலே போட்டுக் கொதிக்க வெச்சிருக்கியே! பானைக்குள்ளே சாப்பிடறதுக்கான சகல வஸ்துவும் இருக்கு. ஆனு, வேகாமல் அதைச் சாப்பிட முடியவில்லே. வெந்த பிற்பாடும் இதே வஸ்துக்கள் தான் இருக்கு. புதுசா ஒண்ணும் வந்துவிடவில்லே. ஆனு வெந்தாத்தான் உள்ளே யிருக்கிற ருசி வெளியே வரது; கெட்டியாக இருக்கிற பதார்த்தம் சாப்பிடறுப்பலே மிருதுவாகிறது. இப்படிச் செய்யறது எது? சூடுதான். இப்போ பானையும் சுடறது, அதுக்குள்ளே இருக்கிற அரிசி, பருப்பு, ஜலம், கறிகாய் எல்லாம் சுடறது. ஆனு, சூடு அதுகள் கிட்டவே உண்டாகல்லே. அடியிலே இருக்கிற நெருப்பிலே இருந்துதான் வரது. நம்ம உடம்பு ஒரு பானை. பத்து மாசம் பிரும்மா பிசைஞ்சு செஞ்ச ஆண்டியோட தோண்டி இந்த உடம்பு. இதுக்குள்ளே இந்திரியங்கள், மனசு, புத்தி எல்லாம் இருக்கு. பகவானுடைய அநுக்கிரக அக்னியை மூட்டிண்டாத்தான் அதெல்லாம் பக்குவமாகும். 'அநுக்கிரகம்'னு தனியா பெருதபோதுகூட, உடம்புக்குள்ளே பல சக்திகள் இயங்குகிறதற்குக் காரணம் அந்த ஈசுவர சக்திங்கிற அக்னிதான். பானையைச் சரியா அந்த அக்னியிலே வெச்சுட்டா 'நறுக்கரிசி' தட்டாம பக்குவமாவோம். இந்திரியம், புத்தி, மனசுங்கிற வியஞ்சனங்களைச் சரியான விகிதாசாரத்தில் கலந்துண்டோம்னு உலகத்துக்கெல்லாம் ருசிக்கிற மாதிரி பக்குவமாக ஆவோம். பரிமாறச்சே அக்னி கண்ணுக்கே தெரியல்லே. ஆனு அது இல்லேன்னு உணவே கிடையாது. கண்ணுக்குத் தெரியாமே பகவத் சக்தி எல்லாத்திலேயும் ஊறிப் பக்குவம் பண்ணுகிறது.''

அந்தக் குழந்தைக்கு ரொம்பவும் உபதேசித்து விட்டோமோ என்றெண்ணி, ''சரி, இதிலே இன்னும் கொஞ்சம் லவங்கம், ஓமம், சேம்பு எல்லாம் போடேன்'' என்று பரம லௌகிகமாகப் பேச்சை மாற்றினுர்.

''உங்களுக்கு ரத்தக் கடுப்பா யிருந்ததுன்னு ஹ்ருதய் சொன்னுனே! தக்ஷிணேசுவரத்துக் கங்கையிலே ரொம்ப உப்பேறிப் போச்சுன்னும், அதை உங்களுடைய மிருதுவான குடல் தாங்காதுன்னும்தான் முக்கியமாக இங்கே வந்திருக்கிறதாச் சொன்னுனே! மசாலா வஸ்துக்கள் உங்களுக்கு ஒத்துக்குமா?'' என்று கேட்டாள் மதனி.

''என்ன மன்னீ, இப்படிச் சொல்லிட்டேள்?'' என்று சிறு பையனுகச் சிணுங்கினுர் மகான் ராமகிருஷ்ணர். ''நான் என்னோட பவதாரிணி அம்மாவையும், ராஜோபசாரம் செய்யற மதுர்பாபுவையும், பக்தாள் கொண்டுவர பஞ்சபட்சிய பரமான்னங்களையும் விட்டுட்டு, இங்கே எதுக்கு வந்தேன் தெரியுமா? மன்னியோட மசாலா சமையலே ஒரு கை பார்க்கறதுக்குத்தான். நீங்களானு இப்படிச் சொல்லிட்டேளே?'' என்று குழந்தை



இந்த டிசம்பர் 5-ந் தேதியோடு 'கல்கி' அவர்கள் அமரத்துவம் அடைந்து பதினேழாண்டுகள் ஆகின்றன. இத்தருணத்தில் அவரது திருவுருவத்தை இவ்விதழ் மேலட்டையில் இடம் பெறச் செய்து நமது அஞ்சலியையும் சமர்ப்பிக்கிறோம். மேலட்டையில் அலை ஓசையை அவர் செவியுறும்போதே கற்பனையும் அலை அலையாக அவர் உள்ளத்தில் எழக் காண்கிறோம்.

அமரர் கல்கி அவர்கள் தாம் வாழ்ந்த காலத்தில் சரித்திர புருஷராக விளங்கினர் என்பது மட்டுமல்ல; அவர் தாம் காலமான பிறகும் சரித்திரம் படைத்திருக்கிறார்! எவ்வாறெனில், பொன்னியின் செல்வன் இரண்டாவது முறையாகக் கல்கியில் தொடர்ந்து பிரசுரமாகத் தொடங்கியபோது கல்கி பத்திரிகையின் விற்பனை எண்ணிக்கை முப்பதாயிரம் பிரதிகள்வரை கூடியது.

ஒரு தொடர்கதையை முன்னிட்டு - அதுவும் இரண்டாவது தடவையாகத் தொடர்ந்து பிரசுரமாகும் ஒரு கதையை முன்னிட்டு-ஒரு பத்திரிகையின் விற்பனை எண்ணிக்கை இந்த அளவுக்கு உயருவதென்பது இந்நாட்டுப் பத்திரிகை உலகில் இன்றுவரை யாரும் கண்டறியாத அற்புதம்!

கல்கி அவர்கள் அமரத்துவம் அடைந்த இத்தினத்தில் வாசகர்களுக்கு மற்றொரு மகிழ்ச்சிகரமான செய்தியைத் தெரிவித்துக் கொள்கிறோம்: அலை ஓசை மீண்டும் கல்கியில் பிரசுரமாகப் போகிறது என்ற நற் செய்திதான் அது.

**கல்கி ஜனவரி 15 பொங்கல் மலரில் ஆரம்பமாகிறது**

# அமரர் கல்கி எழுதிய அலை ஓசை

யாகக் குழைந்தார். ராமேசுவரரின் மனைவிக்கு ஒரே அன்பும், வெட்கமுமாகிவிட்டது. வீட்டிலோ மசாலா வஸ்துக்களே இல்லை. யாரையோ உடனே துரத்தி ஓட்டமாக ஓடி அவற்றை வாங்கி வரச் செய்து சமையலில் சேர்த்தாள்.

சுத்தப் பொன்னில் சேர்க்கிற செம்பு போல், அவதாரப் பொன்னில் சிறிது மாயா செம்பு உண்டல்லவா? ராமகிருஷ்ணர் விஷயத்தில் மசாலாவில் உள்ள பற்று, புகைக்குழாய் பிடிக்கும் ஆசை இவைதான் அந்தச் செம்பு! அவரே அப்படிச் சொல்லியிருக்கிறார்.

''ஆகா; உருளைக் கிழங்கெல்லாம் எவ்வளவு நன்னா வெந்துடுத்து!'' என்று கும்மாளியிட்டுக் குதித்தார் ராமகிருஷ்ணர்.

''ஆமாம், நன்னா ஸித்தியாயிடுத்து'' என்றாள் சாரதை.

வங்கத்தில் வெந்து பக்குவமானதை 'ஸித்தி'யாகியது என்றே சொல்வர்.

''ஆங், அதுதான் சரியான வார்த்தை ....ஸித்தி, ஸித்தி! ஸித்தியானா உருளைக்கிழங்கு எத்தனை மிருதுவாயிடறது பார்த்தியோ! அப்படித்தான் ஸித்தி அடைந்த ஆத்மாக்களோட மனசும் மிருதுவாயிடும்...சரி, இன்னும் என்னெல்லாம் சமைக்கப் போறேள்?''

''லுசி பொரிக்கணும்'' என்று கூறிக் கொண்டே மதனி 'லுசி' எனும் அப்பங்களை எண்ணெயில் போட்டாள்.

'சளபுள' என்று ஏக சத்தம் எழுந்தது. அப்பம் வேக வேகச் சத்தம் குறைந்தது. அது முற்றிலும் பக்குவமானவுடன் சத்தம் அடியோடு நின்றது.

''லுசி மாதிரிதான் பகவத் அநுபவம் நன்னா ஊறிப் பக்குவமாற மட்டும் ஏகமா சத்தம் போட்டு வாத விவாதங்கள் பண்ணுவோம். தரிசனம் கிடைச்சுடுத்துன்னா அப்படியே வாய் அடங்கிடும்'' என்றார் ராமகிருஷ்ணர்.

''வாணலியைப் பார்த்து இறக்கு, சாரு! இந்த மாதிரிக் காய்ஞ்ச துணியாலே இறக்கினா, ஒரு வேளை துணியிலேயே நெருப்புப் பிடிச்சுண்டாலும் பிடிச்சுடும். அதனாலே எப்பவும்ஒரு ஈரத் துணியை அடுக்களையிலே கையோட வெச்சுக்கணும்'' — வேதாந்தம் மட்டுமின்றி, சின்னச் சின்ன லௌகிக காரியங்களிலும் உபதேசம் தந்தார்.

''சரி, சமையல் வேலை ஆச்சா! பைரவியம்மா பூஜையிலே உட்கார்ந்துட்டா. அவா பூஜைக்கு சுசுருஷை பண்ணு. முதலிலே அந்தத் தீபத்தைப் பாரு. திரியிலே நெருப்பு எவ்வளவு பெரிசா படர்ந்து எரியறது! திரி நுனியெல்லாம் கரிஞ்சு போயிருக்கு.

விளக்கை அணைக்காமலே அந்த இடத்தை மட்டும் அலாக்கா வெட்டிட லாம். எப்படித் தெரியுமா....?'' என்று கேட்டவர் தாமே போய் ஒரு கத்திரிக் கோல் கொண்டு வந்தார். திரியின் கரிந்த நுனிப் பகுதியை மட்டும் நறுவிசாகக் கத்திரித்தார்.

''எங்கே, அதோ அந்தப் பக்கம் இருக்கிற தீபத்திலே நீ இப்படியே திரியை வெட்டிப் பாரு'' என்று சாரதையிடம் கத்திரியை நீட்டினர்.

'பக்கத்திலேயே பைரவ ஸ்வரூபமாயிருக்கிற பைரவி! இவரோ சோதனை வைக்கிருர். பூஜை வேளையில் தீபம் அணைந்துவிட்டால் என்னவாகும்?' என்று நடுங்கியபடியே கத்திரியை வாங்கிக் கொண்டாள் சாரு. பலவிதத்தில் உழைத்து உழைத்து, 'நிகா' தெரிந்து கொண்டவள் அல்லவா? நடுக்கத்திலும் வெகு சரியாகத் திரியைக் கத்திரித்துவிட்டாள்.

சபாஷ் போட்டார் ராமகிருஷ்ணர்.

இரட்டை தீபங்கள்.

இரட்டை தீபங்களைப் போல் இந்தத் தம்பதி.

சீதாபதியை ஆராதித்த பைரவி அவ்விருவரையுமே ஒரு விநாடி சீதையும் அவள் பதியுமாகப் பார்த்தாள் போலும். அவள் அவர்களைப் பார்த்த பார்வையில் அன்பின் முலாம் ஏறியிருந்தது.

''பூஜை பண்ற எடத்திலே சத்தம் போட்டது தப்புத்தாம்மா'' என்று பாசாங்காக மன்னிப்புக் கேட்டார் ராமகிருஷ்ணர்.

''பூஜைப் பிரசாதம் எடுத்துக் கோங்கோ'' என்று பைரவி பிராம்மணி எல்லோருக்கும் விநியோகம் செய்தாள்.

படு காரமான அந்தப் பொரியலை யாராலும் உண்ணவே முடியவில்லை.

''உங்கள் ராமசந்திரன் மகா பொறுமைசாலி. அவனுலே இதைத் தின்ன முடியும். என்னுடைய பலஹீன குடலுக்கு இது தோதுப்படாது'' என்று சிரித்துக் கொண்டே கூறிவிட்டார் ராமகிருஷ்ணர்.

ராமேசுவரரின் மனைவியும் வெளிப்படையாக, ''ஆனுலும் மகா காரம் தாயே, குடலே எரிஞ்சுடும் போலேயிருக்கு'' என்று கூறிவிட்டாள்.

ஊருக்கு இளைத்த பிள்ளையார்கோயில் ஆண்டியாக சாருதான் வகையாக மாட்டிக் கொண்டாள்.

''இந்தாம்மா சாரு, நீ பிரசாதம் வாங்கிக்கோ. ருசி பார்த்தா பிரசாதத்தைச் சாப்பிடுவா? பகவானுக்கு அர்ப்பணமாச்சுங்கறதை நெனைச்சுத்தான் சாப்பிடணும்'' என்ருள் பைரவி.

பயந்து கொண்டே கையை நீட்டினுள் சாரு. அதில் விழுந்தது மிளகாய்க்கே காரம் போதிக்கக்கூடிய அற்புதச் சுவை பொருந்திய நிவேதனம்.

''சிம்மவாஹினி!'' என்று மனத்துக்குள் பிரார்த்தித்துக் கொண்டே அதை வாயில் போட்டுக் கொண்டாள் சாரு. சுள்ளென்று மூளை வரையில் உறைத்தது. விக்கல் கண்டுவிடும்போல் இருந்தது. மூச்சை எக்கிப் பிடித்துக்கொண்டு விக்காமல் சமாளித்துக் கொண்டாள்.

''எப்படியிருக்கு?'' என்று கேட்டாள் பைரவி.

''ரொம்ப நன்ருயிருக்கு'' என்று பரிதாபமாகச் சொன்னுள் சாரதா.

ஜன்மத்தில் முதல் பொய் சொன்னதற்குப் பிரதியாகவோ என்னவோ, பைரவி இன்னெரு உருண்டை பொரியலை அவள் கையில் ஆசையாக வைத்தாள். ''நீதான் சமர்த்து'' என்று நற்சாட்சிப் பத்திரம் கொடுத்தாள்.

சாரதை தவியாகத் தவித்தாள்.

அந்த இரண்டாவது கவளத்தையும் வாங்கி வாயில் போட்டுக் கொண்டாள். நாக்கு பட்டைவிட்டது. அதை வேணுமானல் வெளியே காட்டாமலிருக்கலாம். ஆனல் இந்தக் கண்கள் இப்படிக் கண்ணீரைக் கொட்டித் தொலைக்கின்றனவே!

''என்னவோ புழுதி விழுந்துவிட்டது'' என்று இரண்டாவது பொய்யைச் சொல்லிக் கொண்டு, முகத்தைச் சுத்தம் செய்வதுபோல் கிணற்றடிக்குப் போனுள் சாரு. (தொடரும்)




# சலவை செய்யும் கட்டி
# டெடர்ஜெண்ட் சக்தி செறிந்தது
















**டெட்** டெடர்ஜெண்ட் சலவைக் கட்டி
## சோப்பைவிட 50% அதிக துணிகளை, அதிவெண்மை-யாக சலவை செய்கிறது

—மென்னீரிலும், சாதாரணமாக நுரைவிடாத நீரிலும்

# அம்மா

ரா.கணபதி



## 10. பிரம்மாணியும் பிராம்மணியும்

கல்லாத பேர்களே நல்லவர்கள், நல்லவர்கள்...
வெல்லாமல் எவரையும் மருட்டிவிட வகைவந்த
வித்தை என் முக்தி தருமோ? -தாயுமானவர்

**பை**ரவி பிராம்மணி படுத்தி வைத்த பாட்டை எல்லாம் பல்லாண்டுகளுக்குப் பின்னால் வெறும் வேடிக்கை போலக் கருதி விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டே சொல்வாள் நம்முடைய திவ்விய மாதா. பைரவி பிராம்மணியைப் பற்றித் துளிக் கூட மதிப்புக் குறைவோ, துவேஷத்தின் சிறு சாயலோ தொனிக்காமலே சொல்வாள். அந்தப் படுத்தலைத் தான் பொறுமையுடன் தாங்கிக் கொண்டு அவளுக்குக் குறிப்பறிந்து சேவை செய்தது பற்றியும் சிறிதுகூடத் தற்பெருமை இல்லாமல் சொல்வாள். அம்மாவால் தான் அப்படிப் பேச முடியும்!

அந்த ஏழைக் குடும்பத்தின் சக்திக்கு ஒப்பிட்டால் அன்று பெரிய விருந்து என்றே சொல்ல வேண்டும். வயிறு நிறைய உண்டபின் எல்லோரும் உறங்கப் போனார்கள்.

"நீ கவனிச்சயா சாரு. சாப்பிட உட்கார்ந்த போது எத்தனை பேச்சு இருந்தது? சாப்பாட்டுத் தினுசு ஒண்ணொண்ணும் வரச்சே பேச்சு குறைஞ்சுது. இப்போ வயிறு ரொம்பி அவாவாளும் தூக்கத்திலே ஆழ்ந்துட்டா. இப்படித்தான், ஈசுவரனைத் தேடிப் போறச்சே முதலில் விசாரணையும் விவாதமும் தடபுடலாக இருக்கும். அவன் பல தினுசிலே அநுக்கிரகத்தைக் காட்டக் காட்ட இதெல்லாம் குறையும். பூரண அநுக்கிரகம் வந்துட்டா மனசு அப்படியே சமாதியிலே தூங்கிடும்" என்று கூறிய ராமகிருஷ்ணர் 'சமாதி' என்று சொன்னமாத்திரத்திலேயே அந்த எண்ணத்தில் தோயலானார்.

கண்ணைக் கசக்கிக் கொண்டு வந்த ஹ்ருதயர், "என்ன மாமா, சின்னூண்டு மாமிக்கு எப்போப் பார்த்தாலும் தத்வோபதேசம் பண்ணறேள்? தாங்கிக்க முடியாம சிரமப்படப் போறா" என்றார்.

அவரைக் கண்டதும் சாரதை உள்கட்டுக்குள் விரைந்தாள். அவள் அங்கிருந்து அகன்றது ராமகிருஷ்ணருக்கும் மிக நல்லதாயிற்று. சமாதி நிலைச் சாயலிலிருந்து சடேரென்று பரவசநிலைக்குத் தாவினார்.

ஹ்ருதயருடைய கையைப் பிடித்துக் கொண்டு மெல்லிய குரலில், "அவ யாருன்னுடா நினைக்கிறே? அவ சாட்சாத் சரஸ்வதி தேவி. அவளாலே தாங்க முடியாத ஞானம் எதுவும் இல்லை. என்னோட திவ்விய மாதாவான சரஸ்வதியிடமிருந்து வருகிற ஒரே ஒரு ஒளிக் கிரணம் மகா மேதாவியான பண்டிதனையும் நசுங்கிப்போன புழுப் போல அடக்கிவிடுமாக்கும்! அவளாலே தாங்க முடியாத ஞானபோதனை கிடையாதுடா பயலே! அவளைத்தான் இந்தச் சூழலினால் தாங்கிக்க முடியாது. அதனாலேதான் பல தினுசிலே தன் அறிவுப் பிரபாவத்தை அடக்கிண்டு, தன் சௌந்தரியப் பிரவாகத்தை ஒடுக்கிண்டு, தன் அருள் பிரகாசத்தை மறைச்சுண்டு இப்படிப் படுசாமானியமா வந்திருக்கா. அதுலேயும் ஒரு நோக்கம் இருக்கு. துளிக்கூடப் படிப்பே இல்லாம, இயற்கையாயிருக்கிற குழந்தைத்தனத்தை அப்படியே காப்பாத்திண்டாலே பகவானை அடைஞ்சுடலாம். அதைத்தான்டா உன் 'சின்னூண்டு' மாமி பண்ணிண்டிருக்கா. அது உங்களுக்கெல்லாம் புரியல்லையேன்னுதான் நான் அவளுக்குக் கொஞ்சம் கொஞ்சம் பாடமும் சொல்லித் தரேன்" என்றார்.

சாரதை உதிக்குமுன் ராமசந்திர முகர்ஜி அவளைப் பசும் பொன் வண்ண மகாலக்ஷ்மியாகத் தரிசித்தார்; சியாம சுந்தரியோ கருவண்ண துர்கையாக அநுபவித்தாள். இப்போது ராமகிருஷ்ணர் அவளையே சரஸ்வதி என்கிறார்.

துர்கை, லக்ஷ்மி, சரஸ்வதி மூவரும் ஒருவர்தான். ஸச்சிதானந்தப் பிரம்மத்தின் ஆனந்தத்துக்கு துர்கை என்று பெயர்; அதன் சித்விலாசத்துக்கு லக்ஷ்மி என்று பெயர்; அதன் சத்தியமான இருப்புக்கு சரஸ்வதி என்று

பெயர். ஜடமாக இருப்பது அதன் சத்திய நிலை அல்ல. அந்த ஜடத்துள்ளும் ஞானமாக இருப்பவளே சரஸ்வதி. ஜடமான அணுவுக்குள்ளும் மகா பெரிய பௌதிக சக்தி கொந்தளிப்பதை இப்போது விஞ்ஞானிகள் கண்டுள்ளனர். அந்த மாபெரும் பௌதிக சக்தியை அங்கு வைத்துள்ள ஜீவ சக்தியும் அதனுள் இருக்கவே செய்கிறது. சகல அணுக்களிலும் இந்த ஜீவ சக்தி இருப்பதால்தான், 'சகலத்திலும் எங்கம்மா ஊறியிருக்கா' என்று ராம கிருஷ்ணர் சொன்னார். 'சரஸ்' என்றால் பொய்கை. தெளிந்த ஞானப் பொய்கையாக இருப்பாள் சரஸ்வதி.

தொண்ணூற்றொன்பது சதவிகிதம் எவ்வித குழப்பமும் இன்றித் தெள்ளத் தெளிந்த தெளிவாக இருந்தவள் சாரதை. நூறுசத விகித தெளிவானது இந்தப் பூவுலகில் பூத உடல் கொண்டு உலவ முடியாது. எனவேதான் சாரதை என்ற பொய்கையிலும் சிறு சிறு சுழல்கள் அதன் தெளிவை ஆங்காங்கு மறைத்தன. தன் தம்பி, தங்கைகள் மரணமுற்றபோது சாரதை அடைந்த கலக்கம், தூய பொய்கையும் ஆங்காங்கு சுழலாகக் கலங்குவது போன்றதே. ஓடுகிறதா என்பதே தெரியாமல் ஒரே தகடாக நகரும் நீர், ஆங்காங்கு சுழல்களில் மட்டும் கண்ணுக்குத் தெரியும்படி ஒரு சுற்றுச் சுற்றிவிட்டுப் பிறகு அந்தக்



கலக்கத்தின் சுவடேயின்றி மேற்கொண்டு தெளிந்தோடுகிறதல்லவா? சாரதையும் அவ்வப்போது சகோதர வாஞ்சையால் கலங்கினாளே தவிர உடனுக்குடனே அந்தக் கலக்கச் சுவடேயின்றித் தெளிவுமயமாகிவிடுவாள். அவள் தன்கண்முன்னே தாயின் மகத்தான புத்திர சோகத்தைக் கண்டு

கலங்கிய போதிலும் உள்ளுக்குள் தானும் தாயாக வேண்டுமெனத் தவித்ததற்குக் காரணம், அவளை இந்தக் கலக்கம் ஆழ்ந்து பாதிக்காததுதான். தாயாக வேண்டும் என்று தவித்தாளே, அதுவும் தெளிந்த சரஸில் கலக்கம்தானே? இல்லவே இல்லை. சூரியஜோதிக்குப் பொய்கை தன் ஆவியையே அர்ப் பணிக்கிறது; அதனால்தான் ஆவியாக எழும்புகிறது. அப்போது நீரணுக்களுக் குள் எல்லையற்ற மோதல் ஏற்படத் தான் செய்கிறது. ஆனாலும் பொய்கை அதனால் கலங்குகிறதா என்ன? தன் னையே தந்து கொள்ளும் தியாகமாத லால் அதில் எல்லையற்ற உட்துடிப்பு இருந்தும்கூடக் கலக்கம் என்பது இல்லை. அன்பின் ஜோதியில் அம்மாவாகத் தன் ஆவியைத் தர சாரதை துடித்ததும் கலக்கத்தில் சேராது; தியாகத் தெளிவே யாகும்.

சரஸ்வதியை பிரம்மாணி என் பார்கள். பிரம்மனின் பத்தினி என்று பொருள். பிரம்மன் படைப்புத் தெய் வம். படைப்பினத்துக்குள் அறிவாக உட்புகுந்து கலைகளைப் படைக்கிற சரஸ் வதியே பிரம்மாணி. எனவேதான் ஞானப் படையல் செய்யும் அம்மாவாக ஆவதற்குத் தவித்தாள் 'சாரதா பிரம் மாணி'. இவளைப் பைரவி பிராம்மணி புரிந்து கொள்ளவில்லை.

ஹ்ருதயராம் மட்டும் என்ன, அவ ராலும் சாரதையின் பெருமையை 'மாமா' சொன்ன பிற்பாடுகூடப் புரிந்து கொள்ளத்தான் முடியவில்லை. பைரவி பிராம்மணிக்கு ராமகிருஷ்ண ரிடம் 'தன்னுடையவனே' என்கிற பாசம் சமுத்திரமாக இருந்ததெனில், ஹ்ருதயருக்கும் அவர் 'தன் மாமா' என்ற பாசம் ஒரு பெரிய ஏரி அளவா வது இருக்கத்தான் செய்தது. பைரவி தட்சிணேசுவரம் வருவதற்குப் பல்லாண் டுகள் முன்பிருந்தே மாமாவோடு இணைபிரியாது ஒட்டிக் கொண்டவர் ஹ்ருதயர். நோயின் போதும், மகாபாவ எதிர் விளைவுகளின் போதும் மாமாவுக்கு அவர் செய்த சுசுரூஷை கொஞ்ச நஞ்சமல்ல. ராமகிருஷ்ணருக்கு ஜகதீசு வரியானவள் அம்மாவாக அனுகி வந்துவிட்ட பிறகு அவரால் பவதாரி ணிக்கு சம்பிரதாயப்படி பூஜை செய்ய முடியாமற் போய்விட்டது. மாமாவுக் குப் பதில் ஹ்ருதயராமே அர்ச்சகராகப் பணி புரிகிறார். இவ்வாறு பலவிதங்களில் ராமகிருஷ்ணருடன் நெருங்கித் தொடர்பு கொண்ட ஹ்ருதயருக்கும், அதே நெருக்கத்தை அடைந்த பைரவிக் கும் உள்ளூறப் பரஸ்பரப் போட்டி உண்டு. இப்போது சாரதாமணியிடம் ராமகிருஷ்ணர் பரிவு காட்டியதும் ஹ்ருதயராமின் பாச மோகம் பிடித்த மனசுக்கு அவ்வளவாகப் பிடிக்கத்தான் இல்லை. ஆனாலும் 'என்னுடைய பகைவ னுக்குப் பகைவன் எனது தோழன்' என்றபடி, பைரவி பிராம்மணி சாரதை யைப் பகைத்ததாலேயே ஹ்ருதயராம் தன் 'சின்ன மாமி'யிடம் தோழமை பாவம் காட்டினார். அதனால்தான் ராம கிருஷ்ணர் சாரதாமணியை ஆதிசாரதை யின் அவதாரமாகச் சொன்னவுடன், 'இதென்ன பிதற்றல்?' என்று வாய் விட்டுச் சொல்லாமல் அடக்கிக் கொண்டார்.

இத்தனையும் தெரியும் பகவான் ராமகிருஷ்ணருக்கு. இருப்பினும் அவர வர்களின் கர்மம் கழிகிற வரையில் கர்வத்தைக் கழிக்காமல் அநுபவிக்கட் டும் என்று வேடிக்கை பார்த்தார்.

வேண்டுமென்றே ஹ்ருதயரிடம், ''பீதாம்பர பண்டாரியை அழைச் சுண்டு வா. அந்தப் பயல் ரொம்ப நன்னாப் படிக்கிறானாம். அதோடே தன் கிளாஸ் பசங்களுக்கும் பொறுமையாகப் பாடம் சொல்லித் தரானாம். அவனை நம்ம சாரதாவுக்கும் லக்ஷ்மிக்கும் அரிச் சுவடி சொல்லித் தர ஏற்பாடு பண்ணப் போறேன்'' என்றார்.

குறும்புதான்! 'இப்போதுதானே மாமியை சரஸ்வதின்னேள்? அதுக் குள்ளே பன்னிரண்டு வயசு பண்டாரி கிட்ட பாடம் கேட்க ஏற்பாடு பண்ண றேளே!' என்று ஹ்ருதயர் மனசுக்குள் எண்ணுவது அவருக்கா தெரியாது?

ஹ்ருதயர், பீதாம்பர் பண்டாரியை அழைத்து வந்தார். சுறுசுறுப்பும் சூட் டிகையும் சொட்டும் முகத்துடன் அந்தப் பிள்ளை வந்தது.

பாடம் படிக்கப் போகிறோம் என்ப தில் சாரதாவுக்கு எல்லையில்லாத குஷி. ஆயினும் தன் இயல்பான அடக்கத் துடன், புக்ககத்திலிருந்து கொண்டு பாடம் படிப்பது அதிகப்பிரசங்கித் தனமோ என்ற அச்சத்துடன் குனிந்த தலை நிமிராமல் வந்து உட்கார்ந்தாள்.

நாலரை வயசுக் குழந்தை லக்ஷ்மி குதி போட்டுக் கொண்டு வந்தமர்ந்தது.

'' பொம்மனாட்டிகளுக்குப் படிப்பு எதுக்கு?'' என்று மதனி முனகினாள்.

''மன்னி, நானும் உங்க மாதிரி கர் நாடகம்தான். பொம்மனாட்டிகள் புருஷாளாட்டம் தஸ்புஸ்ஸுனு கிளம் பறது எனக்கும் பிடிக்காதுதான். ஆனா, எழுத்தறிவு எல்லாருக்கும் வேணும் மன்னி. நம்ப ராமாயணம், பாரதம், தேவி மாகாத்மியம் இதெல்லாமாவது படிக்கத் தெரிய வேண்டாமா?'' என் றார் ராமகிருஷ்ணர்.

''லக்ஷ்மி பச்சைக் குழந்தை.....'' என்று மதனி மீண்டும் ஆட்சேபக் குரல் எழுப்ப ராமகிருஷ்ணர் சொல்வார்: ''பச்சைக் கிளி இருக்கே, அதுக்குக் கழுத்துலே கோடு வரத்துக்கு முந்தியே தான் பேச்சுச் சொல்லித் தருவா. அதுக்கு அப்புறம் கிளியோட நாக்கு முற்றிப் போயிடும். பேச வராது. அதே மாதிரி புத்தி பிகுவாறத்துக்கு முந்தியேதான் பாடம் ஆரம்பிக்கணும். மன்னி, 'சுக்லாம்பரதம்' குட்டிக்கறச் சேயே தும்மாதேயுங்களேன்'' என்று மன்றாடினார் ராமகிருஷ்ணர்.

அவர்தான் ஜயித்தார். புரட்சிகரமாகத் தாம் ஏதோ செய்வதாக வெளியில் துளிக்கூடத் தெரியாமல் எத்தனை எத்தனையோ பெருமைகளை ஜயித்துக் காட்டியவரல்லவா?

அரிச்சுவடிப் புத்தகத்தைக் கையில் எடுத்தாள் சாரதை. பல வருடங்களுக்குமுன் ஜயராம்பாடி பள்ளியில் சிறிது காலம் படித்த, ஆனா ஆவன்னாவெல்லாம் நினைவுக்கு வந்தன. பல ஆண்டுகளுக்குமுன் பார்த்த அருமை உறவினர்களை மீண்டும் சந்திக்கிற ஆனந்தம், எப்போதோ கேட்டு ஆனந்தித்த ராகத்தை மீண்டும் கேட்கிற மகிழ்ச்சி அவளுக்கு உண்டாயிற்று.

'' இந்த எழுத்தெல்லாம் எனக்கு நினைவு இருக்கு. கடைசியிலேதான் புரியல்லே.....'' என்று புத்தகத்தை பண்டாரியிடம் நகர்த்தினாள்.

''இது ச; இது ஷ; இது ஸ'' என்று விளக்கினான் பண்டாரி.

''பொம்மனாட்டிகளுக்கு இந்த மூன்று எழுத்தும் மறந்து போகவே கூடாதே!'' என்று அர்த்த புஷ்டியுடன் கேட்டுவிட்டுச் சிரித்தார் ராமகிருஷ்ணர்.

'பொறுமை'க்கு வடமொழி 'ஸஹனம்' என்பது. அதை வங்காளியில் 'சஹனம்' 'ஷஹனம்' 'ஸஹனம்' என்று மூன்றுவிதமாகவும் சொல்வார்கள். ச — ஷ — ஸ என்றாலே பொறுமை என்று அர்த்தம் கொள்வார்கள். முக்காலும் பொறுமையாக இருக்க வேண்டும் என்பதுதான் சாரதாமணிக்கு ஆரம்ப பாடமாக அமைந்தது!

ஆம், அவளது பொறுமையைச் சோதிக்க இனி எத்தனை எத்தனையோ சம்பவங்கள் நடக்கப் போகின்றன!

அன்று மாலை ஊராருக்கு ராமகிருஷ்ணர் உபதேசித்தபோது — 'உபதேசம்' என்கிற ஹோதா எண்ணமேயின்றி உரையாடிய போது — பைரவி பிராம்மணி அசூயையே உருவாக அலமாந்து அமர்ந்திருந்தாள்.

ராமகிருஷ்ணரோ அலுங்காமல் நலுங்காமல் அன்பு தரும் சமன நிலையில் பேசிக் கொண்டிருந்தார். யாரோ சாதுவின் லட்சணத்தைக் கேட்டார்கள். அவர் தம்மையே வர்ணித்துக் கொள்கிறோம் என்ற பிரக்ஞை அணுவளவுமில்லாமல் சொல்லிக்கொண்டு போனார்: ''மனசில் எந்தச் சுமையும் இல்லாதவன் தான் சாது. சுமையை ஏற்றிக் கொண்டால் உடனே துன்பம் வந்து சேரும். தலையில் ஸ்தூலமாகச் சுமையை வெச்சிண்டால் உடம்பை அது பாதிக்கிற மாதிரியேதான் மனச்சுமையும் உடம்பை பாதிக்கிறது; முகத்திலே அழகு மங்கிப் போறது; நெற்றியிலே சுருக்கம் விழறது. இப்படியெல்லாம் இல்லாமகாலங் கார்த்தாலே வீசற தென்றல் மாதிரி சுயேச்சையா, அன்றலர்ந்த புஷ்பம் மாதிரிப் புதுசா, பனித் துளியைப்போலப் பரிசுத்தமா மனசை வைச்சுண்டவன்தான் பாக்கியசாலி. மனசைப் பாலா வெச்சுக்கணும். அதாவது பாலகனா வெச்சுக்கணும். குழந்தைக்கு மனசுலே என்ன சுமை இருக்கு? குழந்தையாயிடணும். பார்க்கிற இடமெல்லாம் எங்கம்மா, ஆனந்தமயி, ஜகதம்பிகை, சர்வேசுவரி, பவதாரிணியே இருக்கான்னு தெரிஞ்சுண்டு அவளுக்குக் குழந்தையாயிருந்துடணும். குழந்தைப் பிராயம் மனசிலேருந்து போயிட்டா, அப்புறம் கிருஹஸ்தனுக்கு இருக்கிற அத்தனை பாரமும் வந்துடும்.....''

---

தற்காலிகச் சுகபோகங்களுக்காக நாம் நம்முடைய ஒழுக்கத்தைப் பழுதாக்கிக் கொள்ளலாகாது. வாழ்வில் இன்பம் பெறுவதற்குரிய வழி நம்முடைய ஒழுக்கத்தைப் பாதுகாப்பதையே பொறுத்ததாகும். ஒழுக்கம் தவறினால் அதை எளிதில் பழுது பார்க்க முடியாது.





நம்முடைய தேகமும் உள்ளமும் ஆண்டவனுடைய கோயில். அதைச் சுத்தமாக வைத்துக் காப்பது நம் கடமை.

---

பணிவே உருவான ஸ்ரீநிவாஸ சாங்காரி இடைமறித்துக் கேட்டார்: ''அப்படீன்னு, கிருஹஸ்தாளாக இருக்கிற எங்க கதி என்ன?''

'' கவலைப்படாதே, சாங்காரி !'' என்று அபயமொழி தந்தார் ராமகிருஷ்ணர்: '' கிருஹ—ஸ்தன்னு 'வீட்டிலே இருக்கிறவன்'னு அர்த்தம். இவன் தான் வீட்டிலே இருக்கான். இவனுக்குள்ளே வீடு இல்லே. படகு தண்ணிலே இருந்தா ஆபத்து இல்லே. படகுக்குள்ளே தண்ணியிருந்தாதான் ஆபத்து. வெளியிலே கிருஹஸ்தனு இருக்கலாம். மனசிலே கிருஹஸ்தனுயிடப்படாது. அப்படிப்பட்டவன் பெண்டாட்டிக்குப் பக்கத்திலே இருந்தாலும் அவன்தான் சாது. 'நேங்க்டா' அப்படித்தான் எனக்கு உபதேசம் பண்ணினுர். ஒருத்தனிடம் அன்பும் அறிவும் நன்னு முற்றி, அவன் இருதயத்தைப் பூரணமாக அம்பாளுக்கே அர்ப்பணம் பண்ணிட்டு இருந்துட்டான்னு போதும் — அவன் எங்கேயிருந்தாலும் சாதுதான். புருஷாளுக்குச் சொல்லறதேதான் பொம்மனுட்டிகளுக்கும். அவா புருஷாளைவிட உசந்தவா. எல்லாத்திலேயும் தேவி இருந்தாலும்,

**தவ தேவி பேதா: ஸ்த்ரிய: ஸமஸ்தா**
**ஸகலா ஜகத்ஸு**

ன்னு 'சண்டீ'லே சொல்லியிருக்கிற மாதிரி, பெண்டுகள்ளாம் விசேஷமாக அம்பாளோடே ஸ்வரூபம். ஏன்னு, அம்மாவாகி அவா செய்யற அன்பும் தியாகமும் புருஷாளுக்குக் கிடைக்கிறதில்லையோன்னே? அவா தங்களோட பெருமையைத் தாங்களே தெரிஞ்சுக்கணும். புருஷனேட இருக்கச்சயே சரீர இச்சையைத் தூக்கி எறிஞ்சுட்டு அப்பட்டமாவே திவ்ய மாதா ஆயிடணும்.''

அங்கு கூடியிருந்த நல்ல பெண்கள் அனைவரும் ஆழ்ந்த பெருமூச்சு விட்டனர். 'அப்படி ஆவோமா?' என்ற ஏக்கத்தில் எழுந்த பெருமூச்சு அது ! பைரவியோ இத்தனை நாழிகையும் ராமகிருஷ்ணர் தம்மையும் சாரதையையும் பற்றியே மறைமுகமாகத் தம்பட்டம் அடித்துக் கொள்வதாக எண்ணிக் கொல்லன் துருத்தியாக ஆத்திரப் பெருமூச்சு விட்டாள். 'நேங்க்டா' வைப் பற்றி ராமகிருஷ்ணர் கூறியது வேறு அவளுடைய ஆத்திர அக்கினிக்கு ஆகுதி சொரிந்தது. ராமகிருஷ்ணருக்குத் துறவு தந்து வேதாந்தம் போதித்த தோதாபுரியை அவர் ' நேங்க்டா ' என்றே சொல்வார். 'நக்ன' (திகம்பரர்) என்பதன் மரூஉ 'நேங்க்டா'. பைரவிக்குத் தன்னிடம் தந்திரங்கள் பயின்ற ராமகிருஷ்ணர், தோதாபுரியிடம் வேதாந்தம் அப்பியசித்ததே பிடிக்கவில்லை. அதோடு, பெண் சங்கத்தை ராமகிருஷ்ணர் அடியோடு விடவேண்டும் என்று தான் கண்டிப்பாக இருக்கும் போது இந்தத் திகம்பர சாமியார் பெண் சங்கத்திலும் துறவை நிலைநாட்டுமாறு ராமகிருஷ்ணருக்கு உபதேசித்தது பைரவியின் எரிச்சலை அதிகமாக்கியது.

பெண்கள் பக்கம் திரும்பிய ராமகிருஷ்ணர் பேசினுர்: ''என் அம்மாக்களே! நீங்கள்ளாம் மஞ்சள், வாசனைப் பொடி பூசிண்டு குளிக்கிறேளோன்னே ? அது மங்களத்துக்கு மங்களம், ஆரோக்கியத்துக்கு ஆரோக்கியம், அதோட ஜலத்திலே இருக்கிற கெட்ட கிருமிகளும் மஞ்சள் காரத்திலே, வாசனைப் பொடி நெடியிலே செத்துப் போகும். இப்படியே விவேகம்னு ஒரு மஞ்சள், வைராக்கியம்னு ஒரு வாசனைப் பொடியைப் பூசிண்டு குடும்ப சாகரத்தில் முழுகுங்கோ — அதிலே இருக்கிற கெட்டதுகள்ளாம் செத்தே போயிடும் ; சம்ஸார சாகரமே சச்சிதானந்த சாகரமாயிடும்.''

''கதாயீ, நீ சொல்றச்சே எல்லாம் புரியறது. அநுபவத்திலேதான் வரமாட்டேங்கறது. சம்ஸார சாகரத்திலே இந்தப் பெரிய விஷயமெல்லாம் சாத்தியமேயில்லேன்னு அடியோட அவநம்பிக்கை வந்துடறது....'' என்று நெட்டுயிர்த்தாள் தனியம்மை.

''மாமீ, உங்க புருஷரோட பட்டறைக்கு நீங்க போயிருக்கேளோ?'' என்று வினவினர் ராமகிருஷ்ணர்.

''ஓ!'' என்றாள் தனி. அவள் கருமார் வகுப்பைச் சேர்ந்தவள்.

''பட்டறையிலே நடுநாயகமா பட்டறைக் கல்லுனு ஒண்ணு இருக்கு இல்லியா? அத்தனை பண்டங்களையும் அது மேலே வைச்சுத்தான் எல்லா ஆயுதங்களாலேயும் அடிக்கிறா. அடிவாங்கற பண்டமெல்லாம் வளையறதுகள், நகர்றதுகள், புதுப் புது ரூபம் எடுக்கறதுகள். ஆனா அந்தப் பண்டங்களை விட ஜாஸ்தி அடியை ஓயாமல் வாங்கிண்டிருக்கிற பட்டறைக் கல் மட்டும் அந்த ரூபத்திலேயே இருக்கு; இருக்கிற இடத்தை விட்டு அங்குலம்கூட நகர்றதுமில்லே. பட்டறைக் கல் மாதிரி ஒரு பொறுமையை மனசுலே உண்டாக்கிக்கணும். சம்ஸாரத்திலே எத்தனை அடிபட்டாலும், எதெது எப்படி மாறினாலும் பொறுமை மாறாமல் இருக்கணும். அப்போ நம்ப மனசுக்கு வர வஸ்துவையெல்லாம் பிரயோஜனமாகிற ரூபத்திலே மாற்றி அனுப்பிவிடலாம். பொம்மனாட்டிகளுக்குப் பொறுமைதான் பெரிய பூஷணம்.''

ஊருக்கே பெரிய மநுஷியான பிரஸன்னாவின் கண்கள் அருவியைப் பொழிந்தன. ''என் அப்பனே! ஸ்திரீ தர்மத்தை இவ்வளவு நன்னாச் சொல்ல உனக்கு எப்படித்தெரிஞ்சுதோ?'' என்று சிலாகித்தாள். பிறகு பைரவியைப் பார்த்து, ''நிர்மூடங்களான எங்களுக்கு நீங்களும் ஸ்திரீ தர்மம் சொல்லுங்கோ'' என்று வேண்டினாள்.

ராமகிருஷ்ணர் அவ்வளவு அழகாகப் பேசுமிடத்தில் தான் எதைச் சொல்வது என்ற சிறுமை உணர்ச்சி பைரவியைப் பிடுங்கித் தின்றது. சிறுமையானது பொய்ப் பெருமைக்குத் தூபம் போட்டது: ''நான் தனியா என்ன சொல்லணும்? இத்தனை நாழி உங்க கதாயி பேசினதெல்லாம் நான் சொல்லிக் கொடுத்ததுதானே! கிராமாந்தரத்து கதாயியை நான்தானே சகல சாஸ்திரங்களிலேயும் அநுபவங்களிலேயும் தோய்ச்சுத் தோய்ச்சு எடுத்து இப்ப நீங்க பார்க்கிற ரூபத்துக்குக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கேன்?'' என்று வெட்கமேயில்லாமல் சொன்னாள் பிராம்மணி.

அங்கு கூடியிருந்த அனைவருக்கும் அது சுரீரென்று பட்டது. ஹ்ருதயரின் இதயமோ குளவி துளைத்த பூவாகத் துடித்தது. 'அகம்பாவப் பைசாசமே, சமயம் வரட்டும், உன்னை ஒரு கை பார்க்கிறேன்' என்று அது வன்மம் பூண்டது.

ராமகிருஷ்ணர் மட்டும் அமைதியுடன், ''ஆமாம், நானே சொல்லியிருக்கணும் — இத்தனையும் இவா போட்ட பிச்சைதான்'' என்று பவ்யமாகச் சொன்னார்.

சாரதாமணியும் தனது பிராண நாயகனை ஒரு புழுவுக்குச் சமானமாகப் பைரவி பேசியதில் புழுங்கவில்லை. புழுக்கத்தின் சிறிய சுவடு வந்தவுடனேயே 'பொறுமை' என்கிற சாளரத்தைத் திறந்து வைத்துக் கொண்டு நிம்மதிக் காற்றை அநுபவித்தாள் அவள். 'ச — ஷ — ஸ; கருமானின் பட்டடைக் கல்' — இந்த உபதேசங்கள் அவள் மனத்தில் அப்படி ஆழப் பதிந்துவிட்டன. கற்ற வித்தையைக் காரியத்தில் கைவிடுபவள் அல்ல அவள்! 'வித்யா விநய ஸம்பன்ன' என்று கீதாசாரியன் சொன்னபடி விநயத்துடன் சிறிதளவு வித்தையையும் தன்னுள் தேக்கிக் கொண்டவள் சாரதா பிரம்மாணி; பெரிய வித்தைகளைக் கற்றும் அகங்காரத்தினால் அதன் பலனைத் தோற்றவள் பைரவி பிராம்மணி. (தொடரும்)



# காடும் சருகும்

தமிழ்முடி

தன்னலமே இல்லாத காந்தி அண்ணல்
சாத்விகப் புதுமுறையில் உண்ணா நோன்பைப்
புன்னகைத்து மேற்கொண்ட போதி லெல்லாம்
புகழ்வெற்றி பெற்றிட்டார்! ஆனால் இன்றோ!

அன்னவர்போல் பற்பலரும் உண்ணா நோன்பை
அடுக்கடுக்காய் மேற்கொண்டும் வெற்றி காணா
தின்னநிலை எதனாலே எனக்கேட் டார்க்குச்
செப்பினார் ராஜாஜி உவமை ஒன்றால்

''பெருங்காடு தீப்பற்றி எரிந்திட்டாலே
பெரும்வைர நிலக்கரியின் சுரங்கமாகும்!
சருகான வைக்கோற்போர் எரிந்திட்டாலே
சாம்பலின்றி வேறென்ன கிடைக்கும்?''என்றார்.



# அம்மா

ரா. கணபதி

## 11. கட்டி பழுத்தது!

தாபத்தால் நாடியெல்லாம் சிதைந்து போகும்;
கவலையினுல் நாடியெலாம் தழலாய் வேகும்;
கோபத்தை வென்றிடலே பிறவற்றைத் தான்
கொல்வதற்கு வழி என நான் குறித்திட்டேனே.

-- பாரதியார்

பொழுது புலர்ந்தது.

''ஹரி — காளி; ஹரி — காளி; ஹரி — காளி'' என்று கையைத் தட்டிக் கொண்டே படுக்கையை விட்டு எழுந்தார் ராமகிருஷ்ணர். அவர் விழித்துக் கொண்டவுடனே உற்சாகக் கதிர்களை வீச ஆரம்பித்து விடுவார்: வேதாந்தி என்ருல் உம்மணு மூஞ்சி ஆகிவிட வேண்டுமென்பதில்லை என்பதை வாழ்ந்து காட்டியவர் அவர்.

உடனேயே, ''மன்னி, இன்னிக்குப் பொன்னுங்கணிக்கீரை மசிச்சுடுங்கோ'' என்று குரல் கொடுத்தார்.

'ஹரி — காளி' தம்மை பாவ சமாதிக்குத் தூக்கிச் சென்றுவிடக் கூடாதென்றே கீரை மசியலுக்கு மனத்தைத் திருப்பினுர்.

சாரதை நீர் முகந்து வரச் சென்ருள்; ராமகிருஷ்ணர் கால்வாய்க் கரைக்குப் போனுர்.

வழியெங்கும் வரப்புக்களில் நிறைய ஜலம் இருந்ததால் மீன் பறி வைத்திருந்தார்கள்.

''மகாமாயையும் மநுஷனைப் பிடிக்கறதுக்கு எத்தனையோ மீன்பறி வைச்சிருக்கா. இவனும் அசட்டு மச்சமா அதிலே போய் மாட்டிக்கறுன். பறிக்குள்ளே போறது மீனுக்குப் பரம சுலபமாயிருக்கு. அப்புறம் என்ன பாடு பட்டாலும் வெளியிலே வர முடியறதா?'' என்ருர் ராமகிருஷ்ணர்.

''இந்த மாயையிலெல்லாம் எப்படி மாட்டிக்காம இருக்கிறது?'' என்று வினவினுள் சாரதை.

''மனசைப் பக்தி, பிரேமை இந்த இரண்டுலேருந்தும் அந்தண்டை இந்தண்டை நகர்த்தாமலே இருக்கணும். அதுதான் மாயையில் விழாம இருக்கிற வழி. காலங்கார்த்தாலே உனக்குப் பாடம் ஆரம்பிச்சுட்டேனேன்னு அலுத்துக்காதே. பிரேமையும் பக்தியும் வாழ்நாள் முழுதும் பாடம் கேட்டுண்டே இருக்க வேண்டிய விஷயம். ஜனங்களை ஒதுக்கிட்டு, ஏகாந்தத்துக்குப் போய்ப் பக்தி பண்ணறதைப் புரிஞ்சுண்டு கடைப்பிடிச்சுடலாம். ஜனங்களோடு இருந்துண்டே அவாகிட்டே பிரேமை காட்டறதுதான் ரொம்ப கஷ்டம். தன் மநுஷா—பிற மநுஷா என்கிற வித்தியாசம் தோணிண்டேதான் இருக்கும். தன் மநுஷான்னு சில பேர்கிட்ட வைக்கிற பிரேமைதான் மாயை; எல்லா மநுஷாகிட்டேயும் சமமா வைக்கிற பிரேமை தான் தயை.....''

பேச்சை நிறுத்தி யோசனையில் ஆழ்ந்தார். தயா தத்துவத்தை ஆராய்ந்தாரா? அல்லது சாரதையின் எதிர் காலத்தை ஆராய்ந்தாரா?

அவர் 'தன்' மநுஷ்யர்கள் என்ற குடும்பப் பொறுப்பே இல்லாதவர். இவளோ வருங்காலத்தில் அடியாருக்கெல்லாம் அன்னையாக இருக்கும் போதே, ஒரு குடும்பத்தின் தலைவியாகவும் இருந்து, அந்தக் குடும்பத்தின் கோளாறு படைத்த அங்கத்தினர்கள் செய்த நாணுவித இம்சைகளையெல்லாம் அநுபவிக்கப் போகிறவள் ஆயிற்றே!

சாரதை நீர் முகர்ந்தாள். சிறிய வாய் கொண்ட குடம் 'குக்குளு குக்குளு' என்று சப்தமிட்டபடி நீரை முகர்ந்தது.

''ஜலம் ரொம்பாத வரையில் குக்குளு சத்தம் போட்டது. ரொம்பினவிட்டுச் சத்தமேயில்லை பாத்தியா? அப்படித்தான் நிறைகுடமா அமைதியா இருக்கணும்.'' — அமைதியே உருவாக நிற்கும் சாரதையை அன்புடன் பார்த்துச் சொன்னுர் ராமகிருஷ்ணர்.

'எந்த ஆசை வடுவும் அவளிடம் இல்லை. இரவு வேளையைப் புனிதமாகக் கழித்துவிட்டுப் புது மலராக எழுந்து வந்திருக்கிருள். தக்ஷிணேசுவரத்திலிருந்து கிளம்புமுன் அம்பாளிடம் நான் வேண்டிக் கொண்டேனே, தேவி அதற்கு நன்ருகச் செவிசாய்த்துவிட்டாள்!'

திரும்பி வரும் வழியில் எங்கோ எட்டத்தில் பொன்னுங்கண்ணிப் பாத்தி தெரிந்தது. முக்காடிட்டு, பூமியைப் பார்த்தே நடக்கிற சாரதைக்கு உள்ளன்

பானது அந்தப் பாத்தியை எப்படியோ காட்டிக் கொடுத்து விட்டது.

கீரையைக் களைந்தெடுக்கலானாள். பக்கத்திலிருந்த ஒரு வாழையிலிருந்து நார் எடுத்துக் கீரையைக் கட்டினாள்.

''ஒருதரத்துக்கு ரெண்டுதரமா, நன்னா அலசிக் கழுவிட்டு வாணலிலே போடு. அப்பத்தான் மண் வாசனை போகும்'' என்று 'அயனாக'ச் சமையல் குறிப்பு கொடுத்தார் வேதாந்த ஸ்வரூபர். குடும்ப வாழ்வே தெரியாதவர், குடும்ப வாழ்விலேயே ஊறியவளுக்கு அரிய ஆலோசனை தருகிறார் — சந்தேகமில்லை, அம்பாள்தான் அவருக்காக நெல்லைச் சரித்தாள்!

லாஹா வீட்டு வண்டி அந்த வழியாக வந்தது. இந்தத் தம்பதியைக் கண்டதும் வண்டி நின்றது.

வண்டிக்காரன் ''ஏறுங்க சாமிங்களே, தேவிங்களே'' என்றான்.

''சாரு, ஏறிக்கோம்மா! நீங்களெல்லாம் பர்தாப் பொம்மனாட்டிகள். வண்டி உச்சியைத் தலை நிமிர்ந்து



பார்க்காமலே, [உத்தேசமா இவ்வளவு உயரம் இருக்கும்னு] நெனச்சு ஏறுவேள். ஆனால் மிதியிலே காலை வெச்சவுடனே உங்க பாரத்திலே வண்டி கொஞ்சம் கீழே இறங்கும்ங்கறது உங்களுக்கு நினைப்பு இருக்கிறதில்லை; தலையிலே இடிச்சுண்டுடறேள். அதனாலே, எப்ப வுமே வண்டி உச்சி வாஸ்தவமா இருக் கறதைவிட அரை சாண் கீழே இருக்கற தாவே மனசுலே கணக்குப் போட் டுண்டு ஏறணும்.'' — சின்னச் சின்ன விஷயங்களையும் செவ்வை செய்தார் ராமகிருஷ்ணர்.

வண்டியில் பேசிக் கொண்டே போனார். '' இந்த உலகத்திலே சின்ன விஷயம், பெரிய விஷயம்னு வித்தி யாசமேயில்லை. சின்னதுன்னு நெனக் கிறது பெரிசாயிடறது. பெரிசா நினைக் கறது பிசுபிசுத்துப் போறது. ஆனபடி யாலே, சின்னதோ — பெரிசோ எந்தக் காரியத்தை எடுத்துண்டாலும் ஒரே மாதிரி கவனமா, சிரத்தையா அதைப் பண்ணணும்.''

வீட்டு வாசலில் வண்டி நின்றது.

சாரதை குடத்துடன் உள்ளே போன போது, '' பார்த்தியா, நான் நெனைச்ச மாதிரியே ஆச்சு! வண்டியோட முதுகுப் பலகையிடுக்கிலே கீரைக் கத்தையைச் சொருகினதை மறந்துட்டியே! சாதாரணமா இப்படித்தான் வண்டிலே போறவா விசிறி, கைக் கம்பு இதை யெல்லாம் சொருகிட்டு மறந்தே போயிடுவா. வண்டிலே பிரயாணம் பண்றவா மறக்கக் கூடாத ஒரு விஷயம் இது'' என்று இன்னொரு சின்ன—பெரிய விஷயத்தைப் போதித்தார் ராம கிருஷ்ணர்.

''ஆனா, நீ கூடிய மட்டும் எங்கேயும் வெளிலேயே போகாதே !'' என்று தொடர்ந்த ராமகிருஷ்ணரின் உள்ளம் மிகப் பெரிய விஷயத்துக்குத் தாவி விட்டது. '' எங்கே போகணும், எதுக் காகப் போகணும்?'' என்று திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டார். தமது தேனினும் இனிய தீங்குரலில் கமலா காந்தரின் கீதம் ஒன்றைப் பாடலானார்:

எங்கும் செலாதே மனமே எங்கும் செலாதே
தங்கியுள்ள இடத்திலேயே தங்கமாய்த் ததும்புவாய்
உன்னிலேயே உன்னிப் பார்த்தால்
உள்ளதெலாம் உளத்தில் காண்பாய்
எங்கும் செலாதே மனமே எங்கும் செலாதே

ஸ்பரிசவேதியும் தராத தேவி ஸ்பரிசச் செல்வம்,
தரிசனமும் தரு சுரங்கம் உன் மன அரங்கம்
அவனி முழுதும் அலைந்து திரிந்து அடைந்திட
வொண்ணாத

நவநிதியும் [புறக்கடையில் குப்பையாய்க் குவியும்
புவனமாதா புனித ராஜ்யம் புந்தியுள் இருக்க—
எங்கும் செலாதே மனமே எங்கும் செலாதே!

கமலகாந்தன் கண்டுகொண்டான் உலகமாய மந்த்ரம்
விமல மந்த்ரவாதி விதியும் நிலையும் உனது உள்ளே
எங்கும் செலாதே மனமே எங்கும் செலாதே!

கீத மாதுரியம் சாரதையின் உள்ளத் தைக் கொள்ளை கொண்டது. புக்ககத் தில் இருக்கிறோம் என்பதையும் மறந்து, கீரையைக் களைந்து கொண்டே, 'எங் கும் செலாதே' என்று முனகினாள்.

''ரொம்ப நன்னாயிருக்கே உன் குரல், நான் உனக்குப் பாட்டும் சொல் லித் தரேன்'' என்று ஆர்வமாகக் கூறினார் ராமகிருஷ்ணர்.

சமயகுரு, சமையல் குரு, சங்கீத குருவும் ஆகிறார் !

''இது வீடாவா இருக்கு? கூத்தாடிக ளோடே ஒத்திகைக் கூடமான்னா ஆயிடுத்து'' என்று எரிச்சலுடன் கூறி னாள் பைரவி.

கூத்து என்ற வார்த்தையைக் கேட்ட தும் ஹ்ருதயர், ''இன்னிக்குப் 'பாரி ஜாத அபஹரணம்' யாத்ரா (நாடகம்) நடக்கப் போறது, திறந்தவெளி அரங் கத்திலே'' என்றார்.

வீட்டில் எல்லோரும் நாடகத்துக் குப் போக வேண்டும் என்று முடிவு செய்தனர்.

சாரதையும் ராமகிருஷ்ணரின் முகத் தைப் பார்த்தாள் — ஒப்புதல் கேட்கிற பாவனையில்.

ராமகிருஷ்ணரின் முகத்தில் நிர்தாட் சிண்ய பாவமே நிலவியது. ''பலபேர் கண்பட நீ திறந்தவெளியில் யாத்ரா பார்ப்பது எனக்குச் சம்மதமில்லை'' என்றார் கண்டிப்பாக.

''கொழந்தைதானே, ஆசையிருக் காதா ? ஒரு நாளைக்கு.....'' என்று மன்னி வக்காலத்துப் பேசினாள்.

''ஒரு நாள் செய்யறதுதான், அப் புறம் இன்னொரு நாள், அதுக்கப்புறமும் இன்னொரு நாள்னு பல நாள் வழக்கத் துக்கு அஸ்திவாரமாயிடும். அடக் கத்தை விட்டு ஒரு காரியம் பண்ண ஆரம்பிச்சா, அதுவே மேலே மேலே தப்புலே இழுத்துண்டு போகும். சாது வாகப் பூனை மாதிரி நடக்கற பையன் ஒருத்தனுக்கு பூட்ஸைப் பார்த்து ஆசை வரது. வாங்கிப் போட்டுக்கறான். உட னேயே திம், திம்னு நடக்கத் தோண றது. எங்கேயாவது மாடி ஏறினா, வெள்ளைக்காரன் மாதிரி தாட்பூட்னு ஓசை பண்றான். அதுக்கப்புறம் தானா கவே சீட்டி அடிக்கவும் ஆரம்பிக்கிறான். இந்த சமயத்திலே கையிலே பேனா இருந் துட்டாப் போறும்—தன் கையெழுத்தே புரியாத மாதிரி பேப்பர்லே கிறுக்கறான். ஒண்ணுலேயிருந்து இன்னொண்ணுன்னு சங்கிலித் தொடராகத் தப்புக் காரி யங்கள் வளரும். சாரதா திறந்தவெளி

லக்ஷ்மியின்

## அழகு மிளிர அணியும் சுகத்திற்கு....

அன்றாடம் உடுப்பதற்கும்,
எல்லா விசேஷ சந்தர்ப்பங்களுக்கும்
உகந்த துணி
கவர்ச்சியான அணி-
இலேசானது சுருங்காதது-
நேர்த்திமிக்க டிசைன்கள்
பாலவீணா-வாயில்களுள்
மேம்பட்டது.



தி
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்

உயர்ந்த துணிகளின்
உன்னத சின்னம்

VSK-LM 296 TM

யிலே நாடகம் பார்க்கறதை நான் ஒரு நாளும் அநுமதிக்கறதுக்கு இல்லை'' என்று தீர்மானமாகச் சொன்னார்.

சாரதை எதிர்த்து ஒரு வார்த்தை பேசவில்லை.

உள்ளூற அந்தக் குழந்தைக்கு என்ன ஆசை இருந்திருக்குமோ என்று ராம கிருஷ்ணரின் வெண்ணெய் உள்ளம் கரையலாயிற்று. 'அந்தப் பெண் சக்தி வாய்ந்த ஓர் ஆசையைத் துறந்துவிட்டு, தங்கள் இருவர் புனிதத்தையும் காக்கிருள். அவளுக்கு ஓர் அல்ப ஆசை இருந்தால் அதைத் தாம் முறித்துப் போடலாமா? சரி, அதற்காக ஸ்திரீ தர்மத்திலிருந்து அவள் ஓர் இம்மிகூட வழுவ அநுமதிக்கலாமா?'

அவளது ஸ்திரீ தர்மத்தையும் காத்து, தமது கருணை தர்மத்தையும் காத்துக் கொள்ள ராமகிருஷ்ணர் ஓர் அற்புதத் தீர்வு கண்டார்.

''சாரதா, வருத்தப்படாதேயம்மா! இப்பவே, இங்கேயே 'பாரிஜாத அபஹரணம்' நாடகம் நடக்கப் போறது'' என்று உற்சாகமாகக் கூவினார்.

ஆம், நாடகம் நடந்தது — அப்போதே, அங்கேயே!

ஒரே சர்வேசுவரிதானே இத்தனை பாத்திரங்களாகவும் ஆகி இந்த உலக மேடையில் நடிக்கிருள்? அப்படியே ராமகிருஷ்ணர் ஒருவரே கிருஷ்ணராக வும், ருக்மிணியாகவும், சத்திய பாமை யாகவும், நாரதராகவும், இந்திரனாக வும், மற்றவர்களாகவும் மாறி அற்புத மாக நடித்தார். முன் எப்போதோ ஒரே ஒரு முறை அவர் அந்த நாடகம் பார்த்ததுதான். ஆனாலும் ஒரு வசனம், ஒரு பாடல் விடாமல் அற்புதமாகப் பொழிந்து தள்ளினார்.

நாடகத்தில் வெளிப்படச் சொன்ன தர்மங்களோடு, உள்ளூறவும் மறைமுக உபதேசம் பலவற்றை உணர்த்தினார். திரை மறைவிலே நடக்கிற விஷயங்களை யும் காட்டிச் சிரிக்கச் செய்து சிந்தனை யைத் தூண்டினார்.

முதலில் நாடகசாலை 'ஆர்கெஸ்டிரா' வைப் போல் ''ஹே க்ருஷ்ண, ப்ரியா ஓடி வா'' என்று அமர்க்களமாகப் பாடினார். இதில் அதிசயம் 'ஆர்கெஸ்டிரா'க்காரர்களைப் போலவே அதில் பக்தியைப் பெய்து நிரப்பாமலே பாடினார், பக்திமயமான ராமகிருஷ்ணர். அந்தச் சமயத்தில் உள்ளே கிருஷ்ண வேஷம் போட்டுக் கொண்டவன், பாட்டைக் கவனியாமல் சுருட்டுப் பிடித்துக் கொண்டிருப்பதாகவும் பாவனை செய்து காட்டினார்.

ஆர்கெஸ்டிராவின் ஆர்ப்பாட்டப் பாட்டு ஓய்ந்தது. 'அசல்' நாடகம் ஆரம்பித்தது. மிகவும் மிருதுவாக, ''அச்யுதா, அனந்தா, கோவிந்தா'' என்று வீணைக் குரலில் நாரதராகப் பாடினார், ராமகிருஷ்ணர். நாரதருக்கு வீணை தனியாக வேண்டியிருந்தது! ராமகிருஷ்ணரின் குரலே வீணையாக இழைந்தது.

மனம் குழைய, குரல் குழைய நாரதர் பாடியவுடன் கண்ணன் உள்ளே யிருந்து வந்துவிட்டான்.

'ஆர்ப்பாட்ட பக்தர்களிடம் அவன் வருவதில்லை; அடங்கிய பக்தரிடமே வருகிருன்' என்பதையும் அற்புதமாக உணர்த்திவிட்டார் ராமகிருஷ்ணர்.

இப்படியே பாரிஜாத அபகரண நாடகம் முழுவதும் நடந்து முடிந்தது. உபதேசங்களை, உரையாடல்களை, கீதங்களை மலர்க் குவியலாகச் சொரியும் பாரிஜாத மரமாக நின்ருர் ராமகிருஷ்ணர்.

கண்ணன் அன்பால் கர்வம் கொண்ட சத்திய பாமையையும், விநயத்தினலேயே ஐயனைத் தனதாக்கிக் கொண்ட ருக்மிணியையும் சித்திரித்தது அந்த நாடகம். பைரவி பிராம்மணிக்குத் தனது செருக்கையும், சாரதையின் பவ்வியத்தையுமே ராமகிருஷ்ணர் பிரகடனம் செய்ததாகத் தோன்றியது.

எல்லோரும் மகிழ்ச்சிமயமாக இருக்கும்போது, கிளிக் கூட்டத்தில் நுழைந்த பூனைபோல் பைரவி உறுமினள்: ''வீட்டிலேயா இப்படிக் கூத்தடிப்பா! நாடகம் பார்க்கப் போனல் இந்தப் பெண்ணுடைய கௌரவம் போயிடும்னு வீட்டுக் கௌரவத்தையே பாழாக்கிக் கொட்டம் அடிச்சாச்சு. இதைப் பார்த்ததே பாவம். பூஜைக்குப் போறேன்...'' என்று எழுந்திருந்தாள். ராமகிருஷ்ணரின் கலைத் திறன் அவளையும் அத்தனை நாழிகை கட்டிப் போட்டிருந்ததென்னவோ வாஸ்தவம்!

ராமகிருஷ்ணரோ அவளிடமே குழந்தை மாதிரி வந்து நின்று கொண்டு ''கீரை ஜலத்தைப் பிழிஞ்சு வாணலிலே மன்னி போடரு. மண் வாசனை எப்படி மூக்கைப் பொளக்கறது பாருங்கோ! அந்தக் கீரையே 'சொய்'னு சத்தம் போட்டு 'என் வாசனையைப் பார்த்தேளா?'ன்னு எல்லாரையும் கூப்பிடறது, பாருங்கோ'' என்று சொல்லி ஆனந்தத் தாண்டவம் செய்தார்.



பைரவி முகவாயைத் தோளில் இடித்துக் கொண்டாள். ''நன்னுக் குதி! உனக்குத்தான் மண் வாசனே, பெண் வாசனே எல்லாம் பிடிக்க ஆரம் பிச்சுடுத்தே'' என்ருள்.

காமாக்ஷியின் கடாக்ஷம் பெற்றவர் களுக்குச் சகலமும் சமமாகிவிடும் — காடும் வீடும் ஒன்ருக இருக்கும், சத்துருவும் மித்திரனும் ஒன்ருக இருப் பர், சிவந்த ஓடும் யுவதியின் சிவந்த உதடும் ஒன்ருக இருக்கும் என்று பாடினுர் மூககவி. அப்படிப்பட்ட சம தரிசனம் வாய்த்த மகானிடம் சொல் லத் தகாத வார்த்தை சொன்னுள் பிராம்மணி. அதற்குக் கூலி அப் போதே காத்திருந்தது! ஆம், அவளது கட்டி பழுத்துவிட்டது; அம்பிகை அதை அறுக்கப் போகிருள்!

''ஏம்மா, எப்பவும் கோவிச்சுக்கி றீங்க? உங்கமாதிரி பெரிய மனுஷங்க பொறுமையும் பிரியமும் காட்டலேன்னு, அப்புறம் எங்களைப் பற்றி என்ன சொல்ல?'' என்ருர் ஸ்ரீநிவாஸ சாங்காரி.

உடனே பைரவி, ''எனக்கா, கோபமா? கிடையவே கிடையாது. மண்ணைத் தின்கிற குழந்தையின் கை யைத் தாயார் கட்டிப் போடற மாதிரி, தப்புப் பண்ணறவாளைக் கண்டிக்கிறேன். அது தவிர என் மனசிலே லவலேசம் கோபமில்லை'' என்ருள். சாந்தமும், பொறுமையும் உருவான சாரதையின் எதிரே தான் சின்னவளாகிவிடக் கூடா தென்றே இப்படிக் கதைத்தாள்.

அவள் செய்கிற பூஜை முடிந்தது.

ராமகிருஷ்ணரின் குல தெய்வமான ரகுவீரனின் பூஜையும் முடிந்தது.

ராமகிருஷ்ணரே தமது அமிருதக் கையினுல் அனைவருக்கும் பிரசாதத்தைப் பரிமாறி அதைத் திருவமுதாக்கினுர். அனைவரும் அமர்ந்து உண்டனர். ஸ்ரீநிவாஸ சாங்காரி உண்டு முடிந்த வுடன், உணவு பரிமாறப்பட்ட இலை யைத் தாமே சுருட்டி எடுத்தார். ராமகிருஷ்ணரின் குடும்பத்துப் பெண் மணி எவரும் தம் எச்சில் இலையை எடுக்க லாகாது என்று அப்படிச் செய்தார்.

அப்போது பைரவி சற்றுமுன் பெரு மையடித்துக் கொண்ட வாத்ஸல்யத் தைப் பறைசாற்று முகமாக ''ஸ்ரீநி வாஸா, நீ எதுக்கு இலே எடுக்கணும்? எங்களுக்கு அந்த வித்தியாசமெல்லாம் இல்லே....'' என்ருள்.

ராமேசுவரனின் மனைவிக்குக் குளிர் கண்டது. 'இதென்ன தர்மசங்கடம்' என்று உள்ளூறத் தவித்தாள். அவள் ஸ்ரீநிவாஸின் எச்சில் இலையை எடுத் துச் சுத்தம் செய்தால், அங்கு வந் திருந்த மற்ற பெண்டுகள் அவளை 'மொலு மொலு' என்று பிடித்துக் கொண்டு விடுவார்கள். அது மட்டு மல்ல, விஷயம் வெளியே போனுல், ஊரே அவளை எதிர்க்கும். ஏற்கனவே மைத்துனர் செய்கிற பல காரியங்கள் ஊராருக்குப் புரியவில்லை. இப்போது பிராம்மணி அம்மை வேறு புது வம்பை விலைக்கு வாங்குகிருள்!

வீட்டுக்குப் பெரியவள் செய்யாத காரியத்தைத் தான் எப்படிச் செய்வது என்று குழம்பிய சாரதை ராமகிருஷ்ண ரின் முகத்தைப் பார்த்தாள்!

ராமகிருஷ்ணர் சமத்துவத்தின் ஸ்வ ரூபம். தமக்கு உயர்வு — தாழ்வு உணர்ச்சி அறவே போய்விட்டதா என்று நிச்சயப்படுத்திக் கொள்வதற் காக நம்மை அதிர வைக்கும் சோதனை களைச் செய்து பார்த்தவர். தக்ஷிணேசு வரத்திலே பலரது விசர்ஜனங்களைக் கூசாமல் கழுவிச் சுத்தம் செய்தவர் அவர். அது மட்டுமன்று. படுமோச மான ஆடல் மகளிரின் இல்லத்து வாசற் படியிலே அவர்கள் மிதித்துச் செல்லும் புழுதியைத் தமது திரு முடியாலேயே துடைத்திருக்கிருர் — 'வேசியும் என் சர்வேசியே' என்று சொல்லிக்கொண்டு.

அப்படிப்பட்ட சமத்துவ ஸ்வரூபர் இப்போது சாரதைக்கும் மதனிக்கும் புரட்சி போதனை ஏதும் தரவில்லை. லௌகிகத்தை விட்டுவிட்ட யதியான தமக்கு வைத்துக் கொண்ட நியதிகளை இல்லத்தினர் மீது அவர் திணிக்க வில்லை. ஆசாரம் என்கிற ஆயிரம் காலத்துப் பயிரில் தலையிடவில்லை.

அன்ருெருநாள் தூய சாரதை சமைத் தாலும் தான் அதை நிவேதிப்பதற் கில்லை என்று கூறிய பிராம்மணி இன்று உள்ளத்தில் சமத்துவம் இன்றி வெறும் பகட்டுப் பொய் அன்புக்காகச் செய்த காரியம், அவளுக்கு மட்டுமன்றி, ராம கிருஷ்ணரின் குடும்பத்தவருக்கும், ஸ்ரீநிவாஸ சாங்காரிக்குமே இக்கட்டான ஒரு நிலையை உண்டாக்கிவிட்டது.

''இல்லீங்கம்மா, என் இலையை நானே எடுக்கறதுதான் தர்மம்'' என்று எளிமையுடன் கூறிக்கொண்டு, இலையை எடுத்தார் இனிய ஸ்ரீநிவாஸர்.

''ஊம், நான் சொல்லி நடக்காம இருக்கிறதா? இவா எக்கேடு கெட்டுப் போகட்டும். நானே உங்க இலையை



**அழகு !**

துறவிகள் மெலிந்தால் அழகு; நான்குகால் விலங்குகள் கொழுத்தால் அழகு; மனிதர்கள் படித்தால் அழகு; பெண்கள் மணந்தால் அழகு.

-பர்மியப் பழமொழி
''கொடை அரசு''

எடுப்பேன்'' என்று அவரிடமிருந்து இலையைப் பிடுங்கக் கிளம்பினாள் பைரவி. ''நான்'' அவ்வளவு அழுத்தமாகத் துருத்திக் கொண்டு வந்தும், விநயமாக இருப்பதாக நடித்தாள்.

அவ்வளவுதான், அங்கு கூடியிருந்த பெண்டுகள் 'கசமுச' என்று பேச ஆரம்பித்து விட்டார்கள்.

வன்மம் பூண்ட ஹ்ருதயரின் இதயம் 'சமயம் கிடைத்தது' என்று ஆர்த்தெழுந்தது. கூச்சலிடலானார்: ''பைரவியம்மா, நீங்க அத்து மீறிப் போறேள்! உங்களை இத்தனை நாள் அதிதியாகக் கொண்டாடி ஆசார உபசாரம் பண்ணினதுக்கு நன்னாப் பழி வாங்கிட்டேள் — எங்க குடும்பத்தையே ஊரார் பகிஷ்காரம் பண்ணற நிலைக்குக் கொண்டு வந்துடுவேள் போலிருக்கு. உங்களுடைய பொய்ச் சமத்துவத்தைக் கொண்டு போய்க் குப்பையிலே போடுங்கோ. எங்க கதாயி மாமா, லோகத்திலே சர்வத்தையும் அம்பாளாப் பார்க்கிற மாமா எதிரே நாடகம் நடிக்காதேள். ஆமாம், சொல்லிட்டேன்! எங்க மாமாவுக்குப் பூணூல் போட்டபோது அவர் முதன் முதலிலே கருமார் குடும்பத்துத் தனியம்மாகிட்டத்தான் 'பவதி பிக்ஷாம் தேஹி'ன்னு பிட்சை வாங்கினார். அப்படிப்பட்டவருக்கு எதிரே வேஷம் போடாதேள். எங்களுக்கும் ஸ்ரீநிவாஸுக்கும் மன வித்தியாசத்தைக் கற்பிக்காதேள். எங்களுக்காக ஸ்ரீநிவாஸ் உயிரைக் கொடுப்பார். அவருக்காக நாங்க உயிரைக் கொடுப்போம். ஆனா, அவாவாளுக்குன்னு வெச்சிருக்கிற தர்மத்தை நாங்க மீறத் தயாரா இல்லை. இப்போ அநாவசியமா அவருக்கு அவமானத்தை உண்டாக்கிட்டேள். அவர் மனசுலே பேதம் வர மாதிரி......''

பணிவுருவான ஸ்ரீநிவாஸ சாங்காரி இடைமறித்தார்: ''ஹ்ருதய்! அது மட்டும் ஒரு நாளும் நடக்காது, அப்பனே! இந்தக் குடும்பத்துகிட்டே என் விசுவாசம் ஒரு நாளும் குறையாது. இந்த வீட்டுக்காரர்—உன் பெரிய மாமா ராமேசுவர் இருக்காரே, அவரைப்போல உபகாரி எங்களுக்கு யார் உண்டு? அவருக்கு ஆஸ்தி பாஸ்தி எதுவும் இல்லாட்டாலும் எங்களுக்கு ஒரு கஷ்டம்னா, தன் குடும்பத்துக்குக்கூட வெச்சுக்காமல் வாரிக் கொடுக்கிற பிரபு. அந்த நன்றி மறக்க மாட்டோம்'' என்றார். பைரவியைப் பார்த்து, ''ஏ அம்மா, நாங்க பாட்டு வஞ்சனையில்லாம வாஞ்சையோடு இருந்துகிட்டு இருந்தோம். நீ என்ன ரோதனை எல்லாம் பண்ணறே'' என்று எரிந்து விழுந்தபடி எச்சிலைத் திரட்டி எடுக்கலானார்.

எச்சில் இலை நாடகத்தைப் பைரவி முடிப்பதாக இல்லை. ஸ்ரீநிவாஸருக்குக் குறுக்கே பாய்ந்தாள்.

ஹ்ருதயர் வெகு கண்டிப்புடன் சொன்னார்: ''பைரவியம்மா, போனாப் போறதுன்னு பொறுத்துப் பொறுத்துப் பார்த்தோம். இனி பொறுக்க முடியாது. நீங்க மட்டும் இப்போ லோக ரீதியை மீறி ஒரு காரியம் பண்ணினேள், அதுக்காக இந்தக் குடும்பம் பிரஷ்டமாக விடமாட்டேன், உங்களை இப்பவே இந்த வீட்டை விட்டு வெளியே அனுப்பிச்சுடுவேன்... ஆமாம்...''

''வீட்டை விட்டா, என்னையா?'' என்று வீறிட்டாள் பைரவி. பைரவக் கோலம் பூண்டாள். ''என்னை யாருன்னு நெனைச்சேள்? நான் யோகேசுவரி. என்னை வெளியே அனுப்ப யாராலேயும் முடியாது. அப்படி நெனைச்சா, அதோ அந்தப் பூஜை அறையிலே இருக்கிற சீதளா தேவிக்குப் பக்கத்திலே நானும் மனஸா தேவியாக மாறி உட்கார்ந்துண்டு சீறுவேனாக்கும்'' என்று கிறீச்சிட்டாள்.

மனஸா என்பது நாக தேவதை.

ஹ்ருதயர் கேலிச் சிரிப்புச் சிரித்தார். ''யோகேசுவரியம்மா, உங்களை ரொம்ப சரியா வர்ணிச்சுண்டுட்டேள், விஷப் பாம்புன்னு...''

எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள்.

பைரவியால் அந்த அவமானததைத் தாங்க முடியவில்லை. அத்தனை கோபத்தையும் திரட்டி, ராமகிருஷ்ணரைப் பார்த்து, ''இடிச்ச புளியா உட்கார்ந்திருக்கயே! நான் உன் குரு இல்லே? குரு நிந்தனை உனக்கு இத்தனை சந்தோஷமாயிருக்கா? உன்னோடே நான் வருஷக் கணக்கிலே முட்டிண்டு போதிச்சதெல்லாம் இதுக்குத்தானா?...'' என்றாள்.

அவ்வளவு நேரமும் மௌனமாக இருந்த பகவான் ராமகிருஷ்ணர் வாய் திறந்தார். (தொடரும்)

# இந்து நல்வழி மன்றம்



## ஸ்ரீ காஞ்சி பெரியவர்கள் ஸ்ரீமுகம்

காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் சமீபத்தில் விடுத்துள்ள ஸ்ரீமுகத்தில் ஒவ்வோர் ஊரிலும் ''இந்து நல்வழி மன்றம்'' அமைக்குமாறு கேட்டுக் கொண்டுள்ளார்கள்.

மன்றம் பற்றி ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியிருப்பதாவது: இந்து நல்வழி மன்றம் ஊர்க் கோயிலுக்கு அருகிலேயே ஒரு கட்டிடத்தில் அமைய வேண்டும். அக் கட்டிடத்தை ஒரு தடுப்பு மூலமாக இரு பிரிவுகளாக்கி, ஒரு பிரிவின் நடுவில் தாயுமானவர் உருவம் நிறுத்தி, அதைச் சுற்றிப் பெரியபுராண நாயன்மார்களின் உருவங்களை அமைக்கலாம். அதுபோல மற்ெறாரு பகுதியில் நடுவில் ஆண்டாளின் உருவத்தை வைத்து அதைச் சுற்றிலும் ஆழ்வார்களின் உருவங்களை அமைக்க லாம். ஊர் மக்கள் இம்மன்றத்தில் ஒன்றுசேர்ந்து, பஜனை செய்தல் முதலிய நற்செயல்களில் ஈடுபட வேண்டும்.

மன்றத்தில் செய்ய வேண்டிய சமயப் பணிகளில் முக்கியமானவை:

ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் உள்ள மக்கள் 'இந்து நல்வழி மன்றம்' என்ற பெயரில் ஒரு மன்றத்தை அமைத்துக்கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு மன்றத்திலும் குறைந்தது பத்து அங்கத்தினர்களாவது இருக்க வேண்டும்.

இந்துக் குழந்தைகள் எல்லாரையும் மாலையில் தீபம் வைத்தவுடன் கோயி லுக்கு அழைத்துச் சென்று அரை மணி நேரத்துக்குக் குறையாமல் ஸ்தோத்திரப் பாடல்கள், பாரதம், ராமாயணம் சொல்லித் தர ஏற்பாடு செய்ய வேண்டும்.

நாள்தோறும் ஒவ்வொரு குடும்பத்திலும் சமையல் செய்ய அரிசி எடுக்கும் போது ஒரு பிடி அரிசியைத் தர்மத்துக்கென்று ஒரு பாத்திரத்தில் போட்டு வைத்து அந்த அரிசியை வாரம் ஒரு முறை சேகரம் செய்து அந்த ஊரிலுள்ள கோவிலில் சமையல் செய்து, பச்சரிசியாக இருந்தால் நிவேதனம் செய்தும் புழுங் கல் அரிசியாக இருந்தால் நிவேதனம் செய்யாமலும் ஏழைகளுக்கு வழங்க வேண்டும்.

ஊரில் உள்ள அரசாங்க ஆஸ்பத்திரி, நர்ஸிங்ஹோமில் உள்ள நோயாளி களுக்கு வாரம் ஒருமுறையாவது கோயில்களிலிருந்து பகவத் பிரசாதம் கொண்டு போய் வழங்க வேண்டும்.

இந்து அநாதைப் பிணங்களை இந்து சம்பிரதாயப்படி அடக்கம் செய்ய அல்லது தகனம் செய்ய உதவி புரிய வேண்டும்.

ஊருக்கு அருகில் உள்ள சென்ட்ரல், சப்-ஜெயில் இவற்றில் அரசாங்க அநுமதி பெற்று, வாரம் ஒருமுறையாவது பஜனை, மதச் சொற்பொழிவு நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும்.

வசதியுள்ள ஒவ்வொரு வீட்டிலும் பழைய துணிகளைச் சேகரித்துச் சுத்தம் செய்து ஏழைகளுக்கு வழங்க வேண்டும்.

பள்ளி மாணவர்களை 'முருகா சரணம், வேங்கடேசா சரணம், ஐயப்பா சரணம்' என ஐந்நூறுக்குக் குறையாமல் எழுதச் சொல்லி டாலர் வழங்கவேண்டும்.

ஊரில் ஜனங்கள் கூடும்படியான சினிமாக் கொட்டகை முன்போ, கடைவீதியின் முகப்பிலோ, தெரு முகப்பிலோ ஒரு போர்டில் மேல் பாகம் முருகன் வேங்கடாசலபதி படம் எழுதி, அதன் கீழ் ''புனிதமான மனித ஜன்மம் எடுத்த அன்பர்களே, ஆயிரக் கணக்கான ஜனங்கள் இவரை வழிபட்டுப் பிரார்த்தனை செய்து, ஆனந்தமாகவும் துன்பம் நீங்கியும் வாழ்கிறார்கள். ஆகையால் புனித மான மனிதப் பிறவி எடுத்த நீங்கள் எல்லாரும் இந்தப் பகவானிடம் நம்பிக்கை யும், விசுவாசமும் வைத்து, உங்கள் பிரார்த்தனையைப் பகவானிடம் செலுத்திச் சந்தோஷமடைவீர்களாக'' என்று எழுதி வைக்க வேண்டும்.

ஒவ்வொரு வீட்டுக்கும் சென்று வேங்கடாசலபதி, முருகன், ஐயப்பன் முதலிய படங்கள், டாலர்கள் கொடுக்க வேண்டும்.

பள்ளி மாணவர்களுக்கு நீதி போதனை, தோத்திரப் புத்தகம் கொடுத்து அவற்றை மனப்பாடம் செய்து ஒப்பிப்பவர்களுக்குப் பரிசுகள் வழங்க வேண்டும்.

# அம்மா

ரா. கணபதி

## 12. சாரதையும் எதிர்த்தாள்; ராமகிருஷ்ணரும் சினந்தார்!

எந்த தேவி எல்லா உயிர்களுக்குள்ளும்
தாய்மையாகத் திகழ்கிறளோ, அந்த
தேவிக்கு வந்தனம், வந்தனம்,
மீண்டும் வந்தனம் - தேவி மாகாத்மியம்

ஆலகால வெள்ளம் திடுமென வற்றி அமிருதம் குமுகுமுவெனப் பெருகத் தொடங்கியது போல் ராமகிருஷ்ணர் தண்ணென்று பேசலானர்.

''என் தேவி, குரு தேவீ! நீங்க பண்ணின போதனையாலேதாம்மா எனக்கு இப்ப பேசாம இருக்கிற ஞானம் வந்திருக்கு'' என்று விநயத்துடன் சொன்னர் ராமகிருஷ்ணர். தொடர்ந்து ''இந்த உலக மாயத்தை விட்டு உயர ஏறணும்னு ஆசைப்பட்டேன். அம்பாள் உங்களை எங்கிட்டே அனுப்பி வைச்சா. கீழே இருந்த என்னை மாடி, மாடியா நீங்க கஷ்டப்பட்டு ஏத்தி உச்சிக்குக் கொண்டு போய் விட்டேள். உங்களாலேதான் எனக்கு மகா அநுபவங்கள் கிடைச்சுது. அந்த ஞான உச்சிலேருந்து கீழே இருக்கிற மாய தளங்களைப் பார்க்கறேன். அதென்ன அதிசயமம்மா? அப்படிப் பார்க்கச்சே என்ன தெரியறது தெரியுமோ? ஞான உச்சிக்கு எந்த மண்ணையும், செங்கல்லையும், காரையையும் சேர்த்துத் தரை பாவியிருக்கோ, கைப்பிடி போட்டிருக்கோ — சாட்சாத் அதே மண், செங்கல், காரையை எல்லாம் சேர்த்துத்தான் கீழ்த் தளங்களையும் கட்டி யிருக்குன்னு தெரியறது. மாயா லோகத்துலே யாரைப் பாத்தாலும், எதைக் கேட்டாலும், எதை மோந்தாலும், — கீரை வேகிற ஓசையைக் கேட்டாலும், மண் வாசனையை மோந்தாலும், ஸ்ரீநிவாஸோட பணிவைப் பார்த்தாலும், உங்களோட கஷ்டத்தை நினைச்சாலும் — எங்க ஞாணம்பாளோடே ஸ்வரூபத்தையேதான் பல தினுசுலே அநுபவிக்கிருப்பலே இருக்கு. நான் என்ன சொல்லக் கிடக்கு? அம்பாளே சொல்றதை எல்லாம் சொல்லட்டும்னு விட்டுட்டு இருக்கேன். அவளுக்குன்னு ஒரு பாஷை, ஒரு சொல் உண்டு. நான் சத்தம் போடாம பேசாமல் இருந்தாத்தான் அந்த மௌன பாஷை எனக்குக் கேக்கறது. தேவீ, குரு மாதாவே, நீங்க என்னைப் பேசச் சொல்றேளே! நான் பேசி என்ன சாதிக்க முடியும்? நீங்களும் நம்ம அம்மாவைப் பேசச் சொல்லிக் கேளுங்களேன். ஆனு அவளோட ரகசியக் குரலைக் கேக்கணும்னு நாம மௌனமானுத்தான் முடியும்...''

பரமஹம்ஸமாகப் பரவசத்தில் பறந்தார் அவர்.

பைரவியின் கண்கள் தாரை தாரையாக வருஷித்தன.

'இவன் அவதார புருஷன். இவனுக்கு நான் குரு என்பது பெயருக்குத்தான். ஸ்ரீராமன் வசிஷ்டரிடத்திலும், ஸ்ரீ கிருஷ்ணன் ஸாந்தீபனியிடத்திலும் உலக ரீதியைக் காட்டுவதற்கே குருகுலம் வாசம் செய்தது போல், இவன் என்னை நிமித்த மாத்திரம் குருவாகக் கொண்டான். என்னுல் ஏன் வசிஷ்டரைப் போலவும், ஸாந்தீபனியைப்போலவும் ஞான நிலை சலியாது இருக்க முடியவில்லை?' — பைரவி தன்னையே கேட்டுக் கொண்டாள்.

இந்தத் தொடரில் பைரவியின் பூர்வப் பெருமைகளை நாம் பார்க்கவில்லை. உண்மையில் அவள் மிகப் பெரியவள். யோக சாஸ்திரத்தையும் தந்திர மந்திர சாஸ்திரத்தையும் ஏட்டளவில் கரைத்துக் குடித்தது மட்டுமின்றி, நடைமுறையில் அப்பியசித்து உன்னத நிலைகளை எய்தியவள்.

ஒரு காலத்தில் அவள் பக்தி புரிந்து கரைந்தவள்தான். ஆயினும் வித்யா கர்வத்தில் அகந்தை உண்டாகி, அகந்தையிலிருந்து 'இது என்னுடையது' என்று அதிகாரமாக உரிமை காட்டும் போக்கும் பிராம்மணியிடம் வலுத்தது. ஆதியில் கர்வமற்ற பக்தி அவளுக்கு ராமகிருஷ்ணரின் அவதார விசேஷத்தைக் காட்டிக் கொடுத்தது. கர்வம் வந்த பின் சாரதையின் அவதார மகிமை அவளுக்குக் கிரகிக்க முடியாத ஒன்ருக ஆகிவிட்டது. ஏன், முன்பு அவள் உணர்ந்திருந்த ராமகிருஷ்ண மகி

மையைக்கூட இறுமாப்பு என்ற இரும்புத் திரை அவளது பார்வையிலிருந்து மறைத்து விட்டது.

ராமகிருஷ்ணர் சொன்னது போல் சங்கிலித் தொடராக ஆணவம் படர்ந்து பல ரூபங்கள் கொண்டது. கடைசியில் ஸ்ரீநிவாஸ சாங்காரியின் இலையை எடுக்க முற்பட்டபோது ஆணவமே அதிவிநயமாக வேஷம் போட்டது தான் அதிசயம்!

கீதாசாரியன் சொன்ன சங்கிலித் தொடரை அப்படியே மெய்ப்பித்தது பைரவியின் போக்கு. ''ஒன்றிடம் நெருக்கம் கொண்டால் அதனிடம் பற்று உண்டாகும். அப்புறம், அந்தப் பற்றுக்குப் பங்கம் விளைவிப்பதாகத் தோன்றுவதிலெல்லாம் சினம் உண்டாகும். சினத்தின் விளைவு: மனம் மயங்கத் தொடங்குகிறது. மன மயக்கத்தின் விளைவாக எண்ணங்கள் கெடுகின்றன. இதன் விளைவு: எண்ணங்களைச் சீர்தூக்கி முடிவு செய்யவேண்டிய புத்தியே பாழாகத் தொடங்குகிறது. அதற்கப்புறம்? மனிதன் நாசமாக வேண்டியதுதான்'' என்றான் கண்ணன். அதே கண்ணன் இன்னொன்றும் சொன்னான்: ''என் பக்தன் ஒருகாலும் நாசமடைவதில்லை'' என்றான்.

பைரவி பிராம்மணி நாசத்தின் ஒட்டு விளிம்பு வரை வந்துவிட்டாள். அப்புறம் அதள பாதாளம்தான். ஆனால் அவள் பூர்வத்தில் பக்தி செய்தவளல்லவா? எனவே அவள் நசித்துப் போகாதபடி அந்த மயிரிழையிலே ராமகிருஷ்ணர் வந்து நின்று அவளைக் காப்பாற்றினார்.

தன்னை நாகமாக வர்ணித்துக் கொண்ட யோகேசுவரி, இப்போது மந்திரத்தில் கட்டுண்ட சர்ப்பம் போல ராமகிருஷ்ணரின் வாக்கில் அப்படியே ஸ்தம்பித்து அமர்ந்தாள். சித்தத்தைப் பிசிரே இல்லாமல் ஒருமுகமாக்கி



யோகங்கள் புரிந்த அந்த மகா வியக்தி இப்போது சிலையாக அமர்ந்தாள். அடுக்கடுக்காகப் பிரிகிற மலர் போல அவள் செய்த சகல காரியங்களும் அவளுக்குள் மடலவிழ்ந்தன. தான் செய்த தவறுகள் அனைத்தையும் உணர்ந்தாள். புனித ராமகிருஷ்ணருக்குத் தான் விதித்த கட்டுப்பாடுகள் எவ்வளவு மூடத்தனமானவை என்றுஉணர்ந்தாள். தான் எரிந்து விழுந்தபோதிலும் குளிரக் குளிரத் தனக்குப் பணிவிடை செய்த சாருவுக்குத் தான் செய்த பொல்லாங்குகள் அவளுடைய நெஞ்சைச் சுட்டன. ஞானிகளுக்கும், தாங்கள் ஞானி என்ற அகந்தை தோன்றுமிடத்து மகா மாயா தேவி அவர்களை மயக்கி மோகத்தில் ஆழ்த்தி விடுவாள் என்ற சண்டீ வாக்கியத்தை எண்ணி உளம் உருகினாள். தன்னை மயக்கியதோடு நில்லாமல் மயக்கம் தீர்த்தும் வைத்தாளே என்று எல்லையில்லாத நன்றி கொண்டாள்.

உள்ளத்திலே கர்வம் கொண்ட போதினில்
ஓங்கி அடித்திடுவான்

என்பதை முதலில் இறைவன் நிரூபித்தான். பிறகு,

ஆபத்திலே வந்து பக்கத்திலே நின்று
அதனை விலக்கிடுவான்

என்பதையும் செய்து காட்டி, பைரவியைக் காத்தருளினான்.

எச்சில் இலையை சாங்காரியே எடுத்துப் போட்டுச் சுத்தம் செய்தார். பைரவியின் உள்ளிருந்தும் எச்சில் இலை எடுத்தெறியப்பட்டுச் சுத்தமாயிற்று.

பைரவி பிராம்மணி ஆழ்ந்த பக்தியுடனும் பணிவுடனும் அற்புதமான மாலை ஒன்றினைத் தொடுத்தாள். அதன் நறுமணம் அவளுக்குப் போதவில்லை. சந்தனக் குழம்பை அதன்மீது தெளித்தாள். செந்தணலாக இருந்த அவளது உள்ளமும் சந்தனமாகியிருந்தது!

அந்த அழகிய மலர் மாலையை ராமகிருஷ்ணருக்குச் சூட்டினாள். அவரது கமல பாதங்களில் இரு கமல மலர்களை வைத்தாள். முன்பு சிஷ்யரா யிருந்த அவர் இப்போது பகவானாகவே இருந்து அதை ஏற்றுக் கொண்டார்.

''அப்பனே! என்னை மன்னித்துவிடு'' என்று அகம் குழைந்து வேண்டிக்கொண்டாள், தனது கமலக் கண்களிலிருந்து தேன் துளிகளைப் பொழிந்தவாறு.

''அம்மா, யாரை யார் மன்னிக்கிறது? இதெல்லாம் அம்மாவோட லீலைதானே! உங்களை இப்படி ஆட்டம் போட வெச்சு, அதிலேருந்து சாருவுக்கு வி ந ய த் தை ஆணி அடிச்சாப்பலே போதிச்சிருப்பா. நீங்க என் குரு... அதுக்கு மேலே எங்கிட்ட உள்ளன்பு வெச்சவா; பெற்ற தாய்க்கு மேலே. 'மன்னிப்பு'ங்கற வார்த்தையைச் சொல்லப்படுமோ?'' என்றார்.

''மன்னிப்புக் கேட்க வேண்டியது என் தர்மம் இல்லையா? உன்னை மட்டுமில்லை, அந்த இளம் நுங்கு இருக்கே—சாரு, சாருன்னு பேர் வெச்சுண்டு! அந்தப் பரிசுத்த பிரேமாத்மாவின் காலிலே விழுந்து கதறி மன்னிப்புக் கேக்கணும். ஆனா நான் மன்னிப்புக் கேட்டா, அந்தப் பெண் பிராணனையே விட்டுடும். அந்தக் குழந்தையோட அன்பும் எளிமையும் அப்படிப்பட்டது. அவ காலிலே வெக்கறதா நினைச்சுத்தான் இந்த இரண்டு தாமரைப் பூவை உன் பாதத்திலே வெச்சேன்'' என்று நாத் தழுதழுக்கக் கூறினாள் பைரவி.

''பைரவி தேவீ! இப்படியெல்லாம் பேசாதேள். சாரு உங்க மாட்டுப் பெண். அவகிட்ட என்ன மன்னிப்பு வேண்டிக்கிடக்கு? உரிமையோட, ஸ்வாதீனப் பிரியத்தோடே அவளைக் கூப்பிடுங்கோ! 'உன் அகமுடையானுக்குப் புஷ்ப ஹாரம் போட்டிருக்கேன்; அப்படியே கிருஷ்ண சைதன்யர் மாதிரி இருக்கான் வந்து பாரு'ன்னு அழைச்சுண்டு வாங்கோ!'' என்றார் ராமகிருஷ்ணர் ஓரளவு பாவ சமாதியிலே.

எவ்வளவோ முறை அதிகாரத்தில் ஓங்கி எழுந்து அவ்வீட்டை நிரப்பியிருக்கும் பைரவியின் குரல் இப்போது முதல் முறையாகவும், கடைசி முறையாகவும் அன்பிலே ஓங்கி ஒலித்தது. ''அம்மா, சாரதே! செல்ல மாட்டுப் பொண்ணே! இங்கே ஓடிவா! உன் அகமுடையான் கிருஷ்ண சைதன்யமா ஜொலிக்கிறான், வந்து பாரு'' என்று ஆரவாரமிட்டாள்.

இலை மறைவு காய் மறைவாகவே புருஷனைப் பார்த்துள்ள சாரு, இப்போது ஒரு பெரிய மநுஷியின் முன்னால் நேருக்கு நேராகக் கணவரைப் பார்க்க லஜ்ஜை கொண்டாள்.

ஆனால் பைரவி விடவில்லை. அந்தக் கோமளக் கொடியை அள்ளிப் பிடித்துக்கொண்டு வந்து, அன்பு விருட்சத்தின் எதிரே நிறுத்தினாள்.

ராமகிருஷ்ணரின் நயனங்கள் சமாதி நிலையில் சொருகிக் கொண்டிருந்தன. தேகத்திலிருந்து கருணைக் கிரணங்கள் பிரவகித்துக் கொண்டிருந்தன.

அந்த உன்னதம் ஒருபுறம், பைரவியின் புதிய அன்பு எழுச்சி ஒருபுறம், அதன் பிரதியாகத் தன்னிடமே உதித்த நிறைவின் அழுத்தம் ஒருபுறம், இயல்பான நாணம் ஒரு புறம் என்று நான்கு

# பாதுகாப்பான பூச்சு



# நன்றி—நீடித்த டூலக்ஸுக்கு

## டூலக்ஸ் ஒருபொழுதும் திட்டுத்திட்டாகவும் உரிந்தும் போகாது. நீடித்திருக்கும் பரப்பு— முற்றிலும் ஒரே சிராக இருக்கும்.

உங்கள் வீட்டிலும் நீடித்திருக்கின்ற டூலக்ஸ் பெயின்ட் பூசியிருக்கிறீர்களா? அதன் செலவு, நீங்கள் நினைப்பதைவிட குறைவுதான்.

★ **பரந்த பரப்பிற்கு பூசக்கூடியது:**
டூலக்ஸை குறைவாக உபயோகித்து அப்பழுக்கில்லாமல் விரிவாக பரந்த இடத்திற்குப் பூசமுடியும்—குறைந்த அளவே தேவைப்படுகிறது; செலவும் குறைவாகிறது..

★ **பூரணமாகக் கழுவக்கூடியது:**
சோப்பு-நீர் கொண்டு கறைகள், தூசு அழுக்கு ஆகிய வற்றை சுலபமாகக் கழுவிவிடலாம்.

★ **மங்காத, உரிந்துபோகாத முற்றிலும் ஒரே சீரான பரப்பு:**
தரப்பரிசோதனை செய்யப்பட்ட கூட்டுப் பொருள்களினாலானது டூலக்ஸ்.

**தேர்ந்தெடுக்க 121 வண்ணஜாலம்:**
உங்களுக்கு உகந்தது எந்த நிறம் என்று நீங்கள் எப்பொழுதாவது எண்ணியதுண்டா? தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள அநேகவித நிறங்களுள் உங்கள் வீடு அழகுடன் திதழ்வதற்கு உள்ளம் உற்சாகமூட்டும் எண்ணிறந்த நிறத் திட்டங்கள் இருக்கின்றன. உங்கள் கன்ட்ராக்டருடன் கலந்துபேசி அவரது ஆலோசனையைக்கேட்டு டூலக்ஸ் நிறவகை அட்டையைப் பாருங்கள்.




டூலக்ஸ்—இந்தியாவில் தயாரிப்பாளர்களும் விற்பனையாளர்களும்:
தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்.

டூலக்ஸ்—இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், லண்டனின் டிரேட் மார்க்.
பதிவுபெற்று உபயோகிப்பவர்கள்: தி ஆல்கலி அண்டு கெமிகல் கோர்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்.

திசைகளிலும் நான்கு சக்திகள் சாரதையை மொத்தி மோதின.

''அகத்துக்காரர் எப்படி இருக்கிறார்?'' என்று பட்டாபிராமனைக் காட்டி சீதா தேவியிடம் கௌசல்யை எப்படிக் கேட்டிருப்பாளோ, அப்படிக் கேட்டாள் பிராம்மணி.

சாரதை திக்கு முக்காடினாள். ''நன்று'' என்ற ஒரே வார்த்தையைச் சொன்னாள். ஒரு விநாடிதான் அங்கு நின்றாள். உள்ளே ஓடி மறைந்தாள்.

பைரவியும் வெளியேறினாள். அதோடு சாரதையின் சரித்திரத்திலிருந்தே வெளியேறி மறைந்தாள்.

மறைந்துதான் விட்டாளா? அவளது ஆணவமும், அதை வென்ற அன்பும், அவள் செய்த சிறுமைகளும், அந்தச் சிறுமைகளை உணர்ந்த அவளது பெருமையும் சாரதாவின் சரித்திரத்தில் மறையாத சுவடுகளைப் பதித்து விட்டனவே! மாறுபட்ட குணங்களைக் கொண்ட பாத்திரங்களை அருகருகே காட்டி வருணிப்பதில் (Study in contrast) கதாசிரியர்கள் மகிழுவர். தேவி பராசக்தி இப்படிப்பட்ட சுவையான கதையை பிராம்மணி, சாரதை இவர்களைச் சேர்த்துக் காட்டிப் புனைந்திருக்கிறாள்!

''இதென்ன மாமா, தாமரைப் பூ! உங்களுக்கு மாலை போட்டதோடு நில்லாமல் பைரவி அர்ச்சனை வேறு பண்ணினாளா?'' என்று கேட்டார் ஹ்ருதயர். பைரவி போனதிலே அவருக்கு உள்ளூறப் பரம திருப்தி. தான் விரட்டி அவள் போகாமல், தானாகவே பக்குவமாக வெளியேறி நல்ல பெயர் வாங்கிக் கொண்டதில் சிறிது வருத்தமும்கூட.

ராமகிருஷ்ணர் அதற்கொன்றும் பதில் சொல்லாமல், ''ஹ்ருதே! ஏழு வருஷத்துக்கு முன்னாடி நாம் ஜயராம் பாடி போனோமே, அப்போ வழியிலே நீ தாமரைப் பூப் பறிச்சுண்டு வந்தியே, அதை என்ன பண்ணினே!'' என்றார்.

அதுகாறும் சொல்லாதிருந்த இரகசியத்தை ஹ்ருதயர் அவிழ்த்துச் சொன்னார்: ''சின்ன மாமியோட பாதத்திலே வெச்சு வணங்கினேன்.''

ராமகிருஷ்ணர் மந்தஹாச முகத்தவராக யோசனையில் ஆழ்ந்தாற்போலிருந்தார். ''ஓகோ, அவளை நமஸ்காரம் பண்ணணும்னு சொன்னே. அவ நடுங்கிண்டு உள்ளே ஓடினா. நீ துரத்திண்டே போனியே, அப்போ தாமரைப் பூவாலே அவளுக்கு அர்ச்சனை பண்ணினயாக்கும்!'' என்றார்.

ஹ்ருதயர் வெட்கத்தில் குனிந்த தலையுடன் 'ஆமாம்' போட்டார்.

சாரதையிடம் பைரவி இறுதியாக விடைபெறும்போது இருதய கமலத்தையே அர்ப்பணித்துப் போனாள். ஹ்ருதயரோ தொடக்கத்திலேயே கமலத்தைச் சாதாரணப் பூவாக நினைத்து அர்ப்பணித்தார். இவர் இனி என்னென்ன செய்யப் போகிறாரோ?

சின்ன மாமி பாடம் படிப்பதே ஹ்ருதயருக்குப் பிடிக்கவில்லை. பைரவி இருந்த வரையில் பேசாதிருந்த ஹ்ருதயர் இப்போது மாமியிடம் தமக்குள்ள பொறாமை வெளிப்படாமலே நாசூக்காக பல முறை ஆட்சேபக் குரல் எழுப்பினார். ராமகிருஷ்ணர் சிரித்தே மழுப்பினார்.

ஒரு நாள் மாமாவும் மருமானும் போஜனம் செய்து கொண்டிருந்தனர். ராமகிருஷ்ணர் சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டே உண்டார். மதனியின் சமையற் திறனுக்குச் சபாஷ் கொடுத்துக் கொண்டும், மனைவியின் சமையலைக் கேலி செய்து கொண்டும் உண்டார். மதனி பக்குவம் செய்திருந்த உணவு வகைகளை உண்ணும் போது, ''ஆங்! இது வைத்ய ராமதாஸ் சரக்கு'' என்பார். சாரதை தயாரித்த வியஞ்சனங்களை உண்கையில், ''இது ஸ்ரீ நாத் ஸேன் சரக்கு'' என்பார்.

ராமதாஸ் என்பவர் மருத்துவத் துறை ஸ்பெஷலிஸ்ட். ஸ்ரீ நாத்ஸேன் ஒரு கற்றுக்குட்டி வைத்தியர்.

உடனே ஹ்ருதயர் மாமியிடம் தம் பரிவைக் காட்டுமுகமாக, ''அது சரி, ஆனால் ஸ்ரீநாத் ஸேன் நாம் கூப்பிட்ட குரலுக்கெல்லாம் கிடைப்பார். சின்ன சுளுக்கை வழிச்சுவிடக் கூட அவர் காத்திண்டிருக்கார்; வைத்ய ராமதாஸை நம்மாலே சமாளிக்க முடியுமா? உங்க சுசுரூஷைக்கு இந்தக் கத்துக்குட்டி எப்பவும் சித்தமாயிருக்கே'' என்றார்.

''ஆமாம், ஆமாம், **இவ எப்பவுமே கூட இருக்கா**'' என்று அழுத்தம் திருத்தமாக, சுவைத்துச் சொன்னார் ராமகிருஷ்ணர் — மதனியின் சமையலை விடவும் சுவைத்துக் கொண்டு!

ஹ்ருதயர் ஏதோ ஓர் இனிப்பைத்தான் உண்டார்; இருப்பினும் அவர் முகம் கசந்து வழிந்தது.

ராமகிருஷ்ணர் வீட்டிலில்லாதபோது தம் 'சொரூபத்தை'ச் சிறிது கலைக்கலானார் ஹ்ருதயர்.



''எழுத்தறிவு இருந்தாத்தான் ராமாயணம், தேவீ மாஹாத்மியம் படிக்கலாம்னு மாமா சொல்கிறுர். ஆனு, இந்த நாளுலே கன்னுபின்னுன்னு நாவல், நாடகம்னுட்டு எழுத ஆரம்பிச்சிருக்கா! அதையெல்லாமும் படிக்க ஆரம்பிச்சுடுவேள். போறும் இந்தப் படிப்பு. நான் மாமாகிட்ட சொல்லி ஜயிக்க முடியல்லே. நீங்களேதான் சொல்லணும்'' என்றுர் சாரதையிடம்.

'நான் படிப்பை எப்படிப் பயன் செய்து கொள்ளப்போகிறேன் என்பதை **அவர்** அறிவதுபோல், ஹ்ருதயர் அறிய முடியுமா? இவர் வார்த்தையை எப்படிக் கேட்பது?' என்று கலங்கினுள் சாரதா.

குழந்தை லக்ஷ்மியோ ஹ்ருதயரிடம் ''அத்தான்! நீ சும்மாயிரேன். சித்தப்பா வரத்துக்குள்ளே நானும் சித்தியும் இந்தப் பாடத்தைப் படிச்சுடணும்னு இருக்கோம். நீ இடைஞ்சல் பண்ணுமே இரு'' என்று அடித்துக் கூறினுள்.

'சின்னூண்டு மாமி'யின் எதிரில் அந்த முந்திரிக் கொட்டை தன்னைத் தாக்கியதில் ஹ்ருதயர் தம்வசம் இழந்து விட்டார். உள்ளத்தில் பம்மியிருந்த பொருமை விம்மி வெளி வந்தது.

மரியாதை முறைகளை அடியோடு மறந்து சாரதையிடமிருந்த புத்தகத்தை அப்படியே பிடுங்கி எறிந்தார்.

லக்ஷ்மியின் புத்தகத்தையும் பிடுங்கப் போனுர். ''எங்கிட்டே வந்தியோ, தெரியும் சேதி'' என்று லக்ஷ்மி கூச்ச லிட்டாள்.

ஆனைப்பட்ட பைரவியையே ஆட்டி வைத்த ஹ்ருதயரும் அஞ்சி நிற்கவேண்டியதாயிற்று.

ராமகிருஷ்ணர் வந்தார்.

அவரிடம் சாரதை எதுவும் சொல்லவில்லை. மன்னிப்பும், புறங் கூருமையும் சாரதைக்கு எலும்பையும், சதையையும் விட நெருங்கிய இயற்கை அங்கங்கள்!

ஆனல் மறுநாளிலிருந்து பண்டாரி வரவில்லை. வீட்டில் நிம்மதியாகப் படிக்க முடியாது என்பதால் லக்ஷ்மி பள்ளிக்குப் போகத் தொடங்கினுள்.

பள்ளியிலிருந்து திரும்பி வந்து, அன்றன்று நடந்த பாடத்தைச் சித்திக்குச் சொல்லிக் கொடுப்பாள்.

பண்டாரியை நிறுத்த முடிந்தது, ஹ்ருதயரால். ராமகிருஷ்ணர் பாடம் போதிப்பதை யாரே நிறுத்த முடியும்?

ஆனல் இரண்டு கட்டங்களில் ராமகிருஷ்ணரே பாடத்தை நிறுத்திவிட்டு, மலைத்து நிற்குமாறு செய்தாள் எளிய சாரதாமணி!

**சா**ரதை நெல் குத்திப் புடைத்துக் கொண்டும் சலித்துக் கொண்டும் இருந்தாள். பாலகிருஷ்ணன் குளம்புப் புழுதியிலேயே திளைத்துத் தனியழகு கொண்டிருந்ததுபோல், உமியும் தவிடும் அபிஷேகித்த சாரதையும் தனியழகுடன் பொலிந்தாள்.

ராமகிருஷ்ணர் வந்தார். ''இந்தச் சல்லடை நல்லதை யெல்லாம் கீழே விட்டுட்டு, கல்லையும் கட்டியையும் பிடிச்சு வெச்சுக்கிறது. முறம் கல்லைத் தூக்கி எறிஞ்சுட்டு நல்லதை மட்டும் தன்கிட்ட வெச்சுக்கிறது. சிலபேர் சத்சங்கத்தை உதறி விட்டுச் சல்லடையா யிருப்பா. சில பேர் அசத் சங்கத்தை உதறிவிட்டு முறமாயிருப்பா. நீ முறமாயிருக்கணும்'' என்றுர்.

சாரதை அவரை ஒரு கணம் நேருக்கு நேராகப் பார்த்தாள். அதிலே ஓர் எதிர்ப்பு, ஓர் உறுதி — அதே சமயத்தில் மன்னிப்புக் கோரும் பாவனை, ஆயினும் எதிர்ப்பைவிட மாட்டேன் என்கிற சங்கற்பம் அனைத்தும் மிளிர்ந்தன.

அடுத்த கணமே கண்ணைத் தாழ்த்திக்கொண்டாள்.

''என்ன அப்படிப் பார்த்தே! நான் சொல்றது உனக்கு ஏற்கலை போலேயிருக்கு. அதற்காகப் பரிதாபமாக மன்னிப்பும் கேட்கிறே. ஆனுலும் 'நான் இப்படித்தான் இருப்பேன்'னும் சொல்ருப்பலே இருக்கு. என்ன சமாசாரம், ஊம்!'' என்றுர் ராமகிருஷ்ணர்.

சாரதை தட்டுத் தடுமாறிப் பதில் சொன்னுள்: ''என்னுலே...என்னுலே... நல்லவா, கெட்டவான்னு... பிரிச்சு வெக்க.... பிரிச்சு வெக்க.... ஆமாம்... முடியாது...ஆமான்னு...என்னுலே முடியல்லே...குழந்தை அழுக்கிலே...விழுந் துடுத்துன்னு போய் அதைத் தூக்காம...தூக்காம...?''

சாரதை அழுது விடுவாள் போல் கழுத்துத் தசைநார்கள் கனத்தன. பேச்சுப் பொங்கி வந்தது.

ராமகிருஷ்ணர் மலைக்காமல், பிரமிக்காமல் என்ன செய்ய முடியும்?

தான் ராமகிருஷ்ணரிடம் கற்றதையெல்லாம் தேவி பிற்காலத்தில் பெரிதுபடுத்தி வர்ணித்ததில்லை. ஆனுல் ஆயுள் முழுவதும் தான் கற்காத ஒரு பாடத்தை இறுமாப்பே இல்லாமல் சொல்வாள்: ''குழந்தை நாளிலிருந்து



நான் யார்கிட்டேயும் இருக்கிற குற்றத்தைப் பொருட்படுத்தினதே இல்லே. என் ஜன்மாயுசில் நான் கத்துக்காத பாடம் அதுதான்'' என்பாள்.

பிறர் தவறு அவளுக்குத் தெரியாமலில்லே. திருத்த முடிந்தவர்களேத் திருத்தினுள். பரம இதமாகத் தவற்றை உணர்த்தித் திருத்தினுள். ஆனுல் ஒருவர் தவறு செய்கிருர் என்பதால் அவரிடம் அவளது அன்பில் குறைவு ஏற்பட்டதே யில்லே.

ராமகிருஷ்ணர் தம்மாலும் அவளுக்கு ஒரு பாடம் போதிக்க முடியவில்லே என்பதில் பூரித்தார்.

அவரால் இன்னெரு பாடமும் போதிக்க முடியாமல் போயிற்று.

லாஹா வீட்டு வேலேக்காரி ஏதோ காரியமாக ராமகிருஷ்ணரின் இல்லத்துக்கு வந்து போனுள். அவள் இடுப்பில் லாஹா வீட்டுக் குழந்தை ஒன்று: அவள் கையைப் பிடித்துக் கொண்டும் அதே வீட்டுக் குழந்தை இன்னென்று. 'ராசா, ராசா' என்று அந்தக் குழந்தைகளே அவள் அருமைக்கிட்டாள்.

ராமகிருஷ்ணர் சாரதையிடம் சொன்ஞர்: ''இந்தக் குழந்தைகள் கிட்ட அந்த வேலேக்காரி எவ்வளவு ஒட்டுதலாயிருக்கா? அதுகளுக்காக எத்தனேயோ வேலே செய்யரு. இருந்தாலும் உள்ளுக்குள்ளே 'இதுகள் என் குழந்தைகள் இல்லே; நான் தாதிதான்'னு அவளுக்கு நன்ஞத் தெரியுமோ இல்லியோ? நாமும் இந்த லோகத்திலே அப்படித்தான் இருக்கணும். 'என்னமோ இந்த மனுஷாளுக்கு மத்தியிலே வேலே செய்யரோம். இருந்தாலும் இவா நம்மவாள் இல்லே. அம்பாள் ஒருத்திதான் நம்மவள்'னு நினேச்சுண்டு இருக்கணும்... என்ன அப்படிப் புதிராப் பார்க்கறே... சரி, சரி. அன்னிக்கு மாதிரி இதுவும் உனக்கு ஏற்கலே....ம்...அப்படித்தானே?''

''இவா என்னுடையவா இல்லேனு யாரை எப்படித் தள்ளறது? தாதியும் யஜமான் வீட்டுக் குழந்தையும் மாதிரியா?... இல்லே... இல்லவே இல்லே... சொந்த அம்மா, சொந்தக் குழந்தைதான்'' என்று குழறினுள் சாரதை.

'அம்மா குழந்தை' என்றவுடன் அவள் உள்ளம் குழைந்து விட்டது. உள்ளே குமைந்த குழந்தை ஆசை குமுறிக் கொண்டு கண்ணீராக வந்தது.

''என்னம்மா இப்படி அசடாட்டமா அழறே?'' என்று ராமகிருஷ்ணர் பதறிக் கேட்டார். ''அம்மாவாவது, குழந்தையாவது? அம்பாள் ஒருத்திதான் அம்மா. நாமெல்லாம் குழந்தை. நீ ஏன் வேறே ஏதோ அம்மா — குழந்தையைப் பற்றி நினேக்கிறே. ஊஹூம்! உனக்கு இந்த எண்ணம் வரவேபடாது. கொஞ்சம் கொஞ்சமா அது உன்னே இழுத்துண்டு போகும். நீ என்னே இழுக்கப் பார்ப்பே! ஊஹூம், ஊஹூம்!'' தலேயைக் குலுக்கி விட்டுக் கொண்டார், ராமகிருஷ்ணர். ''உனக்கு அம்மாவாகணும்னு ஆசையிருந்தா உங்காத்திலே நடந்த துக்க சம்பவத்தை யெல்லாம் உடனுக்குடனே நெனேச்சுக்கோ. நீ கொஞ்சி விளேயாடின குழந்தைகள் சவமாகி உன்னேப் பயமுறுத்தினதை நெனேச்சுக்கோ'' என்ருர்.

இருவரது இதய ஆழம் வரையில் இந்தச் சம்பவம் பாய்ந்து விட்டது.

மறுநாள் காலே.

சாரதை வாசலில் சாணம் தெளித்து இழைக் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். உள்ளத்திலே ஓர் அலங்கோலம் இழையிட்டபடியே இருந்தது.

ராமகிருஷ்ணர் ஆலங்குச்சியால் பல் விளக்கியபடி, ''அங்கே என்ன மேளச் சத்தம்? ஓகோ, ஆண்டு நிறைவா? ஆமாம், இப்படித்தான் எத்தனேயோ வீட்டில் புண்யாகவாசனம், தொட்டில், ஆண்டு நிறைவுன்னு அமர்க்களப்படறது. அப்புறம் ஒரு நாள் எல்லாரும் மௌனமாகத் தூளி கட்டி அதே குழந்தையைத் தூக்கிண்டு போரு...'' என்ருர்.

அடக்கத்தின் உருவான சாரதை, பணிவின் பெட்டகமான சாரதை, பொறுமையின் பூஷணமான சாரதை வாய்விட்டுக் கொட்டினுள்: ''உலகத்திலே பிறக்கிற அத்தனே குழந்தைகளும் இப்படித்தான் செத்துப் போயிடறதா? அப்படி இருந்தா இந்த உலகம்னே ஒண்ணு இருக்க முடியாதே!''

''ஹா!'' என்ருர் ராமகிருஷ்ணர். அவர் ஒரேயடியாக அதிர்ந்து விட்டார். ''விஷப் பாம்பின் வாலே மிதிச்சா உடனே அது சீறிண்டு வர மாதிரின்னு பேசரு! இவ ஒண்ணுமே தெரியாதவள்னு நினேச்சேனே, எத்தனே தப்பு! ரொம்பத் தெரிஞ்சவளாயிட்டா! 'மகாப் பிராக்ஞி'யாயிட்டா! 'எல்லாக் குழந்தைகளுமா செத்துப் போறது?' — கேட்டாளே ஒரு கேள்வி, போட்டாளே ஒரு போடு!''

ராவண வதத்துக்குப் பின் ஜானகியின் மனத்தை இம்மியும் புரிந்து கொள்ளாததுபோல் ராகவன் கொடுமை பேசிய ரீதியில் ராமகிருஷ்ணர் பேசுகிருர்!

சாரதையால் தாங்கவே முடியவில்லே. கோலத்தை அரைகுறையாக விட்டு உள்ளே ஓடினுள்! (தொடரும்)



# அம்மா

ரா. கணபதி

## 13. கிருகலக்ஷ்மி

இல்லது என் இல்லவள் மாண்பானல்? உள்ளது என்
இல்லவள் மாணுக்கடை? — திருக்குறள்

இளம் செடிகளில் 'சூதுக்காய்' என்று ஒன்று காய்ப்பதுண்டு. காய்த்து வருவது போலிருக்கும். ஆனல் கருகி விழுந்துவிடும். செடி வலுப்பெற்று முற்றிய பிறகுதான் காய் அதற்குரிய திட்பத்துடன் அமைந்து நிற்கும். இளம் சாரதையின் 'பிள்ளை ஆசை' சிறிய செடியின் சூதுக்காய் போல் பருவத்துக்கு முன்பே தோன்றிப் பயனின்றி உதிர்ந்துவிடக் கூடாது என்று ராமகிருஷ்ணர் விரும்பினர். அந்த ஆசையை நன்கு புரிந்து கொண்டு போஷிக்கிற திறன் அவளுக்கு உண்டாகும்போதே அதற்கு அவள் இடம் தரவேண்டும் என்று கருதினர். நிச்சயமாக அவள் தாய்மரமாகவிளங்கத்தான் போகிருள்; தாயன்பின் பசுமையைக் கொத்துக் கொத்தான இலைகளாகக் கிளைக்கத்தான் போகிருள்; தாய்மைத் தியாகத்தைப் பழங்களாகக் குலுங்கவிடத்தான் போகிருள். அவள் உலகத்துக்கு வந்திருப்பதே இதற்காகத்தான்! ஆனல் இப்போதே அவள் அவசரப் படுவதை அவர் விரும்பவில்லை. மலர் உண்டாகும் முன்பே தேன் துளித்தால் அதைச் செடியானது, எதில், எப்படித் தேக்கி வைத்துக் கொள்வது? தாய்மைத் தேனைத் தாங்குவதற்கு ஒரு விவேக மலர் வேண்டும். அந்த விவேகம் சாரதையிடம் பிறக்கவில்லை. அதனல் தான் தாய் — குழந்தை என்பதை ஒரு சரீரத்தில் உண்டாகிற இன்னெரு சரீர விஷயமாக எண்ணுகிருள். சரீர 'இன்ப'த்தை அதியற்புதமாகத் துடைத்தெறிந்த பின்பும் சரீர ரீதியான தாயை, சரீர ரீதியான குழந்தையை எண்ணித் தவிக்கிருள்! இது அபத்தம் அன்ருே? இதனல் தான் ராமகிருஷ்ணர் சாரதையை நிர்தாட்சிண்யமாக நடத்தி விட்டார். ராவண வதத்துக்குப் பின், 'உனக்கு இஷ்டப்பட்ட இடத்தில் நீ போய் வசிக்கலாம்' என்று ஜானகியிடம் கூறிய ராமசந்திரன் உண்மையில் அவளைப் புரிந்து கொள்ளாமற் போகவில்லை. அப்படிச் சொன்னதன் மூலமே, அவள் தனது தூய்மையை உலகுக்கெல்லாம் எடுத்துக்காட்டுமாறு செய்தான். ராமகிருஷ்ணரும் சாரதையைப் புரிந்து கொள்ளாமற் போகவில்லை. இப்போது உள்ள சாரதையை மட்டுமின்றி, இனி எதிர்காலத்தில் உருவாகப் போகிற சாரதையைக்கூட அவர் நூறு சதவிகிதமும் புரிந்து கொண்டதால்தான் கடுமையாக நடந்து கொண்டார். சரீரப் பிரக்ஞையின்றியே அன்பு மயமான இல்லறம் நடத்துவது போல, சரீரப் பிரக்ஞை நசித்த தாய்மையை அவள் உரிய பருவத்தில் ஏற்கவேண்டும் என்று கருதி, அவளது பிள்ளை ஆசையைக் கிள்ளி எறிய முனைந்தார். 'எல்லோரையும் உன் குழந்தைகளாகப் பார். புதிதாக உன் குழந்தை என்று பெற்றெடுக்க வேண்டியதே இல்லை' என்று அவளுக்கு உபதேசிப்பதற்கு இது சமயமல்ல. இப்போதே அவள் வெளிப்படையாக அனைவரிடமும் தாய்மை கொண்டாட ஆரம்பித்தால் அந்தப் பதினைந்து வயதுப் பெண்ணின் அடக்கமும் பணிவும் பறி போய்விடும். அவர் சொல்லாமல் அவளே 'அனைவரும் என் குழந்தைகள்' என்று உணரத்தான் போகிருள். அந்த பாவத்துக்கு ஒரு கம்பீரமான வயது, அந்தஸ்து எல்லாம் வேண்டும். அம்மா என்ற பாவம் வந்தபின் கம்பீரம், வயது, அந்தஸ்து எல்லாமே மறைந்து அன்பு ஒன்றுதான் சுயம்பிரகாசமாக நிற்கும். ஆனலும் கோபுரம் கட்டி முடிந்தபின் சாரத்தை எடுத்து விட்டாலும், கோபுரத்தை எழுப்பச் சாரம் கட்டிக் கொள்ளத் தானே வேண்டும்?

---

சாரதை புறக்கடையில் சோக மயமாக அமர்ந்தாள். 'கணவரிடம் தான் நடந்து கொண்டது தவருு? கணவர் தன்னிடம் நடந்து கொண்டது தவருு?

ஏன் 'அம்மா'— ஆசை'யை இப்படிக் கிள்ளுகிறார்?'

காலடிச் சத்தம் கேட்டது.

எழுந்து நின்று, முக்காட்டை இழுத்து விட்டுக் கொண்டாள்.

ராமகிருஷ்ணர் பேசினார், கனிய : '' அம்மா, உனக்கு எத்தனையோ பாடம் சொல்லிக் கொடுத்தேன். இப் போதைக்கு இரண்டை மட்டும் கெட்டி யாகப் புடிச்சுக்கோ — வைராக்கியம், பக்தி இந்த இரண்டைத்தான்.''

தன்னையும் அறியாமல், ''அப்படியே ஸ்வாமீ'' என்றாள் சாரதை. அவள் குரல் கம்மியது.

காலடிச் சத்தம் விலகிச் சென்றது.

' என்னைவிட எல்லாவிதத்திலும் **அவர்** மகா பெரியவர். அவர் சொல்வ தைக் கேட்பது தவிர நான் என்ன செய்யக் கிடக்கிறது? இப்போது அவர் சொன்னதற்கு என்ன அர்த்தம்? பக்தி என்பது பகவானிடம் அன்பு; அதைச் செய்யச் சொன்னார். வைராக்கியம் என்பது மனிதர்களிடம் பாசமே இல் லாமலிருப்பது. குழந்தை, குழந்தை என்று ஏங்குகிற எனக்கு அதை அப்பிய சிப்பது கஷ்டம்தான். ஆனாலும், 'பகவா னிடம் பக்தி, மனிதர்களிடம் பிரேமை இவற்றையே வளர்க்க வேண்டும்' என்று வழக்கமாகச் சொல்கிற **அவரே** இன்று 'பகவானிடம் பக்தி, மனிதர்களிடத்தில் வைராக்கியம்' என்று சொல்கிறார் என்றால் அதற்குக் காரணம் இல்லாதிருக் குமா? காரணம் உண்டோ இல்லையோ, அவர் கிழித்த கோட்டை நான் ஏன் மீற வேண்டும் ?'

தான் பெறாத குழந்தைகளை அப் போதே தன்னிடமிருந்து விரட்டி விடத் தீர்மானம் கொண்டாள் அந்தப் பேதை, கண்ணீரும் கம்பலையுமாக.

காமம் எனும் தீய ஆசையைத் தீய்த் தாள் எளிதிலே. அப்படிச் சொல்வதும் தவறு. அந்த ஆசை அவளுக்குத் தோன் றவே இல்லை. ஆனால் தாயாகிற தூய ஆசையைத் தள்ளுவது தாங்கொணாத் துயரமாக இருந்தது. முன்பு தன் வீட்டுக் குழந்தைகளைக் குழியில் வைத்த போது துடித்தவள், இப்போது குழந்தை ஆசையையே குழியிலிட்டாள்.

**ரா**மகிருஷ்ணர் தாமும் உற்சாகமாக இருப்பார். மற்றவர்களையும் உற்சாக மாக வைத்திருப்பார். 'உற்சாகம்' என்பதால் கௌரவக் குறைவான அரட்டையோ, மதிப்



புக் குறைவான செயலோ அந்தச் சூழலில் இராது.

சாரதையின் உற்சாகம் குலேந்தது அவருக்குப் பொறுக்குமா? "இன்னிக்கு உனக்கு என்ன பாடம் தெரியுமா? தாம்பூலச் சுருள் மடிக்கச் சொல்லித் தரப் போறேன்" என்றார்.

ஓர் அழகான பீடா ராமகிருஷ்ணரின் அழகுக் கையிலிருந்து சாரதையின் உழைப்புக் கரத்துக்குப் போயிற்று.

"பார்க்கத்தான் அழகுன்னு நினைக்காதே! ருசியும் பொகு அழகு" என்றார்.

தாம்பூல முகியாக, ஜாதிபத்திரி மணத்தைப் பரப்பிக் கொண்டு விளங்கினள் சாரதை. காலையில் ஏற்பட்ட அமங்கல வாடை அனைத்தும் அடங்கியது. சௌமங்கலியம் கொழித்தது.

"நன்னுக் கவனிச்சுக்கோ! நன்னு கவனிக்கிறது என்ன, நீதான் ஒரு சின்ன நோட்டம் விட்டாலே புரிஞ்சிண்டுடுவியே! முதல்லே வெத்திலையை இப்படித் துடைக்கணும், அப்புறம் இப்படிக் காம்பைக் கிள்ளணும்....."

தாம்பூலக் கலை சகல சிங்கிநாதங்களுடனும் போதிக்கப்பட்டது.

சாரதையின் கரங்கள் அத்தகைய கலைப் பண்டம் ஒன்றைச் சிருஷ்டித்தது. கிராம்பு ஒன்றைக் குத்தி அதற்குக் கலசம் வைத்துக் கணவரிடம் நீட்டினள்.

'விடமு சேயவே' என்று மைதிலியிடமிருந்து ராகவன் தாம்பூலம் ஏற்றதைத் தியாகையர் பாடியது இந்தக் கட்டமே!

"இப்போ வெத்திலை போட்டுண்டால்? சாப்பாடு?" என்றார்.

"ஆமாம், ஆமாம்" என்று சமையற்கட்டுக்கு விரைந்தாள் அவள். ஏதோ அசட்டுச் சண்டையில் மனம் மட்கி, மன்னியை ஒண்டியாகச் சமையலில் விட்டுவிட்டோமே என்ற வெட்கத்துடன் அடுக்களைக்கு ஓடினள்.

வழக்கமாக என்ன சமையல் செய்ய வேண்டும் என்று கூறும் ராமகிருஷ்ணர், "நீ எது போட்டாலும் ஆனந்தமாகச் சாப்பிடப் போறேன். எனக்கு எதுக்கு இந்தச் சோற்று ஆசை?" என்றார்.

அன்றிலிருந்து அவர் சமையலைப் பற்றிப் பேசவேயில்லை. க்ஷண காலச் சங்கற்பத்துக்கு அத்துணை உறுதி!

அன்றிலிருந்து அவளும் பிள்ளைப் பேச்சை எடுக்கவில்லை. அவளுடைய சங்கற்ப பலம் மட்டும் சாதாரணமா?

உண்டபின் அவள் தந்த தாம்பூலத்தை அன்புடன் அங்கீகரித்தார் பகவான்.

"மன்னிகிட்டே சமையல் நன்னுக் கத்துண்டுட்டே. மன்னி எம்பிராய்டரி கூட நன்னுப் போடுவா. அதுவும் கத்துக்கோ. பொம்மனுட்டிகளுக்குத் தையல் தெரிஞ்சிருக்கிறது நல்லது" என்றார். அவர் கிழித்த கோட்டைத் தாண்டாத தையலாள் அந்தக் கலைகளைக் கசடறக் கற்றாள்.

**சா**ரதையை நன்றாக உருவாக்கி விட்டோம் என்ற திருப்தி ராமகிருஷ்ணருக்கு உண்டாகிவிட்டது. தெய்வ வழிபாடு, அந்தணாளர் உபசரிப்பு, அனைவரிடமும் அன்பு, அதிதி சத்காரம், பெரியோர்களிடம் மரியாதை, சிறியோரிடம் பரிவு, — என்றிப்படி அனைத்திலும் தேர்ச்சி பெற்று, அடக்கத்துடனும், நிம்மதியுடனும் அவள் கிருஹலக்ஷ்மியாகப் பரிணமிப்பதைக் கண்டு நிறைவு கொண்டார். தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்ப முடிவு செய்தார்.

ஆஹா! எப்பேர்ப்பட்ட அற்புத தம்பதி! எட்டு மாதங்கள் ஒரே கூரையின் கீழ் இருந்திருக்கிறார்கள் — முழுக்க முழுக்க குரு சிஷ்யர்களாகவே! அதிலேயே எந்தத் தம்பதியும் பெற்றிராத பேரானந்தப் பேரன்பில் திளைத்திருக்கிறார்கள்! 'அன்பும், அறனுமே இல்வாழ்க்கையின் பண்பும் பயனுமாகும்' என்று கூறி, அதற்குப் பின்னரே மனைமாட்சியின் நன்கலமாக மக்கட் பேற்றினை வைத்தார் வள்ளுவர் பெருமான். ராமகிருஷ்ணரும் சாரதையும் அன்பும் அறனும் பூரித்த இல்வாழ்க்கையைக் கண்டனர். மக்கட்பேறு மட்டும் இங்கு புதுவிதத்தில் உருவாகப் போகிறது!

**இ**ரவெல்லாம் மக்களுடன் பேசிக் களித்தார் ராமகிருஷ்ணர். அவர் தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்பப் போகிறார் என்பதால் ஊரார் தேன் குடத்தை மொய்க்கும் எறும்புகளாக அவரைச் சூழ்ந்து கொண்டனர்.

அன்று பிரஸன்னு அவரைக் கேட்டாள்: "சமாதியில் பேரானந்தம் அடைகிறாயே, கதாயீ! அது எப்படித் தான் இருக்கும்?"

"எனக்கும் அதைப் பூரணமாச் சொல்லணும்னுதான் ஆசை மாமீ! ஆனுச் சொல்ல முடியல்லியே, என்ன பண்ணுவேன்? சாதாரணமா, சாதகாளுக்கு மூலாதாரத்திலேருந்து மேலே மேலே ஒவ்வோர் ஆதாரமா குண்டலினி சக்தி ஏறும்போது பலவித அநுபவம் உண்டாறது. இருதயத்துக்கு குண்டலினி வரச்சே ஒரே திவ்விய ஜோதியா இருக்கும். அப்புறம், கழுத்துக்கிட்டே வரச்சே பகவத் ஸ்மரணை தவிர வேறெதுவும் இராது. எனக்கு அந்தமாதிரி சமயங்களிலே லௌகிகப் பேச்சைக் கேட்டா மண்டையில் தடியாலே ஓங்கி அடிக்கற மாதிரி இருக்கும்.



செல்வன் : ராஜேந்திரன்
செல்வி : சுந்தராம்பாள்

சேலம் மாவட்டம் சங்கரி துர்க் திரு S. K. பங்காரு நாயுடு அவர்கள் குமாரர்

செல்வன் : B. ராஜேந்திரனுக்கும், செல்வி : சுந்தராம்பாளுக்கும்,

திரு S. K. பங்காரு நாயுடு அவர்கள் குமாரர் செல்வன் : B. கோபால கிருஷ்ணனுக்கும், செல்வி : ஜானகி என்கிற உஷாராணிக்கும் சங்கரி துர்கில், திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்



செல்வன் : கோபாலகிருஷ்ணன்
செல்வி : உஷாராணி





(POLIOMYLITIS) இளம் பிள்ளை வாத (INFANTILE PARALYSIS) நோய் கண்ட தன் குழந்தை சாந்திக்கு (வயது $2\frac{1}{2}$) மூன்றே நாளில் குணப்படுத்திய, கோயமுத்தூர் தெலுங்குபாளையம் டாக்டர் V. அர்ஜுனன் அவர்கள் திறமையை, தன்போல் கஷ்டப்படுபவர்கள் அணுகி பயனடையும்படி மேற்படி குழந்தையின் தந்தை தர்மபுரி ஜில்லா அரூர் P. கந்தசாமி என்பவர் கேட்டுக் கொள்கிறார்.

இந்த திவ்ய ஜோதியையும், திவ்ய ஸ்மரணையையும் பற்றி முழுக்கச் சொல்ல...''

ராமகிருஷ்ணர் எச்சிலைக் கூட்டிச் சிரமத்துடன் விழுங்கிக் கொண்டே, தமது இதயப் பிரதேசத்தையும் கழுத்தையும் தடவிக் கொள்கிறார். அவருக்கு அவ்வளவு எளிதாகக் குண்டலினி அங்கு வியாபித்து விட்டாள்!

''எனக்கு ஆசைதான்... ஆனாலும்... ஆனாலும் சொல்ல முடியறதில்லை... அதுக்கப்புறம் இங்கே புருவ மத்தியிலே பரமாத்மாவுக்கும்... ஜீ—வா—த்—மா...''

ராமகிருஷ்ணரால் பேசவே முடியவில்லை. அவரது மென்னியை அம்பாள் அமுக்கிப் பிடிப்பது போல இருக்கிறது. இருப்பினும் பிரசன்னாவுக்குச் சொல்ல வேண்டும் என்பதற்காகப் பிரசன்ன முகத்துடன் தொடர முயலுகிறார்.

''ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் நடுவிலே... மெல்லிசா... ஒ...ரு தி...ரை...''

ராமகிருஷ்ணர் சமாதிநிலை எய்தி விட்டார்.

அவரது உந்நத நிலையின் அலைகள் அங்கிருந்தோரின் உட்புகுந்தது. அவர்களும் க்ஷண காலம் விதிர் விதிர்த்துப் போனார்கள்.

அவருக்குச் சமாதி கலைந்தது. சாந்தமயமானார்.

கூடியிருந்தவர்களுக்கோ இன்னமும் உள்ளூற ஒரு கம்பனம் இருந்தது.

ராமகிருஷ்ணர் கண்களில் நீர் ததும்ப, ''பிரஸன்னா மாமி! எனக்கு வஞ்சனையில்லை. உங்களுக்கு ஒளிக்காம எல்லாத்தையும் சொல்லணும்னுதான் ஆசை. ஆனா அம்மா என்னை விடமாட்டேங்கறா!'' என்றார் குழந்தையாக.

பிரஸன்னா அவர் பாதத்தில் பணிந்து விக்கினாள்:

''இந்த ஊருக்கே மங்கள தீபமா இருந்துண்டிருந்தே! தக்ஷிணேசுவரத்துக்குப் போறேயேன்னு இருக்கு. இந்த ஆனந்தம்... அதுவும் இன்னிக்கு நீ தந்த பரவசம் இனி மேலே என்னிக்கு, யாராலே கிடைக்கப் போறது?''

''உங்களுக்கெல்லாம்தான் கிலேசம். சின்ன மாமி தேவலை. ஒரு பரவசமும் இல்லாம அவ பாட்டுத் தூங்கிண்டிருக்கா...'' என்று கேலியாகச் சொன்னார் ஹ்ருதயர்.

ஆம், சுவரோடு ஒட்டியபடி தூங்கிப் போயிருந்தாள் சாரதை.

''அடாடா, எத்தனை பெரிய விஷயங்களையும் அநுபவங்களையும்கோட்டை விட்டுட்டு இந்த அசட்டுப் பெண் உழைப்பா உழைச்சு அலுத்துப் போய்த் தூங்கிடுத்து!'' என்று அங்கலாய்த்தாள் பைன் வீட்டுப் பெண் ஒருத்தி.

'அவ தூங்கினது ['] எங்கம்மா வேலைன்னு!' என்று எண்ணி ராமகிருஷ்ணர் சிரித்தார். ''அவ மட்டும் தூங்கலைன்னா இன்னிக்கு இங்கே நடந்த பரவசத்திலே ஒரேயடியா உயரக் கிளம்பிப் போயே போயிருப்பா. நீங்கள்ளாம் ஆவேச நிலைக்குப் போனதைப் பெரிசா நினைச்சுக்கறேள். நான் சொல்றதைத் தப்பா எடுத்துக்காதேள், உள்ளதைச் சொல்றேன்: அரை ஆழாக்குப் பாலை ஒரு பத்துப் படி அண்டாவிலே விட்டுக் கோட்டை அடுப்பு மேலே வெச்சா, உடனே அந்தப் பால் பொங்கி அண்டா விளிம்பு மட்டும் வந்துடும். அப்போப் பார்த்தா அண்டா முழுக்கப் பால் இருக்காப்பலே இருக்கும். ஆனா, அடுப்பிலேருந்து பாத்திரத்தை எடுத்தவுடனே அது இருந்த இடம் தெரியாமல் அமுங்கிப் போகும். உங்களுடைய ஆவேச அநுபவம் அப்படித்தான் பொங்கித்து; அடங்கியும் போச்சு! இந்தக் குட்டி இருக்காளே, அவ பத்துப் படியும் பால் ரொப்பின அண்டா. பொங்கறத்துக்கு நாழி ஆகும்; ஆனா பொங்கித்துன்னா அப்படியே முக்கால் வாசி வெளிலே போயிடும். ஆனபடியால் அவ பரவசத்திலே விழாமே அசட்டுப் பெண்ணா உழைச்சுக் கொட்டிட்டுத் தூங்கினதே நல்லது'' என்றார்.

''என்னடி சாரு, இப்படி அடியோட மாறிப் போயிட்டியே!'' என்று ஜயராம்பாடி தோழிகள் சாரதையைச் சூழ்ந்து கொண்டு ரகளை செய்தனர்.

காமார்புகுரிலிருந்து ராமகிருஷ்ணர் தக்ஷிணேசுவரம் சென்றபின், ஜயராம்பாடிக்குத் திரும்பிய சாரதையிடம் பொலிந்த மௌன காம்பீர்யத்தைக் கிராமாந்தரத் தோழிகள் புரிந்து கொள்ளவில்லை. தங்கள் சாரு மாறிவிட்டது தெரிந்தது. மாற்றம் எப்படிப் பட்டது என்று தெரியவில்லை. ''ஆத்துக்காரரோடு ஏழு மாசம் குஷியா இருந்துட்டு, இப்போ தனிச்சுத் தவிக்கிறா! நம்ம பேச்சுப் பிடிக்குமா?'' என்றனர். இன்னும் எதையோ கொச்சையாக, பச்சையாகச் சொன்னார்கள்.

சாரதைக்கு அந்தப் பேச்சு குமட்டியது. ''பேத்தாதேள்டீ'' என்றாள், பொறுக்க முடியாமல்.

''உள்ளூறப் பிடிச்சுருக்கு, பேத்தல்னு வெளிக்குச் சொல்றயாக்கும்!''

''உள்ளூறத்தான் சொல்றேன் — பேத்தல்னு'' என்றாள் சாரு அழுத்தமாக.

அவர்களுக்கு மட்டுமல்ல, அன்னை சியாமசுந்தரிக்கும் அது வியப்பளித்தது.

பிறகுதான் அவர்களுக்குச் சிறிது சிறிதாகப் புரிந்தது — ஊராரைப் போல் சாரதையும், கதாதர பட்டர்ஜியும் தாம்பத்தியம் நடத்தவே இல்லை என்று. அந்தப் புதுமைத் தாம்பத்தியம் அவர்களுக்குப் புரியவுமில்லை, பிடிக்கவுமில்லை. 'இப்படி விசித்திர மாப்பிள்ளை வாய்க்கணுமா?' என்று குறைப்பட்டனர்.

விசித்திர மாப்பிள்ளைதான்! சாரதாமணியே அதை விசித்திரமாக நினைத்துக் குறைப்படும்படி காரியம் நடந்தது. அதாவது எந்தக் காரியமும் நடக்கவில்லை. சாரதாமணி பிறந்தகம் வந்து வாரங்கள் பல ஓடி மாதங்களாகி, மாதங்கள் பருவங்களாகி, பருவங்கள் பல ஓடி வள்ளிசாக நான்கு முழு வருஷங்களாகி விட்டன! 'மாப்பிள்ளை' யிடமிருந்து இருக்கிறாயா, செத்தாயா என்று ஒரு தகவல் இல்லை!

''அத்தனை அன்பும் அக்கறையும், பாசமும் பரிவும், வாஞ்சையும் வாத்ஸல்யமும் காட்டிய ஸ்வாமி என்னை எப்படி அடியோடு மறந்துவிட்டார்?'' என்று சாரதை ஏங்கி நின்றாள்.

அவரைப் பற்றி விசாரித்து அறிந்ததிலிருந்து, ஒரேயடியாகப் பக்தி பரவசத்தில் ஆழ்ந்துவிட்டார் என்று தெரிந்தது. அதைப் பைத்தியம் என்று ஊரார் குறிப்பிடலாயினர். வயசு வந்த மனைவியை மறந்து அவர் புரிகிற ஸித்தி சியாமசுந்தரிக்கும் கூடப் 'பைத்தியம்தானோ?' என்ற ஐயத்தைக் கிளப்பியது.

''சியாமா மாமிக்கு இப்படி ஒரு கஷ்டம் வரப்படுமா? முழுப் பைத்தியத்துக்குப் பெண்ணைக் கொடுத்தாளே! கிளியாட்டம் பொண்ணு வாழாவெட்டியா நிக்கறதே'' என்று கிராமம் பேசியபோது அந்தத் தாய் உள்ளம் துடிதுடித்தது. அவளது அபூர்வமான வெளிப் புலம்பல்களும், அனவரத உட்புலம்பலும் சாரதையை உலுக்கின.

சாரதையின் புனித விரகத் துயர் போதாதென்று அவர்களது பேச்சுக்கள் வேறு அவளைச் சித்திரவதை செய்தன. ஆறுதல் என்று நினைத்து அவர்கள் பேசியது வெந்த புண்ணில் கோலை நுழைத்தாற் போலிருந்தது. வாயே திறக்காமல் ஓயாத உழைப்பில் காலத்தின் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக் கொண்டிருந்தாள்.

'இன்னும் எத்தனை நாட்கள் இப்படி இருக்கப்போகிறேன்? ஜன்மா முழுதுமே இப்படித்தான் கழிய வேண்டுமா? அவர் என்னை அழைத்துக் கொள்ளவேமாட்டாரா? அல்லது இவர்களாவது அவருக்கு ஒருகாலும் பைத்தியம் பிடிக்காது என்று தீர்மானமாக உணர்ந்து அவரிடம் அனுப்பி வைக்கமாட்டார்களா?' என்று படாதபாடுபட்டாள் சாரதை.

இந்தப் பாடுகள் போதாவென்று, ஜயராம்பாடிக்கே உரிய மலேரியாக் காய்ச்சல் வேறு அவ்வப்போது அவளை வருத்தெடுக்கலாயிற்று. சகல விதத்திலும் சோதனை! உடம்பு நோயை அவள் பொருள் செய்யவில்லை. பதிதேவரை நினைத்தே உருகினாள்.

ருக்மிணிக்கு ஓர் அந்தணர் தூதாகக் கிடைத்தார். சீதாதேவிக்கு ஆஞ்சநேயன் தூது கிடைத்தான். அவதாரங்களிலெல்லாம் நாயகனும் நாயகியும் பிரிந்து துயர்ப்படுவது ஒரு தவிர்க்க முடியாத கட்டம். ஆனால் அந்த அவதாரங்களில் தூதுவிட்டதுபோல் சாரு தூது அனுப்பவும் முடியவில்லை!

அவளைப் போல் நாணத்தின் உருவமாக இன்னொருவர் இருந்ததில்லை; இருக்கப் போவதும் இல்லை. தன் வீட்டாரிடம் பதியைப் பற்றிச் சொல்லித் தன்னை அனுப்பி வைக்கச் சொல்லவே அவளுக்குத் திராணி இல்லை. இப்படிப்பட்டவள் ராமகிருஷ்ணருக்குத் தூது அனுப்பி அழைத்துக் கொள்ளச் சொல்வது சாத்தியமா?

கணவருக்கு நிச்சயமாகத் தூதனுப்ப இயலாது என்பதால், கடைசியில் தன் வீட்டிலேயே யிருந்த தந்தைக்குத் தூது விட்டாள்! இத்தனை மன வேதனைக் கிடையிலும் வாயே திறக்காதிருந்தவர் ராமசந்திர முகர்ஜி. வாயே திறவாத மகள் இப்போது பானு 'மாமி'யை விட்டு அவரிடம் தூது பேசினாள்.

பானு மாமியிடம் அவள் தனது லஜ்ஜை மயமான இதயத்தைத் திறந்து காட்டியதற்குக் காரணம் உண்டு. உத்தமப் பிறவியான அந்த அம்மாளுக்கு எப்படியோ அவதார ரகசியமே ஓரளவு தெரிந்திருந்தது. எனவே, தனது ரகசியத்தை அங்கு திறந்து காட்டச் சாரு அவ்வளவாகத் தயங்கவில்லை.

பத்து வருடங்களுக்கு முன்பே சாரதையையும் ராமகிருஷ்ணரையும் சேர்த்துப் பார்த்து அவர்களைப் பார்வதி

பர்மேசுவரர்களாகப் பாடியவள் அல்லவா பானு மாமி? அவள் ஒருநாள் சியாமசுந்தரியிடம், ''மன்னி, நீங்க சாருவைப் பற்றித் துளிக்கூட விசனப்படாதேள். உங்க மாப்பிள்ளை பைத்தியமோன்னு லவலேசம்கூடச் சந்தேகப் படாதேள். அவர் ஒரு நாளும் பைத்தியமில்லே மன்னி. உங்க மாப்பிள்ளை சாக்ஷாத் மகாதேவன்; உங்க மாப்பிள்ளை சாக்ஷாத் கிருஷ்ண பரமாத்மா. அப்புறம் ஒரு நாளில்லாட்டா ஒரு நாள் நீங்களே இதை நிச்சயமா உணரப் போறேள்'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

சிவத்துக்காகத் தவமியற்றிக் கொண்டிருந்த பர்வத ராஜகுமாரியிடம் அந்தச் சிவமே ஓர் அந்தணனாக வந்து, 'பைத்தியக்கார சிவனுக்காகவா உன் கோமள உடம்பையும் உள்ளத்தையும் வருத்திக் கொள்கிறாய்?' என்று கேட்டது. தன் பிராண காந்தனைப் பற்றிப் பைத்தியம் என்று கேட்டவுடன் ஜகன்மாதா எரிமலையாகக் கனன்றாள். ஊர் ஜனங்கள் ஓயாமல் பைத்தியம், பைத்தியம் என்று தன் ஸ்வாமியைச் சொல்லக் கேட்டு இப்படித்தான் பூகர்ப்பமாகக் கொதித்தது சாரதையின் உள்ளம். இப்போது பானு மாமியின் வார்த்தைகள் அந்த அக்கினிக் கோளத்தில் அமுத வெள்ளத்தைப் பெய்தது. அதன்பின்தான் அவளைத் தந்தையிடம் தூதனுப்பினாள். அப்போதும்கூட 'புருஷனிடம் போகிறேன்' என்று நேரடியாகச் சொன்னாளில்லை!

''அண்ணா, சைத்ர சங்கிரமணத்துக்காக ரொம்பப்பேர் இங்கேயிருந்து ஆதி கங்கை ஸ்நானத்துக்குப் போறா. சாருவும் போகணும்னு ஆசைப்படறா......''

வாழாவெட்டியைப் பார்த்தாலே அமங்கலம் என்பதால், எந்த கிருகலக்ஷ்மி ஐம்பது மாதங்களாக இருளில் தன்னை அடைத்துக் கிடந்தாளோ, அப்படிப்பட்டவளா இப்போது மற்றவர்களோடு பிரயாணம் கிளம்புகிறேன் என்கிறாள்? ராமசந்திர முகர்ஜிக்கு உடனேயே காரணம் புரிந்துவிட்டது! சங்கிரமணம் பற்றியும், கங்கா ஸ்நானம் பற்றியும் தன் மகளுக்குக் கவலை இல்லை. கல்கத்தா வரை துணை கிடைக்கும் இச்சமயத்தில் அவள் தக்ஷிணேசுவரத்துக்குச் சென்று விட விரும்புகிறாள்.

தந்தை உள்ளம் நெகிழ்ந்து கரைந்தது. ''நானே கூட வரேன். நானே அவளை தக்ஷிணேசுவரத்துக்கு அழைச்சுண்டு போறேன்'' என்றார்.

அன்று சாரதைக்கு ஒரே அமிருத மழை!

சியாமசுந்தரி கண் கலங்கி மகளை அனுப்பி வைத்தாள். எந்தத் தாயும் மகளைப் பிரிகிறோமே என்று கண் கலங்குவாள். இந்தத் தாயோ 'பிரிவு நீடிக்க வேண்டுமே! தக்ஷிணேசுவரத்துக்குப் போய், அந்தப் பிள்ளையாண்டானுக்குப் பைத்தியம்தான் என்று தெரிந்து கொண்டு பெண் திரும்பவும் பிறந்த வீடு வந்துவிடாமலிருக்க வேண்டுமே' என்று எண்ணிக் கொண்டே அவள் நெற்றியில் திருநீறு இட்டாள்.

சாரதைக்கு அந்தச் சந்தேகம் இம்மிகூட இல்லை. தெளிவுடன் பிறந்த ஊருக்குப் பிரிவுபசாரம் செய்தாள். ஆகா, எப்பேர்ப்பட்ட உபசாரம்! எந்த தேவி தன் மீது நடப்பதற்காக ஜயராம்பாடி தவமிருந்திருக்க வேண்டுமோ, அந்தத் தேவி அந்த ஜயராம்பாடி மண்ணை எடுத்து, விபூதிக்கு மேலாக இட்டுக் கொண்டு, தலையிலும் தூவிக் கொண்டு, **''ஜனனீ ஜன்ம பூமிச்ச ஸ்வர்காதபி கரீயஸீ''** என்று வாய்விட்டு, கண்ணீர் ததும்பச் சொன்னாள். 'பெற்ற தாயும், பிறந்த மண்ணும் வானுலகினும் மேலானவை' என்பது அதன் பொருள்.

பெற்ற தாயை வணங்கினாள். பிறந்த மண்ணை வணங்கினாள். நாலரை வருடத் துன்பத்தைத் தூக்கி எறிந்து விட்டு — தெளிவுடன், திருப்தியுடன், கனிவுடன், கம்பீரத்துடன் — ஊரெல்லாம் பைத்தியம் என்ற கணவனது இருப்பிடத்துக்குப் புறப்பட்டாள் கற்பரசி. (தொடரும்)



சில நாட்களுக்குமுன் என் தந்தையார், திருப்பூரிலிருந்து பொள்ளாச்சி போகும்படி நேர்ந்தது. ஏ. பி. டி. திருப்பூர் பொள்ளாச்சி பஸ்ஸில் ஏறினர்கள். பஸ் புறப்பட்ட பிறகே வீட்டுச் சாவியை மறந்துவிட்ட விவரம் ஞாபகத்துக்கு வந்தது. சாவி இல்லாமல் பொள்ளாச்சி போயும் பயனில்லை. எனவே, அடுத்த நிலையமான பல்லடத்திலேயே இறங்கித் திருப்பூர் திரும்பி விட்டார்கள். கண்டக்டரிடம், பொள்ளாச்சி வரை வாங்கிய 'த்ரூ' டிக்கட்டில், தான் பல்லடம் வரைதான் பிரயாணம் செய்ததாகக் குறிப்பை எழுதி வாங்கிக் கொண்டார் என் தந்தை. பிறகு, திருப்பூரிலிருந்து, ஏ.பி.டி. தலைமை அலுவலகத்துக்கு அந்த டிக்கெட்டைத் தபால் மூலம் அனுப்பினேம். மேற்கண்ட விவரங்களையும் எழுதியிருந்தோம். ஆச்சரியப்படத்தக்கவிதத்தில், ஒரே வாரத்தில், ஏ.பி.டி. கம்பெனியாரிடமிருந்து, பல்லடத்திலிருந்து பொள்ளாச்சி செல்வதற்கான தொகை வாபஸ் செய்யப்பட்டு மணியார்டர் மூலம் எங்களை வந்தடைந்தது. இது மாதிரி நிகழ்ச்சி வெளிநாட்டில் நடந்ததென்றல் உடனே 'ஆஹா!' என வியக்கிறோம். இங்கும் நடக்கிறது.

திருப்பூர் 1
14–12–71 எஸ். கிருஷ்ணன்



நாங்கள் அன்ருடம் கடையிலிருந்து அரிசி வாங்கித்தான் சாப்பிடுவது வழக்கம். பொதுவாகவே நவம்பர் மாதத்திலிருந்து தினந்தோறும் அரிசி படிக்கு ஐந்து பைசா வீதம் ஏறிக் கொண்டே வந்தது. அதனுல் தினமும் கடைக்குச் செல்லும்போது ஐந்து பைசா அதிகமாக எடுத்துச் செல்வது வழக்கம்.... டிசம்பர் 12ந் தேதி கடைக்குச் சென்ற நான் பிரமித்து நின்றேன்.

டிசம்பர் 11ந் தேதி வரையில் 2-10 விற்ற அரிசியை 2-50, 2-60 என்ருர்கள். வேறு வழியின்றி முக்கால் படி அரிசி வாங்கிக்கொண்டு திரும்பினேன். ஏற்கனவே கள்ளுக் கடைகள் திறந்திருப்பதால் ஏழைகளுக்குக் கால்வயிற்றுக் கஞ்சிக்கு உள்ள பணம்தான் கிடைக்கும். அரிசியின் விலையும் இப்படி ஏறினல் மக்கள் என்ன செய்வது? படித்துவிட்டு வீட்டில் இருப்பவர்களுக்கு வேலை வாய்ப்புப் பெற வசதியிருந்தாலும் பரவாயில்லை. ஏற்கனவே வீட்டுக்குப் பாரம். இதில் வயிற்றுக்கும் திண்டாட்டம். இது என்ன கொடுமை? இந்த நிலை மாறுமா?

ஸ்ரீரங்கம்
12–12–71 காஞ்சனு



கடந்த சில நாட்களாகச் சென்னை வீதிகளில் தென்படும் குடும்ப நலத் துறையினர் வெளியிட்ட குடும்பக் கட்டுப்பாடு பிரசாரச் சுவரொட்டியைக் கண்டு அழுவதா, சிரிப்பதா என்று தெரியவில்லை. 'நாம் இருவர், நாம் பெறுவதும் இருவர்' என்ற வாசகத்துடன் காணப்படும் அந்தச் சுவரொட்டிகளிலும், மாண்புமிகு மு.கருணுநிதி அவர்களின் புகைப் படத்தை இணைப்பதைக் கண்டு வியந்தேன். அரசுதான் குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தின் மூலகர்த்தா என்ருலும், அரசின் முதல்வர் படத்தைச் சுவரொட்டிகளில் வெளியிட்டு விளம்பரம் செய்வது எவ்வளவு வேடிக்கையான உத்தி!

சென்னை — 17
15–12–71 வாதிராஜ்



இரண்டு நாட்களுக்குமுன், நான் பாலர் அரங்கம் செல்ல நேர்ந்தது. (மன்னிக்கவும். இப்போது கலைவாணர் அரங்கமல்லவா?)— அங்கே இளம் சிருர்கள்தான் அதிகமான அளவில் படம் பார்க்க வருகிருர்கள். பெரியவர்கள் அனுமதிக்கப்பட்டாலும், பெயரை மாற்றினுலும், பாலர்கள் கூட்டமே மிகுதி. நான் சென்ற போது, 'போதும் ஐயா' என்ற தலைப்பில் தமிழக அரசின் குடும்பக் கட்டுப்பாட்டுப் பிரசாரப் படம் காட்டப்பட்டது. ''நாட்டிலே உற்பத்தியைப் பெருக்கிடுவீர் என்ருல் சிலர் வீட்டிலே உற்பத்தியைப் பெருக்கிடுகின்ருர்'' என்ற நம் டாக்டர் முதல்வர் அவர்களின் கவிதையோடு, அரசு விளம்பரத்தில் அன்னுரின் திருவுருவம் காட்சி அளித்தது. குழந்தைகள் அதிகமாகச் சேரும் இடங்களில் எதைக் காட்டுவது என்று அரசினர் சிந்தித்துச் செயல்பட வேண்டும்.

திருவல்லிக்கேணி
20–12–71 பாசி. இராமச்சந்திரன்



# அம்மா

ராº கணபதி

## 14. தக்ஷிணேசுவரம் அழைத்தது!

பதிவிரதத்திலேயே ஈடுபட்ட எனக்கு மூவ்வுலக இன்பங்களிலும் எண்ணமில்லை. என் தந்தையின் இல்லத்திலிருந்தது போலவே கடுங் கானகத்திலும் சுகமாக வசிப்பேன்.

— ஸ்ரீமத் ராமாயணத்தில் தேவி ஜானகி

அறுபது மைல்கள் நடந்தாக வேண்டும், ஜயராம்பாடியிலிருந்து தக்ஷிணேசுவரம் அடைய. சாரதைக்கு அது ஆனந்தப் பயணமாகவே இருந்தது. வயல்களையும், குளங்களையும், கிராமங்களையும் கடந்து தந்தையுடனும், மற்ற ஆதி கங்கா யாத்ரீகர்களுடனும் தன்னுடைய அதிசய அகத்துக்காரரின் அகத்துக்குப் போகிறாள்! அவரது 'அகம்' பவதாரிணியின் ஆலயமே என்பது சகலவிதத்திலும் உண்மையன்றோ ?

சாலை ஓரத்து மரத்தடியிலேயே இரவில் உறங்குவார்கள். காலையில் மீண்டும் நடையைக் கட்டுவார்கள். இப்படி மூன்று நாட்கள் சென்றன. ஆனந்தத்தின் இடையிலேயே இன்னும் தக்ஷிணேசுவரம் வந்த பாடில்லையே என்ற ஆதங்கச் சாயலும் விழத் தொடங்கியது. அந்த ஆதங்கத்தை அதிகப்படுத்துவதேபோல் சாரதைக்குக் காய்ச்சல் வேறு கண்டுவிட்டது !

அவளுக்கு மலேரியா ஜுரம் அவ்வப்போது ஏற்படுவது உண்டல்லவா? இந்தச் சமயம் பார்த்துப் பரதேவதை அதை அனுப்பி வைத்து விளையாட்டுப் பார்த்தாள். அதோடு நீண்ட நடையின் சலிப்பு வேறு ! ஆயினும் சகிப்புத் தன்மையின் வடிவமான நம் தேவி சுகவீனத்தை வெளிச் சொல்லாமல் நடந்து கொண்டேயிருந்தாள். நடை தடுமாற ஆரம்பித்தது. தடுமாறித் தடுமாறி நடந்தாள். அதற்கப்புறம் தடுமாறிக்கூட நடக்க முடியவில்லை. அப்படியே துவண்டு விழுந்தாள், தாமரைத் தண்டு நூலிழைபோல். தாப ஜ்வரமும் கண்டது.

பெரும் கவலையுடன் ஒரு குடிசைக்கு அவளை அழைத்துச் சென்று படுக்க வைத்தார் ராமசந்திரர். முக்கி முனகிக் கொண்டு தமது திருக் குமாரி படுத்திருப்பதைக் கண்டு தந்தை மனம் கனத்தது.

இந்தப் பாரத தேசத்தின் ஸ்திரீ தர்மத்தைத்தான் என்னென்பது? புருஷன் என்றால் இப்படி ஒரு பிரேமை! அவன், 'இருக்கிறாயா, செத்தாயா?' என்று இவளைக் கேட்காவிட்டாலும்கூட அவனிடமே ஓடுகிறது இந்தப் பெண் நெஞ்சு. அவனுக்குப் பைத்தியம் என்று ஊரெல்லாம் சொன்னாலும் இவளுக்கு நம்பிக்கை வருவதில்லை. அப்படியே அவனுக்குப் பைத்தியமானாலும் அதற்காக அவனை விடுவதா, அப்போது தானே உடன் இருந்து அவனைப் பராமரிக்க வேண்டியது அத்தியாவசியம் என்று முடிவு செய்கிறது பெண்ணின் பிரேமை உள்ளம். மற்றப் பெண்கள் கணவனிடம் காட்டும் அன்பிலே தேக நசைக்கும் இடம் உண்டு. அந்த ஏதோ ஓர் 'ஆனந்த'த்துக்காக அவர்கள் பல இடர்ப்பாடுகளை ஏற்பதில்கூட விசேஷமில்லை. ஆனால் நம் சாரதைக்கு இப்படிப் பட்ட இன்ப நாட்டமும் இல்லாமலே அவள் பதிதேவருக்காகக் கிளம்பினாளே, அது பூஜைக்குரிய புனித அன்பு அல்லவா! அந்தப் புனிதத்தைப் பொன்னாகப் புடம் போடவே இப்போது பராசக்தி அவளைத் தணலாக எரியும் காய்ச்சலில் புரட்டி எடுக்கலானாள்.

''மலேரியா எனக்கு நன்றாகப் பழகிப் போனதுதான். அதைப் பற்றிக் கவலையும் இல்லை, பயமும் இல்லை. இந்தச் சரீரமே போனாலும்கூட அதைப் பற்றியும் விசாரம் இல்லை. ஆனால் **இந்தச் சமயத்தில்தானா** காய்ச்சல் நேர வேண்டும் ? என் ஸ்வாமியைத் தரிசித்தபின் எந்தக்

கேடு வந்தாலும் மகிழ்ச்சியுடன் ஏற்பேன். ஆனால் அவரைப் பார்க்கும் முன்பே இந்தக் கண்ணை மூடி விடுவேனே? சிம்மவாஹினியின் திருஉள்ளம் அது தானா?' — சாரதையின் உடல் காய்ந்தது, உள்ளமும் காய்ந்தது.

திடீரென்று உடலிலே ஒரு குளிர்ச்சி. உள்ளத்திலும் குளிர்ச்சி. சந்தனமும் சந்திரிகையும் பச்சைக்கர்ப்பூர மும் பனிநீரும் கலந்து மேனியிலும் மனத்திலும் ஊடுருவுவது போன்ற உணர்ச்சி! கனத்த இமைகளைத் திறந்து பார்த்தாள் சாரு! அவள் கண்ட காட்சியில் அப்போதே இமையின் கனம் இலேசாகியது.

சொல்லரிய அழகியான ஒரு சியாமள வண்ண மங்கள மங்கை சாரதைக்கு நெருக்கமாக அமர்ந்து அவளது தலையைக் கோதிக் கொடுக்கிறாள், அவளது உடல் முழுவதையும் தடவிக் கொடுக்கிறாள். அந்த ஸ்பரிசத்தின் மென்மையும் தண்மையும் வார்த்தை யால் வடிக்க முடியாதனவா யிருக்கின்றன! மழையில் நெருப்பு அணைவதுபோல் இந்த அணைப்பில் அப் போதைக்கப்போதே தணலான காய்ச்சல் தணிகிறது; உடல் நோவு பறந்தோடுகிறது!

''என் அன்பே, நீ எங்கேயிருந்து வரே?'' என்று கேட்டாள் சாரதை, எல்லையற்ற நன்றியுடனும் பிரேமையுடனும்.

''தக்ஷிணேசுவரத்திலிருந்துதான்!'' என்றாள் சியாமள சுந்தரி. அவள் குரலிலும் சந்தனம், சந்தி ரிகை, பச்சைக் கர்ப்பூரம், பனி நீர் இவற்றின் தண்மை; அதோடு தேனின் தீஞ்சுவையும் கூடி யிருக்கிறது!

''ஆஹா! தக்ஷிணேசுவரத்திலிருந்தா? நான்கூட அங்கே போறதாத்தான் கிளம்பினேன். அவரைப்



பார்ப்பேன், அவருக்குப் பணிவிடை பண்ணுவேன்னுதான் நினைச்சுண்டிருந்தேன். ஆனு, இப்பப் பயங்கரமாப் படுக்கை போட்டதைப் பார்த்தா அந்த ஆசை பகல் கனவாப் போயிடுமோன்னு பயந்துட்டேன்'' என்ருள் சாரதாமணி.

''கவலைப்படாதே, ஆமாம், கவலையே படாதே'' என்ற அற்புத அபய மொழி கருநிற அழகியின் திருமுகத்திலிருந்து வழிந்தது. ''நீ நிச்சயமா தக்ஷிணேசுவரத்துக்குப் போகத்தான் போறே! சீக்கிரமே உனக்கு உடம்பு வாசியாகப் போறது. **அவனைப்** பார்க்கத்தான் போறே. உனக்காகத்தானே நான் **அவனை** அங்கே இறுக்கிப் பிடிச்சு வெச்சுருக்கேன்?'' என்ருள்.

''அப்படியா?'' என்று அதிசயித்தாள் சாரதை. ''என் அன்பே, நீ எங்களுக்கு என்ன உறவாகணும்?'' என்று வினவினுள்.

''நான் உன் கூடப் பிறந்தவள் — உனக்குத் தெரியல்லை ?''

''வாஸ்தவம். அதனுலேதான் சமயம் பார்த்து வந்தே!''

கருமையின் கருணையிலேயே கரைந்து உறக்கத்தின் ஆறுதலான இருளுக்குள் இழைந்தாள் சாரதை.

குஞ்சு விரல்கள் தன் தலையில் தாளம் போடுகிற உணர்விலே உறக்கம் கலைந்தாள் சாரதாமணி. கருணைக் கருமையுடன் ஒரு பெண் குழந்தை தலைமாட்டில் அமர்ந்திருந்தாள். அவளுடைய காலில் புழுதி கப்பியிருந்தது.

''என் பிரியக் குழந்தே! உன் காலை அலம்பிக்கிறதுக்கு இங்கே யாரும் ஜலம் தரவில்லையா?'' என்று கேட்டாள் சாரதாமணி.

''கால் அலம்பிக்க வேண்டியதில்லை, அம்மா! ஏன்னு இப்பவே நான் கிளம்பிண்டிருக்கேன். உன்னைப் பார்க்கத்தான் வந்தேன். பயப்படாதே அம்மா, உனக்கு ஜுரம் இப்பவே சரியாப் போயிடும்'' என்று தித்திக்கச் சொல்லிவிட்டுக் குழந்தை மறைந்தாள்.

'கூடப் பிறந்தவள்' என்ருள்! 'அம்மா' என்று கூப்பிட்டுக் கொண்டு பெண்ணுக வந்தாள்! அம்மா, பெண், அக்கா, தங்கை எல்லாம் கடைசியில் ஒன்றேதான்!

சிம்மவாஹினி இவள் நினைத் வுடனே வந்துவிட்டாள்! 'ஹிம்ஸ' என்ற சப்தமே மாறி, 'ஸிம்ஹ' என்று வந்தது. தீமைக்கு ஹிம்ஸை தருவாள் ஸிம்ஹவாஹினி. ஹிம்ஸையே ஹம்ஸமான மென்மையுடன் வந்தருள் புரிந்தது இங்கே. இது பரம ஹம்ஸ பத்தினி அல்லவா? ஹம்ஸவாஹினியான பிரம்மாணிக்கு ஸிம்ஹவாஹினி, சகோதரி என்றும் மகள் என்றும் உறவு வைத்துக் கொண்டு வந்து ஹிம்ஸை தீர்த்தாள்! அவள் நினைத்த இடத்திலேயே ஆவிர்பவிக்கக்கூடியவள்! ஆயினும் அன்பின் அடர்த்தியில் தன் தெய்விகத்தைக்கூட மறந்ததே போல் தக்ஷிணேசுவரத்திலிருந்தே புழுதிக் காலுடன் வந்திருக்கிருள். மனிதன் தெய்வத்தன்மை எய்தும் அற்புதத்தைவிடத் தெய்வம் மனிதத்தன்மை எய்தும் அற்புதம் பேர் அழகாக இருக்கிறது!

* * *

**தெ**ய்வ தரிசனம் தந்த தெம்புடன், தெளிவுடன் மறுநாள் காலை வேகு வேகு என்று உற்சாகமாக நடையைத் தொடர்ந்தாள் சாரதை. சிறிது தூரம் சென்றதும் வாடகைக்கு ஒரு பல்லக்குக் கிடைத்தது. சாரதை அதில் பிரயாணத்தைத் தொடர்ந்தாள். 'உழைக்கின்ற சாருவுக்கும் பல்லக்குச் சொகுசா?' என்று எண்ணியோ என்னவோ, காய்ச்சல் திருப்பிக் கொண்டது. ஆனுல் அது கடுமையாக இல்லை. தந்தையிடம் அது பற்றி அவள் சொல்லவும் இல்லை.

கடைசியாகப் பல்லக்குப் பயணமும் முடிந்தது. நிர்மல கங்கையைப் பரிசலில் கடந்தனர். பரிசல் மிதந்தது. அம்மாவின் ஸ்பரிசத்தில் ஹம்ஸமாக மிதந்தாள் சாரதை, பரமஹம்ஸத்தை நோக்கி.

இரவு ஒன்பது மணி. வெளியே எங்கும் அமைதி. கங்கா மாதா சலசலத்து ஓடுகிருள். சாரதையின் இதயத்தில் ஒரே ஆர்வத் துடிப்பு. நாலு முழு ஆண்டுகள் காணுதிருந்த பிரேம ரூபத்தைக் காணப் போகிறேம் என்ற கிளுகிளுப்புடன் புண்ணிய தக்ஷிணேசுவரத்து மண்ணிலே புண்ணிய பாதத்தை வைத்தாள் சாரதை. காற்றிலே சிறிது நழுவிய முக்காட்டையும் இழுத்து நன்ருக முகத்தை மூடிக் கொண்டாள் நாண ராணி சாரதை—அந்த இருட்டு வேளையிலும்! பதிதேவரைக் கண் குளிரக் காண்போமா என்ற துடிப்பிலும்!

அவரைக் காணுமல் முக்காட்டை இழுத்து விட்டாலும், இதோ அந்த அமிருதக் குரல், காமார்புகுரில் அவளுள் புகுந்து புத்துயிர் பொலிவித்த புனிதக் குரல், அவள் காதுகளில் பாய்கிறது. அவளுடைய ஸ்வாமி பேசுகிருர், எட்ட இருந்த தமது அறையிலிருந்தே:

''அடேய் ஹ்ருதே! நல்ல முகூர்த்தம் வந்துடுத்தாடா? இதுதான் **அவ**ள் முதல் தடவையா இங்கே வரது!''

அவர் இருக்கிற இடத்தில் எப்போதும் சுபமுகூர்த்தம் தானே?

'ததேவ லக்னம் ஸுதினம் ததேவ'- அல்லவா? அதோடு படகிலே வரும் போதே பஞ்சாங்க ரீதியிலான அமங்கள வேளையைக் கடந்தாகி விட்டது என்றும் அவளுக்குத் தெரியும்.

நாண ராணி சாரதை,—அடங்கி ஒடுங்கிப் பின்னாலேயே நிற்கும் சாரதை — தன்னுடன் வருகிறவர்கள் என்ன செய்கிறார்கள் என்ற பிரக்ஞையே இன்றி, விறுவிறு என்று தனது ஸ்வாமியின் குரல் வந்த திக்கில் விரைந்தாள்.

நாலாண்டுகளுக்குப் பின் நாயகனின் முன் விழுந்து எழுந்தாள். நாலாண்டுத் தாபமும் அதோடு நொறுங்கி விழுந்தது.

''என் அம்மா! ஆஹா, கடைசியில் நீ இங்கே வந்தே விட்டாய். பேஷான காரியம் செய்தாயம்மா!'' என்று அன்பின் ரசகுண்டுகளாக ஒவ்வோர் அட்சரத்தையும் மொழிந்தார் பகவான் ராமகிருஷ்ணர்.

ஊரெல்லாம் அவருக்குப் பைத்தியம் என்று சொன்னபோதும் அதை அவளால் நம்ப முடியவில்லை. கங்கைக் கரையில் அந்தக் கனிவுக் குரலைக் கேட்டவுடன், 'இந்தத் தெளிவு மூர்த்திக்கா மூளை குழம்பியதாகச் சொன்னார்கள் ? அப்படிச் சொன்னவர்களுக்குத்தான் மூளை குழம்பியிருக்கிறது !' என்று எண்ணினாள். இப்போது நேருக்கு நேரே அவரது அன்புப் பேச்சைக் கேட்டவுடன், 'என்னுடைய பகவான் என்னுடைய பகவானாகவேதான் இருக்கிறார். பகவானுக்குப் பைத்தியம் பிடிப்பதில்லை' என்று கண்டுகொண்டாள்.

அவளது உடம்பு ஆடியது — சமீபத்து நோயும், இப்போதைய உவகைப் பெருக்கும் சேர்ந்து அவளை ஆட்டி வைத்தன.

''உட்காரம்மா, உட்காரு'' என்ற ராமகிருஷ்ணர், ''யாரடா அங்கே, அம்மா தரையிலே உட்காரப்படாது, பாய் கொண்டு வந்து விரியுங்கோ'' என்று கோஷித்தார்.

ஒரே அன்பு வெள்ளம்தான்.

சாரதை பாயில் அமர்ந்தாள்.

பதிதேவரிடம் பேசினாள்.

அவரும் பேசினார்.

எந்தக் கணவனும் எந்த மனைவியும் பேசியிராத தூய திருமொழிகளை, பாவனப் பெருமொழிகளை, எளிய அன்பு மொழிகளைப் பரிமாறிக் கொண்டனர், பர்த்தாவும் பத்தினியும்.

''தாயே, உனக்கு வர வழியில் காய்ச்சலா கண்டது? உனக்கு உடம்புக்கு வரப்படுமோ ? நன்னா குணமாயிடுத்தா....?'' என்று பரிந்து பரிந்து கேட்டார் ராமகிருஷ்ணர்.

''நன்னாத் தேவலைன்னா... அதைப் பத்திக் கவலையே படாதேள்....''

''நீ அப்படிச் சொன்னாலும் உன் குரலே நடுங்கறதே! என்ன பரிதாபம்! நீ காலம் தாழ்த்தி வந்திருக்கே! என் மதுர் மட்டும் இப்போ உயிரோடு இருந்தா உனக்கு ராஜோபசாரம் பண்ணுவார். அவர் போனது எனக்கு வலது கையே உடைஞ்ச மாதிரி....''

தக்ஷிணேசுவர ஆலய ஸ்தாபகியான ராணி ராஸமணியின் மாப்பிள்ளை மதுராநாதர் ராமகிருஷ்ணரின் மகிமையை முற்றிலும் உணர்ந்து அவருக்கு மனமாரத் தொழும்பு புரிந்தவர். சாரதை தக்ஷிணேசுவரம் சென்றடைந்தது 1872ம் ஆண்டு மார்ச் மாதத்தில். மதுராநாதர் சில மாதங்களுக்கு முன்பு காலமாகி விட்டார்.

ராமகிருஷ்ணர் எதையோ நினைத்துக் கொண்டு சிரித்தார். வலது கை போச்சு ! ஆனால் அவரது இடது பாகம் முழுவதும் இப்போது வந்து எதிரே உட்கார்ந்திருக்கிறது!

இடது பாகம் மட்டும்தானா? 'லலிதே! நீ பரமேசுவரனின் இடது பாதியாக இருப்பவள் என்று சொல்கிறார்களே, அதுவும் தப்பு. உன் சிவப்பு அவனது வலது பாகத்தையும் விழுங்கிவிட்டது. நீயே பூரணரூபியாகச் செக்கச் செவேலென்று விளங்குகிறாய் !' என்று ஆதி சங்கரர் பாடினார். யாக்ஞவல்கியரும் இவ்விதமே மைத்ரேயியிடம் கூறியதாக ஸுரேசுவராசாரியர் உபநிஷத பாஷ்யத்தில் சொல்கிறார்: மகரிஷி யாக்ஞவல்கியரின் ஞானச் செல்வம் அனைத்திலும் போதனை பெற விழைகிறாள் அவரது பத்தினி மைத்ரேயி. அந்த ஞானத்தைப் பெற்றுவிட்டால், அதன்பின் 'இருப்பதெல்லாம் ஒன்றுதான், கணவனும் அதுதான், தானும் அதுவேதான், அதாவது கணவனும் தானும்கூட ஒன்றேதான் என்ற அநுபவத்தை எய்திவிடுவாள். இதை எண்ணி யாக்ஞவல்கியர், ''பிரியே, உமாதேவி தனது பரமப் பிரேமையினால் சூலபாணியின் இடப் பாகத்தைப் பெற்றுக் கொண்டாள் ; நீயோ என் ஆத்மாவைப் பூரணமாகவே வெளவிக் கொள்ள விரும்புகிறாய்'' என்றாராம் !

ஜயராம்பாடியில் தொடங்கிய பாடத்தைப் பூர்த்தி செய்து, ஜபயோக சாதனை, ஞான போதனை இவற்றையும் பரிபூரணமாக ராமகிருஷ்ணரிடம் அப்பியசித்து அவராகவே ஆகிவிடுவதற்குத் தான் சாரதை இப்போது தக்ஷிணேசுவரத்துக்கு வந்திருக்கிறாள். 'தான் அறப்பெய்யும் முகில்'போல், தனது

ஆத்ம பூரணத்துவத்தை அவளுள் பொழியவே ஆர்வத்துடன் முன்வந்தார் கருணை முகிலாம் ராமகிருஷ்ணர்.

இத்துணை அன்பும், பரிவும், கரிசனமும் உள்ளவர் ஏன் நாலாண்டுகள் அவளைச் சோதித்தார்? இதற்கு பாகவதத்தில் விடை காண்கிறோம்.

ராஸக் கிரீடைக்கு முன்பு கண்ணன் திடுமெனக் கோபியரிடமிருந்து பிரிந்து சென்று அவர்களை அழஅழ வைக்கிறான். பிறகே தரிசனம் தருகிறான். அவனை இழந்து விட்டுப் பிறகு பெற்றதில் அவர்களது ஆனந்தம் அளவுகடந்து போகிறது. ''அன்புப் பெண்களே, ஓர் ஏழை புதையல் கண்டெடுத்துவிட்டு, அதன்பின் அதனை இழந்தால் அவனுக்குப் புதையலைத் தவிர வேறெந்த சிந்தையுமின்றி அதையே எண்ணுவான் அல்லவா? அவ்வாறே ஜீவராசிகள் என்னை ஆழ்ந்து தியானம் செய்ய வேண்டும் என்பதற்காகவே என் தரிசனத்தை மறைத்து விலகியும் போவேன்'' என்கிறான் கண்ணன்.

கோபிகைகளை அவன் நாலு யாமம் கூடக் காக்க வைக்கவில்லை; சாரதையையோ நாலு வருடம் காக்க வைத்துவிட்டார்! சரீர விரகம் வேறு, ஆத்ம விரகம் வேறல்லவா? பிரிந்திருக்கிறோம் என்று தவிக்கும்போதே, 'இதில் பிரிவேது' என்ற ஞானமும் உள்ளூறத் தோய்ந்து நிற்பதல்லவா ஆத்ம விரகம்?

எத்தனை கலக்கத்துக்குள்ளும் ஒரு தெளிவு சாரதைக்கு உண்டு என்று முன்னரே கண்டிருக்கிறோம் அல்லவா? அந்தத் தெளிவினால்தான் நாலு வருடத்தில் பிரிவுத் துயர், பாசத் துயர், உடல் நோய், உளநோய் அனைத்தையும் தாங்கிக் கொண்டு, இப்போது புத்தம் புது புஷ்பமாக ராமகிருஷ்ணரின் சரண மலரில் வந்து விழுந்துவிட்டாள்!

''படுக்கப் போகிறேன்'' என்று கிளம்பினாள் சாரதை.

அவளுடன் வந்தவர்கள், நஹவத் என்ற சங்கீத மண்டபத்திலும், கோயிலைச் சூழ்ந்த மற்ற இடங்களிலும் தங்கியிருந்தார்கள். நஹவத் மாடியில்தான் ராமகிருஷ்ணரின் தாயான சந்திராமணி தேவி வசித்து வந்தாள். சாரதையும் இரவை அங்கு கழிக்கவே புறப்பட்டாள், உடல் தடுமாற. ''அம்மா, நீ உடம்பு பூரணமாகக் குணமாகிறவரைக்கும் இங்கேயே தங்கியிருக்கலாம். நஹவத் ரொம்ப நெரிசலாக இருக்கும். அங்கே நீ ஓய்வு எடுத்துக்கறதுக்கும், வைத்தியர் வந்து பார்க்கறதுக்கும் சிரமமாயிருக்கும். உன்கூடப் பல பேர் வந்திருக்கிறார்களே, அதுலே யாராவது ஒரு கிழவியைக் கூட வைச்சுண்டு நீ இங்கேயே இருந்துவிடு'' என்றார் ராமகிருஷ்ணர்.

மறுக்க முடியாத அன்புக் கட்டளை.

அதன்படியே கிழவி ஒருத்தியின் 'துணை'யுடன் கணவரது அறையில் அந்த இரவு சயனம் கொண்டாள் சாரதை. வேகங்கள் புயலாகப் புழுதி வீசுகிற இதயங்களிலெல்லாம் அமிருத விந்துக்களைத் தெளித்துப் புழுதியை அடக்கும் அற்புதத் தம்பதி!

''அடடா, உன் சாப்பாட்டுக்கு ஏற்பாடு பண்ணவே இல்லையே. ஹ்ருதே, மாமிக்கும் கூட வந்திருக்கறவாளுக்கும் அம்பாள் பிரசாதம் இருக்கா பாரு'' என்றார் ராமகிருஷ்ணர்.

''மணி பத்தாகிறதே, மாமா! பிரசாதமெல்லாம் தீர்ந்து போச்சு'' என்று கூறிய ஹ்ருதயராம் அவலைக் கொண்டுவந்து கொடுத்தார்

மறு நாள் காலை வைத்தியரை வரவழைத்தார் ராமகிருஷ்ணர், சாரதையின் சிகித்சைக்கு. வைத்தியம் இரண்டாம்பட்சம்தான், ராமகிருஷ்ணரின் அன்பான கவனிப்பே சாரதைக்கு நாலு நாட்களில் பூரண ஆரோக்கியம் கொடுத்து விட்டது.

உடல் சூடு முற்றும் குறைந்தது. 'தண்ணென்றிருந்ததடி, புதிதோர் சாந்தி பிறந்ததடி' என்றாயிற்று. மனத்தில் மண்டி எரிந்த புனித விரகத் தீயும் தணிந்தது. அதைவிட முக்கியமாக, விராகத் தீயும் அணைந்தது. காமார்புகுரில் சாரதையின் பிள்ளை ஆசை கொழுந்து விட்டபோது அதனை நிர்தாட்சண்யமாகச் சமனம் செய்த ராமகிருஷ்ணர் எவரிடமும் பாசமே வைக்காமல் விராகியாகுமாறு அவளைப் பணித்தாரல்லவா? எல்லோரையும் தன் அன்பில் முழுக்கடிக்கும் அவளுக்கு எவரிடமுமே பாசம் உண்டாகாமல் விராகமாயிருப்பது சாத்தியமில்லைதான். ஆயினும் ராமகிருஷ்ணரின் வாக்கு முகூர்த்தம், அந்தச் சாத்தியமற்றதும் நடைமுறையாகக்கூடிய சூழ்நிலை ஜயராம்பாடியில் ஏற்பட்டது. தன் கணவரைப் பைத்தியம் என்றே கூறித் தனது இதயத்தை அனைவரும் புண்படுத்திய சூழ்நிலையில் சாரதாமணியின் பாச ஊற்றும் வற்றியது. பரம விராகியாக, யந்திர கதியில் காரியங்களைச் செய்து வந்தாள். இந்த நாலாண்டுகளில் அநுபவித்த விரகமும், விராகமும் அவளது ஞான வாழ்வின் மறுமலர்ச்சிக்கு அற்புத அடிப்படை ஆயின. சில செடிகள் நன்றாகத்

துளிர்த்து வருகிற வரையில் வேர் நனைய நீரை நிறைய ஊற்றுவார்கள். பிறகு சிறிது நாள் ஒரேயடியாகக் காயப்போடுவார்கள். மறுபடி நீர் ஊற்றுவார்கள். காமார்புகுரில் அன்பு மழை பொழிந்த ராமகிருஷ்ணர் அதன் பின் நான்கு ஆண்டுகள் சாரதையைக் காயப்போட்டார். இப்போது காய்ச்சல் அனைத்தும் தீர்ந்தது. உடல் காய்ச்சலும், விரகக் காய்ச்சலும் தீர்ந்ததோடு, அவளது விராகக் காய்ச்சல் தீர்ந்ததே அதுவே நமக்கு முக்கியம்! ஆம், அவள் இனி அம்மா ஆகப் போகிறாள்! ராமகிருஷ்ணர் விரும்பியபடியே, சரீர சம்பந்த மற்ற குழந்தைகளை எங்கெங்கும் காணும் ஸ்ரீமாதாவாகப் போகிறாள்!

'ஸ்ரீமாதா ஸ்ரீமஹாராக்ஞி' என்று தொடங்குகிறது லலிதா சஹஸ்ரநாமம். ஸ்ரீமாதாவைச் சொல்லி, அதையடுத்து, அந்த அம்மாவின் சாம்ராஜ்யம் அகில மெல்லாம் பரவியிருக்கிறது என்கிறது. பொன்மலை முடியிலுள்ள ஸ்ரீபுரத்தைத் தலைநகராகக் கொண்டது அந்த மகா சாம்ராஜ்யம். நம் எளிய ஸ்ரீமாதா சிறிய தக்ஷிணேசுவரத்தின் சின்னஞ் சிறிய 'நஹவத்' தலைநகரத்திலிருந்து கொண்டு தனது அன்பு ஆட்சியைத் தொடங்கப் போகிறாள்!

உடல் நன்கு ஆரோக்கியம் பெற்றவுடன் நஹவத்துக்குப் போய்விட்டாள்.

நஹவத் அடித்தள அறை சாரதைக்கு ஒதுக்கப்பட்டது. அந்த அறை மிகவும் குறுகிய இடம். அதில் ஏகப்பட்ட கண்டான் முண்டான் வேறு. ராமகிருஷ்ணரைப் பார்க்கக் கல்கத்தாவிலிருந்து ஏராளமானவர் வந்து கொண்டிருப்பாராதலால் பர்தாப் பெண்ணான சாரதை அந்த இருட்டறைக்கு வெளியிலேயே தலைகாட்ட முடியாது. இவை எல்லாவற்றையும்விட அங்கே குளிப்பதற்கும், இயற்கை அழைப்புக்களை நிறைவேற்றவும்கூட வசதியில்லை. புலரு முன்பே இந்தக் காரியங்களைக் கங்கையில் முடித்துக் கொண்டால்தான் உண்டு.

தன் செல்வ மகள் அங்கு படுகிற கஷ்டம் ராமசந்திரருக்குச் சிரமமாக இருந்தது. அவளும் மாப்பிள்ளையும் உலக ரீதியில் குடித்தனம் நடத்தப் போவதில்லை என்றும் அவருக்கு நிச்சயமாயிற்று. எனவே ''ஊருக்குப் போகலாமா?'' என்றார் மகளிடம்.

''போய் வாருங்கள் !'' என்று தீர்மானமாகப் பதில் சொன்னாள் தேவி.

கற்பு என்பது சௌகரிய, அசௌகரியங்களையா கவனிக்கும்? பிறந்த மண்ணை, சொர்க்கத்துக்கும் மேலே என்று சொல்லித் தலையிலே தரித்தான். கணவன் அருகே இருக்கிறான் என்றால் அந்த இடம் சொர்க்கத்தின் மேலுக்கும் மேலே அல்லவா ?

ராமசந்திரர் தனியாக ஜயராம்பாடி திரும்பினார். சியாமசுந்தரி ஆனந்த சோகக் கண்ணீருடன் அவரை வரவேற்றார்.

''மகள் என்பவள் பிறனுடைய சொத்துத்தான். சகுந்தலையைக் கணவனிடம் அனுப்பிய பின் அந்நியச் சொத்தை வைத்துக் காப்பாற்றி அதை உரிமையாளரிடம் திருப்பிய பின் ஏற்படும் திருப்தி பிறக்கிறது'' என்று சாகுந்தலத்தில் கண்வ மகரிஷி சொன்னார் அல்லவா? அந்தத் திருப்தி ஏற்பட்டது ராமசந்திரருக்கும் சியாமசுந்தரிக்கும்.

**சா**ரதையின் பதி சுசுரூஷை வாழ்வு மீண்டும் தொடங்கியது. அதோடு, மாமியாரின் சுசுரூஷையும் சேர்ந்தது. ராமகிருஷ்ணரைத் தேடிவரும் அடியார்களுக்கான சுசுரூஷைகளையும் தொடங்கினாள் — அதாவது ஒரே சமயத்தில் மனைவி, (மாற்றுப்) பெண், அன்னை மூன்றுமாகத் தொடங்கினாள். ஆனால் மனைவி என்று இல்லற இன்பம் கேட்கவில்லை; பெண் என்று சலுகை கேட்கவில்லை; அம்மா என்று அந்தஸ்து கேட்கவில்லை. மனைவியாக, பெண்ணாக, அம்மாவாக அன்புடன் உழைக்க மட்டுமே செய்தாள். இந்த மூன்று உறவுகளுக்கு ஆதாரமா யிருந்தது இன்னோர் உறவு! குரு—சிஷ்ய உறவே அது!

கணவரிடம் போதனையை மீளப் பெறத் தொடங்கினாள் சாரு. முன்பு விவரம் தெரியாத பெண்ணாக இருந்தாள். இப்போது நாலு வயது கூடிவிட்டதால் சுற்றுப்புறம் இப்படிப்பட்டது, சூழ்ந்துள்ளவர்கள் இப்படிப்பட்டவர்கள் என்பதை யெல்லாம் அவள் எடை போட்டு உணர முடியுமல்லவா? எனவே, அவளுக்கு முதல் உபதேசமாக, ''எதைச் சொன்னாலும், எதைச் செஞ்சாலும் எந்தச் சமயத்திலே அதைப் பண்ணறோம், எந்த இடத்திலே அதைப் பண்ணறோம், யாரைக் குறிச்சு அதைப் பண்ணறோம்ங்கிற மூணு அம்சத்தையும் கவனிச்சு, அதுக்கெல்லாம் இசைவான மாதிரியே பண்ணணும். மநுஷ்ய வாழ்க்கையிலே இதுதான் ரொம்பப் பெரிய பாடம். தர்மம், பிரேமை என்கிற ஆதாரத்தை மாற்றிக்காமலே, அதுக்கு மேலே எழுப்பற பேச்சையும், காரியத்தையும் சந்தர்ப்பத்துக்கு ஏற்றாப்போலே சரி செஞ்சுக்கணும்'' என்றார் பதி.

அந்த உபதேசத்தின் உண்மை விளக்கமாகவே இதன் பின் அமைந்தது அம்மாவின் வாழ்க்கை. (தொடரும்)



□ சுதந்திரம் பெற்றபிறகு நமது நாடு நடுநிலைக் கொள்கையைக் கடைப்பிடித்து வந்ததால் பெரியதொரு போரைச் சந்திக்க வேண்டிய அவசியம் இருக்காது என்ற கருத்தில் நமது ராணுவம் விஸ்தரிக்கப்படாமல் இருந்தது. 1962ல் சீனா திடீரென்று நம்மைத் தாக்கிய போது பயிற்சியின்றி, நவீன போர்க் கருவிகள் இல்லாமல் மிகவும் வருந்தத்தக்க நிலைக்கு ஆளாக்கப்பட்டார்கள். வீரத்தில் நமது படைவீரர்கள் உலகில் யாருக்கும் பின்தங்கியவர்களல்ல. ஆனால் சற்றும் எதிர்பாராத வகையில் நம் மீது போர் திணிக்கப்பட்டபோது தாங்கள் செயலற்ற தன்மைக்கு ஆளாக்கப்பட்டதை நினைத்து நமது ராணுவ வீரர்களின் உறுதி சிறிது தளர்ந்தது.

சீனத் தாக்குதலுக்குப் பிறகுதான் இந்திய அரசு நமது ராணுவ நிலை குறித்துச் சிந்திக்கத் தொடங்கியது. அதன் விளைவாக முப்படைகளும் வலுப்படுத்தப்பட்டன. ராணுவ தளவாட உற்பத்தி தீவிரமாயிற்று. சீனத் தாக்குதல் பண்டிட்ஜியை மனமுடைந்து போகச் செய்துவிட்டது. அவர் மறைவினை இது துரிதப்படுத்தியதாகக்கூடச் சொல்லப்படுவதுண்டு. ஆனால் சீனத் தாக்குதலினால் ஒரு நன்மையும் விளைந்தது. முடங்கிக் கிடந்த நமது ராணுவம் உயிர் பெற்றெழுந்தது அப்போதுதான் !

□ 1965ல் பாகிஸ்தான் நம்மைத் தாக்கிய போது முதன் முறையாக நமது விமானப் படை போரில் ஈடுபடுத்தப்பட்டது. உள்நாட்டில் தயாரிக்கப்பட்ட விமானங்களைப் பயன்படுத்தி எதிரியைத் திணற அடித்தார்கள் நமது வீரர்கள். சக்தி வாய்ந்த பாட்டன் டாங்குகளைத் தகர்த்து அதிசயிக்கத்தக்க வகையில் வீரத்தைக் காட்டினார்கள். சீனப் போரில் ஏற்பட்ட அவமானத்தினால் சற்றுக் குனிந்திருந்த நமது ராணுவத்தின் தலை இந்தப் போரில் நிமிர்ந்தது. இந்தப் போரினால் விளைந்த பெரிய நன்மை இது.

இந்தப் போரில் நமக்குச் சொந்தமான 'பிரம்மபுத்ரா' என்ற கப்பலைப் பாகிஸ்தான் மூழ்கடித்துவிட்டதாகப் பொய்ப் பிரசாரம் செய்தது. அயல்நாட்டுப் பத்திரிகையாளர்களை அழைத்து 'மூழ்கடிக்கப்பட்ட' பிரம்மபுத்திராவைக் காட்டினோம்!

இந்தப் போரில் கப்பற் படை பங்கு கொள்ளவில்லை. சப்மரீன்கள் வாங்கினால் இந்தியா போர் வெறி கொண்ட நாடு என்ற எண்ணம் வருமோ என்று அவற்றை வாங்காமலேயே இருந்தோம். சமீபத்தில் தான் சப்மரீன்கள் வாங்கப்பட்டன.

□ நடந்து முடிந்த போரில் முப்படைகளும் நல்ல ஒற்றுமையோடு செயல்பட்டு எதிரியைத் திக்குமுக்காடச் செய்துவிட்டன! ராணுவத் தளபதிகளுக்கும் அரசாங்கத்துக்கு மிடையே நல்ல ஒருங்கிணைப்பு இருந்தது. இந்தப்போரில் வங்காள தேசத்தை விடுவிக்க வேண்டும் என்பதுதான் நமது நோக்கம். மற்றபடி மேற்கு முனையில் நடந்த போர் தற்காப்புக்காகத்தான்!

□ பாகிஸ்தான் பெரும்பாலும் வெளிநாடுகளிலிருந்து பெற்ற ஆயுதங்களைப் பயன்படுத்தியது. சரியான பராமரிப்பு வசதி இல்லை. எனவே, தளவாடங்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருந்தாலும் அவற்றை முழுமையாகப் பயன்படுத்த முடியவில்லை. நம் நிலை அப்படி இல்லை. நாம் பெரும்பாலும் நமது தயாரிப்புக்களையே பயன்படுத்துகிறோம். பராமரித்துப் பழுது பார்க்க வசதி இருக்கிறது. நமது விஜயந்தா டாங்குகள் சிறந்த ரக டாங்குகள். அவை இந்தப் போரில் நமது வெற்றிக்கு உறுதுணை செய்தன.

□ இந்தப் போரில் கடற்படையின் பங்கு மகத்தானது. எதிரிக்கு யுத்த தளவாடங்கள் வரும் வழிகளை அடைத்து கராச்சி, சிட்டகாங் போன்ற துறைமுகங்களை எப்படித் திட்டமிட்டுத் தாக்கினோம் என்பதைச் சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்த திரு கிருஷ்ணன் என்னிடம் விவரித்தார். கமாண்டர் பஹன் யாதவ், ஆக்டிங் காப்டன் முல்லா (மகா வீரச் சக்கர விருது பெற்றவர்கள்) போன்றவர்களின் வீரச் செயல்களைப் பற்றி அவர் சொன்ன போது மெய்சிலிர்த்தது. மூழ்கிக் கொண்டிருக்கும் கப்பலில் மற்றவர்களைத் தப்பிக்க வைக்க காப்டன் முல்லா எடுத்துக் கொண்ட நடவடிக்கை, அவர் காட்டிய பொறுமை, தீரம் — இவையெல்லாம் நமது இளைய தலைமுறையினர் அறிந்து பயன்பெற வேண்டியவை !

□ போர்க் காலங்களில் மட்டும் நாம் ஜவான்களை நினைத்து ஏதோ தர்மம் செய்வதுபோல் உதவுவது சரியல்ல. ராணுவ வீரர்களுக்கும், அவர்தம் குடும்பங்களுக்கும் தேவையான உதவியை நமது கடமையாக நினைத்துச் செய்ய வேண்டும். கடுங் குளிரிலும் வெண்பனியிலும் அவர்கள் நமக்காக அயராது பணியாற்றுகிறார்கள்.

மற்ற தொழில்களைப் போல் ராணுவமும் கருதப்பட வேண்டும். இளைஞர்கள் பெருமளவில் ராணுவத்தில் சேர்ந்து பணியாற்ற முன்வர வேண்டும். என்னுடைய ஒரே மகன் அவனாக விரும்பிக் கடற்படையில் சேர்ந்து இன்று நல்ல பதவியை வகிக்கிறான்.

இத்தனை காலமும் நாம் ராணுவத்துக்குச் செய்த செலவு வீண் போகவில்லை என்பதைச் சுதந்திர வங்காளத்தைப் பெற்றுக் கொடுத்து நமது வீரர்கள் நிரூபித்துக் காட்டினார்கள்.

நம்பற்குரியர் அவ்வீரர். அவர் சிந்தையின் வீரம் நிரந்தரம் வாழ்க !

**(ஓய்வுபெற்ற கடற்படை அதிகாரி கமோதார் விசுவநாதன் ரோடரி கிளப் சார்பில் சமீபத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து.)**

**—எஸ்ஸார்**

# அம்மா

## ரா. கணபதி

### 15. "திவ்யாலங்கார பூஷிதா"

ஓம் ரணத்கிங்கிணி மேகலாயை நம:
(ஒலிக்கும் கிங்கிணி கொண்ட மேகலை அணிந்த வளுக்கு வணக்கம்)

ஓம் முக்தாஹார விபூஷிதாயை நம:
(முத்து மாலை அணிந்தவளுக்கு வணக்கம்)

ஓம் முக்தாமணி அங்கித சாரு நாசிகாயை நம:
(முத்து மூக்குத்தி அணிந்த அழகிய நாசியுடைய வளுக்கு வணக்கம்)

ஓம் ரத்னவலய பூஷிதாயை நம:
(ரத்தின வளை அணிந்தவளுக்கு வணக்கம்)

— ஸ்ரீ சரஸ்வதீ தேவி அஷ்டோத்தர சத நாமாவளீ

குரு சிஷ்ய உறவு வறட்சியாக நிற்க வில்லை. இவள் அவருக்குப் பார்த்துப் பார்த்துச் சமைத்துப் போட்டாள்; வெற்றிலைச் சுருள் மடித்துக் கொடுத் தாள். அன்பைக் கலந்து பணிவிடைகள் செய்தாள். அவரும் இவளைக் கண்ணின் மணியாக அருமையுடன் நடத்தினர்.

குடித்தனம் செய்ய மனைவி வந்த வுடன், ஆதியில் அம்மா குறைப்பட்டுக் கொண்டதை நிறை செய்தார் ராம கிருஷ்ணர். கலியாணமான புதிதில் லாஹா வீட்டு இரவல் நகையைக் குழந்தை சாருவிடமிருந்து அவர் 'பறி முதல்' செய்தபோது அன்னை சந்திரா அழுது துடித்தாள் அல்லவா? பிறகு சாருவிடம், "கதாயீ இதைவிட நல்ல நகையெல்லாம் உனக்குப் பண்ணிப் போடுவான்" என்றாள் அல்லவா? இப் போது மாத்ரு வாக்ய பரிபாலனம் செய் தார் ராமகிருஷ்ணர்.

ராமகிருஷ்ணர் எண்ணிறந்த பாவங் களில் இறைவனை அநுசந்தானம் செய் தாரல்லவா? அவற்றில் அவர் அம்பிகை யின் சேடியாகத் தம்மை பாவித்ததும் ஒரு சாதனையாகும். இன்னொரு சமயத் தில் தம்மை ராதா ராணியாகவே கருதி கிருஷ்ண பரமாத்மாவை அன்பு செய் தார். இவ்விரு சாதனைகளின் போதும் அவர் சேலை உடுத்தியும், பின்னலிட்டும் பெண்ணாகவே வாழ்ந்தார். அந்த உணர்வு அடர்த்தியில் அவரது சரீரத் தில் பெண்களுக்குரிய தன்மைகளே ஏற் பட்டு, ஆடவர் சரீரத்திலுள்ள தனித் தன்மைகள் மறைந்தும் விட்டன. இந் தக் காலங்களில் அவர் அணிவதற்கென ஹாரம், நத்து, கங்கணம் முத லிய ஆபரணங்களை அர்ப்பணித் தார் மதுர்பாபு.

இப்போது ராமகிருஷ்ணர் அந்த ஆபரணங்களை சாரதா மணிக்கு அன்புடன் அளித்தார். பொன்னையும் மண்ணையும் சம மாகப் பாவித்த சந்நியாசச் சக்கரவர்த்தி, பரிபக்குவம் வாய்ந்த பத்தினிக்குப் பொன்னா பரணங்களைத் தந்தார்!

அதோடு நிற்கவில்லை. ஹ்ருதயரை அழைத்தார். "இங்கே வருகிற பல பேர் நான் எத்தனை மறுத்தாலும் கேட்காம பணக் காணிக்கை செலுத்த றதை எடுத்து வைச்சுப்பியே, மொத்தம் எவ்வளவு சேர்ந்திருக்கு பாரு" என்றார்.

பணம் என்றாலே பதறும் மாமா, தவ றிப்போய்ப் பணத்தைத் தீண்ட நேர்ந் தால் உடல் கொப்புளித்துப் போகும் மாமா, கணக்குப் பார்க்கச் சொல்வது ஹ்ருதயருக்கு வியப்பாக இருந்தது. கணக்குப் பார்த்தார். முந்நூறு ரூபாய் இருந்தது.

"சரி, மாமிக்கு அதிலே பொன் காப்புப் பண்ணிப் போடு. அந்தக் காப்பு முனையிலே வைரக் கல் பதிக்க ணும். ஏன் தெரியுமா? ஸீதை அப்படிப் பட்ட கங்கணம்தான் போட்டுண்டு இருந்தா. ராவணன் தூக்கிண்டு போகச்சே ஸீதா தேவி எல்லா நகை களையும் கழட்டிப் போட்டாலும் கூட, இந்த மங்கள கங்கணத்தை மட்டும் கழட்டல்லே. ஆமான்டா, நான் முதல் முதல்லே கண்ணைத் திறந்துண்டே தரி சனம் பண்ணின அசோக வனத்துப் புழுதி ஸீதை கையிலே இந்தக் கங் கணம் மட்டும் பளிச்சினு மின்னித்து" என்றவர் முகம் வழியச் சிரித்துக் கொண்டு "எனக்கும் உன் மாமிக்கும் இதுதான் உறவு" என்றார்.

லௌகிகமாகத் தோன்றுகிற ஒன்றுக் குள்ளே எத்தனை புனிதம்!

திருமணத்தின்போதே கங்கணச் சரட்டை எரித்துக்கொண்ட ராமகிருஷ் ணர், தமது ஸீதா தேவிக்கு வைரம் பதித்த கங்கணத்தை அளித்தார்.

"ஹ்ருதா, இதுக்கு என்ன செலவு ஆச்சு?" என்று கேட்டார்.

"இருநூறு ரூபாய்" என்று பதில் வந்தது.

"அப்படீன்னா பாக்கி நூறு ரூபாயை யும் மாமிகிட்டக் கொடுத்துடு. அவ தானே இனிமே இங்கே யஜமானி யம்மா?" என்றார்.

பற்றி எரிகிற இதயத்துடன் ஹ்ரு தயர் அந்தப் பணத்தை மாமியிடம்

கொடுத்தார். அவள் அதைத் தனக்காகச் செலவழித்துக் கொள்ளவில்லை. பரம ஏழைமையிலிருந்த தன் பிறந்தகத்துக்கும் அனுப்பிவிட வில்லை. ஹ்ருதயர் உள்ளிட்ட ராமகிருஷ்ண பக்தர்களுக்காகவே உணவுப் பண்டம் முதலியன வாங்கிப் போட்டாள்.

அகலமாகச் சிவப்புக் கரை போட்ட மங்கள வஸ்திரம் உடுத்தி, வகிட்டிலே செங்குங்குமம் அப்பிக் கொண்டு, மூக்கிலே நத்தும், கழுத்திலே காசு மாலையும் மின்ன, கரங்களில் கங்கணங்கள் கிணுகிணுக்க, முழங்காலை எட்டும் அடர்ந்த பின்னலுடன் தேவி சாரதாமணி நஹவத்தின் மாடிக்குச் சென்று மாமியாரின் பாதத்தில் பணிந்தாள்.

அந்த ஸர்வ மங்களையைக் கண்டு சந்திரமணியின் கண்கள் பனித்தன.

எத்தனையோ காலத்துக்குப் பின் இப்போது கற்பிதமாக எண்ணும் போதே நம்முடைய கண் பனிக்கிறது எனில், அந்த இனிக்கும் கோலத்தை நேரில் கண்ட சந்திரா ஏன் கரைய மாட்டாள்?

''தீர்க்க ஸுமங்கலீ பவ'' என்ற வார்த்தைகளைச்



சொல்லவும் முடியாமல் தடுமாறினுள் அவள்.

ஆஹா, அந்தப் புண்ணியவதி தடுமாருமல் அப்படி ஆசீர்வதித்திருக்கக்கூடாதா?... சரி, மங்கள வேளையில் அதை ஏன் நினைக்க வேண்டும்?

மங்களமும் கரித்தது ஹ்ருதயருக்கு. என்ன இருந்தாலும் மாமிக்கு இந்த நகை ஆசை வேண்டியதில்லே என்று தோன்றியது.

அவரிடம் ராமகிருஷ்ணர் — நம் காலத்து யுவதிகளுக்கே சொல்வது போல் — சொன்னர்: ''பெண்கள் நகை நட்டுக்களுக்கு ரொம்பவும் ஆசைப்படக் கூடாது. வண்டி நகையை வாரிப் போட்டுக்கப்படாது. ஆனு அதுக்காக மூளியாகவும் நிக்கக் கூடாது. மங்கள ஸ்வரூபமாயிருக்கணும். ஸரஸ்வதி தேவி ஒரே வெள்ளே, ஒரே எளிமைதான். ஆனு அவளுக்கு 'திவ்யாலங்கார பூஷிதா'ன்னு பேர் உண்டு தெரியுமா? அதனுலேதான் மாமியும் சந்தோஷமா நகை போட்டுக்கரு.''

சொல்லும்போதே அவரும் சந்தோஷப்பட்டார்!

சாரதை நஹவத்துக்குப் போன பின் அவள் ராமகிருஷ்ணரைச் சந்திப்பது மிக மிகக் குறைந்து போயிற்று. தக்ஷிணேசுவரக் காளி கோயிலுக்கும், ராமகிருஷ்ணரைப் பார்ப்பதற்கும் பகலெல்லாம் பலர் வந்தபடியிருந்ததால், வெகு கடுமையாக 'கோஷா' முறையை அநுசரித்த சாரதை, பதிதேவருக்கு உணவு எடுத்துச் செல்வது தவிர மற்றப் போதுகளில் தன் அறையை விட்டு வெளி வருவதை அடியோடு நிறுத்திக் கொண்டாள். ஆனுல் ராமகிருஷ்ணரோ அவளுக்குப் பலவித மந்திரோபதேசங்களேயும், வேறு பல போதனைகளேயும் தர விரும்பிப் பக்கலில் வைத்துக் கொள்ள வேண்டியிருந்தது. இவைதாம் அவர் அவளுக்கு அளிக்க விருந்த நிரந்தர ஆபரணங்கள். சாரதைக்குப் பகலில் பயிற்சி தர முடியாததால் வெளியுலகம் எண்ணிப் பார்க்கமுடியாத ஒரு புதுமை—அச்சமும் ஆனந்தமும் சேர்ந்த புதுமை—இவர்களது வாழ்வில் தொடங்கியது! இரவு வேளைகளில் ராமகிருஷ்ணர் சாரதையைத் தமது அறையிலேயே வைத்துக் கொண்டார்!

முதலில் அவள் வந்தபோது ஒரு கிழவியைத் துணை வைத்துக் கொள்ளச் சொன்னவர், இப்போது தங்கள் இருவரது மனங்களின் புனிதமே துணை இருக்க, வெளித் துணை எதற்கு என்று கருதினர். தாழிடாத அறையில் அந்த ஒப்பில்லாத தம்பதியரின் இரவுகள் கழிந்தன.

ராமகிருஷ்ணரைப் பைத்தியம் என்று சொன்னவர்கள் இருந்தார்கள். அவர் ஒன்றும் தெரியாத அப்பாவி என்று நினைத்தவர்கள் இருந்தார்கள். அவரது தெய்விக அவதாரத் தன்மையைப் புரிந்து கொள்ளாதவர்கள் அதைவிட ஏராளமாக இருந்தார்கள். ஆனுலும் எவருமே அவரது தூய்மையைப் புரிந்து கொள்ளாமல் இல்லே. பைத்தியம் என்றும் பேதை என்றும் அவரைச் சொன்னவர்களும், அவரைப் பிரம்மசரியத்தில் குறைந்தவராக ஒருபோதும் சொல்லவில்லே — இளம் மனையாளுடனேயே அவர் இரவுகளேக் கழித்த போதிலும். இப்படி ஒரு பேச்சு எழும்பாத தொன்றே போதும் அவரது சீலத்தின் சிறப்புக்கு!

பக்கத்தில் மனைவியை வைத்துக் கொண்டே சந்நியாசத்தைக் காக்க வேண்டும் என்பதை அவர் காமார்புகுரில் நடைமுறையாக்கினுலும் அதில் அவ்வளவு விசேஷமில்லே. அப்போது சாரதை ஒரளவு குழந்தை நிலேயிலேயே இருந்தாள். மேலும் பகல் நேரங்களில் பலருக்கிடையேதான் அவர்கள் பழகினர். இப்போதோ அவள் பத்தொன்பது வயதுப் பெண்மணி. இரவில் ஏகாந்தத்தில் அவர்கள் காந்தன்—காந்தை என்ற நினைப்பின்றி வாழ்ந்தது சமய சரித்திரம் கண்டிராத சாதனே.

சாதனையில் அவளேச் சோதனையும் செய்தார் ராமகிருஷ்ணர் ஒருமுறை.

''பிரியே! உன்னே நான் தொட்டுத் தாலி கட்டியிருக்கேன்! எனவே உனக்குத் தாம்பத்திய இச்சை இருந்தா அதைப் பூர்த்தி செய்யறது என் கடமை. என்னே லௌகிகத்துக்கு இழுக்கத்தான் நீ ஜயராம்பாடியிலேருந்து இங்கே வந்திருக்கேன்னு, நீ இழுத்த இழுப்புக்கு இசையத்தான் வேணும்...''

தன்மேல் தணலே வாரிக் கொட்டினுற்போல் துடித்துச் சாரதை இடைமறித்தாள்: ''ஏன்னு இப்படிப் பேசறேள்? நான் ஏன் உங்களே லௌகிகத்துக்கு இழுக்கணும்? நீங்க உங்களுக்குன்னு ஒரு மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்திருக்கேளே, அதிலே உங்க பிரயாணத்துக்குச் சகாயம் பண்ணறத்துக்காகவேதான் வந்திருக்கேன்.''

'சகதர்ம சாரிணி'யாக முழுக்க முழுக்க அவருடன் தர்மத்தில் உடன் நடந்து உதவவே வந்தவள் அவள்.

தன்னேப் பார்த்து அவர் அந்த வார்த்தை சொன்னது அவள் மனத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது

போலும்! ஒரு நாள் இரவு 'எதிர்த் தாக்குதல்' கொடுத்தாள்.

அவரது பாதங்களைப் பிடித்துவிட்டுக்கொண்டிருந்தாள் அவள். அவர் புன்முறுவலுடன், அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்.

அந்தப் புன்னகையின் புனிதம் புரியாததுபோல் சாரதாதேவி, ''என்னை எந்த எண்ணத்துடன் இப்படி உற்றுப் பார்க்கறேள்?'' என்று கேட்டாள்.

ராமகிருஷ்ணர் தணல் பட்டதுபோல் துடித்துப் பதில் சொல்லவில்லை. சாந்தமாக, பக்தி புஞ்சிதமாகச் சொன்னார்: ''கோவிலுக்குள்ளே ஒரு அம்மா இருக்கா. அந்த அம்மாவே இன்னொரு ரூபத்திலே வந்து என்னைப் பெற்றுப் போட்டுவிட்டு இப்போ நஹவத் மாடியிலே இருக்கா. சாக்ஷாத் அதே அம்மா தான் இன்னொரு வேஷத்தைப் போட்டுண்டு இதோ என் கால்மாட்டிலே உட்கார்ந்துண்டு பிடிச்சு விடறா. சத்தியமாச் சொல்றேன். உன்னை என் ஆனந்த மாதாவோட ஸ்வரூபமாகத் தான் பார்க்கறேன்.''

சாந்தமாக ஆரம்பித்தவர் விக்கினார். 'குடைய' எண்ணியவளும் விக்கினாள்.

இன்னோர் இரவு. அவள் ஒரே அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தாள். உழைத்துக் கொட்டிய களைப்பிலே நல்ல தூக்கத்தைத் தேகம் அநுபவித்தது. கண்டதை எண்ணிக் கலக்கத் தெரியாத மனமாதலால் அந்த நித்திரையில் நிர்மல நிம்மதி நிலவியது. சீராகச் சுவாசித்துக் கொண்டு தேவி உறங்கியது, ஏதோ சமாதி நிலையில் இருப்பதுபோலத்தான் இருந்தது.

ராமகிருஷ்ணர் அந்த உருவத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தார். 'ஹ்ம்' என்று தம் உடலைக் குலுக்கிக் கொண்டார். 'வெறும் மாமிசப் பிண்டமாகப் பார்த்தால் இதுதான் பெண் உடல் என்பது. இதை அநுபவிப்பதுதான் வாழ்க்கையில் தலை சிறந்த இன்பம் என்று கருதி மக்கள் இதன் பின் ஓடுகிறார்கள். ஆனால் இதை இன்பம் என்று ஏற்றுவிட்டாலோ, அப்புறம் தேக உணர்வு என்கிற பொறியிலே சிக்கிவிட வேண்டியதுதான். பிறகு சத்—சித்—ஆனந்த பரிபூரணமான பரம்பொருளை அடைவது முடியாத காரியம். ஏ, கதாயீ! உனக்கு நீயே போலித்தனம் பண்ணிக் கொள்ளாதே! உள்ளுக்குள்ளே ஒரு நாட்டத்தை மறைத்து வைத்துக்கொண்டு வெளியே பொய்யாக இன்னொரு சித்தாந்தத்தைப் பின்பற்றாதே. நிஜமாகச் சொல்லடா, உனக்கு இந்தப் பெண் உடம்பு வேண்டவே வேண்டாம், பரம்பொருள்தான் வேண்டும் என்று சர்வ நிச்சயமாகத் தீர்மானம் இருக்கிறதா? இந்த உடம்பு வேண்டுமென்றால் இதோ உன் முன்னே நீ அநுபவிக்கவே அது கிடக்கிறது. உன்னைப் பரம சந்நியாசியாக நினைத்துக் கொண்டுள்ள நீ அதை எந்த விகல்பமும் இல்லாமல் தொட முடியுமா, பார்' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

பரீட்சித்துப் பார்ப்பதற்காகக் கையை நீட்டினார். அவ்வளவுதான்! பூமியின் ஆகர்ஷணத்தை மீறி விண்வெளியில் ஆயிரமாயிரம் காத வேகத்தில் பறக்கும் கலம் போல ராமகிருஷ்ணரின் உள்ளம் கிறுகிறுவென்று உயரே, உயரே அதற்கும் உயரே, அப்பாலும் உயரே, மேலும் உயரே பறக்கலாயிற்று.

'தொடுவதா? தொடுவதா? அப்படியானால் தொடுகிறவன், தொடப்படும் வஸ்து, தொடுதல் என்ற பேதங்கள் உள்ளனவே. அண்ட சராசரங்கள் அனைத்திலும் பரவியிருக்கும் ஏக வஸ்துவான எனக்குப் புறம்பாக நான் தொட்டுப் பார்க்கும்படியாக எது இருக்கிறது?' ராமகிருஷ்ணர் அதி உன்னத சமாதி நிலைக்கு ஆரோகணித்து விட்டார்.

விகல்பமின்றி அவளைத் தொட முடியுமா எனப் பரீட்சை பார்த்தவர் நிர்விகல்ப சமாதியே எய்திவிட்டார்.

வழக்கம் போல் பின்மாலை நாலு மணிக்கு எழுந்த சாரதை, கணவர் பிரக்ஞையற்று ஆணி அறைந்தாற் போல் அமர்ந்திருக்கும் நிலை கண்டு நடுங்கி விட்டாள். பிரக்ஞையில்லையா? அதுதான் உண்மைப் பிரக்ஞை. 'பிரக்ஞானம் பிரம்ம' என்ற நிலை அது. ஆனாலும் வெளி வியாபாரம் ஒடுங்கி விட்ட அந்த நிலையில் கணவரைக் கண்டு கதிகலங்கி விட்டாள் சாரதை.

ஹ்ருதயர் வந்து 'மாமா'வின் காதில் ஏதேதோ பகவந் நாமங்களை நீண்ட நேரம் கோஷித்த பின்தான் ராமகிருஷ்ணரின் சமாதி கலைந்தது.

அதன் பின் ராமகிருஷ்ணர் தமது மனையாளுக்குத் தமது சமாதியின் பல வித பாவங்களை விளக்கி, தம்மிடம் புறத்தில் இன்னின்ன அடையாளங்களைக் கண்டால் அது இந்த வகை சமாதியைக் குறிக்கும் என்று விவரித்து, அவை ஒவ்வொன்றிலிருந்தும் தம்மைக் கலைத்தெழுப்ப என்னென்ன நாமங்களை அல்லது மந்திரங்களைக் காதில் ஓதவேண்டும் என்பதையும் சாங்கோபாங்கமாகச் சொல்லிக் கொடுத்தார்.

அதீத நிலை எய்தவே மந்திரோப தேசம் செய்வார்கள். இந்த விசித்திரக் கணவரின் அதீத நிலையைக் கலைப்ப தற்கு அவரது காதில் மந்திரம் ஓதுவாள் அதைவிட விசித்திரமான மனைவி.

சாரதைக்கு ராமகிருஷ்ணர் சகல மந் திரங்களையும் உபதேசித்தார். முன்பு காமார்புகுரில் அவள் இருந்தபோது பூர் ணனந்தர் என்ற தேஜஸ்வியான உத்தம சாது அங்கு எழுந்தருளிப் பலருக்கு மந் திரோபதேசம் செய்தார். அவர் சார தைக்கும், குழந்தை லக்ஷ்மிக்கும்கூட, சக்தி மந்திரத்தை உபதேசித்திருந்தார். மந்திரோபதேசம் என்பது மகான்களின் வாழ்வில் மிகவும் முக்கியமான ஒரு கட்டம். ஆனால் சக்தியவதாரமான சாரதை சக்தி மந்திரம் பெற்றதில் விசேஷமாக ஏதும் நிகழவில்லை. வித்தின் மீதும் பயிரின் மீதும் விழுந்தவுடன் பச்சை அற்புதத்தைப் புனையும் மழை யானது நீர்ப் பரப்பின் மீது விழுந் தால் எந்த அற்புத மாறுதலையும் விளைவிப்பதில்லை! பல சாதகர்களின் உட்புகுந்து அற்புத மாற்றங்களைச் செய்யும் சக்தி மந்திரம், சக்தியவ தாரமான சாரதையினுள் எந்த மாற்றத் தையும் ஏற்படுத்தவில்லை போலும்! அல்லது, நமக்குத்தெரியாமலே மாற்றம் உண்டாக்கி இருக்கலாம். அவளது பௌதிகமான குழந்தை ஆசை பஸ்ம மாகி, அவள் ஜயராம்பாடியில் வாழ்ந்த பரம வைராக்கிய வாழ்வுக்கு அந்த மந்திரம்தான் காரணமோ என்னவோ?

சாரதையின் தாய்மையை அடக்கி வைக்க வேண்டுமென்று ராமகிருஷ்ணர் நினைத்த காலம் இப்போது போய்விட் டது. இப்போது அவளுக்குள் உள்ள தாய்மையைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தட்டி எழுப்ப முற்பட்டார். அப்படித் தட்டி எழுப்பும் சாதனங்களாகவே பல மந்திரங்களை உபதேசித்தார். அவளது திருநாவிலும் ஒரு மந்திரத்தை எழுதி யருளினர். தாம் திரட்டிய ஆத்மிகச் செல்வத்தை யெல்லாம் இவ்வாருகச் சாரதைக்குள் செலுத்தினர்.

மந்திரம் என்ருல் என்ன? மனனம் செய்பவனைக் காப்பது எதுவோ அதுவே மந்திரம். மந்திரம் என்பது ஒலிகளின் சேர்க்கைதானே, அதை ஜபித்தால் எப் படி இறைவனை அடைய முடியும் என்று தோன்றலாம். ஒலிகளின் சக்தி அபரி மிதமானது. அசைவு ஏற்படும் இடங் களில் எல்லாம் ஓர் ஒலியும் உண்டாகும் என்பது விஞ்ஞானம். அசைவற்ற பிரம்மம் ஆகாயமாகவும், காற்ருக வும், தீயாகவும், நீராகவும், மண் ணுகவும், இன்னும் எண்ணிறந்த பொருட்களாகவும், சக்திகளாகவும், எண்ணங்களாகவும் தோன்றியபோ தெல்லாம் வெவ்வேறு அசைவுகள் உண் டாகித்தானே இருக்க வேண்டும்? இந்த அசைவுகளின்போது ஏற்பட்ட ஒலிகளை ஒத்த மானுட சப்தங்களை மகரிஷிகள் கண்டு கொண்டார்கள். இந்தச் சப்தக் கோவைகளே மந்திரங்கள். அவை எந்த மொழியையும் சேர்ந்தவையில்லை. இந் தச் சப்தக் கோவைகளைச் சுத்தமாக மொழிவதன் மூலமே, மூல அசைவி லிருந்து பிறந்த சக்திகளையும் படிப் படியாகக் கிரகித்து, கடைசியில் அந்த சக்திகளுக்கெல்லாம் மூலமான அசை வற்ற ஏகத்தையும் பிடித்து விடலாம். செல்வத்தைத் தரும் சக்தி, வித்தை யைத் தரும் சக்தி, ஞானம் தரும் சக்தி, அழகு தரும் சக்தி — இப்படி ஒவ்வொன் றுக்கும் ஏற்றபடி அதிர்வுகளை உண் டாக்கும் சப்தக் கோவைகளின் மூலம், ரேடியோப் பெட்டியில் அதிர்வுகளைக் கொண்டு பல நிலையங்களைப் பிடிப்பது போல், பலவித சக்தி அசைவுகளின் ஆதாரத்தைப் பிடிக்கலாம். நல்ல சக்தி யைப் பிடிக்கவும் மந்திரம் உண்டு; தீய சக்தியைப் பிடிக்கவும் மந்திரம் உண்டு. நல்லது — அல்லது என்ற வேற்றுமை அற்ற ஞான நிலை எய்தவும் மந்திரம் உண்டு. ராமகிருஷ்ணரோ சாரதையை நல்லதும் தீயதும் அற்ற எல்லை நிலத்தைத் தனக்குள்ளும், எது நல்லது எது தீயது என்று பிரித்துக் காணும் பாங்கை வெளியிலும் காண்ப தற்காகவே மந்திரங்களை உபதேசித் தார். அதோடுகூட, அவளது ஜீவாசார மாக, வெளியில் நன்மை தீமை மாறு பாட்டைக் கண்ட போதிலும் அவளைப் பொறுத்தமட்டில் எவ்வித பேதமு மின்றி வெளி உலகம் முழுவதற்கும் நல்லது மட்டுமே செய்வதற்கும் மந் திரங்களைக் கொடுத்தார். எல்லா மகா புருஷர்களிடமுமே இந்த விசித்திரக் கலவையைக் காண்கிருேம். அவர்கள் நன்மை தீமை இரண்டும் கலந்த மாய உலகைக் கடந்தவர்கள்; ஆயினும் உலகில் எது நல்லது எது தீயது என்று அவர்களுக்குத் தெரிகிறது; அதே சம யத்தில் நல்லவர் தீயவர் இரு சாராரை யும் அவர்கள் ஒரே போல் அன்புடன் அரவணைக்கிருர்கள்; உலகுக்கு நல்லது மட்டுமே புரிகிருர்கள்.

இந்த உத்தமச் சிறப்புக்கள் மந்திரோபதேசத்தால் சாரதைக்குக் கிட்டின என்பது சரிதானு? அவளது சுபாவத்திலே அவை இருக்க வில்லையா?

சுபாவத்தில் இருந்ததையே மந்திரங்கள் நிலைப்படுத்தின எனலாம்.

அவள் பலவிதமான மந்திரோபதேசம் பெற்றதற்கு இன்னொரு காரணமும் உண்டு. எதிர்காலத்தில் அவள் தன்னிடம் வந்தோரில் ஏராளமானவருக்கு அவரவருக்குரிய மந்திரங்களை உபதேசித்து நல்வழிப்படுத்தப் போகிறாள். இதற்காகவே முதலில் அவற்றைத் தானும் மந்திரமூர்த்தியான நாயகனிடமிருந்து பெற்றாள் போலும் !

சாரதை தனக்கே உரிய சிரத்தையுடன் மனம் குவிந்து அந்த மந்திரங்களை ஜபித்தாள். நாள் முழுதும் ஓயாத வேலையாதலால், காலையில் மூன்று மணிக்கே எழுந்திருந்து, சுமார் ஒன்றரை மணி ஜபயோகத்தில் கரைந்திருந்தாள். பின் மாலையிலிருந்து இவ்விதம் தீவிர ஜபம், ஓயாத உழைப்பு என்றிருப்பினும் அவள் எப்போதும் புது நிலவாகவே இலங்கியதுதான் அதிசயம்!

பவதாரிணியின் அருள் பொலியும் தக்ஷிணேசுவரத்திலே பாலாக நிலா காய்ந்து கொண்டிருந்தது. கங்காதேவி க்ஷீரசாகரமாக ஓடிக் கொண்டிருந்தாள்.

சந்திரன் தன் வெண்மையால் மௌனம் பரப்புவதாயும், தாவரம் தனது பசுமையால் கவிதை பொழிவதாகவும் டாகூர் பாடினார். இங்கு சந்திரனின் வெண் மௌனத்தை கங்கை வாங்கிக் கொண்டு தன் வெள்ளலைகளாலேயே கவிதை பாடினாள். அந்த கவிதைக்குள்ளேயே மோன சௌக்கியமும் திகழ்ந்தது. வம்பிலேயே மௌன சுகம் தரும் ராமகிருஷ்ணர் கங்கைக் கரைக்கு சாரதாதேவியுடன் வந்தார்.

ஞான சந்திரனான ராமகிருஷ்ணர், சீல கங்கையான சாரதைக்கு முழுமதியைக் காட்டினார்.

அந்த ஒளியில் தாய்மையின் தண்மையையும், ஒழுக்கத்தின் வெண்மையையும் ஒருங்கே அநுபவித்த தேவி, சந்திரனைக் கை எடுத்துக் கும்பிட்டாள். ''நானும் உன்னைப் போலவே ஆகணும். உனக்கும்கூடக் களங்கம் இருக்கு. அந்தக் களங்கமும் இல்லாம நான் பரிபூரண சந்திரனாகவே ஆகணும்'' என்று பிரார்த்தித்தாள்.

'' என்ன பேசறே ! குழந்தை 'அம்புலி மாமா வாவா' கூப்பிடறதா?'' என்று கேட்டார் ராமகிருஷ்ணர்.

சாரதை மௌனம் சாதித்தாள்.

ராமகிருஷ்ணரே பேசினார். ''அம்புலி மாமா, சந்தமாமா இப்படி எல்லாம் சந்திரனுக்குப் பேரு. இந்தியா தேசம் முழுக்க எல்லாப் பிரதேசத்திலேயும் சந்திரனை 'மாமா' 'மாமா'ன்னே குழந்தைகள் கூப்பிடறதுகள். இந்தக் குழந்தைகள் தங்களுக்குள்ளே எத்தனையோ வித்தியாசம் பாராட்டறதுகள். அதுகள் வெவ்வேறே பாஷை பேசறதுகள். அதிலே சில குழந்தைகள் பணக்கார வீட்டிலே சௌக்கியமா வளர்றதுகள், சில குழந்தைகள் சேரியிலே படாத கஷ்டமும் படறதுகள். ஜாதி, அந்தஸ்து, பாஷை எல்லாத்திலேயும் வித்தியாசம் இருந்தாலும் சந்திரனை 'மாமா'ன்னு உறவு கொண்டாடறதுலே மட்டும் அத்தனை குழந்தைகளுக்கும் வித்தியாசமே இல்லை. அப்படியேதான் ஈசுவரன் அத்தனை பேருக்கும் ஒரே உறவா இருக்கான். அந்த ஒரு உறவைப் புரிஞ்சுண்டா, உலகத்திலே இருக்கிறவா அத்தனை பேருக்கும் அவன் அதே உறவுன்னு புரிஞ்சுண்டா, அப்புறம் எல்லாரும் நமக்கு உறவுன்னு புரிஞ்சுடும்.''

முன்பு அவள் தாய்மைக்குத் தவித்தபோது உலகிலிருப்பவர்களை எல்லாம் மாயையாக ஒதுக்கச் சொன்னவர் இப்போது அனைவரையும் அன்புடன் உறவு பாராட்டச் சொன்னது சாரதையின் அன்பு உள்ளத்தில் நிலவைப் பொல்லென்று பொழிந்தது.

வேண்டுமென்றே, ''ஜனங்கள் எல்லாம் உறவு என்றால் என்ன முறையில் ? கூடப் பிறந்தவாளா, பெற்றெடுத்தவாளா, அல்லது....'' என்று அவள் கேட்கும் போதே அவளை ஊடுருவித் துளைத்துப் பார்த்துப் புரிந்து கொண்ட ராமகிருஷ்ணர் மனத்துக்குள், 'அடி கள்ளி ! இந்த நாலு வருஷத்தில் நல்ல திட்பமாக வளர்ந்து என்னையே ஆழம் பார்க்கிறயா' என்று நினைத்தார். அதில் அவருக்கு எல்லையில்லாத உவகை.

பிரியத்துடன் புகல்வார்: ''ஈசுவரன் நமக்கு எப்படி உறவு — மநுஷ்யாள் எப்படி உறவு — ங்கிறதை எப்படி விவரிக்க முடியும்? எந்த உறவா வேணுலும் வைச்சுக்கலாம். அன்பு பூரணமாச் செழிச்சு நிக்கற உறவு அது. பொதுவாக ஈசுவரனை அம்மான்னு நினைச்சுண்டாலே இப்படி அன்பு முழுமையாச் செழிச்சு நிக்கும்; அதே மாதிரி மற்ற மநுஷ்யாளைக் குழந்தைகள்னு, ஆமாம், குழந்தைகள்னுதான் சொல்றேன்....''

சாரதாமணியின் அந்தராத்மாவுக்குள் குறுகுறுத்துக் கொண்டு பாய்ந்தன அந்த வார்த்தைகள். 'நாலரை வருஷங்களுக்குப்பின் அவர் என் வழிக்கு வந்துவிட்டார்; இல்லை, இல்லை, என்னை என் வழிக்கே தகுதியுள்ளவளாக்கி அதில் சேர்க்கிறார்!'

குபுக்கென்று அழுதுவிட்டாள் தேவி சாரதாமணி. (தொடரும்)

### ராவுத்தருக்கு மயில் ஏறத் தெரியுமா?

மாவுத்தன் என்றால் யானைப் பாகன். ராவுத்தன் என்றால் குதிரை வீரன். கந்தர் அலங்காரத்தில் அருணகிரிநாதர் முருகப் பெருமானை 'மயிலேறும் ராவுத்தனே!' என்கிறார். குதிரையைப் போல் மயிலை வேகமாகச் செலுத்துகிறவரே என்று பொருள்.

- நெடுமிடல்.

### எஞ்சியிருப்பது எஞ்சினியர்



"உங்கள் பையன் என்ன செய்து கொண்டிருக்கிறான்?"

"சும்மாதான் வீட்டில் இருக்கிறான்!"

"அப்படியா! என் பையன் கூட எஞ்சினியர்தான்!"

- கோட்டா மோகன்

### வெற்றியின் விலை !

பங்களா தேஷ் விடுதலைப் போர் 14 நாட்கள் நடந்தது. போரில் வெற்றிபெற்ற இந்தியா, வெற்றிக்காகச் சுமார் 100 கோடி ரூபாய் செலவழித்தது என்று மதிப்பிட்டிருக்கிறார்கள்! இதில் வெடி மருந்துகளுக்கான செலவு 25 கோடி; சேதமடைந்த டாங்கிகள் மற்றும் போர்க்கருவிகள் இவைகளின் மதிப்பு சுமார் 25 கோடி; போரில் நொறுங்கிய நமது விமானங்களின் மதிப்பு 15 கோடி; அழிந்த கப்பல்களின் பெறுமானம் சுமார் 2 கோடி; விமானங்கள், கப்பல்கள், டாங்கிகள் இவை இயங்குவதற்காகச் செலவான எரிபொருளின் மதிப்பு 10 கோடி; சிப்பாய்களுக்கு அதிகப்படியாகக் கொடுத்த 'போர் அலவன்ஸ்' 2 கோடி; சிவில் டிரான்ஸ்போர்ட்டுக்களுக்காகவும், அவை




களின் மூலம் பொருட்களைப் போர் முனைக்கு சப்ளை செய்யவும் ஆன செலவு ஒரு கோடி ரூபாய்; ராணுவத் தளவாடங்களை ரிப்பேர் செய்ய ஐந்து கோடியும் மற்ற இனங்களுக்கு ஐந்து கோடியும் செலவாயின. இந்தப் போருக்காக இந்தியா வெளிநாட்டு உதவி எதையும் பெறவில்லை. பெற்றிருந்தால் செலவு இன்னும் அதிகமாகி யிருக்கும்!

ஒன்பது மாதங்களாக பங்களாதேஷில் அக்கிரமங்கள் செய்ததற்கும் 14 நாட்கள் போர் புரிந்ததற்கும் பாகிஸ்தான் சுமார் 300 கோடி ரூபாய் செலவிட்டிருக்கிறதாம்! ஆதாரம்: ஹிந்துஸ்தான் டைம்ஸ்

தகவல்: "அனிதா"

★

ஜெய்ப்பூர் மத்திய சிறைச்சாலையில் உள்ள 230 கைதிகள் சமீபத்தில் நிறைவேற்றிய ஒரு தீர்மானம்: "நாட்டில் நெருக்கடி நிலை நீடிக்கும்வரையில் நாங்கள் காலைச் சிற்றுண்டி சாப்பிட மாட்டோம்; அதன் மூலம் மிச்சமாகும் பணத்தைத் தேசிய பாதுகாப்பு நிதிக்குக் கொடுத்து விடுங்கள்."

"ஹிந்துஸ்தான் டைம்ஸ்"

சரோஜா ராமச்சந்திரன்

**குறிப்பு: இந்த 'ஜோக்' நிக்ஸனைக் கிண்டல் செய்ய உருவான ஒன்றல்ல!**

நிக்ஸனுக்கு வோட்டளித்த ஒருவரிடம் நண்பர் கேட்டார்:

"நீங்கள் நிக்ஸனுக்கு எதற்காக வோட்டளித்தீர்கள்?"

"நான் குடியரசுக் கட்சியைச் சேர்ந்தவன்."

"நீங்கள் ஏன் குடியரசுக் கட்சிக்காரராக இருக்கிறீர்கள்?"



"ஏனென்றால், என் தந்தையும் ஒரு குடியரசுக் கட்சிக்காரர்!"

"ஓ, அப்படியா? உங்களுக்குக் கல்யாணமாகி விட்டதா?"

"இல்லை. நான் ஒரு பிரம்மசாரி."

"ஏன் பிரம்மச்சாரியாகவே இருக்கிறீர்கள்?"

"என்னமோ இருக்கேன்; வோட்டளிப்புக்கும் கல்யாணத்துக்கும் என்ன சம்பந்தம்?"

"ஒன்றுமில்லை; 'என் அப்பா பிரம்மச்சாரியாக இருந்தார்! அதனால் நானும் பிரம்மச்சாரியாக இருக்கிறேன்' என்பீர்களோ என்று எதிர்பார்த்தேன்!"

-- பி.எஸ்.எம்.

### 'ஒரே' லஞ்சம்!

ஒரு மந்திரி: நான் பதவிக்கு வந்து பத்து ஆண்டுகள் ஆகிவிட்டன. இன்று வரை ஒருவரிடம் நான் லஞ்சம் வாங்கியதில்லை.

ஒரு பிரஜை: அந்த ஒருவர் யார்?

- கோட்டா மோகன்

# அம்மா

## ரா. கணபதி

### 16. ஸ்ரீ ராஜராஜேசுவரி

சிந்தூரம் போல் செவேலென்ற திருமேனியள்; பிரம்மன் முதலிய சகல தேவதைகளாலும் சேவிக்கப் பெறும் உயர்நலமாகிய பரதேவதை; கரும்பு வில், மலரம்பு, பாசம், அங்குசம், புத்தகம், சிறந்த மாணிக்க அக்ஷமாலை இவற்றைக் கரங்களில் தரிப்பவள்; மற்றும் இரு கரங்களால் மார்பகத்தின் மீது மேவும் ரத்தினமிழைத்த வீணையை மீட்டுபவள்; ஒரு கரத்தால் அபயம் அருள்பவள்; ஒரு கரத்தால் வரம் வழங்குபவள்; ஆளும் தன்மை, தர்மம், கீர்த்தி, செல்வம், வைராக்கியம், மோக்ஷம் ஆகிய ஆறு 'பக'ங்களுக்கும் உறைவிடமான பகவதி - இப்பேர்ப்பட்ட ஸ்ரீ லலிதா மகா த்ரிபுரசுந்தரியாம் ஸ்ரீ ராஜராஜேசுவரியை - பதினாறு அட்சரத் தொகை கொண்ட ஸ்ரீ ஷோடசீ மகா மந்திரத்தின் தேவதையை - ஆசிரயிக்கிறேன்.

— ஸ்ரீ ஷோடசீ தியானம்

சாரதை விம்முகிறபோது ராமகிருஷ்ணர் புன்சிரிப்புடன் பேசினார். எந்தப் பிரேமையினால் அவள் விம்மினாளோ, அதே பிரேமையால் அவர் புன்னகைத்துப் புகல்வார்:

'அம்மா, அசட்டுச் சாரு அம்மா, ஞானத்திலே சமர்த்தாயிருந்தாலும் அன்புக்காக அசடாகிறதிலேயே ஆசை வைச்ச சாரு அம்மா! நான் உன்னை அம்மான்னு கூப்பிடறமாதிரி குழந்தைகளும் அம்மான்னு கூப்பிடணும்னு தானே ஆசைப்பட்டே? அந்த ஆசை நிறைவேறாதுன்னு நினைச்சு இனிமே விசனப்படாதே. அம்மான்னு யார் கூப்பிடறாளோ இல்லையோ, அதைப் பொருட்படுத்தாம நீ எல்லாருக்கும் அம்மாவா இருந்துண்டு இரு. 'அம்மா'ன்னு யாரும் வெளிப்பட ஆவேசப்பட்டுண்டு உன்னண்டை வரணுங்கிறதில்லே. நீயும் உன் உடம்போடு பின்னி வைச்ச லஜ்ஜையை விட்டுட்டு, 'மகனே மகளே'ன்னு யாரையும் வெளிப்படக் கூப்பிட்டுத் தாய்மையைக் காட்டணுங்கிறதும் இல்லே. எப்படி சாக்ஷாத் விசுவமாதா தன்னைக் காட்டிக்காம, ஒளிஞ்சுண்டிருந்தே, அத்தனைபேருக்கும் அம்மாவா அன்பு பண்ணறாளோ, அப்படியே நீயும் திரைக்குள்ளே இருந்துண்டே, மனசுக்குள்ளே அம்மா சாம்ராஜ்யத்தைப் பரப்பிக்கோ! அன்புக்கு அடக்கம் கிடையாதுன்னு சொல்லுவா. நீ லோகத்துக்கே புதுமையா அடக்கம், அன்பு இரண்டுக்கும் ஸ்வரூபமா இருந்துண்டு இரு. அப்புறம் ஒரு காலம் வரும். சாரு என்கிற பெண், ஸ்ரீஸ்ரீஸ்ரீ சாரதாமணி தேவியார் என்கிற பெரிய மநுஷியா ஆவா. அப்போது நீ வெளியேயும் உன்னை அம்மாவாக் காட்டிக்கலாம். அப்போது மநுஷ்யாளும் தானுவே உன்னை அம்மா அம்மான்னு கூப்பிட்டுண்டு ஓடி வருவா....'

—இப்படி யெல்லாம் ராமகிருஷ்ணர் வாய்விட்டுச் சொல்லவில்லை. ஆனாலும் அவள் குழைந்து அழுதபோது அவர் குழறிக் குழறி எதையோ சொன்னார் எதையோ சொல்ல முடியாமல் தவித்தார். அவர் சொன்னதிலும், சொல்ல முடியாமல் தவித்ததிலும் இத்தனை வார்த்தைகளையும் சாரதையின் அகச் செவி கேட்டுக் கொண்டது.

அவள் முன்னர் அன்னையின் அன்பு சாம்ராஜ்யம் விரிந்தது. அவள் ஸ்ரீமாதாவாகவும், ஸ்ரீ மகாராக்ஞியாகவும் அந்த சாம்ராஜ்யத்தில் வீற்றிருக்கிறாள். அவளைச் சுற்றிக் குழந்தைகள், குழந்தைகள், குழந்தைகள் — கணக்கேயில்லாத குழந்தைகள், பல ஜாதிக் குழந்தைகள், பல வேறு மன நிலையிலும் செல்வ நிலையிலும் உள்ள குழந்தைகள். 'ஆகா, இதோ இந்தக் குழந்தைகள் என்ன இத்தனை வெளுப்பாக இருக்கிறார்கள்! முழுமதியில் முழுகியிருப்பதால் வெள்ளை வெளேரென்று தோன்றுகிறார்களா?'

ராமகிருஷ்ணரின் மனமோகனக் குரல் அவளது மனோராஜ்யத்தைக் கலைத்தது— அல்லது நிலைக்க வைத்தது: ''அம்மா அம்மான்னு ஏங்கி அழைச்சுண்டு உன்னை ரொம்பப் பேர் தேடி வருவா. இந்தத் தேசத்துக்காரா மட்டும் இல்லை. வெள்ளைக்கார தேசத்திலேருந்துகூட வெள்ளைக் குழந்தைகள் வரும்.''

முதல் வெள்ளைக் குழந்தையாக ராமகிருஷ்ணரே அவள் முன் நின்றார் — அம்மா அம்மா என்றழைத்துக்கொண்டு!

''பத்துக் குழந்தைகளைப் பெற்றெடுத்துக் கொள். பிறகு புருஷனைப் பதினோராவது குழந்தையாக ஆக்கிக் கொள்'' என்று மணப் பெண்ணை ஆசீர்வதிக்கிறாள் வேதமாதா. சாரதாவோ முதல் குழந்தையாகவே கணவரைப் பெற்றுவிட்டாள்!

உலகத்துக்கெல்லாம் ஒரே போல் மாமாவான அம்புலியைக் காட்டி, உலகத்துக்கெல்லாம் ஒரேபோல் அம்மா வான அம்பாளை உணர்த்தி, உலகுக் கெல்லாம் ஒரேபோல் அம்மாவாகச் சாரு ஆவதற்கும் ஆசி கூறி அநுமதி தந்த ராமகிருஷ்ணர், தம்மைப் பெற்ற அன்னையைக் குசலம் விசாரிக்க நஹவத் மாடிக்குச் சென்றார்.

ஆலயத்து அன்னை, கைப் பிடித்த சாரதையன்னை இவர்களிடம் ராம கிருஷ்ணர் கொண்டிருந்த மதுர உறவு அவரை மணிவயிற்றில் தாங்கிய ஜனக மாதா சந்திரமணிதேவிக்கும் கிடைத் தது. தேவி சந்திரமணிக்கு அந்த மதுரம் இரட்டிப்பாகவே கிடைத்தது — ராம கிருஷ்ணரோடு சேர்ந்து சாரதையும் அல்லவா அந்தக் கிழவியை அன்பிலே முழுக்காட்டினாள்?

ராமகிருஷ்ணரின் அன்பு முற்றிலும் மனத் தொடர்பு கொண்டதே. சாரதைதான் சரீரத்தாலும் பணிவிடை செய்து சந்திராவிடம் அன்பைக் கொட் டியவள். ராமகிருஷ்ணர் தாயுடன் சேர்ந்தே உண்பார். சாரதாமணி உணவு பரிமாறுவாள். அந்த மூன்று பிரேம மய ஜீவர்களையும் இப்படிச் சித்திரித்துப் பார்த்துக் கொள்ளும் போது நமக்கும் உதரம் நிறைகிறது!

சாரதைக்கு மாமியாரிடமிருந்த பக்தி யும், பரிவும் சொல்லத் த்ரமன்று. தனது பதிதேவரையும், பிறகு மூத்த புத்திரர் ராமகுமாரரையும் இழந்த சந்திராதேவி சமீபத்தில் அருமைப் பேரன் அக்ஷயனையும் வாரிக் கொடுத் திருந்தாள். எனவே, அந்தப் புண்பட்ட இதயத்தை எவ்வளவு பண்பட நடத்த வேண்டுமோ அப்படிப் பாங்குடன் நடத்தினாள் சாரதை.

நஹவத் மாடியிலிருந்து, ''சாரதா'' என்று மாமியாரின் குரல் கேட்டுவிட் டால் போதும், உடனே கீழேயிருந்து சாரதாமணி துள்ளிக் குதித்துக்கொண்டு ஓடுவாள். நஹவத் வாசல் நிலைக்கு உயரம் போதாது. ''இப்படி ஓடு கிறாயே, தலையில் இடித்துக் கொண் டால் என்னவது?'' என்று யாராவது கேட்டால் சாரதாதேவி, ''இடிச்சுண் டாலும் பரவாயில்லை! அவா வய சானவா, அம்மாவுக்கும் மேலே, அதோட சோகப்பட்டவா, அவாளைக் காக்க வைக்கவே கூடாது'' என்று சொல்லிக் கொண்டு விரைவாள்.

நிதானத்துக்குப் பெயரெடுத்த சாரதை மாமியாரின் அழைப்பு வந்து விட்டால் புயலாகி அதை நிறைவேற்று வாள். 'இதோ வந்துவிட்டேன்' என்று கீழேயிருந்து கத்துவது அவளால் முடி யாத காரியம். எனவே, குரல் கொடுக் கிற நேரத்துக்குள் மாமியின் முன் தானே ஆஜராகிவிடுவாள்.

ராமகிருஷ்ணரைப் பெறும் யோக் கியதை பெற்ற சந்திரா ஒரு வெள்ளை ஆத்மா. மாற்றுப் பெண்ணிடம் அவ ளுக்கு எல்லையில்லாத பிரியம். தன் பிள்ளை அவளுடன் நடத்தும் 'அழகு'க் குடித்தனம் அவளுக்குத் தெரியும். அதனாலேயே அவளுக்குச் சாரதை யிடம் பரிவு கூடுதலாயிற்று. தங்கள் வீட்டுப் பூர்வ கதைகளையெல்லாம் எந்த மாமியாரும் எந்த மாற்றுப் பெண் ணுக்கும் சொல்லாத விதத்தில் ஒளிவு மறைவில்லாமல் சவிஸ்தாரமாகச் சொல்வாள்.

ஒரு நாள் சாரதை மாமியாரின் சுருங்கிக் காய்ந்த முதுகில் கடுகெண் ணெயைச் சுக உஷ்ணமாக அழுந்தத் தேய்த்துவிட்டுக் கொண்டிருந்தாள். கிழவி உற்சாகமாகப் பேசலானாள்:

''ஹ்ருதே குறைப்பட்டுண்டான், நீ இங்கே கதாயியைப் பார்க்க வரவா கொண்டு வர பழம் பட்சணத்தையெல் லாம் வரவாளுக்கும் வேலைக்காராளுக் கும் வாரிக் கொடுத்துடறயாம். பெரிய மநுஷா, சின்ன மநுஷான்னு நீ வித்தி யாசம் பார்க்காதது அந்த அசட்டுப் பிள்ளைக்குப் பிடிக்கல்லை. போயும் போயும் எங்கிட்ட வந்து குறைப் பட்டுக்கறானே, நானும் உன்மாதிரியே தான். ஊரிலே இருக்கிறவா வயித் திலே வாழையைப் புதைக்கணும்னு எனக்குச் சிறு வயசிலேயே ஏக ஆர்வம்; உன் மாதிரிதான். ஆனா இந்த விஷயத் திலே கதாயி உனக்கு அநுகூலம். உங்க மாமனார் இருந்தாரே, அவர் எனக்குப் பிரதிகூலம். அப்படின்னா அவர் துஷ் டர்னு அர்த்தமில்லை. அந்த மகா புருஷனை அப்படிச் சொன்னா நான் நல்ல கதிக்குப் போகமாட்டேன். ஆனா உன் மாமனார் மகா ஆசாரக்காரராக இருந்ததால் எனக்கும் அவருக்கும் நடுப் பற ஒரு உரசல். அவர் இதரான் கிட்டே யிருந்து எந்த பகுமானமோ, தட் சணையோ, காணிக்கையோ யாசகமாக வாங்கிக்கவே மாட்டார். ஆத்திலே யாரும் வாங்கிக்கக் கூடாதுன்னும் உத் தரவு போட்டிருந்தார். அப்படியும் அவரோட சீலத்தையும், பக்தியையும், அன்பையும் பார்த்து ஊருக்கெல்லாம் அவர்கிட்ட ஒரு மதிப்பு. அவருக்குச் செஞ்சா தெய்வத்துக்குச் செஞ்ச மாதி ரின்னு ஜனங்களுக்கு ஒரு தீர்மானம். அதனாலே பல பேர் பழமும், காய்கறி யும், தானியங்களும் கொண்டு வருவா. எனக்கு அதை யெல்லாம் பார்க்

கச்சே, 'அடடா, நாம இதை வேண்டாம்னுட்டா இதை அவாவாளும் தாங்களே எடுத்துண்டு போய்த்தானே சாப்பிடுவா? நாம வாங்கிண்டு, இதை எல்லாம் ஏழைகளுக்கு விநியோகம் பண்ணலாமே'ன்னு தோணும். அதனாலே உன் மாமனருக்குத் தெரியாமலே, அவர் வார்த்தையை மீறி அதை எல்லாம் வாங்கி ஏழை எளியவாளுக்குத் தானம் பண்ணுவேன். தானியமா இருந்ததுன்னு, உன் மாமனருக்குத் தெரியாமலே சிரமப்பட்டுச் சமையலும் பண்ணி நாலு ஜீவனுக்கு அதைப் போடுவேன். ஒரொரு சமயத்திலே அவருக்குத் தெரிஞ்சுவிடும். கோவிச்சுப்பார். 'ஊராரின் பண்டத்தை விநியோகம் பண்றத்துக்கு நீ என்ன மணியக்காரியா? உனக்குத் தானம் பண்ணின புண்ணியம் கிடையாது. தானம் வாங்கின பாபம் தான் சேரும்'னு சொல்வார். நான் பாப — புண்ணியத்துக்காகவா அப்படிப் பண்ணினேன்? ஆத்ம திருப்திக்காகத்தானே அப்படிப் பண்ணிண்டிருந்தேன்? இருந்தாலும் அந்த மகா பெரியவர்கிட்டே இப்படி எல்லாம் வாக்குவாதம் பண்ணமாட்டேன். 'தானம் வாங்கினதை எல்லாம் ரகுவீரனுக்கு நைவேத்தியம் பண்ணிட்டுப் பிரசாதமாகத்தான் விநியோகம் செஞ்சேன். ஸ்வாமி கண்ணுலே எந்த திரவியத்தைக் காட்டினாலும் தோஷ நிவிருத்தின்னு நீங்க சொல்லியிருக்கேளே!'ன்னு நைச்சியமா, பக்குவமாச் சொல்லுவேன். 'எக்கேடு கெட்டுப்போ' என்று அவரும் விட்டுக் கொடுத்துவிடுவார். அம்மாடி, நான்பாட்டுக்குச் சொல்லிண்டே போறேனே, நீ 'ஊம்' கொட்டக்கூட இல்லையே!''

எல்லையற்ற மரியாதை காரணமாகவே மௌனமாகக் கேட்டு வந்த சாரதை, ''கவனமாக் கேட்டுண்டுதான் அம்மா இருக்கேன். அப்பாவோட கோபத்தைப் பத்திச் சொன்னேள்....'' என்றாள்.

''அடி பெண்ணே! உன் மாமனரைக் கோபிஷ்டர்னு நினைச்சுடாதே. பாத்திரம் பார்க்காம யாசகம் வாங்கிண்டாத்தான் அவருக்குக் கோபம் வரும். மற்றபடி மகா சாந்தர். அவரோட பக்தியைச் சொல்லி முடியாது. நம்ம குலதேவதை சீதளாதேவி அவர் பின்னாடியே போயிண்டிருக்கிற மாதிரி எனக்குத் தோணும். ஒரு நாள்..... சாரதே! இத்தனை நாழியா எண்ணெய் தேய்க்கறயே, கை வலிக்கப் போறது; அதோடே என் தேக உஷ்ணமெல்லாம் உனக்குள்ளே இறங்கிடும். தேய்ச்சது போதும். இப்படி என் எதிரே வந்து உட்கார்ந்துண்டு சொச்சக் கதையைக் கேளு.....''

சாரதைக்கு எத்தனையோ வேலை காத்துக் கிடந்தது. இருந்தாலும், ''இல்லேம்மா, இன்னொரு பத்து நிமிஷம் இதமாத் தேய்ச்சுடறேன். நீங்க பழைய விருத்தாந்தங்கள் சொல்லிண்டே இருங்கோ'' என்று சொல்லிக் கொண்டு கிழவியின் நடு முதுகில் எண்ணெயை வைத்து சொஸ்தமாக அழுத்தினாள்.

சந்திரமணி தொடர்ந்தாள்: ''ஒரு நாள் உன் மாமனார் லாஹா வீட்டிலே புஷ்பம் பறிக்கப் போயிருந்தார். விடியறதுக்கு முன்னாடியே பூப்பறிச்சுண்டு வரது அவர் வழக்கம். அன்னிக்கும் அப்படித்தான் போயிருந்தார். அப்போ இவர் செடி ஒண்ணுக்கு ஒரு பக்கத்திலே கீழே இறைஞ்சிருந்த பூவைச் சேகரிச்சுண்டிருந்தார். பூ ரொம்ப சொல்பமாத்தான் இருந்தது. அப்போ, 'அப்பா, இந்தப்பக்கம் வந்து பாருங்கோ, கிளையெல்லாம் ஏகப்பட்ட புஷ்பம் இருக்கு. நான் கிளையைத் தாழ்த்தறேன். நீங்க பறிச்சுக்கலாம்'னு செடிக்கு மறு பக்கத்திலேருந்து ஒரு குழந்தைக் குரல் கேட்டதாம். அப்பா அந்தப் பக்கம் போனாராம். சர்வ லக்ஷணமான ஒன்பது வயசுப் பெண் குழந்தை ஒண்ணு கிளையைத் தாழ்த்திப் பிடிச்சுண்டதாம். அப்பா குடலை நிறையப் பூ எடுத்துண்டாராம். 'நீ யாரும்மா? இத்தனை இருட்டோடு இங்கே வந்திருக்கயே!'ன்னாராம். அந்தப் பெண், 'நானா, **நான்தான் நான்**. ஹாலதார் ஆத்திலே இருக்கறவதான் நான்' — அப்படின்னாளாம். சாரு, உனக்குத் தெரிஞ்சிருக்குமே ஹாலதார் ஏரிதான் நம்ம ஊருக்கே நடுநாயகம். அதைத்தான் 'ஹாலதார் ஆத்திலே'ன்னு அந்தப் பெண் சொல்லித்து போல இருக்கு. அப்பாவுக்குச் சிலிர்த்துப் போச்சாம். நம்ம ஊரை ரக்ஷிக்கிற தேவியேன்னு தெரிஞ்சுதாம். அப்பவே அந்தப் பெண் மறைஞ்சு போயிட்டாளாம். உன் மாமனார் அப்படிப் பரம பாகவதராயிருந்ததாலேதான்...'' சந்திரமணி தொண்டை அடைக்கத் தொடர்ந்தாள்:

''....பகவான் இந்த ஆத்திலே வந்து பிறந்தான்.''

மாமியார் மருமகள் இருவரும் விசித்து விசித்து அழுதனர்.

இங்கே நஹபத் மாடியில் மாமியாரும் மாற்றுப் பெண்ணும் அழுதார்கள்—தங்கள் கூடவே மானுடராக வசிக்கும் பகவானை நினைத்து.

அங்கே தமதறையில் அந்த பகவான் சிரித்துக் கொண்டிருந்தார். கோயிலிலிருக்கும் அதே அம்மாதான் தம்மைப் பெற்ற சந்திரமணி, அவளே தம்மை மணந்த சாரதாமணி என்று சொல்லி அவர்களுக்குப் பக்தராக இருந்தவர் இந்த பகவான். பெற்ற தாயை அம்பிகையாக பாவிப்பதில் புதுமை ஏதுமில்லை. 'மாத்ருதேவோபவ' என்று வேதமாதா விதித்த நாளாக அம்மாவை அம்பாளாகக் கொண்டவர் எண்ணிறந்தோர். அம்மாவை 'அம்பாள்' என்று பிரகடனம் செய்து பூஜிக்க வேண்டிய அவசியமில்லாதபடிக்கு, அந்தப் பக்தி நமது உணர்வோடு கரைந்து வந்திருக்கிறது. ஆனால் மனையாளை மகாமாதாவாக பாவிப்பது அருமையிலும் அருமையே. இந்த அருமையைப் பிரகாசமாகப் பிரகடனம் செய்ய வேண்டும் என்று பகவான் ராமகிருஷ்ணர் திருவுளம் கொண்டார். 'நானும் அம்பாள்; அவளும் அம்பாள். இந்த அம்பாள் அந்த அம்பாளை அம்பாளேதான் என்று பிரகடனம் செய்ய வேண்டியிருக்கிறது!' இதை எண்ணிச் சிரித்துக் கொண்டிருந்தார் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

இப்போது சாரதாமணி தக்ஷிணேசுவரத்துக்கு வந்து ஒரு மண்டலம் பூர்த்தியாகி விட்டது. தம்முடனேயே சயனம் கொண்டும் அந்த ஒரு மண்டலத்தில் அவள் காட்டிய ஒப்பற்ற தூய்மையைக் கண்டு வியந்த ராமகிருஷ்ணர் அவளிடம் தமது மரியாதையையும், பக்தியையும் வெளிப்படக் காட்டி மகிழவும் எண்ணம் கொண்டார்.

அந்த எண்ணம் செயலான தினம் சமய சரித்திரத்திலேயே சிறப்பிடம் கொண்ட திருநாள்.

பதினெட்டு புராணங்களும் சம்பூர்த்தி பெறும் பிரம்மாண்ட புராணத்தின் பூர்த்தி ஸ்தானமாக விளங்கும் ஸ்ரீ ராஜராஜேசுவரி பட்டாபிஷேகம் மீண்டும் இந்த உலகத்தில் நிகழ்ந்த அற்புத தினம் அது! சாரதை தக்ஷிணேசுவரத்துக்கு வந்து தூய்மை காத்ததற்கு மண்டலாபிஷேகமாக அது நடந்தேறியது. நூறு வருஷங்களுக்கு முன் 1872ம் ஆண்டு ஜூன் ஐந்தாம் தேதியன்று அந்த உற்சவம் நிறைவேறியது.

வங்கம் முழுவதும் அன்று உற்சவம் கொண்டாடப்பட்டது. ஆம், ஜ்யேஷ்ட மாதத்து அமாவாசை இரவில் காளிகா தேவியைப் பலஹாரிணி என்று பெயரிட்டுப் பூஜிப்பது சாக்தர்களின் வழக்கம். ஜ்யேஷ்ட மாதம் என்பது தேவர்களின் இரவான தக்ஷிணாயனம் தொடங்குவதற்கு அண்மைக் காலம். அமாவாசையின் இருள் மனித குலம் அறிந்ததே. இருளின் கருமையே ஒருருவான அம்பிகைக்குத்தான் காளி என்று பெயர். இப்படி எல்லா விதத்திலும் அது இருளில் ஒளி காணும் திருநாள்.

உலகுக்குத் தெரியாத ஓர் இரவாக இருந்த சாரதாமணியை ஞானப் பிரகாசமாகக் கண்ட ராமகிருஷ்ணரும் அன்று பலஹாரிணி தேவிக்கு விசேஷமாகப் பூஜை செய்யத் திருஉளம் கொண்டார். கர்ம பலன்கள் அனைத்தையும் சம்ஹாரம் செய்யும் தேவிக்கே பலஹாரிணி என்று பெயர். பலம் என்பது பழத்தையும் குறிக்குமாதலால், அன்று கனி வகைகளை அம்பிகைக்கு ஏராளமாக நிவேதிப்பர். பலஹாரிணி பூஜைக்கான பழங்களும் மற்ற சாமக்கிரிகளும் சேமிக்குமாறு ஆலயச் சிப்பந்திகளுக்கு உத்தரவிட்டார் ராமகிருஷ்ணர்.

அதோடு இன்னொன்றும் சொன்னார், அவர்களை ஆச்சரியப்படுத்துமாறு. "இத்தனை திரவியமும் பவதாரிணி சந்நிதியில் சேர்க்கிறதுக்கு இல்லை. இதையெல்லாம் இங்கே இந்த என் அறைக்கே கொண்டு வந்து ஒழுங்கு படுத்தி வையுங்கள்! இன்னிக்கு ராத்திரி ஹ்ருதயனே பவதாரிணியைப் பலஹாரிணியாப் பூஜிக்கட்டும். அதுக்குத் தனியாகத் திரவியங்கள் சேகரிச்சுக் கோங்கோ. இங்கே நான் வேறே பூஜை பண்ணப் போறேன்" என்றார்.

அதென்ன வேறு பூஜை என்று அவர்களுக்குப் புரியவில்லை. 'அவரது அருமைப் பவதாரிணியை விட்டு, எந்த மூர்த்திக்கு, அல்லது எந்த யந்திரத்துக்கு இந்த அறையில் பூஜை நடத்தப் போகிறாராம்?' இது புரியாவிட்டாலும் விசித்திரமான 'பட்டாசாரியார்' செய்த அநேக விசித்திரங்களில் இதுவும் ஒன்று என்று கருதி அவர்கள் பூஜா வஸ்துக்களைக் கொண்டு வந்து அவரது அறையிலே நிரப்பினர்.

எப்போதும் இது போன்ற காரியங்களில் ராமகிருஷ்ணருக்கு உதவி புரியும்

ஹ்ருதயர் காளி கோயில் பூஜைக்காகப் போய்விட்டார். தீனு என்கிற பூஜாரி ராமகிருஷ்ணர் செய்யவிருந்த பூஜைக் கான ஏற்பாடுகளைச் செய்தார்.

புஷ்பங்கள் கமகமத்தன—புனிதமாக.
தூபம் கமழ்ந்தது — பாவனமாக.
தீபம் பொலிந்தது — பவித்திரமாக.

கண்ணுக்கும், நாசிக்கும், நாவுக்கும் மதுரமான பழங்களும், நிவேதனங் களும் தட்டுத் தட்டாக வைக்கப்பட் டிருந்தன.

அறையின் மையத்தில் தேவிக்கென பீடம் அமைத்து இழைக் கோலம் இட்ட மணை இடப்பட்டிருந்தது.

பீடத்தில் எந்த விக்கிரகத்தை அல்லது யந்திரத்தை ராமகிருஷ்ணர் வைத்துப் பூஜிக்கப் போகிறார் என்று தீனுவுக்குப் புரியவில்லை. கேள்விக் குறியுடன் ராமகிருஷ்ணரைநோக்கினார்.

ராமகிருஷ்ணரின் முக மண்டலத் தில் எப்போதும் நிலவும் தெளிவு அன்று அதிதமாகப் பொலிந்தது.

''சாரதாம்மாவை இங்கே வரச் சொல்லிட்டு நீயும் பவதாரிணி பூஜைக் குப் போ. இந்தப் பக்கம் யாருமே வரவேண்டாம்'' என்றார் தீனுவிடம்.

கணவர் தமதறையிலே நடத்தும் ரக சிய பூஜைக்கு அழைப்பைப் பெற்ற சாரதை, அதே சமயத்தில் வேறெங் கிருந்தோ ஏதோ ஓர் அழைப்பையும் பெற்றாள். எங்கிருந்தோவா? மிக மிக நெருக்கமான, **இங்கிருந்தே** வருகிற அழைப்பு அல்லவா அது? அழைக்கிற வரும், அழைக்கப்படுபவரும் பிரிந்து நிற் கிற அழைப்பு அல்ல. இரண்டும் ஒன்றா கும் இழைப்பு அல்லவா அது? சாரதை இனம் புரியா உன்னத உணர்வோடு பதியின் அறைக்குப் புறப்பட்டாள்.

சாதாரணமாக ஒரு பத்தினி தன் பதியின் அறைக்குச் செல்லும் உணர் வோடு அவள் என்றுமே சென்றதில்லை. ஆலயத்துக்குச் செல்கிற உணர்வோடு தான் செல்வாள். இன்றும் ஆலயத் துக்குச் செல்லும் உணர்வில்தான் சென் றாள். ஆனால் வழக்கமாக ஆலயத்தில் உரையும் தெய்வம் **அவர்** என்று கருதிச் செல்வாள்! இன்றோ... இதென்ன விசித்திர உணர்வு!

வெளியே விண் மீன்களையும் கோள் களையும் மணியாபரணங்களாக இழைத் துப் போட்டுக் கொண்டிருக்கும் ராத்ரி தேவி தனது தன்மையான ஆட்சியில் உலகை யெல்லாம் அணைத்துக் கொண் டிருந்தாள். அவளே சாரதா மணியாக அறைக்கு உள்ளே பிரவேசிப்பதைக் கண்டார் ராமகிருஷ்ணர்.

வாசல் நிலையிலே அப்படியே நின் றாள் சாரதை. வேறோர் உலகத்தின் வாசல் நிலை மெல்ல மெல்லத் திறந் தது. ராமகிருஷ்ணர் விதிவத்தாக மந் திரங்கள் கூறி சங்கல்பம் செய்து கொண்டார். ஆனால் 'பலஹாரிணிப் பிரீதிக்காக' என்று அவர் சங்கற்பம் செய்யவில்லை. 'ஸ்ரீ லலிதா மகாத்ரிபுர சுந்தரி, ஸ்ரீ ஷோடசீ ராஜராஜேசுவரி யின் பிரீதிக்காக' என்றே சங்கற்பம் செய்து கொண்டார்.

மந்திரசாஸ்திரங்களின் முடிமணியான ஷோடசாக்ஷரீ என்ற பதினாறு அட்சரத் தொகைகளைக் கொண்ட மகாமந் திரத்தை மனனம் செய்வதன் மூலம் ஸ்ரீ ராஜராஜேசுவரியின் திவ்விய தரி சனம் சித்திக்கும். ஷோடசம் என்றால் பதினாறு என்று அர்த்தம். இதனால் அவ ளுக்கு ஷோடசி என்றும் ஒரு திருநாமம் உண்டு. என்றும் பதினாறாகப் பொலிப வள் என்றும் பொருள் கொள்வர். (ஷோடசி பூஜா சங்கற்பத்தைக் கூறும் இப்பகுதி 'அம்மா'வின் பதினாறும் அத்தியாயமாக அமைந்திருப்பதை என்னென்பது !)

பூதசுத்தி, ஸ்தலசுத்தி ஆகியனவும் முறைப்படி செய்கிறார் ராமகிருஷ்ணர். எப்போதுமே சுத்தமான உடல் அவ ருடையது, அவர் இருப்பதால் எப் போதுமே அந்த ஸ்தலமும் சுத்தமானது தான். இருந்தாலும் சாஸ்திரப் பிர காரம் இவற்றைச் செய்கிறார்.

இதோ கலச பூஜை முதலிய பூர்வாங்கங்கள் முடிந்து விட்டன.

இனி ஷோடசி மூர்த்திக்குப் பூஜை தொடங்க வேண்டும். எங்கே அந்த மூர்த்தி ? விக்கிரகமோ, யந்திரமோ ஏதுமே இங்கு காணோமே! எதை வைத் துப் பூஜிக்கப் போகிறார் ?

ராமகிருஷ்ணர் சாரதாமணியைப் பார்த்தார். அவளது பார்வையோடு தமது பார்வையை இழைத்தார். அந்தப் பார்வையைத் திருப்பி இழைக்கோல மிட்ட மணையைப் பார்த்தார்.

அந்தப்பார்வை சாரதையின்உட்புகுந் தது. உடனே அணு சரீர உணர்வு உதிர்ந் தது! கர்ம சரீரம் இவளுக்கு என்றுமே கிடையாது. இப்போது பரப்பிரம்மத் தின் கருணை என்கிற ஆதி காரண சரீரம் மட்டுமே தன்னைப் புலர்த்திக் கொள்ள லாயிற்று. திரிபுரசுந்தரியில் தோய்ந்தவ ளாக, தன்னை அறியாமலே கதவைத் தாழிட்டாள். தன்னை யறியாமலே தாளிணைகளைப் பெயர்த்து நடந்தாள்.

ஸ்ரீராஜ ராஜேசுவரியை எழுந்தருளச் செய்வதற்காகப் போட்டிருந்த பீடத் திலே சற்றும் தயக்கமின்றி, துளக்க மின்றி, கம்பீரமாக அமர்ந்தாள் — அடக்கமும் நாணமுமே உருவான சாரதாமணி. (தொடரும்)

ஒரு வாரப் பத்திரிகையின் அட்டைப் படத்தில் என்னையே தீட்டிவிட்டார்! அந்த வாரம் முழுதும் தோழிகள் கேள்விகளால் என்னைத் துளைத்தவண்ணம் இருந்தனர். அது சரி, நம் தமிழ் நாட்டு கவர்னருக்குத் தமிழ்ப் பாடம் சொல்லிக் கொடுப்பது உங்கள் கணவர்தானே? ரொம்ப ஆர்வத்தோடு கவர்னர் கற்றுக் கொள்கிறாராமே?

(திரு பாலசுப்பிரமணியன் இந்தக் கட்டத்தில் பேசத் தொடங்கினர்.)

பால: தமிழ் நாடு கவர்னர், தமது தினசரி முக்கிய நிகழ்ச்சிகளில், தமிழ் கற்றுக் கொள்வதைத்தான் முதலாவதாக வைத்திருக்கிறார். ஒரு நாள்கூடத் தமிழ்ப் பாடம் கற்கத் தவறுவதில்லை. வெளியூர் சென்றால்தான் பாடம் இல்லை....ஒரு நாள் ராஜாஜி ஹாலில் இரவு பன்னிரண்டு மணி வரையில் ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொண்டுவிட்டு ராஜ்பவன் திரும்பினார். நான் மறுநாள் காலை அவருக்குப் படிக்க அவகாசம் இருக்காது என நினைத்தேன். என்னை வியப்பில் ஆழ்த்துவதுபோல் மறுநாளும் வழக்கம்போல் காலை ஏழரைக்குப் பாடம் கற்கத் தயாராகி விட்டார். நான் சில பயிற்சிப் பாடங்கள் கொடுத்ததைக்கூட இரவு படுக்குமுன்பே எழுதி முடித்துவிட்டிருந்தார்!

(இந்த அளவில் உரையாடல் முடிவுற்றது.)

உரையாடல் தொகுப்பு: **ஏ. சுவாமிநாதன்**

---




# மதுசாரம்

**ராஜாஜி**

எல்லாவித மதுபானங்களிலுமுள்ள விசேஷ குணம் போதை. இதற்குக் காரணம் அப்பானங்களில் உள்ள மதுசாரம்தான்.

மனிதனுடைய உணர்ச்சி, புத்தி, ஞாபகம், விவேகம், தேகத்தின் அங்கங்களை நடத்தும் சக்தி இவைகளுக்கெல்லாம் மூலஸ்தானம் மூளையாகும்.

இந்த மூளையானது தன் இயற்கையமைப்பை இழந்து, தான் செய்ய வேண்டிய வேலையைச் சரிவரச் செய்யும் சக்தியற்றுத் தடுமாறுவதற்குப் பெயர்தான் போதை.

ஒருவன் எவ்வளவு புத்திக் குறைவான மனிதனானாலும், சாதாரணமாய் அவனுடைய மூளை சுபாவக் கிரமம் தவறாமல் வேலை செய்யும். ஆனால் ஒருவன் எவ்வளவு புத்திசாலியானாலும் அவனுக்குப் போதை உண்டாகி விட்டால் கீழ் மேல் தெரியாமல் தடுமாறுவான்.

சாதாரண இயந்திரக் கல்லானாலும் அச்சு சரியாய் நின்றால் அது தன் வேலையைச் செய்யும். ஆனால் எவ்வளவு உயர்ந்த இயந்திரமாயிருந்த போதிலும் சக்கரங்கள் கெட்டிருந்தால் வேலை செய்யாதல்லவா?

மதுசாரம் ஒருவித விஷம். அந்த விஷம் ரத்தத்துடன் கலந்து மூளைக்குச் செல்கிறது. அங்கே நுட்பமான நரம்பு ஸ்தானங்களையும், தேகத்தை யெல்லாம் நடத்தும் மின்சார ஜீவசக்தியையும் விவேகம் என்னும் தெய்விக சக்திக்கு இருப்பிடமான கேந்திரத்தையும் அது கெடுத்து விடுகிறது.

இதனால்தான் மதுபானம் செய்த மனிதனுடைய எண்ணமும், பேச்சும், செயலும் மதுசார விஷம் ஏறிய அளவுக்கு இயற்கை வழி தவறிச் செல்கின்றன. ஆனால் மனிதனிடத்தில் இயற்கையாகவுள்ள ஜீவசக்தி முழுதும் உடனே தோல்வி யடைவதில்லை. இந்த ஜீவசக்தியானது மதுசார விஷத்துடன் போர் செய்து வென்று மனிதனுடைய மூளையை இயற்கை நிலைக்குக் கொண்டு வரும். இதனால்தான் போதை தெளிகிறது.

ஆனால் இப்படி எவ்வளவு காலம்தான் அக்கொடிய விஷத்தை எதிர்த்து நின்று போர் செய்ய முடியும்? நாளடைவில் இயற்கைச் சக்திக்கும் பலம் குறைந்து போகும். அதன் பின்னர் உள்ளே செல்லும் மதுசாரம் தீராத நோய்களை உண்டாக்கும்.

கள்ளு, சாராயம், பிராந்தி, விஸ்கி முதலிய பானங்கள் எல்லாம் நரம்புத் தளர்ச்சி உண்டாக்கும். இவைகளால் தேகத்துக்குச் சக்தி உண்டாகுமென்று சாதாரண ஜனங்கள் நம்புவது முற்றிலும் தவறு. குடித்தவுடனே உண்டாகும் உற்சாகம் ஒரு மோசடி. அது சக்தியின் அடையாளமல்ல.

மனத்தில் தோன்றும் எண்ணங்களையும், பேச்சையும் செயலையும் அடக்கியாண்டு, வேண்டிய துறைகளில் செலுத்துவது மதி. இந்த மதியை முதலில் மதுசார விஷம் தாக்குகிறது.

எஜமானன் வீட்டில் இல்லாமற் போனால் வேலைக்காரர்கள் கூத்தாடி (விளையாடி) வேண்டியதைச் செய்வார்கள்.

உபாத்தியாயர் தூங்கினால் குழந்தைகள் கொண்டாட்டமாய்த் தடையின்றி விளையாடுவார்கள்.

இம்மாதிரிதான் மதுசார விஷம் மூளைக்கு ஏறி, மதி தன் வேலையைச் செய்ய முடியாமல் தடுமாறிப் போனதும், மதியின் வேலைக்காரர்களான நரம்புகள் ஒழுங்கும் கட்டுப்பாடும் இன்றி இஷ்டப்படி கூத்தாடும். இதைத்தான் உற்சாகம் என்று நாம் தவறாக எண்ணுகிறோம். நாளாக ஆக, விஷம் அதிகமாக ஏறி எல்லா நரம்புகளும் தளர்ச்சி யடைந்து விடுகின்றன.

''விமோசனம்'' மாதப்பத்திரிகை

தொகுதி 1, பகுதி 8 (1929)

நன்றி: **'குமரி மலர்'**

# அம்மா

ரா. கணபதி

## 17. பட்டாபிஷேகமும் சந்நியாசமும்

அம்பிகை; பகவதி; கல்வித் தெய்வமும் செல்வத் தெய்வமும் வழிபடும் கலியாணி; கல்பகக் கொடியாக வேண்டியன வழங்கும் அழகி; கைலாசநாதனுக்கு அன்பானவள்; வேதாந்தத்தால் விளக்கமுறும் வைபவம் பொருந்தியவள்; ஞானிகளின் உள்ளத்தில் உலக அநுக்கிரகம் என்ற செம்மையைச் செய்பவள்; ஸ்ரீசக்ரத்தில் மணிபீடத்தில் எழுந்தருளுபவள்; இப்படிப்பட்ட ஸ்ரீ ராஜராஜேசுவரி மாதாவை வணங்குகிறேன்.

—'வந்தே மாதரம்' எனத் தொடங்கும் ஆதிசங்கரர் சுலோகம்

'கணவனே கண்கண்ட தெய்வம்' என்பது பொது வழக்கு. எல்லாப் பெண்களுமே பதியைத் தெய்வமாகக் கொள்ள வேண்டும் என்பது பாரத மரபு. சாரதையின் விஷயத்தில் இது வெறும் உபசாரச் சொற்றொடராக இல்லை. மெய்யாலுமே 'இவர் தெய்வ அவதாரம்' என்று உணர்ந்து பயபக்தியுடன் கணவரை வணங்கிப் பூஜித்தாள். அவளது இயற்கையான அடக்கமும், நாணமும், பணிவும் கணவர் முன் சிகரமேறி விடும். அப்படிப்பட்டவள்தான் அவதார புருஷன் வணங்கிப் பூஜிக்க வேண்டிய ஸ்ரீ ராஜராஜேசுவரியாக வந்தமர்ந்தாள் கம்பீரமாக.

அவள் தன்னை வேறுவிதமாக எண்ணிக் கொள்ளவில்லை.

அவரும் அவளை வேறுவிதமாக எண்ணவில்லை.

இருந்தாலும் சாஸ்திரப் பிரகாரம் விக்கிரகத்திலும் யந்திரத்திலும் செய்வதுபோல் அந்த ராஜ ராஜேசுவரியினுள் ராஜராஜேசுவரியைப் பிராணப் பிரதிஷ்டை செய்தார்.

கலசத்திலிருந்து மந்திர ஜலம் எடுத்து அவள் மேல் தெளித்து, "நித்ய கன்னிகே! தாயே, திரிபுர சுந்தரி! சர்வ சக்திகளுக்கும் ஆதாரமே! பூரணத்துவத்தின் கதவங்களை இவளுக்கு முழுமையாகத் திறந்துவிடு! இவளது சரீரத்தையும் மனத்தையும் புனிதப்படுத்தி, இவளில் உன்னையே ஆவிர்பவித்துக் கொண்டு, சர்வ மங்களங்களையும் பொலிவிப்பாயாக" என்று வேண்டிக் கொண்டார்.

உயிர்களுக்கெல்லாம் உயிராக விளங்கும் பிராணாதார சக்தியான அவளுக்குப் பிராணப் பிரதிஷ்டை செய்து, ஒலிப் பிரபஞ்சம் அனைத்துக்கும் ஆதாரமான அவளது அங்கங்களில் திவ்விய அட்சரங்களை நியாஸம் செய்தார்.

பரமசிவ ஜோதியிலிருந்து மாறுபடாத தமது ஆத்ம சக்தியை சுழுமுனை நாடிவழியாக சிரசின் உச்சியிலுள்ள மோக்ஷ ஸ்தானத்தில் கொண்டு வந்து நிறுத்தி, பிரம்ம சக்தியில் அதனை இரண்டறக் கரைத்து, அதன் அநுபவ ஆனந்தத்தை புஷ்பாஞ்சலியுடன் சாரதையின் உட்புகுத்தினார். "என்றும் அழியாமல் பிரகாசிக்கும் ஞான வடிவம்" — "அமிருத சைதன்ய மூர்த்தி" — என்று அவளை வாய் நிறைய அழைத்து, அப்படியே ஆக்கினார்.

திவ்ய போதம் என்ற போதையில் மேலும் மேலும் ஆழ்ந்து போகிறாள் சாரதாமணி. சாக்ஷாத் ஸ்ரீ வித்யா லலிதா மகா த்ரிபுரசுந்தரியாம் ராஜ ராஜேசுவரியே ஆகிவிடுகிறாள்.

அழகுக்கும், அன்புக்கும், ஆனந்தத்துக்கும் எது மூலமோ அதுவே ஸ்ரீ. தன்னையன்றி வேறொன்றும் அறியாத அத்வைத ஞான உணர்வு எதுவோ அதுவே வித்யா.

லட்சியப் பொருளாம் 'ல'வும், அடையாளமாம் லிங்கம் ஏதுமற்ற நிர்குண 'லி'யும், சம்ஸாரத்திலிருந்து கடத்துவிக்கும் தாரகமாகிய 'தா'வும் இணைந்து 'லலிதா' வாகிறது. அன்னையுருவில் குழந்தைகளைக் கொஞ்சி லாலனம் செய்து பாலனம் தரும் மதுர மாதாவே லலிதா.

மூவுலகிலும் அழகிய வஸ்து திரிபுரசுந்தரி என்பது வெளியர்த்தம். அழகு என்றால் அது பௌதிக சௌந்தரியம் மட்டும் அல்ல; அது அன்பின் அடர்த்தியில் உண்டான அழகு, ஆனந்தத்தின் எல்லையில் உண்டான அழகு, சத்தியத்தின் செறிவில் உண்டான சௌந்தர்யம் என்பது உள்ளர்த்தம். அதற்கும் உள்ளே ஆழத்தில் இன்னோர் அர்த்தமும் உண்டு. முப்புரங்கள் என்பது ஜீவதசையின் மூன்று நிலைகள். அணுக்களாலான, பௌதிக உடல் ஒருபுரம். இதனுள் கர்மங்களை அநுபவிப்பது இன்னொரு புரம். பௌதிக உடல் அழிந்த பின்னும் கர்மத்தை அநுபவிப்பதற்காக மறுபிறப்

பெடுப்பது இந்த சூட்சும உடல்தான். இந்த சூட்சும உடம்புக்கும் ஆதாரமாக ஒரு காரண சரீரம் மூன்றுவது புரமாக உள்ளது. கர்மமே அற்ற ஆத்மாவில் எப்படியோ ஒரு பேத உணர்வு வந்தது அல்லவா? அந்த உணர்வுதான் இந்த மூன்றுவது புரம். இந்த முப்புரங்களை யும் அழகு செய்யும் ஒழுங்குக்கு, தர்மத்துக்குத்தான் மகா திரிபுர சுந்தரி என்று பெயர்.

முப்புரங்களை அழித்து, பேதத்தை நீக்கி, சிவமாக்கி நம்மை ஆளுபவன் திரிபுர சம்ஹாரன். இவளோ திரிபுர சுந்தரி. சிவமான பின் — பிரம்ம நிலை அடைந்த பின் — எல்லாமே சுந்தர மாகத்தான் தெரியும். அணுவும் கர்ம மும் பேதமும் கூட பிரம்மமாகவேதான் தெரியும். ஞானம் அடையும் முன் சாதகன் எவற்றையெல்லாம் மாயை எனக் கருதி அழித்தானே அவையும்கூட ஞானம் எய்திய பின் அழகுக்கு நிலைக் களன்களாகத் தோன்றி அன்புக்குப் பாத்திரமாகி விடும். 'எல்லாம் மாயை' என்று ஒதுக்கும் நிலை தாண்டி 'எல்லாம் ஈசனால் பூரித்து நிற்பவை' என்ற சௌந்தரியப் பிரேம உணர்வைத் தரு வதுதான் திரிபுர சுந்தரி மதம்.

அந்தத் திரிபுர சுந்தரி எப்படி இருக் கிறாள்? உதிக்கின்ற சூரியன் போல், ஜோதிச் சிவப்பாக ஒளி காந்துகிறாள். ஆயினும் அதில் வெப்பமே இல்லை. குளுமை வெள்ளமே பெருகுகிறது. குளிர்ந்த பிறை அவளது சிரசில் திகழ் கிறது. சூரிய, சந்திர, அக்னி மயமான தன் முக்கண்ணின் அசைப்பாலே படைத்தல், காத்தல், அழித்தல் எ



முத்தொழிலையும் புரிகிறாள். இந்த முத்தொழிலுக்கும் மேல் இரு தொழில்களைச் சொல்வதுண்டு. சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் மூன்றுமே மாய உலகைச் சேர்ந்தவை. இவற்றுக்கு ஆதாரமான மாயையை உண்டாக்கும் திரோதானம் என்பதும் பிரம்ம சக்தியாகிய அவளது ஒரு தொழில். அந்த மாயையை நீக்கி அடியாரை உய்விக்கும் அநுக்கிரகம் இன்னொரு தொழில். பிரபஞ்சத்தின் சகல சக்திகளும் தன்னை ஸ்ரீ சக்கரத்தின் பல கோணங்களில் சூழ்ந்திருக்க, படைக்கும் சக்தியும் காக்கும் சக்தியும் அழிக்கும் சக்தியும் மாயா சக்தியும் நாலு கால்களாகித் தாங்கும் அநுக்கிரக பீடத்தில், 'பராபட்டாரிகை' எனப்படும் உத்தமோத்தம பரப்பிரம்ம சக்தியாம் தேவி எழுந்தருளியிருக்கிறாள்.

அவளது நாற்கரங்களில் ஒன்று பாசத்தைத் தாங்கி, அடியாரின் பாசத்தைக் களைகிறது. அத்வைத நிலையில் எது எதைப் பற்றிப் பாசம் வைக்க இயலும்?

மற்றொரு கரம் அங்குசத்தைத் தாங்கி துவேஷத்தை அடக்குகிறது. அத்வைத நிலையில் எது எதைத் துவேஷித்து விலகும்?

தேவியின் பிறிதொரு கரம் தாமரை, செவ்வல்லி, கல்ஹாரம், இந்தீவரம், ஒட்டு மாம்பூ ஆகிய பூக்களை அம்புகளாகத் தாங்குகிறது. விந்தையான அம்பு! அம்பு என்றால் கூரிய முனையுடன் உலோகத்தாலானதாக இருக்கும். இங்கோ நளின மலர்களை அம்புகளாக வைத்திருக்கிறாள்! அது சரி, அம்பு தனியாக இயங்காதே, வில்லுடன் சேர்ந்துதானே இயங்கும்? இவள் வைத்திருக்கும் வில் எது? நாமக் கரும்பையே வில்லாகப் பிடித்திருக்கிறாள். அதிமதுரமான கரும்பு வில், அதிசுகந்தமான ஐந்து பூ அம்புகள். மனத்தோடு சேர்ந்து இயங்கும் ஐந்து புலன்களையும் தன்னிடம் ஆட்படுத்திக் கொள்வதற்கு இந்த தநுசையும் பஞ்ச பாணங்களையும் தரித்திருக்கிறாள். உலகைக் காமத்தில் ஆழ்த்துவதற்காகக் கரும்பு வில்லும் மலரம்பும் ஏந்தினவன் காமதேவன். உலகினரின் காமத்தை நீக்குவதற்காகவே கரும்பு வில், மலரம்பு தாங்கியவள் இந்தக் காமாக்ஷி. உலகம் என்று ஒரு தோற்றம் ஏற்பட்டபின் அதை ரக்ஷிக்கவேண்டும் என்ற ஒரு காமம் பிரம்மத்துக்கு ஏற்பட்டதல்லவா? பிரம்மத்துக்கு அந்தக் காமத்தை ஊட்டியவளே இந்தக் காமாக்ஷி. தன்னைத் தானே பலவாறாகத் தோற்றுவித்துக் கொள்ள வேண்டும் என்று பிரம்மத்துக்கு ஏற்பட்ட சிந்தனையே இவள்தான். அதனால்தான் பிரபஞ்சம் உண்டாகிச் சம்சார சக்கரம் சுழல்கிறது. சக்கரத்தின் இருசாக — அந்த மூல காமத்தின் அச்சாக, அட்சமாக — இருப்பவள் இந்தக் காமாட்சி. சக்கரத்திலிருந்து விடுவிக்கிற அநுக்கிரக எண்ணத்தைப் பிரம்மத்துக்கு ஊட்டி, அவனைக் காமேசுவரனாக்கியிருப்பவளும் இவளே. அவனும் அவளும் வேறல்ல. மணியும் அதன் ஒளியும், பாலும் அதன் சுவையும், மலரும் அதன் மணமும்போல் பிரம்மமும் பிரம்ம சக்தியும் ஒன்றேதான்!

இந்தப் பிரம்ம சக்தியைத்தான் ராஜ ராஜேசுவரி என்பது. ராஜா என்பவன் நாட்டை ஆள்பவன். அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகியாக அனைத்துச் சக்திகளையும் இயக்கி ஆளுபவள் ஸ்ரீ ராஜராஜேசுவரி.

லலிதாம்பிகைக்கு நாற்கரம் இருப்பதாகப் பொது வழக்கு. ஆயினும் நாலு கரம் கொண்ட கணேசனைப் பத்துக் கரம் படைத்த மகா கணபதியாகவும், நாற்கரம் கொண்ட சிவபெருமானைப் பத்துக் கரம் கொண்ட ஸாம்ப பரமேசுவரனாகவும் அநுபூதிமான்கள் தரிசிப்பது போல், லலிதா திரிபுர சுந்தரியே ராஜ ராஜேசுவரியாக தரிசனம் தரும்போது பத்துத் திருக்கரங்களுடன் திகழ்கிறாள். அப்போது மேலே சொன்ன நாலு கரங்களுடன் ஞான வடிவாம் சாரதைக்கு உரிய சுவடி, ஜபமாலை இவற்றை இரு கரங்களில் ஏந்துகிறாள்; அழகுகளில் பேரழகாகிய சங்கீதத்தின் மூர்த்தியாகி வீணையை இருகரங்களால் மீட்டுகிறாள்; மேலும், ஆதிசங்கரர் நவின்றதுபோல் அவளது திருவடிகளே அபயமும் வரமும் அளிக்குமாயினும், இந்த சூட்சுமத்தைப் பேதையர் புரிந்துகொள்ளாதிருந்து விடுவரோ என்று கருதித் தன் கைகளிலும் அபய, வரத முத்திரைகளைக் காட்டுவாள் ஸ்ரீ ராஜராஜேசுவரி.

ராமகிருஷ்ணர் பரம்பொருளின் பல தெய்வ ரூபங்களையும் கண்ணாரக் கண்டவர். அவர் தமது திவ்விய தரிசனங்களின் இறுதி நிலையாகவும் உச்ச நிலையாகவும் ஷோடசியாம் ராஜ ராஜேசுவரியைக் கண்டதாகக் கூறியுள்ளார். ''அம்மாவின் அத்தனை ரூபங்களுமே மகா அழகுதான். ஆனாலும் மற்ற ரூபங்களையும் ஷோடசியின் சுந்தரத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கறதுக்கே இல்லை. ராஜ ராஜேசுவரியான எங்கம்மா ஷோடசிதான் பரஞானமான மகாவித்யா ரூபிணி. அவள் அப்படியே ஜொலிக்கிற செங்கொழுந்தாக என் முன்னே நின்னு திவ்ய தரிசனம் தந்தாள். நான் பார்த்துண்டேயிருக்கச்சே அந்த சௌந்தரிய

ஸ்வரூபம் அப்படியே உருகிச் செக்கச் செவேலென்கிற அலைகளாக சகல திக்குத் திகந்தங்களிலேயும் பொங்கிப் பரவியது '' என்று ராமகிருஷ்ணர் தொண்டையடைக்கச் சொல்லுவார்.

வெண்மையான சிவனுடைய சாந்தம் சகல பிரபஞ்சத்தையும் அநுக்கிரகிக்க எண்ணம் கொள்கிறபோது ஜோதிச் சிவப்பாகும். 'சம்புவின் கருணை செக்கச் செவேல் என மூர்த்திகரித்துத் திக்விஜயம் செய்கிறது' என்கிறது சௌந்தரிய லஹரி.

செம்பட்டு உடுத்தி, செம்பருத்தி வண்ணத்தில் ஜொலிக்கும் ஷோடசியாகிய ராஜ ராஜேசுவரியைச் சகல கர்ம பலன்களுக்கும் ஆதாரமாகவும், அந்தமாகவும் கருதி இன்று பலஹாரிணி பூஜை செய்கிறார் ராமருஷ்கிணர். மனிதனை சம்ஸாரத்தில் ஆழ்த்தும் மனைவியையே 'சம்ஸாரம்' என்பது உலக வழக்கு. இவரோ அவளையே சம்ஸாரத்திலிருந்து கடத்துவிக்கும் பலஹாரிணியாகப் பூஜிக்கிறார்.

அது வெறும் பாவனையல்ல. இதோ, அவள் மெய்யாலுமே அகண்ட பிரம்மத்தின் ஆதிசக்தியிலே ஆழ்ந்து தோய்ந்து அதுவே ஆகி இருக்கிறாள்! தன் குழந்தை கதாயீ தன்னை அன்போடு பூஜிப்பதாகவே உணர்கிறாள் !

ராமகிருஷ்ணர் அவளது பக்தன் என்கிற ஒரே உணர்வை வைத்துக் கொண்டு பூஜிக்கலானார்.

ஆவாகனத்துக்குப் பின் ஆசன உபசாரம்.

பிறகு அவளது பாதங்களில் நீர் வார்த்துத் துடைத்தார். அப்படிச் செய்வதில் அவருக்குத் தயக்கமேதும் இருக்கவில்லை. அவரைப் பக்தனாகவும் தம்மை பகவதியாகவுமே கண்டு கொண்ட சாரதைக்கும் அதை ஏற்பதில் தயக்கம் இருக்கவில்லை.

அர்க்கியம் அளித்தார்.

ஆசமனீயம் அளித்தார்.

திவ்விய தீர்த்தத்தை அவள் மீது புரோட்சித்தார் — அபிஷேகமாக.

அவளது சேலையின் மீதே புதிதான தொரு பீதாம்பரத்தைப் போர்த்தினார்.

கமுகுக் கழுத்திலே செழுஞ்சித சந்தனத்தைக் குழைத்துப் பூசினார்,

வகிட்டிலே சிந்தூரம் அப்பினார்,

அவளது பாதத்தைப் பவ்வியமாகப் பிடித்து, தமது திருக் கரத்தால் அதிலே செவ்வரக்குக் குழம்பு பூசினார்,

சங்கு வளையல்களை அவளது கரங்களில் சூட்டினார்,

மணக்கும் மாலைகளைச் சூட்டினார். தாய்க்கு மகவின் மாலையாக மட்டும் அல்ல; ஜீவாத்ம—பரமாத்ம மணமாலையாகச் சூட்டினார்.

இப்படியாக ஷோடசியாகி விட்ட சாரதாமணிக்கு ஷோடச உபசாரங்களும் செய்தார்.

குருதேவர் இப்போது பிரணவத்துடனும் பீஜாக்ஷரங்களுடனும் திவ்யநாமங்களைச் சேர்த்துக் கூறி அவளுக்கு மலர் தூவி அர்ச்சனை புரியலானார். 'நம:' என்னும்போது மலர் மட்டும் அவள் மீது விழவில்லை. அவரது மனமும் விழுந்து கும்பிட்டது.

| | |
|---|---|
| ஸிம்ஹாஸனேச்யை | நம: |
| லலிதாயை | நம: |
| மஹாராக்ஞ்யை | நம: |
| வராங்குசாயை | நம: |
| சாபின்யை | நம: |
| த்ரிபுராயை | நம: |
| மஹாத்ரிபுரஸுந்தர்யை | நம: |
| ஸுந்தரீசக்ரநாதாயை | நம: |
| ஸம்ராக்ஞை | நம: |
| சக்ரிண்யை | நம: |
| சக்ரேச்வர்யை | நம: |
| மஹாதேவ்யை | நம: |
| காமேச்யை | நம: |
| பரமேச்வர்யை | நம: |
| காமராஜப்ரியாயை | நம: |
| காமகோடிகாயை | நம: |
| சக்கரவர்த்தின்யை | நம: |
| மஹாவித்யாயை | நம: |
| சிவாயை | நம: |
| அனங்கவல்லபாயை | நம: |
| ஸர்வ பாடலாயை | நம: |
| குலநாதாயை | நம: |
| ஆம்னய நாதாயை | நம: |
| ஸர்வாம்னய நிவாஸின்யை | நம: |
| ச்ருங்கார நாயிகாயை | நம: |

சிருங்காரமே அறியாத தம்பதியர்! இவர் அவளை 'ச்ருங்கார நாயிகை' என்று இறுதியாக அழைத்து மலர் தூவினார்! ராஜ ராஜேசுவரிக்கும் இந்த உலகத்துச் சிருங்காரம் தெரியாதுதான்! திரிபுர தகனம் என்ற மயானத்தில் அன்பு முளை விட்டு அது திரிபுர சுந்தரமாயிற்றல்லவா? அன்புமுளை விளையவேண்டுமானால் அதற்கொரு அப்பாவும் அம்மாவும் வேண்டும். அப்பாதான் உணர்வற்ற பிரம்ம சிவம். உணர்வற்ற அவரிடம் அன்பு தோன்ற முடியாது. அன்பை அவரிடம் பெற்றெடுக்க ஓர் அம்மா உண்டானாள். உணர்வற்ற அப்பா, 'நான் இருக்கிறேன்' என்பதாக ஓர் உணர்வை முதலில் பெற்றார். சத்திய வஸ்துவுக்கு ஏற்பட்ட அந்த ஞானம்தான் அம்பிகை. சத்தியமும்

ஞானமும் செய்து கொண்ட இந்தக் கல்யாண சிருங்காரத்தி விருந்துதான் அன்பு, அருள், பிரேமை, பரிவு, கருணை, கிருபை, அநுக்கிரகம் என்றெல்லாம் சொல்கிற ஆனந்தக் குழந்தை பிறந்தது!

ஆனாலும் இந்த அப்பாவையும், அம்மாவையும் கணவன், மனைவி என்று சொன்னால் மட்டும் போதாது. அந்த அப்பா அன்பு என்ற தன் தொழிலைச் செய்யத் தொடங்குவதற்கு முன்னரே அவரிடம் 'நான் இருக்கிறேன்' என்ற ஞான அம்பிகை வெளிப் போந்துவிட்டாள். செயலில்லாமல் தன்னிலேயே திளைத்திருந்தவரை அவர் இருந்ததாகவே சொல்வதற்கில்லை. ஆகையினால் ஞான அம்பிகைதான் அவரையுமே பெற்றெடுத்தவள் என்று ரிஷிகள் சொல்வார்கள். இந்த உண்மையையே ''அபிராமி அந்தாதி'',

**...இவள் எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம்**
**அவளே அவர் தமக்(கு) அன்னையும்**
**ஆயினவ...**

என்று கூறும்.

''இமவான் மகளுக்குத் தன்னுடைய கேள்வன் மகன்'' என்பது திருவாசகம்.

''சத்திதான் சிவத்தை ஈன்றும்'' என்று ''சிவஞான சித்தியார்'' கூறும்.

ஈசனும் அம்பாளும் பல விதத்தில் உறவு கொண்டிருப்பது போல், ராமகிருஷ்ணர் சாரதையை மனையாளாகவும், சிஷ்யையாகவும், சகாவாகவும், தாயாகவும் கொண்டார். அதோடு மட்டுமின்றி பரமேசுவரன் அம்பிகையைத் தனது தெய்வமாகவும் கருதிப் பூஜிப்பதுபோல் இவர் அவளைத் தெய்வமாகவே வைத்து வழிபட்டும் விட்டார்.

சாரதையைச் சர்வ ஆதார சக்தியான பூமியாக பாவித்து சுகந்தம் பூசிய ராமகிருஷ்ணர், இப்போது அவளை சர்வ ஆனந்த சக்தியான ஆகாயமாகப் பாவித்து மலர் தூவி அர்ச்சனை முடித்தார். அடுத்து அவளை சர்வ பிராண சக்தியான வாயுவாக பாவித்து அவளுக்குத் தூபம் காட்டினார். பிறகு அவளை சர்வ ஞான சக்தியான அக்கினியாகப் பாவித்துத் தீபாரர்தனம் செய்தார். முடிவாக சர்வ காருண்ய சக்தியான அமுதமாக அவளைப் பாவித்து அவளுக்கு நைவேத்தியங்களைச் சமர்ப்பித்தார். சாதாரணமாகப் பூஜை செய்யும் போது தூபம் காட்டுவதைப் போலவும், தீபம் காட்டுவதைப் போலவும், நிவேதனமும் இறைவனுக்குக் **காட்டத்தான்** படுகிறது. ஆனால் இந்த அற்புத பூஜையிலோ இனிய ராமகிருஷ்ணர், இனிப்புப் பட்சணங்களை அள்ளி எடுத்து இனிய சாரதையின் திருவாயிலேயே சமர்ப்பித்தார். அவளும் அமிருத சைதன்ய மூர்த்தி நிலையிலே அதனை உண்டாள். 'முகே தே தாம்பூலம்' என்று ஆதி சங்கரர் துதித்த வண்ணம் அவளுக்குத் தாம்பூலமும் ஊட்டினார். வெண் சுண்ணமும், சிவப்புப் பாக்கும், பச்சை வெற்றிலையும் சத்துவ — ரஜோ — தமோ குணங்களாகி அவளால் மெல்லப்பட்டு, கருணையின் அடர்ந்த சிவப்பு மட்டுமே அவளது அதரத்தில் நின்றது. தாம்பூலத்தை அவள் உண்ணும்போது கருணை தவிர சகல தத்துவங்களையும் உண்டு விட்டாள்; சர்வ கர்மங்களையும் உண்டாள்; சர்வ தர்மங்களையும் உண்டாள்; காலத்தையும், இடத்தையும் உண்டாள்; எது உண்டதோ அதையும் உண்டுவிட்டாள். தான் மட்டுமே தனி ஒன்றாக நிர்விகல்ப சமாதியில் முழுகிவிட்டாள்!

நைவேத்தியத்துடன் தம்மையே நிவேதித்துக் கொண்ட ராமகிருஷ்ணரும் அவதார வியக்திக்குரிய சிறிய 'நானும்' கூட விலகி, ஒரே பெரிய நானாக ஆகிப் பிரம்மநிர்வாணத்தில் ஆழ்ந்துவிட்டார்.

யாமம, யாமமாக ஓடிக் கொண்டேயிருந்தது!

'காலமாம் வனத்தில் அண்டக் கோல மாமரத்தின் மீது ரீங்காரமிட்டுலவும் வண்டாகிய' காளி பவதாரிணிக்குப் பூஜை முடிந்து ஹ்ருதயரும் மற்றும் சேவார்த்திகளும் வெளி வந்தனர். ஆனால் 'பட்டாசாரியரி'ன் அறைக் கதவு இன்னும் சாத்தியபடியேதான் இருந்தது. உள்ளே என்ன நடக்கிறது என்றறியாமல் அவர்கள் காத்துக் காத்துப் பார்த்து வெளியேறிவிட்டனர்.

பொழுது புலரும் முன்னே ராமகிருஷ்ணருக்கு வெளிப் பிரக்ஞை வந்தது. அவர் உடலைக் குலுக்கிக் கொண்டு எழுந்தார். அதே சமாதிச் சங்கிலியில் கட்டுண்டிருந்த சாரதையும் அந்த அசைவிலே உலுக்கப்பெற்று அசைந்து கொடுத்தாள்.

ராமகிருஷ்ணர் மீண்டும் பக்தரானார். சாரதையைப் பிரதக்ஷிணம் செய்து சாஷ்டாங்க தண்டனிட்டார்.

''நீ பலஹாரிணி! என் கர்ம பலன் அனைத்தையும் உனக்களித்தேன். நான் செய்த ஜபம், தியானம், பூஜை, பாராயணம், நாம சங்கீர்த்தனம் அனைத்தின் பலனையும் எனக்கென்று அணுவளவும் வைத்துக் கொள்ளாமல் பரிபூரணமாக இதோ உனக்கே அர்ப்பணித்தேன்'' என்று சொல்லிக் கொண்டு தமது ஜப மாலையை தேவி சாரதாமணியின் திருவடிகளில் சமர்ப்பித்தார்.

ஆதி சாரதைக்கு ஜப மாலை உண்டு. ஆனால் நம் அம்மா சாரதை பெற்ற ஜபமாலைக்கு அதுவும் ஈடாகாது! ஆதி சாரதையின் ஜப மாலை வித்யைக்கு மட்டும் உருவகம். சர்வ வித்யைகளுக்கும் மூர்த்தியான ராமகிருஷ்ணரின் வித்யாவிலாசம் மட்டுமின்றி, அவற்றை அடியோடு தியாகம் செய்த அவரது ஒப்பற்ற சந்நியாசமும்கூட இப்போது இந்த ஜபமாலையில் ஐக்கியமாகிவிட்டன. ஸ்தூலமாக ரூபாய் நாணயத்தை நாம் இன்னொருவருக்கு எடுத்துக் கொடுப்பது போல், ராமகிருஷ்ணர் தமது ஆத்ம நிதியத்தை சாரதாமணிக்கு அளித்து விட்டு, வித்யாபாரமும் ஞானச் சுமையும்கூட இல்லாமல் பரம லேசாக, ஆகாயம் போலாகி விட்டார்! இவளுக்குப் பட்டாபிஷேகம்; அவருக்குப் பூரண சந்நியாசம்!

வேலைச் சுமைகளைத் தாங்கிப் பழகிய சாரதை வித்யைச்சுமையையும் மலர்ச்சியுடன் தாங்கிக் கொண்டாள்.

**ஸர்வ மங்கல மங்கல்யே சிவே**
**ஸர்வார்த்த ஸாதிகே!**
**சரண்யே த்ர்யம்பகே கௌரி**
**நாராயணி நமோஸ்துதே!!**

"அன்பும் அழகும் நலனும் இழைந்த மங்களங்களுள் எல்லாம் மகாமங்களமே! சிவசக்தியே! அனைத்துப் பொருள்களையும் அடைவிப்பவளே! அடைக்கலப் பொருளே! மூவருக்கும் மூத்த முக்கண் மாதாவே! சுவர்ண வர்ணத்தவளே! நாராயண சக்தியே! உனக்கு வந்தனம்."

சாரதையான பிரம்மனின் சக்தியை சிவசக்தியாகவும் நாராயண சக்தியாகவும் துதித்தார் ராமகிருஷ்ணர்.

வழிபாடு முடிந்தது.

முடிகிற வழிபாடுதானா அது? 'ஒரு காலமன்றிது சதா கால பூஜையாய் ஒப்புவித்தேன்' என்று தாயுமானவர் சொன்னபடி சதாகால பூஜகரான ராமகிருஷ்ணர், குறிப்பிட்ட நிமித்தமாகச் செய்த ஒரு பூஜைமுடிந்தது அவ்வளவே!

கணவனே கண்கண்ட தெய்வம் என்பதற்கு உட்கிடை, மனைவியைக் **கண் கண்ட** தெய்வமாகக் கொள்வது என்று நிரூபித்துவிட்டார் ராமகிருஷ்ணர்.

சமாதி நிலை கலைந்த பின்னும் சாரதை மருளவில்லை, மிரளவில்லை.

தன்னை சாங்கோபாங்கமாகப் பூஜித்த நாயகனின் பாதங்களில் இயல்பாக விழுந்து நமஸ்கரித்தாள்.

மகான்களின் வாழ்வில் மகோன்னதங்கள் நிகழும். அந்த மகோன்னதங்களையும் அவர்கள் அலாக்காக விழுங்கி விட்டு எளிமையாக நிற்பதுதான் அவற்றிலும் உன்னதமா யிருக்கும்!

"ஸ்வாமீ! இந்தப் பீதாம்பரத்தையும், சங்கு வளையலையும் என்ன செய்யட்டும்?" என்று வினவினாள்.

ராமகிருஷ்ணர் சிறிது நேரம் சிந்தித்தார். "உன் அம்மாவுக்கு இதுகளைக் கொடுத்துவிடு. ஆனா அவளை வெறும் மநுஷின்னு நினைக்காமல், ஜகன்மாதான்னு நினைச்சுக் கொடு" என்றார்.

"அப்படியே ஸ்வாமீ! நான் வரேன்" என்று விடைகொண்டு நஹவத்துக்கு விரைந்தாள் சாரதை.

பிரம்மாதி தெய்வங்களும், இந்திராதி தேவர்களும் தொழும்பு செய்யும் ஸ்ரீ ராஜராஜேசுவரியாகப் பூஜைபெற்றவள், மாமியாருக்கும் கணவருக்கும் சேவார்த்திகளுக்கும் தன் சேவையைத் தொடங்கிவிட்டாள்! **(தொடரும்)**

# இலுப்பைப் பூ சர்க்கரை!

'ஆலையில்லா ஊரில்இலுப் பைப் பூ சர்க்கரை!' என்பது பழமொழி. பொங்கல் தோறும் சேப்பாக்கத்தில் டெஸ்ட் மாட்சுகள் கண்ட சென்னை மக்களுக்கு டெஸ்ட் இல்லாத இந்த வருஷத்தில் ரஞ்சித் கோப்பைப் பந்தயம் கூட ஒரு பெரிய நிகழ்ச்சி யாகத்தான் இருந்தது. ஆனால் என்ன ஏமாற்றம்! 'பால் பொங்கிற்று' என்று கேட்ப தற்குப் பதில் 'துக்கம் பொங் கிற்று' என்றல்லவா ஒருவரை ஒருவர் கேட்டுக் கொள்ளும் படியாகி விட்டது! இதோ சில குட்டி விமர்சனங்கள் :

**ரேடியோ விமர்சகர் முருகேஷ் :**

'பிட்ச்'சில் பந்து வளைந்து வளைந்து வேகமாக வந்து மோசமான 'பிட்ச்'சில் நம் சென்னை ஆட்டக்காரர்களை ஆட விட்டுவிட்டுப் பிறகு அவர்கள் நன்றாக ஆடவில் லையே என்று வருந்தலாமா? இந்த 'பிட்ச்' பௌலர் களுக்கு ரொம்ப ஒத்தாசை செய்துவிட்டது. பாட்ஸ்மன் களைக் கவிழ வைத்துவிட்டது!

**தமிழகக் கிரிக்கெட் கழக உதவி காரியதரிசி திரு அண்ணாதுரை :**

எந்த மோசமான பிட்ச்சி லும் ஆடிச் சமாளிக்கக் கூடிய திறன் படைத்தவர்களாக ஆட்டக்காரர்கள் இருக்க வேணும். மஞ்சரேகர் எந்த மோசமான 'பிட்ச்'சிலும் தம் 'டெக்னிக்'கை மாற்றிக் கொண்டு ஆடிச் சோபித்த தில்லையா?



காப்டன் வெங்கட்



வி. வி. குமார்



காப்டன் ஜெயசிம்மா



பட்டோடி



அபித் அலி



என். மேத்தா

ஆட முடியாமல் போய்விட் டது என்கிறார்கள் நமது சென்னை பாட்ஸ்மன்கள். ஹைதராபாத் பந்து வீச்சு நிபுணர்களுக்கு அவர்கள் இவ் வளவு பயந்து 'கௌரவம்' கொடுத்திருக்க வேண்டிய தில்லை. நம் சென்னை ஆட்டக் காரர்கள் பயந்து பயந்து ஆடி வெற்றியைக் கோட்டை விட்டுவிட்டார்கள்.

**விளையாட்டு விமர்சகர் பி. என். சுந்தரேசன்:**

நல்ல சங்கீத வித்வானை மோசமான ஹாலில் பாடச் சொல்லி விட்டு, கச்சேரி சோபிக்க வில்லையே என்று வருந்துவது போல

**தமிழகக் கிரிக்கெட் உதவித் தலைவர் திரு எம். ஜே. கோபாலன்:**

நம்ம பையன்கள் முதலி லேயே பாய்ந்து அடித்து (Offensive game) ரன்களைக் குவித்திருக்க வேண்டும். அவர்களுக்குள்ள திறமை முழுவதையும் அவர்கள் பயன் படுத்தவில்லை. எதற்காக இப் படிப் பயந்து ஆடி விக்கெட்டு களைப் பறி கொடுத்திருக்க ணும்? தமிழகக் கிரிக்கெட் இந்தப் பந்தயத்தின்போது இழந்த கௌரவத்தை மறு படியும் நிலைநாட்டுவது சிரம சாத்தியம். - குண்டூ:ணி



# அம்மா

## ரா. கணபதி

### 18. பக்தியின் சக்தி; பொறுமையின் பெருமை

எந்தத் தேவி எல்லா உயிர்களிடத்தும் பொறுமை வடிவில் உறைகிறளோ, நம்பிக்கை வடிவில் உறைகிறளோ அந்தத் தேவிக்கு வந்தனம், வந்தனம், மீண்டும் வந்தனம். - ஸ்ரீ துர்கா சப்தசதீ

**சா**ரதாமணியைப் பூஜித்ததோடு ராமகிருஷ்ணரின் நீண்ட நெடுங்கால சாதனைகள் அனைத்தும் முடிந்தன. சகல சாஸ்திரங்களிலும், சகல மதங்களிலும் கூறப்பட்டுள்ள மார்க்கங்களை எல்லாம் அநுஷ்டித்து, அவை ஒவ்வொன்றின் மூலமும் சத்திய சாக்ஷாத்காரம் பெற்ற ராமகிருஷ்ணர் இந்தச் சாதனைகளுக்குப் பட்டாபிஷேகமாகவே மனையாளை மகா திரிபுர சுந்தரியாக வழிபட்டார். அவள் பட்டம் சூடியதே இவருக்குச் சாதனைகளின் துறவாக ஆயிற்று!

இந்த மண்ணிலே ஏதுமறியாத சாரதையாக வந்த பராசக்தி, அவரிடமிருந்து சகல ஞானத்தையும் ஏற்றுக் கொண்ட பின்னும், பொதுவாக ஏதுமறியாதவள் போலவே வாழ்க்கையைத் தொடர்ந்தாள் — ஆயினும், இதன்பின் தகுந்த பாத்திரம் கிடைத்தபோது அவள் தனது மகத்தான ஞானப் பிரபாவத்தையும் காட்டலானுள்! அபூர்வமான சாதகர்களுக்கே இந்தப் பாக்கியம் கிட்டியது. ஆனல் வெளியுலகம் முழுவதற்கும் இன்னெரு பாக்கியம் கிட்டியது. அன்றிலிருந்து சாரதையின் அன்னையன்பு முன்னிலும் சிறப்பாகப் பிரவகிக்கலாயிற்று! 'அன்னையன்பு' என்றல் அன்னையாக இருந்து அவள் செய்த அன்பு என்றும் பொருள் கொள்ளலாம்; அல்லது, உலகை எல்லாம் அன்னையாகக் கண்டு அவள் செய்த அன்பு என்றும் பொருள் கொள்ளலாம். ராமகிருஷ்ணர் மெய்வருந்திப் பல்லாண்டுகள் கடினமான சாதனைகளைச் செய்து பெற்ற இலட்சியம் உலகனைத்தையும் திவ்விய மாதாவாகக் கண்ட பாவமேயாகும். அதை எவ்வித உழைப்பும் இன்றி அவரிடமிருந்து சுலபமாகப் பெற்றுவிட்டாள் சாரதை! ஒன்றும் தெரியாதவள் போலிருந்து எத்தனை பெரிய கொள்ளையிட்டு விட்டாள்! ஆனல் இதனினும் அதிசயம் யாதெனில் கொள்ளைக் கொடுத்தவரிடமும் அந்த மகாபாவம் நீங்காமல் நின்றது! சாரதைக்குத் தாம் செய்ய வேண்டிய பொறுப்பு முழுவதையும் ஈடேற்றிவிட்டோம் என்ற ஆனந்தமும் அதோடு அவருக்கு ஏற்பட்டது!

**சா**ட்சாத் பரமஹம்ஸ ராமகிருஷ்ணர் தன்னை வைத்துப் பூஜித்தார் என்றல் வேறெந்தப் பெண்ணும் இறுமாப்படைந்திருப்பாள்; அதைப் பறைசாற்றிப் பெருமை கொண்டிருப்பாள். அன்னை சாரதாமணியோ இது பற்றி அபூர்வமாகவே பேசுவாள். பேசுகையில் இறுமாப்பும் இராது, அதிவிநயமும் இராது. அதைப் பற்றி சகஜமாகப் பேசுவாள்.

அவளது மைத்துனர் மகள் லக்ஷ்மி பெரியவளானபின் ஒரு முறை கேட்டாள்: ''சித்தி, உனக்குக் கூச்சம் ரொம்ப அதிகமாச்சே! சித்தப்பா உன்னைத் தொட்டுப் பீதாம்பரம் போத்தினதையும், உன் காலில் செவ்வரக்குப் பூசினதையும், உன் வகிட்டிலே சிந்தூரம் இட்டதையும், உன் வாயிலே பட்சணமும் தாம்பூலமும் ஊட்டினதையும் நீ எப்படித் தாங்கிண்டே?''

சாரதை அதற்குச் சொன்ன பதில் இவ்வளவே: ''அப்போ நான் நானுகவே இல்லே.''

அதற்கு மேல் என்ன சொல்லக் கிடக்கிறது?

**வ**சந்த காலத்திலே மாமரம் கனிகளை உதிர்க்கிறது. உண்கிறேம். அடுத்த ஆண்டு மறுபடி வசந்த காலத்தில் மாமரம் மீண்டும் கனிகளை உதிர்க்கிறது! ராமகிருஷ்ணர் தமது அநுபவக் கனிகளை சாரதையிடம் உதிர்த்தபின்னும் மீண்டும் அவரிடம் அக்கனிகள் தோன்றிக் குலுங்கலாயின. இவை சாதனைகளை அப்பியசித்ததால் தோன்ற

வில்லே. எவ்வித சாதனையும் அற்ற சாரதைக்கு அவர் எப்படிக் கனிகளைத் தந்தாரோ, அவ்விதமே பராசக்தி அவரிடம் தானுக அந்த அநுபவங்களை அருளினுள்.

ஆறு மாத காலம் இரவுகளிலெல்லாம் இப்பேர்ப்பட்ட பரவச பாவநிலைகளில் திளைத்தார் ராமகிருஷ்ணர். அந்த உயர் நிலைகளிலிருந்து அவரது மானுட சரீரத்தை மீட்டுத்தருவதற்காக சாரதை இரவெல்லாம் கண் விழிக்கவேண்டியிருந்தது. அவரது அற்புத அழுகைகளில் அந்தக் கோமள சரீரமே கரைந்து விடுமோ என்று அவள் பொறி கலங்கியதுண்டு! அவரது அட்டகாசச் சிரிப்பிலே அந்த மலர் உடல் அப்படியே வெடித்து விடுமோ என்று அவள் கதறித் துடித்ததுண்டு.

''ஐயோ, அம்மாடி! அப்ப நான் பட்டபாட்டைச் சொல்லி முடியாது. டாகூர் (ராமகிருஷ்ணரை அவரது அணுக்கத் தொண்டர்கள் 'டாகூர்' என்றே அழைப்பர்) எந்தெந்த நிலைகளில் ஆழ்ந்திருந்தார்னு வார்த்தையால் வர்ணிக்கவே முடியாது. தெய்விக பரவசத்திலே என்னென்னவோ சொல்லிண்டு போவார், சிரிப்பார், அழுவார், சில சமயத்திலோ ஒரு செயலும் இல்லாம கல்லாக ஸ்தம்பிச்சுடுவார். ஒரு ராத்திரி முழுக்க இப்படி இருந்திருக்கார். சுவாசம் இருக்கா, இதயத் துடிப்பு இருக்கான்னு கூடத் தெரியாது. நான் எப்படி நடுநடுங்கிண்டு உட்கார்ந்திருப்பேன் தெரியுமோ? அவர் காதிலே திவ்ய நாமங்களையும் மந்திரங்களையும் உரக்கச் சொல்லமுடியாதபடி என் நா வறண்டு போயிடும். பொழுது விடியாதா, ஹ்ருதய் மாதிரி அழுத்தக்காரா வந்து அவரைச் சமாதிலேயிருந்து கலேச்சு பஹிர்முகமாக்க மாட்டாளான்னு தவிச்சுண்டு உட்கார்ந்திருப்பேன். ஒரு ராத்திரி



டாகூர் போயிட்டார்னே] நினைச்சு 'ஓ'ன்னு அழுதுட்டேன்! அப்புறம் காளியம்மாங்கிற வேலைக்காரியை விட்டு ஹ்ருதயரைக் கூப்பிட்டுண்டு வரச் சொன்னேன். ஹ்ருது வந்து மணிக் கணக்கா டாகூர் காதிலே கத்தினபின் தான் அவருக்கு இகலோக ஸ்மரணை வந்தது. நான் கண்ணீரும் கம்பலையுமா கண் இடுங்கி முகம் வீங்கியிருந்ததைப் பார்த்து அந்தக் காருண்யமூர்த்தி தவிச்சுப் போயிட்டார். 'அம்மா, இப்படி எத்தனையோ ராத்திரி எனக்காக நீ கண் முழிச்சுண்டு உட்கார்ந்திருக்கியா? பகலெல்லாம் உனக்கு ஓயாத உழைப்பு. ராத்திரியும் என்னாலே உன் தூக்கம் கெட்டுப் போறதா, கூடாது கூடாது! போறும், நீ என் ரூமிலே ராத்தங்கியது. உனக்கு நான் சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லியும் ஆச்சு. இனிமேலே நஹவத்திலேயே தூங்கு. இங்கே எனக்கு என்ன ஆயிடறதோன்னு கவலைப் படாதே. அம்மா பார்த்துக்குவா. உனக்கும் அது தெரியும். ஆனாலும் நீ என் பக்கத்திலேயே இருந்தா கவலையும் பயமும் படத்தான் செய்வாய். அதனாலே இனி மேல் நஹவத்திலேயே நித்திரை வைச்சுக்கோ' என்றார். நானும் அன்னிலேருந்து அப்படியே செஞ்சேன்'' என்று பிற்காலத்தில் சாரதை சொல்லுவாள்.

பகலில் வெளி வராத கோஷா ஸ்திரீயான சாரதாமணி இப்போது இரவிலும் கணவருடன் தங்காததால் அவரைப் பார்ப்பதே துர்லபமாகத் தொடங்கியது. ஒரு நாள் அபூர்வமாக இருவரும் தனித்திருந்தனர். தனிமையில் அவர் தமக்குப் பூஜை செய்தது அவளுக்கு நினைவு வந்தது போலும்! அதற்குப் பிரதி போல் அவரை ஜகன்மாதாவாகவே பார்த்து வணங்கினாள்.

அவர் சிரித்தார்: ''நாம் பகவதி மட்டுமல்ல, திவ்விய மாதாவுக்குப் பாங்கியராகப் பணிவிடை செய்கிற சகிகளும் நாமே'' என்றார்.

'தாஸோஹம்' என்றால் 'நான் உன் அடிமை' என்று இறைவனிடம் சொல்கிற நிலை. இந்த நிலையிலிருந்தே 'ஸோஹம்' என்கிற நிலை — 'நானும் இறைவனும் ஒன்றே' என்று அநுபவிக்கிற இறுதி நிலை—சித்திக்கும். 'ஸோஹம்' என்கிற ஹம்ஸ ராமகிருஷ்ணருக்கு இப்போது என்னவோ 'தாஸோஹம்' ஆசை வந்தது. அதனால்தான் சர்வேசுவரியின் சேடியாகத் தம்மையும் சாரதையையும் சொல்லிக் கொண்டார்.

அவரையே கண் கொட்டாமல் பார்த்த தேவி, ''ஆமாம், நீங்கள் அம்மாவின் சேடிதான்'' என்றாள்.

பட்டுச் சேலை ஒன்றைக் கொண்டு வந்து அவருக்கு உடுத்தினாள்; நெற்றியில் திலகம் தீற்றினாள்; வளையலும், ஹாரமும் அணிவித்தாள் — அன்றொரு நாள் அவருக்கு அவர் செய்ததை எல்லாம் இன்று திருப்பி விட்டாள்! சாது சாரதை அவரிடம் கடனாளியாகிவிடக் கூடாது என்பதில் கவனமாக இருந்த மகா கெட்டிக்காரிதான்!

''நாம இரண்டு பேரும் அம்பாளோட சேடிகள்'' என்று உற்சாகமாகச் சொன்னாள்.

அந்தத் தம்பதியரிடை புனித ஆனந்தம் பேரலைகளை மோதியது.

அலை உயர்ந்தால், அதை அடுத்து மடிந்து விழவும்தானே வேண்டும்?

ஆனந்த சாரதைக்கு மலேரியாக் காய்ச்சல் கண்டது. மதுர்பாபுவுக்குப் பிறகு காளி கோயில் நிர்வாகியாக வந்த சம்புநாத மல்லிக், பிரசாத் பாபு என்ற வைத்தியரைக் கொண்டு சாரதைக்குச் சிகித்ஸை தந்தார். ஆனால் பணிவிடை செய்யவே பிறந்த அவளால், பிறரது பணிவிடைக்குப் பாத்திரமாகிப் புக்ககத்தில் இருக்க முடியவில்லை. ''நான் ஜயராம்பாடிக்கே போயிடறேனே!'' என்றாள் கணவரிடம்.

''ஓ, பேஷாக!'' என்றார் அவர். அதுதான் சந்நியாசி என்பது!

**1873** ஜூன் மாதத்தில் சாரதை பிறந்தகத்துக்குப் புறப்பட்டாள்.

பிறந்தகத்துக்குப் போகும் வழியில் காமார்புகுருக்குச் சென்றாள் சாரதை. அங்கே ஒரு துயரச் சம்பவம் நிகழ்ந்தது.

ஹ்ருதயரோடுகூட தக்ஷிணேசுவரத்தில் ஆலய பூஜையை நடத்தி வந்த ராமகிருஷ்ணரின் தமையனான ராமேசுவரர் அப்போது காமார்புகுரில் இருந்தார். கபவாத ஜுரம் கண்டது அவருக்கு. தாரக நாமமாகிய ஸ்ரீராம நாமாவை ஜபித்தபடி யிருந்தார். கடைசியாகச் சுற்றியிருந்தவர்களைப் பார்த்து, ''இந்தச் சரீரத்தை ச்மசானத்து மத்தியிலே வெச்சுக் கொளுத்த வேண்டாம். சாலை ஓரமான இடத்திலே புதையுங்கோ. அந்தச் சாலை வழியா ரொம்ப சாதுக்கள் போவா. அவாளோட பாத தூளி எப்பவும் இந்தச் சரீரத்தைப் புதைச்ச இடத்துக்கு மேலே பட்டுண்டே இருக்கட்டும்'' என்றார்.

அன்றிரவே அந்தப் புனித ஜீவன் மண்ணுலகிலிருந்து விடை கொண்டது.

மதனியின் ஆறாத் துயரத்தில் சாரதை பங்கு கொண்டாள். துயரம் செறிந்த சூழலில் நோயாளியான தன்னால் வேறு

# இப்பெண்ணின் பேரழகிற்குக் காரணமென்ன?




# முத்தென ஒளிரச் செய்யும் லக்மே வேனிஷிங் க்ரீம்

லக்மே வேனிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தில் மறைந்து செயலாற்றுகிறது. அது உடனடியாக உங்கள் முகத்தை எழிலோங்கச் செய்கிறது. சிறிது தடவிப் பாருங்கள். முத்துப் போல் ஒளிரச் செய்யும் அதன் விசேஷ செயலாக்கம் விந்தை புரிவது தெரியவரும். உங்கள் முகமலர் முத்தென ஒளிரும். இந்த இலேசான படிமானத்தின் மீது சிறிது லக்மே முகப்பவுடர் பூசுங்கள். இப்போது கண்ணாடியில் பாருங்கள். நீங்கள் எழிலோங்கி எடுப்பாக விளங்குவீர்கள்!

## லக்மே வேனிஷிங் க்ரீம்

ASP/L-86

இம்சை நீடிக்க வேண்டாம் எனக் கருதி ஜயராம்பாடிக்கு விரைந்தாள்.

அவளுக்கு உடம்பு தேறவில்லை. மனத்திலும் வழக்கமான தெளிவில்லை. வழக்கம்போல் ஊராரின் வம்பு, அம்மாவின் குமுறல் எல்லாம் சேர்ந்து கொண்டன. தக்ஷிணேசுவரத்து ஆனந்த வாழ்வுக்கும், ஷோடசி பூஜையின் உன்னதத்துக்கும் சம்பந்தமேயில்லாத சுவையற்ற அவல வாழ்வாயிற்று! சாரதை, ஷோடசியாகி அணிந்த பீதாம்பரத்தையும் சங்கு வளையலையும் தனது அம்மாவுக்குத் தந்தாள். ராமகிருஷ்ணரின் உத்தரவுப்படியே அப்படிச் செய்தாள். ஆனால் அதிலும்கூட ஆனந்தமில்லை. ஏதோ ஒரு மங்களம் முடியுமுன் இந்த மங்களத்தைச் செய்துவிட வேண்டும் என்பது போலவே செய்தாள்.

ஒரே ஒரு சந்தோஷ சம்பவம் இதனிடை நிகழ்ந்தது. சாரதையின் மூன்றாவது தம்பி காளிகுமாருக்குப் பூணூல் கல்யாணம் நடத்தினார்கள்.

அதற்கு நான்காம் நாள் ஸ்ரீராம நவமி. எதிர்பாராத துக்க சம்பவம் நிகழ்ந்தது. சாரதையின் அருமைத் தந்தை ராமசந்திர முகர்ஜி ஸ்ரீ ராமபிரானின் இணையடி அடைந்து விட்டார்! ராமன் பெயரைச் சூட்டிக்கொண்டு, ராமா ராமா என்று வாழ்ந்த அந்த நல்ல மனிதர் ராமநவமியன்றே ராமனைச் சென்றடைந்தது, அவரைப் பொறுத்தமட்டில் பெரிய பாக்கியம் தான். ஆனால் சியாமசுந்தரியின் கரத்திலிருந்து சங்கு வளையல் கழன்றது. அவளும், சாரதையும், மற்றக் குழந்தைகளும் தவித்தனர்.

'பொருளாதாரத் துயரம் பயங்கரமாக வந்து பீடித்தது. ராமசந்திரர் பெரிய சொத்து எதுவும் வைத்துப் போகவில்லை. பயிரிடவே லாயக்கில்லாத நிலையில் சிறிது நிலம் இருந்தது, அவ்வளவுதான்! புருஷக் குழந்தைகள் எதுவுமே இன்னும் உத்தியோகம் பார்க்கிற அளவுக்குத் தலை எடுக்கவில்லை. கல்கத்தாவில் புரோகிதம் செய்து வந்த ராமசந்திரரின் சகோதரர் ஈசுவர சந்திரர் தமது அற்ப சம்பாத்தியத்திலே ஏதோ சிறிது மிச்சம் பிடித்து அனுப்பினர். அது எப்படி எட்டு ஜீவன்களின் வயிற்றை நிரப்பும்?

இத்தனை இன்னலில் அங்கு தானும் ஒரு பாரமாக இருக்கக் கூடாது என்று கருதித் தக்ஷிணேசுவரம் திரும்பி விட்டாள் சாரதை.

தேவி சியாமசுந்தரி கூலிக்கு உழைத்துக் கொட்டலானாள். ஊர் பெரியதனக்காரரான பானர்ஜியின் வீட்டு நெல்லைக் குத்திக் கொடுத்து, அதில் கால் பாகம் கூலி பெற்றாள். குஞ்சும் குளுவானும் நிறைந்த தன் வீட்டை விட்டு வெளியே சென்று சமைத்துப்போட இயலாததால், தன் வீட்டுப் புறக்கடையிலேயே பன்னிரண்டு அடுப்புக்களை ஏக காலத்தில் மூட்டிக் கொண்டு பல குடும்பங்களுக்குச் சமையல் செய்து அனுப்பி வைத்தாள். குடித்தனம் நடத்தவும் பிள்ளைகளைப் படிக்க வைக்கவும் இதில் கிடைத்த கூலி போதவில்லை. மூன்று பிள்ளைகளை உறவினர் வீடுகளுக்கு அனுப்பி வைத்தாள்.

**சா**ரதை சாம்பிக் கிடந்தாள் தக்ஷிணேசுவரத்திலே. அவளுக்குப் பயங்கரமான வயிற்றுப் போக்கு ஏற்பட்டது. சம்பு பாபு சிறந்த சிகித்சைக்கு ஏற்பாடு செய்த போதிலும் நோய் குணமாவதாகக் காணோம். புத்திர சோகப்பட்ட மாமியாரிடம் தன் நோயைப் பற்றிப் பிரஸ்தாவமே செய்யாமல், மூச்சைக் கையில் பிடித்துக் கொண்டு கைங்கரியம் செய்தாள் சாரதை. அப்பாவின் மரணமே அவளை உருக் குலைத்துவிட்டது என்று அந்தக் கிழவி நினைத்தாள்.

ராமகிருஷ்ணர் இப்போது சாரதையிடம் நடந்து கொண்ட விதம் விசித்திரமாயிருந்தது. எவளை ஸ்ரீராஜ ராஜேசுவரியாக வழிபட்டாரோ அவளை இப்போது அவர் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. இதற்கும் காரணம் அந்த ராஜராஜேசுவரியேதான். அவர் ஷோடசி பூஜை முடிவில் தமது சாதனைகள் அனைத்தின் பலனையும் சாரதையின் உட்செலுத்திவிட்டு, தாம் திறந்த வானைப் போல் இலேசாகிவிடப் பார்த்தார் அல்லவா? ராஜ ராஜேசுவரி அதை அநுமதிக்கவில்லை. ஊரில் திருடர்கள் மிகுந்திருக்கையில் காவல் அதிகாரி நிம்மதி தேடிக் கொள்ள முடியுமா? கலி முற்றப் போகிறது, இந்த கதாயிதான் அதைத் தடுக்கும் காவல் பட்டாளத்தை அமைக்க வேண்டும் என்று அம்பிகை திருவுள்ளம் கொண்டனள். அவர் எந்த சாதனையும் புரியாமலே அவருள் மீண்டும் மகா வித்யைகளைப் பயிரிடத் தொடங்கினாள். அவற்றின் அறுவடையை அவர் பல புண்ணிய சீடர்களுக்குப் படைத்து அவர்களை விவேகாநந்தர், பிரம்மாநந்தர், ராமகிருஷ்ணாநந்தர், சாரதாநந்தர் முதலிய தர்ம போதகர்களாக ஆக்க வேண்டும் என்பது திவ்விய மாதாவின் சங்கற்பம். எனவே, இப்போது ராமகிருஷ்ணர் மீண்டும் பல அநுபவங்களையும் உபதேசங்களையும் தம்முள் பெற்றார். அதன் கனம் தாங்

கொணுததாக இருந்தது. தர்மகர்த்தச் சொத்துப் போல், அம்பாள் நியமித்துள்ள சீடர்களுக்கு வழங்கவே இந்த ஆத்மிக தனம் தம்மிடம் வந்து சேர்ந்திருக்கிறது என்றும் அறிந்து கொண்டார். அந்தச் சீடர்கள் சீக்கிரமே வந்து தனத்தைப் பெற்று, தமது கனத்தைக் குறைக்கமாட்டார்களா என்று பரிதவிக்கலானுர். பசு மாடு மடியிலே பால் முட்டிக் கனக்கிறபோது, கன்று வந்து பருகாதா என்று எப்படி ஆவலோடு, ஆதுரத்தோடு, ஆதங்கத்தோடு எதிர்பார்த்து நிற்குமோ அப்படியே சீடர்களுக்குத் தமது ஆத்ம தனத்தை ஊட்ட ஆர்வத் துடிப்பு கொண்டிருந்தார் ராமகிருஷ்ணர். பசு அடிவயிற்றிலிருந்து 'அம்மா' என்று கத்துவது போலவே ராமகிருஷ்ணர் 'ஒளிந்திருக்கும் என் குழந்தைகளே, வாருங்கள் வாருங்கள்' என்று கதறலானுர்.

இந்தப் பெரியக் கதறலுக்கிடையே, சாரதை ஒளித்து வைத்திருந்த துயரம் அவருக்கு எப்படித் தெரிய முடியும்?

ராமகிருஷ்ணர் மனம் வைத்திருந்தால் ஒரு சில பிரபுக்களிடம் சொல்லி மாமியார் குடும்ப வறுமையைத் தீர்த்திருக்கலாம். ஆனுல் அவருக்கு அப்போது மனம் என்பதே சாதாரண ரீதியில் செயல்படவில்லை. சாரதையும் இவ்விஷயமாக வாய் திறந்தாளில்லை.

ஓராண்டு உடல் உபாதையைப் பொறுத்துக் கொண்டு பதிக்கும், பக்தர்களுக்கும் சுசுரூஷை செய்தாள். பிறகு இடம் மாறி இருந்து பார்த்தால் வித்தியாசம் தெரியலாம் எனக் கருதி ஜயராம்பாடிக்குத் திரும்பினுள்.

**வி**த்தியாசம் தெரிந்தது! அதாவது வயிற்றுப் போக்கு மகா பயங்கரமாகி அவளை மரணத்தின் நுழை வாயிலுக்கே அழைத்து வந்துவிட்டது.

நடைப்பிணமாகக்கிடந்தாள்சாரதை.

ராமகிருஷ்ணருக்கு எப்படியோ விஷயம் தெரிந்தது. அப்போது அவரது மனமும் விஷயத்தை வாங்கிக் கொள்ளும் நிலையில் இருந்தது! பெண் பிள்ளையைப் போல் அலமாந்து போனுர். ''ஹ்ருதே, கடைசிலே எல்லாம் இப்படியா முடியணும்? அவள் ஜன்மா எடுத்ததுக்கு எத்தனையோ செய்யணுமே! அதொண்ணும் செய்யாமல், சாதாரண மநுஷ்யாள் வந்து போறுப்பலேயா அவளும் போயிடப் போறு? இதுவா அம்பாளோட சங்கல்பம்?'' என்று விம்மினுர்.

அதுவல்ல அம்பாளின் சங்கற்பம் என்றும் அப்போதே புரிந்து கொண்டார். உடனேயே பத்தினியின் கவலையை அடியோடு மறந்து, சீடர்களுக்காகப் படுகிற கவலையை எடுத்துப் போட்டுக் கொண்டார்.

பின்னிக் கொள்கிற கால்களோடு கலுகேட ஏரிக் கரைக்கு வந்த சாரதாமணி கிழித்த நாராகக் கீழே சாய்ந்தாள். ஏரித் தண்ணீருக்குள் அவளது பிரதிபிம்பம் தெரிந்தது. 'அடி, சாரதே! உன் சரீரத்தைப் பார்த்தியா? ஒரு காலத்தில் எப்படித் தளதளன்னு இருந்தது? இப்போ எலும்பும் தோலுமா ஆகியிருக்கு. கதுப்புக் கன்னத்திலே எலும்பு மேடு இட்டிருக்கு! கமுகுக் கழுத்து நேர்ந்து நலிஞ்சிருக்கு! தங்க வர்ணம் பித்தளையாப் பல்லை இளிச்சிடுத்து! இதுதாண்டியம்மா மநுஷ சரீரம்' என்கிறது. இதுக்குத்தான் ஊர்ப்பட்ட சிங்காரமும், சவரணையும் பண்ணியாறது. சை, இதோட உன்னை ஏன் சம்பந்தப்படுத்திக்கணும்? இது இங்கேயே இப்படியே கிடக்கட்டும்; இதை விட்டுட்டு நீ போயிடேன்' என்று சொல்லிக் கொண்டாள்.

அவளைப் போக விடுவாளா தேவி?

வயிற்றுப் போக்கு நின்றது.

மெலிந்த உடல் பருக்கலாயிற்று.

ஆனுல் இதென்ன? அது ஆரோக்கியப் பருமனுக நிற்கக் காணுமே! ஊளைச் சதை போடுகிறதா என்ன?

ஊளைச் சதையும் அல்ல. உடம்பெல்லாம் நீர் சுரந்து குத்தல் கொடுக்கிறது.

தலைவலிபோய்த் திருகுவலி. வயிற்றுப் போக்கு நின்றது, இப்போது உடம்பெல்லாம் துர்நீர் பரவி வதைக்கிறது.

பொறுமையின் அவதாரத்தை உலகுக்குக் காட்ட வேண்டும் என்பதற்காக அம்பாள் அவளை வறுத்தெடுக்கிறுள். வறுத்தெடுக்கவில்லை, விஷ நீர்ப் பாண்டத்துக்குள் அமுக்கி எடுக்கிறுள்!

சாரதையின் மூக்கிலிருந்தும் கண்ணிலிருந்தும் ஊனீர் பிரவாகமாக வழிந்தபடி இருக்கிறது. உடம்பை அசைக்கவும் முடியாமல் கிடக்கிறுள்.

தம்பி உமேஷ் அருமை அக்காவின் பக்கத்தில் வந்து அமருகிறுன். தனக்குக் குளிப்பாட்டி, உடை உடுத்தி, உணவூட்டி வளர்த்த தமக்கை திணறிக் கொண்டிருப்பதைப் பார்த்து அவன் உள்ளம் குழைகிறது. தேம்பியழாத குறையாகச் சொல்கிறுன்: ''அக்கா, பக்கத்திலேயே சிம்மவாஹினி இருக்கச்சே உனக்கு உடம்புக்கு வரப்படுமா? அவள் உன் உடம்பைச் சரியாக்கினுலொழிய சாப்பிடறதில்லை, உபவாசமிருந்து செத்தாலும் சரின்னு விரதம் எடுத்துக்கோயேன்!''

அந்தப் பிள்ளை திடுமென அப்படிப் பேசியது சாரதைக்கு ஆச்சரியமாயிருந்தது. 'இதுவும் சிம்மவாஹினியின்

லீலைதானே? எனக்கு உடம்பு குணமாகிறதோ, இல்லையோ, இவன் சொல்கிறபடி உபவாசமிருந்து மாண்டு போனாலும் நல்லதுதானே! அம்பாளுக்காக விரதம் இருந்து மரணமடைந்தால் அதில் தற்கொலை என்ற தோஷமும் வராது அல்லவா?'

''அக்கா, நான் சொல்றதைத் தட்டாதே! இதோ, என் கையைப் பிடிச்சுக்கோ. நானே உன்னைத் தாங்கலாக அணைச்சுண்டு அம்பாள் கோயிலிலே கொண்டு போடறேன். அங்கேயே கிட. ஒண்ணு, அவள் உன் உடம்பைக் குணமாக்கட்டும், இல்லாட்டா இந்தப் பாழாப் போற குடும்பத்துக்கு உழைச்சுக் கொட்டி ஓடாயிட்ட நீ....''

உமேஷ் வார்த்தைகளை முடிக்கமாட்டாமல் திக்கிய போதே, சாரதை அவனது கையைப் பிடித்துக் கொண்டு எழுந்திருக்க முயன்றாள்.

அவனுக்கு ஒரே குஷியாகிவிட்டது.

'' பௌர்ணமியா, அமாவாசையான்னு வித்தியாசம் தெரியாதபடி என் கண்ணிலேருந்து ஓயாமல் ஜலம் கொட்டி நான் குருடியாவே இருந்தேன். உமேஷ் என்னைப் பிடிச்சுண்டு போய் சிம்மவாஹினி சந்நிதியிலே கிடத்திட்டுப் போயிட்டான். தன்னந் தனியாக் கிடந்தேன். அவஸ்தைக்கு மகுடாபிஷேகம் பண்ணற மாதிரி வயிற்றுப் போக்கும் திருப்பிண்டது. மூணு நாலு தடவை குழந்தை மாதிரி தவிழ்ந்தே வெளிலே போயிட்டு வந்தேன். இப்படி நான் தனியாக் கிடக்கறேன்னு பக்கத்து வீட்டு அம்மாளுக்குத் தெரிஞ்சுது. அவளை நான் செவிலித் தாயாவே நினைச்சு 'ஆயா'ன்னு கூப்பிடற வழக்கம். வயசுப் பெண்ணை நான் கண்ணும் தெரியாமல் தனியாக இருப்பதனால் எங்கே பயந்து நடுங்குவேனோன்னு அவளுக்குக் கவலை. அதனாலே அடிக்கொரு தடவை இருமிக் காட்டிண்டே இருந்தா—'' நம் அம்மாவின் பிற்கால வர்ணனை இது.

நேரம் போய்க் கொண்டே யிருந்தது. சிம்மவாஹினியிடமிருந்து சாரதைக்கு எந்த சூசகமும் வரவில்லை.

அவளுக்குத் தெரியாதா, சாரதையை விடத் தவிக்கிற இன்னொரு ஜீவனுக்குத் தான் தன் தரிசனத்தை முதலில் தர வேண்டும் என்று?

'ஊரொப்பக் குடித்தனமும் பண்ணாமல், இப்படி மாளாத வியாதிப் பிண்டமாக இந்தப் பெண் வந்து சேர்ந்ததே!' என்று பெற்ற வயிறு பற்றி எரிய அமர்ந்திருந்தாள் சியாமசுந்தரி. கூலி கொடுக்கும் யஜமானர்களுக்குச் சமைத்து அனுப்ப வேண்டியிருந்ததால் அவள் வீட்டை விட்டும் வர முடியவில்லை. தனியே அமர்ந்து கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள்.

திடுமென ஒரு பன்னிரண்டு வயதுப் பெண் அவள் முன் வந்து நின்றாள். பார்த்தால் கருமார் வகுப்புப் பெண் போலத்தான் இருந்தது. ஆயினும் கருமை ஆர்ந்த காளியாக, கருமம் தீர்க்கும் காளியாக அவளே சியாமசுந்தரியின் உள் மனத்துக்குத் தென்பட்டாள்.

அந்தப் பெண் சியாமசுந்தரியின் கையில் ஒரு மருந்துப் பொட்டணத்தைத் திணித்தாள். ''சட்டுனு போ, ஊம், ஜல்தி! அவளை எழுப்பி இங்கே அழைச்சிண்டு வந்து இந்த மருந்தைக் கொடு'' என்றாள். உடனே மறைந்தும் போனாள்.

மறைந்தவள் இங்கே சாரதையிடம் வந்தாள். ''சாரதா! சுரைப் பூ இருக்கே, அதோடு உப்பை வெச்சு அரைச்சுப் பிழிஞ்சு, அந்தத் துளியைக் கண்ணிலே விட்டுக்கோ; குணமாயிடுவே'' என்றாள்.

சாரதை தனது விதிர் விதிர்ப்பை உணரவும், அவளுக்கு நன்றி சொல்லி நமஸ்கரிக்கவும்கூட அவகாசம் தராமல் நொடியிலே மறைந்தாள்.

சியாமசுந்தரி கோயிலுக்கு வந்தாள். பெண்ணை வீட்டுக்கு அழைத்து வந்து மருந்து தந்தாள். சாரதை சொன்ன வண்ணம் உப்புச் சேர்ந்த சுரைப்பூச் சாரத்தைக் கண்ணில் பிழிந்தாள்.

அவ்வளவே! மளமளவென்று கண்களிலிருந்து எதுவோ உதிர்ந்தது. வற்றாத ஊற்று வற்றியது. அந்தக் கணமே சாரதையின் தெள்ளிய திருநயனங்கள் தமது பழைய காந்தியை, சாந்தியைப் பெற்றுவிட்டன.

உடல் வீக்கமும் மாய மந்திரமாக வடியலாயிற்று.

இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? 'சர்வ வியாதி பிரசமனி'யும், 'சர்வ மிருத்யு நிவாரிணி'யுமான தேவி சங்கற்பித்துவிட்டாலே போதும்; எந்த வியாதியும் பறந்து போகும்! அப்படியிருக்க அவள் மருந்து கொடுத்தும், சாறு பிழியுமாறு சொல்லியும் சிறிது வேலை வாங்கி, சிறிது போது கழித்தே நிவாரணம் தந்தாளே அதுதான் ஆச்சரியம். அவள் இஷ்டம், அப்படி விளையாடினாள்!

சாரதைக்கு எல்லையில்லாத விச்ராந்தி உண்டாயிற்று. பிறருக்குத் தந்த தொந்தரவு ஓய்ந்ததே! ''சாக்ஷாத் அம்மாவே மருந்து தந்தாள்'' என்று வருபவர் போகிறவரிடமெல்லாம் வாயாரச் சொல்லி, தேவியின் கருணையை நினைந்து நெஞ்சுருகினாள்!

(தொடரும்)

# அம்மா

ரா. கணபதி

## 20. பகைவனுக்கு அருள்; பகைவனின் அருள்!

நிர்மலமான புன்னகையுடன் கூடிய, முழு மதியை நிகர்த்த, நினது மாற்றறியாத செழும் பசும் பொன் முகத்தைக் கண்ட பின்னும், கோபாவேசமான மகிஷாசுரன் உன்னைத் தாக்க வந்தனனே, அது விந்தையிலும் விந்தையே.

ஸ்ரீ துர்கா சப்தசதி 4.12

ஜயராம்பாடிவாசிகள் சிலர் கல்கத்தாவில் கங்கா ஸ்நானம் செய்வதற்காகப் புறப்பட்டனர். தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்ப விரும்பிய சாரதையும் அவர்களது துணையில் புறப்பட்டாள். அந்தத் 'துணை'யின் லட்சணம் பிற்பாடுதான் தெரிந்தது!

காமார்புகுரில் தந்தை ராமேச்வரரை இழந்து தவித்துக் கொண்டிருந்த லக்ஷ்மியும், அவளது சிறிய தம்பி சிவராமும் சாரு சித்தியுடன் சேர்ந்து கொண்டனர்.

எல்லோரும் கால்நடையாகப் புறப்பட்டனர். காமார்புகுரிலிருந்து எட்டு மைலில் உள்ள ஆரம்பாக் என்ற இடத்தை அடைந்தனர்.

ஆரம்பாக்கை அடுத்துத் தெலோ—பெலோ என்ற வனாந்தரப் பொட்டல் இருந்தது. அங்கே பயங்கரமான கொள்ளைக் கூட்டத்தினர் வசித்துவந்தனர். பகடி எனப்படும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த இந்தக் கள்வர்கள் முற்காலத்தில் ராணுவ சேவையில் வீர தீரங்களைக் காட்டியவர்கள். பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டபின் இவர்கள் ராணுவத்தில் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. அதனால் கொள்ளைக்காரர்களாக மாறினார்கள். தெலோ-பெலோ மத்தியில் உள்ள பயங்கர காளிக்குப் பூஜை நடத்திவிட்டுத் தங்களது கொலை, கொள்ளைகளை நடத்தி வந்தனர்.

விரைவாக நடந்தால் இருட்டு முன்னரே தெலோ—பெலோவைக் கடந்து தாரகேசுவரத்துக்குப் போய்விடலாமென நம் யாத்திரீகர்கள் முடிவு செய்தனர்.

பன்முறை நோய்களுக்கு ஆளாகியிருந்த சாரதை மிகவும் அசக்தமாயிருந்தாள். அவளுக்கு ஆரம்பாக்கிலேயே தங்கிச் செல்லலாம் என்றுதான் இருந்தது. எனினும் தன் வழக்கப்படி, பெரியோர்கள் பேசும்போது அவள் குறுக்கிட்டு ஏதும் கூறவில்லை.

மற்ற யாத்திரீகர்களோடு நடந்தாள். ஆனால் நடக்க நடக்க அவளுக்குக் காலே இற்றுவிடும் போலாயிற்று. மெல்ல நடக்கலானாள்.

''வேகமாய் நட'' என்று உடன் வந்தவர்கள் உசுப்பினார்கள். ''இந்த நிதானத்தில் நடந்தால் நட்ட நடுநிசியில் நடுக் காட்டில் மாட்டிக் கொள்ள வேண்டியதுதான்'' என்று கடிந்து கொண்டார்கள். பின்தங்கி வந்த சாரதைக்காக மூன்று நான்கு முறை நின்று தாமதித்தும் பார்த்தனர். பிறகு அவளுக்காகத் தங்களையும் ஆபத்துக்கு உட்படுத்திக் கொள்வதற்கில்லை என்பதால் அவளைத் தன்னந் தனியாக விட்டுவிட்டு வேகமாக நடையைக் கட்டிவிட்டனர்.

''கொலைகாரன்ளாம் இங்கே நிறைய இருக்காளாம். சித்தியோடே நாம பின்னாடி வந்தா நமக்கும் ஆபத்துத்தான்'' என்று லக்ஷ்மியும் சிவராமும் பேசிக் கொண்டனர். அவர்களும் மற்ற யாத்திரீகர்களோடு சேர்ந்து கொண்டு சாரதையை விட்டுச் சென்றனர்!

ஜன சஞ்சாரமே இல்லை. கண்ணுக் கெட்டிய தூரம் காட்டுப் பகுதி. அதோ சூரியன் மலை வாயிலை நோக்கி வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறான். துன்பங்களையும் துயரங்களையும், இன்னல்களையும் இடுக்கண்களையும், கஷ்டங்களையும் கவலைகளையும் வழிய வழிய அநுபவித்துக் காட்டப் பிறந்த சாரதை தனியொருத்தியாக நடக்கமாட்டாமல் நடக்கிறாள். காலிலே வலி கனக்கிறது. மனத்திலே பயம் கனக்கிறது. ஏழையான அவளுக்கு மடியில் கனம் இல்லை. ஆனால் அவள் பருவ மங்கை அன்றோ? கொள்ளையர் கண்ணில் பட்டுவிட்டால்!

தகதகவெனச் செக்கர் கோளமாக ஜொலித்துவிட்டு சூரிய பகவானும் அவளைக் கைவிட்டுப் போய்விட்டான்! மாலை மயக்கம். தான் செல்கிற வழி சரியானதுதானா என்றுகூடத் தெரி

யாமல், எல்லையில்லா அயர்வோடும் அச்சத்தோடும் ஊர்ந்தாள் சாரு.

ஆஜானுபாகுவான ஒரு நெடிய உருவம் தன்னை நோக்கி வரக் கண்டாள். நின்ற இடத்தில் நிலைக்குத்திட்டுவிட்டாள். அவளது கால்கள் நகர மறுத்து விட்டன. 'நகர்ந்தும் பிரயோஜனமில்லை; எந்தத் திசையில் ஓட்டம் பிடித்தாலும் மாட்டிக் கொள்ள வேண்டியதுதான்' என்று அவளது உள் மனத்துக்குத் தெரிந்திருந்தது. அதற்கும் உள்ளேயிருந்த மனம் சிம்மவாகினியிடம் சரண் புகுந்தது.

கன்னங் கரேல் என்ற உருவம்; நீண்ட பரட்டை முடி; மணிக்கட்டுகளில் வெள்ளிக் காப்பு; ஒரு கையிலே குண்டாந்தடி — இத்தியாதி லட்சணங்களுடன் வந்த அந்த உருவம் ஒரு தேறிய கொள்ளைக்காரன்தான் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

கிலியில் சப்த நாடியும் ஒடுங்கிய சாரதையை மேலும் அச்சமூட்டும் குரலில் அந்தக் கொள்ளைக்காரன் அடித்தொண்டையில் கர்ஜித்தான்: ''லே! இம்மாம் பொளுதிலே இங்கிட்டு வந்து நிக்கறது யாருண்ணேன்? எங்கிட்டுப் போறியாம்?''

அந்தக் குரலில் விஷ வாடை வீசியது.

சாரதையின் ஸ்தம்பித்த நாவு தன்னையறியாமலே அசைந்து, ''கிழக்காலே போகணும்'' என்றது.



''கிளக்கா போவணும்? இது வளி இல்லே. அந்தப் பக்கம் போறியா ?''— கொள்ளையன் கேலிக் குரலில் பேசுகிறன். அவனிடம் சிக்குவது தவிர வேறுவழியில்லே என்று கெக்கலிக்கிறன்!

'தங்கள் ராஜ்யம்' என்று சுவாதீனமாக முகமூடி போடாமலே வருகிற கள்வன் முன், முகத்தை இழுத்து மூடி நின்றுள் அபலே.

காற்று வீசியது; அம்பிகையின் கருணை மூச்சுப்போல வீசியது.

சாரதையின் முகத்தை மூடிய சேலைப் பகுதி பின்னே பறந்தது.

அவளது திருமுகத்தை நேருக்கு நேர் பார்த்தான் கொள்ளையன்.

இருள் பரவத் தொடங்கியிருந்தாலும் அந்த முகம் அவனுக்குத் தெற்றெனத் தெரிந்தது. தீபத்தைப் பார்க்க வேறு தீபத்தின் துணை வேண்டுமா, என்ன? நோயில் வாடிக் கறுத்த சாரதை திகிலில் நிலைகுலைந்திருந்தபோதிலும் அவளது முகத்தில் எங்கிருந்தோ ஒரு சோபை வந்து மேவியிருந்தது.

பார்த்த கண் பார்த்தபடி அந்தத் திருமுகத்திலேயே திருஷ்டியைப் பதித்தான் திருடர் தலைவன். பொருள் விரும்பும் கொள்ளைக்காரனின் பார்வை அல்ல அது. வேட்கை கொண்ட காமுகனின் பார்வையும் அல்ல அது.

தின்னவரும் புலிதன்னையும் அன்பொடு
சிந்தையில் போற்றிடுவாய்
அன்னை பராசக்தி அவ்வுரு ஆயினள் அவளைக்
கும்பிடுவாய்

என்று கவி பாடினர். இங்கோ புலியே, தான் தின்ன வந்த ஜீவனை அன்னை பராசக்தியாகப் பார்த்து விட்டது! விஷப் புலிக்கும் தன் குட்டியினிடம் அமுதப் பால் பெருகும். இந்தப் புலி தன் குட்டியைக் காணவில்லை; அம்மாவைக் கண்டது.

ரசவாதம் நடந்தது! இரும்பு மனசு பொன்னுயிற்று!

கள்வனின் விஷக் குரலில் அமுதம் ஊற்றெடுத்தது.

''பயம் வேணும் தாயே! நானும் பொம்புள்ளையோட வாளறவன்தான். அது பின்னுடிதான் வந்துட்டிருக்கு'' என்றுன் மிருதுவான குரலில்.

காலடிச் சத்தமும் கேட்டது. கள்வனின் மாறுதலிலேயே ஓரளவு தெளிவு பெற்ற சாரதைக்கு, தன்னைப் போன்ற பெண் ஜன்மா ஒன்று வருகிறது என்ற எண்ணத்தில் ஆறுதல் உண்டாயிற்று.

திருடர் தலைவனைப் பார்த்து முத்துப் போல் பேசினுள். அவனைத் தாஜா செய்ய வேண்டும் என்று சாதுரியம் செய்யாமல், மெய்யாலுமே மனத்தில் வந்ததை வார்த்தையில் வடித்துப் பேசினுள். ''அப்பா, என்னோட வந்த வங்க கல்கத்தா வழி போயிட்டாங்க. தனியா நின்னுட்டேன். போற வழியைத் தப்ப விட்டுட்டேன்னும் தோணறது. தயவுசெஞ்சு என்னை அழைச்சுண்டு போய் அவாகிட்டே சேர்த்துடறியா? உன் மாப்பிள்ளை தக்ஷிணேசுவரத்துலே, ராணி ராஸமணி கட்டின காளி கோயிலிலே இருக்கார். அவரைப் பார்க்கத்தான் போயிண்டிருக்கேன். நீ எங்களோட அங்கே வந்தா அவர் உன்மேலே அன்பைக் கொட்டுவார்'' என்றுள்.

அவன் இவளை அம்மாவாகப் பார்த்ததுபோல், இவளும் அவனை அப்பாவாகவே பார்த்து, அவனிடம் நம்பிக்கை வைத்தாள். அதனுல்தான் இப்படிப் பாலாகப் பேசினுள்.

கள்வன் கனிந்து நின்றுன். ஓங்கிப் பிடித்த குண்டாந் தடி தழைந்தது.

அவனது மனைவி அருகே வந்தாள். அவளும் சாரதையின் முகத்தைப் பார்த்தமாத்திரத்தில் அடியோடு உருகிப் போனுள். நம்பிக்கையுடன் அவளது கையைப் பிடித்துக் கொண்டாள் சாரதை. ''அம்மா! நான்தான் உன் மகள் சாரதா. தன்னந் தனியா பயந்து நிக்கறச்சே அதிருஷ்டவசமா அப்பாவும் நீயும் வந்தேளோ, நான் பிழைச்சேனே? இல்லாட்டா என்ன ஆபத்து வந்திருக்குமோ ?'' என்றுள்.

ஆபத்து இந்த இருவரிடமிருந்தே வந்திருக்கும்! ஆபத்துக்காரர்களையே ஆப்தர்களாக்கிக் கொண்டுவிட்டாள்!

கொள்ளைக்காரரின் மனத்தைக் கொள்ளை கொண்டாள் அன்பும், நம்பிக்கையும் உருவான சாரதை.

''தாயே, நீ எங்களுக்கு மவதான். நாங்க உன்னைக் கவனிச்சுக்கறோம். துளிக்கூடக் கவலைப்படாதே. இப்போ நடந்து களைச்சிருக்கே! துண்ணுட்டுப் படுத்துக்குவியாம். காலையிலே நாங்களே உன்னை அளைச்சிக்கிட்டுத் தாரகேசமோ, தெட்சணேசமோ போறோம்'' என்று பரிவு மயமாக முன்வந்தனர் பறிமுதல்காரர்கள்.

சாரதையும் உடன்பட்டாள். அவள் பிராமணப் பெண், அதிலும் பரம சத்துவமானவள் என்பதும்; அவர்கள் பகடித் தம்பதியர், அதிலும் கொள்ளைத் தொழில் செய்பவர் என்பதும் அன்பின் சந்நிதானத்தில் அடிபட்டே போயின.

மூவரும் நடந்தனர்.

பொட்டல் மறைந்து சிறிது மனித நடமாட்டம் உள்ள ஓரிடம் வந்தது. அங்கே ஒரு பெட்டிக் கடை இருந்தது. கொள்ளைக்காரன் மனைவி தன் துணி மூட்டையைப் பிரித்து சாரதைக்கு 'மெத்தை' தயார் செய்தாள். அன்புக்

குக் கட்டுப்பட்ட சாரு அந்தத் துர்நாற்றத் துணிக் குவியலில் தனது களைத்த உடலைச் சாய்த்தாள்.

கொள்ளைக்காரன் எங்கிருந்தோ அவலும், வெல்லம் கலந்த பொரியும் சம்பாதித்து வந்தான்.

சாரதை அதனை உண்டாள், தேவாமுதமாகக் கருதி.

'' நல்லாத் தூங்கம்மா ! இங்கே திருட்டுப் பசங்க நடமாட்டம் சாஸ்தியாச்சேன்னு பயந்துட்டுத் தூக்கத்தைக் கெடுத்துக்காதே. நான் முளிச்சிட்டே உக்காந்திருந்து காவலிருக்கேன், ஆமாம்!'' என்றான், அன்று மாலை வரையில் பக்காத் திருடனாக இருந்தவன்.

நிச்சிந்தையாக நித்திரை கொண்டாள் சாரதை.

காலையில் எழுந்திருக்கையில் கால் வலி வெகுவாகக் குறைந்திருந்தது.

புதிய பெற்றோருடன் தாரகேசுவரத்துக்குப் பயணம் தொடங்கினாள்.

வழியிலே கொள்ளையன் மனைவி பச்சைப் பட்டாணிக் காய்களைப் பறித்து அதன் பருப்புக்களைச் சாரதையின் கையில் போட்டுக் கொண்டே வந்தாள். சாரதை பரம சந்தோஷமாக அதைக் கொரித்துக் கொண்டு நடந்தாள்.

எட்டு மணி சுமாருக்குத் தாரகேசுவரம் அடைந்தனர்.

''ராவுக்கே என் மவ முக்காப் பட்டினி கெடந்திச்சு. இண்ணிக்காவது வயிரார எதுனாச்சியும் கொணாருவியாம். முதல்லே கோயிலுக்கே போய்க் கும்பிடு. அப்புறம் சந்தைக்குப் போயி, அவலு, பொரி, பளம், கிளம் எல்லாம் வாங்கியா'' என்று பகடியை அனுப்பி வைத்தாள், அவன் மனைவி.

சாரதையுடன் 'துணை' வந்த கோஷ்டி அவளைக் கண்டு பிடித்தது. அவளை நல்லபடியாகக் கண்டதில் அவர்களுக்கு மிகவும் மகிழ்ச்சி. சாரதை அவர்களிடம் சிறிதும் மனத்தாங்கல் கொள்ளாமல் தன்னுடைய புதிய அம்மாவை அறிமுகம் செய்தாள்.

உலகனைத்தையும் தழுவ விருக்கும் சாரதையின் தாயொளி இந்தக் கள்வர்களின் இருளைத் துளைத்து விரட்டி விட்டது என்பதை சக யாத்திரிகர்கள் உணர்ந்திருப்பதற்கில்லை. ஆனாலும் இந்தப் பகடித் தம்பதி அவளைக் கண்ணும் கருத்துமாகக் காத்துத் தந்தது அவர்களுக்கு அதிசயமாகவே இருந்தது.

கள்வர்தலைவன் சாரதைக்கு உணவுப் பண்டங்கள் வாங்கி வந்தான். யாத்திரீகர்கள் சமையல் செய்தனர். பகடித் தம்பதி உள்பட அனைவரும் ஆனந்தமாகப் பகலுணவு கொண்டனர்.

பிரயாணம் தொடங்கியது. பகடித் தம்பதி விடை கேட்டனர்.

''ஊஹூம், நீங்க ரெண்டு பேரும் தக்ஷிணேசுவரத்துக்கு வரணும்'' என்றாள் சாரதை.

''இல்லேம்மா, இப்போ நாங்க வரத்துக்கில்லே. அப்புறம் எப்பனாச்சியும் நிச்சயமா வாரோம்'' என்றான் பகடி.

ஓர் இரவிலேயே ஒரு வாழ்நாள் முழுதும் பழகியது போன்ற வாஞ்சை அவர்களிடையே தழைத்தது.

கள்வனின் கன்னம் கண்ணீரில் நனைந்தது. அவன் மனைவி வாய் விட்டு அழுதாள். இளகிய நெஞ்சு கொண்ட சாரதையைப் பற்றிக் கேட்க வேண்டுமா?

பிரிய மனமின்றி அவளுடனேயே மேலும் சிறிது தூரம் நடந்தனர் அத் தம்பதி. பட்டாணிக்காய்களைப் பறித்து அவற்றின் பருப்புக்களை எடுத்து சாரதையின் முந்தானையில் முடிந்தாள் பகடிப் பெண்மணி. ''என் செல்ல மவளே ஸாரு! ராத்திரி சோறு துண்ணறச்சே இந்த அம்மாவை நெனைச்சுட்டு இந்தப் பட்டாணியும் சேர்த்துக்கோ'' என்று திக்கு முக்காடிக் கூறினாள்.

தக்ஷிணேசுவரத்துக்கு வருவதாக அவர்களிடமிருந்து உறுதி மொழி வாங்கிக் கொண்டு விடைபெற்றாள் சாரதை.

சொன்ன சொற்படியே செய்தனர் அந்தப் பகடித் தம்பதியர். 'மவளு'க்கும் 'மருமவப் புள்ளை'க்கும் 'பளம்-கிளம்' எல்லாம் வாங்கிக் கொண்டு தக்ஷிணேசுவரத்துக்குச் சென்றனர். சாரதையிடமிருந்து அவர்களைப் பற்றி அறிந்திருந்த ராமகிருஷ்ணர், அவள் சொன்னவாறே அவர்கள் மீது அன்பைக் கொட்டினார்.

அதன் பின் பலமுறை அவர்கள் தக்ஷிணேசுவரத்துக்கு வந்து போயினர்.

''என்னோட கொள்ளைக்கார அப்பா—அம்மா எவ்வளவு சூது வாதில்லாதவா தெரியுமா? நேர்மையிலும் அவா மகா உசத்தி. இருந்தாலும் இவா கூட இதுக்கு முன்னாடி கொலையும் கொள்ளையும் நடத்தி யிருக்காளேன்னு நினைக்கிற போதெல்லாம் எனக்கு விசித்திரமாயிருக்கும்'' என்று நம் அம்மா சொல்வதுண்டு. இதிலிருந்து என்ன தெரிகிறது? அவர்கள் சாரதையைக் கண்டதிலிருந்து, அவளிடம் நேயமுடன் நடந்து கொண்டது மட்டுமின்றித் தங்களது வழிப்பறித் தொழிலையே விட்டு விட்டார்கள் என்றாகிறதல்லவா?

சாரதையிடம் அவர்கள் அப்படி என்ன கண்டார்கள்?

அன்று அந்த அந்தி மயக்கத்திலே அவளது சுந்தர முகத்திலே அவர்கள்



என்ன கண்டார்கள்? அவர்கள் கண்டதென்ன என்று சாரதைக்குத் தெரியும். ஆயினும் ரகசியமாகவே வைத்திருந்தாள்! ஒருமுறை அவர்கள் தக்ஷிணேசுவரத்திலிருந்து விம்மியபடி விடைகொண்டபோது உடன் இருந்த பக்தர் ஒருவர் இந்த ரகசியத்தை அறிந்து வெளியே அவிழ்த்து விட்டிருக்கிறார்!

"என்னிடம் இத்தனை பாசம் வைக்கும்படி என்ன கண்டுட்டேள்? வனாந்தரத்திலே என்னைக் காப்பாத்தினேளேன்னு நான் உங்ககிட்ட பிரியம் வைக்கறது நியாயம். உங்களுக்கு எதனாலே எங்கிட்ட இத்தனை வாஞ்சை?" என்று அவர்களை வினவினாளாம் சாரு,

"உங்கிட்ட 'வான்க்ஷை' வெக்காம இருக்க முடியுமாங்காட்டியும்! உன் மொவத்திலே எங்கம்மா காளியாத்தாளையேன்னா பாத்தோம்? நீ எல்லாரையும் போல மனுஸ சன்மாவா என்ன?" என்று அத்தம்பதி ஒரு குரலில் பேசினர்.

"என் அன்புங்களே! அப்படியெல்லாம் சொல்லாதீங்க. எங்கிட்டவாவது, காளிமாதாவைப் பார்க்கறதாவது?" என்று மறுத்துப் பேசினாள் சாரதை.

"ஆங். அப்படீன்னா நாங்க பொய்யா பேசறோம்?" என்று ரோஷத்தோடு அந்தத் தம்பதியரும் மறுத்துப் பேசினர். "நாங்க நல்லாக் கண்ணைத் தொறந்துட்டுப் பாக்கச்சேயேதான் நீ காளி ஆயியா நிண்ணே! அதிலே ரவை கூட சந்தேகம் கெடையாது. ஆனா நாங்க கொலைகாரப் பாவிங்க, கொள்ளைக்காரப் பாதகங்க, அதனாலே எங்ககிட்ட ரெகஷியத்தை மறைக்கப் பாக்குறே!" என்றனர்.

நம் அம்மா சற்றும் பட்டுக்கொள்ளாமல் சொன்னாள்: "யாரு கண்டா? யாரு கண்டாளோ, காணல்லியோ, எனக்கு இதெல்லாம் லவலேசம்கூடத் தெரியக் காணோம்."

பகைவன் அவளுக்கு அருள் செய்தான் எனில், அதற்குக் காரணம் இவள் அந்தப் பகைவனுக்குச் செய்த பேரருள்தான்! அந்தப் பேரருளால் காளி மாதாவை அல்லவா தரிசித்திருக்கிறான்!

சாக்ஷாத் சகலதேவ சக்தியான பதினெண்கர மகாலக்ஷ்மி தனது அருள் நிறைந்த மதிமுகத்தைக் காட்டிய போதும் மகிஷாசுரன் மனம் மாறாமலே அவளுடன் போரிட்டான். மகிஷனுக்குக் கிடைக்காத அருள் பகடிக் கொள்ளைக்காரனுக்குக் கிட்டியது.

"கொள்ளைக்காரர்களின் தலைவனான பரமேசுவரனுக்கு நமஸ்காரம்; வஞ்சகனாகவும், படு வஞ்சகனாகவும், வஞ்சனையாகக் கொள்ளையிடுபவர்களின் தலைவனாகவும் உள்ள பரமேசுவரனுக்கு நமஸ்காரம்" என்று, அனைத்திலும் ஈசுவர ஸ்வரூபத்தைக் காணும் வேத மந்திரங்கள் உத்கோஷிக்கின்றன. சாரதையின் சரிதையில் இவளும் கொள்ளைக்காரனில் அப்பாவை — ஈசனைப் பார்க்கிறான். அவனும் இவளில் அம்மா — அம்பாளைப் பார்த்து நமஸ்கரிக்கிறான்!

> பாத்திரத்திலுள்ள நீர் பளிச்சிடுகிறது; மாகடலி நீரோ கறுத்துக் கிடக்கிறது. சிறிய உண்மைகளை வெளியிடத் தெளிவான வார்த்தைகள் உண்டு; மகா சத்தியங்களோ மோனத்திலேயே உள்ளன.
>
> — தாகூர்

தெலோ பெலோவின் பயங்கரக் காளியை அவன் வழிபட்டான். அந்த வழிபாட்டுக்கிரங்கி, அவளே அபயங்கரியான சாரதையாக வந்து அவனைக் காத்து விட்டாள்!

கருவேல மரத்தைச் சந்தன விருட்சமாக்கிய இந்தச் சம்பவத்தைப் பற்றி தேவி சாரதை அதிகம் குறிப்பிடவே மாட்டாள். காரணம் தன் மகிமையை ஒளிப்பது மட்டுமல்ல; இன்னொரு பரம கௌரவமான காரணமும் இருந்தது.

ஒரு முறை சலிப்புடன் நம் அம்மா சொன்னாள்: "இதைப் பத்திச் சும்மா எங்கிட்ட கேக்காதேள். ஏன்னா, அந்தச் சமயத்திலே லக்ஷ்மியும், சிபுவும் (சிவராமும்) என்னோட வந்தான்னு ரொம்பப் பேருக்குத் தெரியும். இந்த விருத்தாந்தத்தை நான் சொன்னா மத்தவாளைப் போல அவாளும் என்னைத் தன்னந்தனியா காட்டு வழியிலே விட்டுட்டுப் போனாளேன்னு உங்களுக்குத் தோணும். எது எப்படியானாலும் அவா என் குழந்தைகள். அந்தக் குழந்தைகளுக்கு அவமானம் சம்பாதிச்சுக் கொடுத்தா என் பிரபாவத்தைக் காட்டிக்கணும்?"

தன் பெருமையை ஒளித்தது போலவே பிறரது சிறுமையை ஒளிப்பதும் அவளுக்குச் சுபாவமல்லவா!

**கி**ராமத்தில் சுயேச்சையாக வாழ்ந்த சாரதை தக்ஷிணேசுவர நஹவத்துக்குள் சுயேச்சையாகச் சிறைப் பட்டாள்! ஆனால் சாரதை முடங்கிக் கிடப்பது சம்பு பாபுவின் மனைவிக்குப் பொறுக்கவொண்ணாத கஷ்டமாக இருந்தது. மங்களவாரம் தோறும் அவளைத் தன் இல்லத்துக்கு அழைத்துச் சென்று அவளது பாதத்தில் மலரிட்டு வணங்குவாள் ஸ்ரீமதி சம்பு பாபு.

நஹவத்தை விட 'விசாலமான ஒரு கூரை வீடு அமைத்து சாரதா தேவிக்குத்



> ஆத்திரம் கொள்பவனை அன்பால் வெல்வாய்; தீயவனை நன்மை காட்டி வெல்வாய்; பேராசை கொண்டவனைத் தயாளத்தால் வெல்வாய்; பொய்யனைச் சத்தியத்தால் வெல்வாய்.—புத்தர்

தர விரும்பினர் சம்பு பாபு. ஆலயத்தின் அண்மையிலேயே ஒரு மனைக்கட்டை இரு நூற்றைம்பது ரூபாய்க்கு வாங்கினர்.

ராமகிருஷ்ணரைக் குருநாதரென மதித்த காப்டன் விசுவநாத உபாத்தியாயருக்கு இவ்விஷயம் தெரிந்தது. பேலூரில் இருந்த நேபாள சர்க்கார் மரக் கிடங்கின் அதிகாரியாகிய அவர் சாரதையின் குடிலுக்கான மரம் முழுவதையும் தாமே வழங்குவதாக முன்வந்தார். தக்ஷிணேசுவரத்துக்கு எதிர்க் கரையில் இருந்தது பேலூர் மரக் கிடங்கு. நீரோட்டத்தின் திசை சாதகமாக இருந்தபோது மூன்று பெரும் மரக்கட்டைகள் தக்ஷிணேசுவரத்துக்கு மிதக்க விடப்பட்டன. துரதிருஷ்டவசமாகச் சிறிது போதுக்குப் பிறகு வெள்ளத்தின் கதி மாறியது. இரண்டு கட்டைகள் மட்டுமே தக்ஷிணேசுவரத்துக்கு வந்து சேர்ந்தன. ஒன்று வேறெங்கோ அடித்துச் செல்லப்பட்டது.

''உங்களுடைய துர்ப்பாக்கியம்தான் எல்லா இடத்திலேயும் தொடர்ந்து வரது'' என்று சாரதையிடம் நறுக்கெனக் கூறினர் ஹ்ருதயர். 'சின்ன மாமி'க்கு விசேஷ அந்தஸ்து ஏற்பட்டு, தனி வீடு கிடைப்பது அவருக்கு ஆத்திரமூட்டியதால் அப்படிப் பேசினர். ''உங்களுக்கு உதவி செய்யறேன்னு வந்த தோஷம், சம்பு பாபுவுக்கு என்ன கெடுதல் வரப்போறதோ?'' என்று கடுமையாகக் கூறி சாரதையின் மனத்தைப் புண்படுத்தினர். சாகுருவி போல் ஹ்ருதயர் பேசியதாலோ என்னவோ அடுத்த ஆண்டே சம்புபாபு காலமாகி விட்டார்!

மனஸ்வியான காப்டன் உபாத்யாயா இன்னொரு கட்டை அனுப்பினர். சாரதைக்கெனக் கூரை வீடு எழும்பியது. வேலைக்காரப் பெண் ஒருத்தியுடன் தேவி அங்கு குடிபுகுந்தாள். ஹ்ருதயர் தம் மனைவியையும் அங்கே குடி ஏற்றினர். இதிலே அவருக்குச் சிறிது ஆறுதல்!

தினமும் சாரதை அந்தக் குடிசையில் ராமகிருஷ்ணருக்கு உணவு தயாரிப்பாள். அதை அவரது இருக்கைக்கு எடுத்துச் சென்று பரிமாறுவாள். சிறிது உரையாடிவிட்டுத் திரும்பி விடுவாள்.

ராமகிருஷ்ணரும் அவ்வப்போது அங்கு வந்து அவளது சௌக்கியத்தைக் கவனித்துக் கொள்வார். ஒரு நாள் மாலை அவர் அங்கு வந்த பின் கன மழை பொழியலாயிற்று. குடிலிலேயே உண்டுவிட்டுப் படுத்தார்.

எதையோ நினைத்துக் கொண்டு அவர் சிரித்துக் கொள்வதைக் கவனித்த தேவி, ''என்ன சிரிக்கிறேள்?'' என்றுள்.

''எல்லாக் காளி கோயில் பூஜாரிகளும் அன்றாட பூஜை ஆன அப்புறம் அகத்துக்குப் போய்ச் சாப்பிட்டுப் படுத்துப்பாளோன்னே? இன்னிக்கு ஒருநாள் நானும் அந்த மாதிரிக் கோயிலை விட்டுட்டு வந்து...'' விழுந்து விழுந்து சிரித்தார் ராமகிருஷ்ணர்.

ராமகிருஷ்ணருக்கு உக்கிரமான வயிற்றுக் கடுப்புக் கண்டது. சாரதை அவரிடமிருந்து விலகிக் குடிலில் வசிப்பது சாத்தியமாயிருக்கவில்லை. கண்டான் முண்டான்கள் நிரம்பிய நஹவத்தை மீண்டும் அவள் வசிப்பதற்கு லாயக்காக ஒழித்துவைக்கும் வரையில் எப்படி அவரை விட்டு இருக்கப் போகிறோம் என்று கலங்கினுள். கலக்கத்தைத் தீர்ப்பதற்கென்றே எங்கிருந்தோ வந்து குதித்தாள் ஒரு கிழவி. ''காசியிலிருந்து வருகிறேன்'' என்று மட்டுமே தன்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டாள். அவளது பூர்வோத்தரம் ஏதும் தெரியவில்லை. சர்வ சகஜமாக ராமகிருஷ்ணரின் மனத்தையும் உடற்போக்கையும் அநுசரித்து அவருக்குப் பணிவிடை புரியலானுள்.

''என்னதான் பணிவிடை பண்ணினுலும் உன்மாதிரி பண்ண என்னல் ஆகாதடி அம்மா. குடிசையைக் காலி பண்ணிண்டு நஹவத்துக்கே வந்து சேரு. நானும் என்னிடத்துக்குப் போய்ச் சேருகிறேன்'' என்றுள் சாரதையிடம்.

''எனக்கும் அப்படித்தான் உத்தேசம் பாட்டி. ஆனு ஹ்ருதயரோட ஆத்துக்காரி எப்படித் தனியா இருப்போ?''

''அதைப் பற்றி உனக்கென்ன கவலை? நீ இங்கே வந்து சேரு.''

சாரதை நஹவத்துக்கு மீண்டும் வந்துவிட்டாள்.

அன்றிரவு காசி நகரக் கிழவி சாரதையை ராமகிருஷ்ணரிடம் அழைத்துச் சென்றுள். தேவி மீனுக்ஷியை சோமசுந்தரேசுவரனுக்கு அளித்த காஞ்சனமாலையைப் போல, சாரதையை ராமகிருஷ்ணரின் முன் நிறுத்தினுள்.

ராமகிருஷ்ணரைப் பார்த்து ''அப்பனே, உன் முன்னடிக்கூட முக்காடு போட்டுண்டே இருக்கிற இந்த மோகனங்கியின் முக மண்டலத்தை இதோ பாரு'' என்று சொல்லிக் கொண்டே சாரதையின் தலைமீதிருந்த சேலையை விலக்கினுள் கிழவி. (தொடரும்)

பம்பாயில் நாற்பத்திரண்டு கொலைகளைப் புரிந்த
'ஸைக்கோ ஸாரநாதன்' போலீஸ் காவலிலிருந்து
தப்பிவந்து சேருமிடம். கொடைக்கானல்

டெபுடி இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆஃப் போலீஸ்
(ஸி.ஐ.டி.பிரிவு) நடராஜன் விடுமுறையை அமைதியாகக்
கழிக்க வந்து நிம்மதி இழந்து தவித்த ஊர்.. கொடைக்கானல்

பிரபல எழுத்தாளர் பத்மநாபன் தம் வாழ்நாளில் ஒரு முறை
யேனும் பணத்தைத் தண்ணீராகச் செலவழிக்க ஆசைப்
பட்டுத் தமது குடும்பத்தோடு வந்து சேருகிற
கோடை வாசஸ்தலம். கொடைக்கானல்

டி.ஐ.ஜி (ஸி.ஐ.டி) யின் மகன் ரங்கநாதன், எழுத்தாளர்
மகள் மீனுவிடம் தன் மனத்தைப் பறி கொடுத்த
காதல் பூமி.. கொடைக்கானல்

கள்ளக் கடத்தல் கனகசபை அந்நிய சரக்கான
ஏராளமான மது புட்டிகளுடன் கதகதப் பூட்ட வந்து
சேர்ந்த குளிர்ப் பிரதேசம்... கொடைக்கானல்

தம் மனைவியின் பட்டாம்பூச்சிப் போக்குப் பிடிக்காமல்
சாந்தியைத் தேடிவரும் தினகரனுக்குத் தற்கொலை
செய்து கொள்ளும் எண்ணத்தை
ஏற்படுத்துவது.. கொடைக்கானல்

பிரபல சினிமா நடிகை பிரமீளா ஓய்வுக்காக மலை
ஏறியதாக உலகம் நம்பிக் கொண்டிருக்க அவள் தன்
காதலனைக் கள்ளத் தனமாகச் சந்திக்க
வசதியளிப்பது... கொடைக்கானல்

வியாபாரத்தில் பாகஸ்தர்களான பரமசிவமும்
குருசாமியும் தங்கள் சச்சரவுகளைச் சுமுகமாகப் பேசித்
தீர்த்துக் கொள்ளக் கருதி வரும்போது அவர்களைப்
பயங்கரமான புதிய சிக்கல்களில்
தள்ளி விடுவது... கொடைக்கானல்

கி.ராஜேந்திரன் எழுதும்

# “ஸைக்கோ ஸாரநாதன்”

தொடர்கதை

கல்கி 5.3.1972 இதழில் ஆரம்பம்



# அம்மா

ரா. கணபதி

## 21. சாரதையின் சபதம்

"தாங்கள் என்னைத் திரஸ்காரம் செய்கிறீர்கள். மங்களமான அறிவு வாய்ந்த தாங்கள் ஒருகாலும் மனமொப்பி இவ்வாறு செய்யமாட்டீர்கள். இதில் ஐயமே இல்லை. என்னுடைய பூர்வஜன்ம பாவங்களே இப்படித் தாங்கவொண்ணாத இடியாக வந்திருக்கின்றன." - சீதாதேவி ஸ்ரீராமனுக்கு லக்ஷ்மணன் மூலம் சொல்லியனுப்பியது.

(ரகு வம்சம் 14.62)

நோயிலும் துயரிலும் காந்தி இழந்திருந்த சாரதையின் முகத்தில் திடீரென ஒரு ஜோதிப் பிரகாசம் வந்து மேவியது. ஸ்படிகத்தின் தெளிவும், மல்லிகையின் மணமும், பூர்ண சந்திரனின் தண்மையும் அந்தத் திவ்ய வதனத்திலிருந்து பெருக்கெடுத்தன.

கொடுங்கள்வனே காளிமாதாவை அம்முகத்தில் கண்டான் எனில், ராமகிருஷ்ணருக்குக் கேட்பானேன்? தன்னை ஒளித்துக்கொண்டே சாரதாவதாரம் செய்திருந்த தேவி, ஏதோ ஓர் அளப்பரிய உந்துதலின்மீது அவ்வப்போது தன்னைப் புலர்த்திக் கொண்டாள் போலும். அந்தப் புலர்ச்சி சாரதைக்கே தெரியாதது போலிருந்ததுதான் பேர் அதிசயம்! இப்போது சாரதையின் முகத்தில் ராமகிருஷ்ணர் தமது திவ்விய மாதாவையே முகமாகக் கண்டுவிட்டார். அதீத பரவசத்தில் ஆழ்ந்தார். தேவியின் சௌந்தரியத்தைப் பற்றிப் பேசத் தொடங்கினர். அழகு வெள்ளத்தைப் பற்றி அவரது வதனத்திலிருந்து வசன வெள்ளம் பெருகலாயிற்று. பேசினரோ, பேசினரோ, அப்படிப் பேசினர். அந்தத் தெய்விகப் பேச்சிலே கட்டுண்டு கிடந்தனர் சாரதையும், காசிக் கிழவியும்.

பேச்சு முடிந்தது; இரவும் முடிந்தது.

கிழவி காசிக்குப் புறப்பட்டு விட்டாள். காசியில் அவளது இருப்பிடத்தை விசாரித்துக் கொண்டாள் சாரதை.

பல வருடங்களுக்குப் பின் நம் அம்மா காசியம்பதிக்குச் சென்றபோது இந்த மூதாட்டியைச் சல்லடை போட்டுத் தேடினாள். ஆனால் அவள் கிடைக்கவில்லை. அவளது அடையாளங்களைச்

சொல்லி விசாரித்தபோது, அங்கு எவருக்குமே அப்படி ஒரு வியக்தியைத் தெரியவில்லை.

ராமகிருஷ்ணர் நோயுற்றபோது தருணமறிந்து எங்கிருந்தோ வந்து சுசுருஷை புரிந்து, வந்தது போலவே எங்கோ மறைந்த அந்தக் கிழவி யார்?

**ஹ்**ருதயரது ஊராகிய ஷியாடுக்குப் புறப்பட்டார் ராமகிருஷ்ணர். ஹ்ருதயர், சாரதாமணி இருவரும் அவருடன் சென்றனர். ஷியாடில் ஹ்ருதயரின் வீட்டில் நடந்த ஒரு பஜனையின்போது தான் பச்சைக் குழந்தை சாரு முதன் முதலாக ராமகிருஷ்ணரைக் கண்டு, 'அதோ என் அகத்துக்காரர்' என்று கைதூக்கிக் காட்டினள். ஆனல் ஏனே ஹ்ருதயருக்கு அவளைக் கண்டாலே ஆகவில்லை. தனக்கே பாத்தியமாக இருந்த 'மாமா'விடம் அவளுக்கு ஏற்பட்டு விட்ட நெருக்கம் ஹ்ருதயரின் இருதயத்தை நெருக்கி, அவளிடம் மாருத மனக் கசப்பை உண்டாக்கிவிட்டது. பைரவி பிராம்மணிக்கு அடுத்த வாரிசாக வந்து வாய்த்தார் ஹ்ருதயர். புலியையும் ஆட்டுக் குட்டியையும் சேர்த்து அழைத்துப் போவதே போல் இப்போது ஹ்ருதயரையும் சாருவையும் சேர்த்து அழைத்துச் சென்ருர் ராமகிருஷ்ணர். இந்த ஆட்டிடம் புலியின் ஜம்பம் சாயவே சாயாது ; அது தனது கோமளத்தாலேயே புலியின் கொடூரத்தை வென்றுவிடும் என்று அவரறிவார். அந்த வெற்றியைப் பார்த்துப் பூரிப்பதில் அவருக்குத் தனி ஆசை போலும்!

நீராவிப் படகு ராஜ ஹம்ஸமென கங்கையில் மிதக்க, பரமஹம்ஸ தம்பதியர் பரமஹிம்ஸை தரும் ஹ்ருதயருடன் பிரயாணம் தொடங்கினர்.

ஆடவர்கள் ஏறிக்கொண்டபின் நாண ராணி சாரதை தயங்கித் தயங்கிப் படகேறினள். "அம்மா, இப்போ நான் சொல்கிற பாடத்தைக் கவனமாகக் கேட்டுக்கோ. எங்கேயானும் போகிற சே நீதான் முதல்லே வண்டியிலே ஏறணும். இறங்கற சே நீதான் கடைசியில் இறங்கணும். எல்லா சாமானும் ஏற்றியாச்சான்னு கவனிச்சு, அதுகளை வாங்கி வண்டியிலே ஒழுங்குபடுத்தி வைக்கிறதுக்கும், அதேமாதிரி கடைசியிலே எல்லாத்தையும் இறக்கியாச்சான்னு பார்த்துக்கறத்துக்கும் இது தான் வழி" என்ருர் ராமகிருஷ்ணர்.

அப்பப்பா! அவர்தான் எத்தனை சிறிய—ஆனல் அரிய—பாடங்களை அவளுக்குப் புகட்டினர்!

நீராவிப் படகு நீந்தத் தொடங்கியது. 'மாமிக்கு ஸ்டீமர் பிரயாணமா?' என்று ஹ்ருதயருக்குத் தாங்கவில்லை. நீராவிப் படகைப் போலவே இவரும் ஆவி கக்கிக் கொண்டு வந்தார். படகு தன்னைக்



கிழித்துச் சென்றாலும் உடனுக்குடனே ஒரு சுவடுமின்றி அலையால் தன்னை மூடிக் கொள்ளும் தூய கங்கையாக வந்தாள் சகிப்பு ஸ்வரூபமான சாரதை. ஆனால் ராமகிருஷ்ணரின் மெல்லிய இதயத்தை ஹ்ருதயரின் கொடூரம் கிழிக்கத்தான் செய்தது.

மத்தகஜம் பிளிறுவதுபோல் குரல் கனன்று பேசினார் ராமகிருஷ்ணர்: ''அடேய், ஹ்ருது! நீ எனக்கு ரொம்பப் பிரியமானவன். இந்த நிமிஷம்கூட நீ என் பிரிய ஹ்ருதுதான். அதனாலேயே உன்னை எச்சரிக்கிறேன். கேட்டுக்கோ. (தமது சரீரத்தைத் தொட்டுக் காட்டி) இந்தக் கட்டையை நீ அவமதிக்கலாம். அதனாலே பரவாயில்லை. ஆனால் இவகிட்டே மட்டும் அந்த வேலை வெச்சுக் காதே. ஆமாம். (தம்மைத் தொட்டு) இதுக்குள்ளே இருக்கிற சக்தி தன் படத்தை விரிச்சுண்டு சீறினாலும், உனக்கு ஒரு வேளை கதி மோட்சம் கிடைக்கலாம்; ஆனா இவளுக்குள்ளே இருக்கிற சக்தி மட்டும் படமெடுத்து வந்தால், அப்புறம் பிரம்மா, விஷ்ணு, மஹேசுவராளாலேயும் உன்னைக் காப்பாத்த முடியாது.''

சாரதையின் மகிமை அப்படிப்பட்டது! தம்மை அவமதித்தாலும் காப்புக் கிடைக்கலாம் என்று அவர் சொன்னாரே, அப்படிக் காப்பது அவள்தான்! அவருக்கு ஒருவரிடம் சீற்றம் வந்தாலும் அதைத் தணிப்பவள் தேவிதான். அவளே சீறிவிட்டால்?

ராமகிருஷ்ணர் இப்படி ஆணி அறைந்ததுபோல் சொல்லியும் அது ஹ்ருதய ன் மனத்தில் புகவில்லை. ஒருவிதத்தில் அவர் ராமகிருஷ்ணரை விடவும் சாரதையை நன்கு அறிந்திருந்தார் எனலாம். அவள் சீறிவிட்டால் விமோசனமே இல்லை என ராமகிருஷ்ணர் கூறினார். ஹ்ருதயரோ அவள் ஒருகாலும் சீறவே மாட்டாள் என்பதாக அவ்வளது மகிமையை அதைவிடச் சிறப்பாக உணர்ந்திருந்தார் போலும்!

பந்தர் என்ற இடத்தில் ஸ்டீமர் பயணத்தை முடித்து, நாட்டுப் பரிசலில் ஏறி பாலி தேவாகன்ஜ் என்ற ஊரை அடைந்தனர். வைஷ்ணவர்கள் மிகுந்த அவ்வூரில் மோதக வகுப்பைச் சேர்ந்த ஒரு வியாபாரி இம்மூவருக்கும் விருந்தோம்பல் செய்தார்.

நல்ல மழை பிடித்துக் கொண்டது. அங்கிருந்து மூன்று நாட்களுக்குப் பிறகே அவர்கள் கிளம்ப முடிந்தது.

வியாபாரி நமது ஹம்ஸ தம்பதியை வணங்கி நாத் தழுதழுக்கச் சொன்னார்: ''புது வீடு கட்டினால் அதில் மூணு நாளாவது ஒரு மகானை அழைத்து வந்து தங்கச் செய்யணும்னு எனக்குச் சொல்லி முடியாத ஆசை. நீங்களாவே வந்து தங்கி அநுக்கிரகிச்சுட்டேள்.''

ஹ்ருதயரின் சொந்த ஊராகிய ஷியாடில் இவர்களது வருகை பக்தி வெள்ளத்தைப் புரளவிட்டது. சியாம் பஜாருக்குச் சென்று அங்கும் ஓர் அற்புத சங்கீர்த்தனம் நிகழ்த்தினார் ராமகிருஷ்ணர்.

பெண்ணும் மாப்பிள்ளையும் ஜயராம்பாடிக்குச் சேர்ந்து வந்ததும் சியாமசுந்தரியின் சந்தோஷம் கரை புரண்டது.

ஆனால் சாரதையோ, சியாமையோ ரொம்பவும் சந்தோஷப்பட்டுவிட்டால் அம்பாளுக்குப் பொறுக்காது போலும்! ஊர் வாயைக் கிளறிவிட்டாள்.

''தம்பதியா வந்திருக்கான்னு என்ன பெருமை வேண்டியிருக்கு? தம்பதினாலும் இதுகள் ஏகாங்கிகளாகத்தானே இருக்கு? இருந்தாலும் இந்த மாப்பிள்ளை சாருவை இப்படி வெச்சிருக்க வேண்டாம். ஒரு மங்கள காரியத்துக்கும் பிரயோஜனமில்லாத மலடியான்னா உன் பெண்ணை நிறுத்தியிருக்கார்?'' என்று கிராமப் பெண்டிர் சியாமையிடம் தொண தொணத்தனர்.

'மங்கள காரியத்துக்கே ஆகாதவள்' என்ற வார்த்தைகளை சாரதையும் கேட்டுவிட்டாள். 'சர்வ மங்கல மங்கல்யே' என்று பூஜித்து அவளை வணங்கிய ராமகிருஷ்ணரும் கேட்டுவிட்டார்.

சாரதையின் கண்களிலிருந்து முத்து முத்தாக நீர் உதிரலாயிற்று.

''இந்தப் பேச்சை, இந்த ஏச்சை எத்தனை தடவை இங்கேயும் காமார்புகுரிலும் கேட்டுட்டேன்?'' என்று சொல்லி விம்மினாள். சுய அநுதாபம் என்ற இழிதகைமைக்கு இழையளவும் இடம் தராத தேவி இப்படிப் பேசியது ராமகிருஷ்ணருக்கே வியப்பாயிருந்தது.

''இன்னமுமா இந்த வருத்தம்? அசடே! கவலைப்படாதே. தலையை வெட்டிண்டு தபஸ் இருந்தாக்கூட பெற முடியாத புத்திர ரத்தினங்களையாக்கும் உனக்காக நான் விட்டுட்டுப் போகப் போறேன். கடைசிலே 'அம்மா, அம்மா'ன்னு உன்னைக் கூப்பிட்டுண்டு வர கூட்டத்தைச் சமாளிக்கவே முடியாம திண்டாடப் போறே, பாரேன்'' என்று பன்னீராகப் பேசினார் பகவான்.

சியாமசுந்தரி மாப்பிள்ளையிடம் நேரே நின்று பேசமாட்டாள். மறைவில் புலம்பித் தள்ளினாள். ''ஊரார் ஏன் சொல்ல மாட்டா? எனக்கும்தான் இந்தப் பட்டு வயித்திலே ஒரு புழு நெளிஞ்சு பார்ப்போமான்னு ஆதங்கமாயிருக்கு. தலை விதி, இப்படி ஒரு பைத்திய மாப்

பிள்ளையைப் படைச்சுட்டேன். இந்தக் குழந்தை, தனக்கு என்று ஒரு குடித் தனமில்லாமல், 'அம்மா'ன்னு கூப்பிட ஒரு குரல் இல்லாம பட்ட மரமா நின்னுடுத்தே'' என்று ராமகிருஷ்ணர் காதுபட வாய்விட்டுச் சொன்னாள். 'அதி'யாகத்தான் பேசிவிட்டாள்!

ஆனால் மாப்பிள்ளை கொஞ்சமேனும் முறுக்கிக் கொள்ள வேண்டுமே! முறுவலோடேயே சியாமை முன் நின்றார். பதவிசான குரலில் சொன்னார்: ''மாமீ! வருத்தப்படாதேள். உங்க பெண்ணுக்கு ஏராளமான புத்திர சம்பத்து கிடைக்கத்தான் போறது. அப்புறம் ஒரு காலத்திலே 'அம்மா, அம்மா'ன்னு அவளைப் பிச்சுப் பிடுங்கற குரல்களுக்கு மத்தியிலே அவ திண்டாடப் போறா. அதையும் பார்க்கத்தான் போறேள்.''

சாரதையிடம் புத்திர ரத்தினங்களை அவளுக்கு **விட்டுச் செல்வதாகச்** சொன்னார்; இப்போது எதிர்காலத்தில் சாரதையை மக்கள் சூழுவதையும் மாமி மட்டுமே பார்க்கப் போகிறாள் என்று தொனிக்கப் பேசினார். அந்தத் திரிகால ஞானி தமது சரீர யாத்திரையின் முடிவைப் பற்றி அறியாரா?

நள்ளிரவு ஒன்றிலே ராமகிருஷ்ணர் ''பசி பசி'' என்று பதறினார்.

மகா பாவங்களில் உள்ள மகானின் சரீரத்துக்கு ஏற்படும் உணர்வுகளை யாராலும் புரிந்து கொள்ள முடியாது.

சாரதா தேவிக்கு வெட்கமாக இருந்தது. இரவு விருந்துண்ட கணவர் நள்ளிரவில் மீண்டும் உணவு கேட்பதால் தன் வீட்டார் அவரைப் பைத்தியமாகவே கருதிவிடுவரோ என்று அல்ல! அவரைப் பற்றி யார் என்ன கருதுகிறார்கள் என்பதில் அவளுக்குச் சிறிதும் கருத்தில்லை. அவள் வெட்கப்பட்டதற்குக் காரணம், ஒரு பிடி பழையமுது தவிர வீட்டில் ஏதுமே இல்லாததுதான்.

''கொஞ்சம் பொறுத்துக்கறேளா? நாலு அரிசி களைஞ்சு வெச்சிட்டு, ரெண்டு கறிகாயும் வேக விடறேன்'' என்றாள்.

''ஊஹூம், பொறுக்கவே முடியாது. இருக்கிற சாதத்தை இப்பவே கொண்டா'' என்றார் அவர்.

கூசிக் கொண்டே பழையதைப் பிழிந்து படைத்தாள் தேவி. ''நீங்க ஊறுகாய் போட்டுக்க மாட்டேள். தொட்டுக்க காய்கறி ஏதுமே இல்லையே'' என்றாள் கண் கலங்கி.

''போய் நன்னாப் பாரு. வாணலிலே ஏதாவது ஒட்டிண்டு இருந்தாக்கூடப் போதும்'' என்றார் ராமகிருஷ்ணர்.

> **அன்பு**
>
> அன்பே கடவுள். அன்பில் வாழ்பவன் கடவுளுக்குள் வாழ்கிறான். கடவுள் அவனுக்குள் வாழ்கிறார். - பைபிள்

என்ன ஆச்சரியம்! அவள் சமையற்கட்டில் போய்ப் பார்த்தபோது மெய்யாகவே வாணலியில் சிறிது பொரியல் இருந்தது. அதைக் கொணர்ந்து அவருக்குப் படைத்தாள்.

கண்ணன் திரௌபதியிடமிருந்து கீரைத் துவட்டலில் ஒரு துளி வாங்கி உண்டவுடன் தூர்வாசருக்கும் அவரது சிஷ்யகோடிகளுக்கும் வயிறு நிறைந்துவிட்டது என்று வியாசர் கூறுகிறார். ராமகிருஷ்ணர் இன்று உண்டது எவர் பொருட்டு என்பதைச் சொல்ல ஒரு வியாசர் இல்லையே!

ஜயராம்பாடியிலேயே சாரதையை விட்டு விட்டு ராமகிருஷ்ணர் காமார்புகூர் சென்று அதன்பின் தக்ஷிணேசுவர் திரும்பினார். பிற்கால விவேகாநந்தர், பிரம்மாநந்தர், சாரதாநந்தர் முதலியோர் ராமகிருஷ்ணரை வந்தடைந்து, அவர் திரட்டி வைத்திருந்த ஞான நிதியத்தை ஆர்ஜிதம் செய்து கொள்ளத் தொடங்கி விட்டனர். ராமகிருஷ்ணர் குருமகராஜ் எனவும், பரமஹம்ஸர் எனவும், டாகூர் எனவும் பெயர் கொண்டு சீடர் பலரது இதயங்களில் இடம் கொள்ளலானார். சீடர்களுக்காகவே ஏங்கித் தவித்துக் கொண்டிருந்த ராமகிருஷ்ணர் தம் ஞானம் அனைத்தையும் அவர்களிடம் இறைத்துப் பொழிந்துவிட்டு, மழை பெய்தபின் மறைந்தே போகும் முகிலாக ஆவதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்.

சிறிது காலத்துக்குப் பின் சாரதை தக்ஷிணேசுவரத்துக்கு வந்தாள். தனது தாயையும் தக்ஷிணேசுவரத்துக்கு அழைத்து வந்தாள்.

வருகிற வழியில் தாரகேசுவரத்திலே தன் முடியைக் களைந்து பகவானுக்குச் சமர்ப்பித்தாள் சாரதை. முன்பு அவள் சுகவீனமுற்றிருந்தபோது தாரகேசனுக்குக் கேசம் களைவதாக வேண்டிக் கொண்டிருந்ததால் இவ்விதம் செய்தாள். வங்காள வழக்கப்படி சிகையோடு நகங்களையும் வெட்டிப் போட்டாள்.

சாரதையையும், அதோடு மட்டுமின்றி சியாமையையும் கண்டவுடன் ஹ்ருதயருக்கு உண்டான கடுப்புக்கு எல்லையே இல்லை. 'சின்ன மாமி' தன்

குடும்பப் பட்டாளத்தையே தக்ஷிணேசு வரத்தில் குடியேற்றுவதாகக் கருதிக் கொதித்தார் ஹ்ருதயர்.

ராமகிருஷ்ணரின் அறைக்குள் அவர்கள் நுழைகையில், ஹ்ருதயர் வாய்விட்டு ''இதுகள் எதுக்காக இங்கே வந்திருக்காம்? இங்கே என்ன கொட்டி வெச்சிருக்குன்னு இப்போ வந்து சேர்ந்திருக்குகளாம்?'' என்றார்.

தன் ஊர்ப் பிள்ளை அப்படிப் பேசியது சியாமசுந்தரியை ஆட்டிவிட்டது. மாப்பிள்ளை வீட்டில் இப்படியா முதல் வரவேற்பு என்று வெதும்பினாள்.

''சரியப்பா, இதோ நான் போறேன். ஆனா இந்தப் பெண் இங்கே இருக்கலாமோன்னே? இவளை யார்கிட்டே விட்டுப் போவேன்?'' என்றாள் சியாமை.

ராமகிருஷ்ணரின் மனைவி என்று உலக ரீதியில் குடித்தனம் செய்யாவிட்டாலும், அவளுக்கு அவரோடு வசிக்கக் கூடவா உரிமை இல்லாமல் போய் விட்டது என்ற குமுறலோடு பேசினாள் சியாமை. ஹ்ருதயர் இத்தனை காட்டு மிராண்டித்தனமாக நடந்து கொண்ட போது, இதைப் பார்த்துக் கொண்டே ராமகிருஷ்ணரும் கல்லுப்போல் அமர்ந் திருந்ததால்தான் 'யாரிடம் விட்டுப் போவேன்' என்று அவள் கேட்டாள். அவர் தாலி கட்டிய மனைவியை வெருட்டுகிறான் ஒன்று விட்ட மருமான். அவர் வாய் மூடி அமர்ந்திருந்தது சியாமைக்கு ஆத்திர மூட்டியது.

அப்போதும் பேசவில்லை அந்த அதிசய மாப்பிள்ளை.

சாரதையின் நெஞ்சு நைந்தது. நான், எனது என்ற நினைப்பு முளைகூட விடாமல் அடங்கி ஒடுங்கி நடுங்கியே வாழ்ந்த தேவிக்கும் மானம் பீறிக் கொண்டு வந்தது. அவமானம், அபி மானம் இரண்டும் அறியாத சாரதை மன நோவிலேயே ஓர் அதிசய எழுச்சி கொண்டாள். பவதாரிணியின் ஆலயப் பக்கம் திரும்பிச் சபதம் போல் மொழிந் தாள் : ''என் அம்மா! நான் போறேன். நீயாக மறுபடி நான் இங்கே வரும்படியாகப் பண்ணினால்தான் இங்கே இனி கால் வைப்பேன்.''

அவள் ராமகிருஷ்ணரையோ, ஹ்ருதயரையோ தூற்றவில்லை. அனைத்தையும் ஆட்டுவிக்கும் அம்பாளையே அடைக் கலம் புகுந்து பேசினாள். இப்படிச் சொல்லிக் கொண்டே வேகமாக வெளி நடந்தாள் தேவி சாரதாமணி.

அப்போதும் வாய் திறக்கவில்லை, அவளது அதிசயக் கணவர்.

அந்த அதிசயக் கணவரது தமையன் மகன் ராம்லால் கங்கைக் கரையிலே படகு அமர்த்திக் கொடுத்து சாரதை ஊருக்கு 'சொஸ்த'மாகத் திரும்ப ஏற் பாடு செய்தான்!

எத்தனையோ கஷ்டத்துடன் பிர யாணம் செய்து தக்ஷிணேசுவரம் வந்த சாரதை, ஒரு முகூர்த்த காலம்கூட அங்கு இருக்கமாட்டாமல், அவமானத் துக்கும் அலட்சியத்துக்கும் ஆளாகித் திரும்புகிறாள்!

ராமகிருஷ்ணர் ஏன் இப்படி இடித்த புளியாக இருந்தார்? சாரதையும் சியாமையும் அங்கு அப்போது தங்கினால் ஹ்ருதயரின் வெஞ்சினம் கொண்ட வஞ்சனை நெஞ்சு அவர்களை மேலும் குரூரமாகப் பழி வாங்கும் என எண்ணி னாரோ! தாம் அவர்களுக்குச் சிறிதே ஆதரவு காட்டினாலும் ஹ்ருதயர் ராட் சதனாகி விடுவார் என நினைத்தாரோ? தமது அன்னை சந்திரமணி தேவி எதைக் கற்பனை செய்து கொண்டு பயந்தாளோ அது வாஸ்தவமாகவே நிகழ்ந்துவிடும் என எண்ணினாரோ? சந்திரமணி தேவி 'யும், பொறாமை பிடித்த ஹ்ருதயரின் கொடுமைக்கு ஆளாகித் தவித்தவள் தான். பொறாமைப் பிசாசின் ஆளுகைக் குள் விழுந்துவிட்ட ஹ்ருதயர் ராம கிருஷ்ணரையும், சாரதாமணியையும் கொலை செய்து விடக்கூடும் என்றே நடுநடுங்கியிருக்கிறாள் சந்திரமணி — இந்தத் தம்பதியின் புனிதமான இனிய தொடர்பைப் பார்த்த பின். அதெல் லாம் இப்போது ராமகிருஷ்ணருக்கு நினைவு வந்ததோ? ஹ்ருதயரும் சாரதை யும் ஒரே சமயத்தில் தக்ஷிணேசுவரத்தில் இருப்பது முடியாத காரியம் என்கிற அளவுக்கு முன்னவரின் சின்னத்தனம் முற்றிவிட்டது. திரிகால ஞானியான ராமகிருஷ்ணருக்கு ஹ்ருதயரின்

**விஷப் பூச்சியும் விஷ எண்ணமும்**

''ஒரு காரியத்தில் ஈடுபடும் போதாகிலும் மனம் அந்த ஒன்றிலேயே லயிக்கிறது. தியானம் செய்ய அமர்ந்தாலோ பல தீய எண்ணங்கள் எழுகின்றனவே!'' என்று அடியார் ஒருவர் கூறியபோது அன்னை ஆனந்தமயி சொன்னார்:

''என் அம்மா வாசலில் கோலம் போடும் போது சாண ஜலம் தெளிப்பாள். உடனே பூமி யின் அடியில் வளையிலிருந்து எறும்பும் பூச்சி களும் ஏராளமாக வெளி வரும். அந்தப் பூச்சிகள் சாண நீரால் புதிதாக உண்டாக்கப்பட வில்லை. ஏற்கெனவே உள்ளவையே வெளி வந் தன. சாண நெடி தாங்காமல் அவை ஓடிப் போகும், அல்லது சாகும். இவ்விதமே தியான சாதனையின் ஆரம்ப காலத்தில், பழைய உள் நினைவுகள் வெளியே ஓடி வருகின்றன. அதற் காக பயம் வேண்டாம். தியானத்தைத் தொடர்ந் தால் அந்த 'நெடி'யில் பழைய தீய நினைவுகள் அழிந்தே போகும்.''

தக்ஷிணேசுவர வாசம் எத்துணை நாள் நீடிக்கப் போகிறது என்பது தெரியாதா என்ன?

அடுத்த ஒருசில வாரங்களில் தக்ஷிணேசுவர ஆலயம் ஸ்தாபிதமான வருடாந்தர உற்சவம் வந்தது. அன்று ஹ்ருதயர் ஆலயம் எடுப்பித்த மூல புருஷரில் ஒருவரான காலஞ்சென்ற மதுர்பாபுவின் பேத்தியைக் கன்யா பூஜைக்குத் தேர்ந்தெடுத்து, அந்தச் சிறுமிக்குக் கௌரி பூஜை செய்தார். இதனால் மதுர்பாபுவின் புதல்வர் திரைலோக்யநாத் பெரிதும் மகிழ்ந்து தம்மை வெகுமானிப்பார் என்று எண்ணினார்.

ஆனால் நடந்தது முற்றிலும் வேறு! 'ராமகிருஷ்ணர் சமாசாரம் தனி. அவர் மனைவியைக் கூடப் பூஜிக்கலாம். இந்த ஹ்ருதே நம் மாதிரி ஒரு வெற்று ஆள். இவன் மீனவர் பெண்ணைப் பூஜிப்பதாவது? அக்கிரமமாக அல்லவா இருக்கு?' என்று கண்டனப் பேச்சே எழுந்தது.

திரைலோக்யநாத் துடிதுடித்தார். ஹ்ருதயர் செய்த பூஜையை ஏற்றால் தம் செல்வ மகளுக்கே உற்பாதம் ஏற்படக்கூடும் என்று அஞ்சினார்.

உடனுக்குடனே ஹ்ருதயரின் சீட்டைக் கிழித்தார்.

ராமகிருஷ்ணர் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் திரைலோக்யர் ஹ்ருதயரை மன்னித்திருப்பார்.

ஆனால் இப்போதும் வாய் திறக்கவில்லை அதிசய 'மாமா'!

கெடுவான் கேடு நினைப்பான் என்பது ஹ்ருதயர் விஷயத்தில் பிரத்யட்சமாயிற்று. தக்ஷிணேசுவரத்தை விட்டு நிரந்தரமாகப் போய்ச் சேர்ந்தார்.

பாசத்தினால் மோகமடைந்து மோசம் போன பைரவி பிராம்மணி, இறுமாப்பின் எல்லையில் இருந்து கொண்டே, பொய்யான சமத்துவத்தைக் காட்டிய உடனே இச்சரிதையிலிருந்து விடை பெற்றது நினைவிருக்கும். அதேபோல் செருக்குக் கொண்ட ஹ்ருதயரும் சூதான சமத்துவத்தைக் காட்டியவுடன் நம்மிடமிருந்து விடை பெறுவது அற்புதமான பொருத்தம் அல்லவா? ராமகிருஷ்ணரைப் போன்ற அவதார வரிஷ்டரின் பக்கலிலேயே இருந்தாலும் ஒருவருக்கு அகங்காரம் முளைத்து விட்டால் எத்துணை விபரீதமாகிறது என்பதற்கு பிராம்மணியும், ஹ்ருதயரும் இரண்டு உதாரணங்கள்.

ராமலால், ராமகிருஷ்ணரின் தமையனார் ராமேசுவரின் புதல்வன். ராமேசுவர் காலகதியடைந்தவுடன் ராமலால் தக்ஷிணேசுவரம் வந்து பூஜைக் காரியங்களில் உதவி புரிந்து வந்தான். இப்போது ஹ்ருதய் போனவுடன் அர்ச்சகனாகவே பதவி உயர்வு பெற்றான். ஆனால் சிறு வயதிலேயே காளியிடம் தம்மை ஒப்புவித்துக் கொண்ட சிற்றப்பா போல் அவன் இருக்கவில்லை. நேர்மாறாக இந்தப் பெரிய அந்தஸ்து கிடைத்ததில் அவனுக்குத் தலைக் கனம் மேலிட்டது. அந்த மயக்கத்திலே பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குப் பணிவிடை புரியும் புனிதக் கடமையையும் மறந்தான்.

பணிவிடை புரியும் விஷயத்தில் ஹ்ருதயர் இதய சுத்தமுடன் இருந்தவர். ராமகிருஷ்ணர் அடிக்கடி பாவ பரவசங்களில் மூழ்கிவிடுவார். அவரைத் தட்டி எழுப்பி யாரேனும் குளிப்பாட்டி, உணவூட்டி, சயனிக்கச் செய்தால்தான் உண்டு. அவரைக் கண்ணில் வைத்து இமையால் மூடிக் காத்த ஹ்ருதய், சாரதை இருவரும் இன்று அங்கில்லை. உறவு முறையால் நெருக்கம் கொண்ட ராமலாலைத் தவிர மற்ற சீடர்களுக்கும் பக்தர்களுக்கும் அவரிடம் சுவாதீனமாகப் பழக இன்னும் துணிவு வரவில்லை. ராமலாலோ அவரை எவ்வளவு அலட்சியம் செய்யலாமோ அவ்வளவும் செய்தான்.

ராமகிருஷ்ணருக்கு உடல்நிலை பாழாயிற்று. சரீர உணர்வு ஏற்பட்ட சமயங்களில் அந்த மகாபுருஷனும் அவதிப்படுவது போல் தோன்றியது. சாரதையைத் தாம் திரஸ்கரித்ததும் இப்போது அவரை உறுத்தியது போலும்! வெள்ளை உள்ளத்தினரான அவர் அதன் பின் தயங்கவில்லை. பிரதிக்ஞை செய்து போன சாரதைக்கு முன், கணவன் என்கிற தமது அந்தஸ்தை அவர் எண்ணவில்லை. தாமாகவே சாரதாமணிக்குத் தூது அனுப்பினார் ராமகிருஷ்ணர். ருக்மிணி துவாரகாதீசனை வருமாறு கோரி அந்தணரிடம் தூது சொல்லியது போல், லக்ஷ்மண் பாயின் என்பவர் மூலம் ராமகிருஷ்ணர் சாரதைக்குப் பின்வரும் செய்தி அனுப்பினார்:

''நான் இங்கே அவஸ்தைப் படுகிறேன். காளி மாதாவின் பூஜாரியானவுடன் ராம்லால் மற்ற பூஜாரிகளோடு சேர்ந்து விட்டான். என்னை அவன் முறைப்படி கவனித்துக் கொள்ளவில்லை. நீ வரத்தான் வேண்டும். டோலியோ பல்லக்கோ வைத்துக் கொண்டு வந்து சேர். அதற்கான செலவுகளை நான் ஏற்கிறேன் — பத்து அல்லது இருபது ரூபாய் ஆனாலும் கூட.''

அவதார புருஷன் நம் அம்பிகைக்கு அனுப்பிய செய்தி எத்தனை எளிமையாயிருக்கிறது!

**(தொடரும்)**

பசப்பினர். போதாத குறைக்கு ஜுனுப் பூட்டோவும் வந்து சேர்ந்தார். மாநில சுயாட்சி கொடுக்கப்படப் போகிறது என்று கூடச் செய்தி பறந்தது. ஆனல் இதெல்லாம் அடுத்து வரப் போகும் படுகொலைகளுக்குத் திரை. திடுதிப்பென்று மார்ச் மாதம் 23ந்தேதி யாஹ்யா இஸ்லாமாபாதுக்குப் பிரயாண மானர். 25ந் தேதி அவர் செய்த ரேடியோப் பிரசங்கத்தில் ஜுனுப் ரஹ்மான் தேசத் துரோகி என்றும் அவர் பாகிஸ்தானின் ஒற்றுமையைக் குலைக்கச் சதி செய்து வருகிருர் என்றும் குற்றம் சாட்டினர். இரு வாரங்கள் டாக்காவில் தங்கி ராணுவ முஸ்தீபுகளைச் செய்து முடித்த பின்னர் சமரச உடன்பாடு ஏது? அடுத்து நிகழ்ந்தது ஜுனுப் ரஹ்மானைச் சிறைப் பிடித்தல்.

விதி விளையாடிவிட்டது. இருபத்துமூன்று ஆண்டுகள் அவதிப்பட்ட மக்கள் பாகிஸ்தான் ராணுவத்தின் அட்டூழியங்களுக்கு ஆளாக வேண்டும் என்று ஆண்டவன் எழுதிவிட்டான் போலும்! எல்லாவிதத்திலும் பூரண பயிற்சி பெற்ற பாகிஸ்தான் ராணுவத்துக்கும் தேச பக்தியுடன் சிறுமை கண்டு கொதித்தெழுந்த மக்கள் சமூகத்துக்குமிடையே போர் மூண் டது. இதன் பலனை இந்தியா அனுபவிக்க வேண்டி வந்தது. (தொடரும்)

---




☐ எந்த வகை இந்தியத் தபால் தலைகள் இந்தியாவிலே பயன்படுத்தப்படாமல் இந்தியாவுக்கு வெளியே உபயோகப்படுத்தப்பட்டன?

1885–1860 ஆண்டுகளில் ஸ்டெரெய்ட்ஸ் செட்டில்மெண்டுகளில் சில தபால் தலைகளுக் குப் பற்ருக்குறை ஏற்பட்டபோது இந்தியத் தபால் தலைகள் பயன்படுத்தப்பட்டன.

☐ முதன் முதலில் நினைவுத் தபால் தலை வெளியிடப்பட்டது எந்தத் தேசத்தில்?

அமெரிக்கா முதன் முதலில் நினைவுத் தபால் தலை வெளியிட்டது. 1893 ஜனவரி 2ந் தேதி சிகாகோவில் கொலம்பியா கண்காட்சியை யொட்டி நினைவுத் தபால் தலை வந்தது.

☐ இந்தியத் தபால் தலை ஒன்றில் வெளியான தவறு திருத்தப்படவில்லை. அது எப்போது? திருத்தி வெளியான தபால் தலையும் உண்டு. அது என்ன?

1963ம் ஆண்டு அக்டோபர் 1ந் தேதி அன்னிபெஸண்ட் பதினைந்து பைசா நினைவுத் தபால் தலையில் 1837 என்று தப்பாக வருஷம் அச்சடிக்கப்பட்டிருந்தது. சரியான வருஷம் 1847.

புதைபொருள் இலாகா வரிசையில் 1949 ஆகஸ்டு 15ந் தேதி போதி சத்துவரின் சிலை உருவம் ஒரணு தபால் தலையில் தலைகீழாக அச்சடிக்கப்பட்டுவிட்டது. ஆனல் 1950 ஜுலை 15ந் தேதி அந்தப் போதி சத்துவரின் உருவம் சரியாகத் திருத்திவெளியிடப்பட்டது.

☐ 1937ம் ஆண்டு நிகாரகுவா தபால் தலையில் மத்திய அமெரிக்கா தேசப் படம் வரைந்திருந்தார் சித்திரக்காரர். தம் தேச மான நிகரகுவாவில் குவாடிமாலாவைச் சேர்ந்த ஒரு பகுதியையும் சேர்த்துக் கொண்டு விட்டார். இந்தத் தேசப் படம் பொறிக்கப் பட்ட தபால் தலை குவாடிமாலாவுக்குப் போனபோது கோபப்பட்ட மாணவர்கள் நிகர குவா தூதுவராலயத்தின் முன்னல் ஆர்ப்பாட் டம் செய்தனர். போராட்டம் குழப்பத்தில் முடிந்து பன்னிரண்டு பேர் அந்தக் குழப்பத் தில் உயிர் துறந்தனர். நூற்றுக்கணக்கான பேர் இந்தக் குழப்பத்தில் அடிபட்டனர். ஒரு தபால் தலை வெளியிட்டதில் விளைந்த விபரீதம் இது!

☐ ஜனதிபதி ரூஸ்வெல்ட் தபால் தலை சேக ரிப்பவர். தபால் தலைகளில் விழுந்த தபால் முத்திரைகளுக்குரிய ஊர்கள் எங்கிருக்கின்றன என்று அட்லாஸில் சரியாகப் பார்த்து வைத் துக் கொள்வாராம். இந்த மாதிரி பல இடங் களைத் தெரிந்து கொண்டது போரின்போது மிகவும் பயன்பட்டது. பசிபிக்கில் ஜப்பானிய ருக்கெதிராகப் போரிட அமெரிக்கத் துருப்புக் களை அனுப்பி வைக்கும் தீவைப் பற்றி ராணு வத் தலைவர்களுடனும் ஆஸ்திரேலிய, நியூஸி லந்து அதிகாரிகளுடனும் கலந்து ஆலோசித் துக் கொண்டிருந்தார். பசிபிக் தீவுகளுள் ஒரு தீவைச் சொன்னர் நியூஸிலந்து உதவிப் பிரதம மந்திரி. உடனே ரூஸ்வெல்ட் 'மாங்கரெவா' தீவு எதிரிகளைத் தாக்கக் கிட்டத்திலுள்ள சரியான தீவு என்று சொன்னர். அங்குள்ள அதிகாரிகளுக்கு 'மாங்கரெவா' எங்கிருக்கிறது என்றே தெரியவில்லை. தேசப் படத்தைக் கொணர்ந்து அந்தத் தீவைப் பற்றி ஆராய்ச்சி நடத்தினர்கள் அதிகாரிகள்.

அந்தச் சமயத்தில் ஜனதிபதி ரூஸ்வெல்ட் ''டாஹிட்டிய தபால் தலையில் மாங்கரெவா போஸ்ட் மார்க் இருந்தது. உடனே அந்தத் தீவைத் தேசப்படத்தில் வழக்கம் போல் பார்த்து வைத்தது இப்போது சரியான தரு ணத்தில் பயன்பட்டது!'' என்றர்.

☐ தென்னிந்திய தபால் தலை சேகரிப்போர் சங்கம் 'தபால் தலையில் மிருகங்கள்' சேகரித்த பம்பாய் டி. ஆர். மிஸ்திரிக்குத் தங்கப் பதக் கம் வழங்கியிருக்கிறது.

ஆதாரம்: தென்னிந்திய தபால் தலை சேகரிப் போர் கழக மலர். —குண்டுமணி



# அம்மா

VL

ராகணபதி

முந்திய ஆண்டு சாரதை அவமானத்தோடு தக்ஷிணேசுவரத்திலிருந்து பிறந்தகம் திரும்பினுள். அப்போது அவள் சபதமிட்டது ராமகிருஷ்ணருக்குத் தெரியாமலில்லை. அதற்காக இப்போது அவராக அவளுக்குத் தூது அனுப்புகையில் அவர் 'மன்னிப்பு' கேட்டு நாடகம்போடவில்லை. ஸ்வாதீன உரிமையோடும் அன்போடும் எழுதினர். தன்னைக் கவனிக்க ஆளில்லை என்றால் உடனே அவள் ஓடிவந்து விடுவாள் என்று அவருக்குத் தெரியும். என்றாலும் அப்படி வந்தால் அன்று அவள் காளியிடம் கேட்டுக்கொண்டது நிறைவேறாமல் அல்லவா போய்விடும்? 'நானாகத் திரும்புவதில்லை' என்றல்லவோ சபத மிட்டிருந்தாள்? அதனால் இப்போது ராமகிருஷ்ணர் தாமே அவளை 'நீ வரத்தான் வேண்டும்' என்கிறார். தம்மைத் தாழ்த்திக்கொண்டு அவளது சபதத்தைக் காக்கிறார். தாம் அழைத்து அவள் வருவதால் நடந்து வராமல் வாகனத்தில் வரவேண்டும், டோலியோ பல்லக்கோ வைத்துக் கொண்டு வரவேண்டும் என்கிறார். என்ன மரியாதைப் பண்பு பாருங்கள்! பரமேசுவரனுடன் மனம் பிணங்கியே சதிதேவி தக்ஷயக்ஞம் சென்றபோதுகூட சிவபெருமான் அவளைச் சிவிகை ஏற்றி அன்றோ அனுப்பி வைத்தார்? மாமியார் குடும்பத்துக்குத் திரவிய சகாயம் செய்திராத ராமகிருஷ்ணர், அவர்களுக்குத் தம்மால் செலவு ஏற்படுவதையும் அனுமதிக்கவில்லை. எனவேதான், காசு என்றாலே கூசும் ராமகிருஷ்ணர் சாரதையின் பயணச் செலவு எத்தனையானாலும் அதைத் தாமே ஏற்பதாகச் சொல்கிறார்.

ஏழெட்டு மாதங்களாக ஜயராம்பாடியில் மனம் குமைந்து அக்ஞாதவாஸம் செய்து கொண்டிருந்த சாரதை இந்தத் தூது கிடைத்தவுடன் பதறிக்கொண்டு புறப்பட்டு விட்டாள். தானாக, தக்ஷிணேசுவரம் செல்லாமல் தனது பிரதிக்ஞையைக் காளிமாதா நிறைவேற்றி விட்டாள் என்ற பெருமிதமா அவளுக்கு இப்போது இருந்தது? இல்லை. இம்மியும் இல்லை. நோய் வாய்ப்பட்ட கணவர் சகாயமில்லாமல்கஷ்டப்படுகிறாரே என்ற சிந்தனை அவள் மனத்தை நிரப்பியது.

எனவேதான், முன்பு ஜகத்தாத்ரி விசர்ஜனத்தை மங்களமான வியாழனன்று செய்யக் கூடாது என்று விதித்த சாரதை, இன்று வியாழக்கிழமையன்றே பிறந்தகத்தை விட்டுப் புறப்பட்டாள்.

ஆனால் சமூகத்துக்கு வழிகாட்டப் பிறந்த அவள் ஒரு நியதியை மீறினால் தேவி சும்மா இருப்பாளா? தன் கைவரிசையை அவள் காட்டத்தான் செய்தாள்!

அம்பிகை கைவரிசையைக் காட்டியது ராமகிருஷ்ணரின் கையில் வந்து விடிந்தது.

ராமகிருஷ்ணர் பாவ சமாதியில் குதித்தாடிக் கொண்டிருந்தார். அவர் நிலைதடுமாறி விழுந்து விடாமல் பார்த்துக் கொள்ள ஹ்ருதயரும் இல்லை, சாரதாமணியும் இல்லையல்லவா? நீள நெடுக விழுந்து விட்டார். இடது கையில் ஓர் எலும்பு பிசகிக் கொண்டது. ஓசை கேட்டு அங்கிருந்தோர் ஓடி வந்தனர். வலிக்கும் கையைப் பிடித்துக் கொண்டு ராமகிருஷ்ணர் அமர்ந்திருக்கும் போது, அவரது கைப் பிடித்த புண்ணியவதி வந்து சேர்ந்தாள்.

வந்தவுடன் வந்தனம் செய்தாள் பதிதேவருக்கு. இனிமை மிக்க உறவின் இடையிலே வந்த சிறிய உறுத்தல் அந்த வந்தனத்தோடு ஓடிப் போயிற்று!

''எப்போ புறப்பட்டே?'' என்று வினவினர் ராமகிருஷ்ணர்.

''வியாழக் கிழமை சாயங்காலம்'' என்றாள் தேவி.

''பார்த்தியா, அதுதான் இந்தக் கையிலே அடிபட்டதற்குக் காரணம். ஆத்திலே பிறந்த பெண் இப்படி குருவாரம் சாயரட்சையிலே கிளம்பப்படுமோ? சரி, திரும்பி ஊருக்கே போயிட்டு, ஒரு நல்ல நாள் பார்த்துண்டு மறுபடி வா'' என்று கூறினர் ராமகிருஷ்ணர்.

''சரின்னு, இப்பவே கிளம்பறேன்'' என்று தன்னுடைய எளிய துணி மூட்டையைத் தூக்கிக் கொண்டாள்.

சென்ற முறை அவள் தக்ஷிணேசுவரம் வந்த போதும் உடனுக்குடன் திரும்பும்படி ஆயிற்று. ஆனால் அப்போது வேதனையில் விண்டு விரிந்து கொண்டு

கிளம்பினாள். இப்போது அன்புக் கணவ ரின் அறிவுரைக்கு அடிபணிந்து தாபம் இல்லாமலே புறப்படுகிறாள்.

முன் தடவை அவள் சென்ற கசப்பான நினைவு ராமகிருஷ்ணருக்கும் ஏற்பட்டது போலும். ''அம்மாடி, நீ இப்பவே போகணும்னு இல்லை. இன்னிக்கு இங்கேயே சிரம பரிகாரம் பண்ணிக்கோ. நாளைக்குப் போ'' என்றார்.

அவ்விதமே சாரதாமணி மறு நாள் ஜயராம் பாடிக்குப் புறப்பட்டாள். நல்ல நாள் பார்த்துக் கொண்டு தக்ஷிணேசுவரத்துக்கு வந்து சேர்ந்தாள். இதன்பின் ராமலாலின் விவாகத்துக்காக ஒரே ஒரு முறை காமார்புகூர் போய் வந்தது தவிர ராம கிருஷ்ணரின் ஆயுள் முடிய அவள் அவருடனேயே இருந்தாள்.

மாமியார், மூத்த ஓரகத்தி, பைரவி பிராம்மணி, ஹ்ருதயர் என்றிப்படி யாரேனும் ஒருவரின் கட்டுப் பாட்டின் கீழேயே இதுவரை கணவரின் இருப் பிடத்தில் இருந்து வந்த சாரதை இப்போது தன் னைத் தானே கட்டுப்படுத்திக் கொண்டு வாழ்ந்தாள்.

அமைதியாக வாழ்ந்தாள்; அமைதி என்பதால் அதில் ஜீவ களை இல்லாமலில்லை.



கட்டுக்கோப்பாக வாழ்ந்தாள். அதனால் அதில் சுதந்திர சௌக்கியம் இல்லாமலில்லை.

பளிங்குபோல் வாழ்ந்தாள், தூய்மை பளிச்சிட்டாலும் அந்த வாழ்வில் கண்ணைக் கூச ஏதுமில்லை.

# 22. அம்மா ஆகிருள்!

கன்னித் தாயானய்!
மகனுக்கே மகளானய்!
சின்னவளாய் எளியவளாய்!
சீரார் உன்னதங்களுமாய்
மன்னுயிர் அனைத்தினிலும்
மேம்பட்டாய், மேதக்காய்!
பின்னமற்ற சத்தியத்தின்
சங்கற்பம் சார்ந்துநின்ருய்!

காணுதற்கரிய மேல்நிலையில்
மேவிய நீ
மானுட இயல்புக்குள்
மிளிர்வித்த மகிமைகளின்
மாண்பு கண்டே மலைத்து, மங்கை,
நினைப் படைத்தபிரான்
தானும் உன் திருக்கரத்தில்
தயங்காமல் சேயானன்!

[—தாந்தே: பாரடிஸோ: 33]

தக்ஷிணேசுவரத்திலே தேவி அநுசரித்த தினசரி நடவடிக்கைகள் அற்புதமில்லாமலே அற்புதமானவை. அவற்றை சாங்கோபாங்கமாகப் படிக்கும்போது, நம் அம்மாவுடனேயே நாம் வாழுவது போலிருக்கிறது!

சரியாக மூன்று மணிக்கு விழித்துக் கொண்டு விடுவாள் தேவி. அப்போது தான் நிம்மதியாக ஒன்றரை மணி ஜபம் புரிந்துவிட்டு, மற்ற வேலைகளை அவள் கவனிக்க முடியும். மூன்று மணிக்கு எழுவதில் அம்மா ரொம்பக் கரூர். ஏனெனில், ஆரம்பத்தில் ஒரே ஒரு நாள் விட்டுக் கொடுத்ததில், மறுநாளும் சோம்பிப் படுத்திருக்கத் தோன்றியதால் 'உனக்காச்சு, எனக்காச்சு' என்று அன்றிலிருந்து மூன்று மணிக்கே விழித்துக் கொள்ளலானுள்.

ஏராளமான பண்டங்களின் அடைசலோடு மிக மிகக் குறுகலாக இருந்த நஹவத் அடியறை ஜபம் செய்வதற்குச் சிறிதும் உகந்த இடமல்ல. எனவே, வெளியே வந்து படியருகே அமர்ந்து ஜப யோகத்தில் தன்னை மறப்பாள்.

ராமகிருஷ்ணரும் புலருவதற்கு நீண்ட நேரம் முன்பே தோப்புக்குச் செல்வது வழக்கம். அப்போது ஒரு நாள், பகற்போதுகளில் அறையை விட்டு வெளியிலேயே வராத தேவி படியருகே சிலையாக அமர்ந்து ஜபித்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அகலமாகச் சிவப்புக் கரை போட்ட அவளது சேலை முந்தாணி முகத்திலிருந்து நழுவி விழுந்து கூடத் தெரியாமல் அந்தப் படி தாண்டாப் பத்தினி படி தாண்டி வந்து ஜபிப்பது கண்டு சிரித்துக் கொண்டார்!

காலை நாலரை மணிக்குள் கங்கையில் நீராடி விட்டுத் தேவி நஹவத்துக்குள் புகுந்துவிட்டால் அதன்பின் அவளை பரபுருஷர் யாருமே பார்க்க முடியாது. மாடிப் படிக்குக் கீழே சின்னஞ் சிறிய இடத்தில் தனது பென்னம் பெரிய குடும்பத்துக்காகத் தன்னந் தனியளாகச் சமைப்பாளோ, சமைப்பாளோ அப்படிச் சமைப்பாள்!

ஆம், பெரிய குடும்பம்தான். ராமகிருஷ்ணரின் முக்கியமான சீடர்கள் யாவரும் — பிரம்மசாரி சீடர்கள், கிருஹஸ்த சீடர்கள் யாவரும் — தக்ஷிணேசுவரத்துக்கு வரத் தொடங்கி விட்டார்கள். அவர்களுக்கெல்லாம் உணவு தயாரிக்க வேண்டும். அவரவர்களுக்குப் பிடித்த உணவைப் பார்த்துப் பார்த்துச் சமைப்பாள். பிற்காலத்தில் பிரம்மாநந்தராக ஆவதற்கு இருந்த ராகாலுக்குக் கிச்சுடியில் மிகுந்த விருப்பம்; விவேகாநந்தராகப் பரிணமித்த நரேனுக்குப் பருமனுகவும், அதே சமயத்தில் உள்ளே குழல் குழலாக நன்கு வெந்துமுள்ள சப்பாத்தியிலும், பயத்தம் பருப்புக் கூட்டிலும் அலாதி இஷ்டம்; ராம் தத்தாவுக்கு மெல்லிய சப்பாத்தி பிடிக்கும். இப்படி அவரவருக்கும் பிடித்தமானதாகப் பார்த்துச் சமைப்பாள். ''சாதாரணமாக ஒரு நாளைக்கு மூன்று பெரிய படி கோதுமை மாவு பிசைந்து சப்பாத்தி செய்வேன்'' என்று பிற்காலத்தில் அன்னை சொல்லியிருப்பதிலிருந்தே, அன்னம், லுசி (அப்பம்), மற்ற வியஞ்சனங்கள் எவ்வளவு செய்திருப்பாள் என ஊகிக்கலாம். ராமகிருஷ்ணரின் மிருதுவான குடலுக்கேற்ப அன்றன்றும் கவனத்துடன் உணவு தயாரிப்பதுடன், இப்படிச் சீடர்களுக்கும் சமைப்பதென்ருல் சாரதை தவிர வேறெவரும் முகத்தைச் சுளித்துக் கொண்டுதான் இருப்பர். ஆனல் அவளோ முகம் மலர்ந்து, மனம் அலர்ந்து சமைத்தாளோ, சமைத்தாளோ அப்படிச் சமைத்தாள்!

இந்த மலர்ச்சிக்குக் காரணம் இருந்தது. மகத்தான காரணம் அது. அந்தச் சீடர்கள் ராமகிருஷ்ணரை குரு மகராஜ் என்றும், டாகூர் என்றும்

# புதுமையின் பொலிவுக்கு
# ஹமாம்




நாள்தோறும் ஹமாம் தேய்த்துக் குளியுங்கள். ஹமாம் தரும் நறுமணமுள்ள நுரை உங்கள் சருமத்தை சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது. உங்கள் மேனிக்கு கவர்ச்சியான மெருகையும் ஊட்டுகிறது. நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.

**அதிக காலம் நீடித்துழைக்கும் டாய்லெட் சோப்**

டாடா
தயாரிப்பு

CMTH-14-203 TAM

பரமஹம்ஸர் என்றும் அழைத்ததோடு நிற்கவில்லை. **அவர்கள் சாரதையை அம்மா என்று அழைத்தனர்.** ராமகிருஷ்ணருக்கு அவர்கள் சீடர்கள், பக்தர்கள் பணியாட்கள். சாரதைக்கோ அவர்கள் புத்திரர்கள், புத்திரர்கள், புத்திரர்கள் மட்டுமே.

அவர்கள் அம்மா என்று அழைத்தது அவளது சதைக்குள்ளே, தசைக்குள்ளே, ரத்தத்துக்குள்ளே, சித்தத்துக்குள்ளே, எலும்புக்குள்ளே, இதயத்துக்குள்ளே ஊடுருவிச் சென்றது.

'நான் அம்மா.... ஆஹா, கடைசியில் நான் அம்மாவாகவே இருக்கிறேன். எல்லா அம்மாக்களையும் போல அல்ல. பக்தியும், ஞானமும் கொண்ட அற்புதக் குழந்தைகளுக்கு அம்மாவாக இருக்கிறேன்' என்ற நிறைவிலே சாரதைக்கு வேறெந்த சிரமம் தெரியப் போகிறது?

ராமகிருஷ்ணர் அவளுக்கு இந்த அம்மாத் தன்மையை உணர்த்தியது அதியழகு! தமது சீடர்களை அவர் அவளுக்கு அறிமுகம் செய்கிற பாங்கும், அதன்பின் அவர்கள் பழகிக் கொள்கிற கிரமத்தை அவர் வகுத்துத் தந்த முறைமையும் அற்புதமானவை. சாரதைக்குத் தாம் வாக்குக் கொடுத்தபடியே அவளுக்கு மக்களை ஸ்வீகரித்துத் தந்தார். அவளை அவளாக ஆக்கினார். மந்திரோபதேசத்தாலும், ஞானோபதேசத்தாலும், வாழ்க்கை முறைகளைப் போதித்ததாலும் அவர் அவளைப் பூரண அவளாக்கி விட்டதாகச் சொல்ல முடியவில்லை. இந்தக் குழந்தைகளை அவளுக்குத் தந்தபோதே அவ்ளைப் பூரண அவளாக ஆக்கினார்.

பூரணு எனப்பட்ட ஒரு பாலசீடனை அவர் அவளுக்கு அறிமுகம் செய்து வைத்த ஓர் உதாரணமே போதும்!

அந்தப் பிள்ளையைச் சாரதையின் முன்பு கொண்டு வந்து நிறுத்தினார் ராமகிருஷ்ணர். ''இவனுக்குச் சந்தனம் பூசு, ஹாரம் போடு, வயிறார விருந்து போடு'' என்றார்.

அவனுக்குச் சந்தனம் பூசியபோது, பிள்ளைச் சுமை அறியாமல் தகித்துக் கொண்டிருந்த சாரதையின் உதரம் சில்லெனக் குளிர்ந்து பூரித்தது.

அவனுக்கு மாலை போட்டபோது, மொட்டுக்கள் கட்டியிருந்த மாதா தத்துவம் சாரதையின் உயிருக்குள் மலர்களாக விகசித்தன.

அவனுக்கு நானாவித உணவு வகைகளைப் படைத்து, அவன் மகிழ்ச்சியுடன் உண்ணக் காணும்போது, சாரதை தன் அன்பின் அறுவடையை உயிர் புடைக்க உண்கிற ஆனந்தம் கண்டாள்.

ராமகிருஷ்ணர் இதையெல்லாம் கண்டு உள்ளுக்குள் உருகிக் கொண்டே நஹவத்துக்கும் தமது அறைக்குமாக உலவியபடியிருந்தார். அவ்வப்போது அவளிடம் வந்து பூரணனுக்குச் செய்ய வேண்டிய சின்னச் சின்ன — ஆனால் பொருள் பொதிந்த — உபசாரங்களை எடுத்துச் சொல்லுவார். அவளுக்குப் பிற்பாடு குறையே இருக்கக்கூடாது என்பதில் அவருக்கு அத்தனை கரிசனம்!

அம்மாவாக ஆவதற்கு அவாவினாள் சாரதை. ஆனால் அம்மாவாக எப்படி இருந்து காட்டுவது என்பதிலும் அவளுக்கும் அவரே பாடம் சொல்லித் தர வேண்டியிருந்தது!

பூரணன் கைகழுவப் போனான். ராமகிருஷ்ணரின் உந்தல் இன்றியே, பாவனையில் மட்டுமின்றி, செய்கையிலும் பூரண அம்மாவாகி விட்ட சாரதை, செம்பிலே நீரெடுத்து அவன் கையில் வார்த்தாள். அவன் வாய் கொப்புளிக்க நீர் வார்த்தாள்.

நம் தேசத்தில் குருமார்களும், குருபத்தினிகளும் தங்களது சீடர்களைப் போற்றி வளர்த்த அருமையை உபநிஷத காலத்திலிருந்து பார்க்கிறோம். ஆனாலும் இந்த குருவைப் போல், குருபத்தினி போல் இத்தனை அன்புமயமாக வேறு எவரேனும் இருந்திருப்பரா? இவர்கள் சீடர்களை மக்களாக மட்டுமா பார்த்தார்கள்? அவர்களை நாராயண ஸ்வரூபமாகவும் பார்த்து, அவர்களுக்கே தாங்கள் மக்கள் போலவும் அல்லவா ஒரொரு சமயங்களில் நடந்திருக்கின்றனர்? பூரணனுக்கு அவர்கள் செய்த உபசாரம் பரிபூரணனுக்கே செய்த பூஜையாகவே தோன்றுகிறது!

ராகாலுக்குக் கல்யாணமாகி அவர் புதுமணப் பெண்ணை தக்ஷிணேசுவரத்துக்கு அழைத்து வந்தார். ''மாமியார் மாட்டுப் பெண்ணை முதல் தடவை பார்க்கச்சே ரூபா கொடுக்கறது சம்பிரதாயம். அவளை (சாரதை) ஒரு ரூபாய் கொடுத்துட்டு இந்தப் புது மாட்டுப் பெண்ணைப் பார்க்கச் சொல்'' என்றார் ராமகிருஷ்ணர். வியக்தமாகப் பிள்ளை—மருமகள் உறவு சொல்லப்படுகிறது!

ராமகிருஷ்ணர் தமது பக்தர் குழாத்துடன் அவளுக்கு நிலைத்த உறவு ஏற்படுத்துவதில் மிகுந்த அக்கறை காட்டினார். உதாரணமாக, கல்கத்தாவில் பலராம் பாபுவின் மனைவிக்குக் கடுமையான காய்ச்சல் கண்டபோது, சாரதையிடம் ''நீ இப்போதே அவளைப் போய்ப் பார்த்து வா'' என்றார். தக்ஷிணேசுவரத்திலிருந்து அந்த வீடு ஐந்து மைல்களுக்கு மேலிருந்தது. சாரதைக்கு நடப்பது ஒரு பொருட்டல்ல. ஆனால் ஆனைப்

பட்ட டாகூரின் பத்தினி—அதுவும் பர்தா முறை அநுசரிக்கும் கோஷாப் பெண் மணி — ஒரு மாநகரின் நடுவீதியில் நடந்து சென்று வருவது யுக்தமாக இராது எனக் கருதினாள். ''வண்டி ஏதாவது வரட்டும், அப்புறம் போறேன்'' என்றாள். ''வண்டியாவது, இன்னொண்ணுவது? என் பலராம் வீட்டிலே ஒரு கஷ்டம் வந்திருக்கச்சே இதை யெல்லாமா கவனிக்கிறது? நடந்து போ'' என்றார் அவர். நல்லவேளையாக அருகில் இருந்த அடியார் ஒருவர் பல்லக்குத் தேடிப்பிடித்துக் கொணர்ந்தார்.

சாரதை சீடர்களிடம் நடந்து கொள்ள வேண்டிய முறையில் கண்டிப்புக் காட்டிய ராமகிருஷ்ணர், அதே கண்டிப்பைச் சீடர்களிடமும் காட்டி, அவர்கள் சாரதைக்குச் செய்ய வேண்டிய பணிகளை அறிவுறுத்தினார்.

ஒரு திருஷ்டாந்தம். சாரதை ஒரு குன்று கோதுமை மாவைப் பிசைய மாட்டாமல் பிசைந்து கொண்டிருக்கிறாள் நஹவத்திலே. சற்றுத் தள்ளி லாடு என்கிற பையன் தியானம் செய்கிறான். லாடுவைத் தியானத்திலிருந்து கிளப்புகிறார் ராமகிருஷ்ணர். ''எலே! அங்கே அம்மா அவஸ்தைப் பட்டுண்டிருக்கா. இப்போதான் உனக்குத் தியானம் வேண்டிக் கிடந்ததாக்கும். நஹவத்துக்குப் போய்க் கூடமாட கைங்கரியம் பண்ணு'' என்றார்.

நல்ல மாட்டுக்கு ஒரு சூடு என்பது போல், லாடு அன்றிலிருந்து ஒண்டிக்காரியான சாரதாவுக்குச் சகாயம் செய்யலானான். ராமகிருஷ்ணரின் தமையன் மகள் லக்ஷ்மியும் ஓரளவு உதவி செய்தாள். லக்ஷ்மிக்குப் பன்னிரண்டாவது வயதில் திருமணம் நடந்தது. அடுத்த ஆண்டே துரதிருஷ்டவசமாக அவள் கணவன் போன இடம் தெரியாமல் எங்கோ வெளியேறி விட்டான். அதன் பின் தக்ஷிணேசுவரத்துக்கு வந்து விட்ட லக்ஷ்மி சாரதைக்கு ஓரளவு ஒத்தாசை செய்ததோடு பிராண சகியாகவும் இருந்தாள்.

ராமகிருஷ்ணரை நாடிவந்த யோகின்—மா, கோலாப்—மா, கௌரி—மா போன்ற பெண்மணிகளும் இதே போல் சாரதையிடம் நெருக்கம் கொண்டனர். பரதேவதையின் இரு முக்கிய சேடியரான ஜயாவும், விஜயாவுமே சாரதை அவதாரத்திலே யோகின்—மா கோலாப்—மா என வந்தனர் என்று அடியார்கள் கூறுவர். ராமகிருஷ்ணரைப் போல் அவளும் அனைவருடைய அன்புக்கும் பாத்திரமாகி, அவரைப் போலவே அனைவரிடமும் அன்பைப் பொழிந்தாள். இச்சரிதத்தைத் தொடரும்போது, 'அவரைப்போல' என்னாமல் 'அவரைக் காட்டிலும்' என்றே தயங்காமல் சொல்வீர்கள்! அவர்களுக்கும் ராமகிருஷ்ணரை விடச் சாரதையிடமே அதிக அன்பு பெருகிற்று என்று கூறலாம். ராமகிருஷ்ணர் இவ்விஷயத்தை வியக்தமாகவே வெளிக் கொணடு வந்திருக்கிறார். ஒரு நாள் சாரதையை வைத்துக் கொண்டே கௌரி மாவிடம் அவர் பட்டவர்த்தனமாகக் கேட்டார்: ''கௌர்தாஸி! எங்கள் இருவரில் உனக்கு யாரிடம் அதிகப் பிரியம்?''

கௌரி—மா மிகவும் புத்திசாலினி. எனவே நேரிடையாக வசன நடையில் பதில் சொல்லி இந்த உயரிய விஷயத்தைச் சாமானியமாக்கி விடாமல், ஒரு பழம் பாடலைப் பாடினாள்:

**அரியகுழலோனே! உன் அன்புரு ராதைக்கு நீ**
**பெரியவனே புகல்வாய் ! தெரிய இல்லோம் யாமே!**
**வேதனையில் மக்கள் ''மதுசூதன'' என்றழைப்பர்;**
**வேதனையுற்ற நீயோ, ''காதலி ராதே'' என்பாய்!**

ராமகிருஷ்ணர் வேடிக்கை போல் சிரித்துக் கொண்டே பெரிய கேள்வியைப் போட்டார். கௌரியம்மாளும் வேடிக்கை போல் சிரித்துக் கொண்டே பெரிய விடையைப் பாடி விட்டாள்!

எல்லையில்லாத வெட்கம் கொண்ட சாரதை, கௌரி மாவின் கையைப் பிடித்து அழுத்தினாள்.

''ஊம், அபஜயத்தை நானாக வாங்கிக் கட்டிக் கொண்டேன்'' என்று கூறிக் கொண்டே பொன்னகையுடன் நகர்ந்தார் ராமகிருஷ்ணர்.

'எங்கள் இருவரில் யாரிடம் அதிகப் பிரியம்?' என்று கௌரியம்மாளிடம் கேட்டது போலவே, 'எங்கள் இருவரில் யாருக்கு அதிக தேஜஸ்?' என்று ஒரு முறை அவர் சாரதையிடம் கேட்டார்.

**ஆசைக்கும் அளவு வேண்டும்**

உலக சுக சாதனங்களைப் பெருக்கி சந்தோஷம் ஏற்படுத்துவது பற்றி இப்போது நிறைய பேசப்படுகிறது. இது ஜனங்களின் ஆசையைப் பெருக்குவதேயாகிறது. ஆசை பெருகுவது மனக்கலக்கத்தை அதிகரிப்பதேயாகும். இதன் விளைவாக உலகிலுள்ள சகல வஸ்துக்களும் கிடைத்தாலும் போதாது என்று ஜனங்கள் நினைக்கிற நிலை ஏற்படும். சுக சாதனங்களைப் பெருக்கிக் கொள்கிற முயற்சிக்கு முடிவே இராது. எனவே மனக்கலக்கமும் நிரவே தீராது. சாந்தியாக இருக்கவேண்டுமானால், முதலில் 'இவ்வளவு போதும்' என்று நம் தேவைகளுக்கு எல்லை வகுத்துக் கொள்ள வேண்டும். நாம் இங்கிருந்து கடைசியில் புறப்படுகையில் ஒன்றுமே நம்மோடு வரப்போவதில்லை என்று தெரிகிறபோது, உலக வஸ்துக்களுக்கு இவ்வளவுதான் பாடுபடுவது என்று ஒரு வியவஸ்தை வைத்துகொள்ள வேண்டாமோ?

- ஸ்ரீசந்திரசேகர பாரதி ஸ்வாமிகள்

> கடவுள் எல்லா இடங்களிலும் வெளிப்பட முடிவதில்லையாம்; எனவேதான், அம்மா என்பவளைச் சிருஷ்டி செய்தார்.
>
> -யூதப் பழமொழி

அவருக்குப் பக்கத்திலே நின்றார் பக்தர் ஒருவர். அவரையும் தம்மையும் சேர்த்துத்தான் 'எங்கள் இருவர்' என்றார்.

அக்காலத்தில் ராமகிருஷ்ணர் ஸ்வர்ண விக்கிரகமாக விளங்கினார். அவர் கையிலே யாரோ தங்கத் தாயத்துக் கட்டியிருந்தார்களாம். அந்தத் தங்கத்துக்கும் அவரது சருமத்துக்கும் மாறுபாடே தெரியாது. அந்தப் பொன்னார்மேனியரின் சீடர்களுள் மேலே குறிப்பிட்ட மனிதர் நல்ல சிவப்பு. ராமகிருஷ்ணர் குழந்தைபோல் அனைவரிடமும் 'எங்கள் இருவரில் யாருக்கு அதிக தேஜஸ்?' என்று கேட்டார். எல்லோரும் ராமகிருஷ்ணருக்கே 'வோட்'டுப் போட்டனர். அவர் ''சாரதைதான் சரியான மத்தியஸ்தம் செய்வாள்'' என்று அவளிடம் வந்தார் — மண்டன மிச்ரர் ஆதிசங்கரருடன் வாதம் நடத்தியபோது, சரஸ்வதியின் பூர்வ அவதாரமான தமது மனைவி சரஸவாணியை மத்தியஸ்தம் வைத்ததுபோல்.

காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு அல்லவா? நம் அம்மா சாரதையின் கண்களுக்குச் சீடரே அதிக தேஜஸ் வியாகத் தெரிந்தார்! ''உங்களை விட அவருக்குத்தான் தேஜஸ் அதிகம்'' என்று சொன்னாள்! அவள் சொல்லவில்லை. அன்னையன்பு சொல்லிற்று!

அவளுள் இருந்த அன்னையை வெளிப்படுத்தியதுபோலவே அவளில் ஒளிந்திருந்த அநுக்கிரக சக்தியையும் வெளிப்படுத்தினார் ராமகிருஷ்ணர். ஓர் உதாரணம்:

காளிபாத கோஷ் துன்மார்க்கத்தில் ஆழ்ந்து விட்டார். குடும்பம் சர்வ நாசமாகாமல் அவரை மீட்டுத் தர வேண்டுமென ராமகிருஷ்ணரிடம் வந்து முறையிட்டாள் ஸ்ரீமதி கோஷ். அசட்டுத்தனமாக ''எனக்கு ஏதேனும் வசிய மந்திரம் சொல்லித் தாருங்கள்'' என்று வேண்டிக் கொண்டாள்.

அந்த வார்த்தையைக் கேட்டதுமே புண்ணியமூர்த்தியின் உடல் அருவருத்துக் கூசியது. காருண்ய மூர்த்தியன்றோ அவர்? உடனே தம்மைச் சமாளித்துக்கொண்டு, ஹாஸ்யம்போல் தோன்றும் தமது இயல்பான உயர்நிலைக்குத் திரும்பினார்.

''ஆத்துக்காரரை வசியம் பண்ணணும், அவ்வளவுதானே? எங்கிட்ட உபாயம் கேட்டு என்ன பிரயோஜனம்? என்னை வசியம் பண்ணி வச்சிருக்காளே, அந்த நஹவத்—அம்மாதான் வசிய மந்திரத்திலே நிபுணி. அவளிடம் போய்க் கேளுங்கோ!'' என்றார்.

பூஜை முடித்து, ஒரே கருணை வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்த சாரதையிடம் வந்து தன் பிரார்த்தனையைத் தெரிவித்தாள் கோஷின் மனைவி.

அவளிடம் மிகுந்த பரிவும் பரிதாபமும் சாரதைக்கு உண்டாயின. ஆனாலும் அவளுக்கு வசிய மந்திரம் ஏதும் தெரியாதே! 'துன்புற்று வந்த இந்தக் குழந்தையிடம் டாகூருக்கு என்ன விளையாட்டு வேண்டிக் கிடந்தது? வசிய மந்திரம் என்றில்லாவிடினும் அவளுக்கு ஞானம் உண்டாகும்படியான மந்திரம் எதையாவது அவர் உபதேசித்திருக்கக் கூடாதா?' என்று எண்ணினாள்.

''குழந்தே! எனக்கொண்ணும் மந்திரம் தெரியல்லே! டாகூர் கிட்டயே திரும்பிப் போய் முறையிடு! அவர் உன்னைக் காப்பாத்துவார்'' என்றாள்.

அவரோ இன்னும் குறும்பை முடிப்பதாக இல்லை. ''நஹவத்—அம்மா எப்பவுமே இப்படித்தான் பிசுக்காரம் பண்ணிக்குவா. நீ விடாதே. அந்த அம்மாவையே கெட்டியாகப் பிடிச்சுக்கோ. என் வார்த்தையை நம்பு. வசியம் பண்ணறத்துலே என்னைவிட அவளுக்குத் தான் ஜாஸ்தி ஸித்தி'' என்றார்.

கோஷின் பேதை மனைவி மீண்டும் சாரதையிடம் வந்து நின்றாள்.

சாரதையின் தாய் மனசு கரைந்து உருகிற்று. இந்த மனசு கரைந்துவிட்டபின், சர்வத்துக்கும் தாயாக ஒருத்தி இருக்கிறாளே, அந்தத் தாயின் மனசு மட்டுமே நின்றது. வழக்கத்துக்கு மாறான எழுச்சி கொண்டாள் சாரதை. பூஜையின்போது தான் அர்ச்சித்திருந்த ஒரு வில்வ பத்திரத்தை எடுத்து கோஷின் மனைவியிடம் கொடுத்தாள். ''குழந்தாய், இதை வீட்டுக்கு எடுத்துண்டு போ! உன் ஆசை பூர்த்தி ஆயிடும்'' என்றாள்.

சாரதையை மகிழ்ச்சியுடன் வணங்கி, வில்வ இலையுடன் வீடு சென்றாள் ஸ்ரீமதி கோஷ்.

அன்றிலிருந்தே காளிபாதரின் மனப்போக்கு மாறத் தொடங்கி விட்டது! நாளாவட்டத்தில் அவர் சன்மார்க்கத்துக்குத் திரும்பி விட்டார். ராமகிருஷ்ணரின் மெய்யடியார் ஆனார்.

இந்த நிகழ்ச்சி மூலம்தான் சாரதை தனக்கு அநுக்கிரக சக்தி என்பதாக ஒன்று இருக்கிறது என்பதையே அறிந்து கொண்டாள். [தொடரும்]




ASP/G/C-4

# உங்கள் உடலுக்குத் தேவை 23 ஊட்டச் சத்துக்கள்



பாலிலே உள்ளவை 9






## காம்ப்ளான் 23 சத்துக்-களும் கொண்டது

(புரதம், வைட்டமின்கள், தாதுப்பொருள்கள் உள்பட)

**காம்ப்ளானில் உள்ள 23 சத்துக்களும் அவை உங்களுக்கு அளிக்கும் நலன்களும்**

| | |
|---|---|
| புரதம் | திசுக்களையும் ஜீவ அணுக்களையும் வளர்க்கவும் சரி செய்யவும் இன்றியமையாதது. |
| லிபிட்ஸ் | ஆற்றலின் அடர்ந்த உறைவிடம் |
| கார்போஹைட்ரேட் | உடல் ஆற்றலுடன் இயங்க |
| கால்ஷியம் | ஆரோக்கியமான பற்களையும் எலும்புகளையும் வளர்க்கிறது. |
| பாஸ்பரஸ் | உடல் திரவங்கள், எலும்புகள் மற்றும் பற்களுக்கு |
| ஸோடியம் | சாதாரண இரத்த ஓட்டத்திற்கு |
| குளோரைடு (ஸி! ஆக) | நசை இயக்கத்திற்கு அவசியமானது பிடிப்புக்களைத் தடுக்கிறது |
| பொட்டாஷியம் | இதன் பற்றுக்குறை மனநோயையும் தசைத் தளர்ச்சியையும் அளிக்கும் |
| இரும்புச் சத்து | ஆரோக்கியமான இரத்தத்திற்கு |
| அயோடின் | தைராய்டு சமனத்திற்கு அவசியமானது. பற்றுக்குறை நேர்ந்தால், எடைப் பிரச்னையும், கோய்ட்டரேயும் நேரலாம் |
| வைட்டமின் ஏ | கண்கள் மற்றும் எபிதிகல் திசுக்களை ஆரோக்கியமாக வைக்கிறது |
| வைட்டமின் பி-1 | வளர்ச்சிக்கும், வலிமையான நரம்புகளுக்கும், பெரி-பெரி நோயைத்தடுப்பதற்கும் தேவை |
| ரிபோஃப்ளேவின் | ஆரோக்கியமான வாய், நாக்கு உதடுகள் கண்கள் முதலியவற்றிற்கு |
| நிகோடினமைடு | சருமம் ஆரோக்கியமாகவும் பொலிவுடனும் திகழ |
| கால்ஷியம் பெந்தோதினேட் | நரம்புகளையும், தசைகளையும் இறுக்கமாக்குகிறது |
| கோலீன் | ஆரோக்கியமான ஈரல் இயக்கத்திற்கு |
| பெரிடாக்ஸைன் (பி6) | தசைகளுக்கு இதமளிக்கிறது |
| வைட்டமின் பி 12 | இரத்த சோகையை எதிர்க்கிறது |
| ஃபோலிக் அமிலம் | புதிய இரத்த அணுக்களை உருவாக்குகிறது |
| வைட்டமின் ஸி | நோய் எதிர்ப்புச் சக்தியை அளிக்கிறது ஸ்கர்விநோயைத் தடுக்கிறது |
| வைட்டமின் டி | வலிமையான எலும்புகளுக்கும் பற்களுக்கும் |
| வைட்டமின் இ | ஜீவ உற்பத்திக்கு |
| வைட்டமின் கே | சாதாரண இரத்தக் கட்டுக்கு |
| டிரேஸ் எலிமென்ட்ஸ் | வைட்டமின்களின் உபயோகத்தை உடல் நன்கு பெறவும் ஆரோக்கியமான சுரப்பிகளின் இயக்கத்திற்கும் இன்றியமையாதது |

ஊட்டச் சத்துப் பற்றுக்குறை உங்களுக்குக் கேடு விளைவிக்கக் கூடும். காம்ப்ளான் ஒரு முழுமையான உணவு—சிறந்த துணை உணவு-முழுமையான மாற்றுணவு.

காம்ப்ளானை நீரில் கரைக்கவும். நீங்கள் விரும்பினாலொழிய பால் சேர்க்கத் தேவையில்லை. ஏனெனில், காம்ப்ளானில் ஏடு நீக்கிய பால் ஏற்கனவே சேர்க்கப் பட்டுள்ளது. ப்ளெயின் காம்ப்ளானை உங்களுக்கு விருப்பமான காபி, வனிலா, கேசர் முதலியவற்றோடு கலந்து பருகுங்கள் (ஆரஞ்சு அல்லது எலுமிச்சை சாற்றோடு கலக்காதீர்கள்.)

காம்ப்ளான் எளிதில் சீரணிக்கக்கூடியது. அதுவளரும் குழந்தைகள், சுறுசுறுப்பாக இயங்கும் பெரியவர்கள், சூலுற்ற பெண்மணிகள், பாலூட்டும் தாய்மார்கள் முதியவர்கள் மற்றும் விளையாட்டு வீரர்களுக்குச் சிறந்தது.

நோயாளிகளுக்கும் பிணியாறி வருபவர்களுக்கும் அது உன்னதமான திரவ உணவு.

காம்ப்ளான் பருகும் பழக்கத்தைமேற்கொண்டு, சத்துப் பற்றுக் குறைகளிலிருந்து உங்கள் உடலுக்குப் பாதுகாப்பளியுங்கள்.




250 கிராம் காம்ப்ளான் ஹேண்டி பேக்

500 கிராம் காம்ப்ளான் எகானமி பேக்

250 கிராம் காம்ப்ளான் வாழைப்பழச் சுவை

# காம்ப்ளான்® — முழுமையான உணவு

**சத்துப் பற்றுக்குறைகளிலிருந்து உங்களைப் பாதுகாக்கிறது.**

**க்ளாக்ஸோ** ஆராய்ச்சியின் உலகறிந்த தயாரிப்பு.

3-12-3

# அன்னை

ரா. கணபதி

## 23. அகத்திலும் அடக்கம், புறத்திலும் அடக்கம்

''நான் தேவத் தன்மை பெற்றது எப்படித் தெரியுமா? நான் காஷாயம் உடுத்தவில்லை. மரவுரி போர்த்தவில்லை. தலையை மழுக்கிக் கொண்டோ, அல்லது ஜடை வளர்த்தோ துறவிக் கோலம் போடவில்லை. நான் தெய்வத்தன்மை பெறுவதற்காகச் செய்ததெல்லாம் இதுதான்: என் கணவருக்கு வேண்டாத சொல்லை நான் பேசியதில்லை; அவருக்கு வேண்டாத செயலை நான் செய்ததில்லை. தேவர்களுக்கும் பிதிரர்களுக்கும் முறைப்படி கடமை செய்தேன். மாமனார் மாமியாருக்கு அடங்கி நடந்தேன். நான் கோள் சொன்னதில்லை. நிற்கத் தகாத இடத்தில் நின்றதில்லை. அதிகம் பேசியதில்லை. தவறாகச் சிரித்ததில்லை. இந்தத் தர்ம மார்க்கத்தைச் சிரத்தையுடன் பின்பற்றும் எவளும் அருந்ததியின் அருகில் வைத்து ஆராதிக்கப்படுவாள்.''

— மகாபாரத அநுசாஸன பர்வத்தில் சாண்டிலி எனும் பதிவிரதை.

சாரதை மந்திரம் என்று எதுவும் போடவில்லை. ஆயினும் அவள் அளித்த வில்வ பத்திரம் காளிபாத கோஷின் நடத்தையையே மாற்றி விட்டது! அவரை மனைவிக்கு 'வச'மாக்கி விட்டது! சாரதையின் 'வசிய' சக்தியைப் பற்றி இங்கே சிறிது கவனிக்கலாம்.

ஒரு நாள் அவள் தாம்பூலச் சுருள் தயாரித்துக் கொண்டிருக்கையில் ஏலம், கிராம்பு, ஜாதிபத்திரி முதலிய வாசனைப் பொருள்கள் மிகக் குறைவாக இருக்கக் கண்டாள். எனவே சில வற்றில் மட்டுமே வாசனைப் பொருள்களை வைத்து மடித்தாள். இதைக் கவனித்தாள் யோகின்—மா.

''ஏன் இப்படி இரண்டு தினுசாகப் பீடா செய்கிறீர்கள்? இருக்கிற வாசனைத் திரவியங்களை நிரவி எல்லாத்திலேயும் வைக்கப் படாதோ?'' என்று சாரதையைக் கேட்டாள் யோகின்.

''யோகேன், வாசனை போட்ட பீடா இங்கே வர பக்தாளுக்கு. சின்னச் சின்ன விஷயத்திலேகூட அன்பும் அக்கறையும் காட்டி அவாளை என்னுடையவாளா ஆக்கிக்கணும். அதனால்தான் இருக்கிற அத்தனை வாசனைத் திரவியத்தையும் அவாளுக்கே பகிர்ந்து வச்சுடறேன். வெறும் பீடா இருக்கே. அது டாகூருக்கு. அவர்தான் ஏற்கனவே என்னவர் ஆச்சே!'' என்று அற்புதமாகப் பதில் சொன்னாள் அம்மா.

அன்பின் சக்தியே அவளது வசிய மந்திரமாக இருந்தது. 'மந்திரம்' என்று சொல்லப்படும் அட்சரத் தொகைகளைக் கொண்டும் அற்புதம் செய்யலாம். ஆனால் அன்பினால் மட்டுமின்றி, சுய லாபத்துக்காகவும் இந்த அக்ஷரபூர்வமான மந்திரங்களைப் பயன் செய்து கொள்ளலாம். பூரண அன்பு வந்து விட்டால், அப்புறம் எந்த மந்திரமும் வேண்டாம்! மந்திரம் போடாமலே எந்த அநுக்கிரகமும் செய்து விடலாம். நமது சிறிய மனசு இருக்கிற வரையில் அதில் சுய ஆசைகளும் எழும்பும். எனவே பூரண அன்பு செலுத்த முடியாது. இந்த மனசை ஸ்வாதீனம் செய்து கொண்டு விசுவ மனசில் கரைந்து விட்டால் பூரண அன்பு தானே வந்து விடும். மணி, மந்திரம் இல்லாமலே அது எந்த அற்புதமும் செய்து விடும். இப்படித்தான் சொல்கிறார் ஸ்ரீ தியாகையர், 'மனசு ஸ்வாதீனமை' என்கிற கிருதியில்.

ஒருவரைத் தவறான வழியிலும் செலுத்தக்கூடிய ஹேதுவுடைய மந்திர சக்திக்கும், ஒருகாலும் தவற்றுக்கு ஆட்படுத்திவிடாத அன்பின் சக்திக்கும் உள்ள வித்தியாசத்தைச் சாரதையின் மூலம் நிரூபித்திருக்கிறார் ராமகிருஷ்ணர்.

ஒரு நாள் ராமகிருஷ்ணர் கை கழுவுவதற்கு நீர் ஊற்றிக் கொண்டிருந்தாள், யோகின்—மா.

கொப்புளிக்கும்போது அவரது நெஞ்சிலே ஒரு நமைச்சல் உண்டாயிற்று.

''பொன்னுக்கு வீங்கி வரும் போல இருக்கு. யோகேன், இதைக் குணப்படுத்தற மந்திரம் உனக்குத் தெரியுமே? அதை ஜபியேன்'' என்றார்.

'தனக்கு அந்த மந்திரம் தெரியும் என்று அவருக்கு எப்படித் தெரிந்தது?' யோகின் மா வியந்தாள். அதைப்பற்றி அவரிடம் கேட்டால் விடை கிடைக்காது என்று அவளுக்குத் தெரியும். மந்திரத்தை ஜபித்தாள்.

பிறகு சாரதையிடம் வந்து ''எனக்கு இந்த மந்திரம் தெரியும்னு அவருக்கு எப்படித் தெரியும்?'' என்று வினவினாள்.

அம்மா இளநகை பூத்தாள். ''அன்பே! அவருக்கு எல்லாரைப் பத்தியும் எல்லாமும் தெரியும். ஆனாலும் யார் கிட்டேயும் அவருக்குக் கோபம்

வந்ததில்லே. குறிப்பா ஒருத்தருக்கு எண்ணம் நல்லதா யிருந்தா, அவா எதைச் செஞ்சாலும் அதை அவர் ஆட்சேபிக்கவோ, கோபிக்கவோ மாட்டார். பயப்படாதே யோகேன்! எனக்கும் கூட இந்த மந்திரம் தெரியும். கிராமத்திலே இருக்கச்சே கத்துண்டேன். அவர், 'இதிலே தீங்கு ஒண்ணும் இல்லே. ஆனுலும் உனக்கு எதுக்கு இதெல்லாம்? இஷ்ட தெய்வத்தின் காலிலே அதைச் சமர்ப்பணம் பண்ணி சமாப்தி ஆக்கிடு'ன்னுர். அப்படியே பண்ணிட்டேன்.''

மந்திர சக்தியால் வியாதி முதலியவற்றைத் தீர்ப்பதும்கூட மிக உயர்ந்த நிலேயில் உள்ளவர்களுக்கு அவ்வளவாக உகாத விஷயம் என்று தெளிவாகிறதல்லவா? ஆயினும் ஞானத்துக்கு மட்டுமே உதவும் விஷயங்களில் மந்திர ஜபத்தின் மூலம் சீடர்களுக்கு அநுக்கிரகம் தருமாறு சாரதையை ராமகிருஷ்ணரே ஊக்கியிருக்கிருர்.

சாரதா பிரஸன்னு என்ற சீடப் பையன் அவரிடம் மந்திரோபதேசம் கோரினன்.

''எலே, அம்மாவைக் கேளுடா! அசாத்தியமா அநுக்கிரகம் பண்ணுவா'' என்ருர் அவர்.

நஹவத்தில் அடைந்து கிடந்த அந்த அம்மாவுக்கு அவ்வளவு ஆற்றல் உண்டு என்று சாரதா பிரஸன்னுவுக்குத் தோன்றவில்லே. தயங்கி நின்ருன்.

ராமகிருஷ்ணர் பிரஸன்னுவின் முகத்தைப் பார்த்துப் பிரஸன்ன முகத்துடன் பாடினர்:

**ராதையின் மாயா சக்திக்(கு)எல்லே**
**பேதையர் அறிவோமா ?**
**கோடி கண்ணனே் ராமனேப் பெற்று**
**கோடி கண்ணனே ராமனே வளர்த்து**



கோடி கண்ணனை ராமனைக் கரைத்த ஈடில் ஆற்றல் அதுவன்றோ?

அந்த ஈடில்லாத ஆற்றல் அன்பு தந்த ஆற்றலேயாம். அந்த ஆற்றலால்தான் தேவி சாரதை காலை மணி மூன்றிலிருந்து இரவு பன்னிரண்டு மணி வரையில், அலுப்பின்றி, சலிப்பின்றி, கசப்பின்றி, கடுப்பின்றி உழைத்தாள்.

ஐந்து மணிக்குள் ஸ்நானம், ஜபத்தை முடித்துவிட்டு நஹவத் மாடிக்குக் கீழே சமையலைத் தொடங்கி விடுவாள். சமையல் இடத்துக்கும் சாமான் உள்ளுக்குமாக அலையும்போது, ஆரம்ப காலத்தில் அங்குள்ள தாழ்ந்த வாசற்படியில் எத்தனையோ முறை முட்டிக் கொண்டிருக்கிறாள்!

சமையல் முடிந்த பின் கணவரின் அறையில் ஆடவர் நடமாட்டம் இல்லாமலிருந்தால் அவரது திருமேனியில் தைலம் தேய்த்து விடுவாள். அவர் கருக்காகப் பத்தரை மணிக்கு உண்ண வருவார். எனவே அவர் தைலம் ஊறி, ஸ்நானத்துக்குச் சென்ற வுடனேயே இவள் அவருக்காகத் தாம்பூலச் சுருள் செய்யத் தொடங்கி விடுவாள். அவர் அமருவதற்கு விரிப்புப் போட்டு, அருந்துவதற்குக் குவளையில் நீரும் எடுத்து வைப்பாள். பிறகு நஹவத்துக்கு வந்து தாலத்தில் உணவெடுத்துப் போவாள். சாப்பாட்டு விஷயத்தில் குழந்தைபோல் பயப்படும் கணவரை 'ஏமாற்றி' அவரது திருவுதரத்தை நிரப்புவதில் சாரதையின் சாதுரியம் அதிசயமானது. அவர் கண்களில் அன்னம் அதிகமாகத் தோன்றி விடக் கூடாது என்பதால் அதை அமுக்கிப் பிசைந்தே எடுத்துச் செல்வாள்.

இந்த ஏமாற்று வித்தைக்கு இன்னோர் உதாரணம்: ஒரு முறை அவருக்கு உடல் நலம் குன்றியபோது அவர் பாலைத் தவிர வேறு எவ்விதத்திலும் திரவச் சேர்க்கையுள்ள பண்டங்களை உண்ணக் கூடாது என்று வைத்தியர் கங்கா பிரசாத் ஸேன் விதித்தார். ''ஜலமே இல்லாமல் எப்படி இருப்பேன்?'' என்று ஐந்து வயதுக் குழந்தை உட்பட சகலரையும் வினவினார் பச்சைக் குழந்தை ராமகிருஷ்ணர். சாரதையிடம், ''மாதுள முத்திலேகூட ஜலத்தைப் பிழிஞ்சு எடுத்துட்டுத்தான் தரணும்'' என்றார்.

சாரதை அந்தப் பரிதாப நிலையிலும் சிரித்துக் கொண்டாள். மாதுளை முத்தில் ஜலத்தை வடித்தால் அப்புறம் கொட்டைதானே நிற்கும்? ''நீங்க ஏன்ன அதையெல்லாம் பற்றிக் கவலைப் படறேள்? காளி கிருபையில் எல்லாம் சரியா நடக்கும். எங்களாலே முடிஞ்சதை நாங்க செய்யறோம்'' என்றாள்.

அவளால் முடிந்த ஏமாற்றுச் சாதுரியத்தைத் தொடங்கி விட்டாள். கோயில் பால்காரனைக் கூப்பிட்டு, ''உன்னால் எவ்வளவு பால் தர முடியும்?'' என்று கேட்டாள்.

''எவ்வளவு வேணாலும் தரேன். தாயே! அங்கே காளிக்குன்னு தர்றதிலே முக்கால்வாசிப் பாலை ஐயமாருங்களே குடிக்கறாங்க. இங்கே தந்தா நம்ம சாமி வவுத்துக்குன்னு போவும்?'' என்று சொல்லி அவன் சுமார் இரண்டு சேர் பால் கொடுக்கலானான். சாரதை அவனுக்கு ஏகப்பட்ட பிரசாதங்களைக் கொடுப்பாள்.

ஆலயத்திலிருந்து வந்த பாலோடு ராமகிருஷ்ணருக்கென்றே வழங்கப் பட்ட பாலையும் சேர்த்துச் சுண்டக் காய்ச்சுவாள். நாலு சேரை இரண்டு சேராக்கிப் பதிதேவருக்குக் கொஞ்சம் கொஞ்சமாகத் தம்ளரில் விட்டுத் தருவாள்.

''நீ பாட்டுக்கு விட்டுண்டே இருக்கியே! எனக்கு ஒரு சேருக்கு மேலே ஏத்துக்காது'' என்று கூறும் அந்தக் குழந்தை.

''இது ஒரு சேர்தான்னா'' என்பாள் தாய்.

''இல்லை. ஜாஸ்தி. எனக்கு வயிறு முட்டறது.''

''ஒண்ணும் ஜாஸ்தி இல்லை. ஒண்ணுங்கிறதுக்குப் பதில் ஒண்ணே கால் சேர் இருக்கும். திருஷ்டியாட்டமா இந்தக் கணக்கெல்லாம் கேட்காதேள்.''

ராமகிருஷ்ணக் குழந்தைக்கும்கூட சந்தேகம் உண்டாகி விட்டது. ஒரு நாள் கோலாப்–மாவை அழைத்து, ''அம்மா எனக்காக எவ்வளவு பால் வாங்கறா, தெரியுமா?'' என்றார்.

விஷயம் தெரியாத கோலாப் அம்மை ''நாலு சேர்'' என்று பொத்தைப் பூசணிக் காயை உடைத்து விட்டாள்.

''ஆஹா! நாலுசேரா! அதுதான் எனக்கு அஜீர்ணமாயிருக்கு! எங்கே கூப்பிடு அவளை'' என்று அமர்க்களப் படுத்தினார் ராமகிருஷ்ணர்.

சாரதை வந்தாள். குற்றக் கூண்டில் நின்று கொண்டு, அன்பு என்ற குற்றத்தைத் தொடர்ந்து துணிச்சலுடன் செய்தாள். ''இந்தக் கோலாப்புக்குத் தோராயமாக்கூட அளவு சொல்லத் தெரியாது. இவ வார்த்தையைக் கேட்டுண்டா இப்படி மாய்ஞ்சு போறேள்?'' என்று பதியைக் கேட்டாள்.

கோலாப் விடாப்பிடியாக, ''இங்கேயிருந்து ஒரு பேலா பால் போறது; காளி




# நன்றி- நீடித்த டூலக்ஸுக்கு

## டூலக்ஸ், முற்றிலும் அப்பழுக்கற்ற ஒரே சீராக அழகுடன் ஆண்டுக்கணக்கில் நீடித்திருக்கின்றது

**உங்கள் வீட்டிலும் நீடித்திருக்கின்ற டூலக்ஸ் பெயின்ட் பூசியிருக்கிறீர்களா? அதன் செலவு, நீங்கள் நினைப்பதைவிட குறைவுதான்.**

★ **பரந்த பரப்பிற்கு பூசக்கூடியது:** ஒரு லிட்டர் டூலக்ஸ் கொண்டு அப்பழுக்கில்லாமல் விரிவாக பரந்த இடத்திற்குப் பூச முடியும்-இதனை குறைவாக உபயோகிக்கிறீர்கள் ஏனெனில், உங்கள் தேவை குறைந்துள்ளது.

★ **பூரணமாகக் கழுவக்கூடியது:** சோப்பு-நீர் கொண்டு கறைகள், தூசு அழுக்கு ஆகிய வற்றை சுலபமாகக் கழுவிவிடலாம்.

★ **மங்காத, உரிந்துபோகாத முற்றிலும் ஒரே சீரான பரப்பு:** தரப்பரிசோதனை செய்யப்பட்ட கூட்டுப்பொருள்களினாலானது டூலக்ஸ்.

**தேர்ந்தெடுக்க 121 வண்ணஜாலம்:** உங்களுக்குகந்தது எந்த நிறம் என்று நீங்கள் எப்பொழுதாவது எண்ணியதுண்டா? தேர்ந்தெடுக்கப்பட்ட அநேகவித நிறங்களுள் உங்கள் வீடு அழகுடன் திகழ்வதற்கு உள்ளம் உற்சாகமூட்டும் எண்ணிறந்த நிறத்திட்டங்கள் இருக்கின்றன. உங்கள் கன்ட்ராக்டருடன் கலந்து பேசி அவரது ஆலோசனையைக்கேட்டு டூலக்ஸ் நிறவகை அட்டையைப் பாருங்கள்.




அகில உலக தரத்திற்கு உத்தரவாதமளிப்பது

டூலக்ஸ்-தயாரிப்பவர்களும் விற்பனையாளர்களும்:
**தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்**

டூலக்ஸ்-இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், லண்டனின் டிரேட் மார்க். பதிவுபெற்று உபயோகிப்பவர்கள்: தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்

ACCI(P) 6667

## கல்வி

மனிதனின் இயற்கையான திறமைகள், இயற்கையாக உற்பத்தியாகும் செடிகளைப் போன்றவை. இவற்றில் நல்ல செடிகளோடு கெட்ட தழைகளும் உண்டாகக்கூடும். தழைகளைக் கழிப்பதற்கு உதவுவதே கல்வி. ஆனால் படிப்பறிவையே முக்கியமாகக் கருதினால் அதுவே தழையாக மண்டிவிடும் என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

-- சேந்தமங்கலம் ஸ்ரீ அவதூதஸ்வாமிகள்

கோயில்லேயிருந்து ஒரு பேலா போறது. நீங்களே கணக்குப் பார்த்துக் கோங்கோ'' என்றாள்.

சாரதையைக் கண்டிப்புடன் பார்த்தார் ராமகிருஷ்ணர். அதைவிடக் கண்டிப்புடன் அவரைப் பார்த்தாள் சாரதை. ''இதோ, பாருங்கோ! அந்தப் பேலா எத்தனை 'பாவு' பிடிக்கும்னு கணக்குப் போட வேண்டாம். சாப்பாட்டுக்கா கணக்குப் பார்ப்பா? நான் கொடுக்கிறதைச் சாப்பிடுங்கோ'' என்றாள்.

''நீ சொல்றது வாஸ்தவம்தான். ஆனா எனக்கு அஜீர்ணம் வந்துடுத்து'' என்றார் அவர்.

அது வரை அஜீர்ணமே வரவில்லை. இன்று விஷயத்தைத் தெரிந்து கொண்டபின் மெய்யாகவே அஜீர்ணமும் வந்துவிட்டது. அன்றிரவு ஜவ்வரிசிக் கூழ் மட்டுமே சிறிது உண்டார்.

கோலாப் அம்மை அழமாட்டாக் குறையாக சாரதையிடம் வந்து, ''நீங்க முன்னாடியே எங்கிட்டச் சொல்லியிருக்கக் கூடாது? என்னாலே டாகூர் ஆகாரமே பாழாச்சு'' என்றாள்.

''பரவாயில்லை. இத்தனை நாளா நிறையப் பால் சேர்த்ததுலே அவர் உடம்பு தேறிடுத்து. ஆனா, பொதுவாக ஒண்ணு தெரிஞ்சுக்கோங்கோ. சாப்பாட்டு விஷயத்திலே பொய் சொன்னா தோஷமே கிடையாது. அவரை ஏமாற்றியும், கெஞ்சியும், தாஜாப் பண்ணியும் தான் சாப்பிடச் செய்யவேண்டியிருக்கு'' என்றாள் அன்னபூரணியான சாரதை.

அவள் ஒருத்தியால்தான் அந்தப் பணியைச் செய்ய முடியும். அவரும் அவள் ஒருத்தி கையாலேயேதான் உணவு பெற்றார். அதிலே அவளுக்கு ஏக மகிழ்ச்சி.

அந்த மகிழ்ச்சியுடன் அவள் பரிமாறிக் கொண்டிருந்தபோது, அவர் சிந்தனை வயப்பட்டவராக மெல்ல மொழிந்தார்: ''என்னிக்கு நான் எல்லார் கையிலேயிருந்தும் சாப்பாடு வாங்கிக்கறேனோ, அப்போ எனக்குப் போங்காலம் வந்துடுத்துன்னு தெரிஞ்சுக்கோ!''

சாரதையின் ரத்தம் உறைந்தது!

**உ**ணவு வேளையில் ராமகிருஷ்ணருடன் இருக்கும் ஆடவர்களுக்கு அம்மா வரப் போவதைத் தெரிவித்ததும் அவர்கள் வெளியேறி விடுவார்கள். அதன் பின்பே தேவி உணவு எடுத்து வருவாள்.

சாரதாமணி இவ்விதம் கடுமையாகக் கோஷா முறை அநுஷ்டிப்பதை ராமகிருஷ்ணர் மிகவும் விரும்பி வரவேற்றார். ஆதியில் காமார்புகுரில் அவள் சிறுமியாக இருந்தபோது, அவள் இருந்த அறையில் ஒரு சாளரம் அமைக்கப்பட்டதையே அவர் ஆட்சேபித்திருக்கிறார். ''தெருவைப் பார்த்துச் சாளரம் வைக்கறது சரியில்லே. குடும்ப ஸ்திரீகள் தெருவோடு போறவா, வரவாளைப் பார்க்கறதும், அவா இவாளைப் பார்க்கறதும் நல்லதுக்கில்லே'' என்று முடிவாகக் கூறிவிட்டார்.

கிராமத்தில் தலையை வெளிக் காட்டாத பெண்கள் கல்கத்தா போன்ற நகரத்துக்கு வந்தபிறகு ஆடவர்களோடு ஓரளவு பழகுவதை அவர் பார்த்திருக்கிறார். சாரதை தக்ஷிணேசுவரத்துக்கு வந்த புதிதில், கிராமத்துப் பெண்ணாகிய அவள் இங்கு பலவிதமான மனிதர்கள் கூடுவதைப் பார்த்து, வம்புக்கு ஆர்வம் கொண்டு அவர்களோடு பழகத் தொடங்கி விடுவாளோ என்று ராமகிருஷ்ணர் சிறிதே ஐயமுற்றார். ஆனால் சிறிது நாட்களிலேயே அவரது ஐயம் தீர்ந்து அவர் ஹ்ருதயரிடம் சின்ன 'மாமி'க்கு நற்சாட்சிப் பத்திரம் வாங்கித் தந்தார். ''ஏதடா, இந்தக் கிராமாந்தரக் குட்டி, நாகரிகம் என்ற பெயரில் அநாகரிகமாக நடந்துவிடப் போகிறதேன்னு பயந்துண்டு இருந்தேன். சின்ன மாமி இந்தப் புதுச் சூழலுக்குத் தன்னை அற்புதமா சரிப் பண்ணிண்டுட்டா'' என்றார். இதைக் கேள்விப்பட்டபின் அதுவரை தன்னையறியாமல் இயல்பாக அடங்கியிருந்த சாரதை கோஷா முறையில் அதிக சிரத்தையும் கவலையும் எடுத்துக் கொண்டாள். 'அவர் நினைக்கிறதை எல்லாம் அம்பாள் நடத்தி வெச்சுடுவளே! நான் அசட்டுப் பிசட்டுன்னு நடந்துடுவேனோன்னு அவர் பயப்பட்டால், அந்த பயமும்கூட நிஜமானாலும் ஆயிடும். அகஸ்மாத்தாக எப்போவாவது நான் வெளியிலே நின்னாக்கூட அது அவர் கண்ணுலே பட்டுவிடுமே!' என்று பயந்தாள் அவள். ''ஜகதீசுவரி, அவர் எதிர்பார்க்கிற அளவுக்கு என் மானத்

தைக் காப்பாற்றடியம்மா'' என்று வேண்டிக் கொண்டாள். அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு இவற்றுக்கு ஒரு மூர்த்தியே ஆனாள். இன்று நம் அம்மா உலகப் பிரசித்தி பெற்று, ஓரளவு நவகால அவதார வியக்தியாக வணங்கப் படுவதால், நவீன கால 'பெண் விடுதலை'க்கும் அவளை மூர்த்தியாக்கிப் பலர் எழுதியும் பேசியும் வருகிறார்கள். ஆனால் இந்த 'விடுதலை'க்கு நம் அம்மா முன்னோடி என்று எண்ணுவதற்கு அவளது சரிதத்தில் சான்று எதுவும் காணோம்! பெண்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்றே ராமகிருஷ்ண ரும் கூறி வந்திருக்கிறார்.

ஒரு முறை சாரதையோடு லக்ஷ்மியும் நஹவத்தில் இருந்தபோது, அம்பாள் பிரசாதங்களை அவர்களுக்கு அளித்துவர ஹ்ருதயரை அனுப்பினார் ராமகிருஷ் ணர். ஹ்ருதயர் அவர்களோடு பல விஷயங்களைச் சிரித்துப் பேசிவிட்டுத் திரும்பினார். ராமகிருஷ்ணருக்குக் கடும் கோபம் வந்துவிட்டது. ''பெண்டுகளி டத்தில் பட்டுக் கத்திரிச்சாப்போல் காரி யத்தை முடிச்சுண்டு வரணும். இனி மேல் இந்த மாதிரி அவாகிட்டே வம்பளந்திண்டு நின்னாயோ, தெரியும் சேதி'' என்று கடிந்து கொண்டார். ராமலாலிடமும் ''சித்தி, அக்கான்னு அவாகிட்டே சும்மா பேசப்படாது'' என்று கண்டித்து வைத்திருந்தார்.

உலக மாதா தன்னை ஒளித்துக் கொண்டே உயிரினங்களுக்கு அருள் செய்வது போலவே சாரதை, முக்காட் டில் தன்னை மறைத்துக் கொண்டே அம்மாவாக அன்பு செய்து வந்தாள். முக்காட்டுக்குள் பதுக்க முடியாத அன்னை யன்பை இந்தக் கோஷா ராணி பரி பூரணமாக ஆற்றியது உலக அதிசயம் தான்! சாரதை தக்ஷிணேசுவரத்துக்கு வந்து பல்லாண்டுகள் ஆன பிற்பாடு ஒரு நாள் ஆலயக் கணக்காயர் சொன்ன ராம்: ''பட்டாசாரியாருடைய பத்தினி யும் இங்கேதான் இருக்காங்கன்னு சொல் லிக்கறா. ஆனால் அவங்களைப் பற்றிக் கேள்விதான் படறேனே ஒழிய, கண் ணாலே கண்டதில்லே.''

கோஷா முறையின் கடுமையை எப் போது தளர்த்த வேண்டும் என்பதும் ராமகிருஷ்ணருக்குத் தெரியும். கோஷா முறைக்கு நளினமாக, லளிதமாக 'விடு முறை'யும் அவ்வப்போது தருவார். மேனி வண்ணத்தில் பக்தர் ஒருவரையும், தம்மையும் எடை போட்டுத் தீர்ப்புச் சொல்லுமாறு அவர் சாரதையைப் பணித்ததை இதற்கு ஓர் உதாரண மாகச் சொல்லலாம்.

**காலனும் காமனும்**

காலன், காமன் என்ற இருவரில் காலன் நமக்குப் பிரியமில்லாதவனாகத் தோன்றினாலும் அவனே நமக்கு நல்லது செய்கிறான்; காமனே நமக்குப் பிரியமானதைச் செய்வதாகத் தோன்றினாலும் அவனே நமக்குக் கெடுதல் செய்கிறான். -- ஆதிசங்கரர்

பெண்கள் அடங்கி வாழ்வதற்கும், ஆண்கள் அவர்களை அடக்கி வைப்ப தற்கும் மிகுந்த வித்தியாசம் உண்டு. ராமகிருஷ்ணர் ஒரு போதும் அவளை அடக்கி வைத்துக் கொடுமை செய்த தில்லை. அவளுக்கு அவர் செலுத்திய மரியாதை எந்தக் கணவரும் காட்டாத ஓர் உயர் பண்பாகும். ராஜ ராஜேசுவரி யாகவே அன்றோ அவளைப் பூஜித்தார்? அதுவுமன்றி, தமக்கு அபசாரம் செய் தாலும் பாதகமில்லை, அவளுக்குக் கடுகளவும் அபசாரம் செய்துவிடக் கூடாது என்று சீடர்களைக் கண்டித்து வைத்தார். பொதுவாகவே அவளை அழைக்கும்போது அவர், 'துயி' என்று கூப்பிட்ட நாளே கிடையாது. தமிழில், 'நீ', 'நீங்கள்' என்று இரு முன்னிலைப் பதங்களே உள்ளன. வங்காள மொழி யில் இவை 'துமி', 'அபனி' என்ற பதங் களால் குறிப்பிடப் பெறும். 'துமி'க்கும் கீழே 'துயி' என்று ஒன்று உண்டு. நாம் 'அடா', 'அடி' என்று கூறுகிறோமே, அது போன்றது 'துயி'. சாதாரணமாக மனைவியைத் 'துயி' எனச் சொல்லியே அழைப்பர். ராமகிருஷ்ணரோ சாரதை யைத் 'துமி' என்றே சொல்வார். பைத்திய புருஷனை மணந்து சாரதை அவதிப்படுகிறாள் என்று ஊரார் எண் ணிய காலத்தில் அவளோ, ''அகத்துக் காரர் வாய்க்கறதுலே என்னைப்போல் பாக்கியசாலி யாருமே கிடையாது. என் மேலே ஒரு பூவைக்கூட அவர் விட் டெறிந்ததில்லை. ஒரு நாளிலே என்னைத் 'துயி'ன்னு கூப்பிட்டதில்லை'' என்று பெருமைப்பட்டுக் கொண்டாள்.

ஒரு நாள் அவள் அவருக்கு அப்ப மும், சேமியாக் கஞ்சியும் வைத்துவிட்டு அறையிலிருந்து வெளியேறிய போது கதவைச் சாத்திக் கொண்டு வர மறந்து போனாள். அவள் ஒரு சிறு தவறுகூடச் செய்ய மாட்டாள் அல்லவா? எனவே, அவர் லக்ஷ்மிதான் வந்து போகிறாள் என எண்ணி, ''கதவைச் சாத்திண்டு போடி'' என்று கூறினார்.

''சரின்னு'' என்று வெளியிலிருந்து சாரதையின் குரல் கேட்டது.

அவ்வளவுதான்! ஏதோ தகாத பிழை செய்து விட்டாற் போல் ராம

கிருஷ்ணர் பதறிப் போய் விட்டார். வெளியே வந்து, ''ஆஹா. நீ வந்திருக்கேன்னு தெரிஞ்சுக்காமப் போனேனே ! லக்ஷ்மின்னு நினைச்சு 'டி' போட்டுட்டேன். நீ இதை மனசுலே வைச்சுக்காதே அம்மா!'' என்று கெஞ்சினார்!

''என்னன்னு, இதைப் போய்ப் பெரிசா நினைச்சுக் கஷ்டப்படறேள்?'' என்று சொல்லிவிட்டு நஹபத்துக்கு விரைந்தாள் சாரதை.

ஆனால் அவர் விஷயத்தை அதோடு விட்டுவிடவில்லை. மறுநாள் அவள் அவரது இருப்பிடம் சென்ற போதும் இதையேதான் பேசினார். ''பிரியே ! நேற்று ராத்திரி முழுக்க எனக்குத் தூக்கமே வரலை. உன்கிட்டப் போய் இப்படி முரட்டுத்தனமாப் பேசிட்டேனேன்னு நினைச்சு வருத்தப்பட்டுண்டே இருந்தேன்'' என்றார் !

'துயி' போட்டுப் பேசாதது மட்டுமல்ல, யாரிடமும் அவளைப் பற்றிப் பேசும்போது அவளது பெயரை அவர் சொல்லவே மாட்டார். சாதாரணமாக நம் பக்கத்துப் பெண்டிர் (சமீப காலம் வரையில்) கணவர் பெயரைச் சொல்லாமல், தங்கள் குழந்தை பெயரைச் சொல்லி, 'இதன் அப்பா' என்றே சொல்வது வழக்கம். ராமகிருஷ்ணரும் இதே முறைப்படி சாரதையைப் பற்றிச் சொல்லும் போது, 'ஹ்ருதே மாமி' அல்லது 'ராமலால் சித்தி' என்றெல்லாம்தான் சொல்வார் ! சாரதையை வெட்கத்தோடு வாழச் சொன்ன அவருக்கும் இப்படிப்பட்ட ஒரு கௌரவமான வெட்கம் இருந்தது !

சாரதை அவரது கால்களைப் பிடித்து விட்டுச் செல்வது வழக்கம். அப்படிப் பதி சுசுரூஷை செய்தாலே அவளுக்குத் திருப்தி என்பதால் அவரும் அதை அநுமதித்தார். ஆனால் அவள் தமது காலைப் பிடித்துவிட்டு எழுந்ததும், அவர் தவறாமல் அவளைக் கும்பிடுவார் !

அநேக காரியங்களில் அவளது யோசனையைக் கேட்டு அதன்படியேதான் நடப்பார் அவர். வேதம் விதிக்கும் உத்தம தாம்பத்தியம் நடத்தினார். ''பிரியே, நாம் இருவரும் தோழர்களானோம்! உன் தோழமையை நான் என்றும் இழக்கமாட்டேன் ! நீயும் என் தோழமையை இழக்காதிருப்பாய்! நமது சங்கற்பம் ஒன்றாகவே இருக்கட்டும். ஒருவருக்கொருவர் அன்பையும், ஒளியையும் தந்து கொண்டு, பரஸ்பர நல்லெண்ணத்தோடு, ஒரே உணவை உண்டு, ஒரே போல் சக்தி பெறுவோம். நமது மனங்கள் ஒன்றுபடட்டும். நாம் விரதங்களை ஒன்று சேர்ந்து அநுஷ்டிப்போம். நமது விருப்பங்கள் ஒன்றாகட்டும். நீ இசையாக இருக்கிறாய், நான் சந்தமாக இருக்கிறேன். நீ வானம், நான் பூமி.... நீ சொல், நான் மனம்'' என்றெல்லாம் மணமகளைப் பார்த்து மணமகன் வேத மந்திரம் மொழிகிறான். அந்த மந்திரங்களின் உயிருள்ள உருவகமாக இருந்தது ராமகிருஷ்ணர் சாரதையுடன் நடத்திய இல்லறம்.

சில சமயங்களில் அவளைப் பரீட்சை பார்ப்பதற்கே யோசனை கேட்பது போல் பாவனை செய்வார் அவர். லக்ஷ்மி நாராயண என்ற மார்வாரி பக்தருக்கு லக்ஷ்மி கடாக்ஷம் அமோகமாக இருந்தது. அவர் ராமகிருஷ்ணருக்குப் பதினாயிரம் ரூபாய் வழங்க முன் வந்தார். தமக்குப் பண மூட்டை வருகிறது என்று கேட்ட மாத்திரத்தில், ராமகிருஷ்ணரை ரம்பம் கொண்டு அறுப்பது போலிருந்ததாம். பதினாயிரம் ரூபாயைப் பறி கொடுத்தால்கூட யாரும் அப்படிப் பரிதவிக்கமாட்டார்கள். ''அம்மா காளி, இத்தனை காலம் கழித்து இன்னுமா எனக்குச் சோதனை வைக்கிறாய்?'' என்று அலறினார். அலறியவுடனே குறும்புச் சிரிப்பும் சிரித்துக் கொண்டார். காளியின் இன்னோர் உருவான சாரதையைத் தாம் சோதிக்க எண்ணினார். ''அம்மா! லக்ஷ்மி நாராயண் பத்தாயிரம் ரூபாய் தருவேன்னு பிடிவாதம் பண்ணறார். எனக்கு வேண்டாம்னு மறுத்துட்டேன். அப்படியானால் உனக்காவது அதைக் காணிக்கையாகத் தந்தே தீருவேன் என்கிறான். வாஸ்தவமாகவே நீ வாங்கிக்கறதுலே அப்படி ஒண்ணும் தப்பு இல்லே'' என்றார். அவர் வாய் மூடு முன்பே அம்மா படபடத்துக் கூறினாள் : ''அதெப்படித் தப்பு இல்லையாம்? நான் பணம் வாங்கிண்டாலும் உங்களுக்காக, உங்க சிஷ்யாளுக்காகத் தானே செலவழிக்கப் போறேன் ? எனக்கு மட்டும் தனியாப் பணம் எதுக்கு? நான் வாங்கிண்டு உங்களுக்காகச் செலவழிச்சா அந்தப் பணத்தை நீங்களே அங்கீகாரம் பண்ணிண்டதாகத்தான் அர்த்தம். பிரபு ! இன்னிக்கு இத்தனை மநுஷா உங்க பாதத்திலே வந்து விழறதுக்குக் காரணம் உங்களோட சந்நியாசம்தான். அதுக்குப் பங்கம் ஏற்பட வேண்டாம்.''

ராமகிருஷ்ணர் பெருமகிழ்ச்சி அடைந்தார். பத்தாயிரம் ரூபாய் கால்காசு போலத் திரஸ்கரிக்கப்பட்டது, அந்த ஏழைத் தம்பதியால். (தொடரும்)

# அம்மா

ரா. கணபதி

ராமகிருஷ்ணர் எத்தனையோ விஷயங்களில் சாரதையை யோசனை கேட்பார் இதனால் அவள் அகந்தை கொள்ளவில்லை. தன் 'அக'த்தை அகத்துக்காரரிடம் கரைத்து அவரது அபிப்பிராயத்தையே தனது கருத்தாகச் சொல்வாள். அவருக்கு எது பிரியமானது என்று உணர்ந்து அதையே தனக்குப் பிரியமாக்கிக் கொண்டவள்.

ஓர் உதாரணம்: கல்கத்தாவிலிருந்து சில மைல் தொலைவில் உள்ள பாணிஹாதி என்ற ஊரில் ஜேஷ்ட மாதத்தில் தண்ட மஹோத்ஸவம் என்ற பெரிய விழா நடக்கும். ஒரு முறை ராமகிருஷ்ணரும் அவரது அடியார் கூட்டமும் மூன்று படகுகள் அமர்த்திக் கொண்டு இந்த உத்ஸவத்துக்குப் புறப்பட்டனர். அவர்களிலே பல பெண்மணிகளும் இருந்தனர். தானும் உடன் வரலாமா என்று கணவரிடம் கேட்டு அனுப்பினாள் சாரதை.

''அவளுக்கு ஆசை இருந்தால் வரட்டுமே!'' என்று பதில் சொல்லியனுப்பினார் ராமகிருஷ்ணர். அந்தப் பதிலைக் கேட்டதும் ஒரு விநாடி யோசித்தாள் சாரதை. ''நான் வரவில்லை. ஏராளமான புருஷா கூட வரா. எனக்குச் சிரமமாயிருக்கும்'' என்று கூறி விட்டாள்.

மற்றவர்கள் அனைவரும் மகோத்ஸவம் பார்த்துவிட்டு இரவுதான் திரும்பினர். அன்று நடந்த விழாவின் வைபவத்தையும் ராமகிருஷ்ணர் அடைந்த திவ்விய போதை நிலையையும் அம்மாவுக்குத் தெரிவிப்பதற்காகப் பெண்கள் நஹபத்துக்குக் கிளம்பியபோது, அவர்களுக்குள் ஒரு தாபம் ஏற்பட்டது. 'ஆஹா, இத்தனை இன்பத்தையும் இழந்துவிட்டு அம்மாமட்டும் தனியாக நஹபத்தில் அடைபட்டுக் கிடந்தாளல்லவா?' என்றெண்ணி அப்பெண்கள் குறைப்பட்டுக் கொண்டனர். இதைப் புரிந்து கொண்ட ராமகிருஷ்ணர், ''அம்மா, எத்தனை புத்திசாலி பாருங்கள்! இன்னிக்குத் திருவிழாக் கூட்டத்திலே அத்தனை கண்ணும் என் மேலேயே இருந்ததாமே! அம்மா மட்டும் என் பக்கத்திலே இருந்திருந்தா சாதாரண ஜனங்களுக்கு எத்தனை கேலிக்கூத்தா இருந்திருக்கும்! 'பரமஹம்ஸர் பரமஹம்ஸர்னு சொல்றுங்களே! அந்த ஹம்ஸத்தோடே ஒரு ஹம்ஸியும் இருக்குதுடோய்'னு எகத்தாளம் பண்ணியிருப்பா. அம்மா வராதது எவ்வளவு நல்லதாப் போச்சு! ஆமாம், அவள் மகா புத்திசாலி'' என்றார்.

அறியா மக்கள், 'ஹம்ஸ — ஹம்ஸி' என்று நகைத்திருப்பார்கள். எல்லாம் அறிந்த ஆதிசங்கரரோ ஆதிதம்பதியை 'பஜே ஹம்ஸ த்வந்தம்' என்றே வணங்கினார்!

பெண் பக்தர்கள் நஹபத்துக்குச் சென்று எல்லா விஷயங்களையும் கூறிவிட்டு, ''நீங்கள் ஏனம்மா, வராமல் வைச்சுட்டேள்?'' என்று கேட்டனர்.

சாரதை புன்னகையுடன் மொழிவாள்: ''அவர் சொல்லியனுப்பிச்ச வாசகத்திலிருந்தே அவர் மனசு எனக்குப் புரிஞ்சுடுத்து. 'அம்மா வரட்டுமே'ன்னு அவர் தாமாக ஆசைப்பட்டுச் சொல்லல்லை. 'அவளுக்கு ஆசை இருந்தால் வரட்டுமே'ன்னார். அதனாலேதான் நான் வரவில்லை''

பரஸ்பரம் எத்தனை மதிப்புத் தந்திருக்கிறார்கள்! எப்படி ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டும் இருக்கிறார்கள்! தாம் ஆசைப்படா விட்டாலும் அவளுக்கு ஒன்றில் ஆசையிருந்தால் அதை அவள் நிறைவேற்றிக் கொள்ள அவர் அநுமதிப்பார் ஆனால் அவர் ஆசைப்படாத ஒன்றை இவள் ஆசைப்பட மாட்டாள்!

கோஷா முறையையும் மதித்து, அதே சமயத்தில் அவளது ஆசைகள் சிலவற்றையும் மதித்தார் ராமகிருஷ்ணர். உதாரணமாக அவளுக்கு இசையில் உள்ள ஈடுபாட்டை அவர் அறிவார். ராமப் பிரசாத், கமலாகாந்தர் போன்றவர்களின் காளி கீதங்களைத் தாம் பாடும்போது சாரதை எப்படிச் சொக்கிப் போவாள் என்பதை அவர் அறிவார். அவர் தமது அறையில் கானம் செய்யத் தொடங்கும் பொழுதெல்லாம் அவருக்குக் காளியின் நினைவோடு, சாரதையின் நிறைவும் சேர்ந்துவிடும். அவள்

இந்தப் பாட்டைக் கேட்க வேண்டாமோ என்று எண்ணுவார். ஆனல் ஆடவர் எதிரில் அவளை அழைத்து வைத்துக் கொள்ளவும் மாட்டார். ''அப்பா, ராமலால்! என்னுடைய திவ்விய போதத்தையும், கீதத்தையும் சித்தி அநுபவிக்காமல் இருக்கலாமா? கீர்த்தனத்தைக் கேட்டால் அவளும் தனக்குத் தானே பாடிண்டு அதிலே அழுந்திப் போவாளே! இந்த வடவண்டைக் கதவைத் திறந்து வை. நான் உரக்கப் பாடறேன். நஹவத்திலேயும் என் குரல் கேட்கும்'' என்பார்.

அப்படியே அவரது தேமதுரக் குரல் நஹவத்தில் கேட்டது! வடவண்டை வாசலால் வந்த ஒலியின் பரிமாணம் தேவிக்குப் போதவில்லை. தன் அறையில் இருந்த மூங்கில் தடுப்பிலும் சில குச்சிகளை அகற்றிவிட்டு அதில் காதைப் பொருத்திக் கொண்டு அவரது கானத்தில் பொதிந்தாள். பிற்பாடு ஒரு நாள் ராமகிருஷ்ணர், ''ராமூ! சித்தியோடே மூங்கில் தட்டி எலும்பை முறிச்சுண்டிருக்கு'' என்று ஹாஸ்யம் செய்தார். அவரது ஹாஸ்யம், அவளது பண்பு இரண்டும் புரியாத ராமலால், ''நீங்க கதவைத் திறந்து வைச்சதிலேதான் சித்திக்கு ஆசை வளர்ந்து, இப்படித் தட்டியைப் பிய்ச்சிருக்கா! இனிமேலே கதவைச் சாத்திண்டே பாடுங்கோ'' என்றுன். ''ஒரு நாளும் அப்படிச் செய்யறதுக்கில்லை'' என்று முடிவாகக் கூறினர் ராமகிருஷ்ணர்.

ராமகிருஷ்ணரின் கானமுதத்தில் கரைந்து போனவள் சாரதை. பற்பல ஆண்டுகளுக்குப் பின் ஒரு முறை அவள் வேறு யாரோ பாடும்போது அதைக் கேட்டுவிட்டு, ''டாகூரின் குரல் எப்பவும் என் காதிலே ரீங்காரம் செய்யறது. அந்தக் குரலோட நினைவிலே மற்ற எந்தக் குரலும் சப்புன்னுதான் இருக்கு. அடடா, அவரைப் போல் ஒரு பாடகர் உண்டா? பாடறச்சே அவர் பாட்டோடு அப்படியே ஒன்றிப் போயிடுவாரே! அவர் குரலை நினைச்சுட்டு இன்னொரு குரலைக் கேட்கவும் முடியலை.... ஓரளவுக்கு நரேனும், கிரீஷும் மாதுரியமாகப் பாடுவா'' என்றாள்.



(நரேன்தான் விவேகாநந்தர். கிரீஷ் என்பவர் பிரபல நாடகத் துறை நிபுண ரான கிரீஷ் சந்திரகோஷ்.)

ஒரு நள்ளிரவில் சாரதையும் லக்ஷ்மி யும் ஆழ்ந்த பொருள் கொண்ட ஒரு பாடலை அற்புதமாக மெல்ல இசைத்துக் கொண்டிருந்தனர். மாருதம் அந்த மாதுரியத்தை ஏந்திச் சென்று ராம கிருஷ்ணரின் செவியில் நிரப்பியது. சொக்கிப் போனார். மறு நாள் சாரதை யிடம் வந்து ஏகப்பட்ட சபாஷ் போட் டார்! கோஷா நள்ளிரவில் பாடலாமா என்று சண்டை போடவில்லை.

கோஷா முறையில் நியாயமான விலக்குகளை அவர் அங்கீகரித்தார். ஒரு சமயம் அவர் பவதாரிணியின் மீதிருந்த அழகிய மலர் மாலையைக் கண்டு பேரானந்தம் கொண்டார். மல்லிகை யையும், சிவப்பு ரங்க மலரையும் மாற்றி மாற்றித் தொடுத்திருந்த அந்த ஹாரத் தைக் கட்டியது சாரதை என்றறிந்து புளகித்தார். ''அம்பாள் இதைப் போட்டுண்டிருக்கிற அழகை அவள் பார்க்க வேண்டாமோ? இப்பவே அவளை அழைச்சுண்டு வா'' என்று ஒரு சிடரை அனுப்பினார். பிருந்தே என்கிற வேலைக் காரியின் 'துணை'யோடு அங்கு வந்தாள் சாரதை. அதேசமயம் பலராம் பாபு, சுரேந்திர பாபு முதலியோரும் ஆலயத் துக்கு வருவதைப் பார்த்து விட்டு, பிருந்தேயின் முன்றானையில் ஒளிந்து கொண்டாள் சாரதை. ஆலயத்தின் பின் வாசலுக்கு விரைந்தாள்.

ராமகிருஷ்ணர், ''அம்மா! அந்தப் பக்கம் போகாதே. அங்கே முழங்கால் முறிச்சான் மாதிரி உயரமான படிகள் இருக்கு. முன்னே ஒரு தடவை ஒரு செம்படவப் பெண் அதிலேயிருந்து விழுந்து மாண்டு போச்சு. நீ வாசல் வழியாகவே வா'' என்றார்.

விஷயத்தைப் புரிந்து கொண்ட பல ராம் முதலியோர் விலகிப் போயினர். அதன் பின் சாரதாமணி பவதாரிணி யின் சந்நிதிக்கு வந்து தரிசித்துப் பூரித் தாள். அந்தக் காட்சியைப் பார்த்துப் பூரித்தார் ராமகிருஷ்ணர்.

உலக நடப்புக்களில் மட்டுமின்றி ஆத்மிக அநுபவங்களிலும்கூட அவள் 'கோஷா'வாக இருப்பதையே ராம கிருஷ்ணர் விரும்பினார். 'ஆத்மிகத்தில் கோஷா' என்றால் என்னவென்று வியப்பாக இருக்கிறதா? ஆத்ம சாதனை யில் பரவச பாவங்கள் ஏற்படுவது உண்டு அல்லவா? சாரதைக்கு இதி லும் ஆர்ப்பாட்ட பரவசம் ஏற்படாமல் உள்ளடங்கிய உன்னதங்களே சித்திக்க வேண்டும் என்று ராமகிருஷ்ணர் விரும் பினார். அவர் அவளுக்கு அளித்த ஆன் மிகப் பயிற்சிகள் பலப்பல. ஆனால் இவற்றை அவ்விருவரும் வெளி உலகுக்கு அதிகம் தெரிவிக்காமல் முக்காட்டுக் குள்ளே கோஷாவாகவே வைத்திருந் தனர். உதாரணமாக 1883ம் ஆண்டு சாங்கோபாங்கமாக ஸாவித்திரி விரதம் என்ற ஒன்றை தேவி சாரதை அநுஷ் டித்தாள். ஆனால் இதன் விவரங்கள் தெரியவேயில்லை.

சாரதை வேலையில் ஈடுபட்டிருக்கும் போதும் அவளது உள் மனம் சக்தி மந்திரத்தை ஜபித்தபடி இருக்கும். இதனால்தான் அவள் தினமும் லக்ஷம் ஆவிருத்தி ஜபம் செய்ய முடிந்தது. வேலையே இல்லாமல் ஜபம் என்று அவள் அமரும்போது அவளது மனம் பரிபூரணமாக மந்திரத்திலேயே கரைந்து விடும். உலகப் பிரக்ஞை யோடு அவளே அறியாத முறையில் மனத்தின் ஒரு மெல்லிய இழைதான் ஒட்டிக் கொண்டிருக்கும். இச்சம யங்களில் வெளி உலகில் ஏதேனும் அரவம் ஏற்பட்டு விட்டால் அந்த மெல்லிய இழை துடிதுடித்துப் போய் விடும். ''ஒரு நாள் நான் ஜபம் பண் ணும்போது பிருந்தே ஒரு வெங்கலத் தட்டைக் கீழே போட்டுட்டா. அந்தச் சத்தம் என் இதயத்தையே கிழிச்சுட்ற மாதிரி இருந்தது'' என்று அம்மா சொல்லி யிருக்கிறாள். இத்துணை ஜகாக் கிரியத்துடன் ஜபம் புரிந்த போதிலும் பரவசக் கூத்தாடவில்லை! ஒரு முறை சாரதைக்கே குறை உண்டாயிற்று. குறிப்பாகக் கௌரியம்மைக்கு ஏற்படும் தெய்விகமான உணர்ச்சி எழுச்சிகளைக் கண்டபோது அவளுக்குத் தன்னைப் பற் றியே சிறுமை எண்ணம்கூட உண்டாகி விட்டது. கணவரிடம் நேரில்பேச நாணி, லக்ஷ்மியைத் தூது அனுப்பினாள்.

லக்ஷ்மி ராமகிருஷ்ணரிடம் சென்று, ''சித்தப்பா! சித்திக்கும் கொஞ்சமாவது பரவசக் கிளர்ச்சி உண்டாக அநுக் கிரகம் பண்ணுங்கோ'' என்றாள்.

''ஊஹூம். முடியவே முடியாது. பெண்டுகள் எல்லாத்திலேயும் அடங்கித் தான் இருக்கணும். ஆட்டமில்லாமல் அமுத்தமா இருக்கணும். பெண்களு டைய பலமே விநயம்தான். இல் லாட்டா ஊர் சிரிச்சுப் போயிடும். கௌரியைப் பற்றி நமக்கென்ன வந்தது? அவ காளிகாட்டைச் சேர்ந் தவள். காளிகாட்டிலே சாக்தாள் ஏரா ளமாக வந்து கன்னிகைகளுக்குக் காளி பூஜை பரவசமாகப் பண்ணுவா. அதையே பார்த்துண்டிருக்கிற ஸ்திரீக ளுக்கும் பரவசக் கூத்து தன்னாலே வந் துடறது. பொதுவிலே பெண்களுடைய ஸ்வபாவமே நளினமானது' அவா

## உழைப்பின் இன்பம்

ஓயாத உழைப்பினிடையே பூரண ஆனந்தம் காணும் வாழ்க்கை என்னுடையது. நாளைக்கு என்ன நடக்கும் என்பதைப் பற்றி நினைக்கவே நான் விரும்புவதில்லை. இதனால் சுதந்திரமாக வானில் பறக்கும் பட்சி போல் இருக்கிறேன். சரீரத்தின் நசைகளுக்கு எதிராக இடைவிடாமல் நேர்மையுடன் போரிட்டு வருகிறேன் என்கிற எண்ணமே எனக்கு உயிருட்டம் அளிக்கிறது.

-மகாத்மா காந்தி.

அபலைகள். அந்த நளினத்தையும், அபலைத் தன்மையையும் காப்பாத்திண்டு மிருதுவாவே இருக்கறதுதான் அவாளுக்கு சுபிட்சம்; அதுதான் அவாளுக்கு வெற்றியும்கூட'' என்றார்.

பிறகு சாரதையிடம் வந்து அவர் சொன்னார்: ''நீ தூது அனுப்பின லக்ஷ்மிக்கும் புருஷ குணம் எத்தனையோ இருக்கு. அவ யாத்ரா (சமய நாடகம்) நடிகர்கள் மாதிரி அப்படி அப்படியே வசனங்களைப் பேசியும், பாட்டுப் பாடியும் காட்டறா. துருதுருப்பும் பரபரப்பும் அவகிட்டே அதிகம். உனக்கு இதெல்லாம் உதவாது. பெண்களுக்கு அடக்கம்தான் பூஷணம்.''

இன்னொரு நாள் யோகின்மா ராமகிருஷ்ணரிடம் சொன்னாள்: ''சாரதாம்மாவின் மகிமை மற்றவாளுக்குத் தெரியாமலே இருக்கு. அம்மாவுக்கும் உலகம் கொண்டாடற மாதிரி பாவ சமாதி, தெய்விக பரவசம் இதெல்லாம் வரும்படியாக நீங்கதான் கிருபை செய்யணும்!''

ராமகிருஷ்ணர் கட்டிலில் கட்டை போல உட்கார்ந்திருந்தார்.

ஏனோ அவரைப் பார்க்கவே அச்சமாயிருந்தது யோகினம்மைக்கு தவறுகப் பேசி விட்டோமோ என்ற கலக்கத்துடன் அவரை நமஸ்கரித்துவிட்டு நஹபத்துக்கு விரைந்தாள்.

நஹபத்திலே கதவு அரை குறையாகத் திறந்திருந்தது. உள்ளே பூஜையில் அமர்ந்திருந்தாள் சாரதை.

யோகின் கதவிடுக்கு வழியாகப் பார்த்தாள். என்ன ஆச்சரியம்! சாரதா தேவி கலகலவென்று நகைத்துக்கொண்டிருக்கிறாள். பாவ சமாதியில் ராமகிருஷ்ணர் நகைப்பாரே அதே நகைப்பு!

இதோ கலகல நகை மாறுகிறது. பலபலவெனக் கண்ணீர் கொட்டுகிறது, சாரதையின் கண்களிலிருந்து! விம்மி விம்மி அழுகிறாள். ராமகிருஷ்ணர் பாவ நிலையில் விம்முவாரே அதே விம்மல்.

சாரதை மாறி மாறிச் சிரித்தாள், அழுதாள். சிரித்துக் கொண்டே அழுதாள். அழுதுகொண்டே சிரித்தாள்.

பிறகு அந்த பாவங்கள் அனைத்தும் மறைந்தன. அடித்த சிலையாகத் தன்னில் தானே ஊன்றி, சமாதியில் ஆழ்ந்து விட்டாள் தேவி.

யோகினுக்கு இனம் தெரியா அச்சம் உண்டாயிற்று. ஓசைப் படாமல் கதவைச் சாத்திவிட்டு அகன்றாள்.

சிறிது போதுக்குப் பின் அவள் திரும்பியபோது தேவி சமாதி நிலை கலைந்து பூஜை முடித்து, சாந்தமாக அமர்ந்திருந்தாள். ''டாகூர் கிட்டே போயிட்டு வரேளா?' என்று யோகினம்மையை அர்த்த புஷ்டியுடன் வினவினாள்.

யோகின்—மா பொய்க் கோபத்துடன் சிணுங்கினாள். ''உங்களுக்குப் பரவச அநுபவங்களே வரதில்லேன்னு சொல்லுவேளே, அதை நம்பிண்டு பைத்தியக்காரியாட்டமா டாகூர்கிட்டே போய்ச் சிபாரிசு பண்ணினேன்'' என்று அவள் தொடங்கியபோதே சாரதை சிரித்து மழுப்பிவிட்டு வேறு ஏதோ விஷயத்துக்குத் தாவிவிட்டாள்.

எதிலுமே அடங்கி வாழ வந்த அவதாரம் இது! சிற்சில சமயங்களில் அவளையும் மீறி, பரவச நிலை எய்தி விடுவாள் — பாத்திரத்தின் மேல் மூடியையும் தள்ளிக் கொண்டு பால் பொங்குவது போல்!

யோகினம்மை சாரதையுடன் ஓரிரவு நஹபத்தில் சயனித்திருந்தாள். யாரோ எங்கோ குழலூதினார்கள். நள்ளிரவில் அந்த இன்னொலி தெய்விகமாகப் பரவியது. படுத்திருந்த சாரதை எழுந்திருந்து அமர்ந்தாள். அமாநுஷ்யமாகச் சிரிக்கலானாள். யோகினும் எழுந்திருந்து மூலையில் போய்ப் பெட்டிப் பாம்பாகச் சுருட்டிக் கொண்டாள். இல்லற வாழ்வில் இருந்த தனது அண்மையும் அப்போது அம்மாவின் பரிசுத்தத்துக்கு ஹிம்சையாக இருக்கும் என்று அவளுக்குத் தெரிந்ததாம்!

சாரதைக்கு பாகவதம், ராமாயணம், தேவி மாகாத்மியம் முதலிய கதைகளையும் அழகுபடப் போதிப்பார் ராமகிருஷ்ணர். பாகவதம் சொல்லி வரும்போது ராமகிருஷ்ணர் லக்ஷ்மியிடம், ''மாடுகள் உண்டபின் அசை போடுவது போல், பகலில் நான் சொல்கிற கதைகளை நீயும் சித்தியும் ராத்திரியிலே மறுபடியும் நினைப்பூட்டிண்டு பேசிக்கணும். அப்போதான் அது எப்பவும் மனசை விட்டு விலகாமல் நிற்கும்'' என்றார். சித்தியும் மகளும் அவ்விதமே செய்து வந்தனர்.

மூலாதாரத்தி லிருந்து சகஸ்ராரம் வரையில் உள்ள சக்கரங்களை ராமகிருஷ்ணர் தம் கைப்பட ஒரு காகிதத்தில் வரைந்து சாரதையிடம் கொடுத்திருந்த தாகத் தெரிகிறது. இதிலிருந்து அவர் யோக சாஸ்திரத்திலும் அவளுக்குப் பயிற்சி அளித்தார் என்று புலனாகிறது.

வெளி மனிதர்கள் அவளைச் சாமானிய ஸ்திரீயாக எண்ணிய காலத்திலும் அவளது திவ்யானுபவங்களை அவர் அறிந்திருந்தார். ராமகிருஷ்ணரின் பக்தர்கள்கூட 'டாகூருக்குப் புத்திக் கலக்கம்தானோ?' என்று கலங்கிய சமயங்களிலும் — ஏன், அவரே தம்மைப் பற்றி இவ்விதம் சம்சயித்த சமயங்களிலும் — சாரதைக்கு அவரது உத்தமமான புனித அநுபவம் புரியத்தான் செய்தது. ஒரு நாள் அவர், "பீடா சுருட்டி வெச்சுட்டு, என் படுக்கையை நன்னாத் தட்டிப் போட்டுட்டு, இந்த அறையையும் மெழுகிச் சுத்தப்படுத்தி வை. நான் காளியை நமஸ்காரம் பண்ணிட்டு வரேன்" என்று சொல்லி, பவதாரிணி சந்நிதிக்குச் சென்றார். அம்மா அந்தக் காரியங்களைச் செவ்வனே செய்து முடிக்கிற சமயத்தில் ராமகிருஷ்ணர் திரும்பினார். அவர் நடை தடுமாறியது. கண்கள் சிவந்திருந்தன. எதையோ குழறியது அவரது திருவாய். அவர் வழக்கமில்லாத வழக்கமாக அம்மாவை இழுத்து நிறுத்தினார். அவருக்கே தம் நிலை புரியவில்லை. "அம்மா! நான் ஏன் இப்படியெல்லாம் பண்ணறேன்? குடிச்சுத் தொலைச்சுட்டேனா?" என்றார்.

சிவந்த கண்கள், உடம்பிலே ஆட்டம், உளறுகிற உதடுகள் — இத்தியாதி லட்சணத்தோடு அவரே 'குடித்தா விட்டேன்?' என்று கேட்டபோது எந்தப் பெண்ணுக்கும் ஐயம் உண்டாகும்!

ஆனால் அவரால் பலவந்தமாக இழுத்து நிறுத்தப் பட்டிருந்ததால் தள்ளாடிக் கொண்டிருந்த தேவியோ மனத்தில் சிறிதும் தள்ளாட்ட மில்லாமல், தெளிந்து சொன்னாள்: "என்னன்னா இப்படிக் கேக்கறேள்! நீங்களாவது குடிக்கிறதாவது?"

கணவருக்கு உரிய உன்னத ஹாஸ்ய உணர்வைத் தானும்பெற்றுத் தொடர்ந்தாள்: "இல்லை; குடிச்சுத்தான் இருக்கேள். காளியம்மாவோட பிரேமை அமிருதத்தை நன்னாக் குடிச்சுட்டு வந்திருக்கேள்."

ராமகிருஷ்ணருக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. "ஆகா, எத்தனை சரியாச் சொல்லிட்டே!" என்று பாராட்டினார்.

சாரதா தேவியின் அன்றாட நடப்புக்களைப் பார்த்து வரும்போது அவள்

## வையத்தை இயக்கும் வைதிகம்

உலகில் உள்ள மற்ற தேசங்கள் எதிலும் வைதிக ஆசாரம் இல்லாதபோது நமக்கு மட்டும் இது எதற்கு என்று கேட்கிற பாரதீயர் (இந்தியர்) களும் இருக்கிறார்கள். ஒரு ரயில் இருக்கிறது. அதில் பல பெட்டிகள் இருக்கின்றன. ஆனால் ஒரே ஒரு டிரைவர்தான் இருக்கிறார். அவர் அந்தப் பெட்டிகள் எதிலும் இருப்பதில்லை. என்ஜினில் இருக்கிறார். அவர் என்ஜினை ஓட்டினாலே அத்தனை பெட்டிகளும் அந்த வழியில் ஓடுகின்றன. உலகம் என்ற ரயிலில் ஏனைய சகல நாடுகளும் பெட்டிகள்; பாரதமே என்ஜின். அந்த என்ஜினை நல்ல வழியில் ஓட்டுவது வைதிக தர்மம் என்ற சாரதியே யாகும். நம் ஒரு நாட்டில் வைதிக தர்மம் கடைப்பிடிக்கப்பட்டாலே போதும்; உலகமனைத்தும் நல்ல மார்க்கத்தில் செல்லும். மற்றப் பெட்டிகளில் டிரைவர் இல்லாததால் என்ஜினிலும் டிரைவர் வேண்டாம் என்பது போலாகும், நாமும் மற்ற நாடுகளைப் பார்த்து வேத தர்மத்தைக் கைவிடுவது.

— ஸ்ரீ ஸத்ய ஸாயி பாபா

அவருக்கு அமுதம் படைப்பதாகச் சொல்லிவிட்டு, வேறேதேதோ அமுத சம்பவங்களுக்குப் பாய்ந்து விட்டோம். பரவாயில்லை, தேவி அவருடன் ஏகாந்தமாக இருந்ததே இந்தப் போஜன வேளையில்தான். அதை இத்தனை நீளம் நீட்டி அந்தத் திவ்விய தம்பதியை இத்துணைக் காலம் தனியாக விட்டதும், அம்மாவின் ஆசியையே நமக்கு வாங்கித் தரும்!

* * *

**ரா**மகிருஷ்ணர் பகலுணவு உண்டு முடிக்கும்போது சுமார் பதினொரு மணியாகிவிடும். காலை மூன்று மணிக்கு விழித்து எத்தனையோ காரியம் செய்த சாரதையின் திருஉதரத்தில் இதுவரை தின்பண்டமோ, பானமோ எதுவுமே இறங்கியதில்லை. அந்தக் காலத்தில் காப்பி, டீ உண்டா, ரொட்டி, பிஸ்கத்து உண்டா? பதி உண்டவுடன், அவர் மிகுதி வைத்துள்ள உச்சிஷ்டத்தில் சிறிதளவை அவசரமாக உண்டு, ஒரு குவளை நீர் பருகுவாள் தேவி. பிறகு தன் இருக்கைக்குத் திரும்பி, வெற்றிலைச் சுருள் மடிப்பாள். இந்த வேலையை முடித்துச் சிறிது நேரம் மிக மெல்லிய குரலில் கானம் செய்வாள். ஆலயில் ஒரு மணிக்குச் சங்கு ஊதும்போது உணவு உட்கொள்வாள். அதன் பின் சிறிது நேரம் 'கட்டை' யைக் கீழே போடுவாள். ஜன நடமாட்ட மில்லாதபொழுது தேவி நஹபத்திலிருந்து வெளி வந்து, படியிலே அமர்ந்து, தனது அடர்ந்த நீண்ட கேசத்தை வெய்யிலில் உலர்த்திக் கொள்வாள். அதிகாலையில் நீராடிவிட்டு இது

காறும் ஒரு சும்மாடு கூந்தலை ஈரத்துடன் சு ந்து கொண்டிருப்பது எத்தனை சிரமம் என்பதைப் பெண்களே அறிவர். பிறகு விளக்குத் திரிகள் திரிப்பது போன்ற சின்னச் சின்னக் காரியங்களைச் செய் வாள். மாலை ஸ்நானத்துக்கு, கூப்பிடு தூரத்திலே உள்ள கங்கைக்குச் செல்ல மாட்டாள். ஜனசஞ்சாரம் இருக்குமே! நஹவத்திலே ஒரு மூலையிலே எப்படியோ குளித்து விட்டு, உடைகளையும் தோய்த் துக் கொள்வாள். பிறகு நஹவத்தில் வைத்திருந்த தெய்வத் திருவுருவங்களின் முன் விளக்கேற்றி வைத்துத் தூபம் காட்டுவாள். புனித சந்தியா காலத்தில் சிறிது தியானம் செய்வாள். அடுத்து பக்தருக்காகவும் பதிதேவருக்காகவும் உணவு தயாரிக்கும் வேலை தொடங்கி விடும். மாலையில் கல்கத்தாவிலிருந்து டாகூரைக் காண வந்த பலர் வெகு நேரம் தங்கிவிடுவர். அதன்பின் அவர்கள் வீடு போய்ச் சேரமிகுந்த நேரமாகிவிடும் அல்லவா? எனவே காளி கோயில் பிர சாதம் அனைவருக்கும் போதாது என்ப தால் அவர்களுக்காகவும் பலவித உணவு வகைகளைச் சமைப்பாள் அம்மா. பெண் மணிகள் இரவிலே திரும்புவது சிரமம் அல்லவா? அவர்கள் தக்ஷிணேசுவரத்தி லேயே படுப்பார்கள். சின்னஞ் சிறிய நஹவத்தில் என்ன மந்திரமோ செய்து அத்தனைபேருக்கும் சயனம் தயாரித்து விடுவாள் அம்மா. அவர்கள் ராம கிருஷ்ணருடன் இரவு பத்து மணிவரை உரையாடிவிட்டு நஹவத்துக்குத் திரும்பு வார்கள். இவளோ உணவு பரிமாறும் வேளை தவிர மற்றப் பொழுதுகளில் அவரது தரிசனமே பெறுமல், ஆனல் அதற்காகவும் வருந்தாமல், அந்தப் பெண்களுக்கு உணவு செய்தும், படுக்கை விரித்தும் பணி செய்வாள். பதினொரு மணிக்குப் பிறகு தானும் ஏதோ உண்டு விட்டு, கித்தான் ஒன்றின்மீது முரட்டுப் பாயை விரித்துக் கொண்டு அப்படியே படுத்து உறங்கி விடுவாள்.

அவள் அடங்கித்தான் இருக்க வேண் டும் என்று ராமகிருஷ்ணர் விரும்பியது போலவே, அவள் இவ்விதம் உழைத் துக்கொண்டே யிருப்பதையும் அவர் மனமார வரவேற்ருர். ''எல்லோரும் உழைக்கணும். அதுவும் பெண்டுகள் சோம்பி உட்கார்ந்திருக்கவே கூடாது. வேலை யில்லாமல் உட்கார்ந்திருப்பதால் வீணுன எண்ணங்கள்தான் உண்டாகும். ஏன், கெட்ட சிந்தனைகள்கூட வரும்'' என்பார். வீணுன எண்ணமோ கெட்ட எண்ணமோ எழவே முடியாத தேவி சாரதை மற்றவர்களுக்கு உதாரணமாக உழைத்துக் காட்டினுள்.

அவள் சிறிது நேரம் வேலை இல்லாம லிருந்தாலும் அவர் மெனக்கெட்டு நஹ வத்துக்கு வந்து ஏதாவது ஒரு வேலை யைக் கொடுத்து விட்டுப் போவார். பிற்காலத்தில் அம்மா நினைவுகூர்ந்து சொல்வாள்: ''ஒரு நாள் அவர் ஏகப் பட்ட சணல்கண்டைக் கொண்டு வந் தார். 'இந்தச் சணலை யெல்லாம் நன்னு முறுக்கி, என் அறையில் நாலு அஞ்சு உறி பண்ணித் தொங்கவிடு. காளி கோயில்லேயிருந்தும், பக்தாள் கிட்டே யிருந்தும் வருகிற பட்சணம் பழ வகை களை உறியிலே வச்சிருந்தா பசங்கள் வரச்சே கொடுப்பேன்'' என்றார். (பிற் காலத்தில் ராமகிருஷ்ணரின் பெயரில் எழுந்த உலக ஸ்தாபனத்தின் ஆதார ஸ்தம்பங்களாக நின்ற மகா புருஷர்கள் இந்தப் 'பசங்கள்' தான்) அவர் சொன்ன படியே பண்ணினேன். க ளம் கூளமா சணல் பாக்கி யிருந்தது. அதை யெல் லாம் ஒரு பைக்குள்ளே அடைச்சு எனக் குத் தலைகாணியாத் தைச்சுண்டேன்.''

வேலைக்குக் கூலி தலைகாணி! அதுவரை அவளுக்குத் தலைகாணி கிடையாது.

பக்தர்கள் பிடிவாதமாக வாங்கிப் போட்டிருந்த கட்டிலின்மீது பஞ்சு மெத் தையில் அமர்ந்து கொண்டு இந்தச் சம்பவத்தை நினைவுகூர்ந்த அம்மா, ''அந்த முரட்டுப் பாயிலே படுத் துண்டபோதும், இப்போ இந்த மெத் தையிலே படுக்கிற மாதிரியே, சௌக் கியமாத்தான் தூங்கினேன். எனக்கு ஒண்ணும் வித்தியாசம் தெரியலை, குழந் தைகளே! எனக்குக் கஷ்டம் என்பது துளிக்கூடத் தெரிஞ்சதில்லை. அவருடைய சேவைன்னு ஏற்பட்டுவிட்டால், அதிலே எனக்கு இம்மியும் அசௌகரியமே தெரி யாது. ஒவ்வொரு நாளும் நிம்மதியா ஓடித்து; ஆனந்தமா ஓடித்து'' என்றாள்.

'அவருடைய சேவை' என்றாள்! ஆனல் ராமபிரானின் பாதத்தருகிலேயே அமர்ந்துள்ள மாருதி போல் ராமகிருஷ் ணரின் அண்மையில் இருந்தா அவள் சேவை செய்தாள்? அவரை அவள் கண் ணுலும் காணுமல் ஓடிய நாட்கள் எத் தனையோ! ஆயினும் அவருக்காகச் செய் கிறோம் என்ற எண்ணமே அவளை எப் போதும் உற்சாகமாக வைத்திருந்தது. எவ்விதக் கட்டுப்பாடும் இன்றித் திறந்த மடைபோல் ராமகிருஷ்ணர் தமது பக் தர்களுடன் ஒருபுறத்தில் அமளி துமளி செய்து கொண்டிருக்க, எழுபத்தைந்தே அடி தொலைவில் சகல கட்டுப்பாடுகளை யும் விதித்துக் கொண்ட தேவி அந்த பக்தர்களுக்காகவும், பதி தேவருக்காக வும் செய்த அற்புத எளிமைகளைப் பார்ப்போம்! (தொடரும்)

# அறம்-பொருள்-இன்பம்-வீடு



## ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

தர்ம — அர்த்த — காம — மோக்ஷங்களுக்கு ஸாதனமாக இருப்பது மதம். இந்த நான்கையும் புருஷார்த்தங்கள் என்பார்கள்.

அர்த்தம் என்பதைத் தமிழில் பொருள் என்று சொல்லுவார்கள். 'காமம்', 'மோக்ஷம்' என்பவைகளை 'இன்பம்', 'வீடு' என்பார்கள். புருஷார்த்தம் என்பதில் 'அர்த்தம்' என்னும் வார்த்தை இருக்கிறது. முன்பு சொன்ன நான்கிலும் ஓர் அர்த்தம் இருக்கிறது. 'அர்த்தித்தல்' என்றால் 'வேண்டுமென்று நினைத்தல்'. புருஷன், அதாவது பிராணிகளாகப் பிறந்தவர்கள், தனக்கு வேண்டுமென்று எவைகளை நினைக்கிறார்களோ அவைகள்தாம் புருஷார்த்தங்கள். எதை மனிதன் வேண்டுமென்று நினைக்கிறான்? குறைவில்லாமல் சந்தோஷமாக இருக்க வேண்டுமென்று அவன் நினைக்கிறான். அந்த சந்தோஷம் இரண்டு விதம். கொஞ்ச நாழிகை இருப்பது ஒரு விதம்; எப்பொழுதும் குறையாமல் இருப்பது மற்றொரு வகை. கொஞ்ச நாழிகை சந்தோஷம் உண்டாவது தான் இன்பம் அல்லது காமம். காமம் என்பது எல்லாவித உலக ஆசைகளையும் குறிக்கும். ஒருமுறை வந்துவிட்டால் எந்தக் காலத்திலும் போகாத பேரின்பம் மோக்ஷம் — வீடு. அந்தப் பேரின்பத்தின் பெருமை தெரியாததால்தான் காம இன்பம் வேண்டுமென்று மனிதர்கள் நினைக்கிறார்கள்.

ஆகவே, நாம் உண்மையில் வேண்டுமென்று நினைக்க வேண்டியது நான்காவதாகிய வீடு. இப்பொழுது நடைமுறையில் வேண்டுமென்பதோ மூன்றாவதாகிய இன்பம். நாம் சாப்பிடுவதனால் ஆனந்தம் உண்டாகிறது. அது ஓர் இன்பம். ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்தால் அதுவும் ஒருவகை இன்பம். நல் வரவு பத்திரம் வாசித்துக் கொடுத்தால் ஓர் ஆனந்தம்; அதுவும் இன்பந்தான். இந்த இன்பங்கள் சாசுவதமல்ல. இந்தச் சில்லறை இன்பத்தை எதனால் சம்பாதிக்கிறோமோ அது பொருள். அது தானியமாக இருக்கலாம், பணமாக இருக்கலாம், வீடாக இருக்கலாம், மனிதர்களாக இருக்கலாம். பொருளே இன்பத்துக்குச் சாதனம். இந்த இன்பத்தைச் சிறிது பொழுதில் அநுபவித்துத் தீர்த்து விடுகிறோம். மறுபடி இன்பம் வேண்டும் என்ற தவிப்புத் தொடங்குகிறது.

இதற்கு மேல் ஒன்று வேண்டும் என்று தோன்றச் செய்யாத நிலைத்த பேரின்பமே மோக்ஷம். அதுதான் வீடு. நாம் ஊரெல்லாம் சுற்றுகிறோம். அலைந்து கஷ்டப்படுகிறோம். நாம் வந்து அடைய வேண்டியது சொந்த வீடு. ஜெயிலில் ஒருவன் இருக்கிறான். அதிலிருந்து அவன் வந்தால் வீட்டுக்குப் போகிறான். 'வீடு' என்பதற்கே விடுதலை என்று அர்த்தம். இப்பொழுது மாம்ஸமாகிய ஜெயிலுக்குள் இருக்கிறோம். இந்த உடம்பில் தான் நாம் இருக்கிறதாக எண்ணியிருக்கிறோம். நாம் நம்முடைய சொந்த இடத்தில் இருக்க வேண்டும். அதாவது வீட்டில் இருக்க வேண்டும். அந்த வீடுதான் எல்லையற்ற இன்பம். உலகிலே காலம், தேசம், வஸ்து இந்த மூன்றிலும் குறையாமல் நிறைந்து இருப்பது பேரின்பம்.

புருஷார்த்தங்களில் முதலாவதான 'தர்மம்' என்பதைப் பற்றிக் கடைசியில் சொல்கிறேன். எந்தக் காரியம் செய்தால் நல்லதோ அது தர்மம். தமிழில் 'அறம்' என்பார்கள். முன் ஜன்மத்தில் நாம் அர்த்தத்தை (பொருளை) மற்றவருக்குக் கொடுத்து தர்மம் செய்தால் அது மறு ஜன்மத்தில் நமக்குக் கிடைக்கும். தர்மத்தினுடைய பிரயோஜனமே பொருள். இன்பத்துக்குப் பொருள் சாதனமாக இருப்பது போல் பொருளுக்குத் தர்மம் சாதனமாக இருக்கிறது.

நாம் செய்யும் தர்மத்தை 'இதனால் எனக்குப் பொருள் — அர்த்தம் — வேண்டாம்; ஈசுவரன் நினைத்ததைக் கொடுக்கட்டும்' என்று பலனை எதிர்பாராமல், அர்ப்பணம் பண்ணிவிட்டால் நம்மிடத்தில் உள்ள அழுக்கு போய்ப் பேரின்பம் கிடைக்கும். பொருளைத் தரும் தர்மமே அப்பொழுது மோக்ஷமாகிற வீட்டுக்கு ஸாதனமாய்விடும். இப்படி தர்மமானது பொருளுக்கு ஸாதனமாகவும், அதன் மூலம் இன்பத்துக்கு ஸாதனமாகவும், பற்றின்றி நிஷ்காம்யமாகச் செய்யப்பட்டால் வீட்டுக்கு ஸாதனமாகவும் ஆகின்றது. தர்மம் செய்தால் பிரதியாகப் பொருள் கிடைக்கிறது. அந்தப் பொருளைக் கொண்டே மறுபடி தர்மம் செய்யலாம். இப்போது அர்த்தமே தர்மம் செய்ய ஸாதனமாக இருக்கிறது. இன்பம் ஒன்றுதான் தன்னாலும் நிறைவு படுவதில்லை; பிறவற்றுக்கும் சாதனமாக இருப்பதில்லை. கொதிக்கிற மணலில் விட்ட ஜலம் உடனே சுவறிப் போவதுபோல் 'இன்பம்' என்பது, தன்னாலும் நிறைவின்றி, வேறெதுக்கும் சாதனமாகவும் இன்றி நசித்துப் போகிறது.

# அம்மா

## ரா. கணபதி

### 24. உடலில் உழைப்பு; உள்ளத்தில் உவப்பு

தனக்குரிய ஊழியம் யாது எனக் கண்டு கொண்டவன் பாக்கியசாலி; அவன் வேறெந்த பாக்கியத்தையும் கோராதிருப்பானாக !

- கார்லைல்: "அன்றும் இன்றும்"

ராமன் கிஷ்கிந்தையில் இருந்தான்; எட்டாத் தொலைவில் இலங்கையில் சிறைப்பட்டிருந்தாள் சீதை. ராமனையே எண்ணி உள்ளம் குமைந்தாள்.

சிவபெருமான் கயிலையில் இருந்தான்; தேவி காமாக்ஷி காஞ்சியில் கம்பைக் கரையில் இருந்தாள். சிவத்துக்காகத் தவமிருந்து தவித்தாள்.

கண்ணன் துவாரகையில் இருந்தான்; பல காதம் தள்ளித் திரு ஆய்ப்பாடியில் வாழ்ந்தாள் ராதை. கண்ணனையே நினைந்து உருகினாள்.

ராமகிருஷ்ணரும் சாரதாமணியும் எழுபத்தைந்தே அடித் தொலைவில்தான் இருந்தனர். ஆனால் அவரைக் காணாமலே அவள் துடித்த நாட்கள் பலப்பல.

ஜானகியை ராவணன் சிறைப்படுத்தி வைத்தது போல் சாரதையை யாரும் சிறை வைக்கவில்லை. அவளாகவே நஹபத்துக்குள் சிறைப்பட்டுக் கொண்டாள். 'நிறை காக்கும் காப்பு'க்காக, 'சிறை காத்து'க் கொண்டாள்.

தேவி காமாக்ஷி நாயகனின் சாபத்தினால் காஞ்சியில் வந்துதித்துத் தவமிருந்தாள். சாரதையின் நாயகருக்கோ சபிக்கவே தெரியாது. வரம் தரத்தான் தெரியும். அவர் அவளுக்கு 'அடக்கம்' என்ற வரத்தைத் தந்திருந்தார். அந்த வரத்தினாலேயே அவள் அவரைப் பிரிந்து தனித்திருந்தாள்.

வெளிச் சூழலின் நிர்ப்பந்தம் கண்ணனை ராதையிடமிருந்து பிரித்தது. தேவி சாரதைக்கு அப்படிப்பட்ட நிர்ப்பந்தமில்லை. உள்ளுக்குள்ளேயே ஒரு பந்தம் அல்லது கட்டுப்பாடுதான் அவளை அவரிடமிருந்து பிரித்தது.

அவரிடம் வைத்த அன்புக்குக் குறைவின்றி, அவரது அடியாரிடமும் அவள் அன்பு வைத்திருந்தாள். இந்த அன்னையன்பே அவரிடமிருந்து பிரித்து வைத்தது. அவரது பெண்ணடியார்களில் ஒருத்திக்குச் சாரதை மட்டுமே அவருக்கு உணவு படைப்பது பொறுக்கவில்லை.



துளிக்கூடக் கூச்சமின்றி சாரதா தேவியிடமே வந்து, ''நீங்க எதுக்காக டாகூர் கிட்ட போறேள்?'' என்று கேட்டாள்.

பெண்ணடியார்கள் ராமகிருஷ்ணரை நாடிவந்து நீண்ட நேரம் உரையாடுவதைப் பற்றி அவரது கைப்பிடித்த நம் அம்மா ஒருபோதும் வித்தியாசமாக எண்ணியதில்லை. அவர்களைப் போல் அவரிடம் பேசிக் கொண்டிருக்க அவளுக்கு அநுமதியில்லை. அப்படியிருந்தும் அந்தப் பெண்களுக்காகவும் இவள் உழைத்தாள். மனோதத்துவ இயல் கூறுகிற இயல்பான அசூயை உந்தல்கள் சிறிதும் இல்லாமல், சுபாவமாகவே அவள் அப்படி வாழ்ந்ததுதான் அவளை வெறும் மானுடப் பிறவியாக அன்றித் தெய்வத்துள் வைத்திருக்கிறது. இப்படிப்பட்டவளிடம் — ராமகிருஷ்ணரின்

அவரைக் கண்டு பேசத் தனக்குக் கிடைத்திருந்த ஒரே ஒரு வாய்ப்பையும் தியாகம் செய்தாள். அதன் பின் பல நாட்கள் அம்மா அவருக்கு உணவு எடுத்துச் செல்லவில்லை.

ராமகிருஷ்ணரும் விளையாட்டுப் பார்த்தார். ஆனால் உணவு கொள்ளும் சமயங்களில் அவருக்குப் பரவச நிலை ஏற்படாமல் பேச்சை வளைத்துப் போகிற சாதுரியம், அல்லது மாதுரியம் சாரதைக்கே இருந்தது.

ஒருகால் கோலாப்—மா தம்மைச் 'சரிக்கட்ட'க்கூடும் என்று எண்ணினார் ராமகிருஷ்ணர். அவருக்காகப் பார்த்துப் பார்த்துச் சமைத்த அம்மா அவரைப் பார்க்கவும் முடியாதபோதிலும் மன வேற்றுமையே இன்றி உணவை கோலாப் மூலம் அனுப்பிக் கொண்டிருந்தாள்.





சாக்ஷாத் பத்தினியிடம் — ஒருத்தி, 'உங்களுக்கு அவரிடம் என்ன வேலை?' என்று கேட்டுவிட்டாள்.

அம்மா சிறிதும் ஆத்திரம் கொள்ளவில்லை. இப்படிக் கேட்டவளுக்கும் அவள் அம்மாவாகவே இருந்தாள். 'நாம் ஏகாந்தத்தில் அவருக்கு உணவு படைப்பதால் இவர்களுக்கெல்லாம் மன வருத்தம் போலிருக்கிறது. அந்த வருத்தத்துக்கு நாம் ஏன் காரணமாக இருக்க வேண்டும்?' என்று எண்ணியது அவளது எளிய நெஞ்சு. அந்த எளிமை செய்த தியாகத்தை நம்மால் எண்ணிப் பார்க்கவே இயலவில்லை.

''ஏனம்மா! டாகூருக்குப் பரிசாரகம் பண்ணணும்னு உங்களுக்கு ஆசையா இருந்தா நீங்களே பண்ணுங்களேன்'' என்றாள் துடுக்குக்காரியிடம்.

ராமகிருஷ்ணரின் அறையில் பாட்டும் பேச்சும் கும்மாளியுமாக இருக்கும். மற்றவர்கள் யாவரும் அந்த ஆனந்தத்தில் திளைத்துக் கிடக்க அம்மா மட்டும் நஹவத்தில் இளைத்துக் கிடப்பாள். 'அந்த திவ்விய மூர்த்தியைப் பார்க்காமலே ஒவ்வொரு நாளாகப் போகிறதே' என்ற தவிப்பு அவ்வப்போது பீறிஎழும். அவளை வருமாறு அவர் ஒரு வார்த்தைகூடச் சொல்லாதபோதிலும் அவளுக்கு அவர் மீது தாபமே உண்டாகாது. 'இத்தனை நாட்கள் அவருக்கு அருகிருந்து பணிவிடை செய்தேனே. அதற்கு எத்தனை பாக்கியம் செய்திருக்கவேண்டும்! இன்னமும் பாக்கியம் வேண்டும் என்று கேட்க எனக்கேது தகுதி?' என்றெண்ணுவாள்.

மாலை மங்குகையில் நஹவத் கதவிடுக்கின் வழியாக வெளியே பார்வையைச்

செலுத்தித் துழாவுவாள். காலடி ஓசை கேட்கும். அவளது இதயம் அடித்துக் கொள்ளும். 'அவர்தான். வழக்கம் போல் தோப்புக்குப் போகிறார்!' இடுக்கு வழியே செல்லும் பார்வையைக் கூராக்கிக் கொள்வாள். அரையிருளில் பொற்பொடி மூட்டம் போல அவரது திவ்விய ரூபம் தெரியும். ஒருசில விநாடிகள் தான். சாரதையின் நெஞ்சு நிரம்பிப் போகும். இரவுச் சமையலுக்காக மாவு பிசையத் தொடங்கி விடுவாள்.

அங்கே ராமகிருஷ்ணரின் அறையில் பக்தர்கள் பூரித்துக் கொண்டிருப்பார்கள். இங்கே நஹவத்தில் பூரிகள் குண்டு குண்டாக வெந்து கொண்டிருக்கும். 'நரேனுக்குப் பிடிக்கும்' என்று எண்ணி அம்மாவும் பூரிப்பாள்!

ராமகிருஷ்ணர் ஒருவர்தான் பூரிக்காதவர் போலும்! வெளிப் பார்வைக்கு அவர் கும்மாளமிட்டுக் கொண்டுதான் இருந்தார். அம்மாவிடம் அவர் நிர்தாட்சிண்யமாக இருந்ததாகக்கூடச் சிலருக்குத் தோன்றலாம். ஆனால் படித்தறியா அவள் மூலம் உலகமெலாம் படிப்புப் பெறவே அவர் இப்படிக் 'கொடுமை' செய்தார். உள்ளூற அவர் பூரிக்கவில்லை என்பது அவ்வப்போது அவர் நெகிழ்ந்து கூறும் வார்த்தைகளிலிருந்து தெரியும்.

காளி கோயில் பிரசாதம் அவர் முன் கொண்டு வந்து வைக்கப்படும். அருகே உள்ள அடியார்களுக்குப் பகிர்ந்து தருவார். தாலத்தில் மீதம் இருக்கும்.

''ராமலாலா! கூட்டிலே கிளி இருக்கே! அதுக்குப் பருப்பும் பழமும் கொடுத்துட்டு வா'' என்பார்.

ராமலால் தாலத்தை எடுத்துக் கொண்டு வெளியேறுவார்.

ராமகிருஷ்ணர் கிளி வளர்க்கிறார் என்றுதான் விஷயம் தெரியாதவர்கள் எண்ணினார்கள். அவர் குறிப்பிட்ட கூட்டுக் கிளி நஹவத் அம்மாதான்.

'கிளி' என்ற வார்த்தையில் எத்தனை வாஞ்சை சொட்டுகிறது! 'சுகபாணி' என்று வாணியைச் சொல்வார்கள். இங்கோ சுகமாகவே இருந்தாள்!

''ஜோடிக் கிளி கூண்டிலே இருக்கு'' என்று அவர் அடிக்கடி சொல்வார். அவ்வப்போது அவரது தமையன் மகள் லக்ஷ்மியும் சாரதையோடு இருந்ததால் 'ஜோடிக் கிளி' என்பார்.

அவரது அறையிலிருந்து பரவச நாதங்கள் எழும்பி அவற்றின் மெல்லிழைகள் நஹவத்துக்குள்ளும் ஊடுருவும். கண்ணன் குழல் கேட்டுப் பொறி புலன் அனைத்தையும் அதிலேயே பறிகொடுத்த மீராவைப் போல் சாரதை கரைந்துருகிப் போவாள். வேலைகளை விருவிருவென முடித்துக் கொண்டு மூங்கில் தட்டியண்டை வந்து நின்றுவிடுவாள்.

நின்றுகொண்டேயிருப்பாள்! மணிக் கணக்காக நின்றாள்! இப்படி நாட்கணக்கில் நின்றாள்!

கங்கையிலிருந்து ஓதம் நிறைந்த காற்று வீசும். உடல் நடுங்கும். மனம் நடுங்காது. நின்று கொண்டேயிருப்பாள். உடலால் அந்தப் பனி வாடைக்கு ஈடு கொடுக்க முடியவில்லை. சாரதையின் பொன் வண்ணம் உதிரலாயிற்று. சதை சுருங்கிக் கருமை கொள்ளலாயிற்று. ஆனால் அவள் அழகையா பொருட்படுத்தினாள்! எலும்புக்குள்ளும் பனி வாடை புகுந்தது. சாரதைக்கு மூட்டு வலி, கீல்வாதம் இவை நீங்காத ரோகங்களாக வந்து சேர்ந்தன. ஏற்கனவே அவள் மலேரியா நோயாளி. வசதியற்ற தக்ஷிணேசுவரத்தில் தனது விசர்ஜனங்களைக்கூடக் கட்டுப்படுத்திக் கொண்டு (ஆகா, வெளியில் சொல்லிக் கொள்ள முடியாதபடி நம் அம்மா அநுபவித்த அவஸ்தைகள் தாம் எத்தனை!) அவளாக வயிற்றுக் கோளாற்றை உண்டாக்கிக் கொண்டாள். இப்போது வாதப் பிடிப்பும் சேர்ந்து கொண்டது!

பொறுத்துக் கொண்டாள். உள்ளத்தில் உவகை பூத்துக் கொண்டு, உடலால் உழைத்துக் கொட்டினாள்.

## 25. "அம்மா என்று அழைத்து விட்டால்..."

**நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்கு**
**தாயிற் சிறந்த தயாவான தத்துவனே**
- திருவாசகம்

ஆனால் ராமகிருஷ்ணரால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. மீண்டும் சாரதையைத் தமக்கு உணவு கொண்டு வருமாறு பணித்து விட்டார்!

**சாதம் படைக்கவும் செய்திடுவோம்-அமுதச்**
**சாதி படைக்கவும் செய்திடுவோம்**

என்று பாரதியார் பாடினார். விவேகாநந்தர், பிரம்மாநந்தர், சாரதாநந்தர் முதலிய அமுதச் சாதியினர் அம்மாவின் சாதத்தால் உருவானவர்களே!

அவள் பூரணத்துவம் பெற்ற ஸ்தானம் அன்னபூரணியாகத்தான். இங்கே ராமகிருஷ்ணர் கூட அவளுக்கு இரண்டாம் பட்சம்தான். ஆம், அவள் பதிவிரதைமட்டுமல்ல; அதைவிடப் பெரிய புத்திரவிரதை. உலகில் அவளைப் போல் பதிவிரதம் காத்த உத்தமிகள் பலர் இருக்கலாம். ஆனால் தன் வயிறு திறவாமலே அவள் அம்மாவாகி, 'புத்திர

விரதம்' என்ற ஒன்றை அநுஷ்டித்தாளே. அதில் அவளுக்கு ஈடுமில்லே, இணையுமில்லே. புத்திர விரதம் என்று வரும்போது பதியையே மீறுவாள், அடக்கத்தின் உருவான நம் அம்மா.

பிரம்மசாரிச் சிடர்களுக்கு மிதமாகவே உணவளிக்க வேண்டும் என்பது ராம கிருஷ்ணரின் உத்தரவு. இந்த உத்தரவுக்கு அம்மா அடங்கி நடக்கவில்லே. அவர்களுக்கு வயிருர அன்னமிடுவாள். ராகாலுக்கு ஆறு சப்பாத்திகளும், லாடுவுக்கு ஐந்தும், பாபு ராமுக்கு நாலும் வழங்க வேண்டும் என்பது அவரது உத்தரவு. 'பசங்களே'ப் பார்க்கும்போது அவரது உத்தரவை 'நஹவத் யஜமானி' நிறைவேற்றவில்லே என்று அவருக்குத் தெரிந்து விட்டது. பாபுராமிடம் அவர் கேட்டபோது, அவன் ஒளிவின்றி, ''அம்மா எனக்கு ஆறு சப்பாத்திகூடப் போடறதுண்டு'' என்ருன்.

ராமகிருஷ்ணருக்குக் கன கோபம் வந்து விட்டது. நேரே நஹவத்துக்குப் போனர். ''நீ பாபுராமுக்கு ஆறு சப்பாத்தி போடறயாமே!'' என்ருர்.

''ஆமாம், போடறேன்'' என்ருள் அம்மா சர்வ நிதானமாக.

''பசங்க நாக்கைக் கட்டுப்படுத்த வொட்டாமே அவாளேக் கெடுக்கிறே! நீ மூளேயில்லாமப் பிரியம் காட்டி அவாளோட்டே ஆத்மிகத்துக்கு எத்தனே ஹானி பண்ணிண்டிருக்கே தெரியுமா?''

அவள் துளிக்கூடக் கலங்கவில்லே. ''ஏதோ இரண்டு சப்பாத்தி அதிகமாப் போட்டுட்டேன்னு நீங்க ஏதுக்கு இப்படிக் கலங்கறேள்? **அவாளோட எதிர் காலத்தை நான் பார்த்துக்கறேன்.** 'வயிறு முட்டத் தின்னறேளா?'ன்னு அந்தக் குழந்தைகளே வையாதேயுங்கோ. ஆமாம், சொல்லிட்டேன்' என்ருள்.

ராமகிருஷ்ணர் விக்கித்து நின்ருர். அது ஆனந்த விக்கல். எல்லோரையும் ஜகன் மாதாவாகப் பார்ப்பது போல் சாரதையையும் ஜகன் மாதாவாகப் பார்த்த அவர், அவள் இப்போது வாஸ்தவமாகவே தன் ஜகன்மாத்ருத்துவத்தை உணர்ந்து கூறிய உன்னத மொழிகளேக் கேட்டு விக்கித்து நின்ருர். இவர் அந்தப் பிள்ளேகளுக்கு உபதேசம் தந்தார் — வாசகங்களாக, அநுஷ்டானங்களாக. அவளும் உபதேசம் தந்தாள்— சப்பாத்தியாக, பயத்தம் பருப்புக் கூட்டாக, லுசியாக, கிச்சுடியாக. சமைப்பவரின் மனப்பான்மையும், பரிமாறுபவரின் மனப்பான்மையும் உண்பவரின் உள்ளே புகும் என்று நம் சாஸ்திரங்கள் சொல்கின்றன. அதனுல்தான் போஜனத்துக்கு மிகுந்த நியதிகளே விதித்திருக்கின்றன எதிர்கால விவேகா-

## பெண்ணுக்கு அழகு எது?

பெண்மணிகளே! நீங்கள் ஒவ்வொருவரும் மகாராணிகளாகத் திகழ வேண்டும் என்பதே என் விருப்பம். 'மகாராணிகள்' என்ருல் எவ்விதத்தில்? நம் நாட்டில் பூர்வத்தில் மகாராணிகள் எல்லாம் அறிந்தவர்களாகவும், கற்பரசிகளாகவும் இருந்தார்கள். அவர்களுக்கு நாட்டு நடப்புகள் நன்கு தெரியும். ஆயினும் அவர்கள் எப்படி வசித்தார்கள்? பிறர் காணுமல் சாளரம் வழியாகவே வெளியுலகைப் பார்த்தார்கள். சாத்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள பெண் தர்மங்களில் மிக உயர்ந்த நிலே இதுவே. அந்த மகாராணிகளேப் போலவே நீங்கள் வாழ வேண்டும். பிறர் உங்களே வெறித்து நோக்கும்படியாகவும், உங்களேப் பற்றிப் பலர் பேசும்படியாகவும் வெளியே திரிவது உங்களுக்கு அழகல்ல. உடல் அழகைப் பராமரிப்பதை விட, அழகிய பண்பாடுகளே வளர்த்துக்கொள்வதே உங்கள் தர்மம்.

ஸ்ரீ ஸத்ய ஸாயி பாபா

நந்த — பிரம்மாநந்த — பிரேமாநந்த (பாபு ராம்தான் பிறகு பிரேமாநந்தரானவர்) குழாத்தின் சத்தியம், தியாகம், பிரமச்சரியம் இவற்றில் ராம கிருஷ்ணரின் உபதேசத்துக்கு எவ்வளவு பங்கு, சாரதை படைத்த உணவுக்கு எவ்வளவு பங்கு என்று யாரே கணக்கிட்டுச் சொல்ல முடியும்? அந்த உணவை அதிகமாக உண்ண உண்ண ஆத்ம குணங்களும் அதிகமாகுமேயன்றி, ஆத்ம அபிவிருத்திக்கு ஹானியா உண்டாகும்? அம்மாவானவுடன் தன் சக்தியின் முழுமையை அவளே உணர்ந்து அமர வாசகங்களே அவரிடம் சொல்லிவிட்டாள்!

ராமகிருஷ்ணர் மானசிகமாக அவளே நமஸ்கரித்தார். இளநகையுடன் விடை கொண்டார்.

புத்திர விரதத்தில் புத்திரி விரதமும் அடக்கம். ராமகிருஷ்ணரைத் தேடி வந்த பெண்களிடம் — அவரிடமிருந்து அவர்களேவிட ஒதுங்கியிருந்த அவரது சகதர்மிணியான அவள் காட்டிய எல்லேயற்ற அன்பை என்னென்பது?

அரக்கி போல் ஒருத்தி வந்தாள்.— கையில் திரிசூலமும், தலேயில் ஜடா முடியுமாக. அவள் வரப் போகிருள் என்று முன்பே சொல்லியிருந்தார் ராம கிருஷ்ணர். அவள் அரக்கி அல்ல; பைரவ உபாசகி. உலகிலுள்ள கொடுரங்களும் இறைவனிடமிருந்து வந்தவையே என்ற அடிப்படையை மனத்தில் கொண்டு, கொடூரங்களேக் கைக்கொள்ளும் பைரவி அவள்.

''பைரவி ஒருத்தி வருவா. அவளுக்காக ஒரு வஸ்திரம் சாயம் தோய்த்து வை. கொடுக்கலாம்'' என்ருர் ராம கிருஷ்ணர் சாரதையிடம். அவர் கூறிய

மாதர் மகிமை

மாதரசே! மதுர மாதரசே!
மனிதனை மாற்றி மென்மை செய்யவே
மாதா இயற்கை, மாதுனைப் படைத்தாள்!
மங்கை நீ இன்றி மானுடர் யாவரும்
மாக்களாய் வாழ்ந்து மாய்ந்திருப்போமே!
ஆட்லே: "வெனிஸ் பிழைத்தது"

வண்ணமே செய்தாள் சாரதை. அவர் சொன்ன வண்ணமே பைரவி வந்தாள்.

மகா கோபக்காரியான அவள் ராமகிருஷ்ணரிடம் மட்டும் நீண்ட நேரம் அளவளாவுவாள். சாரதையைக் கூசாமல் மிரட்டுவாள். சாரதை அவளிடம் அச்சம்கொண்டாளேஒழியக்கோபமோ, துவேஷமோ கொண்டதில்லை.

"ஏ சாரு, ராத்திரி சாதத்திலே தண்ணி கொட்டி வை. காலம்பற எனக்குப் பழையது வேணும். தவறினயோ, சூலத்தாலேயே உன்னைக் குத்திக் கொலை பண்ணிடுவேன்" என்பாள்.

இப்படிப் பட்டவளுக்கும் மனம் கோணமல் பணி செய்தாள் அம்மா.

சாரதை பைரவியிடம் அஞ்சுவது கண்ட ராமகிருஷ்ணர், அவளுக்கு அந்த அச்சமும் உதவாது எனக் கருதினர்: "பயப்படாதேயம்மா. அவள் உண்மையான பைரவ சம்பிரதாயக்காரி. அதனலே அவளுக்கு முன்கோபம் கொஞ்சம் ஜாஸ்தியா யிருக்கு" என்ருர்.

கொடுரத்தைக் கூடச் சகித்துக் கொள்ளலாம். ஒழுக்கக் குறைவை எப்படிச் சகித்துக் கொள்வது? பனிக்கட்டியை விடப் பரிசுத்தமான சாரதை நடத்தை கெட்ட பெண்களிடமும் காட்டிய பரிவு இதிகாசம் கண்டிராத அற்புதம்!

ராமகிருஷ்ணர் ஒரொரு சமயங்களில் தமது சமபாவத்தைப் பரிசோதித்துக் கொள்வதற்காகப் பரத்தையர் வீட்டுப் படிகளையும் தமது முடியால் துடைத்திருப்பது உண்மை. கிரீஷ்கோஷ் போன்ற பதிதர்களையும் அன்புடன் அரவணைத்து அவர் உயர்த்தி யிருக்கிருர் என்பதும் உண்மை. என்ருலும்கூட, அவரும் தம் சீடர் குழாத்தில் சீலம் உள்ளவர்களுக்குச் சிறப்பிடம் தந்தார். சிலரை ஒதுக்கி வைத்தார்.

அம்மா ஒதுக்கி வைத்த குழந்தை ஒன்றுகூடக் கிடையாது. சேற்றில் விழுந்த குழந்தைகளுக்குத்தான் தனது தேவை அதிகம் என்று அவற்றிடமே அதிகப் பரிவுடன் ஓடினள் அவள்.

மிகவும் அவப் பெயர் எடுத்த ஓர் ஆடல் மகள், அவளது யௌவனம் கழிந்தபின், நம் அம்மாவிடம் வந்தாள். "தெறிகெட்டு வாழ்ந்துட்டேன். என்னை சன்மார்க்கத்திலே திருப்புங்கோ!" என்று கேட்டுக் கொண்டாள்.

அம்மாவின் அன்பு வழக்கத்துக்கும் அதிகமாகவே பாய்ந்தது. வழக்கத்துக்கும் அதிகமாகவே அவளோடு பேசிக் கொண்டிருந்தாள் தேவி. சர்வ பாபங்களையும் அபஹரிக்கும் ஹரியைப் பற்றித் தான் பேசினள்.

விலைமாது ஒருத்தியுடன் சாரதை இப்படிப் பேசுவது ராமகிருஷ்ணருக்கு அருவருப்பாக இருந்தது.

அந்த ஸ்திரீ போன பின் "அவளை ஏன் இங்கே சேர்த்துண்டே?" என்று சாரதையிடம் கேட்டார்.

"ஏன், அதிலே என்ன தப்பு? ஹரியைப் பத்தித்தான் அவள் கேட்டிண்டிருந்தா" என்ருள் தேவி.

"பெருங்காயம் வைச்ச பாண்டம் மாதிரி பழைய வாசனை நெடுநாள் இருந்துண்டேதான் இருக்கும். நீ பண்ணறது வெட்கக் கேடு. ஊர் சிரிச்ச ஒரு சிறுக்கிக்கிட்டே பிரசங்கம் பண்ணிட்டு அதுக்குச் சமாதானம் வேறே சொல்றயே, தூ, தூ" என்று காரமாகப் பேசி விட்டுத் திரும்பினர் ராமகிருஷ்ணர்.

மறுநாளும் அந்த மாது வந்தாள். அன்றும் முதல் நாள் போலவே சாரதை அவளுடன் உரையாடினள்.

அதற்கடுத்த நாளும் வந்தாள். அன்றும் அப்படியே நடந்தது.

ராமகிருஷ்ணரிடம் அம்மா எதிர்த்துச் சண்டை போடவே யில்லை. அவரே சண்டை போட்டுவிட்டுக் கடைசியில் அவராகவே சமாதானமும் அடைந்தார்.

இன்னும் ஓர் உதாரணம். அம்மாவின் அம்மாத் தன்மையைச் சிகரத்தில் ஏற்றிக் காட்டும் உதாரணம்.

ஒரு நாள் இரவு அம்மா ராமகிருஷ்ணருக்கு உணவெடுத்துச் சென்ருள். அவரது அறைக்கு முன் உள்ள வராந்தா. அங்கே இதற்கெனவே காத்திருந்தது போல் ஓர் உருவம் வெளிப்பட்டுச் சாரதையின் முன் நின்றது.

சாரதை அந்த உருவத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே ஒழுக்கம் கெட்ட ஒருத்தி எனப் புரிந்து கொண்டாள்.

அவள் சாரதையிடம், "அம்மா, தட்டை என்கிட்டே கொடுங்கோ. டாகூருக்கு இன்னிக்கு ஒரு வேளை நான் சாதம் வைக்கிறேன்" என்ருள்.

சாரதை சற்றும் தயங்காமல் உணவுத் தட்டை அவளிடம் கொடுத்தாள்.

அந்தணர்கள், அதிலும் ஒழுக்கமானவர்கள், சமைத்துப் பரிமாறும் உணவைத்தான் ராமகிருஷ்ணர் உண்பார் என்பது சாரதைக்கு மிக நன்ருகத் தெரி

யும். ஒவ்வொரு வேளையும் அவரைத் தாஜா செய்து சாப்பிட வைப்பதில் அவள் கொண்டிருந்த ஈடுபாடோ அசாமானியமானது! இருந்த போதிலும் பதிதையிடம் உணவுத் தாலத்தைத் தந்துவிட்டு, பதியின் அறைக்கு வெளியே நின்றாள்.

அந்தப் பெண் தட்டத்தை ராமகிருஷ்ணரின் முன் வைத்தாள். பிறகு என்ன தோன்றியதோ, வெளியே ஓடியே விட்டாள்.

ராமகிருஷ்ணர் கற்சிலையாகச் சமைந்துவிட்டார்.

அம்மா அவர் பக்கத்தில் போய் அமர்ந்தாள்.

''என்ன காரியம் செஞ்சுட்டே!'' என்றார் ராமகிருஷ்ணர் சாரதையைப் பார்த்து. ''அவ நடத்தை கெட்டவள்னு உனக்குத் தெரியாது? அவளோடே ஸ்பரிசம் பட்டு அசுத்தமாகிவிட்ட இந்தச் சாப்பாட்டை நான் தீண்டுவேனா?'' என்றார்.

சாரதை தெளிவுடனும் பணிவுடனும் சொன்னாள்: ''உங்களோட ஆகார நியமம் எனக்குத் தெரியும். அந்தப் பெண்ணைப் பற்றியும் தெரியும். ஆனாலும் என்னவோ இப்படிப் பண்ணிட்டேன். தயவு செஞ்சு இந்த ஒரு வேளை இதைச் சாப்பிட்டுடுங்கோ.''

''ஒருகாலும் முடியாது.''

''தயவுசெஞ்சுன்னா....,'' மன்றாடினாள் தேவி.

அவர் பேசவும் இல்லை: உணவைத் தொடவுமில்லை. பொய்க் கோபமோ, மெய்க் கோபமோ, உர்ரென்று அமர்ந்திருந்தார்.

''ஏன்னா, உங்களைத்தானே?'' என்று ஈனஸ்வரத்தில் இழுத்தாள் சாரதை. அழுகை தொண்டையில் முட்டியது.

'வழிக்கு வருகிறாள்' என்று எண்ணினார் ராமகிருஷ்ணர். இருந்தாலும் வீராப்பை விடக்கூடாது என்று அடம் செய்ய நினைத்தது அந்தக் குழந்தை. பிகு தளராமலே அமர்ந்திருந்தார். அவருக்கு எதிரே உணவுத் தாலம். அவர் அதைத் தொடவொண்ணாதபடி செய்து விட்டாள் அவள்.

கல்த்திலே சோற்றையிட்டுக் கரத்தைப் பிடித்திருக்கும் மாபாதகத்தைச் செய்து விட்டோமே என்று வேதனை கொண்டாள் அன்னபூரணியாகவே வாழ்ந்து வந்த அன்னை.

''இந்தாங்கோன்னா.....'' நெஞ்சு நோக அவரை மெல்ல அழைத்தாள்.

ராமகிருஷ்ணர் அசைந்து கொடுத்தார். ஆனாலும் அவளிடம் பூரணமாகத் தோற்க அவர் விரும்பவில்லை.

''சரி. அப்போ எனக்கு ஒரு சத்தியம் பண்ணித் தா! இனிமேலே இந்த மாதிரி கண்டவாகிட்டே என் சாப்பாட்டைத் தரதில்லைன்னு வாக்குத் தா. சாப்பிடறேன்'' என்றார்.

உடனுக்குடனே சாரதை தன் கையைக் குவித்து அஞ்சலி செய்து, அழுகைப் பசை அற்ற கணீரென்ற குரலில், ''பிரபு! அந்த மாதிரி வாக்குத் தர என்னால் ஒருகாலும் முடியாது. உங்களுக்காக நானே சமைப்பேன், நானே அதை எடுத்துண்டு வந்து பரிமாறவும் செய்வேன். நானாக வேறே யார்கிட்டேயும் இந்த வேலைகளைக் கொடுக்க மாட்டேன். ஆனாலும் என்னை யாராவது 'அம்மா'ன்னு கூப்பிட்டு, அந்தச் சாப்பாட்டைத் தன்கிட்டே தரச் சொன்னா அப்புறம் என்னாலே என்னையே கட்டுப்படுத்திக்க முடியாது'' என்றாள்.

''அம்மான்னு கூப்பிட்டுட்டா அப்புறம் என்னைக் கட்டுப்படுத்திக்க முடியாது'' — அந்த வாசகங்கள், ஆதியில் தோதாபுரி உபதேசித்த வேத மகாவாக்கியங்களைவிடப் பெரிதாக ராமகிருஷ்ணரின் அகத்துள் பாய்ந்தன. கட்டுப்பாடே உருவான அவளை அம்மாவாகப் பார்த்துவிட்டால் அவள் எதற்கும் கட்டுப்படாத பராசக்தியாகி, அன்பர்களின் கட்டுக்களை எல்லாம் அறுத்தெறிந்து விடுவாள். பதிவிரதத்தை விடப் பெரிதான அப்பேர்ப்பட்ட புத்திர விரத மகிமை அவளுடையது!

அவரது மகிமையையும் உணர்த்தும் மதுர வாசகங்களை மிருதுவாகச் சொன்னாள் மாதா: ''ஏன்னா! நீங்க நான் தொட்டதை மட்டுமே சாப்பிடுவேன் என்கிறேளே. நீங்க எனக்கு மட்டும் தான் ஸ்வாமியா? இல்லேன்னா! நீங்க எல்லாருக்கும் ஸ்வாமியாச்சே!''

அவருக்கே சமத்துவ குருவாகிவிட்டாள் அம்மா! அவரைத் தன்னோடு எல்லோரும் சமமாக அநுபவிக்க வேண்டும், தனக்கு விசேஷப் பங்கு கூடாது என்று எண்ணினாள் தியாகி!

ராமகிருஷ்ணர் கசிந்து போனார்.

கடகடவென்று சமர்த்துப் பிள்ளையாக உண்டுவிட்டுக் கலகல என நகைத்தார் பகவான்.

பகவதியும் நகைத்தாள் கலகலவென.

பாக்கியம் செய்த தக்ஷிணேசுவரக் காற்று பகவானும் பகவதியும் சிரித்த புண்ணியச் சிரிப்பை ஏந்திச் சென்று கங்கையில் விட்டது.

கங்கா மாதா கலகலவென ஓடினாள்!

(தொடரும்)

# புதிய

# ரெம்கோ ஜுகல்பந்தி






## வேறு எந்த ரேடியோவும் ஈடு செய்ய முடியாத அம்சங்களுடன்!

மிக உயர்ந்த வெளிப்படுதிறன்: 10 வாட்
மிகக் குறைந்த தொனிச்சிதைவு: 75%
வெளிப்படுதிறனில் சிதைவு 1%.
3 ஸ்பீக்கர்களுடன் "க்ராஸ்-ஓவர் விண்டக்".

5 பாண்ட், 7 வால்வுகள், ஃபைன்
ட்யூனிங்குடன். விலை ரூ. 975/- (வரிகள் தனி).




**ரேடியோ & எலெக்ட்ரிகல்ஸ்**
**மேன்யுஃபேக்சரிங் கோ. லிட்.,**
மைசூர் ரோடு, பெங்களூர்-26.

மைசூர், கோவா, தமிழ்நாடு, காரைக்கால்
மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்)

**ஹெகடே அண்ட் கோ.,**
குப்தா மார்க்கெட், கெம்பகவுடா ரோடு,
பெங்களூர்-9 மற்றும் 11, அகர்சந்த்
மேன்ஷன், 35, மவுண்ட் ரோடு, சென்னை-2.

SISTA'S-RR 308 TAM

○ மார்ச் 23உ ஸ்ரீராம நவமி

# கலையில் கலந்த ராமன்

வி.கோபாலன்



ராமன் என்றாலே அழகன் என்று பொருள். அழகுக் கலைகள் அழகின் நாயகனை — அழகுத தெய்வத்தை வரித்துக் கொண்டதில் வியப்பில்லை அல்லவா? தென்னகத்துக் கலை உலகில் தான், வடக்கே அயோத்திமாநகரில் தோன்றிய சக்கரவர்த்தித் திரு மகனுக்கு எத்தனை வடிவங்கள்; வண்ணங்கள்! கங்கைக்கரை காகுத்தனுக்குக் காவிரிக் கரையில் தான் எத்தனை ஆலயங்கள்; அடியார்கள்!

ராமன் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகப் பாரத மக்களின் நெஞ்சிலே வாழும் தெய்வம். ராமாயணம் எழுதப்படுவதற்கு முன்னரே மக்கள் ராமனை வழிபட்டனர் என்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் உண்டு. தமிழகத்திலும் பன்னெடுங் காலமாக ராம வழிபாடு சிறந்தோங்கி யிருந்தது என்பதற்கு மகாபலிபுரத்துக் கல்வெட்டு ஒன்று சான்றாக விளங்குகிறது.

> "மத்ஸ்ய கூர்ம வராஹஸ்ச
> நாரஸிம்ஹஸ்ச வாமன
> ராமோ ராமஸ்ச ராமஸ்ச
> பௌத்த: கல்கி சதே தசா"

என்று திருமாலின் தசாவதாரங்களை வகைப்படுத்திக் கூறும் அக்கல்வெட்டு தசரதகுமார ராமன், பலராமன், பரசுராமன் ஆகிய மூன்று ராமர்களையும் குறிப்பிடுகிறது.

ராமாயணத்தால் கவரப்படாத இந்திய மொழிகள் எதுவுமில்லை. கம்பனின் இராமகாதை இலக்கிய உலகில் ஒரு கலங்கரை விளக்கமாகத் திகழ்கிறது. ராமனின் சரிதம் கம்பனுக்கு முற்பட்ட தமிழ்க் கவிஞர்கள் பலரையும் கவர்ந்து அவர்தம் காவியப் படைப்புக்களிலும் கூட அங்காங்கே இடம் பெற்றிருப்பதைக் காணலாம். மிகப் பழைமையான இத்தமிழ் இலக்கியக் குறிப்புக்கள் தமிழகத்தில் ராம வழிபாட்டின் பெருமையையும் பழைமையையும் பறைசாற்றுகின்றன.





மேலே: ராமன், சீதை, லட்சுமணன் - பருத்தியூர் படிமங்கள்.
கீழே: ராமனும், சீதையும் - வடக்குப் பனையூர் படிமங்கள்.

> "கருந்தேர் இராமன் உடன்புணர் சீதையை
> வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை
> நிலம்சேர் மதரணி கண்ட குரங்கின்
> செம்முகம் பெரும் கிளை"

என்ற புறநானூற்றுப் பாடல், செருப்பாழி பொருந்த இளம்பெருஞ்சென்னி என்ற சோழ இளவரசன் ஊன் பொதி பசுங்குடையார் என்ற புலவருக்கு அளித்த பரிசில்களை அவரது சுற்றத்தார் எடுத்துக் கொண்டது, இராவணன் தூக்கிச் செல்கையில் சீதை கழற்றி வீசிய அணிகலன்

களை வானரங்கள் பொறுக்கிக் கொண்டது போல் இருந்தது என்று விவரிக்கிறது. ராமாயண நிகழ்ச்சி புறநானூற்றுப் பாடலிலேயே இடம் பெற்றிருப்பது, அக்காலத்துத் தமிழகத்தில் ராம சரிதம் பிரபலமாக விளங்கியதைப் பிரதிபலிக்கின்றது.

அகநானூற்றிலும்,

"வெவ்வேல் கவுரியர் தொன்முதுகோடி
முழங்கு இரும்பௌவம் இரங்கும் முன்துறை
வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம்"

என்று ராமனின் வரலாறு இடம் பெற்றிருக்கிறது.

சிலப்பதிகாரத்திலும் சக்கரவர்த்தித் திருமகனின் சரித்திரம் மணக்கிறது. ஆய்ச்சியர் குரவையில் கிருஷ்ணாவதாரத்தோடு ராமாவதாரமும் இணைத்துக் கூறப்பட்டிருக்கிறது. வாமனனாய் மூவுலகமும் இருள் திரை விழ நடந்த திருவடிகளே ராமாவதாரத்தில் காடுகளை மிதித்துச் சிவந்தன எனச் சிலம்பு சித்திரிக்கின்றது.

கோவலனும் கண்ணகியும் காவிரிப்பூம் பட்டனத்தை விட்டுச் சென்றதும் அந்நகர் ராமனும் பிராட்டியும் விட்டுச்சென்ற அயோத்தியைப் போல் பொலிவிழந்து போனதை

'அரசே தஞ்சமென் றருங்கா னடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போல'

என்றும் தமிழ்ப் பெருங் காப்பியம் வருணிக்கிறது.

மணிமேகலையில் வானரங்கள் ராமனுக்காகப் பாலம் அமைத்த செய்தியையும், கய சந்திகை பற்றிய குறிப்பையும் காண்கிறோம்.

ஆலயங்கள்தோறும் அருள் தலங்கள் தோறும் பாமாலை பாடித் தெய்வத் தமிழ் வளர்த்த ஆழ்வார்களும், நாயன்மார்களும் சத்திய வடிவினனான ராமனைப் பாடிப் பரவியிருப்பதில் என்ன வியப்பு?

**நா**டாண்ட மன்னர்கள் ராமனுக்காக ஆலயங்கள் பல அமைத்திருக்கின்றனர். கலையில் தெய்வ எழிலைச் சித்திரிக்க எண்ணிய சிற்ப, படிமக் கலைஞர்களுக்கு ராமனின் திவ்விய வடிவம் ஒரு வரப்பிரசாதமாகவே அமைந்திருக்கிறது. வடார்க்காடு மாவட்டத்திலுள்ள பராந்தக சோழனின் (கி. பி. 907–955) கல்வெட்டொன்று ராமனுக்காகக் கோயில் எடுக்கப்பட்டதைத் தெரிவிக்கிறது. ராமனுக்காக ஆலயம் அமைக்கப்பட்ட அவ்வூர் திருவயோத்திபுரம் எனப்பட்டது. ராமன் இருக்குமிடம் அயோத்தியல்லவா? தமிழக மெங்கும் ராமனுக்கான சிறப்புத் தலங்கள் பல உள்ளன. குடந்தை, புஞ்சை நல்துணை ஈசுவரன் ஆலயம், புள்ளமங்கை ஸ்ரீ பிரும்ம புரீசுவரர் ஆலயம் ஆகியவற்றில் ராம சரிதம் கண்கவர் சிற்பங்களில் சிறப்பாகச் சித்திரிக்கப்பட்டுக் காண்கிறது.

சோழர் வடித்த ராமன் படிமங்கள் பல. அவை காவியநாயகன் மீது அவர்கள் கொண்டிருந்த பக்திக்கும், ராமன் வடிவத்தை உருவாக்குவதில் சோழக் கலைஞர்கள் கொண்டிருந்த ஈடுபாட்டுக்கும் சான்றாக விளங்குகின்றன.

ராமன் கவிஞர்களையும், கலைஞர்களையும் தன் வசமாக்கிக் கொண்டவன். எத்தனை மொழிகளில் எத்தனை கவிஞர்கள்தான் அவன் சரிதத்தைப் பாடியிருக்கின்றனர்! அக்காவிய நாயகன் கலைஞர்களையும் கவர்ந்து கலை உலகிலும் சக்கரவர்த்தித் திருமகனாக விளங்குவதில் வியப்பென்ன?

அட்டைப் படம்: ராமபிரானின் அருளைக் கண்கொண்டு தரிசிக்க வண்ணப் படமாக எடுத்து வழங்கியிருக்கிறார் திரு ஹரலிங்கம்.

---

## இருப்புப்பாதை அமைக்கும் ரயில்!

தானியங்கு முறையில் பழைய இருப்புப் பாதையை அகற்றிவிட்டுப் புதிய இருப்புப் பாதைகளைப் போடுகிறது ஒரு ரயில்.

மேற்கு ஜெர்மனியில் உருவாகியுள்ள இந்த ரயிலின் முன் பக்கம் பழைய இருப்புப் பாதை மேலாகச் செல்கிறது. பின் பகுதி புதிதாய் அமைக்கப்பட்ட இருப்புப் பாதை மேல் ஓடுகிறது. ஒரு மணி நேரத்தில் ஓராயிரத்து நூற்றி நாற்பத்தெட்டு அடி நீளமுள்ள புதிய இருப்புப் பாதையை அமைக்கிறது; புதிய ஸ்லீப்பர் கட்டைகளையும் பொருத்துகிறது இந்த அதிசய ரயில்! -ஸ்காலா



## என்ன பேரோ?



ஒருவன் தன் வீட்டு வாசலுக்கு வந்து நின்று உள்ளே நோக்கி 'உஷா உஷாவு!' என்று கத்தினான். யாரும் வரவில்லை. பதிலும் கிடைக்கவில்லை.

சிறிது நேரம் ஆயிற்று. "கலா.... கலாவூ!" என்று கத்தினான். ஊஹூம்! இந்தத் தடவையும் பதில் இல்லை.

மூன்றுவது முறையாக 'நளினி.... நளினீ.... நளினீச.....' என்று கூப்பிட்டான். எவருமே பதில் அளிக்கவில்லை..... வேறு வீட்டு வாசலில் நின்று இதைக் கவனித்த இன்னொருவனுக்கு ஆவல் குறுகுறுப்பை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அருகில் போய், "மாறிமாறிப் பெண்கள் பெயரைச் சொல்லி அழைக்கிறீர்களே, என்ன விஷயம்?" என்று கேட்ட போது அவன் சொன்னான்:

"அடடா! வித்தியாசமாக எதுவும் நினைத்து விடாதீர்கள். மூன்று ஆண் குழந்தைகளுக்குப் பிறகு அருமையாக ஒரு பெண் குழந்தையை ஈன்றெடுத்திருக்கிறாள் என் மனைவி. அவளுக்கு எந்தப் பெயர் வைத்துக் கூப்பிட்டால் காதுக்கு இனிமையாக இருக்கும் என்று கூப்பிட்டுப் பார்த்தேன். அவ்வளவே!" என்றான். -- "லயா"

''உங்கள் போராட்டத்துக்குப் பலன் ஏதேனும் கிடைத்ததா?''

''இல்லை! தொழிலாளர்கள் என்னவோ வழக்கப்படியே வேலைக்கு வந்து, அதிகப்படி நேரம் வேலை செய்ய ஆரம்பித்தார்கள். பார்த்தேன், போராட்டத்தின் இரண்டாவது கட்டத்தைத் தொடங்கினேன்.''

''என்ன அது?''

''உண்ணு விரதம்! முதலாளிகள் எல்லோரும் தொழிலாளர் தலைவர்களது வீடுகளுக்கு முன்பாகச் சங்கிலித் தொடர் உண்ணு விரதம் இருந்தோம்!''

''பிறகு?''

''எங்கள் முதலாளிகள் சங்கத் தலைவர் தொழிலாளர்களுடன் பேச்சு வார்த்தை நடத்தினர். எங்கள் கோரிக்கைகளைத் தொழிலாளர்கள் ஏற்க மறுத்துவிட்டார்கள்!''

''ஆமாம், உங்கள் அரசாங்கம் இதையெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மாவா இருந்தது?''

''இருக்க முடியுமா யாராலேனும்? 'மத்தியஸ்தர் தீர்ப்புக்கு இந்தப் பிரச்னையை விடுகிறேம்' என்றது அரசு. 'அந்தத் தீர்ப்பை நாங்கள் ஏற்க மாட்டோம்' என்று சொல்லி விட்டார்கள் தொழிலாளர்கள்.''

''......''

''ஒரு விஷயம் உங்களுக்கு நான் சொல்லியாக வேண்டும். எங்களை ஆளும் கட்சி இருக்கிறதே, அது பதவிக்கு வருவதற்கு முன்பு முதலாளிகளின் நலனுக்குப் போராடும் கட்சியாகத்தான் இருந்தது. ஆட்சிக்கு வந்த பிறகுதான் மாறிவிட்டது. அதன் போக்கே தலைகீழாகி விட்டது!''

''ஏன்? அரசு என்ன செய்தது?''

''தொழிலாளர்களின் பக்கம் சேர்ந்து கொண்டு முதலாளிகளை மிரட்டியது, பழி வாங்கியது... முதலாளிகளின் ஊர்வலத்தின் மீது போலீஸை ஏவிவிட்டது. இருபது முப்பது முதலாளிகள் மண்டை பிளந்து ஆஸ்பத்திரிக்குப் போனர்கள். முதலாளிகள் சங்கத் தலைவருக்கு முகவாய் பெயர்ந்துபோயிற்று!''

''அடப் பாவமே!''

''இதற்கிடையிலே முதலாளிகளிடையே பிளவை உண்டாக்குவதற்காக ஆளும் கட்சி எங்கள் முதலாளிகள் யூனியனுக்குப் போட்டியாக ஒரு யூனியனை ஆரம்பித்தது. இந்த யூனியன் தொழிலாளர்கள் பக்கம்தான் பேசியது. இதனுலெல்லாம் என்ன ஆயிற்று என்றால் முதலாளிகளுக்கிடையே மன வேற்றுமை, பூசல், அடிதடி!''

''ஐயோ பாவமே!''

''ஆளும் கட்சி இன்னும் ஒரு படி மேலே போய், தன் கைப் பொம்மையான ஓர் ஆசாமியை முதலாளிகள் சங்கத் தலைவராக நியமித்தது. அரசே முன்னின்று ஒப்பந்தம் ஒன்றையும் தயாரித்துக் கொடுத்தது — எல்லாம் தொழிலாளர்களுக்குச் சாதகமாக!''

''நீங்கள் அந்த ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ள மறுத்திருப்பீர்களே?''

''ஆமாம் ஐயா, மறுத்தோம். 'இந்தத் தலைவர் எங்களுக்கு வேண்டாம்' என்று சொல்லி இன்னெரு போராட்டம் நடத்தினேம்!''

''கடைசியில் என்னதான் ஆயிற்று?''



அதெல்லாம் ஒன்றுமில்லை. எவ்வளவு சித்திரவதைக்கு உள்ளானலும் இந்த பேண்ட் துணி கசங்காது என்று விளம்பரப் படுத்துகிறர், அவ்வளவே!

'டிட்பிட்ஸ்'
- பிரின்ஸ்

''என்னத்தைச் சொல்வது போங்கள்!... தொழிலாளர்கள் கைதான் ஓங்கியது. 'நாங்கள் அதிகமாக உழைக்கத்தான் செய்வோம். உங்களால் ஆனதைப் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லி விட்டார்கள். பணம் இரும்புப் பெட்டியில் குவியக் குவிய எனக்குப் பைத்தியமே பிடித்துவிடும்போல் ஆகிவிட்டது. மன நிம்மதியே பறிபோய் விட்டது. யாரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் நிம்மதியை நாடி பிளேன் ஏறி இங்கே வந்து விட்டேன்!''

''நல்ல காரியம் செய்தீர்கள்!''

''இங்கே வந்து பார்த்த பிறகு — அதுவும் இங்கே தொழிற்சாலைகளில் நிலவும் சூழ்நிலையை நேரில் பார்த்த பிறகு — என் மனத்துக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது தெரியுமா? நாடு என்றால் இதுவன்றே நாடு! தொழிலாளர்கள் என்றால் இவர்களல்லவோ தொழிலாளர்கள்? முதலாளிகளுக்குப் பரிகிற இதுவல்லவோ உண்மையான ஜனநாயக அரசு! எங்கள் நாடும் இருக்கிறதே, ஹூம்! உங்கள் நாட்டுக்கு ஈடும் இல்லை; இணையும் இல்லை!''

''அப்படியானல் இந்த நாடும், இங்கே இருக்கிற சூழ்நிலையும் உங்களுக்குப் பிடித்து விட்டது என்கிறீர்கள்!''

''ஆமாம்! ஆமாம்! ஆமாம்! எங்கள் நாட்டுச் சூழ்நிலைக்கு முற்றிலும் நேர் எதிராக இங்கே எல்லாம் அமைந்திருக்கிறதே, பிடிக்காமல் போகுமா?''

''அது சரி, இத்தனை விஷயம் சொன்னீர்கள். உங்கள் நாட்டின் பெயரைச் சொல்லவில்லையே?''

''பெயரில் என்ன ஐயா இருக்கிறது? ஆளை விடும்!''

''இல்லை, நீங்கள் சொல்லித்தான் ஆக வேண்டும்!''

''பஸிபிக் கடலிலே ஒரு தீவு ஐயா எங்கள் நாடு... 'ஜராக்ளீ முகாம்பிஷீ' என்று பெயர். எங்கள் மொழியில் 'நாசமாய்ப் போக விரும்பாத நாடு' என்று அர்த்தம்!''

''நல்ல பெயர்! அருமையான அர்த்தம்! உங்களுக்கு எங்கள் நாட்டைக் கண்டால் ஏன் பிடித்திருக்கிறது என்று இப்போது புரிந்து கொண்டு விட்டேன்! தாங்க்யூ!'' என்று நடையைக் கட்டினர் நிருபர்.

# அம்மா

ரா. கணபதி

## 26. அமங்கலத்தின் அவக் குரல்!

அன்னபூரணியே, எப்போதும் பூரணமாக இருக்கும் நிறைவே, சங்கரனின் பிராணநாயகியே, எனக்கு ஞானமும் வைராக்கியமும் சித்திப்பதற்காகப் பிட்சை அளிப்பாய்.

— ஆதி சங்கரரின் அன்னபூர்ணாஷ்டகம்

மனோதத்துவ இயல் சொல்கிற இயல்பான அசூயை அம்மாவிடம் இம்மியும் இல்லை என்பதைக் கொடிக் கம்பத்தின் உச்சியில் பட்டொளி வீச ஏற்றிக் காட்டுவது இன்னொரு நிகழ்ச்சி.

தக்ஷிணேசுவரத்துக்கு அடிக்கடி வரத் தொடங்கிய ஒரு சாதகியைப் பைத்தியம் என்று ஆரம்பத்தில் அனைவரும் நினைத்தனர். அதனால் அவளிடம் எல்லோரும் பரிவுடன் நடந்து கொண்டனர். பிறகுதான் அவள் பைத்தியம் அல்ல என்றும், கடவுளைக் காந்தனாகக் கருதும் மதுரபாவ சாதகி என்றும் தெரிந்தது. இவள் ராமகிருஷ்ணரைக் கடவுளாகக் காணத் தொடங்கியவுடன் ஒரு பயங்கரத் திருப்பம் ஏற்பட்டது. கடவுளே காதலன் என்றால் ராமகிருஷ்ணர் அன்றோ இவளது காதலராக வேண்டும்? பிரம்மசரியத்தின் நடமாடும் உருவமான அவரைக் காந்தனாக வரித்தாள் இந்த மங்கை. ஒரு நாள் அவரிடமே தன் மனத்திலிருந்ததைக் கொட்டியும் விட்டாள்.

பாவன பகவான் பதறிப் போனார். சர்வேசுவரியின் குழந்தையாக அன்றி வேறேதாகவும் தம்மைப் பாவித்துக் கொள்ள முடியாத பரிசுத்த புருஷர், தம்மையும் ஒருத்தி காந்தனாக எண்ணினாளா என்று பரிதவித்தார். தம் வசமிழந்து ஆசனத்திலிருந்து குதித்தார். அவளை வாயில் வந்தபடியெல்லாம் திட்டிக் கொண்டு அறை முழுவதும் வெறியர் போல் சுற்றிச் சுற்றி ஓடினார்.

இந்த அமர்க்களத்தை நஹபவத்திலிருந்து கவனித்தாள் தேவி. அவள் கண்களில் நீர் மல்கியது. கணவரின் ஒப்பற்ற தூய்மையை எண்ணி மட்டுமல்ல; மதுரபாவ சாதகி அவரிடம் நிந்தை மொழிகளை வாங்கிக்கொள்கிறாளே என்றும் கண்கலங்கினாள் நம் அருமை அம்மா!

பக்கத்திலிருந்த கோலாப்—மாவைப் பார்த்து தேவி சொன்னாள்: "கோலாப், அவள் முன்யோசனை யில்லாமல் பேசி விட்டதாகவே வெச்சுக்கலாம். அதுக்காக இவர் ஏன் அவளை இப்படித் தூஷிக்கணும்? அவ யோசிக்காம பேசியிருந்தாலும் இவர் அவளை நேரே என்கிட்ட அனுப்பிச்சுட்டுப் பேசாம விருக்கவேண்டியதுதானே? சரி, இப்போதாவது நீங்க போய், அந்தக் குழந்தையை இங்கே அழைச்சுண்டு வாங்கோ" என்றாள்.

கோலாப் அவ்வாறே செய்தாள். ராமகிருஷ்ணரிடம் காதல் பிச்சை கேட்டவள் அவரது பத்தினி சாரதையிடம் வந்து தலை குனிந்து நின்றாள்.

"என் மகளே! உன்னைக் கண்டால் அவருக்குத்தானே கரிக்கிறது? நீ அங்கே போக வேண்டாம். எங்கிட்டயே வந்திண்டிரு" என்றாள் அம்மா.

உலகம் கண்டிராத மகா அம்மா.

"நான் உன்னுடையவன் என்று ஒருவன் சரண் புகுந்து விட்டால் அவனை எக்காலும் காப்பதே என் கடன்" என்று விரதம் கொண்டார் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி. ராஜகுல தர்மத்தில் எவ்வளவு கருணை காட்ட முடியுமோ அதன் எல்லை நிலத்தில் இருந்து கொண்டு இப்படிச் சொன்னார். அதாவது அவரிடம் ஒருவர் சரண் என்று வந்து விழவேண்டும் என்று நிபந்தனை விதித்தார். அம்மா குல தர்மம் இதனினும் மகத்தானது. 'சரண்' என்று கூடக் கூறவேண்டாம். வெறுமே 'அம்மா' என்றாலே போதும். அவர்களுக்குக் கட்டுப்பட்டு விடுவேன் என்று முன்பு தேவி சொன்னதைப் பார்த்தோம். இங்கோ இந்த மதுரபாவ சாதகி அவளை 'அம்மா' என்று கூடக் கூப்பிடவில்லை. அப்படியிருந்தும் அவளையும் அணைத்துக் கொண்டாள். மகா அம்மாதான்!

முன்பு நாம் பார்த்த சாரதாமணிக்கும் இன்றைய அம்மாவுக்கும் எத்துணை வித்தியாசம்! அன்று போலவே இன்றும் அடக்கம், அன்பு, உழைப்பு இவற்றை மூர்த்திகரித்து நிற்கிறாள். ஆனாலும் இப்போது தாய்மையின்

கனம், கௌரவம், கம்பீரம் அவளிடம் முழுமையுடன் மேவிவிட்டன. உருவத்தில் எத்தனையோ மாறுபாடு. உழைப்பிலும், அசௌகரியச் சூழலாலும் அவளது கோமளத் தோற்றம் மாறியே விட்டது. 'நாட்டுக் கட்டை' என்பார்களே, அது போல் எலும்புகள் முற்றி, கைகால்கள் காய்த்துப் போய், மேனி வண்ணமும் கறுத்துவிட்டது. 'அழகுடன் அவ்வதரித்தால் இக்கலியில் மானுடரின் கண்கள் அதை விரசமின்றிப் பாரா என்றே சரஸ்வதி இப்படி, அழகு குன்றி வந்திருக்கிறாள்' என்று ராமகிருஷ்ணர் சொல்லுமளவுக்குத் தேவி உருமாறிவிட்டாள். ''ஒரு காலத்திலே நான் செக்கச் செவேல்னு அழகாக் கூட இருந்தேனாக்கும்'' என்று அம்மாவே பிற்பாடு சிரித்சு மொழிந்ததுண்டு.



'வித்யாப் பிரகாசம் — ஞான ஒளி— என்பதுகூட அம்மாவிடம் இன்றி சாமானியமாகவே இருக்கிறுள்' என்று அடியார்கள் எண்ணினர். ஆனுலும் அவள் சரஸ்வதியாக இருந்தாள், மகாலக்ஷ்மியாகவும் இருந்தாள். செல்வத்தைத் திரஸ்கரித்தாலும் அவளிருக்குமிடத்தில் பழங்களும் தின்பண்டங்களும் வந்து குவிந்தன.

பவதாரிணி ஆலயத்திலிருந்து வரும் பிரசாதங்களையும், ராமகிருஷ்ணருக்கு அடியார் செலுத்தும் கையுறைப் பொருட்களையும் வாரி வழங்குவதில் அம்மாவுக்கு அபரிமிதமான பிரியம். சரஸ்வதியும், மகாலக்ஷ்மியுமான அவள் அப்போது அன்னபூரணேசுவரிஆவாள்.

பிரசாத விநியோகத்தில் பெரியவர், சின்னவர் என்ற வித்தியாசம் எள்ளளவும் பார்க்க மாட்டாள் தேவி. கங்கைக் கரையில் மீனவர் நடமாட்டம் அதிகம். கரையர் பெண்கள் மீன் கூடைகளை நஹவத் வாசலிலேயே கொண்டு வந்து வைப்பார்கள். கைவருந்தி உழைக்கும் அந்தப் பெண்களைக் கைவருந்தி உழைத்த சாரதை கடிந்து கொள்ளவே மாட்டாள். மாருக அவர்களிடம் கனிவுடன் உரையாடுவாள். கனிகளை, பிரசாதங்களை அவர்களுக்கும் வழங்குவாள்.

என்னதான் ராமகிருஷ்ணர் அவளை அம்மா என்று கூப்பிட்டாலும், அவரது குழந்தைத் தன்மையை அவளும் எவ்வளவோ புரிந்து கொண்டிருந்தாலும், அவர் அவளுக்குப் பூரண மகனுக இல்லாமல் நாதனுக, குருவாக, பிரபுவாக, டாகூராக, ஸ்வாமியாகவும் இருந்தார். இத்தனை பெரிய ஸ்தானத்திலிருந்தாலும் அவளது 'அசல்' பிள்ளைகளான மற்றச் சீடர்களுக்குப் பின் தங்கியே நின்ருர்! இதனுல்தான் போலும், சில சமயங்களில் ராமகிருஷ்ணருக்கு வழங்குவதற்கே மீதம் வைத்துக் கொள்ளாமல் மற்ற அடியார்களுக்கு உணவு வகைகளைப் பங்கு போட்டு விடுவாள்.

கோபால மாதா என்ற உத்தம பக்தை பாலகிருஷ்ணனை மகனுக வழிபட்டவள். பிற்காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணரையே தனது கோபாலனுகக் கண்டாள். இந்த மூதாட்டி அவரைத் தன் பிள்ளையாகவே பாவித்து அன்பு செலுத்தினுள். "அன்பு மாட்டுப் பெண்ணே! என் கோபாலனுக்குக் கண்ணிலே காட்டாமலே எல்லாத்தையும் விநியோகிச் சுட்டியே" என்று சாரதையிடம் கேட்டாள் இக் கிழவி.

சாரதையின் சிரம் கவிழ்ந்தது.

"செலவழிக்காமல் வைச்சிருந்தாலும் கெட்டுப் போகாத பழம், பட்சணத்தைக்கூட இப்படி உடனுக்குடனே வாரி வழங்கிடாதே, பெண்ணே! நாளைக்கே ஒரு மழை, காற்று வந்து ஒருத்தரும் இங்கே வரலேன்னு இதுகளை வைச்சிருந்து கோபாலனுக்குக் கொடுக்கலாமோன்னே ?" என்று தொடர்ந்து கூறினுள் மூதாட்டி.

பணிவுடன் செவிசாய்த்தாள் தேவி.

'அவர் கண்ணிலே காட்டாமே இப்படி விநியோகம் பண்ணினேனே! அவரை உத்தேசிச்சுத்தானே இத்தனையும் வந்தது' என்று வெட்கிக் கொண்டிருந்தாள் தேவி. அந்தச் சமயம் பார்த்து நவ கோபால் பாபுவின் மனைவி இனிப்பு பட்சணங்களுடன் வந்து சேர்ந்தாளோ, சாரதை ஆறுதல் அடைந்தாளோ?

ஆனுல் அன்ருேடு அது போயிற்று. மறுநாளிலிருந்து வழக்கப்படி உதார குணத்தை — பிறருக்கு ஊதாரித்தனமாகத் தோன்றிய குணத்தை—காட்டலானுள் அம்மா.

'நாளைக்கு' என்று எதையுமே எடுத்து வைப்பதில் கருத்தில்லாத ராமகிருஷ்ணரே அவளை ஒரு நாள் கடிந்து கொண்டார். "நீ என்ன, என்னென்னிக்கும் இப்படியே போயிண்டிருக்கும்னு நினைச்சுண்டிருக்கியா? இந்த மாதிரி வாரி விட்டுண்டிருந்தா எப்படிச் சமாளிக்கிறதுன்னு எண்ணம்?...ம்?" என்று பலத்த குரலில் கேட்டார்.

அம்மா உடனே புறமுதுகிட்டு நஹவத்துக்கு நடக்கலானுள்.

ராமகிருஷ்ணருக்குத் தவிப்பு வந்துவிட்டது. "எலே, ராமலாலா. போய் சித்தியைச் சமாதானப்படுத்துடா! அவளுக்குக் கோபம் வந்துடுத்துன்னு, இது (தம் சரீரத்தைத் தொட்டுக் காட்டி) அழிஞ்சு போக வேண்டியதுதான்" என்று கூவினுர்.

பதியின் ஆக்ஞையை வெற்றி கொண்ட மாத்ரு வாத்ஸல்யத்துடன் அவரெதிரே வந்து நின்ருள் சாரதை.

இம்மாதிரி அநேக விஷயங்களில் அவரது உத்தரவுக்கும் மேம்பட்ட உன்னதத்தைச் சாரதையின் அம்மாத் தன்மை எய்திவிட்டது! அவளாக எதிர்த்தாள் என்று பொருளில்லை. எதிர்க்கிருேம், பணிகிருேம் என்பது போன்ற உணர்வுகளே அற்ற அம்மா என்பதன் இயல்பான எழுச்சியே அது.

இன்னெரு சின்ன உதாரணம்.

பெண்கள் பிராம்ம முகூர்த்தத்திலேயே (காலை நாலு மணி சுமாருக்கு) எழுந்துவிட வேண்டும் என்பது ராமகிருஷ்ணரின் கருத்து. சாரதை யாரும் சொல்லாமலே மூன்று மணிக்கு விழித்து ஜபம் தொடங்கிவிடுவாள். குளிர்கால மொன்றில் அவளோடு லக்ஷ்மியும் நஹவத்தில் இருந்தாள். 'கணவனை இழந்த

அந்தக் குழந்தை கடுங் குளிரில் காலமே எழுந்திராமல், வெய்யில் வருகிற வரை உறங்கட்டும்' என்று சாரதையின் தாயுள்ளம் எண்ணும். எனவே, கதவைத் திறந்து அரவம் செய்து கொண்டு வெளியே வந்து ஜபம் செய்யாமல், அவளும் நஹவத்துக்கு உள்ளேயே இருப்பாள். வைகறைக்குமுன்பே தோப்புக்குப் போகும் ராமகிருஷ்ணர் நஹவத் அருகே குரல் கொடுப்பார் — ''மகராஜி மார்களே, எழுந்திருங்கோ'' என்பார்.

லக்ஷ்மி வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருப்பாள்.

சாரதை அவளை அழுத்திப் படுக்க வைத்துவிட்டு, அடித் தொண்டையில் ''இன்னும் பொழுதே ஆகவில்லை. ஏதாவது பட்சிக் குரல் கேட்கிறதா, பாரேன். உன் சித்தப்பாவுக்குத் தூக்கமே கிடையாது. மற்றவாளையும் தூங்க வொட்டாமல் ரகளை பண்ணுகிறார். நீ குரல் கொடுக்காம படு'' என்பாள்.

குறும்புப் பிரியரான ராமகிருஷ்ணர் விடமாட்டார். கதவுத் துவாரம் வழியாகக் குளிர்ந்த நீரை வீசுவார். குளிருக்குப் பயந்து எழுந்திராதவர்கள் நனைந்து போவார்கள்.

வேடிக்கை விசித்திர விநோதங்களுடன் அந்த அற்புத தாம்பத்தியம் நடந்தது என்றாலும், சாரதாமணி அந்த அசாதாரணக் கணவரை, நெருப்பை மடியில் கட்டிக் கொண்டது போலவே கவனித்து வந்தாள். அவரது அதீதமான உள்ளம் எந்தச் சமயம் எந்த நிலைக்குத் தாவும் என்று அவளொருத்தியே ஆழம் கண்டு, அதற்கேற்றாற் போல் பரம பக்குவமாக நடந்து வந்தாள். அவளுமேகூட ஒரு முறை இவ் விஷயத்தில் இடறி விழுந்ததுண்டு. சர்வ சாதாரணமான ஒரு சம்பவம், அசாதாரண ஆபத்தை ஏற்படுத்திவிட்டது. இது ஹ்ருதயர் தக்ஷிணேசுவரத்திலிருந்த போது நடந்த நிகழ்ச்சி.

விஷயம் இதுதான்: ஜீரணகாரியான ஓமம், கிராம்பு, ஏலம் போன்ற வஸ்துக்களை யாரோ சாரதையிடம் கணிசமாக அளித்திருந்தார்கள். நஹவத்துக்கு வந்த ராமகிருஷ்ணருக்கு அவற்றில் சிறிதைத் தந்தாள் அம்மா. அதோடு நின்றிருக்கக் கூடாதா? ''உங்களுக்குத்தான் சாப்பாட்டு விஷயத்திலே ஏறினால் குற்றம், இறங்கினால் அபராதம்னு இருக்கே. அப்பப்போ அஜீர்ணமாக இருக்கச்சே இதுகளை வாயிலே அடக்கிண்டா நல்லது. நான் ஒரு காகித உறையிலே போட்டுத் தரேன். உங்க ரூமுக்கே எடுத்திண்டு போய் வைச்சுக் கோங்கோ'' என்றாள். ''சரி'' என்று

> **உறுதி கொள், உயர்வு காண்பாய்!**
>
> தியானம் செய்வதில் மனம் செல்லவில்லை என்பதால் தியானிக்காமல் இருந்துவிடாதே. மறுக்கிற மனத்தைப் பிடிவாதமாகத் தியானத்தில் திருப்பிப்பார். மனம் ஈடுபடாவிட்டாலும்கூடப் பரவாயில்லை. தியானத்துக்காக உட்காரும் பழக்கத்தை விட்டு விடாதே. மருந்தின் ருசி பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் அதை உண்ணத்தானே வேண்டும்? அவ்வாறே தியானத்தில் நாட்டம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இப் பயிற்சியை விடாதே. சங்கற்பம் உறுதியாக இருந்தால் காலக்கிரமத்தில் மனம் தியானத்தில் முழுகவே செய்யும். 'ஆத்மானுபவம் ஒன்றே நம் இலட்சியம், மீதமுள்ள காரியமனைத்தையும் பகவான் கவனித்துக் கொள்வான்' என்ற உறுதியுடன் செயல்படு. நிச்சயம் பலன் அடைவாய்.
>
> — அன்னை ஆனந்தமயீ

அவரும் அதை வாங்கிக் கொண்டு நஹவத்திலிருந்து வெளியே நடந்தார்.

ஆனால்... ஆஹா! இதென்ன கூத்து? அவர் ஏன் தமது அறைக்குப் போகாமல் கங்கையை நோக்கி வெகு வேகமாக நடக்கிறார்! கூத்தா, இல்லை, விபரீதமாக அல்லவா இருக்கிறது! ஆவேச வேகத்துடன் கங்கையின் விளிம்புக்கே போய்விட்டார். கங்கையோ கரையைத் தொட்டுக் கொண்டு பூரித்து ஓடுகிறது! சாரதைக்குச் சப்தநாடியும் ஒடுங்கி விட்டது! வெளி மனிதர் கேட்கக் குரலை எழுப்பியே பழக்கமற்ற அவள், அந்த பயங்கர நிலையில் எப்படியோ ஹ்ருதயரைக் கூப்பிட்டு, ''மாமாவைக் காப்பாத்துங்கோ'' என்று அலறினாள்.

ஹ்ருதயர் ஓடோடிச் சென்று, கங்கையில் விழ இருந்த ராமகிருஷ்ணரை மயிரிழையில் காப்பாற்றி, அவரது அறைக்கு அழைத்து வந்தார்.

''ஏன் மாமா, எங்களை இப்படி மோசம் பண்ணப் பார்த்தேள்?'' என்று ஹ்ருதயர் கண்ணும் கண்ணீருமாகக் கேட்டார்.

ராமகிருஷ்ணர் நீண்ட பெருமூச்சு விட்டுச் சொன்னார்: ''உன் மாமி எனக்கு ஜீர்ண வஸ்துக்கள் போட்டு ஒரு உறை கொடுத்தா. நான் ஒரு சந்நியாசி. நாளைக்கு வேணும்னு எந்த ஒரு வஸ்துவையும் சேகரிச்சுக்கிறதில்லைன்னு ஜன்ம விரதம் எடுத்துண்டவனாச்சே! இன்னிக்கு அதுக்குப் பங்கமா இந்த உறையை எடுத்துண்டு வரோமேன்னு தோணித்து. அவ்வளவுதான். என்னையும் மீறின ஓர் ஆவேசம் வந்து கங்கையிலே விழுந்து பிராணனை விட்டுடறதுன்னு போயிட்டேன்.....''

இப்படிப்பட்டவரை அநுசரித்துக் குடித்தனம் நடத்துவது எத்தனை கடின

மான காரியம்? அதைத்தான் ஏது மறியா ஜயராம்பாடிப் பெண் அற்புத மாகச் சாதித்தாள்.

மனிதர்களை நடத்துவதற்கு ஒரு முறை உண்டு. பகவானை வழிபடுவ தற்கு ஒரு கிரமம் உண்டு. மனிதனுக வும் பகவானுகவும் இருந்த ஒருவரை எப்படி நடத்துவது என்று யாரே அறிய முடியும்? அறிய முடியாத இந்த அருமையைத்தான் அதி லாகவமாக சாரதை நடத்திக் காட்டினுள் என் கிருர் அவளது சரிதையைக் கூறும் ஸ்வாமி கம்பீராநந்தர்.

ராமகிருஷ்ணரும் அவளை வெகு அருமையுடன்தான் நடத்தினுர். அவளை உழைக்கச் சொன்னுலும், அடைபட்டுக் கிடக்கச் சொன்னுலும் அவசியமில்லாத உழைப்புக்கு இடம் தரமாட்டார். அவசியமில்லாமல் அடைபட்டுக் கிடக் கச் சொல்ல மாட்டார்.

''பட்சி கூட்டிலேயே எப்பவும் இருந்தா அதுக்குக் கீல் வாதம் வரத் தான் செய்யும். சந்தடி இல்லாத போதாவது அண்டைப் பக்கத்திலே உலாவ வேணும்'' என்று சாரதை யிடம் அவர் கூறுவார். அதோடு மட்டு மின்றி, சில நாட்களில் ஜன சஞ்சார மில்லாத சமயங்களில் அவரே நஹவத் சென்று, அவளைப் பின்வழியாக அருகே யிருந்த பாண்டியே என்பவரின் மனைவி யுடன் சம்பாஷித்து வருமாறு அனுப்பி வைப்பார்.

அவளுக்கு அவசியமற்ற உழைப்பைத் தரவேமாட்டார் அவர். ஒரு முறை அவர் ராகாலுடன் வேணிபால் என்பவ ரின் பூங்காவில் ஓர் இரவு தங்கி, மறு நாட் காலை திரும்பி வரும் உத்தேசத் துடன் சென்ருர். அங்கிருந்த ஆவிகள் சிலவற்ருல் அவரது சாந்நித்தியத்தைத் தாங்க முடியவில்லை. ''தாங்கள் தயவு செய்து இங்கிருந்து போய் விடுங்கள்'' என்று வேண்டிக் கொண்டன. பேய் களிடமும் கருணை கொண்ட அவர் உடனே புறப்பட்டுவிட்டார். அவரும் ராகாலும் மீண்டும் தக்ஷிணேச்வரம் வரும் போது நள்ளிரவாகி விட்டது. வாசல் கேட் திறக்கும் ஓசை கேட்ட தும் தேவி விழித்துக் கொண்டாள். காலடி ஓசையிலிருந்தே **அவர்**தான் என்று தெரிந்து கொண்டாள் கற்பரசி. இரவு அவர் வெளியே தங்கப் போகிருர் என்பதால் அவருக்கு அவள் அன்னம் வைத்திருக்கவில்லை. கணவர் இப்போதே திரும்பிவிட்டதால், உண்ணுமல் வந் திருப்பாரோ, இனிமேல் சமைத்துப் போடும் வரை அவர் காத்திருக்க வேண் டுமே என்று பதறினுள். யது அம்மாள் என்ற வேலைக்காரி அப்போது அவளுடன் துணையாகப் படுத்திருந்தாள். ''யது அம்மா! நான் என்னடி செய்வேன்? இந்தப் பிரச்னையை எப்படிச் சமாளிக்கப் போறேன்?'' என்று கலங்கியபடி கேட் டாள். அவரது மெல்லிய காலடி ஓசை கற்பரசியின் காதில் விழுந்ததுபோலவே, நஹவத்துக்குள் அவள் கிசுகிசுத்தது அந்தக் கற்பரசரின் காதில் விழுந்துவிட் டது. நஹவத்துக்கு வெளியே வந்து நின்று, ''கவலைப்படாதேயம்மா. நாங்க சாப்பிட்டுட்டுத்தான் வரோம்'' என் ருர். உண்டாரோ, இல்லையோ அவளை நள்ளிரவில் வேலை வாங்கவில்லை!

''உன் கண்ணில் நீர் வழிந்தால் என் நெஞ்சில் உதிரம் கொட்டுதடி'' என்று கவி பாடியது போலவே, சாரதை படுகிற சிறு துன்பமும் அவருக்குப் பெரிய வாதையாக இருக்கும். அயராத உழைப்பில் அவள் இன்பமே கண்டதால் தான் அவர் அதைப் பற்றிக் கவலைப் படவேயில்லை. ஒருமுறை அவளுக்குத் தலைவலி வந்து கஷ்டப்பட்டாள். அவ ளுக்குத் தலைவலி வந்தது அவருக்குப் பொறுக்கவில்லை. ராமலாலிடம், ''அப்பா, சித்திக்குத் தலைவலி வர லாமோ? சித்தி அவஸ்தைப் பட லாமோ?'' என்று அவனுக்குத் தலைவலி வருகிறவரை தொணப்பி விட்டார்!

அவளிடமிருந்த பிரியம் காரணமாக அவளது எதிர்காலத்தைப் பற்றி அவர் அவ்வப்போது சிந்திக்கலானுர். ஆத்மிக மாக அவளது எதிர்காலத்தைப் பற்றிக் கவலை கொள்ள ஏதுமில்லை. ஆனுல் லௌகிகமாக அதைப் பற்றி எண்ணி அவர் சில ஏற்பாடுகள் செய்தார். இது விஷயமாக அவர் பேசும் போதெல் லாம் தேவிக்குச் சொரேல் என்று இருக் கும். அவர் ஜீவியவந்தராக உள்ள வரையில் அவளது எதிர்காலத் தேவை களைப் பற்றித் தனியாக எண்ண வேண்டிய அவசியமே இல்லை அல்லவா? பிரத்தியேகமாக அவளுக்கென்று அவர் ஏற்பாடு செய்கிருர் எனில் அதற்கு என்ன பொருள்? 'சர்வேசுவரி, என்னை இப்படி வேறு சோதிக்கப் போகிருயா?' என்று எண்ணக் கூடாத ஒன்றை எண்ணி அஞ்சுவாள் சாரதை.

ஒரு நாள் அவர் சாரதையின் ஒரு மாதப் பராமரிப்புக்கு எவ்வளவு செல வாகும் என்று கணக்குப் போட்டார். பணம் காசு விவகாரத்தில் ஈடுபாடே காட்டாத அவர் இப்படிக் கணக்குப் போடுவது அம்மாவுக்கு விந்தையாக இருந்தது. ஆனுல் தம்மையே சார்ந்து நின்ற அந்த ஜீவனுக்கு—தாம் கைப் பற்றிய தர்மபத்தினிக்கு — கடமையைச் செய்ய வேண்டும் என்றே துறவி ராம

கிருஷ்ணர் தமது பணத் துறவுக்கும் சிறிது துறவு தந்தார்.

''மாசம் முழுக்க உனக்கு எத்தனை செலவாகும்னு நினைக்கிறே ?'' என்று ஒரு நாள் அவளை வினவினர்.

'ஏன் இப்படிக் கேட்கிருர்' என்று குழம்பிய சாரதை, ''அஞ்சு, இல்லாட்டா ஆறு ரூபாய் இருந்தால் போதும்'' என்ருள்.

விலைவாசிகள் மிக மலிவாக இருந்த அக்காலத்தில், ஆடம்பரத் தேவையே இல்லாத அம்மாவுக்கு இத்துணை சொற்பமான தொகை போதுமாயிருந்தது !

ராமகிருஷ்ணர் மீண்டும் ஏதோ கணக்குப் போட்டார்.

''ஆமாம், ராத்திரியில் நீ எத்தனை சப்பாத்தி சாப்பிடுவே?'' என்று வினவினர் மனையாளிடம்.

சாரதையின் முகம் சிவந்தது. அவரது சாப்பாட்டு அளவுக்கு அவள் கணக்குப் பார்த்ததில்லை; சீடர்களின் உணவுக்கும் அளவு வைத்துக் கொண்டதில்லை—அதற்குக் காரணம் அன்னையன்பு. இப்போது தன் சாப்பாட்டின் அளவைச் சொல்ல அவள் கூசினள் — இதற்குக் காரணம் அவளது இயல்போடு பின்னி வைத்திருந்த நாணம்தான்.

''....ம்?'' — மீண்டும் வினவினர்பதி.

''என்னன்னு இது? ஒரு பொம்மணாட்டியைப் பார்த்து இப்படிக் கேட்பாளா?'' — என்ருள் பத்தினி.

'' காரணமாத்தான் கேட்கிறேன். சொல்லு'' என்று ஊக்கினர் அவர்.

எல்லையில்லாத வெட்கத்துடன், ''அஞ்சு, இல்லாட்டா ஆறு சப்பாத்தி சாப்பிடுவேன்'' என்று முனகினள்.

அவர் மீண்டும் கணக்குப் போட்ார். '' நீ சொன்னது சரிதான். அஞ்சாறு ரூபாயிலே நீ ஒரு மாசத்தை ஓட்டிவிடுவே. அப்படீன்னு உனக்கு என்று அறுநூறு ரூபாய் மூலதனம் வெச்சுட்டாப் போறும். அந்த வட்டியிலே பிழைச்சுக்குவே.'' என்ருர்.

அவளுக்குத் திகீர் என்றது.

ராமகிருஷ்ணர் கேட்டாலும் கேட்காவிட்டாலும் பவதாரிணி ஆலயத்திலிருந்து அவருக்கு மாதம் ஏழு ரூபாய் மானியம் அளிக்கப்பட்டு வந்தது. அந்தத் தொகையிலிருந்து அவர் அறுநூறு ரூபாயைத், தமது அத்தியந்தச் சீடர் பலராம் பாபுவின் வசம் சாரதையின் பிற்கால உபயோகத்துக்கென அளித்தார். அவ்வாறே பலராம்பாபு ஆறு மாதத்துக்கொருமுறை சாரதைக்கு முப்பது ரூபாய் வட்டித் தொகை அனுப்பி வந்தார்.

தனிகரான சீடர்கள் பலர் இருந்த போதிலும், ராமகிருஷ்ணர் தாமே மனையாளின் நிதித் தேவையைப் பூர்த்தி செய்தார். எப்பேர்ப்பட்ட தர்மமூர்த்தி?

ஆனல் தர்மத்தை ரசிக்கிற நிலையில் தேவி இல்லை. அவர் செய்கிற ஏற்பாடுகள் அபசகுனங்களாக அவளது அகச் செவியில் அவக்குரல் கொடுத்து அலறின.

சாரதையோ, அல்லது சீலமுள்ள வேறு வேதியர்களோ, தீண்டிய உணவை மட்டுமே புசித்து வந்த ராமகிருஷ்ணர் இப்போது பலதரப்பட்ட வீட்டாரின் அழைப்பை ஏற்று அங்கெல்லாம் சென்று உணவு ஏற்ருர். அவர் எங்குமே அன்ன பிட்சை ஏற்காமல், மற்ற உணவு வகைகளைத்தான் ஏற்ருர். என்ருலும் இதுவும் கூட அன்னைக்கு அச்சமூட்டியது. ''எல்லார் கையிலேருந்தும் நான் எப்போ உணவை அங்கீகரிக்கிறேனே, அப்போ எனக்குப் போங்காலம் நெருங்கிடுத்துன்னு அர்த்தம்'' என்று அவர் கூறியது அவளுக்கு நினைவு வந்தது !

'' இந்த தக்ஷிணேசுவரத்தை விட்டுட்டு கல்கத்தாவிலே நான் ராத் தங்கினு அப்புறம் ரொம்ப நாள் நான் உயிரோடு இருக்க மாட்டேன் '' என்று பிறிதொரு சமயம் சொன்னர்.

இப்போது அவர் கல்கத்தாவில் பலராம்பாபுவின் வீட்டில் இரவிலும் தங்கத் தொடங்கினர். தேவி விலவிலத்துப் போனள்.

ஒரு முறை நரேந்திரநாத் நீண்ட காலம் தக்ஷிணேசுவரத்துக்கு வராமலே இருந்தார். வயிற்றுக் கோளாறுதான் காரணம் என்று தெரிய வந்தது. ''நரேனை இப்போதே அழைத்து வாருங்கள்'' என்ருர் ராமகிருஷ்ணர்.

நரேந்திரநாத் வந்தவுடன். தமக்காக வைத்திருந்த அன்னத்திலும் கஞ்சியிலும் ஒரு பகுதியை அவருக்குக் கொடுத்து, அவர் உண்டபிறகு மீதமிருப்பதைத் தமக்குப் படைக்கச் சொன்னர்.

''சிஷ்யாள் சாப்பிட்ட சேஷத்தை குரு சாப்பிடுவதுண்டா ? நான் உங்களுக்கு வேறே சமைச்சுக் கொண்டு வரேன் '' என்ருள் அம்மா.

''வேண்டாம். வேண்டாம். நரேன் உண்ட மிச்சத்தைச் சாப்பிடறதிலே எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை '' என்று கூறி அதையே பிடிவாதமாக உண்டார் ராமகிருஷ்ணர்.

'ஈசுவரி! கடைசியில் உன் சித்தம் இதுதான ?' என்று மௌனமாகக் கண்ணீர் வடித்தாள் அம்மா. ஈசுவரியின் சித்தம்தான் நடக்கும். மௌனத்தையும் கண்ணீரையும் தவிர அங்கு மற்றவர் என்ன செய்ய முடியும்? (தொடரும்)

மூலம்: கே.ஏ. அப்பாஸ்

# நானே

ஐம்பத்தாறு ஆண்டுகள் வரை அவன் என்னை விட்டு ஒதுங்கியே வாழ்ந்தான். ஆனால் இறுதியில் ஒரு நாள் நாங்கள் நேருக்கு நேர் சந்திக்க நேர்ந்தது.

''என்னப்பா இது? நான் உனக்கு எப்போதும் கடன் தந்ததில்லை. நீ ஏன் என்னைக் கண்டு பார்வையைத் திருப்பிச் சொல்கிறாய்?'' என்று நான் கேட்டேன்.

''உன்னைக் கண்டு நான் வெட்கமடைகிறேன்; பயப்படவும் செய்கிறேன். ஆனால் உன்னை வெறுக்கவில்லை'' என்றான் அவன். ''சிற்சில நேரங்களில் உலகத்தில் நான் உன்னை மட்டுமே விரும்புவதாகவும் உணருகிறேன். ஆனால் அன்பு என்பது எது? வெறுப்பு என்பது எது? உண்மையாகக் கேட்டால் எனக்கு இதுவும் தெரியவில்லை. வெறுப்பும் அன்பும் ஒரே நாணயத்தின் இரு புறங்கள்தாம். இதனால் உன்னை நான் விரும்பும்போதும், நான் உன்னை வெறுப்பதாகவே நீ நினைக்கிறாய் போலும்.''

''இன்று சந்தித்து விட்டோம். அதனால் சிறிது பேச்சு நடக்கட்டுமே. உன்னைப் பற்றி எனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் நான் எழுத விரும்புகிறேன்'' என்றேன் நான்.

''அப்படியானால் நீ எனது இரகசியங்களை அம்பலப்படுத்த விரும்புகிறாய் என்றுதான் சொல்வேன்'' என்று அவன் சொன்னான். ''அதனாலேயே உனக்கு முன்னால் வருவதையே நான் தவிர்த்து வந்தேன். உலகத்துக்கு முன்னால் என்னை ஏன் அவமதிக்க நினைக்கிறாய்? பல முகங்கள் மீது திரை இருந்தால்தான் நன்றாக இருக்கும்.''

''நான் கண்ணாடியின்மீது திரை இருப்பதைப் பார்த்ததில்லை. கண்ணாடி எப்போதும் பொய் பேசுவதில்லை என்கிறார்கள். ஆனால் சில கண்ணாடிகளில் ஒல்லியான மனிதன் தடிப்பாகக் காட்சி தருகிறான். இன்னொரு கண்ணாடியில் குட்டையான மனிதன் உயரமாகத் தென்படுகிறான். அவலட்சணமான முகங்களுடைய மனிதர்களுக்கும் கண்ணாடியில் தங்கள் உருவங்கள் அழகானவையாகவே தென்படுகின்றன. கண்ணாடிகள் உண்மை பேசினால் உலகத்தில் ஒரு கண்ணாடியும் நிலைத்து நிற்க முடியாது. அவை தூள்களாகச் சிதறிப் போயிருக்கும்.''

''அப்படியானால் என்னையும் ஒரு கண்ணாடியாகவே நினைத்துக் கொள். எனது கண்களைக் கூர்ந்து கவனி. பிறகு என்ன தெரிகிறது என்பதைச் சொல்'' என்றான் அவன்.

அவன் குட்டையாக இருந்தான்; வழுக்கைத் தலையன். குழி விழுந்துவிட்ட சின்னஞ் சிறு கண்கள். கண்களைச் சுற்றிலும் கருநிற வட்டங்கள்; பல நாட்களாக அவன் தூங்கவில்லைபோலும் — முகத்தில் முதுமையின் சாயல் இல்லை என்றாலும் நெற்றியில் உள்ள ஆழமான கோடுகள் — துயரங்களின் பல புயல்கள் வந்து சென்று விட்டன என்பதைக் காட்டின. அவனது வாழ்வின் ஒவ்வொரு ஆண்டும் எழுநூற்று முப்பது நாட்கள் கொண்டவையாக இருந்தது போலும்.

''இவனை உனக்குத் தெரியுமா? முன்பே எங்கேனும் பார்த்திருக்கிறாயா?'' எனக் கேட்டேன்.

''அறிமுகமான முகமாகவே இருக்கிறது. ஆனால் பார்த்த இடமும் காலமும் நினைவுக்கு வரவில்லை'' என்று அவன் பதிலுரைத்தான்!

''கவனமாகப் பார்!'' என்றேன் நான். ''நீ கண்ணாடியில் உனது சொந்த முகத்தையே பார்க்கவில்லையா?''

''ஐயா என்ன விளக்கமோ? நீ என்னை இவ்வளவு குரூபியாக நினைக்கிறாயா?'' என்று வினவினான் அவன். ''அறிவாளர்களுக்குப் போன்று எனது நெற்றி உயரமாக இருக்கிறது. ஆனால் நான் வழுக்கைத் தலையன் அல்ல. எருதைப்போல் எனது கண்கள் பெரியவை என்றாலும் அவை அவ்வளவு பெரிதாகவும் இல்லை, இல்லை, ஐயா! எனக்கு அந்த வழுக்கைத் தலையனைத் தெரியாது.''

''நண்பரே!'' நான் பேச முற்பட்டேன். ''இதுதானே சிரமமாக இருக்கிறது. மனிதன் சந்திரனின் பூகோளத்தை நன்கறிவான். ஆனால் தனது முகவெட்டை அறிவதில்லை.''

''என்ன சொன்னாய்?'' அவனுக்கு ஆத்திரம் வந்துவிட்டது.

''ஒன்றுமில்லை. நான் உனது வாழ்க்கையைப்பற்றிஅறிந்துகொள்ள விரும்புகிறேன்.''

''எதற்கு?''

# கோடை அசதியை நொடிப் பொழுதில விரட்டுவது க்ளாக்ஸோஸ்-D®



## அருந்துவீர் க்ளாக்ஸோஸ்-D. அருந்துவதற்கினிய வழிகள் பல.

கோடைச் சூடு ஏற ஏற, வாடிச் சோர்ந்து விடுகிறீர்கள் விரைவிலே. தென்பு போன இடமே தெரிவதில்லை.

எடுத்திடுவீர் குளுமையூட்டும் க்ளாக்ஸோஸ்-D. இனிதே கலந்திடுவீர் ஒரு தம்ளரிலே இரண்டு ஸ்பூன்கள்.

அருந்தும்போதே, அடடா, புதுத் தென்பு துடித்தெழ வைக்குது க்ளாக்ஸோஸ-D, நொடிப் பொழுதிலே.

அதுவன்றோ உச்சிகுளிரும் உணர்வு.



குடிநீரிலே



நேரடியாக வாயிலே



எலுமிச்சம் சாற்றிலே



காப்பியிலோ; தேநீரிலோ

## இலவசம்!

ரூ. 1.25 பெறுமானமுள்ள

**3-தம்ளர் அடுக்கு ஸெட்:**

ஒவ்வொரு 700 கிராம் **க்ளாக்ஸோஸ்-D®** டப்பாவுடனும் கிடைக்கும்.

**முந்துங்கள்! சரக்குகள் இருப்பிலுள்ள வரையே சலுகை!**







**ஊக்க சக்தி உடனடி: அதற்கே க்ளாக்ஸோஸ்-D®**

dCP/GL/27 tam

# அம்மா

ரா. கணபதி

## 27. தாரகேசன் உபதேசம்!

"உன் மனைவி என்பது யார்? உன் பிள்ளை என்பது யார்? நீ யார்? எங்கிருந்து வந்தாய்? சம்சாரம் என்பது வெகு விசித்திரம். சோதரா, இந்த உண்மைகளை உன்னிப் பார்ப்பாயாக."

— ஆதி சங்கரரின் 'பஜகோவிந்தம்.'

திரிகால ஞானியான ராமகிருஷ்ணர் தமது முடிவுக்கு இன்னொரு சூசகம் தெரிவித்தார். "எப்போ பக்தாள் ஸ்வாமிக்குச் செய்யற மாதிரி இதுக்கு (தம் சரீரத்தைத் தொட்டு) பூஜை பண்ணுறுளோ அப்போ இதனுடைய மரணம் நெருங்கி வந்துடுத்துன்னு அர்த்தம்" என்றார்.

சாரதையின் முகத்தில் கலவரம் பரவியது. ஏதும் பேசாமலே அகன்றாள்.

மறு நாள் அவள் நஹவத் மூலையில் உள்ள தெய்வத் திருஉருவப் படங்களுக்குப் பூஜை புரிகையில், மாடிப் படிக்குக் கீழேயிருந்து நிவேதனம் எடுத்து வரப் போன போது நஹவத்துக்குள் ராமகிருஷ்ணர் வந்து நின்றார் — பொருள் பொதிந்த புன்முறுவலுடன்.

இங்கே அன்னத்தை அடுப்பிலிருந்து எடுத்த சாரதை நீர் திரையிட்ட கண்களைத் தாழ்த்திக் கொண்டாள். தெய்வங்களின் சித்திரங்களுக்கு இடையில் சாட்சாத் ராமகிருஷ்ணரின் புகைப்படமும் உள்ளே இருந்தது! தினமும் பூ வழிபாடும், நிவேதனமும் அவருக்கும் செய்யப்பட்டு வந்தன. 'ஆனால் இந்தப் பூஜை அவரது இறுதியைக் குறிக்குமாமே! நான் பூஜிப்பதும் ஒரு குற்றமாச்சா? அந்தக் குற்றத்தைக் கையும் மெய்யுமாகக் காண வந்து விட்டாரே!' என வேதனை உற்றாள் தேவி.

அதுதான் அவரது புகைப்படங்களில் முதன் முதலாகப் போடப்பட்ட பிரதி. அது அழுக்குப் படிந்து கறுத்துப் போய் விட்டது. தக்ஷிணேசுவரத்துப் பிராமணர் ஒருவருக்கு அந்தப் பழைய பிரதி கொடுக்கப்பட்டது. அந்த மனிதர் சில காலத்துக்குப் பின் சொந்தக் கிராமத்துக்குப் போகும்போது அம்மாவிடம் இப்படத்தைக் கொடுத்தார்.



அவள் அதைத் தெய்வங்களின் இடையில் வைத்து வழிபடலானாள்.

நஹவத் உள்ளிருந்து ராமகிருஷ்ணரின் மதுர மோகனக் குரல் கேட்டது. "ஓஹோ, இங்கே இப்படியாம்மா பண்ணிண்டிருக்கே!" என்றார். எட்டிப் பார்த்த சாரதை, அவரே ஆனந்த மயமாகத் தமது படத்துக்கு வில்வார்ச்சனை செய்வதைக் கண்டாள்!

சாரதைக்குத் தெளிவு வந்தது. அவளோ அவரோ அந்தப் படத்தைப் பூஜிப்பதில் அவசூசகம் ஏதுமில்லை. மற்றவர்கள் வழிபடுவதைப் பற்றித்தான்



அவர் குறிப்பிட்டார் என்று புரிந்து கொண்டாள்.

இந்தப் புகைப்படமே அம்மாவின் வாழ்நாளில் அவளது முதல் பெரும் சொத்தாக இருந்தது. நாளாவட்டத்தில் ஏதோ ஓர் அற்புத முறையில் அந்தப் படத்தின் கருமை நீங்கி அது சுத்தமாகிவிட்டது!

சைதன்ய மகா பிரபுவை அவரது மனையாள் விஷ்ணுப் பிரியாவே முதன் முதலாகப் பூஜித்தது போல், ராமகிருஷ்ணரையும் முதலில் தெய்வமாகப் பூஜித்தவள் சாரதைதான். இதிலே ஒரு பெரிய உண்மை அடங்கிக் கிடக்கிறது. எந்த மதத்திலுமே தத்துவங்கள், சடங்குகள் ஆகிய இரண்டு உண்டு. ஞானம், பக்தி என்ற இரண்டு உண்டு. இன்று ராமகிருஷ்ண மடங்களில் அறிவு போதனை, தத்துவப் பிரசாரம் ஆகியன நடைபெறுவது போலவே பரமஹம்ஸ குருமஹாராஜுக்குப் பூஜையும் நடக்கிறது. தத்துவ ஞானத்துக்குக் குறிப்பாக அவரது சீடர்கள் மூல புருஷராயினர்; பூஜைக்கு அம்மா மூல காரணமானாள். தத்துவத்தில் ஆண்மையின் அழுத்தமும் கண்டிப்பும் அதிகம், பூஜையில் பெண்மையின் குழைவும் இனிமையும் அதிகம் என்பதைக் கவனிக்குமிடத்து இது ஓர் அற்புதப் பொருத்த மன்றோ?

சின்னச் சின்ன விஷயங்கள் அமங்கலத்துக்குக் கட்டியம் கூறின. ஒருநாள் கோலாப் — மா சாரதையிடம் வந்து ''டாகூர் இத்தனை வைராக்கியத்தோட இருக்கச்சே அம்மா ஏகப்பட்ட நகையும் நட்டும் போட்டுண்டு இருக்கறது நன்னா இல்லேன்னு மனமோகனுடைய அம்மா குறை சொல்லறா'' என்றாள். அந்த விஷயத்தை கோலாப் அம்மை முடிந்து கொண்டு வந்து சொல்லியிருக்க வேண்டியதே யில்லை. சாரதையின் மன நுட்பத்தைப் புரிந்து கொள்ளாமல் பலமுறை கோலாப் இவ்விதம் அவளுக்குத் துன்பம் தந்ததுண்டு.

இந்த வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் சாரதை கையிலிருந்த ஜோடி வளையல்களைத் தவிர மீத நகைகள் அனைத்தையும் கழற்றி விட்டாள்.

மறுநாள் யோகின்—மா நம் அம்மாவைப் பார்த்ததும் அவளுக்குத் துணுக்குற்றது. சர்வமங்கள மூர்த்தியாக — சர்வாபரணபூஷிதையாக இருந்த அம்மா ஏன் இப்படி மூளி போல் நிற்கிறாள்! யோகின் மிகவும் பிடிவாதம் பிடித்ததன் மீது அம்மா ஒருசில நகைகளை

அணிந்து கொண்டாள். ஆனால் எல்லா ஆபரணங்களையும் அணியவில்லை.

அதன்பின் என்றுமே அணியவில்லை.

ஆம், இது நடந்து சில நாட்களில் 1885ம் ஆண்டு ஜூன் மாதத்தில் ராமகிருஷ்ணர் தொண்டை வலி என்று படுத்தார். அதுவே அவரது உயிரைக் குடித்த புற்றுநோயாக மாறியது.

தேவியின் உயிரையும் அரித்தெடுக்கலாயிற்று அந்தக் கொடூர நோய்.

'ஆகா! என் பிரபு விளையாட்டை முடித்துக் கொள்ளத் தீர்மானித்து விட்டாரா?' என்று அடிக்கடி எண்ணி நடைப்பிணமானாள் அம்மா.

அவள் அவரிடம் கொண்டிருந்த அன்பு எந்தப் பத்தினிக்கும் எந்தப் பதியிடமும் உள்ள பிரியம் மட்டும்தானா? அவள் அன்பே உருவானவள். அவர் அன்பே உருவானவர். அன்பே அன்பிடம் கொண்டிருந்த அன்பு அல்லவா அவரிடம் அவள் கொண்டிருந்த அன்பு?

தக்ஷிணேசுவரத்தில் அந்தக் கொடூர நோய்க்கான வைத்தியம் செய்யச் சௌகரியப்பட்டவில்லை. எனவே 1885 அக்டோபரில் ராமகிருஷ்ணரை கல்கத்தாவில் சியாம்புகுர் சாலையில் ஓர் இடத்துக்கு ஜாகை மாற்றினார்கள். புகழ் பெற்ற ஹோமியோபதி நிபுணர் மஹேந்திரலால் சர்க்கார் வைத்தியம் செய்யலானார்.

சாரதையை தக்ஷிணேசுவரத்திலேயே விட்டு ராமகிருஷ்ணரும், சீடர்களும் சியாம்புகுர் சென்றனர். எந்தச் சமயத்தில் அவள் அவருக்கு மிகவும் அணுக்கத்தில் இருக்க வேண்டுமோ, அந்தச் சமயத்திலே பிரித்து வைக்கப்பட்டாள்.

காரணம் இதுதான்: சியாம்புகுர் வீட்டில் கோஷாப் பெண்டுகளுக்கான தனி இடம் ஏதுமில்லை. நீண்ட நெடுங்காலம் கோஷாவாகவே வாழ்ந்துவிட்ட அம்மா பரபுருஷர்களின் பார்வையில் தத்தளிப்பாள் என்றே அவளை விட்டுச் சென்றார் ராமகிருஷ்ணர்.

அவள் மரக்கட்டையாகி விட்டாள். தக்ஷிணேசுவரத்திலே ராமகிருஷ்ணரும் இல்லை, அன்புக் குழந்தைகளும் இல்லை. அவள் மட்டும் வெட்டு வெட்டென்று பொழுதை நெட்டித் தள்ளிக் கொண்டிருந்தாள். கணவர் உயிருக்குப் போராடும்போது மனைவிக்குக் கோஷா முறையா முக்கியம் என்று தோன்றலாம். ஆனால் அவளுக்கு அவரிடமிருந்த அன்பை விடவா நமக்கு அவரிடம் அதிக பக்தி! பதி சுசுருஷை, அடக்கம் இரண்டுமே அவளது பிறவிப் பணிகள். அடக்கத்தை விசேஷமாகக் கொண்டிராத நவயுகப் பெண்களும் கூடப் பதியிடம் சிறந்த அன்பு பூண்டு பணி செய்யக் கூடும். எனவே இக்காலப் பெண்களுக்கு வழி காட்டவே அம்மா, பதி சுசுருஷையையும் இரண்டாவதாக வைத்து, அடக்கத்துக்கு முதலிடம் தந்தாளோ?

கோலாப் அம்மாகூட அம்மாவைப் பற்றித் தவறாக எண்ணி விட்டாள். ''அம்மாவுக்குத் தான் மகாபட்ட கோஷான்னு ஒரு பெருமை. வரவாளுக்கெல்லாம் வாரி வழங்கிண்டு தர்பார் நடத்தறதிலேயும் அம்மாவுக்கு ஒரு குதூகலம். இதெல்லாம் பிடிக்காமல், அம்மாவிடம் கோவிச்சுண்டுதான் டாகூர் அவளை விட்டுட்டு சியாம்புகுருக்குப் போய்விட்டார்'' என்று யோகினம்மையிடம் கூறினாள் கோலாப்.

அம்மாவிடம் வந்தாள் யோகின்.

துயரில் ஆழ்ந்திருந்த அம்மா யோகினைப் பார்த்ததும் ஆனந்தம் கொண்டாள். ''நீங்க அன்னிக்கு எனக்குப் போட்ட பிச்சோடாவை அவிழ்க்கப் பிடிக்காமே, அப்புறம் இரண்டு நாள் தலைக்கு ஸ்நானம் பண்ணாமலே இருந்தேன். என் யோகின் கொண்டை போட்டா அதுக்குத் தனி மவுசுதான்'' என்றாள் புன்சிரிப்புடன்.

'அடடா, அம்மா குழந்தை போல் பேசுகிறாளே! அங்கே டாகூர் உயிரோடு போராடுகிறார். இந்தக் கூந்தல் அலங்காரம் என் மங்கள மாதாவுக்கு இன்னும் எத்தனை நாள் தக்குமோ?' என்று உள்ளூற அழுது கொண்டாள் யோகின்.

பேச்சுவாக்கில் கோலாப்பின் குற்றப் பத்திரிகையையும் அம்மாவிடம் பிரஸ்தாவித்தாள் யோகின்மா.

அம்மா அதைக் கேட்டதும் அனலில் விழுந்த புழுவாகக் காய்ந்து சுருங்கி விட்டாள். ''டாகூர் என்கிட்ட கோவிச்சுண்டு போய்விட்டாரா? அப்படியா, ஹா...ஹா'' என்று கேவிக் கேவி அழுதாள்.

உடனே ஒரு வண்டி அமர்த்திக் கொண்டு சியாம்புகுருக்கு விரைந்தாள்.

படுக்கையோடு அஸ்தி பஞ்சரமாக ஒட்டிக் கிடந்த பதியிடம் வந்து விசித்தாள்.

''ஏனம்மா? ஏதுக்கு அழறே?'' என்று பிரேமை மயமாகக் கேட்டார் அவர்.

அந்தக் கேள்வியின் இனிமையிலேயே கோலாப் சொன்னது அபத்தம் என்று ருசுவாகி விட்டது. இருப்பினும் அவர் வாயாலேயே அதைக் கேட்க விரும்பிய தேவி, விஷயத்தைச் சொன்னாள். ''எங்கிட்ட... உங்களுக்கு.... கோபமான்னா? கோலாப்!...., சொன்னாளே!'' கண்ணீரிடையே திணறினாள்.

''உங்கிட்ட எனக்குக் கோபம்! நடக்கிற காரியமா அது? அப்படியா சொன்னாள் அந்த கோலாப்? உன்னை அழ விட்

**ஆண்மை —**
**ஒரு மாமேரு,**
**வீறுகொண்ட ஏறு,**
**சீறும் வல்லூறு,**
**சிறிதே ஏறுமாறு.**
**ஆண்மையின்**
**பன்முகப்**
**பண்புகளைப்**
**படித்தறிந்த படைப்பு**
**'எஸ்டர்காட்'**




## எஸ்டர்காட்®

அரசமகுடம் சூடும் ஆடவன்
'எஸ்டர்காட்' அணிபவன்.
'எஸ்டர்காட்' பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
சூட்டிங்குகள்.

தவிர, இளம் சாயல்களிலும்,
எடுப்பான வண்ணங்களிலும்,
பெருமிதப் பிரிண்டுகளிலும்
'மெ:ப்ரின்' 100%
பாலியெஸ்டர் சேலைகள்,
பாலியெஸ்டர் இழைகலந்த
கார்ட்டன் சேலைகள்; 'மெ:ப்ரின்'
பாலியெஸ்டர் இழை
கலந்த உடுப்புத் துணிகள்—

இலேசான லான்கள், கோடை
நிழல் படரும் கேம்ப்ரிக்குகள்,
கோலாகல நகை மிளிரும்
பாப்ளின்கள்; அதிநவீனமான
அரும்பெரும் அழகு
வண்ணங்களிலும்,
பிரிண்டுகளிலும் 'டெரோஸெல்'
பாலியெஸ்டர் இழைகலந்த
காட்டன் ஷர்ட்டிங்குகள்.



ரெடிமேட் ஷர்ட்டுகள்
வாங்கும்போது
தரமான மபத்லால்
உடைகளுக்கான
'ஸ்மார்ட்டி'
சின்னம்
இருக்கிறதா
பாருங்கள்!

## மபத்லால்
## க்ரூப்

[AIYARS-M-172 TM]

டாளே அந்த அசடி! உன்னை யார்னு தெரிஞ்சுக்கலே போலிருக்கு? எங்கே அவள்? எங்கிட்ட அனுப்பு'' என்று தமது புண்ணுண்ட தொண்டையால் பேசி அம்மாவின் புண்ணை ஆற்றி அவளைத் திருப்பி அனுப்பினார் புனிதர்.

பிறகு கோலாப்—மா அவரிடம் வந்த போது அவளை வன்மையாகக் கடிந்து கொண்டார். ''அம்மா யாருன்னு உனக்குத் தெரியலே? அவ ஆதி சாரதாம்பிகையே தெரியுமா? லோகத்துக்கு ஞானம் தரத்துக்காக அவ வந்திருக்கா. அவ ஞானமயீ. அவளை ஏதோ மனுஷின்னு நினைக்கிறே? அவ என்னுடை சக்தி, தெரிஞ்சுக்கோ! சாம்பல் நிறப் பூனை சாம்பலுக்குள்ளே அடையாளம் தெரியாமல் பதுங்கிண்டிருக்கிற மாதிரி அவ தன்னைத் தானே ஒளிச்சுண்டிருக்கா. அவளைப் போய் அழவிட்டயே! முதல் காரியமா அவ கிட்டப் போய் மன்னிப்புக் கேட்டுக்கோ!'' என்றார்.

கோலாப் தக்ஷிணேசுவரத்துக்கு வந்து அம்மாவிடம் மன்னிப்புக் கேட்டாள். ''அம்மா, டாகூர் என்னை ரொம்பக் கோவிச்சுண்டுட்டார். நான் யோசனையே இல்லாமல்தான் அப்படி உளறி விட்டேன்'' என்று அழுதாள்.

அம்மா மறுமொழி ஏதும் சொல்லவில்லை. சிரித்துக் கொண்டே கோலாப் மாவின் முதுகை மும்முறை தட்டிக் கொடுத்தாள். ''பிரிய கோலாப்'' என்று மும்முறை கூறினாள். கோலாப்பின் இதயம் குளிர்ந்தது.

ஆதியில் கோலாப் தன் ஒரே மகளைப் பறி கொடுத்துவிட்டு தக்ஷிணேசுவரம் வந்தாள். அவளுக்கு மல்லுக்கட்டி வயிறு புடைக்க உணவு படைத்தே, அதிலுள்ள உப்பினால் புத்திர சோக உணர்வைக் குறைத்தவள் சாரதை. சோகத்துக்கு ஆளாக இருந்த அந்தத் தேவியிடமே இப்போது குழந்தையாக ஒட்டிக் கொண்டாள் கோலாப்.

கோலாப் ராமகிருஷ்ணருக்கு உணவு பரிமாறிய காலங்களில் இரவு வெகு நேரம் வரையில் அவருடன் உரையாடிவிட்டே நஹவத்துக்குத் திரும்புவாள். நஹவத் மாடிப் படிக்கட்டுக்குக் கீழேதானே சமையலும் சாப்பாடும் நடந்தன? அங்கே பாதுகாப்புக் கிடையாது. எனவே அம்மா விழித்திருந்து கோலாப்பின் உணவுக்குக் காவலிருப்பாள். ஓர் இரவு அம்மாவாலேயே தாங்க முடியவில்லை. ''என்னாலே முடியவில்லே. பூனையோ நாயோ எதுவேணும் தின்னுட்டுப் போகட்டும்'' என்று வாய்விட்டுச் சொன்னாள். அவள் 'ம்' என்றால்கூட எவ்வாறோ கிரகித்துக் கொள்ளும் ராமகிருஷ்ணரின் செவியில் இந்த வார்த்தைகள் விழுந்து விட்டன. கோலாப்பை மிகவும் கடிந்து கொண்டார். அப்படியும் கோலாப்போ, ''நீங்கதான் அம்மா அலுத்துக்கறான்னு சொல்றேளே தவிர, வாஸ்தவத்திலே அம்மா என் விஷயமா சலிச்சுக்கவே மாட்டா. பெற்ற பெண்ணுக்கு மேலே என்னைப் பிரியமா வைச்சுண்டிருக்கா'' என்று சொல்லிவிட்டு, தனது வழக்கத்தைத் தொடர்ந்தாள்.

அம்மாவே அதிசயமாகக் கோபம் கொண்டாலும் கூட அவளது அரிய குழந்தைகள் அந்த அதிசயத்தை லட்சியம் செய்யக் காணோம்!

**ரா**மகிருஷ்ணர் சியாம்புகுரிலிருக்க, தக்ஷிணேசுவரத்தில் கொட்டுக் கொட்டு என்று தனித்திருந்த தேவி, பவ முகர்ஜி என்பவரின் குடும்பத்தைச் சேர்ந்த பெண் ஒருத்தியிடம் பாடம் சொல்லிக் கொள்ளத் தொடங்கினாள். நீண்ட நெடுங்காலமாகப் படிப்பை விட்டிருந்த சரஸ்வதி தேவி மீண்டும் மிகுந்த சிரத்தையோடு ஆரம்ப பாட புத்தகங்களைப் படிக்கலானாள். அந்தச் சிறிய பெண் நம் சரஸ்வதி தேவிக்குப் பரீட்சை வைத்து 'பாஸ்' கொடுத்தாள்! ஆயினும் அம்மாவுக்குக் கடைசிவரை படிக்கத்தான் தெரியுமே தவிர, எழுதுவதில் பயிற்சியே இல்லை. வெகு காலத்துக்குப் பின் பக்தர் ஒருவருக்குத் தன் கையெழுத்துப் போட்டுத் தருவதற்காகப் படாத பாடு பட்டாள் தேவி. ஆனால் எழுத்து வந்தால்தானே! கிறுக்கிக் கிறுக்கிப் பார்த்தாள். ''அடியம்மா! என்னாலே முடியலே'' என்று கடைசியில் தோல்வியை ஒப்புக் கொண்டாள் சரஸ்வதி! புத்தகத்திலும் எழுத்திலுமா ஞானம் இருக்கிறது?

சியாம்புகுரில் அம்மா இல்லாமல் ராமகிருஷ்ணரும் சீடர்களும் அவதிப்பட்டார்கள். குறிப்பாக, ரணமுண்ட அவரது தொண்டைக்கு இதமாக யார் சமைப்பது?



''அம்மாவை அழைத்து வரவா?'' என்று சீடப்பிள்ளைகள் கேட்டார்கள்.

''இங்கே கோஷா அநுஷ்டிக்க முடியாதே! இருந்தாலும் இங்கே வரதில் அவளுக்கு ஆட்சேப மில்லாவிட்டால் எனக்கு ஆட்சேபம் இல்லை'' என்றார்.

சீடப் பிள்ளைகள் தக்ஷிணேசுவரத்துக்கு வந்து விஷயத்தைச் சொன்னவுடனே அம்மா அவர்களோடு புறப்பட்டு விட்டாள். அதன் பின் அவளால் கோஷா விரதத்தைப் பெரிதாக எண்ண முடியவில்லை.

ஆயினும் சியாம்புகுர் வந்த பின், சூழ்நிலை பாதகமாக இருக்கிறது என்பதால் கோஷா முறையை அடியோடு விட்டு விட்டு அவள் மனம் போனபடியிருக்கவில்லை. இங்கேதான் அவளது பெருமை பொதிந்திருக்கிறது. சூழ்நிலை முற்றிலும் பாதகமாக இருந்தபோதிலும், கணவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து கொண்டு, தன் கோஷா விரதத்தையும் காத்துக்கொண்டாள். அங்கு ஒரே ஒரு குளியலிடம் தான் உண்டு. எனவே இரவு இரண்டு மணிக்கே எழுந்து ஜபம் செய்துவிட்டு, மூன்று மணிக்குக் குளியலை முடித்துக் கொண்டாள். இரண்டாவது மாடியில் மற்றவர் பார்வை படாமல் ஒரு தாழ்வரை இருப்பதைப் பார்த்து, அங்கேயே தனக்கு 'ஜாகை' வைத்துக் கொண்டாள். அங்குதான் சமையலும் செய்தாள். அவருக்கு உணவு தயாரித்ததும் மூத்த கோபாலையோ லாடுவையோ கீழே அனுப்பி அவருடன் இருப்பவர்களை வெளியே அனுப்பி வைப்பாள். பிறகு கீழிறங்கி வந்து அவருக்குப் பரிமாறுவாள். மீண்டும் மாடிக்குப் போய் விடுவாள். இரவு பதினேரு மணிக்குச் சந்தடி ஓய்ந்த பின், ராமகிருஷ்ணர் படுத்திருந்த ஹாலுக்கு அருகேயிருந்த சிறிய அறைக்கு வந்து முடங்கிக் கொள்வாள்.

இப்படி இரண்டு மாதங்கள் ஓடின. பகவானின் நோய் முற்றியது. வைத்தியரின் ஆலோசனைப்படி காசிப்பூர் சாலையில் இருந்த காற்றோட்டமுள்ள ஒரு விஸ்தாரமான வீட்டுக்கு அவரை இடம் மாற்றினர். இங்கே அன்னைக்கு அதிக சிரமம் இருக்கவில்லை. சரீர சிரமம் குறைந்தது. மனத்துக்குச் சிரமம் அதிகரித்தது, எலும்பும் தோலுமாகிவரும் பதிதேவரைக் கண்டு!

தமது மரணத்தின் நெருக்கத்தைப் பற்றி அவர் குறிப்பிட்ட சூசகங்களில் இதுவரை நிறைவேறாதிருந்த இன்னொன்றும் இப்போது நடந்து விட்டது. ராமகிருஷ்ணர் தக்ஷிணேசுவரத்திலேயே இருப்பதாக எண்ணிக் கொண்டு சில

> எத்தனை காலம் வாழ்கிறோமோ அத்தனைக் காலம், எத்தனை மக்களுக்கு முடியுமோ அத்தனை மக்களுக்கு, எத்தனை நேரம் முடியுமோ அத்தனை நேரம், எத்தனை இடங்களில் முடியுமோ அத்தனை இடங்களில், எத்தனை விதங்களில் முடியுமோ அத்தனை விதங்களில், எத்தனை உபகரணம் உண்டோ அத்தனையும் கொண்டு — உன்னால் எத்தனை நல்லது செய்ய முடியுமோ அத்தனையும் செய்வாயாக!
>
> ஜான் வெஸ்லி : ''அவனது ஆணை''

அடியார்கள் இனிப்புப் பணியாரங்களுடன் அங்கு சென்றனர். அவர் சுகவீனமுற்று கல்கத்தாவுக்குச் சென்று விட்டார் என்று தெரிந்து கொண்டனர். உடனே அவர்களுக்கு என்ன தோன்றியதோ, அங்கிருந்த ராமகிருஷ்ணரின் திரு உருவப் படத்தின் முன் பட்சணங்களை வைத்து இறைவனுக்கு நிவேதிப்பது போல் அதனை நிவேதனம் செய்தனர். பிறகு 'டாகூரின் பிரசாதம்' அனைவருக்கும் வழங்கப்பட்டது. இந்தச் செய்தி ராமகிருஷ்ணரின் காதுகளை எட்டியதும் அவர், ''அவா ஏன் அப்படிப் பண்ணினா? தக்ஷிணேசுவரத்திலே அம்மா (காளி பவதாரிணி) இருக்கச்சே அவளுக்கு நைவேத்தியம் பண்ணாமே ஏன் இதனுடைய (தமது) படத்துக்கு நிவேதிச்சா?'' என்றார்.

சாரதைக்குப் பூர்வத்தில் அவர் சொன்னது நினைவு வந்தது. அவளது உயிர்நாடிக்குள் அமங்கலிய பீதி குடைந்து சென்றது.

'பொதுவாகவே உயிரும் உடலும் கொண்டு ஒருவர் வாழ்ந்து வரும்போது அவரது படத்துக்கு நிவேதிப்பது அச்சானியம் என்பார்களே!' — பேயறைந்தாற்போல் உட்கார்ந்திருந்த அம்மாவின் எண்ணங்களைப் புரிந்து கொண்டார் ராமகிருஷ்ணர். ''பிரியே, கலங்காதே! இனிமேல் **என்** படத்தை வீடு வீடா வைச்சு இந்தமாதிரி பூஜை பண்ணப் போறா! ஆமாம், இதை **நான்** சத்தியப் பிரமாணமாகச் சொல்றேன்'' என்றார்.

தம்மைப் பற்றி 'இந்தக் கட்டை' என்றோ, அல்லது தமது உடலைத் தொட்டு, 'இது' என்றோ சொல்லும் ராமகிருஷ்ணர், 'என்' என்றும் 'நான்' என்றும் இத்தனை அழுத்தமாகச் சொன்னது சாரதைக்கு அதிசயமாயிருந்தது. அந்த அதிசயம் அவளை இனம் புரியாமல் ஆட்டியும் வைத்துவிட்டது.

பக்கத்திலிருந்த ராமலாலைப் பார்த்து ''பவதாரிணிக்கு நீ பணி பண்ணிண்டு இருக்கப் போறே! அதனாலே உனக்கு

ஒரு குறைவும் இருக்காது'' எனக் கூறிய ராமகிருஷ்ணர், சாரதையின் புறம் திரும்பி, ''அதுக்கு அப்புறம் நீ காமார் புகுரிலே போய் இரு. லக்ஷ்மியையும் கொஞ்ச நாளைக்கு உன் கவனத்திலேயே வைச்சுக்கோ. அவளுக்கு அன்ன வஸ் திரத்துக்கு வசதி இருக்கு. நீ ஒண்ணும் செய்யணும்கிறது இல்லே. ஆனால் அவ ஊரை விட்டு எங்கேயும் போயிடாமப் பார்த்துக்கோ!'' என்றார்.

குடும்ப விஷயங்களுக்கு இவ்விதம் அறிவுரை கூறிய கடமை வீரர், மீளவும் ராமலாலைப் பார்த்து, ''சித்தி காமார் புகுரிலேயே இருந்துண்டு இருக்கணும். நீதான் கவனிச்சுக்கணும்'' என்றார்.

அந்த உருக்கமான சூழலில் கூடப் பாறுங்கல் இதயத்துடன் பேசினார் ராம லால்: ''சித்திக்கு எங்கே இஷ்டமோ அங்கே இருந்துப்பா. எனக்கென்ன வந்தது?''

சித்தப்பாவின் மறைவுக்குப் பின் சித்தி தனது பிறந்தகமாகிய ஜயராம் பாடியில் வசிக்கத்தான் பிரியப்படுவாள் என்று ராமலால் எண்ணினார் — அப் படிச் செய்தால் தமக்கும் ஒரு பொறுப் புக் கழிந்ததாகும் என்ற நிம்மதியில் இப்படிப் பேசினார்.

''ஏண்டா கொழந்தே! உனக்கு என் னமா இப்படிப் பேசத் தோணறது? நீ ஒரு புருஷப் பிரஜையாப் பிறந்திருக் கிறது எதுக்காக?'' என்று கேட்டு ராமகிருஷ்ணர் பேச்சை முடித்தார்.

நிரந்தரமாக விடை கொள்ள அவர் தீர்மானித்து விட்டார் என்று சார தைக்கு வெட்ட வெளிச்சமாகிவிட்டது. அவர் தீர்மானித்தாரோ அல்லது அம் பாள் தீர்மானித்ததைத் தமது வழக் கப்படி அவர் எதிர் நீச்சே போடாமல் ஏற்றுவிட்டாரோ? 'இந்தச் சமயத்தில் நான் எதிர்நீச்சல் போட்டால் மட்டும் பலன் இருக்குமா? இருந்தாலும் மூச் சைக் கையில் பிடித்துக் கொண்டு ஒரு முயற்சி செய்து வைப்போமே! முன்பு நான் நேர்ந்து கொண்டபோது பிரத்தி யட்ச வரப்பிரஸாதினியாக வந்து காத் தாளே சிம்மவாஹினி! இப்போது, இவரை மிருத்யு வந்து தீண்டாதபடி மிருத்யுஞ்ஜயனை தாரகேசுவரனிடம் போய் தவமிருந்து பார்க்கிறேன்.'

சாரதை தாரகேசுவரத்துக்குப் போவதை அவரும் ஆட்சேபிக்கவில்லை.

தாரகேசன் சந்நிதியில் போய் விழுந் தாள் சாரதை, மாங்கலியப் பிச்சை கோரி. இரண்டு நாட்கள் எழுந்தாளில்லை. அன்னமும் தண்ணீரும் இன்றி பிராயோ பவேசம் இருந்தாள். 'கால ரூபிணியான காளியின் சங்கற்பத்தைக் காலகாலன் மாற்ற மாட்டானா? அதற்கு ஒரு சமிக்ஞை தனக்குத் தெரிவிக்க மாட் டானா?' என்று ஒவ்வொரு விநாடியும் எதிர்பார்த்தபடி இரண்டு நாட்களைக் கடத்தினாள். 'ஒன்று அவர் பிழைக்க வரம் பெறுவேன்; அல்லது என் உயிரை ஈசுவரன் சந்நிதியில் விடுவேன்' என்ற உறுதியுடன் வயிறு காய, நாக்கு உலரக் கிடந்தாள்.

இரண்டு நாட்கள் ஓடின. நள்ளிரவு. திடுமென ஒரு பேரொலி கேட்டது. ஏராளமான பானைகளை ஒருசேர உடைத்தால் உண்டாகும் ஒலிபோல் இருந்தது. மண்பானையா, அல்லது மாயக் குயவனார் மண்ணாற் புனைந்த மனிதப் பிண்டம் என்ற பானையா? பிண்டப் பானைதான், அண்டப் பானையும் கூடத்தான். காலகாலனே சம்ஹார ருத்ரனாகி அண்ட பிண்டங் களை உடைத்தெறிவது போல் சார தைக்குத் தோன்றியது. எங்கேயோ ருத்திரன் ஊதும் கொம்பொலி அவள் செவிகளில் வந்து புகுந்து பேசியது: ''சாரதே! இந்த உலகில் கணவன் என் பது உண்மையில் யார்? அவன் யாருக் குக் கணவன் அல்லது எதற்குக் கண வன்? மனைவி எனப்படுபவள் யார்? இந்த உலகில் யாருக்கு யார் உறவு? யாருக்காக யார் உயிரை விடுவது?''

தாரகேசன் அவள் விருப்பத்தை நிறை வேற்றவில்லை. ஆயினும் அவளை அவன் அலட்சியம் செய்யவில்லை. அவளிடம் அந்தராத்மாவாகப் பேசி விட்டான். பரம வைராக்கியத்தை உபதேசித்து விட்டான்.

பகவத் சங்கற்பத்துக்கு மாறாகத் தான் எதுவுமே செய்வதற்கில்லை என்று சாரதைக்குத் தெள்ளத் தெளிவாகிவிட் டது. ஆண்டவனை நிர்ப்பந்தித்து வரம் பெறத் தனக்கு எந்த உரிமையும் இல்லை என்று உணர்ந்தாள். 'நீ விட்ட வழி அப்பனே' என்று கண்ணீருடன் கூறிக் கொண்டு, தான் கிடந்த இடத்தி லிருந்து எழுந்தாள். சந்நிதானத்துக்குப் பின்புறம் தேங்கியிருந்த அபிஷேக தீர்த்தத்தை அள்ளிக் குடித்து உண்ணா விரதத்தை முடித்தாள். தோல்வியோடு காசிப்பூருக்குத் திரும்பினாள். (தொடரும்)

# அம்மா
ரா. கணபதி

## 28. "என் அம்மா காளி! என்ன பிழை செய்தேனடி?"

தூய ராகவா! உன்னைத் தொடர்ந்தே வருவேன். அப்போதுதான் என் பிரேம பாவத்துக்கு மாசு ஏற்படாமலிருக்கும். எனக்குப் பதியே பகவான். மரணத்துக்குப் பின்னும் உன்னோடு கூடி இருப்பதே எனக்குக் கல்யாணம்.

- சீதா வசனம்: ஸ்ரீமத் ராமாயணம், அயோத்தியா காண்டம்

தாரகேசுவரத்தில் நடந்தது அனைத்தும் ராமகிருஷ்ணருக்குத் தெரியும். அம்மா உள்ளே நுழைந்ததும், முகம் நிறையக் குறும்புச் சிரிப்புடன், "பிரியே! தாரகேசுவரம் போனாயே, ஏதாவது கிடைச்சுதா?" என்றார்.

தமக்குப் புற்றுநோய், உடல் இற்று வருகிறது, உலக வாழ்வு முற்றுப் புள்ளி காணப் போகிறது என்பதில் கவலையே இன்றி, விஷமம் செய்கிறார் பகவான்.

பரமேசுவரனின் சங்கற்பத்துக்குச் சரணாகதி செய்துவிட்டு, தன்னைத் தானே ஒருவாறு ஆசுவாசப்படுத்திக் கொண்டு திரும்பிய சாரதை பதிதேவரின் கேள்வியில் நிலைகுலைந்து போனாள்.

அவரோ குறுநகையுடன் கேட்கிறார்: "என்ன, போன இடத்திலே ஒண்ணும் கிடைக்கல்லை; ஒண்ணுமே கிடைக்கல்லை. அப்படித்தானே?"

மரத்து உட்கார்ந்திருந்தாள் தேவி. மரணப் படுக்கையில் இருந்த பகவான் ரணமுண்ட தொண்டை நோகப் பேசினார்: "ஒரு சொப்பனம் கண்டேன். மத்தகஜம் ஒண்ணு எனக்கு மருந்து தேடிண்டு போறது. எங்கேயும் மருந்து கிடைக்கல்லை. பூமியைத் தோண்ட ஆரம்பிக்கிறது. ஒரு வேளை பூமிக்கு அடியிலிருந்து மருந்து எடுத்துண்டு வந்து தருமோன்னு நினைச்சுக்கறேன். ஆனால் அது மருந்தை எடுக்கறதுக்குள்ளேயே கோபால் வந்து என்னை எழுப்பிட்டான். அது சரி, உனக்கு ஏதாவது சகுனம் வந்ததோ?"

தேவி அவரது படுக்கையில் முகத்தை அழுத்திக் கொண்டு தேம்பினாள். அவள் கண்ட கனவை அவரிடம் சொல்ல அவளுக்குத் திராணி இல்லை.

காளியன்னை கழுத்தை வளைத்துக் கொண்டு அவள் கனவிலே நிற்கிறாள். "ஏனம்மா, கழுத்தை இப்படி என்னமோ மாதிரி வைச்சுண்டிருக்கே?" என வினவுகிறாள் சாரதை. "அதோ, பார்த்தியா?" என்று காளி ஆள்காட்டி விரலால் சுட்டுகிறாள். அவள் காட்டிய இடத்தில் ராமகிருஷ்ணரின் புற்று கொண்ட மிடறு தெரிகிறது. "அது என் நெஞ்சிலே வந்திருக்கு. அதனாலே தான் கழுத்தைத் திருப்பிண்டிருக்கேன்" என்கிறாள். ஆக, காளியன்னை அந்த நோயைத் தீர்த்து வைக்கப் போவதில்லை என்று நிச்சயமாகிவிட்டது.

நோயின் வலிக்குச் சிறிது ஆறுதலாயிருக்கிறதென்றே காளி கழுத்தை வளைத்துக் கொண்டாள் போலும்! ஆனால் இவர் கழுத்தை வளைத்துக் கொள்ளக்கூட இல்லையே! எதற்கு இப்படி நிவாரணமே இல்லாமல் கொடூரமான இம்சையை அனுபவிக்கிறார்? அன்பு மொழி தவிர வேறெதுவும் சொல்ல அறியாத இவருடைய தொண்டையிலா புற்றுநோய் வரவேண்டும்?

மலயமாருதம் போல் பேசினார் பகவான்: "அம்மா, இந்தச் சரீரம் நன்னா அவஸ்தைப்படட்டுமே. உங்களுக்கெல்லாம் இந்தமாதிரி இம்சைகள் வரப்படாதுன்னுதான் இந்த ஒரு சரீரத்துக்குச் சேர்த்துவைச்சு நோய் வந்திருக்கு. நல்லதுதானே?"

உலகின் பாபம் தீரவே சிலுவையில் அறையுண்ட இயேசுநாதனைப் போன்றவர் பரமஹம்ஸ ராமகிருஷ்ணர். அவருக்குப் பூர்வ கருமம் கிடையாது. ஆனால் அடியார் பலரது வினையை இவர் வாங்கிக் கொண்டு, அவர்களது கர்மம் தீரவே இந்த வியாதியை அனுபவித்தார். பரம கருணை இதுவே. அதே சமயத்தில் பரம ஞானமும் இதுவே. சரீரம் வேறு, ஆத்மா வேறு என்கிற பரம ஞான வாசகத்தை வாழ்ந்து காட்டினார். அத்தனை வியாதியையும்

பொருட்படுத்தாமல் இன்மொழி பேசி வாழ்ந்தார்.

சாரதை உட்படப் பல சீடர்களுக்கு நேர இருந்த கொடுமைகளைத் தாமே வாங்கிக் கொண்டு கழுவாயாக நோயை அநுபவித்ததாகச் சொன்னார். ஆனால் இவர் எப்படி அவர்களது இன்னல் களைத் தாம் ஏற்றாரோ, அதே போல் அவர்களும் பிற்காலத்தில் வேறு பலரது இன்னல்களை ஏற்றுச் சொல்லொணுத் துன்பங்களை அநுபவிக்கத்தான் செய் தனர்.

சோகச் சுமை தலையை அழுத்த, சாரதை படி ஏறிக் கொண்டிருந்தாள், குண்டான் நிறையப் பாலுடன். உலக மெல்லாம் சுற்றுவதுபோல் இருந்தது. தடாலென்று கீழே சாய்ந்துவிட்டாள். ஓசை கேட்டு ஓடி வந்த பாபுராம் அவளை ஆசுவாசப்படுத்தித் தூக்கினன். அவளால் அடி எடுத்து வைக்கவே முடிய வில்லை. கணுவிலே எலும்பு பிசகிக் கொண்டு விட்டது. பாற்கடலில் சர்வ மங்களையான லக்ஷ்மி தோன்றினள். அறை முழுதும் ஓடும் பாலில் அமங்கலம் மூடிய சாரதை அலமாந்து அமர்ந்தாள்.

ராமகிருஷ்ணருக்கு விஷயம் தெரிந் தது. இந்தத் துர்ச் சம்பவத்தால் சீடர்க ளிடம் ஏற்பட்டுள்ள பீதியை ஒரு கணத் தில் புரிந்து கொண்டார். அதைத் தெளிவிப்பதே தமது கடமை என்று கருதினர். எனவே, அந்த அவலச் சூழலிலும் ஹாஸ்ய உணர்வை எப் படியோ வரவழைத்துக் கொண்டார்: ''சரி, அம்மா விழுந்தது அவளுக்கு ஓய்வு கொடுத்துடுத்து. அம்மா தன் ஜன்மாவிலே ஓய்வு எடுத்துண்டதில் லையே! அந்த மட்டும் நல்லதுதான். ஆனல் இந்தக் கட்டையோட பாடுதான் கஷ்டமாயிடுத்து. இதுக்கு யார் அம்மா மாதிரிப் பார்த்துப் பார்த்துப் பணி விடை பண்ண முடியும்? இது யார் வைச் சுத் தர கஞ்சியைச் சாப்பிடணுமோ? ...ம்'' என்று முனகி முறுவலித்தார்.

சீடப் பிள்ளைகளின் சாம்பியிருந்த உள்ளத்தில் சிறிது ஜீவ களை வந்தது.

''அம்மா உட்கார்ந்த இடத்திலேயே கஞ்சி போட்டுடுவா. ஆனா அதைத் துளித் துளியா உங்க வாயிலே விட்டு முழுங்கப் பண்ணறதுக்கும் அம்மாவாலே தானே முடியும்? அம்மா எப்படி இங்கே படியேறி வருவா?'' என்றான் பாபுராம்.

''எலே பாபுராம், ஒண்ணு பண் ணேன்!'' என்ற ராமகிருஷ்ணர், தமது நாசியைச் சுற்றி ஒரு நத்து இருப்பது போல் அபிநயித்துக் காட்டி, ''இப் படியாப்பட்ட அம்மாளை ஒரு கூடை



யிலே வெச்சுத் தலே மேல் தூக்கிண்டு வாயேன்'' என்முர்.

பாபுராமும் நரேனும் துயரை மறந்து, விலா வலிக்கச் சிரித்தார்கள்.

அதை அடுத்த மூன்று நாட்கள் கோலாப்—மா ராமகிருஷ்ணருக்கு உணவு படைத்தாள். அதற்கு மேல் சாரதையால் அந்த வீட்டிலிருந்து கொண்டே அவரைப் பார்க்காமலிருக்க முடியவில்லே. வீங்கிய கால் 'விண்' 'விண்' என்று தெறிக்க விந்தி நடந்து அவருக்குக் கஞ்சி எடுத்துச் சென்முள். கண்களே மூடிப் படுத்திருந்தார். பரம சாந்தம்! பரம செளந்தரியம்!

''சாப்பிட நாழியாச்சுன்னு! சித்தே எழுந்திருக்கிறேளா?'' என்று மெது வாகக் குரல் கொடுத்தாள் தேவி.

அவரது மெலிந்த உடலில் சிறிய ஆட்டம் கண்டது. கண்களேத் திறந் தார். எங்கேயோ தூர தேசத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த மனசு இன் னும் இங்கே வர மறுப்பதுபோல் இருந் தது. தூர தேசத்திலிருந்து பேசுவது போலவே அவரது குரலும் ஒலித் தது. ''இந்தக் கல்கத்தா ஜனங்களேப் பார்த்தியா? இருட்டுலே புழு நெளியற மாதிரி நெளிஞ்சுண்டிருக்குகள். அம்மா, இவாளேயெல்லாம் நீதான் கவனிச் சுக்கணும்'' என்முர் சாரதையிடம்.

'ஆகா! தமது சங்கற்பத்தை அவர் மாற்றிக் கொள்ளவே மாட்டாரா? பொறுப்பை என் தலேயில்தான் கட்டப் போகிருரா?' — கலங்கினுள் அம்மா.

''நான் அபலே. என்னுலே முடியற காரியமா இது?'' என்று குழறினுள்.

ராமகிருஷ்ணர் தமது திவ்விய சரீரத் தைத் தொட்டுக் காட்டி, ''இது மட் டும் என்ன பெரிசாப் பண்ணிடுத்து? நீதான் இது பண்ணினதைவிட நிறையச் செஞ்சாகணும்'' என்முர்.

தேவி புரிந்து கொண்டு விட்டாள்! பிசுபிசுத்துக் கிடந்த மனத்தில் தாற்கா லிகமாக ஓர் அழுத்தம் உண்டாயிற்று. ''நடக்க வேண்டிய காலத்திலே எல்லாம் நடக்கும். அது கிடக்கட்டும். இப்போ இந்தக் கஞ்சியைக் கொஞ்சம் கொஞ்ச மாக முழுங்குவேளாம்!'' என்முள்.

தம்மைவிட அவள் நிறையச் செய்ய வேண்டும் என்று அவர் சொன்னது உயர்வு நவிற்சிப் பேச்சல்ல. அவரது அவதாரப் பணியைவிட அவளது அவ தாரப் பணி பெரியது என்ற உள்ளார்ந்த உணர்ச்சியையே வெளியிட்டார். ராம கிருஷ்ணரின் தியாகத்தையும், ஞானத் தையும், மகா பாவங்களேயும் முன்னேடி யாகக் கொள்பவர்கள் குறைவாகவே இருக்க முடியும். குடும்பப் பொறுப்பு இல்லாத அவரைப் போல் உலக மக்கள் எல்லோரும் வாழ முடியாது. ஆனுல் அனேவருமே — குறிப்பாகப் பெண்ணுகப் பிறந்த சகலருமே — சாரதையின் உழைப்பு, எளிமை, அன்பு, அடக்கம் இவற்றை முன்னேடி யாகக் கொண்டு வாழ வேண்டியவர்கள் தாம். அவள் ஒரே சமயத்தில் சந்நியாச தர்மம், கிருஹஸ்த தர்மம் இரண்டுக் கும் ஆதரிச மூர்த்தியன்ருே?

மனித வாழ்வின் உன்னதங்கள், எளி மைகள் இரண்டையும் உலகம் மறந் திருந்தபோது இந்த திவ்விய தம்பதியர் அவதரித்தனர். அவர் உன்னதங்களே எளிதாக வாழ்ந்தார். அவள் எளிமை களே உன்னதமாக வாழ்ந்தாள். உன்ன தங்களே வாழக்கூடிய உத்தமப் பிறவி களுக்கு அவர் போதிய அளவு உதார ணம் காட்டி விட்டதால் விடைகொள்ள முடிவு செய்து விட்டார். எளிமைகளே வாழ வேண்டிய அனேவருக்கும் அவள் இன்னும் உதாரணங்களேக் காட்ட வேண்டும் என்பதாலேயே தமக்குப் பிறகும் அவள் இங்கிருக்க வேண்டும் என்று கட்டளே இட்டார்.

அவர் அவளே விட்டுச் சென்றதற்கு இன்னேர் அற்புதக் காரணத்தை அவளே பின்னெருகால் வெளியிட் டாள். ''முந்தைய அவதாரங்களின் மனேவிமார்கள், பதிக்கு முந்திக் கொண்டே சுமங்கலிகளாக மறைந் திருக்கிருர்கள். டாகூர் மட்டும் ஏன் தங்களே முந்திக் கொண்டார்?'' என்று பக்தர் ஒருவர் அம்மாவைக் கேட்டார். அவர் சொன்னது முற்றிலும் சரியல்ல. கண்ணன் மறைவுக்குப் பிறகுதான் ருக்மிணி முதலிய சில பத்தினிகள் தீக் குளித்தனர்; சத்தியபாமை முதலிய வேறு சில கிருஷ்ண பத்தினிகளோ ஐயன் மறைந்த பின் தவ வாழ்வு மேற் கொண்டனர். அது ஒருபுறம் இருக் கட்டும். நம் அம்மா சொன்ன பதிலேப் பார்ப்போம். ''பிள்ளாய்! டாகூர் இந்த உலகத்திலே சகலத்தையும் அம்மாவாகவே பார்த்தார்னு உனக்குத் தெரியுமோன்னே? அந்த அம்மாவின் தன்மை என்னன்னு வெளிப்படுத்திக் காட்டறத்துக்காவே என்னே இங்கே வைச்சுட்டுப் போயிட்டார்.''

ஆகா, எத்தனே உயர்ந்த உண்மை! உலகை யெல்லாம் அம்பாளாகப் பார்க்கிற பாவத்தை அவர் உணர்த் தினுர். அந்த அம்பாள் உலகையெல் லாம் எப்படிப் பார்ப்பாள் என்பதை அவள் உணர்த்தினுள்.

தம் இருவரின் அவதாரப் பணிகள் பற்றி அவர் அடிக்கடி பேசலானுர். 'எப்படியும் எவரிடமும் செப்ப முடியாத

உண்மைகளை அவர் அவளிடம் பாட்டி லும் செப்பினார் :

**இப்புவி வந்து நான் ஒப்பி ஏற்ற துயர்**
**எப்படி எவரிடம் செப்பிடுவேன்?**
**அணிந்த காலணி அழுந்தக் கடித்தால்**
**அணிந்தவனன்றி அப்பிணி யார் அறிவார்?**
**தன்முகம் காட்டத் தயங்கிச் சிவக்கும்**
**அன்னியர் வீட்டுக் கன்னிகையானேன்**
**பெண்ணாய்ப் பிறந்தவன் பெரும் இடர்ப்பாட்டை**
**சொன்னால் வருமோ? சொல்லவும் அறியேன்**

''ஒப்பி ஏற்ற இந்தத் துயர் எனக்கு மட்டும்தானா அம்மா? உனக்கும் அதே துயரம்தான்'' என்றார் ராமகிருஷ்ணர், தமது அன்பு மனையாளிடம். உலகத்தின் துயர் களைவதற்காக அவதார புருஷர்கள் ஏற்கும் துயர்களை யாரே அறிய முடியும்? வெளியிலே கூத்தடித்தாலும் ராமகிருஷ்ணரின் அகத்தில் இந்தத் துயர் ஒரு கோஷாவாக இருந்து வந்திருக்கிறது?

இன்னொரு நாள். காலனின் காலடி தவிர வேறு அரவமற்ற காசிப்பூர் இல்லத்தில் ராமகிருஷ்ணர் சாரதையையே நீண்ட நேரம் பார்த்தார்.

''என்னவோ சொல்லணும்னு நினைக்கறேள். சொல்லாம கட்டுப்படுத்திக்கறேள். என்ன தோணினாலும் வெளிப்படச் சொல்லுங்கோன்னா!'' வேண்டிக் கொண்டாள் தேவி.

''நல்லது, தேவி! இந்தக் கட்டையே. எல்லாத்தையும் தன்னந்தனியா பண்ண முடியுமா? நீ ஒண்ணும் செய்யமாட்டாயா?''

''நான் பொம்மனாட்டி. என்னாலே என்ன செய்ய முடியும்?''

''இல்லே. அப்படி இல்லே. நீ நிறையச் செஞ்சாகணும்.''

தன் தலைமீது மயிரிழையில் தொங்கிக் கொண்டிருக்கும் கைம்மை என்றவாளைப் பார்த்துக் கொண்டே ஒவ்வொரு விநாடியும் கதிகலங்கிக் கொண்டிருந்தாள் தேவி. ஏராளமான அடியார்களின் பாபங்களை ஏற்றுக் கொண்டிருந்த பகவான் அவற்றைத் தீர்ப்பதற்காக மாதக் கணக்கில் புற்றுநோயுடன் போராடினார். போராடிப் போராடி அடியோடு சக்தி இழந்து விட்டார்.

தூக்கி வாரிப் போட்டது சாரதா தேவிக்கு! தனது கண் கண்ட காட்சி மெய்யானதுதானா? சயனத்தில் தமது சரீரத்தைத் திருப்பவும் சக்தியற்ற டாகூரா அதோ மின்னல் கொடி போல் துள்ளி ஓடுகிறார்! வீட்டை விட்டு எங்கே வெளியே ஓடுகிறார்?

அந்த நிலையிலும்கூட கோஷாவான தேவியால் வீட்டுக்கு வெளியே வந்து பார்க்க முடியவில்லை. ராமகிருஷ்ணரின்

> எல்லா சாஸ்திரங்களையும் கடந்த மகான்களுக்குச் சாஸ்திரக் கட்டுப்பாடுகள் எதற்கு என்று சிலர் எண்ணுகிறார்கள். நீங்கள் ஆகாய விமானம் பார்த்திருக்கிறீர்கள். ஆகாயத்தில் பறப்பதற்குச் சக்கரம் வேண்டியதில்லை. ஆனால் விமானத்துக்கும் சக்கரம் இருக்கிறது அன்றோ? விமானதளத்தில் வந்திறங்கி, பிரயாணிகளை ஏற்றிக்கொண்டு, இந்தச் சக்கரங்களால் ஊர்ந்த பின்பே அது வானத்தில் பறக்கும். பரம ஞான நிலையில் பறக்கும் மகான்களும் இதேபோல் நம்மிடம் வந்து, நம்மை அழைத்துக்கொண்டு, நம் வழியிலேயே சிறிது ஊர்ந்து சென்று காட்டவே சாஸ்திரங்களை அநுஷ்டிக்கிறார்கள். பிறகு நம்மையும் உயர்நிலைக்குத் தூக்கிச் செல்கிறார்கள்.
> — ஸ்ரீ ஸத்ய ஸாயிபாபா

அறைக்கு விரைந்தாள். கட்டில் காலியாக இருந்தது. சந்தேகமே இல்லை. அவர்தான் அப்படி ராமசரம் போல் பாய்ந்தோடியிருக்கிறார். எதற்காக, எங்கே, எப்படிப் போனார்?

திக்பிரமை பிடித்த தேவி தன் அறையில் வந்து விழுந்தாள். மீண்டும் கண்களில் மின்னல் கொடி பளிச்சிட்டது. ஆம், அவரேதான்! தமது அறைக்குத் துள்ளிக் கொண்டு திரும்புகிறார்.

சாரதை அவரது அறைக்குச் சென்றாள். அங்கு ஏதுமே நடக்காததுபோல் ராமகிருஷ்ணர் படுத்திருந்தார்.

அவராக விஷயத்தைச் சொல்லாததால் அவளே கேட்டுவிட்டாள்.

''ஓ! நீ கவனிச்சுட்டியா? ஒண்ணுமில்லே! நிரஞ்ஜனும் மற்றப் பசங்களும், அங்கே தோட்டத்திலே பனை மரத்துலேயிருந்து பதநீர் இறக்கிச் சாப்பிடப் போனா. அந்த மரத்திலே ஒரு கரு நாகம் சுற்றிண்டு இருந்தது, எனக்கு இங்கேயே தெரிஞ்சுடுத்து. அதுதான் அந்தப் பசங்களுக்குத் தெரியாம வேறே மார்க்கத்துலே அங்கே ஓடினேன். அந்தப் பாம்புகிட்ட 'இனிமே இங்கே தலை காட்டாதேயம்மா'ன்னு சொல்லி அனுப்பிச்சுட்டு, போன சுவடு தெரியாமல் வந்துட்டேன். இதைப் பகிரங்கப் படுத்த வேண்டாம்'' என்றார்.

(நீண்ட காலத்துக்குப் பிறகு தேவி இச் சம்பவத்தை வெளியிட்டாள்.)

'பசங்களிடம்' இருந்த அன்பு அவரை அப்படி அமாநுஷியமாக நடந்து கொள்ளச் செய்தது! ஆமாம், அவர்களிடம் அவருக்கிருந்த அன்புதான் எத்தகையது? இளமையில், ''அம்மா, காளி, உன்னைப் பாராமலே இன்னொரு நாள் சென்றதே!'' என்று கதறிய ராமகிருஷ்ணர், பிற்பாடு இந்தப் பசங்களுக்காகத் தவித்து, ''என் பசங்களே! உங்களைப் பாராமலே இன்னொருநாள் சென்றதே!'' என்று கதறினார். அப்புறம் அந்தப் பசங்

களும் ஒவ்வொருவராக அவரிடம் வந்தனர். உபதேசங்கள் பெற்றனர். அதன் வழி ஒழுகினர். தூய பிரம்மசரியம் காத்தனர். வீடு வாசல், படிப்பு பதவி எல்லாவற்றையும் விட்டு சந்நியாசம் கொள்ளவும் தயாராயினர். உலக மகா ஆன்மிக ஸ்தாபனமான ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கம், அந்தப் பெயரைச் சூட்டிக் கொள்ளாமலே; காசிப்பூரில் ராமகிருஷ்ணரின் மரணப் படுக்கை யருகே உருவம் பெறலாயிற்று.

பசங்களின் பக்குவத்தில் மகிழ்ந்து அவர்களை ஆண்டிகளாக்கிப் பார்க்க அவாவினர் பகவான். தமது தொண்டையால் சிறிதேனும் விழுங்க முடிகிற இப்போதே அந்த ஆண்டிகளிடமிருந்து அமுது பெற அவாவினர். ''கண் மணிகளா! நீங்கள் பிச்சை எடுத்துச் சாப்பாடு கொண்டு வாங்கோ'' என்றார்.

ஒரு காலத்தில் வாலிப முறுக்கும், அறிவுச் செருக்கும் கொண்டிருந்த நரேந்திரன் இதைக் கேட்டதும் தனக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்தது போல் களித்துக் குதித்தான்.

''முதலில் நம் அம்மாவிடம் பிச்சை வாங்குவோம்'' என்று மற்ற குருபாயி—தோழர்களிடம் சொன்னான்.

அந்த அற்புதக் குழந்தைகள் சாரதையின் முன் கைநீட்டி நின்றன—உபநயன காலத்தில் வாமன மூர்த்தி அன்னபூரணேசுவரியின் முன் 'பவதி பிக்ஷாம் தேவி' என்று நின்றதுபோல்!

அவள் அளித்த அன்னத்திலேயே ஞானமும் உட்சென்றது என்று முன்னமே கண்டோம். ஞான மயமான பெயர்களைச் சூட்டிக்கொண்டு பிரம்ம வித்யாம்பிகை, ஞானம்பிகை என்றெல்லாம் பல ஸ்தலங்களில் அம்பாள் விளங்கிய போதிலும், ஆதி சங்கரர் காசியிலே உள்ள அன்னபூரணியிடமே வந்து தானே'' ஞானமும் வைராக்கியமும் பிச்சை தா'' என்று யாசித்தார்!

சாரதா தேவி தன் அருமந்தக் குழந்தைகளுக்கு அன்னபிட்சை அளித்ததோடு நிற்கவில்லை. எதிர்காலத்தில் மகத்தான ராமகிருஷ்ண மடங்கள் எழும்ப மகாலக்ஷ்மியின் கடாக்ஷமும் தேவை அல்லவா? எனவே, அவள் அக் குழந்தைகளுக்குக் காசுப் பிச்சையும் கொடுத்தாள். பிச்சைக் கலயத்திலே ஒன்றொன்றாகப் பதினாறு அணாக்களைக் கொட்டினாள்; கண்களிலிருந்து அமிருதமும் கொட்டிக் கொண்டிருந்தது. பூர்ண சந்திரனின் பதினாறாவது கலையே ஞானத்தின் நிறைவு என்பதை நினைவில் கொண்டு ஷோடசியாகிய நம் அம்மா பதினாறு அணாக்களைப் போட்டாளாம்! இந்தப் பிச்சை போட்டதன் மூலம் ராமகிருஷ்ண சங்கத்தின் மூல நிதியமாகவும் ஆகிவிட்டாள்! ஆம், பிற்காலத்தில் ராமகிருஷ்ண ஸ்தாபனம் தோன்றிய போது, துறவிகளாகிவிட்ட சீடர்கள் பேரில் அந்தச் 'சொத்து' இருக்க முடியாதாகையால், அது உலக வழக்கப்படி சந்நியாசம் பூணாத சாரதைக்கே சொத்தாயிற்று!

பசங்கள் ஆனந்த பரவசம் அடைந்தனர். அவர்கள் தக்ஷிணேசுவரத்தில் குருநாதருடன் கொட்டம் அடித்து விட்டு இரவு வீட்டுக்குத் திரும்புமுன் அம்மாவிடம் வருகையில், ஏழை அம்மா எப்படியோ ஏழைப் பசங்களுக்கான வாகனக் கூலிகளையும் எடுத்து வைத்திருப்பாள். நள்ளிரவாகி அவள் உறங்கப் போய்விட்டாலும் கூட, வாசற்படியில் சில்லறை மினுங்கிக் கொண்டு கிடக்கும். இன்று வள்ளிசாகப் பதினாறு அணாவை, கொடுக்கவே பிறந்த அவளது திருக்கரம் ஒன்றொன்றாகப் போட்டது பசங்களின் நெஞ்சகத்தில் நீங்காமல் புகுந்துவிட்டது!

பசங்களை இப்படி உலுக்கி எடுத்த அம்மா மரண வாடை வீசுகிற அந்தச் சூழலில் மணம் கமழும் மன நலத்தால் யோகின்—மாவையும் உலுக்கிவிட்டாள்!

யோகின் பிருந்தாவனத்துக்குச் சென்று தவமிருக்க விரும்பினாள். 'டாகூரி'ன் அநுக்கிரகத்தைக் கோரி வந்தாள் காசிப்பூருக்கு. அவர் முகத்தில் ஒளி வீசியது. ''பிருந்தாவனமா! பேஷ்! அவசியம் போம்மா! அங்கே சகலத்தையும் பார்ப்பே'' என்றார்.

தமக்கு உணவு கொண்டு வந்திருந்த சாரதையைக் காட்டி, ''யோகேன், இவாகிட்டச் சொல்லிண்டியா? இவா என்ன சொன்னா?'' என்றார்.

பிருந்தாவன யாத்திரை பற்றி அம்மா விசேஷமாக என்ன சொல்லக் கிடக்கிறது என்றுதான் யோகின் எண்ணினாள்.

அம்மாவும், ''நீங்கதான் சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லி, ஆசீர்வாதமும் பண்ணியிருக்கேளே? நான் என்ன பண்ணக் கிடக்கு?'' என்றாள்.

ராமகிருஷ்ணர் மீண்டும், ''யோகேன்! அம்மாகிட்டே அநுமதி வாங்கிண்டு போ. அப்போதான் யாத்திரை நல்லபடியாப் பூர்த்தியாகும்'' என்றார்.

சாரதை காலியான உணவுப் பாத்திரங்களுடன் விறுவிறுவென்று வெளிச் சென்று விட்டாள். யோகின் அவள் பின்னாலேயே சென்றாள். ஏனோ அவளால் பேச முடியவில்லை. அம்மாவின் பெருமை அவள் நெஞ்சிலே விம்மியது.

மறுநாள். பிருந்தாவனம் கிளம்பு முன் யோகின் மீண்டும் காசிப்பூர் வந்

தாள். டாகூரை வணங்கியபின் சாரதையிடம் வந்து அவளது திருவடியில் விழுந்தாள். சாரதாதேவி உலகுக்கு அபயம் தரவே பிறந்த தன்து கையை யோகின்மாவின் சிரத்தில் அழுந்த வைத்து, அவளுடைய இஷ்ட தெய்வத்தின் மந்திரத்தைப் பன்முறை ஜபித்தாள்.

ராமகிருஷ்ணர் ஜீவியவந்தராக இருக்கும் போதே சாரதையின் அநுமதிக்கும் ஆசிக்கும் இடம் ஒதுக்கித் தந்துவிட்டதால் அவர் விடைகொள்ளும் நாள் நெருங்கி விட்டதென்று உறுதியாயிற்று. திரண்டு வந்த அடியார்களிடம் பேச முடியாத தொண்டையால் அன்பு பொங்கப் பேசித் தீர்ந்தார். உபதேசிக்க வேண்டும் என்ற எண்ணமும தீர்ந்தது.

''எலே சசி, எனக்கு உபதேசிக்கிற ஆசையும் போயிடுத்து. அம்மாவைக் கூப்பிடு. அவளுக்குத்தான் இது ஏன்னு தெரியும். அவ மகாமதி'' என்றார்.

சசி சாரதையை அழைத்து வந்தார்.

''பிரம்மத்தைத் தவிர வேறெந்தப் பிரக்ஞையும் எனக்கு இல்லே. இது ஏன் பிரியே ?'' என்றார்.

பிரம்மம் உலகமாக வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறது. இந்த வேஷத்தைத் திருத்தவே அது அவதாரம் நிகழ்த்துகிறது. வேஷத்தைச் செம்மை செய்யவே நமது அவதார புருஷர் உபதேசம் தந்தார். இப்போது வேஷம் அவர் மனசிலிருந்து போய்விட்டது. ஸ்வரூபம் மட்டுமே நின்றது. அவதாரம் முடியப் போகிறது என்பது தவிர இதற்கு வேறென்ன அர்த்தம் ?

இதை எப்படி வாய்விட்டுச் சொல்வாள்? முகத்தைத் திருப்பிக் கொண்டு கண்ணீரைச் சுண்டி எறிந்தாள்.

**1886** ஆகஸ்டு பதினைந்தாம் தேதி. தலையணைகளின் மீது சாய்ந்திருந்தார் ராமகிருஷ்ணர். உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. லக்ஷ்மியைப் பிடித்துக் கொண்டு அம்மா வந்து நின்றாள். ராமகிருஷ்ணருக்கு உலக நினைவு தப்பி விட்டதென்றும் இனி அவர் பேச முடியாதென்றும் எல்லோரும் நினைத்த அச்சமயத்தில். அம்மாவைக் கண்டதும் அவர் நல்ல நினைவுடன் பேசினர் : ''ஆகா நீ இங்கேயேதான் இருக்கியா? பார்த்தியா, நான்தான் எங்கேயோ போறாப்பலே இருக்கு. ஜலத்திலே அளைஞ்சிண்டு எங்கேயோ தொலைதூரத்துக்குப் போறாப் போலே இருக்கு.''

அம்மா விம்மி விம்மி அழுதாள்.

தமது ஆயுட்கால அன்பு முழுவதையும் ஆயுள் முடிகிற சமயத்தில் ஒன்று திரட்டிப் பேசினர் பகவான்: ''அம்மா, துக்கப்படாதே ! உனக்கு ஒரு கவலையும் வேண்டாம். இத்தனை நாளா இருந்தாப்பலேயே இனியும் இருக்கப் போறே! பசங்கள் உன்னை நன்னாப் பார்த்துப்பா. எனக்கு எப்படிச் செஞ்சிருக்காளோ அந்த மாதிரி உனக்கும் செய்வா. அம்மா, லக்ஷ்மியை மட்டும் கொஞ்சம் கவனிச்சுக்கோ.''

சிறு பிராயத்தில் கணவனை இழந்த தமையன் மகளிடம் பகவானின் கருணையைப் பாருங்கள் !

அன்று சாரதையின் உள் மனம் அமங்கள நிழல்களை உலகெங்கும் பார்க்கத் தொடங்கிவிட்டது. சகடம் கழன்ற வண்டி போல் சகல பிரபஞ்சமும் சமநிலை தடுமாறிவிட்டது போல் அவளுக்கு ஓர் அச்ச உணர்வு !

குழந்தைகளுக்காகக் கிச்சுடி தயாரித்தாள். அதன் அடிப் பிடித்துக் காந்திப் போயிற்று. சமையலிலே சமயத்தை வாழ்ந்த சாரதையின் வாழ்வில் நடந்திராத விஷயம் ! குழந்தைகளுக்குக் கிச்சுடியின் மேல் பாகத்தைப் பரிமாறிவிட்டு, அடிக் காந்தலில் சிறிதை மட்டும் தான் உண்டாள். கூரையில் அவள் உலர்த்தியிருந்த மங்கள வஸ்திரம் எங்கோ காணவில்லை. மண் சட்டி ஒன்றை அவள் எடுக்கும்போது தடாலென்று விழுந்து சுக்குநூறாயிற்று.

மண்ணினுல் செய்து கொண்ட சரீரத்தை அன்று பகவான் உடைத்துக் கொண்டு விட்டார்.

இரவு ஒரு மணி இரண்டு நிமிடம். பரமஹம்ஸ ராமகிருஷ்ண குருமகராஜ், ''காளி, காளி காளி'' என்று மும்முறை கூறிவிட்டுப் பிரம்ம சக்தியினுள் ஐக்கியமாகிவிட்டார்.

பரமசுமங்கலியாக வெளி மனிதர்கள் முன்வந்திராத தேவி, மங்கலியம் பறிபோன அந்த நிமிஷத்தில் தன்னை மறந்து உள்ளேயிருந்து ஓடி வந்தாள்.

ஆனந்த முறுவல் இழைய தேஜோமயமாகக் கிடந்த தேவ தேவனின் தேகத்தருகே வந்து நின்றாள்.

மங்கல மாதாவைக் கண்ணால் காணுமல் முதல் முறையாக அவளை அமங்கல மாதாவாகப் பார்த்த அடியார்கள்,— அவளது மெல்லிய மதுரக் குரலை இதுவரை கேட்டதில்லை. இன்று அவளது அலறலைக் கேட்டனர் !

'' என் அம்மா, காளீ! நான் என்ன தப்பு செஞ்சேன்னு என்னை விட்டுட்டுப் போயிட்டே ! அம்மாடீ, என்னை ஏன் கைவிட்டுப் போயிட்டே?'' — சாரதாமணியின் இதயம் வெடித்து எழுந்த தீனப் பிளிறல் காசிப்பூர் வீட்டையே உலுக்கிவிட்டது.

(தொடரும்)

# FANDANGO★

## பீகன் விசிறி தரும் குளிர் வீச்சில் நடனம் கூட ஆடுமளவிற்கு மகிழ்ந்து போவீர்கள்



அற்புதமான பீகன் விசிறியின் சிறப்புகளை கவனியுங்கள் :

- புதிய, அழகான, சீரான உருவம்
- உச்ச வேகத்திலும், ஓசையின்றி, தடையில்லாத ஓட்டம்
- அதிக பட்ச காற்று வீச்சு தரும் அமைப்பு
- நேர்த்தியான பிளாஸ்டிக் ரெகுலேட்டர்
- குறைந்த மின் செலவு
- ஒரு ஆண்டு உத்திரவாதம்; தேவைப்படும் போது விற்பனைக்குப்பின் சேவை
- 1200 மிமீ (48") அளவில் கிடைக்கிறது; விரைவிலேயே, 900 மிமீ (36"), தவிர மற்ற அளவுகளிலும் கிடைக்கும்.

"அற்புதம்" எனக்கூறுவீர்கள் நீங்கள்: அதை நாங்கள் "பீகன்" என அழைக்கிறோம்.



உங்கள் நம்பிக்கைக்குரிய சின்னம்

**பெஸ்ட் & கம்பெனி பிரைவேட் லிட்.**

13/15, வடக்கு பீச் ரோடு, சென்னை-1.

தமிழ்நாட்டில் கிளைகள்: கோயம்புத்தூர், திருச்சி.



Focus.BC.427(b) TAM

★ ஒரு ஸ்பெயின் தேசத்து நடனம்



# சமுதாயம்



காரர்கள் மிகவும் பெருந்தன்மையோடு எங்களுடன் ஒத்துழைத்ததை மறக்க முடியாது.''

''நீங்கள் சேகரிக்கும் உணவுப் பொருள்களை நீங்களே விநியோகிப்பது சிரமமாக இல்லையா?''

''அந்தச் சிரமத்தை, பால விஹாரும் ஏற்றுக்கொள்வதால் சிரமமாகத் தெரியவில்லை.''

''இன்னும் வேறு என்ன தொண்டு செய்கிறது யூத் சர்வீஸ்?''

''குழந்தைகளுக்கு உபயோகப்படும்படியான பழைய சட்டை, டிராயர் முதலிய துணிகளைப் பலரிடமிருந்து சேகரித்து ஏழை அநாதைகளுக்கு விநியோகம் செய்கிறோம்.''

''கசங்கியும் கிழிந்தும் போயிருக்கும் மேற்படி உடுப்புக்களை உபயோகித்தால் எப்படி....?

நான் இப்படிக் கேட்டதும் அருகிலிருந்த குமாரி சுலோசனாவுக்குக் கோபமே வந்துவிட்டது! ''என்ன ஸார் அப்படிக் கேட்டு விட்டீர்கள்? நாங்கள் அவற்றை விநியோகிக்கும் போது ஏறத்தாழப் புதுசு மாதிரியே இருக்கும்'' என்றார் படபடப்புடன். ''சேகரித்துத் தரும் உடுப்புக்களை வாஷ் பண்ணி, பழுது பார்த்துத் தைத்து அதன் பிறகே விநியோகிக்கிறோம்'' என்றார். அவர் துடிப்பான சுபாவம் கொண்ட பள்ளி உபாத்தியாயினி.

''வீணாக்காதீர்கள்'' தொகுதிக்கு (waste not commission) மிஸ் எச். ஆர். கமலா பொறுப்பாளர். இப் பெண்மணி ஓர் உபாத்தியாயினி. இவருக்குத் துணையாக மிஸ் ஒய். பரிமளா, மிஸ் சோபனா கேட்டி, மிஸ் சசிகலா ஆனந்த் போன்ற பெண்மணிகளும் இன்னும் பல ஆண்மணிகளும் இருக்கின்றனர்.

''நீங்கள் சேகரிக்கும் மருந்துகளை எப்படி ஏழைகளுக்குப் பயன்படுத்துகிறீர்கள்?''

''ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் எங்களிடமிருந்து மருந்துகளைப் பெற்றுக்கொண்டு அந்தச் சேவையைச் செய்கிறது'' என்றார் மிஸ் கீதா. இப்பணி அவர் பொறுப்பில்தான் நடக்கிறது.

கீழ்ப்பாக்கத்தில் அழகான பங்களாவில் இந்தச் சங்கம் மாதம் ஒருமுறை கூடுகிறது. அது ஒரு 'சோஷியல் கெட் - டுகெதர்.' இந்த இளைஞர் சங்கத்தில் பெண்கள் பலர் அங்கத்தினரா யிருப்பதுடன், சமூக சேவையில் சிரமம் பாராமல் பங்கெடுத்துக் கொள்ளவும் செய்கிறார்கள். சங்கத்தின் அங்கத்தினர்கள் அனைவரும் நல்ல உத்தியோகங்களில் இருப்பவர்கள். சமூக நற்பணிகளை ஓய்வு நேர வேலையாகவே மேற்கொள்கின்றனர்.

(யூத் ஸர்வீஸின் தொண்டுகளில் பெண்மணிகளின் பெயர்களை மட்டும் குறிப்பிட்டிருப்பதற்கு ஆண்மணிகள் என்னை மன்னிப்பார்களாக! கட்டுரை கவர்ச்சியாக இருக்கவேண்டும் என்று ஆசிரியர் கூறியதால் கவர்ச்சிப் பெயர்களாகச் சேர்த்திருக்கிறேன். இது ஆண்மணிகளை எந்த விதத்திலும் குறைத்து மதிப்பிடுவதாகாது.)

நான்காவதாக ஒரு தொகுதி Friendship commission. அயல் நாடுகளிலிருந்து இங்கு வந்து படிக்கும் மாணவர்களின் நலன்களை நட்புரிமையோடு கவனித்து ஆவன செய்தல். இதற்கு மைக்கேல் கிட்டிங் என்ற அமெரிக்க மாணவரே பொறுப்பு வகிக்கிறார்.

இந்தச் சங்கத்தில் ஒரு சிறப்பு அம்சம். தலைவர், உபதலைவர், செயலாளர் என்றெல்லாம் யாரும் கிடையாது. ஆனால் அவர்களுக்குப் பதில் Patrons, co-ordinaters, Skippers என்று பலர் இருக்கிறார்கள். இவர்களை முறையே ஆதரவாளர்கள், இணைப்பாளர்கள், ஆட்டத் தலைவர்கள் என்று கூறலாம். தலைவன் தொண்டன் என்ற எண்ணம் வளராமல் சமத்துவ உணர்ச்சியுடன் பணியாற்ற இந்த ஏற்பாடு. மூன்று மாதங்களுக்கு ஒருவர் இணைப்பாளராக இருப்பார். 'ஸ்கிப்பர்' பதவியும் மூன்று மாத காலத்துக்குத்தான். விளையாட்டுக்களின் போது கட்சித் தலைவனை ஸ்கிப்பர் என்று அழைப்பது வழக்கமல்லவா? அந்த மாதிரிதான் இவரும்.

இவர்கள் தொண்டு வளர்ச்சியடைவது பொதுமக்களின் ஆதரவைப் பொறுத்தது. விளம்பரத்தைச் சிறிதும் விரும்பாத சேவை மனப்பான்மை கொண்ட யூத் சர்வீஸை உங்களுக்கு அறிமுகம் செய்து வைப்பதில் பெருமைப் படுகிறேன்.

**— ஸோமாஸ்**

# அம்மா

ரா. கணபதி

## 29. கண்ணன் பிறந்த மண்ணிலே!

கணவன் இறந்தவுடன் தன் உயிரையும் விடும் பத்தினி தன்னையும் கணவனையும் கரையேற்றுவாள்! ஆனால் குழந்தைகள் உள்ள ஒரு பெண், கணவன் மரணத்துக்குப்பின் மனோ வாக்குக் காயங்களின் தூய்மையைக் காத்து அநுஷ்டான நியமங்களுடன் விளங்கினால் தன்னையும் கணவனையும் கரையேற்றுவதோடு தன் புத்திரர்களையும் கரையேற்றுவாள்.

மகாபாரதம், ஆதிபர்வம்

காளி மாதாவுககு சாரதாதேவி எந்த அபசாரமும் செய்யவில்லை. காளி மாதாவுக்கு மட்டும் என்ன? இந்தப் பிறவி எடுத்த நாளாக சாரதா தேவி ஈ எறும்புக்குக்கூடத் தீங்கு நினைத்ததில்லை. இந்தப் பிறவிக்கு முன் கர்ம வசப்பட்ட பூர்வ ஜன்மமோ அவளுக்குக் கிடையாது. அப்படியாயின் பாவமே அற்ற அந்தப் பரிசுத்த ஜீவனைக் காளி ஏன் முப்பத்திரண்டாம் வயதில், தெய்வக் கணவனைப் பலி கொடுத்துக் கைம்பெண்ணாக நிறுத்தினாள்?

காலக்கிரமத்தில்தான் சாரதாமணியே இதற்கு விடையைப் புரிந்து கொண்டாள். மூளையால் புரிந்துகொண்டாளோ, இல்லையோ, இதன் விடையைப் பிரதி சுவாசத்திலும் வாழ்ந்து காட்டினாள். காளி மாதா தனது அம்சமாகவே ராமகிருஷ்ணரை அனுப்பி ஆத்மிக உன்னதங்களை வாழ்ந்து காட்டினாள். அந்த உன்னதம் எங்கோ எட்டாக் கையில் இல்லை என்று காட்டுவதற்காக ராமகிருஷ்ணரை எளிமையின் பக்கத்திலேயே வைத்து வாழச் செய்தாள். அதே சமயத்தில் எளிமையை உலகுக்கு உணர்த்த சாரதை என்கிற உருவையும் தன் அம்சமாகவே அனுப்பி வைக்க வழி ஏற்படுத்திக் கொண்டாள். உடல் துறவை விடப் பெரியதான மனத் துறவின் மகிமையைக் காட்டவே ராமகிருஷ்ணரை மனைவியுடன் வாழ்ந்த மகா புருஷனாக வாழ வைத்தாள் பராசக்தி. அதன் வந்தனையாக இன்னொரு பெண்ணும் அதே போன்ற தூய மண வாழ்க்கை வாழ்ந்து காட்டச் செய்தாள். அவர் உன்னதமாகப் பெற்ற துறவை, அவரது மனையாள் எளிதாகப் பெற்று வாழச் செய்தாள் காளி மாதா.

உன்னதத்துக்குச் சரணாகதி செய்து வாழ்ந்தது எளிமை. அந்த உன்னதம் உலகில் உள்ள மட்டும் இந்த எளிமையின் பெருமை தனித்துத் தெரிய முடியாது என்றாகிவிட்டது. எனவேதான் உன்னதம் முதலில் போய்விட வேண்டும், பிறகு எளிமை மட்டும் வாழ வேண்டும் என்று காளி சங்கற்பித்தாள்.

எங்கே போயிற்று அந்த உன்னதம்? எளிமையின் அந்தராத்மாவுக்குள்ளேயே போய்க் குடிகொண்டது. இந்த எளிமை எப்படி ஒளிந்து வாழ்ந்ததோ, அப்படியே அந்த உன்னதம் இந்த எளிமைக்கும்கூடத் தெரியாதபடி, அதனுள்ளேயே வந்து ஒளிந்து கொண்டது. ஆனால் காலக்கிரமத்தில் எளிமை உணர்ந்துவிட்டது: 'உன்னதம் எங்கும் போய்விடவில்லை. தன்னுள்ளேயே வந்து உறைந்து விட்டது' என்று.

ஆனால் இப்போது, பொன் மேனியிலிருந்து புண்ணிய மூச்சு வெளிப் போய்விட்ட இப்போது, அவளுக்கு அவர் போயே போய்விட்டார் என்றுதான் தோன்றியது. பிரபஞ்சமே அவளுக்குச் சர்வசூனியமாகி விட்டது.

மறு நாள் மாலை. கதாயியாகவும், கதாதர பட்டாசாரியராகவும், ராமகிருஷ்ணராகவும், பரமஹம்ஸராகவும், குரு மஹாராஜாவாகவும், பகவானாகவும் பல பெயர்களில் உலவி வந்த தங்கத் தேகம் நேற்று நள்ளிரவு வரையில் எந்தக் கட்டிலில் சயனித்திருந்ததோ, அதே கட்டிலில் இப்போது ஒரு தாமிரக் குடம் ஆரோகணித்திருந்தது. தங்கத் தேகம் சாம்பலாக மாறி அந்தக் குடத்துள் நிறைந்திருந்தது. ஐம்பது ஆண்டுகள் நிகழ்த்திய அற்புத லீலா விபூதி மறைந்துவிட்டது – பஸ்ம விபூதி தான் நிற்கிறது! சாரதா தேவி தனியாகத் தவித்தாள். பதி மறைந்தபின் துக்க நாட்கள் கழியும் வரையில் மங்கலச் சின்னங்களுடன் இருக்கலாமாயினும், தேவியால் இப்போது அணிபணிகளைத் தாங்க முடியவில்லை. இது வரை அவற்றை அணிந்திருக்கிறோம் என்ற நினைவும் மரத்திருந்தாள். நினைப்பு வந்தவுடன் அவற்றை ஒவ்வொன்றாகக் களையலானாள். ராவணனால் அபகரிக்கப்பட்ட சீதாதேவி கழற்றி எறிந்த திருவாபரணம் ஒவ்வொன்றும் ராமபிரா

னுக்கு ஒரு கதை சொன்னதுபோல், இந்த ஆபரணங்களுக்கும் கதை உண்டு. அன்று இன்பக் கதைகளாக இருந்தவை இன்று துன்பக் கதைகளாகிவிட்டன. ராமகிருஷ்ணர் தமது மூக்கைச் சுற்றி அபிநயித்துக் காட்டினரே, அந்த நத்தும் திவ்விய மாதாவின் நாசியிலிருந்து இறங்கிவிட்டது. இதோ, அவர் ஆசை ஆசையாகச் செய்து போட்ட பொற்காப்புக்களையும் கடைசியில் அம்மா கழற்றத் தொடங்கினள்.

தனது வலக் கையால் இடக் கையை உறுவி ஒரு காப்பைக் கழற்றத் தொடங்கியபோது, குபீரென தேவிக்கு ரோமாஞ்சனம் ஏற்பட்டது. இவள் ஒரு கையால் இன்னெரு கையைப் பிடித்திருக்கிறள். இவளது இரு கைகளையும் வேறு இரண்டு மலர்க் கைகள் அழுந்தப் பற்றியிருக்கின்றன !

பற்றிய கைகள், ஆம், சாட்சாத் ராமகிருஷ்ணருடையவை தாம்!

சாரதா தேவி ஆனந்த பரவசத்தில் திக்கு முக்காடினள்.

'இழந்த புதையலைப் பெற்ற ஏழையின் ஆனந்தம்' என்பது போன்ற எந்த உவமையைக் கூறினலும் அது தேவி அடைந்த பேரானந்தத்துக்கு உறை போடக் காணுது. எவரது அஸ்தி அதோ கும்பத்தில் இருக்கிறதோ அவரே அல்லவா இங்கு வந்து இவளது கையைப் பற்றியிருக்கிறர்!

இது சொப்பனமில்லை. தான் உணருவது அவரது சூக்ஷ்ம சரீரத்தையும் அல்ல. ஸ்தூலமான கரங்



களின் அழுத்தம் கைகளில் படிந்திருக்கின்றன !

தேவி கண்களை உயர்த்திப் பார்த்தாள். கரங்கள் மட்டுமல்ல. பூரண உருவத்துடன் நோயில் விழுந்ததற்கு முன்பிருந்த ஆரோக்கிய சரீரத்தில் மலர்ந்து நிற்கிறார்.

அவளது கைகளைப் பற்றிக் கொண்டு, ''சுமங்கலிச் சின்னங்களைக் கையிலேருந்து கழட்டறியே! நான் செத்துப் போயிட்டேனு, என்ன?'' என்கிறார்.

ஸ்படிகம் போன்ற அந்த வார்த்தைகள் பரம ஸ்பஷ்டமாக அவளது காதுகளில் விழுகின்றன.

ஆனந்த அதிசயத்தில் ஆழ்ந்து கண்களை மூடிக் கொள்கிறாள். கையைவிட்டுச் சந்தன ஸ்பரிசம் நீங்குகிறது.

கண்களைத் திறக்கிறாள். அவர் இல்லை. 'நான் இல்லாமல் போய்விட்டேனு' என்று கேட்டவர் இல்லைதான்.

இல்லைதானு ?

பொற்காப்பை அவள் கழற்றவில்லை.

அந்தக் காலத்தில் ஒரு கைம் பெண்—அதுவும் நம் அம்மாவைப் போல் சமூகத்துக்கு அடங்கி, ஒடுங்கி, நடுங்கி வாழ்ந்தவள் — கங்கணத்தைக் கழற்றாமலிருந்தால் அது புரட்சியாகவே தோன்றும். ஆனால் புரட்சி எண்ணமே இன்றி, நம் அம்மா கைம்மைக்குப் பிறகும் கங்கணம் தரித்தே விளங்கினாள். ஏனெனில் ராமகிருஷ்ணர் அவள் முன் தோன்றியதும் பேசியதும் அப்பேர்ப்பட்ட உறுதியான உண்மை !

ஆதியில் அவளது அஞ்சாம் வயசிலே பாணிக்கிரகணம் செய்துவிட்டு அவளைத் துறவியாகவே வைத்திருந்தார். இப்போது அவள் துறவுக் கோலம் பூண இருந்தபோது மீண்டும் பாணிக்கிரகணம் செய்து கொண்டு 'தீர்க்கசுமங்கலி பவ' என்கிறார் ! விசித்திரமானவராகூர்தான்! திருமணத்தின் போதே தமது கங்கணச் சாட்டை எரித்துக் கொண்டார்; தாம் உடலை உகுத்த பின்பும் அவளது கங்கணத்தைக் கழற்றவொட்டாமல் செய்கிறார்! விசித்திரக் கணவனின் மனைவி இப்போது ஒரு விசித்திரம் செய்தாள். நேற்று வரையில் அவரது புஜத்தில் மின்னிய தாயத்தை எடுத்துத் தனது தோளில் கட்டிக் கொண்டாள்.

அகலமான சிவப்புக் கரை போட்ட சேலைகளை உடுத்தி வந்த அம்மாவுக்குப் பலராம் பாபு, கரை போடாத வெள்ளைப் புடவை வாங்கி வந்தார். நீர்த்திரையிட்ட கண்களுடன் அதை கோலாப்—மாவிடம் கொடுத்து விட்டுப் பேசாமல் நின்றார். ''ஹே, ஈசுவரா ! எங்க அம்மாகிட்ட இதை யார் கொண்டு போய்த் தர முடியும்?'' என்று கூவிவிட்டாள் கோலாப்.

பிறகு அவள் அம்மா ஒடுங்கிக் கிடந்த மூலைக்குச் சென்றாள். அம்மாவே தன் புடவையின் அகலமான சிவப்புக் கரையில் ஒரு விரலளவு போக, மீதத்தைக் கிழித்தெறிந்திருந்தாள்.

அற்புதக் கணவர் உயிர் வாழ்ந்த வரையில் தனது அற்புதங்களை ஒளித்தே வாழ்ந்த அம்மா இப்போது அவர் போனவுடன் நிகழ்ந்த அற்புதத்தை வெளியிட்டாக வேண்டி யிருந்தது. இல்லாவிடில் அவள் கங்கணம் அணிவதையும் மெல்லிய சிவப்புக் கரையிட்ட சேலை உடுத்துவதையும் உலகு ஒப்பாதே! இங்கேயும்கூட அம்மாவின் அடக்கத்தைப் பாருங்கள். அகலக் கரைச் சேலைகளைக்கூட அவள் அணிந்திருக்கலாம். ஏற்கெனவே கழற்றிய நகைகளை மீண்டும் அணிந்து, திலகமும் தீற்றிக்கொண்டு, கொண்டையும் முடித்திருக்கலாம்! ஆனல் தொண்ணூறு சதவிகிதம் உலக நீதிக்கு ஒப்பவே நடந்து, பத்து சதம் தான் கணவர் ஆணையை நிறைவேற்றினாள் !

ராமகிருஷ்ணர் அமரத்வம் பெற்றவர் என்பதைக் கண்கூடாகக் கண்ட தேவியே மற்றச் சீடர்களுக்கும் இப்போது பெரிய ஆறுதலாக இருந்தாள்.

'அவர் இருந்தால் மட்டும் போதுமா? கண்ணுக்குத் தெரியவில்லையே! அவர் குரல் காதில் கேட்கவில்லையே! அவருக்குத்தான் எந்தப் பணிவிடையும் செய்ய முடியவில்லையே!' — மீண்டும் தேவியை சர்வ சூனிய உணர்ச்சி பற்றிக் கொண்டது.

வெளியே நடக்கிற பேச்சுக்கள் அவளுக்கு நாராசமாக இருந்தன.

பிரம்மசாரி சீடர்களுக்கும் கிருஹஸ்த சீடர்களுக்கு மிடையே கருத்து வேற்றுமைகள் தலைகாட்டுகின்றன! அந்த நிலைமையில் அம்மாவை இடம் பெயரச் சொல்ல வேண்டாம் என்பதால் காசிப்பூர் வீட்டை இப்போதைக்குக் காலி செய்ய வேண்டாம் என்று நரேன் முதலிய பிரம்மசாரிச் சீடர்கள் சொல்கிறார்கள். ஆனல் குடக்கூலி கொடுக்க அந்த ஆண்டிப் பிள்ளைகளுக்கு ஏது வசதி? காசிப்பூர் வீட்டு வாடகையை ஏற்க கிருஹஸ்த சீடர்களுக்கு மனமில்லை என்பது அவர்களது பேச்சி விருந்து நன்றாகத் தெரிகிறது.

உள்ளே அம்மா கோலாப்பிடம் ''நான் துக்கப்பட்டுட்டேன் என்கிறதால் அந்தக் குழந்தைகளும் எனக்காகத் துக்கப்படணுமா? நான் இந்த வீட்டை

விட்டுப் போறதுக்கு எப்பவும் தயார்னு சொல்லுங்கோ'' என்றாள்.

அவள் எங்கே போவாள்? அவள் வயிற்றில் பிறந்த பிள்ளைகள் எங்கே இருந்தார்கள், அவளை வைத்துப் பராமரிக்க? அவள் வயிற்றிலே பிறவாமலே பிள்ளைகளாகி விட்ட குழந்தைகளோ தங்கள் வயிற்றுப்பாட்டுக்கே வகை தெரியாத ஆண்டிகளாக இருக்கிறார்கள். **அவர்** 'காமார்புகுரில் போய் இரு' என்று அவளுக்குக் கூறியிருந்தார். காமார்புகுரில் மைத்துனரும் போயாயிற்று. மைத்துனர் மக்களுக்கு இவளிடம் பரிவு போதாது. கணவரைப் பறிகொடுத்த கையோடு இவள் அங்கு போயிருப்பது இயலாத காரியம். புண் சிறிதே ஆறிய பிறகே அங்கு செல்லலாம். ஜயராம்பாடியில் தம்பிகள் தலையெடுத்து விட்டார்கள். ஆனாலும் எல்லாரும் வக்கிரமாகவே இருந்தார்கள். அவர்களது பெண்சாதிகளுக்கு வேறு இவள் பதில் சொல்ல வேண்டும். இப்போதைக்கு அந்த அவஸ்தையையும் ஏற்பதற்கில்லை. அநாதையாக நின்றாள் லோக மாதா. ஆனால் அவள் அதைப் பற்றி யோசித்துக் கலங்கவில்லை.

விஷயமறிந்த அத்யந்த சீடர் பலராம் பாபு அம்மாவைத் தம் இல்லத்திலேயே வந்திருக்குமாறு வேண்டினார். அவளது ஒப்புதலைப் பெற்றார்.

பிரமசாரிச் சீடர்களுக்கும பெரியவர்களுக்கு மிடையே இன்னோர் உரசல் ஏற்பட்டது: வீட்டைக் காலி செய்யுமுன், அஸ்தியை காங்குர்காச்சித் தோப்பில் புதைத்து விடலாம் என்று கிருஹஸ்த சீடர்கள் கூறினர். ராம்பாபுவுக்குச் சொந்தமான இந்தத் தோப்புக்கு ராமகிருஷ்ணர் விஜயம் செய்திருக்கிறார். ஆனால் பிரமசாரிச் சீடர்களோ, கங்கைக் கரையில் சொந்தமாக ஓரிடம் வாங்கி அங்கே அஸ்தி கலசத்தை வைத்து நினைவுக் கோயில் எழுப்ப வேண்டும் என்றனர். முன்பே கண்டது போல் இந்த ஆசையை நிறைவேற்றப் பரதேசிக் குழந்தைகளுக்கு ஏது பொருள் வசதி? அபிப்பிராய பேதம் வலுத்தது. அஸ்தியில் ஒரு பகுதியை இந்த இளம் பிள்ளைகள் தங்களுக்கென்று பிரித்துக் கொண்டு வேறொரு பாத்திரத்திலிட்டுப் பலராம் பாபுவின் வீட்டுக்கு அனுப்பினர்.

அம்மா நெடுமூச்சு விட்டுக் கோலாப்பிடம் சொன்னாள்: ''கோலாப்! அல்ப விஷயத்தில் எத்தனை பூசல் செய்யறா பாருங்கோ! எந்தப் பரம புருஷனுக்கு எடைக்கு எடை தங்கம் கொடுத்தாக் கூடப் போறாதோ, அப்படிப்பட்ட பிரபு போயாச்சு: இவா சாம்பலுக்காகச் சண்டை போட்டுண்டிருக்கா!''

> தாயகட்ட விளையாட்டில் ஒரு காய் 'பழக் கோட்டு'க்கு வந்துவிட்டால் அப்புறம் அது மற்றக் காய்களால் வெட்டுப்படாது. பகவானிடம் நீங்காத நினைவு வந்துவிட்டால் உலக மாயங்கள் ஒருவனைத் துன்புறுத்த முடியாது. இந்த நினைவுக்கு - பழக்கோட்டுக்கு - வருமுன் பல கட்டங்களில் சுற்றிவரத்தான் வேண்டும். அப்போதும் ஒரு காய் தனியாக வராமல் இன்னொரு காயுடன் சேர்ந்து இரட்டையாக வந்தால் அது வெட்டுப்படாது. பகவானிடம் செல்வதற்காக நீ சேரவேண்டிய இந்த இன்னொரு காய் குரு என்பவரே.
>
> - பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

மற்றவர் யாவரும் உணர்ச்சி வசப்பட்ட சமயத்தில், அவர்களைவிட ராமகிருஷ்ணருக்கு நெருக்கமான அம்மா எந்தக் கட்சியிலும் சேராமல், இப்படி பூரண விவேகத்துடன் பேசியதில் எத்துணை மாண்பு தெரிகிறது!

'பசங்கள்' அஸ்தியில் பாகப் பிரிவினை செய்து கொண்ட பின் சமரசம் ஏற்பட்டது. ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தியான ஆகஸ்ட் 23ந் தேதியன்று மீதமுள்ள அஸ்தி காங்குர்காச்சியில் அடக்கம் செய்யப்பட்டபோது பசங்களும் அதில் மனப்பூர்வமாகக் கலந்து கொண்டனர்.

இதற்கு இரண்டு நாட்கள் முன்பே சாரதாமணி தாற்காலிகமாகப் பலராம பாபுவின் வீட்டுக்குப் பெயர்ந்தாள்.

ஒவ்வொரு விநாடியும் **அவருக்காக** என்றே வாழ்ந்த தேவியால், இப்போது அவருக்கென ஏதும் செய்யாமல் உயிர் தரிக்க முடியவில்லை. இப்போது 'இருக்கிற' அவருக்கு அவளது பணி ஏதுமே தேவையில்லையே! மற்றவர்களுக்காகவே வாழ்ந்த அவள் இன்று அவர்களுக்குப் பாரமாகி விட்டிருக்கிறாள். 'போதும் போதும் வாழ்ந்தது. போய்விட வேண்டியதுதான். ஆமாம், நிச்சயமாக!' — அம்மா உயிரை விடுவதென்று உறுதியாகச் சங்கற்பித்து விட்டாள்!

உடனே கேட்டது அந்தக் குரல். **அவர்**தான் பேசுகிறார்: ''நீ உயிரை விடறதாவது? கூடவே கூடாது. இருந்துண்டே இரு. செஞ்சாக வேண்டிய காரியம் ரொம்பப் பாக்கி இருக்கு.''

**''பழுது ஒழிந்து எழுந்திருந்தான் பல்லமரர் குழாத்து உளான்..... 'இருந்தைக்க' எனப் போனான்''**

அமரரினிடை இடம் பெற்ற கோவலன் மரணம் என்ற ஊனத்தை ஒழித்து மீண்டும் எழுந்து வந்து, 'நீ இங்கிரு' என்று கண்ணகியிடம் கூறி மறைந்தானாம்! ராமகிருஷ்ணரும் ''நீ இங்கிரு' என்று சொல்லிப் போனார் — இவள்

ஊருக்கெல்லாம் அமுத மழை பொழிய வேண்டுமென்றே!

'அநாதை விதவையான நான் என்ன செய்யப் போறேன், எப்படிச் செய்யப் போறேன்? இப்படி உத்தரவு போடு கிறுரே!' அம்மா குழம்பினுள். ஆனு லும் அந்தப் பதிவிரதையால் பதியின் உத்தரவை மீறமுடியவில்லே. தன் குழந் தைகளின் பொருட்டு உயிர் வாழத்தான் வேண்டும் என்று அவர் சொல்வதை அன்பு அம்மா எப்படி மீறுவாள்! உயிரை விடுகிற உறுதியைக் கைவிட் டாள். வாழ முடியவில்லே; சாகவும் அநுமதி இல்லே. தத்தளித்தாள்.

அம்மா படும்பாட்டைக் கண்ட சிஷ்ய கோடிகள், அவளது மனத்தை மாற்று வதற்காக அவளேப் பிருந்தாவனத்துக்கு அழைத்துச் செல்ல முடிவு செய்தனர்.

ராமகிருஷ்ணர் தேகம் துறந்த பதி ஞருவது நாளன்று சாரதா தேவி பிருந் தாவனத்துக்குப் புறப்பட்டாள். கோலாப் அம்மை, லக்ஷ்மி, ராமகிருஷ் ணரின் மொழியமுதத்தை அப்படியே எழுதி வைத்து உலகுக்கு ஈந்துள்ள மகேந்திரநாத் குப்தா என்பவரின் மனைவி, பிரமசாரிகளான யோகின், காளி, லாடு ஆகியோர் அம்மாவுடன் சென்றனர்.

முதலில் வைத்யநாத தேவக்ருஹத் தில் ('தியோகர்' என்பார்கள்) வழி பாடு செலுத்திவிட்டு வாரணுசியாகிய காசியை அடைந்தனர். அங்கு பத்துத் தினங்கள் தங்கியிருந்து விசுவேசுவரனை யும், அன்னபூரணியையும் வழிபட்டாள் அம்மா. 'அன்னபூரணியான நம் அன்னை இன்று பூரணத்தைப் பறி கொடுத்து விட்டு இங்கு வந்து நின்ருள்.

அன்னபூரணியிடம் அவள் பதியையே பிட்சை கேட்டாளோ? அப்படித்தான் இருக்க வேண்டும். அவள் விசுவ நாதனைத் தரிசித்துத் திரும்புகையில் திம் திம் என்று வேகமாக அடியெடுத்து வைத்து நடந்தது மற்றவர்களுக்கு விந்தையாக இருந்தது. பிறகு, "என் னம்மா, வழக்கத்துக்கு விரோதமா அப்படி நடந்தேள்?" என்று பக்தர்கள் கேட்டபோது, "நான நடந்தேன்? **அவர்**தான் என்னைப் பிடிச்சு இழுத் துண்டு வந்தார்" என்ருள் தேவி.

காசியில் பாஸ்கரானந்தர் என்ற அவ தூத சந்நியாசியைக் கண்டு உருகி நின் ருள் தேவி. "மகாத்மா! சமநிலேயி லேயே இருக்கிற மனசு வாய்ந்தவர். வெயிலோ, குளிரோ இப்படி அவதூத மாவே இருக்கார், ஆஹா" என்று வியந்தாள். சுக துக்கங்களில் தான் அல்லல்படுவதை எண்ணிச் சொன்னுள்!

காசியில் ஒவ்வொரு மண்ணும் ஒரு சிவலிங்கம் என்பதால் அந்தப் புனிதப் பதியைக் கண் கொண்ட மட்டும் காண விரும்பினுள் தேவி. வேணி மாதவர் உப்பரிகை உச்சிக்குச் சென்று கண்ணுக் கெட்டும் வரையில் காசியைத் தரிசித்துக் கொண்டாள்.

ஸ்ரீ ராமச்சந்திரன் அவதரித்த அயோத்திக்கும் சென்று அதன்பின் பிருந்தாவனத்துக்குப் புறப்பட்டனர். ராமகிருஷ்ண சதி, ராமனைக் கண்டபின் கிருஷ்ணனைக் காணக் கிளம்பினுள்.

பிருந்தாவனத்தை நோக்கி ரயில் சென்று கொண்டிருந்தது. சன்னல் ஓரத் தில் அமர்ந்து பதியையே ஸ்மரித்துக் கொண்டிருந்தாள் சாரதை. ஓடுகிற ரயி லின் வெளியே இருந்து சன்னலுக்குள் திருமுகத்தை நீட்டினுர் பதி. "தாயத் தைத் தாரை வார்த்திடப் போறே! அது உங்கிட்டயே இருக்கணும். கவனமா யிரு" என்று சொல்லி மறைந்தார்.

சன்னல்புறமாக இருந்த கரத்தில் தான் தேவி அவரது தாயத்தை அணிந் திருந்தாள். இவள் அயர்ந்து மறந்து உறங்கி விட்டால் வெளியே யிருந்து எவரேனும் அதைப் பறித்துக் கொண்டு போய்விடலாம்! அந்த ரகசிய மூலம் அவளை ரக்ஷித்து வந்த நாயகர் சமயத் தில் வந்து உணர்த்தி விட்டார்!

சாரதை அவசர அவசரமாகத் தனது தகர டப்பாவைத் திறந்தாள். அதிலே அவள் நீண்ட காலமாகத் தெய்வ உரு வங்களோடு வைத்து வழிபட்ட ராம கிருஷ்ணரின் புகைப்படம் இருந்தது. ஒரு சிறு குடுவையில் குரு மகாராஜின் அஸ்தியும் இருந்தது. இவளது உடம் புக்கே அவர் பூஜை புரிந்ததுண்டு. அவரது உடல் நீற்றுப் போன பின் அதன் துகளை வைத்து இவள் பூஜித் தாள். இப்போது தாயத்தைக் கையி லிருந்து அவிழ்த்து அந்தப் படத்தோ டும், அஸ்தியோடும் சேர்த்து வைத் தாள் அம்மா. அன்றிலிருந்து அத் தாயத்து அவள் கையில் ஏருமல், அவள் கை குவிக்கும் வழிபாட்டுச் சின்னமா யிற்று.

பிருந்தாவனத்தில் எல்லோரும் ரயிலி லிருந்து இறங்கினர். ரயில் பெட்டியின் ஒரு மூலேயில் கிடந்த லாடுவின் புகைக் குழாயை எடுத்து வந்த கோலாப் அதை அம்மாவிடம் கொடுத்தாள்.

அம்மா அதை வாங்கிக் கொண்ட வுடன் லக்ஷ்மி, "சித்தி, **இப்பவே** புகைக் குழாயைஎடுத்துண்டுட்டியா?" என்ருள்.

அம்மா நிலேகுத்திட்டு நின்ருள். பழைய நினைவு அலேயோதிக் கொண்டு வந்தது: ஒருநாள் ராமகிருஷ்ணர், தாம் மீண்டும் அவதரிக்கப் போவதாகவும்,

அப்போது தாம் ஒரு பாவுலாக இருக்கப் போவதாகவும் கூறினர். 'பாவுல்' என்பது 'வாதூல' என்பதன் திரிபு. 'வாதூல' என்றால் 'வெறி பிடித்தவர்' என்று பொருள். வங்கச் சீமையில் சடை முடியும், கிழிசல் உடையுமாக, 'ஏக்தரா' எனப்படும் ஒற்றைத் தந்தித் தம்புராவை மீட்டிக் கொண்டு பக்திப் போதையில் பரவசமாக ஆடிப் பாடித் திரிகிற ஒரு சாராரை 'பாவுல்' என்பார்கள்.

பாவுல் அவதாரத்திலும் இப்போது தம்முடன் இருப்பவர்கள் உடன் வருவர் என்றும் ராமகிருஷ்ணர் கூறினர்.

''ஐயோ அம்மாடி! நான் மறுபடி வரமாட்டேன் சித்தப்பா! என்னைப் புகையிலையை வைச்சு நறுக்கற மாதிரி நறுக்கினக்கூட புனர் ஜன்மா எடுக்க மாட்டேன்'' என்றாள் லக்ஷ்மி. வெளிப் பார்வைக்கு உற்சாகமாக இருந்தாலும் சிறு வயதில் பதியை இழந்து உள்ளே அடிபட்டிருந்த பெண் நெஞ்சு அப்படிப் பேசியது.

''வரலேன்னு உன்னை யார் விட்டாடி பெண்ணே! அதுவும் இல்லாம, நானே கீழே மறுபடி வந்தவிட்டு, நீ **அங்கே** எப்படி இருப்பே! அங்கேயும் உனக்குப் பிடிக்காமப் போயிடும். ஜலத்திலே வளருகிற கல்மிக் கொடி பார்த்திருக்கியோ? அது கொத்துக் கொத்தாக வளரும். எங்கேயானும் ஏதாவது ஓர் இழையைப் பிடித்து இழுத்தாலும் அத்தனை கொடியும் சேர்ந்துதான் வரும். அந்த மாதிரி நான் வந்தேன்னு நீங்க இத்தனை பேரும் சேர்ந்து வரத்தான் வரணும்'' என்ற ராமகிருஷ்ணர் சாரதையைப் பார்த்து, ''நான் பாவுலாக் கொட்டம் அடிக்கறச்சே நீயும் மறுபடி வருவே! புகைக் குழாயை நீதான் வச்சிண்டிருப்பே!'' என்றார். பாவுல்கள் ஓயாமல் புகைப்பர்.

லாடுவின் புகைக் குழாயை அம்மா வாங்கிக் கொண்டதும் இதைத்தான் நினைவுகூர்ந்தாள் சாரதை.

அன்று லக்ஷ்மி இருந்த அதே மனோபாவத்தில்தான் இன்று சாரதை இருந்தாள். அவர் எத்தனைதான் தரிசனம் தந்தாலும், அசரீரியாகப் பேசினாலும் பழைய ஆனந்த வாழ்க்கை கொள்ளை போனதாகவே உணர்ந்தாள் தேவி. இந்த ஜன்மாவே போதும் என்றிருந்தது. இன்னும் ஒரு ஜன்மம் வேறா?

சாரதையின் நயனங்கள் நனைந்தன. தழுதழுக்கிற குரலில், ''பிரபோ! என் பிரபோ! புகைக் குழாயை வைச்சுக்கணும் என்கிற உத்தரவையும் இதோ நிறைவேற்றி விட்டேன். இதோடு தீர்ந்து போனதா இருக்கட்டும்'' என்று அரற்றினள். கையிலிருந்த குழாயைத் தடாலென்று கீழே எறிந்தாள் — ஒரு பிறவியையே சுழற்றி எறிகிற தீவிர உணர்வுடன்.

பரமபதநாதன் ஆயப் பிள்ளையாக வந்து சப்த பிரம்மத்தை மூங்கில் குழல் மூலம் வாரிப் பொழிந்து புண்ணியம் கூட்டிய பிருந்தாவனத்துக்கு வந்து சேர்ந்தாள் தேவி.

புரட்டாசித் தொடக்கம். புரட்டிக் கொண்டு ஓடினள் யமுனை நதி. பிருந்தாவனத்திலே மரம் கொடி புதர்கள் எல்லாம் பச்சை மண்டிக் கிடந்தன. காற்றிலே பூக்களின் மணம் கரைந்து கிடந்தது. மயில்களின் 'ஷட்ஜ' ஆலாபனையும், மாடுகளின் கம்பீரமான 'ரிஷப' கோஷமும் எங்கும் நிறைந்திருந்தன.. மானிடர்களின் காலடி கேட்டு மான்கள் பெயர்ந்தோடுவதும் இனிய காட்சியாக இருந்தது. சாரதைக்கு மட்டும் இனிமை தெரியவில்லை. தனிமையே தெரிந்தது. கிருஷ்ணனைக் காண வந்தாள். ஆனால் கண்ணனை வடமதுரைக்கு அனுப்பி விட்டுத் தவித்த கோபியரை மட்டுமே பிருந்தாவனத்தில் பார்ப்பது போலிருந்தது அவளுக்கு. ஈரமான யமுனைக் கரை முழுவதும் ராதையின் கண்ணீரில் நனைந்ததாகவே அவளுக்குத் தோன்றியது. அதை அம்மா அன்பு நினைவால் மேலும் நனைத்தாள். **(தொடரும்)**

# இந்திய உதவி காப்டன் வெங்கட்ராகவன் பிலிப்ஸ் ஸைக்கிள் உதவியினுல் உடல் வளத்தை தெம்புடன் வைத்திருக்கிருர்







இந்தியாவின் சிறந்த விளையாட்டு வீரர் வெங்கட் தினமும் சைக்கிள் சவாரி செய்வதன் அவசியத்தை உணர்ந்திருக்கிருர் — அதுவும் குறிப்பாக விளையாட்டுப் போட்டிகள் இல்லாத காலங்களில் இதன்மூலம் அவரால் எப்பொழுதும் தெம்புடன் செயலாற்ற முடிகிறது. உலகப் புகழ்வாய்ந்த பிலிப்ஸ் ஊக்க மிகு வாலிபர்களுக்கு உகந்தது. கவர்ச்சியானது. அனுயாசமாக சவாரிசெய்ய வல்லது.

அதில்தான் எத்தனை வகை! ஒவ்வொரு இளைஞரின் விருப்பத்துக்கும் ஏற்றவாறு ஒவ்வொருவகை பிலிப்ஸ்!

| |
|---|
| பிலிப்ஸ் ஒலிம்பியா (சுபர்ப் மாடல்) |
| பிலிப்ஸ் நியுயார்க்கர் (ஸ்போர்ட்ஸ் மாடல்) |
| பிலிப்ஸ் லேடீஸ் மாடல் |
| பிலிப்ஸ் கான்கரர் (ஜூனியர் மாடல்) |

ஊக்கமிகு வாலிபர்கள் உவந்து வாங்குவது பிலிப்ஸ்



இந்தியாவில் தயாரிப்போர்:
டிஐ சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா
அம்பத்தூர், சென்னை-53

உரிமையாளர்கள்:
டியூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட் சென்னை-1
பதிவுபெற்று உபயோகிப்போர்.

TIC/PH/6796




## 30. பதி உத்தரவா? பதி விரதமா?

வீரம் வழங்கும் தேவி! உன் பராக்கிரமத்துக்கு உவமை ஏது? உன்னைப்போல் வடிவழகியாக இருந்தும் சத்துருக்களை அஞ்சச் செய்வோர் எங்குண்டு? சித்தத்தில் கிருபையும், போரில் கண்டிப்பும் உன்னிடமே இம்மூவுலகிலும் ஒன்றாகக் காணப்பட்டது!

(துர்கா ஸப்தச தீ - 4.22)

முன்பே பிருந்தாவனத்துக்கு வந்திருந்த, யோகின்—மா அம்மாவை இந்தக் கோலத்தில் கண்டு திடுக்கிட்டு விட்டாள். இருவரும் கட்டிக் கொண்டு பிழியப் பிழிய அழுதனர். டாகூரைப் பற்றியே ஓயாமல் பேசிப் புலம்பினர்.

கருணாமூர்த்தியான பகவான் ஓர் இரவில் அவர்கள் இருவருக்கும் காட்சி தந்தார். "அன்புக் குழந்தைகளே! ஏன் இன்னமும் இப்படி அழுதபடி இருக்கணும்? நான் இதோ இருக்கேனே! நான் வேறே எங்கேதான் போக முடியும்? ஒரு ரூமிலே இருந்து இன்னொரு ரூமு'க்குப் போற மாதிரி..." என்று சொல்லிக்கொண்டே அந்த 'இன்னொரு ரூமு'க்குப் போய் விட்டார்!

ராஸ லீலையின் மத்தியில் மறைந்த மாதவனை ராதை தேடியது போலவே பிருந்தாவனத்தில் அம்மா ராமகிருஷ்ணரைத் தேடிக் கொண்டிருந்தாள். தனது வழக்கத்துக்குப் புறம்பான ஆவேசப் பித்து நிலையிலேயே இருந்தாள் அம்மா. மற்றவர் அறியாமல் தன்னந் தனியாக, யமுனையின் அகன்ற மணற் கரையைத் தாண்டிச் சென்று ஆற்றோரத்தில் கிடக்கலானாள்.

அவளை அழைத்து வரப் போனவர்களுடன் "நான் சாரதையில்லை; ராதையாக்கும்" என்றாள்.

ஒரு நாள் நீண்ட நேரம் சென்ற பின்னும் அம்மாவுக்கு வெளி உலக உணர்வு ஏற்படுகிற வழியாகக் காணோம். யோகின்மா பல திவ்விய நாமங்களை அவள் செவியில் கூவியும் பயனில்லாமல் சளைத்துப் போனாள். பிரம்மசாரி யோகின் இந்தக் காரியத்தைத் தொடர்ந்தார்.

அரும்பு மலருகிற மாதிரி, அம்மாவின் இமைகள் மெல்லத் திறக்கலாயின.

"சாப்பிடணும்" என்று அவளது உதடு முணுமுணுத்தது.

அனைவருக்கும் தூக்கி வாரிப் போட்டது. ராமகிருஷ்ணர் பாவ சமா[தி]யைக் கலைத்து அவ்வுலகிலிருந்து வி[டு]பட்டு இவ்வுலகுடன் தம்மைக் கட்டிப் போட்டுக்கொள்ள எண்ணும்போதெல்லாம் இப்படியேதான் "சாப்பிடணும்" என்பார்! மண்ணில் விளைந்த தானியமோ, பழமோ, வெற்றிலையோ வயிற்றில் போனதும் அவரை மண்ணுலகுடன் கட்டிப் போட்டுவிடும்!

யாரோ உணவு கொண்டு வந்து சாரதை முன் நீட்டினார்கள். இன்னொருவர் வெற்றிலை கொண்டு வந்தார். (வங்கத்தில் விதவைகளும் தாம்பூலம் போடுவது உண்டு.) மற்றொருவர் தீர்த்தம் எடுத்து வந்தார். சிப்பியி லிருந்து சிறிதே வெளிவந்த முத்துப் போல் இமையைச் சிறிதே நீக்கி வெளிப்பட்ட விழியால் இதை எல்லாம் பார்த்த தேவி, ஒரு பீடாவை எடுத்தாள். அதிசயத்திலும் அதிசயமாக ஆசாரசீலையா[ன] தேவி அந்தப் பீடாவின் முனையை ராமகிருஷ்ணர் செய்வது போலவே பல்லால் கடித்தாள்.

சந்தர்ப்பத்தை நழுவ விடக் கூடாதென்று பிரம்மசாரி யோகின் அவளிடம் அப்போது பல வினாக்கள் விடுத்தார். அவள் ராமகிருஷ்ணரைப் போலவே — 'போல' என்ன, சாட்சாத் ராமகிருஷ்ணராகவே — அவற்றுக்கு உத்தரம் தந்தாள். அப்போது அவளது சைகை, பேசும் பாங்கு எல்லாம் குரு மகாராஜையே உரித்து வைத்திருந்தன!

வெளி உணர்வு முற்றிலும் பெற்ற பின் அவள் "டாகூர் என் உள்ளும் புறமும் வியாபிச்சிருந்தார்" என்றாள்.

பிறகு ராமகிருஷ்ணரே அவளுக்குத் தரிசனம் தந்து, "நான் உனக்குள்ளேயே சூக்ஷ்மமா இருப்பேன்" என்றார்.



சிறிது சிறிதாக அந்த சூட்சுமத்தை அவள் கிரகித்துக் கொள்ளலானுள். ராமகிருஷ்ண பாவம் இப்போது அவளுள் பெருகியது. அவர் சில சமயங்களில் உலகத்துக்குப் புரியாத ரீதியில் பேசுவாரே, அதேபோல் இவளும் பேசலானுள். ஒரு நாள் பிரேத ஊர்வலம் ஒன்றைப் பார்த்தாள். 'புண்ணியசாலி. எவனே இங்கே வந்து உயிரை விட்டு (நிரந்தர) பிருந்தாவனத்துக்கே போயிட்டான். நானும் தான் வந்திருக்கேன் — எனக்கு ஒரு சின்ன ஜுரமாவது வந்துதோ? ஊஹூம்? அப்பாடா, எத்தனை வயசாயிடுத்து? அப்பாவைப் பார்த்தாச்சு, ஆத்துக்காரரோட அண்ணாவைப் பார்த்தாச்சு...'' என்று குழறினுள்.

''என்னம்மா சொல்றேள், அப்பாவையும் மச்சினரையும் பார்க்கறதுலே என்ன அதிசயம்? அதுக்கு வயசாவானேன்?'' என்று கேட்டாள் யோகின்.

தேவி மௌனமானுள்.

உண்மையில் அப்போது அவளுக்கு வயோதிகம் வந்துவிடவில்லை. ராமகிருஷ்ணர் தேக வியோகமானபோது தம் மாதாவுக்கு வயது முப்பத்துமூன்றே தான். அதன் பின் முப்பத்து மூன்ருண்டு இந்த மண்ணில் வாழ்ந்தாள்.

தேவியும் உடன் வந்தவர்களும் ஒரு பட்ச காலம் தினந்தோறும் பிருந்தாவன எல்லையைப் பிரதட்சிணம் செய்து வந்தனர். அப்போது வனத்தையும் வயலையும் கரடுகளையும் அம்மா அலாதி உன்னிப்புடன் பார்ப்பாள். பார்த்துக் கொண்டே மலைத்து நின்றும் விடுவாள். இச்சந்தர்ப்பங்களில் நிகழ்காலத்தை

மறந்து அவள் பாகவத காலத்துக்குப் போய்விட்டாள் என்று உடன் வந்தவர் உணர்ந்தனர். ஆயினும் அவர்கள் அவளைக் குடைந்தாலும் அவள் விஷயத்தைச் சொல்ல மாட்டாள். "ஒண்ணுமில்லே... மேலே நடையைக் கட்டலாம்" என்றுதான் சொல்லுவாள்.

பிற்காலத்தில் நம் அம்மா செய்த முக்கியமான ஆத்மிகப் பணி, எண்ணற்ற பக்தர்களுக்கு மந்திரோபதேசம் செய்ததேயாகும். இந்தப் பணியை ராமகிருஷ்ணர் அவள் பிருந்தாவனத்திலிருந்தபோதே தொடங்கி வைத்தார். ஒரு நாள் அவர் அவள் முன் தோன்றி, ஒரு குறிப்பிட்ட மந்திரத்தைச் சொல்லி, "இதை யோகின் பயலுக்கு உபதேசம் பண்ணு" என்றார்.

எளிமையின் உருவான சாரதை இந்த உபதேசப் பணியை ஏற்க அஞ்சினாள். 'நான் ஒரு சாமானிய ஸ்திரீ, மந்திரோபதேசம் செய்வதாவது' என்று நடுங்கினாள். எனவே பதிதேவர் சொல்லியும் அந்த உத்தரவை அவள் நிறைவேற்றவில்லை.

ராமகிருஷ்ணரா அவளை விடுவார்? மறுபடி தோன்றி உத்தரவிட்டார்.

'என்ன இப்படிச் சொல்கிறீரே! எனக்கு குரு ஸ்தானம் வகிக்க அச்சமா இருக்கு! அதுவும் தவிர, ஊரார் சிரிப்பா. 'அவர் போய் ஒரு வருஷம் ஆகலே. அந்த அம்மாள் உபதேசம் கிபதேசம்னு சிஷ்யாள் சேர்த்துக்க ஆரம்பிச்சுட்டா'ன்னு பரிகாசம் பண்ணுவாளே' — அம்மா ஆசாரிய ஸ்தானத்துக்குத் துளிக்கூட ஆசைப்படவில்லை. டாகூரிடம் எத்தனையோ மகா மந்திரங்களை உபதேசம் பெற்று, லக்ஷோப லக்ஷம் ஆவிருத்தி ஜபம் செய்து ஸித்தி பெற்றிருந்தும், பிறருக்கு உபதேசம் தரக் கூசினாள்! அப்படியோர் அடக்கம்!

மூன்றாவது முறையும் வந்தார் பதி. "நீ என்ன, அந்தப் பயலுக்கு உபதேசிக்கப் போறியா இல்லையா?" என்றார்.

உடலை உகுத்த பின்னரும் அவர் தருகிற அற்புத தரிசனத்துக்காக ஏங்கிய அம்மா இப்போது அவரிடம் வாக்கு வாதமே செய்யத் தொடங்கினாள். "என்னன்னா இந்தக் காரியம் எல்லாம் எனக்குத் தரேள்? நரேன், லாடு, பாபுராம் இவாகிட்டப் பழகுகிற மாதிரி இந்தப் பையன்கிட்ட நான் பழகினதில்லே. அவனுக்கு எப்படி மந்திரோபதேசம்பண்ணுவேன்?" என்றாள்.

"யோகேன் குட்டிகிட்டச் சொல். அவ அவனை அழைச்சுண்டு வருவா. உபதேசத்தின்போதும்கூட இருப்பா" என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டு அந்தர்தானமானார் ராமகிருஷ்ணர்.

இனித் தப்ப முடியாது என்ற நிலை ஏற்பட்டது. யோகின்மாவை அழைத்து, 'யோகினுக்கு ஏதாவது மந்திரோபதேசம் ஆகியிருக்கான்னு விசாரியுங்கோ' என்றாள்.

யோகின்-மா யோகினை வினவினாள்.

"இல்லையம்மா. டாகூர் ஏனோ எனக்கு மட்டும் மந்திரோபதேசம் தரவில்லை. நானா ஏதோ ஒரு திவ்விய நாமாவை ஜபிச்சுண்டு இருக்கேன்" என்று கூறிய யோகின் தட்டுத் தடுமாறியபடி, "இங்கே வந்த பிறகு... ஒருநாள் டாகூர்..." என்று திணறினார்.

"சொல்லப்பா, சொல்லு" என்று ஆர்வமாக ஊக்கினாள் யோகின்மா.

"டாகூர் தரிசனம் தந்து, அம்மாகிட்ட... மந்திரோபதேசம் பெற்றுக்கச் சொன்னார். அதுதான் என் இஷ்ட தெய்வம். ஆனா அம்மாகிட்ட சொல்றதுக்கு எனக்கு ரொம்பக் கூச்சமாயிருந்தது. இப்ப அம்மாவே கேக்கறதினாலே சொல்லிட்டேன்" என்றார் யோகின். சாரதையின் குழந்தைகளும் அம்மாவையே உரித்து வைத்திருந்தனர்!

யோகின் குறிப்பிட்டதும், சாரதையிடம் டாகூர் கூறியிருந்ததும் ஒரே மந்திரம்தான். எனவே சந்தேகத்துக்கு இடமின்றி இவள் உபதேச குருவாக வேண்டும் என்று ஆகிவிட்டது.

ஒரு நல்ல நாளில் ராமகிருஷ்ணரின் உருவப்படம், அஸ்தி இவற்றின் முன் அம்மா தியானத்தில் அமர்ந்தாள். எப்போதும் உள்ளே பம்மிக் கொண்டிருந்த ஆத்மிகப் பெருக்கு இன்று வெளிப்படவும் செய்தது. பரவச நிலையில் பூஜை செய்தாள். அதே பாவத்தில் யோகினை அழைத்து வரச் செய்து மந்திரோபதேசம் வழங்கினாள். யோகினுடைய பாக்கியமே பாக்கியம்!

யோகின்-மாவை உடன் வைத்துக் கொள்ளும்படி டாகூர் கூறியிருந்தாலும் அந்த அம்மை மந்திரோபதேசத்தின் போது மிகவும் அண்மையில் இருக்கக் கூடாது என்பதால் பக்கத்து அறையில் இருந்தாள். ஆனால் அம்மா தனது பரவச நிலையில் அந்த மந்திரத்தைப் பெண் சிம்மமெனக் கர்ஜித்துக் கூறியதால், அது யோகின்-மாவின் செவியிலும் பளீரென்று விழுந்ததாம்!

'மந்திரமாவது நீறு' என்றார் பாலறுவாயர். நீற்றுப்போய் அஸ்தியாக அமர்ந்திருந்த ராமகிருஷ்ணர், சாரதையைத் தம் சந்நிதானத்திலே மந்திரோபதேச குருவாக்கி விட்டார்!

> சதைக்குள் எலும்பும், எலும்புக்குள் ரத்த சத்தும் இருப்பதைச் சொல்கிறார்கள். இவை எல்லாவற்றுக்கும் உள்ளே பிரேமை என்பது இருக்கிறது. நம் சரீரத்தை வெறும் ஊனுடலாக வைத்திருக்கும் வரையில் பகவானைப் பார்க்கவோ, அவன் குரலைக் கேட்கவோ முடியாது. இடைவிடாமல் சாதனைகளைச் செய்து நமது அன்பு சரீரத்தை உணரப் பெற வேண்டும். அந்த அன்பு சரீரத்துக்கு இருக்கிற அன்புக் கண்களே ஆண்டவனைக் காண முடியும்; அதன் அன்புச் செவிகளே ஆண்டவன் குரலைக் கேட்க முடியும்.
>
> — பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

ராமகிருஷ்ணர் ஜீவியவந்தராயிருந்தபோதே அவர் சாரதாப் பிரசன்னனிடம் ''அம்மா உனக்கு உபதேசிப்பாள், அவளிடம் போ'' என்று சொன்னது நினைவிருக்கலாம். ஆனால் அம்மா பிரஸன்னாவுக்கு மந்திரம் வழங்கினாளா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. மந்திரோபதேச குருவாக அம்மாவுக்கு துவஜாரோகணம் ஆனது பிருந்தாவனத்துப் புண்ணிய மண்ணில் தான் எனலாம்!

அம்மா ஆசாரிய ஸ்தானம் வகிப்பதன் அழகே அழகு. ஆதிபராசக்தி ஆசாரிய வடிவில் வந்தே தன் எழுச்சியின் செழிப்பைக் காட்டுகிறாள் என்கிறான் காளிதாஸன்:

" தேசிக ரூபேண தர்சித அப்யுதயாம்"

சாரதைக்கு நிறையக் காரியம் இருக்கிறது என்று சொல்லித்தானே டாகூர் அவளை விட்டுச் சென்றார்? அந்தக் காரியங்கள் மெல்ல அங்குரார்ப்பணமாகத் தொடங்கின. அவளும் அவர் தன்னுள் கனிந்துவிட்டதை உணர்ந்து, மெல்ல மனம் தெளிந்தாள். தன் குழந்தைகளுக்காக அமைதியுடன் வாழ்க்கைப் பயணத்தைத் தொடர்ந்தாள்.

**அ**ம்மாவின் உள்ளப் புண் ஆறத் தொடங்கியது. பிருந்தாவனத்தில் விரக ராதையாக இருந்தவள், இப்போது கண்ணனின் கருணையில் அடிக்கடி முங்கி அமைதி கொண்டாள். இவளுடைய கண்ணனின் உத்தரவுப்படி காமார்புகுருக்குச் சென்று காலம் கழிக்க எண்ணம் கொண்டாள்.

தமது மறைவுக்குப் பின் அவள் காமார்புகுருக்குப் போய் வசிக்க வேண்டும் என்று அவர் ராமலாலை வைத்துக் கொண்டு கூறியது நினைவிருக்கலாம். இதே விஷயமாக இன்னொரு முறை அவளிடம், குழந்தைக்கு எடுத்துச் சொல்வதுபோல், விளக்கிப் பேசினார்: ''என் காலத்துக்கு அப்புறம் நீ போய்க் காமார்புகுரிலே ஜீவனம் நடத்திண்டு இரு. உன் ஒருத்திக்குத் தேவையான நாலு மணி நெல் கிடைச்சுடும். தோட்டத்திலே ஏதாவது இரண்டு தினுசு கீரை விதைச்சுக்கோ. அதை வேக வைச்சுச் சாப்பிடு. 'ஹரி ஹரி'ன்னு சொல்லிண்டு காலத்தைக் கடத்து. வேறே என்ன காரியம் உனக்கு இருக்கு? யார்கிட்டேயும் சல்லிக் காசுக்குக் கூடக் கைநீட்டி விடாதே. மானத்தைக் காப்பாத்திக்க ஒரு முரட்டுத் துணியும், உன் ஒரு வயிற்றுக்கான சோறும் என்னிக்கும் கிடைக்கும். இதைக் காட்டிலும் அதிக வசதி வேணும்னு யார்கிட்டேயாவது கைநீட்டினையோ, அப்புறம் அவாளுக்கு உன் தலையையே விலை கொடுத்துட்ட மாதிரி ஆயிடும். உறவுக்காரா, அவா, இவான்னு யார் ஆத்திலேயும் போய் இருந்துடாதே. அதைவிடப் பிச்சை எடுத்துச் சாப்பிடறது கௌரவம். நம்ம பக்தாள் யாராவது பூரண அன்பும் மரியாதையும் காட்டி, உன்னைத் தங்கள் கிருகத்திலே வைச்சு உபசரிக்கிறதாச் சொன்னாக்கூட, மசிஞ்சுடாதே.''

அவளுக்கெனப் பெரிய அவதாரப் பணி காத்துக் கிடக்கிறதென்று சொன்ன ராமகிருஷ்ணரே அவளைக் காமார்புகுர் கிராமத்திலே ஹரி ஸ்மரணம் தவிர வேறு காரியமின்றி அடங்கிக் கிடக்கச் சொன்னது முரணாகத் தோன்றலாம். ஆனால் இதில் முரண் ஏதும் இல்லை. அவள் குறிப்பாக அடக்கத்துக்குத்தான் உதாரணம் காட்ட அவதரித்தாள். அடக்கத்தை அடக்கமாகத்தானே வாழ முடியும்? சூரிய பகவான் இருள் தேவியைத் தேடித்தேடிப் போனானாம். ஆனால் அவன் எங்கு போனாலும் அங்கு ஒளி வந்துவிட்டதால் இருளன்னையை அவனால் காணவே முடியவில்லையாம். 'அடக்கத்தை வெளிக் காட்டுவது' என்பது இருளை ஒளி பார்க்கப் போவது போல் தான்! பூரணமாக அடைந்து கிடக்கும் கைம்மை வாழ்வை அவளுக்கு அவர் விதித்தாலும் அவருக்கே தெரியும், அத்துணை கடுமையாக அவள் அதைப் பின்பற்றினால் உலகுக்கு அவளது உதாரணம் எட்டவே எட்டாது என்று. ஆயினும் அவளது அவதாரப் பணியை அவர் அடிக்கடி வற்புறுத்தியதால் எங்கே அவள் அவசரப்பட்டுக் கொண்டு தனது முதுமைக்கு முன்பே வெளிச்சத்துக்கு வந்துவிடுவாளோ என்று கருதியே அவளுக்கு மிகக் கடுமையான யோசனை கூறினார். ஆதியில் அவளது 'அம்மா ஆசை'யைக் கட்டுப்படுத்திவிட்டு, உரிய காலத்தில் அது வெளிப்பட அநுமதித்தார் அல்லவா? அதே போல் இப்போது தமது நிர்யாணத்தை அடுத்து

அவளுக்கு மிகுந்த கட்டுப்பாட்டை விதித்தாலே, பிற்பாடு உரிய காலத்தில் அவளே தன் பணியைப் பெண்மைக்குப் பங்கமின்றி ஆற்ற முடியும் எனக் கருதினர். தம்மிடம் உபதேசம் பெறுமல் ஏங்கிக் கொண்டிருந்த யோகினின் தாபம் தீர்க்க அவளை மந்திர குருவாக ஆக்கிப் பார்த்தாரெனினும், அவள் இன்னமும் அடங்கிக் கிடக்க வேண்டியவளே என்று கருதினர் போலும். இதை அம்மா உணர்ந்தாள். நாற்றுப் படுகையிலிருந்து இன்னும் வயலுக்கு வருகிற வளமை தனக்கு வரவில்லை என்று கண்டு கொண்டாள். வேறு சில க்ஷேத்திரங்களையும் தரிசித்துவிட்டுக் காமார்புகுர் திரும்ப முடிவு செய்தாள் தேவி.

ஸ்ரீ ராதாகிருஷ்ணனின்முன் வணங்கி எழுந்தாள். "அப்பனே, உனக்கு பங்கே விஹாரின்னு பேர். ரூபத்தை மூணு வளைவா வளைச்சுண்டு நிற்கிறதாலே உனக்கு இப்படிப் பேர். ஆனல் ரூபத்திலேதான் கோணல். உன் மனசு ரொம்ப நேர்மையானது. என் மனக் கோணலை எல்லாம் மாற்றடா அப்பனே. பிறத்தியார் கோணலும் என் கண்ணுக்குத் தெரியாதபடி அருள் பண்ணு ஐயா" என்று வேண்டினள்.

காமார்புகுரில் இந்தப் 'பிறத்தியார் கோணல்' தொடங்கப் போவதை முன் கூட்டியே அறிந்தாளோ?

பிருந்தாவனத்திலிருந்து ஹரித்வாரம் சென்றாள். பிரம்ம குண்டத்தில் ராமகிருஷ்ணரின் கேசம், நகங்கள் ஆகியவற்றை விசர்ஜனம் செய்தாள். கங்கையைக் கடந்து சென்று கில்வாதக் காலோடு மலை ஏறி சண்டிதேவியைத் தரிசித்து வந்தாள். திரும்பும் வழியில் அலகாபாத் எனப்படும் திரிவேணியில், கங்கையும் யமுனையும் சரஸ்வதியும் கலக்கும் புனிதப் பெருக்கில் ராமகிருஷ்ணரின் கேசத்தையும் சமர்ப்பித்தாள். "டாகூரின் கேசம் சாமானியப்பட்டதா என்ன? ஓட்டம் தெளிஞ்சிருந்த சங்கமத்திலே, கேசத்தைப் போடறதுக்காக நான் கையிலே எடுத்தேனே இல்லையோ திடீர்னு ஓர் அலை குதிச்சு எழுந்து என் கையிலே இருந்த கேசத்தை எடுத்துண்டுது. உடனே இருந்த சுவடு தெரியாமல், அது அமுங்கியும் போச்சு. புண்ணிய தீர்த்தம் தன்னை இன்னும் புண்ணியமாக்கிக்கணும்னுதான் அப்படிப் பண்ணித்து" என்பாள்.

கைம்பெண்ணாகிய லக்ஷ்மி திரிவேணியில் சம்பிரதாயப்படி தன் சிகையை மழித்துக் கொண்டாள். அம்மாவின் எதிரே பகவானின் சிரித்த உருவம் தெரிந்தது. தன் கங்கணத்தைப் பார்த்துக் கொண்டாள். அவள் சிகை களையவில்லை. உள்ளத்திலே ஏதோ ஓர் உவகை ஊற்றிட்டது. கல்கத்தாவுக்கு மகிழ்ச்சியுடனே திரும்பினாள்.

## இன்னம்பர் பணி இனிதே நடக்கட்டும்

கும்பகோணத்திலிருந்து திருவையாறு போகிற சாலையிலுள்ள மகாக்ஷேத்திரம் இன்னம்பர். (இன்னம்பூர் என்று தற்போது கூறப்படுகிறது) ஞானசம்பந்தர், அப்பர் பெருமான் இருவராலும் தேவாரம் சூட்டப் பெற்றவர் இன்னம்பரீசன். இனன் என்கிற சூரியபகவான் நம்பி வழிபட்ட இடம் இன்னம்பர். இங்குள்ள ஈசன்தான் அகத்தியருக்குத் தமிழ் இலக்கணம் உபதேசித்தாராம். எனவே, 'எழுத்தறி நாதர்' (அட்சர புரீசர்) எனப்படுகிறார். ஆதியில் ஆலயத்தைப் பராமரித்து வந்த சுதன்மாலுக்காக இவரே மன்னரிடம் கணக்குக் காட்டியதால், "எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே" என்று அப்பர் பெருமானால் போற்றப்படுகிறார். பண்டைப் புகழ் கொண்ட இவ்வாலயத்துக்குத் திருப்பணி செய்யப்படுகிறது. ஒரு லட்சம் ரூபாய் தேவைப்படுகிறது. "எழுதும் கீழ்க் கணக்கு இன்னம்பர் ஈசன்" இப்பணிக்குப் பணம் கொடுப்பவர்களின் பெயர்களைத் தங்கப் பேரேட்டில் பதிவு செய்துகொள்ளக் கூடும்! பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: நிர்வாக அதிகாரி, பொருளாளர், ஸ்ரீ அட்சரபுரீசுவரர் கோவில், இன்னம்பூர், கும்பகோணம் தாலுகா.



ஒரு வாரம் பலராம் பாபுவின் வீட்டி லிருந்த பின் காமார்புகுருக்குப் புறப் பட்டாள்.

நம் அம்மாவின் துயரம் செறிந்த கதையில் இன்னொரு துயரமான கட் டம் தொடங்கிற்று!

காமார்புகுரில் ஒன்றாக அமைந்த மூன்று குடிசைகள்தான் இவர்களது பிது ரார்ஜித சொத்து. அங்கு மைத்துனர் மக்களான ராம்லால், லக்ஷ்மி, சிவராம் சிறிது காலமே இருந்தனர். பிறகு அவர்கள் தக்ஷிணேசுவரத்துக்கே திரும்பி விட்டனர். லக்ஷ்மியும் அம்மாவைப் போல் காமார்புகுரில்தான் இருக்க வேண்டும் என்று ராமகிருஷ்ணர் கூறி யிருந்தார். அவளை அம்மா கவனித்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லி யிருந்தார். ஆனால் லக்ஷ்மி நற்குணம் நிறைந்தவள் எனினும், அம்மாவிடம் பற்றுதல் கொண்டவள் எனினும், தன் னிச்சையாகவே இருப்பாள். அவளை அம்மாவால் கட்டுப்படுத்த முடியவில்லை. அவளிடம் ஆண்மைக் குணம் அதிகம். வைஷ்ணவ சம்பிரதாயக் கீர்த்தனங் களைப் பாடம் பண்ணிய லக்ஷ்மி காமார் புகுரில் அம்மாவுடன் இருந்தபோது பாகவதர்கள் போல் அவற்றைப் பெரி தாக விந்நியாசப்படுத்திப் பாடுவாள். இது சாரதைக்கு ஏற்கவில்லை. ஆனால் சுயேச்சைப்படி இருக்கும் இப் பெண்ணை அவள் கண்டிக்கவும் முயலவில்லை. ராமலாலைப் பற்றிக் கேட்க வேண் டாம். ஏனோ அவருக்குச் சித்தியிடம் என்றுமே அநுதாபம் இருந்ததில்லை. சிறியவன் சிவராம்தான் அவளிடம் ஒட் டிக்கொண்டிருப்பான். ''சித்தி, நீதான் எனக்கு உபநயனத்தின்போது முதல்லே பிட்சை போட்டே! அதனாலே நீ எனக்கு அம்மா மாதிரி'' என்பான், அவ ளுடைய அருமை 'ஷிபு'. ஆனால் அந்தப் பிள்ளையின் வாஞ்சை மட்டும் அந்த வீட்டில் அவளது அமைதியான வாழ்க் கைக்குப் போதவில்லை. ஈசுவர ஸ்மர ணத்தோடு எஞ்சிய காலத்தைக் கடத்த வேண்டும் என்று நினைத்த சாரதையை லக்ஷ்மியும், ராமலாலும் வேண்டாத அக்கப்போரிலெல்லாம் ஈடுபடுத்தப் பார்த்தனர். அம்மா ஒரு கடுஞ்சொல் கூறவில்லை. தன் மனநிலையை எவ்விதத் திலும் வெளியிடவில்லை. கர்மமே என்று காலத்தை ஓட்டினாள்.

ஜயராம்பாடியில் ஜகத்தாத்ரி வழி பாடு நடந்தது. சியாமசுந்தரி பிரதி வருடமும் செய்து வந்த விழா அல் லவா அது? பாலிய விதவையாக வைப வத்துக்கு வந்த பெண்ணைப் பார்த்துக் கதறித் தீர்த்தாள் சியாமை. ''சாரு, இனிமே இங்கேயே இருடியம்மா. உன் குழந்தைகளா உன்னைப் பார்த்துக்கப் போறு? மச்சினன் பசங்கள் கிட்ட மொத்துப்படாமெ இங்கேயே கிட'' என்று வயிறெரிந்து சொன்னாள்.

''அவர் அப்படித்தான் சொல்லியிருக் கிறார். அவர் விட்ட வழியாகட்டும்'' என்று நிர்த்தாட்சிண்யமாகச் சொல்லி விட்டு தேவி காமார்புகுருக்குத் திரும் பினால்....

இங்கே மைத்துனர் மக்கள் எவரை யுமே காணவில்லை. அவர்கள் தக்ஷி ணேசுவரத்துக்குப் போய்விட்டார்கள். போகிற போக்கில் பாகப் பிரிவினை வேறு செய்து விட்டார் புண்ணியவான் ராமலால். தயாள மனத்துடன் மூன்று குடிசைகளில் சிறியதான குடிசையை நம் அம்மாவுக்குப் பாகம் பண்ணி யிருந்தார்.

தன்னந் தனியளாக சாரதை பட்ட அவஸ்தை சொல்லத் தரமன்று. அந்த ஊரிலே காலிகளின் நடமாட்டம் அதிக மாயிருந்தது. பயந்து நடுங்கினாள் தேவி. ஊருக்கே பெரிய மனுஷியும், பண்புச் செல்வியுமான பிரசன்னமயீயின் வேலைக் காரியை இரவுகளில் துணை வைத்துக் கொண்டு அடைத்துக் கிடந்தாள்.

கிராமப் பெண்டிர் சாரதையின் பெருமையைச் சிறிதும் புரிந்து கொள்ள வில்லை. ''அமங்கலி வளை போட்டுண் டிருக்காளே, ஊருக்கே அடுக்குமோ?'' என்று அவள் காதுபட விமரிசித்தனர். ''புடவையிலேயும் மெல்லிசாக் கரை இருக்காக்கும். தலையையும் பண்ணிக் கல்லை! இவ என்ன கொம்பு?'' என்று தூஷித்தனர்.

தேவி அவர்களிடம் தன் நித்திய கல் யாண மகிமையைச் சொல்லிப் புரிய வைக்க முடியுமா? காது கொப்புளிக்க அந்தக் கொடு மொழிகளைக் கேட்டுக் கொண்டாள் — பங்கேவிஹாரியை தியா னித்தவாறு.

பிரஸன்னமயீதான் ஊராருக்கு எடுத் துச் சொன்னாள். ''நம்ம ஊர் கதாயீ யும் அவனோட அகமுடையாளும்தானே என்று நினைக்காதீர்கள். அவர்கள் தெய் வப்பிறவிகள்'' என்று அடித்துச் சொன் னாள். அதை அவர்கள் நம்பினார்களோ இல்லையோ அந்த அம்மை இப்படிச் சொன்ன பின் அவதூறு பேசுவதைச் சிறிது குறைத்துக் கொண்டனர்.

வார்த்தை கேட்டது ஒருபுறம். வயிறு வாடிற்று ஒருபுறம். ஆம், அன்ன பூர்ணேசுவரியான நம் அம்மா தன் ஒரு வயிற்றுக்கு அன்னம் கிடைக்காமல் வறுமையில் வாடவும் நேர்ந்தது. எண்ணவே நம் மனம் வாடுகிறது.

(தொடரும்)

# எழில் வருகிறது எகானமி வடிவுடன்





பிளாக்ரோஸ்—முழு
மலர்ச்சியுற்ற
பாரசீக ரோஜா
மலர்களின் மணம்
கமழ்வது.

பிக்வண்ட்—புது
வசந்தத்தில் பூத்த
மலர்களின் மென்
மணம் கொஞ்சுவது.

இரண்டுமே எழில் கொழிப்பவை. தனி சிறப்புடன் திகழ்பவை.

**ஜோயா** பிளாக்ரோஸ், பிக்வண்ட் இரண்டும்
உங்களுக்கு அதிகம் அளிக்க வடிவளவில் கூடியுள்ளன

AGC-12TAM

# அம்மா



ரா. கணபதி



துறவி ராமகிருஷ்ணர் கைப்பிடித்தவளுக்கான தர்மத்தை மறக்கவில்லைதான். ஆறு மாதங்களுக்கொரு முறை அவளுக்கு முப்பது ரூபாய் கிடைக்க ஏற்பாடு செய்திருந்தது நினைவிருக்கலாம். ஆனால் நம் அம்மாவுக்கு அரை வருட காலம் பணத்தைக் காத்து வைக்கத் தெரியுமோ? ராமகிருஷ்ணருக்கு அளித்து வந்த ஏழு ரூபாய் மாதாந்தர சம்மானத்தை அம்மாவுக்குத் தொடர்ந்து அளிக்க வேண்டும் என்று பவதாரிணி ஆலய நிர்வாகி திரைலோக்யநாத் விசுவாஸ் பெருமனத்துடன் முடிவு செய்தபோது, நமது புண்ணியபுருஷர் ராம்லால், ''விசுவாஸ்ஜி, அதெல்லாம் என்னத்துக்கு? சித்தப்பாவுக்குப் பணக்காராளா ஏகப்பட்ட சிஷ்யா இருந்தா. அவா சித்திக்குக் கனகாபிஷேமாக்கும் பண்ணுவா'' என்று கூறி அந்த மானியத்தை நிறுத்தினார். இங்கே சாரதை தன் ஒரு குட்சிக்கு வேண்டிய உணவும் போதுமான அளவுக்கு இன்றித் தவித்தாள். நாலு அரிசியைக் களைந்து வைத்துக் கொண்டாள். தோட்டத்துக் கீரையை வெறுமே வேக வைத்துக் கொண்டாள். அதை மசித்துத் தாளிதம் செய்ய எண்ணெய், கடுகு, பருப்பு ஏது? அதெல்லாம் போகட்டும். கையில் காசு இல்லாததால் நம் அம்மா உப்புகூட இல்லாமல் உண்ண வேண்டியதாயிற்று — படி உப்பு காலணாவுக்கு விற்ற காலத்தில். ஆனால் இதை அவள் தானாக வெளியிட்டதே இல்லை. கணவர் விதி செய்தபடி ஒருவரிடம் கால் காசுக்குக் கைநீட்டவில்லை. தாய் வீடு செல்லவும் இல்லை.

இவற்றை அவள் பொருட்படுத்தவுமில்லை. அவள் பொருட்படுத்தியது ஒன்றைத்தான். தக்ஷிணேசுவரத்திலே வசித்த பதின்மூன்று ஆண்டுகள் கங்கையிலேயே ஸ்நானம் செய்த அவளுக்கு கங்காதேவியைப் பிரிந்திருப்பதே பெரிய துயரமாக இருந்தது. வெண்ணீர்ப் பெருக்கை எண்ணிக் கண்ணீர் உகுத்தாள்.

அரச மரத்தினடியில ஒரு வெண்மை பளிச்சிட்டது. தேவி அங்கே நோக்கினாள். அவளுடைய ஸ்வாமி அங்கு வந்து நின்றார். பக்கத்தில் நரேன், ராகால், பாபுராம் ஆகியோரும் நின்றனர். ராமகிருஷ்ணரின் பாதத்திலிருந்து கங்கை பிரவாகமிட்டு வந்தது!

''ஆஹா, ஸ்ரீமந் நாராயணனின் பாதத்தில் கங்கை பிறந்தாள் என்பார்களே, இவர்தானே எல்லாமும்!'' என்று எண்ணுகிறாள் அம்மா. ரகுவீரனின் பூஜா கிருகத்தருகேயிருந்து செம்பருத்தி மலர்களைப் பறித்துக் கொண்டு பதியிடம் ஓடுகிறாள். இன்னமும் அவர் அங்கேயே இருக்கிறார். கங்கையும் இங்கே காமார்புகுரில் அவர் காலடியிலிருந்து பொசிகிறது. செம்மலர்களைக் கங்கைக்கு அர்ச்சிக்கிறாள் தேவி.

டாகூர் பேசுகிறார்: ''அம்மா, ஊரார் பேசறாளேன்னு கங்கணத்தைக் கழற்றிவிடாதே. உனக்கு வைஷ்ணவ தந்திரம் தெரியாதோ?''

''தெரியல்லியே.''

''இன்னிக்குச் சாயங்காலம் கௌரிதாசி வருவா. அவ சொல்லுவா.''

ராமகிருஷ்ணர் நரேனின் உடலுக்குள் புகுந்து மறைகிறார்! அவர்களும் மறைகிறார்கள். கங்கையும் மறைந்தது— ஈரச் சுவடே இன்றி.

அன்று பிற்பகல் கௌரியம்மை மெய்யாலுமே வந்து சேர்ந்தாள்.

''அம்மா, உங்க கையிலேருந்து கங்கணம் இறங்கவே கூடாது. வைஷ்ணவ தந்திரங்களிலே பகவான் எடுக்கிற ஸ்தூல சரீரத்துக்கு முக்கியத்துவமே கொடுக்கவில்லை. அமரமான ஆத்மாவே பகவானுடைய சரீரம். நம்ம டாகூர் ஸ்ரீமந் நாராயணன் இல்லையா? நீங்க மகாலக்ஷ்மி இல்லையா? உங்களுக்கு ஏது வைதவ்யம்? சம்பத்துக்கெல்லாம் அதிதேவதையான உங்க கையிலேருந்து கங்கணம் கழண்டால், உலகத்துக்கே உத்பாதமாயிடும்'' என்றெல்லாம் உத்வேகத்துடன் கூறினாள் கௌரியம்மை.

அகிலாண்டேசுவரியின் தாடங்கம் அவளது திருச் செவியிலிருந்து இறங்கினால் உலகுக்கே உற்பாதம் உற்பவிக்கும் என்பதால்தான், நஞ்சுண்ட சிவபிரானும் உயிர் தப்பினான் என்று ஆதி சங்கரர் போற்றினார் அன்றோ?

சம்பத்துக்கெல்லாம் அதி தேவதையான சாரதா தேவி எத்தகைய வறுமையில் வதங்குகிறாள் என்பதைப் பிரத்தியட்சமாகப் பார்த்து விட்டாள்

கௌரி. அதுவரை சிஷ்ய கோடிகள் அந்த ஒரு ஜீவன் சொந்தக் கிராமத்தில் வாழ்வதற்கு அசௌகரியம் இராது என்றே எண்ணினர். கௌரி திரும்பிய பின்தான் ஏனையோருக்கு உண்மை நிலை தெரிந்தது.

அந்த நாளில் கல்கத்தாவி லிருந்து காமார்புகுருக்கு வருவது அவ்வளவு சௌகரியமல்ல. மேலும் அம்மாவின் மகிமை இன்னமும்கூட ராமகிருஷ்ணரின் அத்யந்த பக்தர்களுக்கும் அதிகம் தெரியவில்லை. அவளது செல்லப் 'பசங்கள்' இப்போது வீடு வாசலையெல்லாம் விட்டு, வீட்டாரின் எதிர்ப்பையும் வாங்கிக் கட்டிக்கொண்டு, வரநகரத்தில் ஒரு பேய் உலாவும் — அல்லது பேய் உலாவுவதாக வதந்தி உலாவும் — பாழ் வீட்டில், 'ராமகிருஷ்ண மடம்' அமைத்துக் கொண்டிருந்தனர். இப்போது அவர்கள் பிரமச்சரியத்திலிருந்து ஒரு படி மேலே போய்விட்டனர். இன்று அவர்கள் சந்நியாசிகள். ராகால் பிரம்மாநந்தராகி விட்டார்; பாபுராம் பிரேமாநந்தராகி விட்டார்; காளி அபேதாநந்தராகிவிட்டார்; சரத் சாரதாநந்தராகவும், யோகின் யோகாநந்தராகவும், நிரஞ்ஜன் நிரஞ்ஜனாநந்தராகவும், சாரதாபிரஸன்னன் திரிகுணாதீதராகவும், தாரக் சிவாநந்தராகவும், சசி ராமகிருஷ்ணாநந்தராகவும் பரிணமித்து விட்டனர். அநாமதேயமாகச் சஞ்சாரம் செய்ய விரும்பின நரேன், அப்போது சந்நியாச நாமம் சூட்டிக் கொள்ளவில்லை. டாகூர் உயிர் வாழ்ந்தபோது சுரேந்திரநாத் மித்ரா அவருக்கு அளித்து வந்த சிறு காணிக்கையை இப்போது நம் இளம் சாதுக்களுக்கு அளித்து வந்தார். லௌகிகமாகச் சகல சௌகரியங்களுடனும் வாழ வசதி படைத்த அந்த யௌவனத் துறவிகள் பசியிலும் பட்டினியிலும், மாற்று ஆடையுமின்றி, குரு



நாதரைத் தியானித்துக் கொண்டு பர மானந்தமாக வாழ்ந்து வந்தனர்.

இந்த பாவன புருஷர்களிடம் அடிக்கடி வந்தார் ஹரீஷ் என்ற இளைஞர். அவரும் எங்கே துறவு மேற்கொள்ளுவாரோ என்று அஞ்சிய அவரது மனைவி, அவருக்கு 'மருந்து' வைத்தாள். அந்தக் காலத்தில் இதுபோன்ற அபாயகரமான அசட்டுத்தனம் நிறைய நடப்பதுண்டு.

ஹரீஷுக்கு மூளை கலங்கியது. தன்க்கு மூளை கலங்குகிறது என்பதைப் புரிந்து கொண்டு; அம்மாவிடம் சரண் புகுந்தாலே உய்வு உண்டு என்று அந்த மூளைக்கு எப்படியோ எட்டியது! காமார்புகுருக்கு ஓடிவந்தார் ஹரீஷ்.

ஆனல் அம்மாவை சகல விதத்திலும் வதைத்தெடுக்க நினைத்த விதி — அல்லது அம்பாளின் சங்கற்பம்—ஹரீஷின் மூளைக் கோளாற்றை முற்றச் செய்தது. காமார்புகுரில் தான் இருந்த அவல நிலை போதாதென்று, சம்பந்தமற்ற ஒரு பைத்தியத்தை வைத்துச் சமாளிக்கிற துன்பமும் அம்மாவுக்கு வந்துற்றது. இதனினும் பீதிகரமான சோதனையும் உண்டாயிற்று!

ஒரு நாள் அம்மா ஏதோ அத்தியாவசிய காரியமாக அண்டை வீடொன்றுக்குச் சென்று திரும்பினள். வாசலில் நின்று கொண்டிருந்த ஹரீஷின் பார்வையே நன்ருக இல்லை. அம்மாவுக்கு வெட வெடத்தது. உள்ளுக்குள் விரைந்தாள். அவள் வராந்தாவைத் தாண்டும்போது ஹரீஷ் வேகமாக அவளைத் துரத்தி வந்தார். சப்த நாடியும் ஒடுங்கியது சாரதைக்கு. ஆனல் ஒடுங்கி நிற்க இது சமயமில்லை என்று தன் முழு சங்கற்ப பலத்தையும் திரட்டிக் கொண்டாள். வெறியன் ஹரீஷை எதிர்த்துக் கொண்டு அவள் தெருப்பக்கம் ஓடுவதற்கில்லையாகையால் உட்புறமே ஓடினள், வேங்கையைக் கண்ட மான்போல்.

ஹரீஷோ பித்தம் தலைக்கேறி அவளைத் துரத்தி வருகிருர். சரணடையவந்த தேவியிடம் இப்படி முறை தப்பி நடக்கிருர்! நெற்குதிரைச் சுற்றிச் சுற்றி ஓடினள் தேவி. ஏழெட்டு முறை சுற்றினள். இறைத்தது, நாக்கு உலர்ந்தது, கால்கள் இற்றன. மேலே நடந்ததை அம்மாவின் வார்த்தையிலேயே கேட்போம்.

''இனி ஓட முடியாது என்கிற நிலை வந்தது. அவ்வளவுதான். நின்ன இடத்திலேயே நின்னேன். என்னை உறுதிப்படுத்திண்டேன். **என்னுடைய பூரண ரூபத்துக்கு என்னை நானே கிளப்பிண்டேன்.** சட்டுனு அவனைக் கீழே தள்ளினேன். என் முழங்காலாலேயே அவன் மார்பை மிதிச்சுண்டு, அவனேட நாக்கைப் பிடிச்சு இழுத்தேன். அவன் கன்னத்திலேயே மாறி மாறி அறைஞ்சேன். அவனுக்கு மூச்சு முட்டித்து; எனக்கும் விரல் செவந்து கன்னிப் போச்சு. விட்டுட்டேன்.''

அடக்கப் பெட்டகமான அம்மா கற்பைக் காத்துக் கொள்வதற்காகப் பெற்ற எழுச்சி எத்தனை அற்புதமானது! தனது பூரண ரூபத்தைக் கிளப்பிக் கொண்டதாக அம்மா சொன்னதற்கு, அவள் சக்தி அவதாரமாகத் தன்னை உணர்ந்து அசுர சம்ஹாரிணியாகத் தன்னை எழுப்பிக் கொண்டதாகவே மெய்யடியார் பொருள் கொள்வர். குறிப்பாக, தச மஹா வித்தைகளில் ஒரு மூர்த்தியும், கூர்மாவதாரத்துக்கு சக்தி அளித்தவளுமான பகளா என்ற தேவியாக அப்பொழுது சாரதை உற்பவித்தாள் என்பர். ஏனெனில் பகளா அசுரரை வதைத்தபோது இவ்விதமே முழங்காலால் எதிரியின் மார்பை நசுக்கி நாக்கைப் பிடித்திழுத்தாளாம்.

நம் அம்மா ஹரீஷை வதைக்கவில்லை. அவரது தீய எண்ணத்தை வதைத்தாள். அந்தத் தீய எண்ணத்துக்குக் காரணமான மூளைக் கோளாற்றை வதைத்தாள்.

ஹரீஷ் காமார்புகுருக்குச் சென்று அம்மாவுக்குத் தொல்லை தருவதாகத் தகவல் அறிந்த நிரஞ்சனநந்தர் வரநகரத்திலிருந்து அங்கு விரைந்தார். அவரைக் கண்டதும் ஹரீஷ் பிடித்தாரே ஓட்டம்!

பிருந்தாவனத்துக்குத்தான் ஓடினர் ஹரீஷ். சிறிது காலத்திலேயே அவரது சித்தம் தெளிந்து விட்டது! அம்மாவின் அநுக்கிரகம்தான்! அவருடன் உக்கிரப் போர் செய்யும்போதே கருணையையும் கொட்டி யிருக்கிருள்! அவரது நோயை மிதித்து, அடித்து, அதன் நாவை இழுத்திருக்கிருள்!

அருமை நிரஞ்ஜன் சந்நியாசக் கோலத்தில் பக்கிரியாக நிற்பதைப் பார்த்து உள்ளம் உருகினள் அம்மா. உடல் இளைத்து, கந்தல் புடவையைப் பல இடங்களில் முடி போட்டுக் கட்டிக்கொண்டிருந்த அம்மாவைப் பார்த்து நிரஞ்ஜனும் நெஞ்சுருகினர்.

கல்கத்தாவுக்குத் திரும்பிய பின் அம்மாவின் கஷ்டத்தை நிரஞ்ஜன் மற்ற அடியார்களிடம் தெரிவித்தார். பக்தியே உருவான பலராம் பாபுவின் பத்தினி கிருஷ்ண பவானி தேவி கை நிறையப் பணத்துடன் காமார்புகுருக்குச் சென்ருள். சாரதை தோட்டத்தில் மண் வெட்டியும் கையுமாக ஏதோ










Parry's

**நண்பனும் விரோதியும்**

சோம்பேறித்தனம் மனித குலத்துக்குப் பெரும் விரோதி. சுறுசுறுப்பைப் போன்ற உற்ற தோழன் கிடையாது. அந்தச் சுறுசுறுப்பை வளர்த்துக் கொண்டால் அது உன்னை என்றும் கைவிடாது.

— பருத்ருஹரி

வேலை செய்து கொண்டிருந்தாள். கிருஷ்ண பவானிக்குக் கண்ணீர் முட்டியது. சாரதை காணிக்கையை ஏற்க மாட்டாள் என்று அவளுக்குத் தெரியும். எனவே ''ரகுவீரனுக்கு அர்ப்பணம் பண்ணக் கொண்டு வந்தேன். ரகுவீரன் பிரசாதத்தைக் கொஞ்ச நாள் இங்கே இருந்து சாப்பிட்டுப் போக ஆசை'' என்று நயம்படச் சொல்லி, பண்டங்களை வாங்கிப் போட்டாள் கிருஷ்ணபவானி. மூன்றே நாட்களில் அங்கிருந்து புறப்பட்டாள்.

அம்பிகை கண் திறந்தாள்.

அறுவடையாகி நிறைய நெல் வந்தது சாரதையின் பங்குக்கு. தரித்திரம் விடிந்தது. வேலைக்கு ஒரு பெண்ணை வைத்துக் கொண்டாள் என்றால் பாருங்களேன்! ஸாகரம்மா என்கிற அந்த வேலைக்காரப் பெண் பிற்காலத்தில் அம்மாவின் அன்புள்ளத்தை வாய் கொள்ளாமல் வருணிப்பாள். ''அம்மா என்ன ஆக்கினாலும் எனக்கு வைக்காம இருக்க மாட்டாங்க. நான் வீட்டுக்குள்ளே நுழையறதுக் குள்ளாறயே, 'அடி சாகரம்மா, முதல்லே சாப்பிடு, ஒரு குவளை தண்ணி குடி, களைப்பு தீர்ந்து அப்பாலே வேலை செய்யலாம்'னு வாங்க. துர்க்கா பூஜையின்போது அம்மா வூட்டுலே லெச்சிமி தாண்டவமாடினாளே! என்ன சமையலு, என்ன ருசி! நெதமும் எங்களுக்கெல்லாம் என்னமா வாரித் தந்தாங்க! தெரியுமா?'' என்று ஸாகரம்மா சொல்லுவாள்.

அந்த ஆண்டு நவராத்திரியில் துர்கா பூஜை எனப்படும் மூன்று நாட்களைச் சிறப்பாக அன்னதானத்துடன் கொண்டாடினாள் அம்மா. கொடுத்தே பழக்கப்பட்டு, இடைக்காலத்தில் துருப் பிடித்தாற்போல் நொடித்துக் கிடந்த அந்தக் கைக்கு இப்போது மட்டற்ற மகிழ்ச்சி பொங்கியது. அகத்துத் தெய்வமான சீதளாவுக்கே துர்காபூஜை செய்யப்பட்டது. 'சீதளா' என்பது நம் பக்கத்தில் மாரியம்மன் போலாகும். சீதளா தேவி அமிருதத்தை மாவிலையால் தோய்த்து ஊரெங்கும் தெளிப்பது போல் கனவு கண்ட க்ஷுதிராம் (ராமகிருஷ்ணரின் தந்தை) ஒரு ஜல கும்பத்தில் மாவிலையைச் செருகி அதில் சீதளாவைப் பிரதிஷ்டை செய்திருந்தார். புண்ணிய காலங்களில் அந்தத் தீர்த்தத்தை மாற்றுவார்கள். இப்போது துர்கா பூஜையை அந்த சீதளாவுக்குச் செய்தார் சிவராம் — சாரதையின் அருமைப் பிள்ளை 'ஷிபு'.

அந்தணருக்கு அன்னம் பாலித்தாள் சாரதை. ''ஷிபு! நீயே உன் கையாலே இலை போட்டு ஜலம் எடுத்து வை. இலையிலே உப்புக் கல்லும் உன் கையாலே வை. நான் அன்னம் பரிமாறுகிறேன்'' என்றாள் தேவி, அந்தப் பிள்ளைக்கு அந்தணரின் ஆசீர்வாதம் பூரணமாகச் சேர வேண்டும் என்ற ஆசையில்.

ஷிபு அங்கிருந்தவரையில் ரகுவீரனுக்கும் முறைப்படி பூஜை செய்தார். பிறகு வைதிகரை வைத்து அந்தப் பூஜையைத் தொடர்ந்து நடத்தினாள் தேவி.

ஒரு நாள் ராமகிருஷ்ணர் தோன்றி, ''எனக்குக் கிச்சடி பண்ணிப்போடேன்'' என்று கூறி மறைந்தார்.

சாரதைக்கு மேனி புல்லரித்தது. அவளது மாமனாருக்கு ரகுவீரனிடம் அபார பக்தி. ''அவன் அயோத்திக்காரன். வாயு திசை (வட மேற்கு)க்காரனுக்கு இந்த வங்காளத்துச் சாப்பாடு பிடிக்காது. ரகுவீரனுக்குக் கிச்சடிதான் நிவேதனம் பண்ணணும்'' என்பார் க்ஷுதிராம். அதை நினைத்துப் புளகித்தாள் சாரதை. கிச்சடி செய்தாள். ராமகிருஷ்ணரின் புகைப்படத்தை வைத்து அவள் பூஜித்து வந்தாலும் கிச்சடியை ரகுவீரன் முன்னர் கொண்டு வைத்து நமஸ்கரித்தாள். 'ரூபம்தான் வேறே! அவா ரெண்டு பேரும் ஒருத்தர்தான்' என்று சொல்லிக் கொண்டாள்.

அம்மா சிறிது காலம் மகிழ்ச்சியாக இருந்து விட்டாளே! இதோ அதற்கு எதிர்த் திசையில் ஒரு நிகழ்ச்சி:

ஒரிஸ்ஸாவிலிருந்து ஒரு கிழ சந்நியாசி காமார்புகுருக்கு வந்து தங்கியிருந்தார். காமார்புகுரின் செல்வச் செழிப்புள்ள இளவட்டங்களிடையே சிறிது காலமாகக் காலித்தனம் தலைதூக்கியிருந்தது. காரணமேயில்லாமல் அந்த சந்நியாசியைச் சீண்டி இம்சித்தனர் இந்த விடலைகள். அவரும் பாவம், ஊரை விட்டே போய்

விடுவதென்று நிச்சயித்தார். இந்தச் செய்தி காதில் விழுந்ததோ இல்லையோ நம் அம்மா சொல்லொணு வேதனையுற்ருள். தனக்கே உரிய அதிசய எழுச்சியைப் பெற்ருள். ''ஒரு புண்ணியாத்மா நம்ம ஊரை விட்டு மனம் நொந்து போகப்படுமா? அவாவாளும் நம்மாலே முடிஞ்சதைப் போட்டு அவருக்கு ஆசிரமம் கட்டித் தருவோம்'' என்று மக்களைத் தட்டி எழுப்பினுள். ஊரார் சேர்ந்து ஹால்தார்புகுர் என்ற ஏரிக்கருகே புதிய குடில் கட்டலானுர்கள்.

வானம் கனுந்தகரமாகக் கறுத்து வந்தது. தேவி சாரதை குழந்தை போலக் கைகுவித்தபடி வானத்தை நோக்கி, ''ஸ்வாமீ! கொஞ்சம் பொறுத்துக்கோங்கோ! கொஞ்ச நாழிதான்! இந்தக் கூரையை வேய்ஞ்சுடறேம். அப்புறம் உங்க மனம் கொண்ட மட்டும் கொட்டித் தீர்க்கலாம்'' என்ருள்.

அவள் சொல்லி ஆண்டவன் கேட்காதிருப்பாஞே?

மேகம் விலகிற்று. குடில் எழுந்தது. துறவி அதில் வந்து புகுந்தார்.

அவருக்குத் தினமும் அம்மா உணவுப் பண்டங்கள் வழங்கி வந்தாள். காலையும் மாலையும் அங்கு சென்று, ''ஆண்டியப்பா, சௌக்கியமா இருக்கேளா?'' என்று விசாரிப்பாள்.

சில நாட்களிலேயே அவர் மாருத சௌக்கியமான பரமபதம் அடைந்தார். அதை முன்கூட்டி அறிந்த தேவி அவர் அவ்வூரை விட்டு நீங்காமல் இருத்தி வைத்தாள் போலும்!

தன் வீட்டிலேயே புகுந்து ஹரீஷ் செய்த அட்டூழியமும், ஒரிஸ்ஸா சுவாமிகளுக்குக் காலிப் பசங்கள் இழைத்த அக்கிரமமும் சாரதாவைச் சிந்தாகுலமாக்கின. 'வியாதியையும் வறுமையையும் வதந்திப் பேச்சையும் பற்றிக் கவலையில்லை. இன்று கற்புக்குமா ஆபத்து வந்தது? தனியளாக எப்படிக் காலம் கழிப்பது?' என்றுயோசிக்கலானுள் தேவி.

இதே சமயத்தில் கிருஷ்ண பவானி தேவி, கோலாப்மா முதலியோர் முன்னின்று அம்மாவைக் கல்கத்தாவுக்கே அழைப்பதென முடிவு செய்தனர். பலராம் பாபுவின் வீட்டிலேயே அவளுக்கு இருக்கை தர எண்ணினர்.

'அவர் தீர்மானமாகச் சொன்ன வாக்கை மீறிக் காமார்புகுரை விட்டுச் செல்வதா?' என்று குழம்பினுள் தேவி. கிச்சுடி வேண்டும் என்ருல் தரிசனம் தந்த அந்தப் பொல்லாத கணவர் இந்தச் சமயத்தில் எந்த சமிக்ஞையும் தெரிவிக்கவில்லை. 'அவர் எதற்காகக் காமார்புகுரில் அடைந்து கிடக்கச் சொன்னுர்? எந்த விவகாரமும் இன்றி பதிவிரதம் பூண்டு ஹரி ஸ்மரணம் செய்வதற்குத் தானே? ஆனுல் அதுதான் இங்கே நடக்கவில்லை. ஊர் பாடு எல்லாம் இங்கே வந்து சேருகிறது. தன் பதிவிரதத்துக்கே ஆபத்து வந்துவிடும் போலும் இருக்கிறது. ஹரிஸ்மரணம் செய்வதில் எங்கே தெளிவிருக்கும்? அவர் சொன்ன நோக்கத்துக்காகவே இந்த ஊரை விட்டுப் போனுல்தான் நல்லது' என்று முடிவு செய்து விட்டாள் அம்மா. இருப்பினும் ஊர்ப் பெண்டுகளை அழைத்து ஆலோசனை கலந்தாள். ஸ்ரீ ராமசந்திரன் வானரர்களை ஆலோசனை கலந்தது போல் நம் தேவி உடன் இருப்பவர்களுக்கு மதிப்புத் தந்தாள். அவர்களில் சிலர், ''நன்னுயிருக்கே! உங்களுக்கு என்ன வயசாயிடுத்து? நீங்க கல்கத்தா போனு அந்த சிஷப் பிள்ளைகள் உங்களைச் சுத்தி வரும். அது லட்சணமாயிருக்காது'' என்றனர். காமார்புகுர் பாலைவனத்தில் சாரதைக்கு எப்போதுமே ஒரு நீர்ச் சுனையாக இருந்தவள் பிரஸன்னமயீ. ''நீங்க இந்த ஊரிலே இருந்தா எங்களுக்குப் பாக்கியம்தான். ஆனுல் உங்களுக்கு மாளாத இம்சையாகவே இருக்கும். நீங்க கல்கத்தாவுக்கே போயிடறது தான் சரி. வசதியும் நல்ல மனசும் இருக்கிற பக்தாள் கிட்டப் போய் இருங்கோ. அந்த சிஷ்யப் பிள்ளைகள் உங்க வயிற்றிலே பிறந்த பிள்ளைகளுக்கு மேலே. நீங்க போகத்தான் வேணும் என்கிறதிலே இரண்டாவது அபிப்பிராயத்துக்கு இடமே இல்லை'' என்று பட்டுக் கத்தரித்தது போலச் சொல்லிவிட்டாள் அந்தப் பெருமாட்டி.

பதியின் வாக்கை அதன் எழுத்துப்படி பின்பற்றுவதை விட அதன் கருத்

> **பந்தும் களிமண்ணும்**
>
> **நல்ல மனிதன் உயர்ந்த நிலையிலிருந்து கீழே விழுந்து விடலாம். ஆனுல் அவன் விழுவது பந்தைப் போலத் தான். கீழே விழும் பந்து திரும்பவும் மேலே எழவே செய்கிறதல்லவா? அயோக்கியன் விழுந்தால் களிமண்ணைப் போல்தான். மண்ணேடு மண்ணுய்ப் போய்விடுவான்.**
>
> —பருத்ருஹரி

துப்படி பின்பற்றுவதே விவேகம் என்று அம்மாவும் சமாதானப்படுத்திக் கொண்டாள். சுமார் ஓராண்டு காலம் அவரது கிராமத்தில் அவதிப்பட்ட பின் கல்கத்தாவில் பலராம் பாபுவின் வீட்டுக்குப் பெயர்ந்தாள்.

# 31. "அம்மான்னு அம்மா!"

தொடர்ந்து நின்ற என் தாயானை....
சிந்திக்கப் பெற்றேன் நானே
— அப்பர் சுவாமிகள்

கல்கத்தா வாசியாகி விட்டாள் அம்மா!

ஆனால் கல்கத்தாவின் நாகரிக அற்புதங்கள் ஏதும் தெரியாத கிராமாந்தர அம்மாவாக இருந்தாள். அவளது அப்பாவிக் கண்ணுக்குக் கல்கத்தாவில் சர்வ சகஜமாகிவிட்ட சிறிய விஷயங்கள் கூடப்பெரிய நாகரிக விஞ்ஞான அம்சங்களாகத் தெரிந்தன. நமக்கு ஹாஸ்யமாக இருக்கும்!

ஒரு நாள் கடிகாரம் நின்றுவிட்டது. அப்போது அம்மாவைப் பார்க்க வந்திருந்த ஒரு தனவந்தரின் மாற்றுப் பெண் அதற்குச் சாவி கொடுத்து மறுபடி ஓடவைத்தாள். அம்மா வைத்த கண் வாங்காமல் அந்த அதிசயத்தைப் பார்த்துக்கொண்டேயிருந்தாள். அதற்குப் பின் பல முறை அந்தப் பெண்ணின் புத்திசாலித்தனத்தைப் பற்றிச் சொல்லும்போது, "அடேயப்பா, அந்தப் பெண்ணுக்குக் கடிகாரத்துக்குச் சாவி கொடுக்கத் தெரியறதுன்னு பாருங்களேன்! இந்தக் காலத்துப் பொம்மனுட்டிகள் என்னவெல்லாம் பண்ணறு?" என்று வியந்து கூறுவாள் அம்மா.

அம்மாவுக்கு ஓர் அரிக்கேன் விளக்குக் கொடுக்கப் பட்டிருந்தது. அம்மா அதைப் பொத்திப் பொத்திக் காப்பாற்றி வந்தாள். எனவே சிம்னி உடையாமலே இருந்தது. ஆனல் உள்ளே புகை ஏறிவிட்டதைக் கண்டு, யாரோ, "என்னம்மா சிம்னியை எடுத்துத் துடைக்கவில்லையா?" எனக் கேட்டனர்.

"நானு? சிம்னியைக் கழட்டறதா? அச்சச்சோ! அந்த மிஷினைத் தொட்டு, நான் ஒரு அவலப் பொம்மனுட்டி, அதை எப்படி எடுக்கறது?" என்று வினவினுள் அம்மா.

சிம்னியைப் பொருத்தும் இரண்டு கம்பி வளையங்கள் அரிக்கன் லாந்தரை ஏதுமறியாத அம்மாவின் கண்களில் ஒரு மிஷினுக்கி விட்டது!

ஒரு நாள் குளியலறைக் குழாயை அம்மா திறந்தாள். 'புஸ்'ஸென ஓசை வந்தது. அம்மா வெளியே ஓடி வந்து விட்டாள். "குழாய்க்குள்ளே எப்படியோ பாம்பு போய்ப் பதுங்கிண்டிருக்கு. நான் திறந்தேனே இல்லையோ சீற ஆரம்பிச்சுடுத்து" என்றுள்.

மற்றவர்கள் போய்ப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து விழுந்து விழுந்து சிரித்தார்கள். குழாயிலே காற்று அடைபட்டுப் பிறகு 'புஸ்'ஸென வெளிப்படுவதுண்டு என்று விஷயம் விளக்கப்பட்ட பின் அம்மாவும் சேர்ந்து சிரித்தாள்.

நம்முடைய இந்தப் புத்திசாலி உலகின் புத்திசாலித்தனங்கள் அவளுக்குத் தெரியாவிட்டால் என்ன? அவளுக்குத் தெரிந்த எதுவும் நமக்குத்தான் தெரியவில்லை. நவீன உலகின் அரிச்சுவடியும் தெரியாதிருந்த அதே சமயத்தில் அம்மா ஆத்மிகத்தில் எத்தகைய உச்சிக்குச் சென்றிருந்தாள்! பலராம் பாபுவின் வீட்டு வெளி மாடியிலே தியானம் செய்ய அமர்ந்த மாத்திரத்தி அவளை விட்டு நமது புத்திசாலி உலக அடியோடு சுழன்றுவிடும். எத்தனை எத்தனையோ பௌதிக- அதீதமான அதீந்திரியமான, தெய்விக அநுபவங்களைப் பெற்றுள். அநுபவம், அநுபவிப்பவர் என்ற பேதமும் அற்ற சமாதியும் பன்முறை கூடியதுண்டு.

ஒரு நாள் தியானம் கலைந்த பின் அவள் யோகின்—மாவிடம் சொன்னுள்: "இன்னிக்கு எனக்கு ஒரு காட்சி. நான் ஏதோ தூர தேசத்திலே இருக்கேன். அந்தத் தேசத்துக்காராள் என்னை ரொம்ப அன்போடே நடத்தறு. நான் ரொம்ப அழகா ஆயிடறேன். டாகூரும் அங்கே வரார். அவா பிரியமாக என்னை டாகூர் பக்கத்திலே உட்கார்த்தி வைக்கறு. எனக்கு அப்போ ஏற்பட்ட ஆனந்தத்தை வாய் விட்டுச் சொல்ல வராது. அப்புறம் இகலோக ஸ்மரணை வந்தது. என்னுடை இந்த அமங்கல சரீரத்தைப் பார்க்கிறேன். 'இந்த அசங்கியமான சரீரத்துக்குள்ளே ஏன் மறுபடி நுழையணும்? வேண்டாம்'னு நினைக்கிறேன். ஆனு, ஏனே தெரியலை, எப்படியோ சமாளிச்சுண்டு இதுக்குள்ளேயே மறுபடி வந்து புகுந்துக்கறேன்."

தன் குழந்தைகளை வாழ்விக்கத்தான் அப்படி வந்து புகுந்து கொண்டாள்! வேறென்ன காரணம் கூற முடியும்?

(தொடரும்)

# எழில் வருகிறது எகானமி வடிவுடன்





பிளாக்ரோஸ்—முழு மலர்ச்சியுற்ற பாரசீக ரோஜா மலர்களின் மணம் கமழ்வது.

பிக்வண்ட் —புது வசந்தத்தில் பூத்த மலர்களின் மென் மணம் கொஞ்சுவது.

இரண்டுமே எழில் கொழிப்பவை. தனி சிறப்புடன் திகழ்பவை.

**கோயா** பிளாக்ரோஸ், பிக்வண்ட் இரண்டும் உங்களுக்கு அதிகம் அளிக்க வடிவளவில் கூடியுள்ளன

AGC-12TAM



# அம்மா

ரா. கணபதி

அம்மாவுக்குப் பேலூரில் கங்கைக் கரையில் ஒரு தனி ஜாகை அமர்த்தினர் அவளது பக்தர்கள். டாகூர் மறைந்தபோது அம்மாவிடம் அவ்வளவாக ஈடுபடாதவர்களும் கூட இந்த இரண்டாண்டுகளில் அவளது மகத்துவத்தைச் சிறிது சிறிதாகப் புரிந்து கொள்ளத் தொடங்கி விட்டனர். அவளது தேவைகளைப் பூர்த்தி செய்ய ஆர்வத்துடன் முன்வந்தனர்.

பிற்பாடு ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தின் தலைமையான மடம் அமைய விருந்த பேலூருக்கு அம்மா இப்போதே சென்றுவிட்டாள்! அங்கொரு நாள் நீண்ட நேரம் சமாதியில் இருந்து தியானம் கலையும் தறுவாயில், ''யோகேன்! என் கை காலெல்லாம் எங்கே?'' என்று வினவினாள்.

''இதோ தானேம்மா இருக்கு?'' என்று யோகேனும், கோலாப்பும் அவளது கர, சரணங்களைக் கைகளால் அழுத்திப் பிடித்துக் காட்டினர்.

வெகு நேரத்துக்குப் பின் அம்மாவுக்குச் சரீர உணர்வு உண்டாகி, அதனை இயக்க முடிந்தது. நமக்கோ, சரீரத்தைத் தவிர வேறெதையுமே நமதென உணர முடியவில்லை!

புரிஜகந்நாதத்துக்கு யாத்திரை கிளம்பினாள் அம்மா — பக்தர் புடைசூழ.

ஜகந்நாதர் ஆலயத்துக்குக் கிளம்பினாள். பலராம்பாபுவின் பண்டாவாகிய கோவிந்த சிங்காரி அவளுக்காகப் பல்லக்குக் கொண்டு வரக் கிளம்பினார், பலராமின் குருபத்தினியாச்சே என்று மரியாதை செய்யும் முறையில்.

சாரதை தனக்கே உரிய விநயத்துடன் பேசினாள்: ''கோவிந்தா! அவன் ஜகத்துக்கெல்லாம் நாதன். அவனைப் பார்க்கப் போற எனக்கா பல்லக்கு? நீ வழி காட்டிண்டு போ. உன் பின்னாலேயே, தீன ஸ்திரீயாக நான் வரேன்.''






அவ்விதமே சென்றுள்.

ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் இதயமார்ந்த ஈடுபாடு கொண்டிருந்த புரிக்கு, அவரது மறு பிறவி எனப் பலர் கருதிய ஸ்ரீ ராமகிருஷ்ணர் சென்றதில்லே. அம்மா தன் சேலேயிலே ராம கிருஷ்ணரின் படத்தை மறைத்தெடுத்துக் கொண்டு ஜகந்நாதனிடம் சென்றுள்—**அவருக்கும்** சுவாமி தரிசனம் செய்து வைக்க வேண்டும் என்றே! அந்தப் படம் அவளுக்கு உயிர் கொண்டு வாழ்ந்தது!

ஜகந்நாதனைக் கண்டதும் சிரித்துக் கொண்டாள்: ''அப்படியானுல் என் நாதனும் ஜகந் நாதனும் வேரு என்ன?''

புரி ஜகந்நாதர், நம் தட்சிணதேச விக்கிரகங்களைப் போல் அழகுப் பிம்பம் அல்ல! 'கலைக் கண்' படைத்த நமக்கு அங்கு நெஞ்சம் நிறையாது! ஆனுல் அம்மா அங்கே பெற்ற அநுபவம்தான் எத்தகையது? ஜகந்நாதன் உயிரும் உடலும் கொண்டு நவரத்ன கசிதமான சிம்மாதனத்தில் வீற்றிருக்கிருன்! அவனுக்குப் பக்கலிலே சாமரம் இரட்டுவது, ஆஹா, அது யார்? ஆம், இங்கே நின்று தரிசனம் செய்கிற சாரதையேதான் அங்கேயும் சாமரம் வீசுகிருள்! இங்கு, அங்கு என்ற இடைவெளிகள் அடிபட்டு விட்ட நிலேயன்ருே?

அன்றிரவு கனவிலே மீண்டும் வந்தான் ஜகந்நாதன். ஆனுல் உலகெலாம் கூறும் வண்ணம் கிருஷ்ணபெருமாஞக அல்ல, சிவலிங்கமாகத் தரிசனம் தருகிருன்! நவரத்தின சிம்மாதனத்துக்குப் பதில், லட்சம் சாளக்கிராமங்களாலான ஆசனத்தில் எழுந்தருளியிருக்கிறது ஜகந்நாதலிங்கம். சாரதை சாமரம் வீசிய இடத்திலே தெளிவுமயமாக நிற்கிருள் பரமேசுவரி. 'இந்தத் தெளிவைத்தான் விமலா தேவி என்கிருர்கள்' என்று சாரதை புரிந்து கொள்கிருள். விமலா தேவிக்குப் பலியிடப்படுகிறது. 'ஓகோ, இன்று அஷ்டமியல்லவா? அதுதான் அம்மாவுக்கு விசேஷ நிவேதனம்' என்று எண்ணுகிருள் சாரதை. பிறகு இது குறித்துப் பக்தர்களிடம் பேசிய நம் அம்மா, ''ஜகந்நாதனே சிவன்; விமலாதான் துர்கா தேவி!'' என்ருள்.

உடன் வந்திருந்த அறிஞர் ஒருவர் ஆதியில் ஜகந்நாதர் ஆலயம் சிவபஃந்திரமாக இருந்த தெனவும், பௌத்த சைத்தியமாக இருந்ததெனவும் இரு கருத்துக்கள் உண்டு என்று கூறினுர்.

புரியில் இருந்தபோது லக்ஷ்மியின் சந்நிதியில் அம்மா பல மணி நேரம் தியானம் புரிவது வழக்கம்.

வேறு சில ஊர்களுக்கும் பக்த கோடிகள் அவளே அழைத்துச் சென்றனர். 'இவர்களோடு இப்படிக் குஷியாக இருக்கிருேமே! 'காமார்புகுரில் இரு' என்று அல்லவோ பதி பணித்தார்?' என்று அம்மாவின் நினேவில் உறுத்தியது. தன்னேப் படாதபாடு படுத்திய அந்தக் கிராமத்துக்கு மறுபடியும் சென்று விட்டாள் அம்மா.

காமார்புகுரிலே மகள் படும் பாட்டை அறிந்த சியாமசுந்தரி அவளேத் தன் வீட்டுக்குப் பிடிவாதமாக அழைத்து வந்தாள். ''அடி சாரதே! உனக்குப் பகவானே பண்ணின சோதனைகள் போறும். நான் கண்ணே மூடற மட்டும் இந்த மாதிரி ஊர் ஜனங்கள் ஏச்சுக்கு நீ ஆளாகப் படாது. ஆமாம், சொல்லிட்டேன்'' என்ருள் சியாமை அழுத்தமாக.

தாயுள்ளம் நம் அம்மாவுக்கா புரியாது?



'' இனிமேலே நீ சொல்கிறபடியே செய்யறேன். ஒண்ணு உன்கூட இருக்கேன். இல்லாட்டா என் பசங்களோடே இருக்கேன்'' என்று தனது அம்மாவுக்கு வாக்குத் தந்தாள்.

கண்கண்ட தெய்வம் என்று சாஸ்திரங்கள் கூறும் கணவர் அவளைக் காமார்புகுரில் இருக்கச் சொன்னாலும், அன்னை என்ற முன்னறி தெய்வம் அவள் முன்னேயே நின்று, பெற்ற வயிறு பரிதவிக்க அவளுக்கு இட்ட ஆணையைச் சிரமேற் கொண்டாள்.

ஆனால் தன்னைப் பார்க்க வருபவர்களிடம், ''காமார்புகுர் மண்ணுலே போய் விழுங்கோ. டாகூர் ஜனிச்ச புண்ணிய பூமி'' என்பாள். ''அங்கே ராத் தங்கினா ரொம்ப விசேஷம்'' என்பாள். அவளது பிரபுவின் குடிலுக்கு ஒரு பழுது வராமல், அவ்வப்போது புதுப்பிக்கப் பணம் அனுப்பிக் கொண்டேயிருப்பாள். அது மட்டுமல்ல, அவளைத் திருணமாத்திரமாக மதித்த ராமலால் வீட்டுக்கு மாடி கட்டவும் அம்மாவே பொருளுதவி செய்தாள். பெண் குலத்துக்கு அம்மா கற்பிக்கும் பல பாடங்களில் புக்ககப் பாசமும் ஒன்று !

தன் மாதா சொன்னாளே என்று புக்ககத்தினரிடம் அவதிப்படாமல் இருக்கப் பிறந்தகம் வந்தாள். பிறந்தகத்தில் அவதிப்பட்டாள். அவளுடைய தம்பிகளின் லட்சணம் அப்படி!

தன் தாய்க்கு வாக்குத் தந்த அம்மாவுக்கு, ராமகிருஷ்ணரிடம் அவரது தாய் குறித்துத் தான் தந்த வாக்கு நினைவு வந்தது. ஒரு நாள் ராமகிருஷ்ணர் அவளிடம் சொன்னார். '' என் அம்மாவுக்கு நான் பிள்ளைன்னு என்ன பண்ணினேன்? அவ போனவிட்டு ஒரு நாள் தர்ப்பணமாவது பண்ணுவோமேன்னு கங்கையைக் கையிலே எடுத்தேன். ஆனால் நான் எப்பாடு பட்டாலும் கையிலே ஜலம் சேர்ந்தாத்தானே? சந்நியாசியான நான் மாத்ரு கர்மம் செய்யறது ஜகன்மாதாவுக்குச் சம்மதமில்லை. தர்ப்பணம் பண்ணாமலே திரும்பிட்டேன். சாரு, நீ என் மாதிரி சந்நியாசம் வாங்கிக்கவில்லை. அதனாலே நீ எப்பவாவது கயைக்குப் போய் அம்மாவுக்குப் பிண்டம் போட்டுடறயா?''

சாரதையின் கன்னங்கள் நனைந்தன. சந்திரமணியின் வயிற்றைத் தேடி வந்து கர்ப்பவாசம் செய்த பரமபுருஷன் அதற்கு மேல் அவளுக்கு என்ன செய்ய வேண்டும் ? தன் அன்னைக்குக் கடனாளியாகவே நின்றுவிட்டதாகக் கருதும் கணவரிடம், ''கயைக்கு நாம் சேர்ந்து போவோம். நான் அம்மாவுக்குப் பிண்டம் போடறேன்'' என்றாள்.

''அந்த ஒரு க்ஷேத்திரத்துக்கு மட்டும் இந்த சரீரம் போக முடியாதே'' என்றார் ராமகிருஷ்ணர் தாபத்துடன்.

ஆதியில் ராமகிருஷ்ணரின் தந்தைக்குக் கயையில் வதியும் கதாதரன், தானே மகனாகப் பிறப்பேன் என்று திருவாக்குத் தந்திருந்தான். அதனால்தான் ராமகிருஷ்ணருக்கு 'கதாதர்' எனப் பெயரிடப்பட்டது. கயை சென்றால் தம் சரீரம், காந்தத்தால் இழுக்கப்படும் காந்தம்போல், கதாதர மூர்த்திக்குள் அடக்கமாகிவிடும் என்பார் ராமகிருஷ்ணர்.

இப்போது அதையெல்லாம் நினைவு கூர்ந்தாள் அம்மா. தன் அடியார் குழாத்தில் சிலருடன் கயைக்குச் சென்றாள். விஷ்ணு பாதத்தில் பரம புண்ணியவதியான தன் மாமியாரை ஸ்மரித்துப் பிண்டமிட்டாள். கணவரது ஓர் ஆக்ஞையை நிறைவேற்றியது அவளுக்கு மிகுந்த மன நிறைவளித்தது.

அம்மா கல்கத்தாவுக்குத் திரும்பிய பின் ஒரு சோக சம்பவம் நிகழ்ந்தது. அன்று டாகூருக்கும், இன்று இவளுக்கும் அணுக்கத் தொண்டராக அரும் பணி செய்த பலராம் பாபு மீளா நித்திரையில் ஆழ்ந்து விட்டார்.

அம்மாவின் மனம் இடுகாடாயிற்று. கல்கத்தாவுக்கு அணிமையில் குஸூரி என்ற கிராமத்தில் கங்கைக் கரையில் இடுகாட்டை அடுத்த ஓரிடத்தில் சிறிது காலம் வசித்தாள்.

நரேந்திர நாதனுக்கு அனைவரையும் விடுத்து இமாலயத்துக்குச் சென்று தவமிருந்து உன்னத அநுபூதிகளைப் பெறும் ஆர்வம் இச்சமயத்தில் கரை புரண்டது. அம்மாவிடம் வந்தார். பௌருஷ பர்வதமான நரேன் அம்மாவின் திருமுன்னர் நாணல் துரும்பு போல் ஆகிவிடுவது வழக்கம். நெடுஞ்சாண் கிடையாக அவள் முன்னே விழுந்து கிடந்தார்.

காமார்புகுரில் அம்மா பெற்ற திவ்வியக் காட்சியில் கங்கையைக் கழலிணையிலிருந்து பெருக்கிய டாகூர், நரேனுக்குள் அல்லவோ சென்று மறைந்தார்? அந்த நினைவு வரவே அம்மா ஸ்தம்பிதமாக அமர்ந்திருந்தாள்.

நமஸ்கரித்து எழுந்த நரேந்திரர், ''அம்மா, பாடறேன், கேக்கறியா ?'' என்றார்.

''திவ்வியமா குழந்தே.''

நரேன் பாடினார். திவ்வியமாகப் பாடினார். ராமகிருஷ்ணர் கற்றுக் கொடுத்த பாட்டுக்களைப் பாடினார். அவரது எல்லையில்லா இனிமை பொருந்திய குரல், பாடல்களின் ஆழ்ந்த பொருள், டாகூரின் நினைவு எல்லாமாகச் சேர்ந்து, அம்மா 'புன்புலால் யாக்கை

# பார்லே க்ளுகோ–
# போஷாக்கு நிரம்பிய
# அதிக ருசியுள்ள
# பிஸ்கெட்



எப்பொழுதும்
இவை அடங்கியது–
வைட்டமின்கள் ஏ-டி-பி$_1$-பி$_2$-
கால்ஷியம்-ப்ரோடீன், பால்,
கோதுமை, சர்க்கரை,
க்ளுகோஸ்




everest/306g/PP tam

## பார்லே க்ளுகோ பிஸ்கெட்
## புசித்து வளர்வதே பேரானந்தம்!

இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கெட்டுகள் பார்லே க்ளுகோ

ஞானிகளுக்கும் துஷ்டர்களுக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. இருவருமே துன்பம் தருபவர்கள். ஆனால் ஒரு வித்தியாசம். ஞானிகளின் பிரிவு பெருந் துன்பம். துஷ்டர்களின் உறவு பெருந் துன்பம்.

— துளசிதாசர்

புரை புரை கனிய, என்பெலாம் உருக' அமர்ந்திருந்தாள்.

''அம்மா, எல்லாத்தையும் விட்டுட்டு ஈசுவரானுபவத்தைச் சாசுவதமாக்கிக்கணும்னு ஹிமாலயம் போகப் போறேன். அந்த நிலை ஏற்பட்டாலே நான் உண்மையான மநுஷ்யன். அப்படிப்பட்ட உண்மை மநுஷ்யனா ஆக முடிஞ்சால் திரும்பி வருவேன். இல்லாட்டா இது தான் நான் உன்கிட்ட வாங்கிக்கற பிரிவுபசாரம்'' என்றார் நரேன்.

அந்த வார்த்தைகளைக் கேட்டதும் அம்மா ஆடிவிட்டாள்.

''மகனே! உன் வாயினாலே நீ அம்மாகிட்டே அப்படிச் சொல்லப் படுமா?'' என்றாள்.

நரேன் தமது நாக்கைக் கடித்துக் கொண்டார். ''ஆமாம்மா, நான் சொன்னது தப்புத்தான். உன் ஆசீர்வாதம் இருக்கச்சே என் லட்சியம் எப்படித் தோற்றுப் போகும்?'' என்றார்.

''டாகூர் கிருபையாலே மங்களமாகப் போய், ஜயசாலியாகத் திரும்பு அப்பனே!'' என்று மனமார ஆசி சொன்ன தேவி, ''அது சரி, அம்மா கிட்டே சொல்லிண்டியா?'' என்றாள்.

அதுதான் தாயுள்ளம்! நரேன், ஜனக மாதாவிடம் சொல்லிக் கொண்டிருப்பானோ, மாட்டானோ என்று ஜகன் மாதா அந்தத் தாய்க்காகப் பரிந்துரைக்கிறாள்.

நரேன் அவளது திவ்விய முகத்தை நிறைவுடன் பார்த்து, நிச்சயத்துடன் கேட்டான்: ''அம்மாவா அம்மா? உன்னைத் தவிர யார் அம்மா?''

குஸுரி வீட்டிலிருந்து வர நகரத்தில் ஒரு வீட்டுக்குப் பெயர்ந்தாள் அம்மா. அங்கு ஒரு நாள் கிரீஷ்சந்திர கோஷ் தமது அருமைப் பிள்ளைக் குழந்தையுடன் வந்திருந்தார். கிரீஷ் வங்கத்திலே பிரபல நாடகக் கலைஞரும் ஆசிரியருமாவார். பூர்வத்தில் தாம் செய்யாத பாவம் பாக்கியில்லை என்று பிற்காலத்தில் ஓயாமல் கூறிப் புலம்பியவர் இவர். ராமகிருஷ்ணர் ''உங்கள் வாழ்க்கை முழுவதற்கும் நான் பொறுப்பாளி'' என்று சொல்லி கிரீஷை 'மேட்—ஓவர்' செய்து கொண்டார். கிரீஷ் அம்மாவின் எதிரிலேயே வரமாட்டார். ஒருசில பாக்கியசாலிகள், அவளது பாத விரல் நுனிகளை மட்டும் காணும் பேறு பெற்றிருக்கின்றனர். மற்றவர்கள் அவள் இருக்கிற அறைக்கு வெளியே நமஸ்கரித்து, உள்ளே தேவி இருக்கிறாள் என்ற நினைவுடன் அங்கு அமர்ந்து, தியானித்துச் செல்வர். கிரீஷோ 'பரம அதமனாகிய என் கண்கள் புண்ணிய மாதாவின் மீது படக் கூடாது' என்று கூறி எட்டாத் தொலைவிலேயே நின்று வணங்கிப் போவார்.

இன்று அவரது மூன்று வயசுப் பிள்ளைக்கு அப்பாவின் மடியில் இருப்பாகவே இல்லை. மாடி அறையைச் சுட்டிக் காட்டி, ''ஊ ஊ'' என்று அவரைத் தார்க் குச்சி போட்டவாறு இருந்தான், பேசும் சக்தி பெற்றிராத அப்பிள்ளை. டாகூரே தமது அம்சத்தி லொன்றை இப் பிள்ளையாக அனுப்பி யிருப்பதாகக் கிரீஷுக்கு ஒரு நம்பிக்கை.

இன்று அவன் மாடி அறையைக் காட்டி ''ஊ'' சொன்னபோது, அருகே இருந்தவர்கள் அம்மா அங்கே தான் இருக்கிறாள் என்று கூறினர். மாடியை நோக்கிக் கும்பிட்டார் கிரீஷ். குழந்தையைச் சிஷ்யர்களோடு மாடிக்கு அனுப்பி வைத்தார். அந்தப் பிள்ளை நேரே சென்று அம்மாவின் கால்களைப் பிடித்துக் கொண்டு தலையால் கும்பிட்டது. அம்மா அதை அன்புடன் அங்கமெலாம் தடவித் தந்தாள்.

கீழே இறங்கி வந்த பாலன் கிரீஷை விரலால் குத்தி, சைகை மூலம் அவரையும் மாடிக்கு வருமாறு உந்தினான்.

''குழந்தே! இந்தப் பாவியை இப்படிச் சோதிக்காதே'' என்று கிரீஷ் புலம்பியும் பலனில்லை. பாலன் உன்மத்தம் பிடித்தவன் போல் அமளி துமளி செய்தான். கடைசியில் கிரீஷ் அவனைத் தூக்கிக் கொண்டு அம்மாவின் சந்நிதிக்குப் போகும்படியாயிற்று.

புயல்காற்றுத் தருவென அவரது உடம்பெல்லாம் ஆட அம்மாவின் காலருகே விழுந்தார். ''அம்மா! இந்தக் குழந்தையின் பிடிவாதத்திலேதான் துணிந்து வரும்படியாச்சு, க்ஷமிக்கணும் தேவி'' என்றார் நாக்குளற.

மிக மெல்லிய குரலில் ''டாகூர், டாகூர்'' என்று அம்மா முனகினாள்.

சிறிது காலத்திலேயே அந்தப் பாலகன் டாகூரைத் தேடிக் கொண்டு போய் விட்டான்!

**சா**ரதா தேவிக்குப் பழைய ரத்தக் கடுப்பு திரும்பிக் கொண்டது. பக்தருக்குச் சிரமம் தர வேண்டாமென்று ஜயராம்பாடிக்குச் சென்றாள். உடம்பு

சொஸ்தமாயிற்று. பிறந்தகத்திலேயே தொடர்ந்து தங்கி யிருந்தாள்.

சியாமசுந்தரியின் 'செல்ல'மாகிவிட்ட ஜகத்தாத்ரிக்குப் பூஜை விமரிசையாக நடந்தது. சாரதையின் பசங்களில் அநேகரும், பக்தர்களும், புத்திர சோகத்துக்கு ஆறுதல் தேடிய கிரீஷ¯ம் ஜயராம்பாடிக்கு வந்து பூஜையில் கலந்து கொண்டனர். அம்மாவின் மகிழ்ச்சிக்கு எல்லேயே இல்லே. தன் பிறந்த வீட்டில் தன் அதிதிகளாகப் பிள்ளேகள் வந்திருப்பதில் அவளுக்கு ஒரே பூரிப்பு. முன்பு தக்ஷிணேசுவரத்தில் செய்தது போலவே இப்போது ஓயாமல் விருந்து சமைத்துப் போட்டு மகிழ்ந்தாள்.

பதினேந்து வயசு காளி கிருஷ்ணன் அப்போதுதான் ராமகிருஷ்ண மடத்துக்கு அடிக்கடி வரத் தொடங்கியிருந்தான். இன்னும் அவன் துறவு பூணவில்லே. வயசில் சிறியவனுதலால் அவனுக்கு அம்மாவிடம் சலுகை அதிகம். அவனேக் கண்டவுடன் அம்மா, அவனது முகவாயைத் தன் விரல்களால் தொட்டு அந்த விரல்களே உதட்டில் வைத்துக் கொண்டாள் என்ருல் பாருங்களேன்! மற்ற ஆடவர்களுக்கும் அம்மாவுக்குமிடையே குஷியுடன் ஓடி ஆடிக் கொண்டிருந்தான் காளி கிருஷ்ணு. அம்மாவின் கையிலிருந்து காரியத்தைப் பிடுங்கிக் கொள்வதில் அவனுக்கு ஒரே துருதுருப்பு. அடுப்பு மூட்டுவதற்காக வரட்டி, அல்லது தணல் தட்டை அவன் வாங்கிக் கொள்ள அவசரப்படும்போது அம்மா, ''பொறுடா அப்பனே! பெற்ற தாயார், பிள்ளே கையிலே நேரடியா வரட்டியும் அக்கினியும் தரப்படாது. தரையிலே வைக்கிறேன். எடுத்துக்கோ'' என்பாள்.

சியாமசுந்தரியின் உதார குணத்தை இந்தத் தொடரின் தொடக்க அத்தியாயத்திலேயே பார்த்திருக்கிருேம். அந்த உதாரம்தான் அவளது உதரத்திலே நம்ம அம்மா வந்து குடிபுகுமாறு உதவியது. இப்போது ''பாட்டி, பாட்டி'' என்று தேவாமுத பிந்துக்களேத் தெறித்து அவளேக் கூப்பிட்டுக் கொண்டு வந்திருக்கும் பேரக் குழந்தைகளே வெகு அருமையுடன் சீராட்டினுள் சியாமை. ''ஒரு காலத்திலே நீங்களே பார்ப்பேள்—எத்தனே குழந்தைகள் உங்க பெண்ணே 'அம்மா, அம்மா'ன்னு சுற்றப் போறதுகள்னு'' என்று அன்ருெரு நாள் 'மாப்பிள்ளே' கூறியது சியாமையின் மனச் செவியில் ஒலித்தது. ''அப்பாடா, மறுபடி இந்த அகம் **அவர்** இருந்த நாள் மாதிரி பகவானுடைய அகமாக, பாகவதாளுடைய அகமாக ஆயிடுத்து'' என்று அந்தப் பாட்டி சொல்லிச் சொல்லி ஆனந்தித்தாள்.

தன் அதிசய மாப்பிள்ளேயைப் பற்றிய பல விருத்தாந்தங்களேச் சொல்லி அவரது பக்தர்களேப் பரவச முறச் செய்தாள்.

ஒரு நாள் நடந்த நிகழ்ச்சி சியாமசுந்தரி, சாரதாமணி இவர்களின் இதயத்து அடியாழம் வரையில் பாய்ந்து சென்று உலுக்கியது. தேஸ்ராவைச் சேர்ந்த ஹரிதாஸ் பைராகி என்ற ஆண்டிப் பண்டாரம் வயலின் வாசித்தபடி ஊர் ஊராகப் பக்தி கீதங்கள் பாடி வருவார். அன்று அவர் சியாமையின் வீட்டுக்கு வந்து ராதிகா பாபு என்ற கவியின் நீண்டதொரு பாடலே நெகிழ்ச்சியுடன் கானம் செய்தார். பார்வதி தேவியைப் பார்த்து அவளது தாயான மேனே பாடுகிற பாடல்.

என்னே இன்பச் சேதி இது! - என்
கண்ணே உமையே கவினழகே!

விண்ணேழுலகும் உனே வணங்கி
'அன்னே, அன்னபூரணியே' என,
எந்நேரமும் அமுதம் படைத்தே
தன்நேரில் புகழ் தரித்தனேயாம்! (என்னே)

முன்னே சிவனே மோகித்தாய்
''உண்ணேன் அவனேக் காணுதே'' - என
மின்நேர் மேனி மெலிவித்தாய், அ-
பன்னே* என்று பெயர் பெற்ருய்

பின்னே வந்தான் பிச்சாண்டி
''மன்னே!'' என்றவன் பின்போனுய்
''பெண்ணே வேண்டாம்'' எனத் தடுத்தேன்
கண்ணே மடையாய்த் திறந்தழுதேன்.

ஏசினர் ஊரார் உன்பதியை
'காசிலன் பேசிலன் இடுகாட்டுத்
தூசியன் திகம்பரன் தேசமிலன்
மாசில் உமையை மதிகெட்ட
தோசிக்குத் தந்தனே' என்றனரே.
ஊசியென்றே அவர் உரை வருத்த
கூசிக் குறுகிக் குமைந்து விட்டேன்.

---

* கடுந்தவம் செய்வோர் தாமுக உதிருகிற சருகை மட்டும் புசிப்பர். ஆனுல் சிவனுக்காகத் தவமிருந்த உமை, இலே (பர்ணம்)யைக்கூட உண்ணுததால் 'அபர்ணு' எனப் பெயர் கொண்டாள். பிராகிருத கொச்சையில் இது 'அபன்ணு' என்ருயிற்று. இலேயும் உண்ணுத இவள், அன்னத்துக்காகக் கப்பரை ஏந்தும் பிட்சாடனே மணந்து, பிற்பாடு அன்னபூர்ணேசுவரியாகிவிட்டாள்!

**கடவுள் உன்னிடமே இருக்கிருன், மலரினுள்ளே மணம்போல. கஸ்தூரி மான் தன் நாபியில் கஸ்தூரி இருப்பதைத் தெரிந்து கொள்ளாமல், மேய்ச்சல் தரையைச் சுற்றிச் சுற்றி வருவது போல ஏன் நடந்து கொள்கிருய்?**

— கபீர்தாசர்

ஏசியவர் இன்று கூசுகிறார்!
கூசியவள் இன்று குதுகலித்தேன்!
காசினி போற்றும் காசியிலே - ஸு
வாசினியாய் சிம்மாசினியாய்
ஆசியும் அடிசிலும் அனைத்து உயிர்-
ராசிக்களிக்கும் ராசி கொண்டாய்!
திகம்பர சாமித் திருக்கதவை
திக்பாலகரும் நோக்கி நிற்க,
ஏதலன் ஏழையன் பாதமதில்
ஈதல் இரந்து குபேரன் விழ,
மந்திரம் மயானம் என்றவனை
இந்திரன் சந்திரன் இறைஞ்சினரே!
ஆண்டியன் ஆண்டவன் ஆனது(உ)னைத்
தீண்டிய திவ்விய பாக்யமம்மா!

இதுவரை மேனையின் வாக்கால் பாடி வந்த கவி ராதிகா, இப்போது அன்னைக்காக ஆறாமல் தவித்து, ஆறாத் தவிப்பு ஆறாச் சினமாகப் பரிணமிக்கத் தம் வாய்மொழியாகவே பாடி முடிக்கிறார்:

'ஈண்டிய செல்வமும் என்னிடத்தே' என
மூண்ட செருக்கினில் மூழ்கிய உன்
நீண்ட கண்ணைச் சொந்த மகன் ராதை
வேண்டியும் மலர்த்திட மனமிலையே!

''அந்த நாளில் மாப்பிள்ளை பைத்தியம்னு ஊர்ப் பேச்சைக் கேட்டுக் கேட்டுத் தற்கொலை பண்ணிக்கலாமான்னுகூட எனக்குத் தோணும். நல்லவேளை, அப்படிச் செய்யாம விருந்தேனே, இன்னிக்கு நீங்க இத்தனை குழந்தைகள் என் சாருவை திவ்விய மாதாவாகப் பூஜை பண்ணறதைப் பார்க்கிறேனே?'' என்றாள் சியாமை. அப்புறம் மாப்பிள்ளையின் மகிமை ஊருக்குத் தெரிந்தது, சாரதையின் கரம் தீண்டியதன் பாக்கியம்தானோ என்னவோ? மேனையின் நிலையில் சியாமை இருந்தாலும், ராதிகாவின் நிலையில் நம் அம்மாவின் குழந்தைகள் ஒருகாலும் இல்லை! அவர்களை இவள் ஏங்கச் செய்ததே கிடையாதே!

ஜகத்தாத்ரி பூஜையின்போது அம்மா தேவியின் பிம்பத்தருகே வந்து நின்று விடுவாள். நீண்ட நேரம் கையைக் குவித்து, கண் குவித்து, மனம் குவித்து நிற்பாள்; பிறகு நெடு நாழிகை கையை வீசிச் சாமரம் இரட்டுவாள். மூன்று தினமும் ஊராருக்கு அன்னம் பாலிக்கப் பட்டது.

பிள்ளையைப் பறி கொடுத்து வந்திருந்த கிரீஷ் ஒரு நாள் ஏரியில் குளித்தவுடன், ஈர வஸ்திரத்துடனேயே ஓடிவந்து அம்மாவுக்கு நமஸ்கரித்தார். அம்மாவின் பாத விரல்களை மட்டும் நடுக்கத்துடன் முன்பு தரிசித்த அவர் இன்று ஆறுதல் வேண்டித் தலை தூக்கி அவளைப் பார்த்தார். அம்மாவின் முக்காடும் அப்போது சற்று விலகியது.

கிரீஷின் உடம்புக்குள் ஒரு தெய்விக மின்னல் பாய்ந்தது.

''ஆஹா, கடைசியில் அது நீங்கள் தானா, அம்மா?'' என்று கேட்டார். ஆனால் குரல் வெளியே வராமல் மனத்துக்குள்ளேயே மடங்கிக் கொண்டது. பல ஆண்டுகளுக்கு முன் கிரீஷுக்குக் காலராக் கண்டிருந்தபோது கனவிலே ஒரு தாய் வந்தாள். அகலமான சிவப்புக் கரைப் புடவை உடுத்தியிருந்த அவள் ''இந்தா, இதைச் சாப்பிடு'' என்று சொல்லிக் கொண்டு அவர் வாயிலே பிரசாதத்தைப் போட்டாள். அதன் சுவை தேவாமிருதமாக இருந்தது. கிரீஷ் விழித்தெழுந்தார். சந்தேகத்துக்கிடமின்றி இன்னமும் அவரது அடித் தொண்டையில் தித்திப்பு ஒட்டிக்கொண்டிருந்தது. காலராவும் குணமாகிவிட்டது. அன்று வந்த அதே தாயைத்தான் இந்த அம்மாவின் திருமுகத்தில் கண்டுகொண்டார் கிரீஷ்.

யோகின்—மா மூலமாக அவர் பழைய சம்பவத்தைப் பற்றிக் கேட்டு அனுப்பினார். தன்னைக் காளியாகக் கண்ட பகடித் தம்பதியிடம், ''யார் கண்டா?'' என்று மூடிமறைத்த அம்மா, பிள்ளையை இழந்து வந்திருந்த கிரீஷிடம் கருணை கொண்டாள். ''பல ஆண்டுகளுக்கு முன் அவரைக் காத்தது நானே'' என்று தெளிவாகத் தெரிவித்தாள்.

அவளிடம் கிரீஷ் பேசும் அளவுக்கு உரிமை பெற்றபோது ''உங்களை நாங்கள் அம்மா என்கிறோம்; நீங்களும் அம்மாவாகவே சொல்லிக் கொள்கிறீர்கள்! அம்மா என்றால் எந்த முறையில்?'' என்று கேட்டார்.

''எந்த முறையிலா? அம்மான்னா அம்மாதான்! நான் உங்களுக்கெல்லாம் உண்மையாகவே அம்மா!'' என்று சிறிதும் தயக்கமின்றி மறுமொழி தந்தாள் தேவி. ''குரு பத்தினியை அம்மான்னு பாவிக்கிற பழக்கம் உண்டே, அந்த மாதிரி இல்லை. அம்மா **மாதிரி**, பிள்ளை **மாதிரி**ன்னெல்லாம் நினைச்சுப் புதிசா ஏற்படுத்திண்ட உறவு முறை இல்லை இது. 'என் தாயே, மாதாவே'ன்னோ, 'என் மகனே, புத்திரனே'ன்னோ வெறுமனே வாயாலே பகட்டுப் பண்ணற விஷயமும் இல்லை. நான் உங்களுக்கெல்லாம் உண்மையான அம்மா'' என்று ஸ்பஷ்டமாகச் சொல்லி முடித்தாள் — உண்மையான அம்மாவாக நாம் நினைக்கும் பெற்ற தாயார்களும் வெவ்வேறு பிறவிகளில் பொய்யாகிவிடும்போது, அத்தனை பிறவிகளிலும் தொடர்ந்திருக்கும் ஒரே உண்மை அம்மாவுக்குரிய அழுத்தம் திருத்தத்துடன்.

(தொடரும்)



# அம்மா

ரா. கணபதி

## 32. பிள்ளைகளோடு பிறந்த வீட்டிலே

.,.....ஒரு சொற் கொண்டெனைத் தடுத்தாண்டபின் வாழ்வித்த ஞான குருவே மந்த்ர குருவே........ —தாயுமானவர்

அம்மாவின் அன்பு மழையில் கிரீஷின் புத்திர சோகம் மறைந்தது. கிரீஷுக்கு அவள் எத்துணை பரிவுடன் உபசரணை செய்தாள்? அவர் காலையில் எழுந்தவுடன் ஒரு கெட்டில் தேநீர் அருந்துவார். ஜயராம்பாடி வாசிகளுக்கும், அம்மாவின் மற்றக் குழந்தைகளுக்கும் காலையில் பானம் ஏதும் அருந்திப் பழக்கமில்லை. அந்த நாட்களில் ரொம்பவும் வசதி படைத்தவர்களே காப்பி, டீ அருந்துவர். அம்மா கிரீஷுக்குத் தேயிலைப் பொட்டணம் வாங்கிவிட்டாள். ஆனால் அந்தக் கிராமத்தில் பசுச் செல்வமே கிடையாது. இப்போது கிரீஷுக்காகப் பல வீடுகள் ஏறி இறங்கி, அவுன்ஸ் அவுன்ஸாகப் பால் சேகரித்தாள் அம்மா.

தினந்தோறும் தனது படுக்கை விரிப்பு வெள்ளை வெளேரென்று இருப்பதைப் பார்த்துக் கிரீஷ் ஆச்சரியப்பட்டார். ஒரு நாள் அம்மா ஏரிக் கரையில் அதற்குச் சவுக்காரம் போட்டுக் குமுக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் குமுறி அழுது விட்டார். மகா பாவியான தான் படுத்துறங்கும் துணியை நிர்மல மாதா தன் கையால் பிழிந்து துவைப்பதா?

கிரீஷ் உலகில் அடைந்த கசப்பான அநுபவத்தால் மக்களைப் பற்றி வெறுத்துப் பேசினர். எல்லாவற்றையும் விட்டு ஓடிவிடுவதாகச் சொன்னர். நாடகாசிரியரான அவரது பேச்சுத் திறன் அபாரமானது. மாற்றுக் கருத்துத் தெரிவித்த மற்றவர்களுக்கெல்லாம் பளிச் பளிச்சென்று விளக்கம் தந்தார். இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த அம்மா நாலே வாக்கியம் சொல்லி அனுப்பினாள்: ''உலகம்னு ஒண்ணை வித்தியாசமா நினைக்கற மட்டும்தான், அதுகிட்டே பயந்துண்டு ஓடணும். உலகத்தை ஏன் வித்தியாசமா நினைக்கணும்? பகவான் கிட்டே உண்மையான பக்தியை வளர்த்துண்டா, எதுக்கிட்டேயும் பயப்பட்டுண்டு ஓட வேண்டியதில்லை.''

சண்டப் பிரசண்டமாகப் பேசிய கிரீஷ் அதன் பின் வாய் திறக்கவில்லை. 'ஸ்வாநுபவம்' என்பதில் பிறந்த வார்த்தையின் கனம் அப்படிப்பட்டது.

கிரீஷுக்கு அப்போது துறவறம் வேண்டாம் என்று அம்மா கூறியது அவர் ஒருவரின் பக்குவத்தை ஒட்டிச் சொன்னது. இதனுல் அம்மா பரிவ்ராஜக சந்நியாசத்தை ஒப்பவில்லை என்று அர்த்தமில்லை. மகான்கள் அந்தந்தச் சீடரின் மன நிலைக்கு ஏற்ப மார்க்கம் அமைத்துத் தருவர்.

பிரபல நாடகக் கலைஞர் வந்திருக்கிருர் என்றறிந்து மக்கள் அந்த வீட்டுக்கு ஓயாமல் வந்த வண்ணம் இருந்தனர். அவர்களுக்காக கிரீஷ் பாடிக் காட்டுவார். இந்தப் பாடல்களில் ஒன்றைக் கேட்ட மாத்திரத்தில் அம்மா பாடம் பண்ணி விட்டாள். இதை அவள் தன் தீங்குரலில் அடிக்கடி பாடுவதுண்டு.

தவழ்ந்தோடுருன் எங்கள் தாமோதரன்
(தவழ்ந்து)
உவந்து வெண்ணெய் திருடி உண்டு
பயந்து பயந்து பதற்றமுடன் (தவழ்ந்து)
கோபன்ராணி நந்தன் தேவி
கோபமறிந்தே கோபாலன்
அரும்பும் அச்சத்தோடு பின்னே
திரும்பித் திரும்பிப் பார்த்த வண்ணம்
(தவழ்ந்து)
'நில்லு நில்லு' என்று பொய்யாய்
நீலவண்ணனை அதட்டி
பொல்லெனச் சிரித்து அந்த
மெல்லியல் பின் தொடர்ந்து வரத்
(தவழ்ந்து)

கிரீஷ் அம்மாவை அவதாரப் பிறவி என்று புரிந்துகொண்டார். கண்ணனேடும், ராமனேடும் சேர்ந்து வாழ்ந்தவர்களில் எத்தனை பேருக்கு அவர்களது அவதார மகிமை தெரிந்தது? சாரதா தேவியின் பெருமையை அவ்வீட்டில் அவளுடனேயே இருந்த அவளுடைய தம்பிமார் எவரும் அறிந்திருக்கவில்லை. அவர்களுக்கு பரஸ்பரச் சண்டையிலேயே ருசி, பணத்திலேயே குறி. அக்காள் கனதனவான்களான சிஷ்யர்களிடம் ஒரு வார்த்தை சொல்லித் தங்களது குச்சு வீட்டை மச்சு வீடாக்க மாட்டாளா என்கிற ரீதியில் அவளைக் கொண்டு

உலகியல் லாபம் பெறுவதில்தான் அவர்களுக்குக் கருத்து. இந்த அக்காளா அப்படிப்பட்டவள்? முன்பு லக்ஷ்மி நாராயண் காணிக்கை செலுத்திய பதினாயிரம் ரூபாயை ஒட்டாஞ்சல்லியாக ஒதுக்கியவள் அல்லவா? ஆனாலும் இப்போது அடியார்கள் வழங்கிய கையுறைகளை அவள் அடியோடு நிராகரிக்கவில்லை. தன்னைத் தேடி ஒரு பாசப் பட்டாளம் வந்திருக்கும்போது அவர்களுக்காகத் தம்பிமாரைச் செலவிடச் சொல்லலாமா? அவள் மனத்துக்குள் ஒரு தர்மமான கணக்கு இருந்தது. அதற்கேற்பச் சகோதரர்களுக்கும் சிரமம் தராமல், அதேபோதில் பக்தர்களிடமும் துராசையுடன் கைநீட்டாமல் நடந்து கொண்டாள். தம்பிகளுக்கு இதில் மிகவும் அதிருப்தி. 'காளி' என்று ஊராரும், 'கேலே' என்று அம்மா செல்லமாகவும் அழைக்கும் தம்பி காளிகுமாருக்கு வாய் பொல்லாதது. ஏதாவது உறுத்திக் கொட்டிக் கொண்டேயிருப்பார்.

சௌகரியமான சூழ்நிலையில் சாந்தமாயிருப்பதில் என்ன பெருமை? முள்ளிலே ரோஜாவாக, சேற்றிலே செந்தாமரையாக மலர்வதுதான் பெருமை. ஓயாத பிடுங்கலுக்கிடையில் அமைதியுடன் வாழ்ந்து காட்டவே வந்தவள் அன்றோ அம்மா? இப்போது பிறந்தகத்தில் இந்த இம்சை உண்டானபோதும் அமைதியாகவே இருந்தாள். இந்த நாட்களில் எத்தனை பிழிந்தாலும் கசங்காத துணிகள் இருக்கின்றனவே, அதுபோல் எத்தனை பிழிந்தெடுத்தாலும் அலுங்காமல் நலுங்காமல் இருந்தாள். பிறர் தன்னை எப்படிப் பார்க்கிறார்கள் என்பதில் இவள் பார்வை செலுத்துவதேயில்லை. அவளை அவர்கள் எப்படி நடத்தினாலும் சரி, இவள் அவர்களைப் பிள்ளைகளாகவே நடத்தி, அவர்களுக்காக உழைத்து உவகை கொண்டாள்.

சாரதா தேவியை ஏதோ பணம் காய்க்கிற மரம் மாதிரி காளி எண்ணுகிறார் என்று கிரீஷ் புரிந்து கொண்டார். தன் தெய்வ மாதாவின் மதிப்புத் தெரியாத அந்தப் பிரகிருதியிடம் சாரதையின் மகிமையை எடுத்தியம்பலானார்.

காளி மரியாதைப் பண்பே இல்லாமல் பேசினார்: "நீங்கதான் அக்காளை ஏதோ ஜகன்மாதா, லோக நாயகி, ஹா, ஹூ என்கிறேள்! நாங்க ஒரு தாய் வயத்துலே பொறந்து ஒண்ணா வளர்ந்தவாதான். எனக்கொண்ணும் இந்தப் பிரபாவமெதுவும் தெரியல்லே."

சாரதையைப் புக்ககத்து மனிதர்களான ஹ்ருதய், ராமலால் முதலியோர்



அவமதித்ததை விட, உடன்பிறப்பே அவமதித்ததை என்னென்பது?

கிரீஷால் பொறுக்க முடியவில்லை: ''ஓஹோ, உனக்குத் தெரியலேன்னு அம்மாவுக்குப் பிரபாவமில்லேன்னு அர்த்தமோ! என்னய்யா நினைச்சுண்டிருக்கே! நீ அத்யயனமும், அக்னிஹோத்ரமும் பண்ணிண்டு, மற்றவாளுக்கு வேதம் சொல்லிக் கொடுத்துண்டு, போறும் என்கிற பொன்னுன மனசோடு நிஜப் பிராமணனு யிருந்தா அம்மா பெருமை உனக்குத் தெரியும். இப்போ உனக்குக் காசைத் தவிர வேறே நினைப்பு இருக்கா? உபாத்தியாயத்தை விட்டுட்டு உழவு செய்யற நீ ஸ்வதர்மத்தையே கொன்னவன். உனக்கு அம்பாள் தன் பெருமையைக் காட்டுவளா? யாராவது ஒரு நீசன் உனக்கு ஒரு பொலி காளை தரேன்னு சொல்லிட்டா அவன் கிட்ட ஆறு மாசம் நடையா நடந்து பல்லைக் காட்டறவன் நீ. வாஸ்தவத்திலே கிடைக்காத ஒரு பொலி காளையே உன்னை இப்படி மயக்கும் என்ருல், மகா மாயையான எங்கம்மாவாலே உன்னை மயக்கி, 'இவ என் சாதாரண அக்கா தான்'னு நினைக்க வைக்க முடியாதா? உன் குற்றத்தினுலேயேதான் உனக்குத் தரிசனம் தராமலிருக்கா. இதோ பார் காளீ, உனக்கு இந்த லோகத்திலேயும் பரலோகத்திலேயும் நல்லது வேணும்னு இப்பவே போய் எங்கம்மா காலிலே விழு, உம், போ'' என்று பெரிதாகக் கூப்பாடு போட்டு விட்டார் கிரீஷ். 'என் யோக மாயையில் என்னைப் போர்த்திக் கொண்டு அறிவீனர்களுக்கு அகப்படாமலே இருக்கிறேன்' என்று கண்ணன் சொன்னதன் அடிப்படையில் பேசினுர் கிரீஷ்.

காளி அதிர்ந்து விட்டார். அக்காளிடம் ஓடினுர். ''அக்கா! நீதான் சர்வேசுவரியாமே! என் தப்பை மன்னிச்சு எனக்கு அடைக்கலம் கொடும்மா'' என்று நமஸ்கரித்தார்.

அம்மா சாவதானமாகச் சொன்னுள்: ''என் பிரிய கேளே! இது என்னடா பதட்டம் வேண்டிக் கிடக்கு? நான் உன் கூடப் பொறந்த ஜீவன். இன்னிக்கு என்ன நான் மாறிவிட்டேனு? என்னிக்கும் உன் அக்காதான் நான். என்கிட்ட வந்து, 'அடைக்கலம் கிடைக்கலம்'னு பேசலாமா?''•

இப்படி அவள் சொன்னதை நுட்பங்களே அறியாத காளி புரிந்து கொள்ள முடியுமா? திரும்பவும் கிரீஷிடம் வந்து, ''பார்த்தேளா? நீங்கதான் ஏதோ மிகைப்படுத்திண்டு இருக்கேள். அவ, தான் சர்வ சாதாரண மனுஷிதான்னு சொல்ரு'' என்ருர்.

இது உருப்படாத கட்டை என்று கிரீஷும் விஷயத்தை விட்டார்.

காளி மட்டுமில்லை. ராமகிருஷ்ணரின் அத்யந்த சீடரில் பலரும் கூட இன்னும் அவளை அவதாரமாகக் கருதவில்லைதான். 'ராமகிருஷ்ண மடம்' என்ற புண்ணிய ஸ்தாபனத்தை அப்போது நிறுவியிருந்த சந்நியாசிக் குழந்தைகளில் அனைவரும்கூட இப்போது அவளை திவ்விய வியக்தியாகக் கருதியதாகச் சொல்ல முடியாது. நிரஞ்ஜனுநந்தர்தான் முதலிலிருந்தே அவளது தெய்விகத்தைத் தாம் உணர்ந்ததுமட்டுமின்றி மற்றவர்களுக்கும் ஆணி அறைந்தாற்போல் பிரசாரம் செய்தவர். ராமகிருஷ்ணரின் 'சொந்தப் பிள்ளை' என்று கருதப்பட்ட பிரம்மானந்தரும் (ராகால்) பிற்கால விவேகாநந்தரான நரேனும் இப்படி வெளிப்படப் பேசியதில்லை. காரணம், அவர்கள் அம்மாவை எண்ணிய மாத்திரத்தில் அப்படியே கரைந்து போய்விடுவார்கள். உள்ளுக்குள்ளே ஓர் ஆனந்தாதீதத்தை அமுது கொண்டு, வெளியே அழுது கொள்வதைத் தவிர அவர்களால் அம்மாவைப் பற்றிப் பேச முடியாது. நரேனுவது அப்போது சமாளித்துக் கொண்டு அவளிடம் வந்து, சுவாதீனமாகப் பேசுவார். ஞான சிம்மமான பிரம்மானந்தர் அவள் எதிரே வரவே நடுங்குவார். பிற்காலத்தில் ஒரு முறை பிரம்மானந்தர் சொன்னுர்: ''மகா யோகிகளும் அறிய முடியாத அம்மாவை யாரே புரிந்து கொள்ள முடியும்? ராமகிருஷ்ணரின் பூஜையை சகஜமாக ஏற்றவள் அம்மா. அவதார புருஷர் செய்யும் ஆராதனையை சாமானிய மனிதர் எவராவது 'ஜீரணிப்பது' சாத்தியமா? அம்மாவின் உள்ளே மகா சமுத்திரமாக அலைமோதும் அநுபூதி; வெளியிலே ஒரே அமைதி மயம். அவதார புருஷர்களாலும்கூட திவ்விய பரவசங்களைக் கட்டுப்படுத்த முடியாமல் போவதுண்டு. ஸ்ரீ ராமகிருஷ்ணரே வெளிப்படையாகப் பரவச நிலைகளை எவ்வளவோ முறை காட்டியதுண்டு. அம்மாவைப் புரிந்து கொள்வதுதான் மகா கடினம். தன்னுடைய தாயன்பைக் காட்டி நம்மையெல்லாம் அவள் ஏமாற்றியிருக்கிருள். அம்மாவின் அநுக்கிரகம் பெற்ருல் எளிதாகவே மோக்ஷசாம்ராஜ்யம் பெற்றுவிடலாம்.''

விவேகாநந்தர் ஆவேசம் பீற அம்மாவைப் பற்றித் தமது சகாக்களுக்கு இப்படி எழுதினுர்: ''ராமகிருஷ்ணரின் நினைவு உலகுக்கு மறந்தாலும் மறக்கட்டும், அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனுல் மக்கள் அம்மாவை மறந்துவிட்டால் அது உற்பாதமேயாகும்.... நீங்கள் யாரும் அம்மாவைப்

புரிந்து கொள்ளவில்லை. என்மீது ராம கிருஷ்ணர் காட்டும் அருளைவிட அம்மா கொட்டுகிற கிருபை லக்ஷம் மடங்கு பெரிது என்பேன். அம்மாவை எண்ணு கையில், 'இவளோடு பார்த்தால் இந்த ராமகிருஷ்ணர் கூட எம்மாத்திரம்?' என்று என்னை நானே கேட்டுக் கொள் கிறேன். நான் குறுகிய அபிமான வெறி பிடித்தவன் என்று வைத்துக் கொண்டாலும் சரி, இதுவே என் அபிப் பிராயம். ராமகிருஷ்ணர் தெய்வமா, மனிதனா என்பதைப் பற்றி நீங்கள் உங்கள் விருப்பப்படி பேசலாம். ஆனால் சோதர, நம் அம்மாவிடம் ஒருவன் பக்தி பூணவில்லை என்றால் அவனை 'வெட்கம், வெட்கம்' என்று தூற்ற வேண்டும்.''

அம்மாவின் பெருமை இது! ஆனா லும் ''ஒரு பெண்ணின் மதமே நாணம் தான்'' என்று ராமகிருஷ்ணர் சொல்லி யிருந்ததால் பெருமையை அவள் வெளிக் காட்டவில்லை: அவள் பரவச அநுபவங் களை மிக மிக, அற்பமாகவே வெளிப் படுத்தியதால், அவளுக்குப் பேரநுப வங்கள் கிட்டவில்லை எனலாமா? ரவா சொஜ்ஜியும், சேமியா கேசரியும் செய் தால் அதில் முந்திரிப் பருப்புப் போடு வதுண்டு. முந்திரிப் பருப்பையே ஹல்வா செய்தால் அதில் முந்திரிப் பருப்புப் போடுவார்களா? பாதம் ஹல்வாவுக்கு முந்திரியின் தாளிதம் வேண்டியதில்லை. மற்றவர்களின் சாதனைகளில் முந்திரி யாக அதீத அநுபவங்கள் வந்தன. சுபாவமாகவே துரீயமாக, பாதம் ஹல் வாவாக, இருந்த சாரதைக்கு இது எதற்கு? அதன் ருசியை அதிகப்படுத்த இடம் ஏது? அதிகப்படுத்த முடியாது, திகட்டிப் போய்விடும் என்பதால் அதற்கு நேர் எதிரான ஏதோ ஒரு காரத்தையும் கூட உண்பதுபோல் அம்மா சமாதிக்கு நேர் எதிர்த் திசையி லேயே தன்னை அதி சாமானியமாகக் காட்டிக் கொண்டாள்.

ஆனால் இச்சரிதையில் அவளது சமாதி அநுபவங்களை அடிக்கடி பார்ப்பது போலத் தோன்றும். தேவி அறுபத்தி யாறுண்டுகள் உலகில் உலவினாள். இந்த நீண்ட காலத்தில் ஆயிரக்கணக்கான முறை அதீத அநுபவங்கள் வெளிப்பட இடமுண்டு. இன்றைக்கும்கூடப் பிரதி தினமும், ஏன் ஒரு தினத்திலே பல முறைகூட, 'பாவசமாதி' பரவச அநு பூதி ஆகியவற்றைப் பெறும் சாதகர்கள் உள்ளனர். இந்தக் கணக்கில், 'சாதகி' என்பதைவிட உயர்ந்த சாத்தியப் பொருளேயான அம்மா லட்சோப லட் சம் முறை மகா பாவங்கள் பெற்றிருக்க வேண்டும். ஆனால் அறுபத்தியாறு

> சூரிய வெளிச்சம் எங்கும் சமமாகத்தான் விழுகிறது. ஆயினும் தண்ணீர், கண்ணாடி, மெருகிட்ட உலோகம் ஆகியவற்றில் அவ்வொளி நன்கு பிரதிபலிக்கிறது. தெய்விக ஒளியும் அப் படியே. அது எல்லாரிடத்தும் சமமாகவே பாய் கிறது. ஆயினும் தூய மனம் படைத்த சாதுக் களே அவ்வொளியை நன்கு பிரதிபலிக் கிறார்கள். — பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

ஆண்டுகளில், (மந்திரோபதேச சமயங் களில் தன் தெய்வீகத்தைத் தப்பாமல் வெளியிட்டது தவிர) அவள் பேரநுப வங்களைக் காட்டியது ஐம்பது முறைக்கும் குறைவாகவே இருக்கும் எனலாம். வானத்துத் தாரகைகளுக்கிடையே கோடாநு கோடி காதங்கள் இடை வெளி இருந்தாலும் நம் கண் பார் வைக்கு அவை நெருக்கமாகத் தெரிவது போல், அம்மாவின் வாழ்க்கையை இறுக்கித் தரும் இச்சரிதையில் அவளது பரவசங்கள் அடிக்கடி நிகழ்வதுபோல் தோன்றும்.

அதெப்படியாயினும் அவள் செய்த காரியம் பெரியது. என்றென்றும் அவள் செய்யவேண்டிய காரியமும் பெரியது. விவேகாநந்தர் கூறியது போல், ராம கிருஷ்ணரை மறந்தாலும் மற்ற மகா புருஷர்களைப் பார்த்து சாதகர்கள் உய்வு பெறுவர். ஆனால் சாமானிய மக்கள், குறிப்பாக மாதர் குலம், நம் மாதாவை மறந்தால் விபரீதமே ஆகும்!

இச்சரிதையில் இனி அவள் நிகழ்த் தப் போகும் அவதாரப் பணி ஒருபுற மிருக்க, இப்போதே அவளால் ஒரு பெரும் பணி மௌனமாக நிறைவு பெற்றிருந்தது. ராமகிருஷ்ணரின் மறை வுக்குப் பின் இளம் சந்நியாசிகள் நெல் லிக் காய் மூட்டைபோல் பிரிந்து போகா மல் சேர்ந்து நின்றதற்குக் காரணம் அம்மாதான். இவளுடைய அன்புதான் அவர்களை ஒன்றுபடுத்தி வைத்து, ராம கிருஷ்ண மடத்தைத் தோற்றுவித்தது.

மடத்தை இவர் தோற்றுவித்தாலும் அந்த மடத்துச் சந்நியாசிகள் இவ ளிடம் ஒருவிதத்தில் தோற்றுத்தான் போனார்கள்! அவர்கள் மிகுந்த யோசனையுடன் தங்களுக்குச் சூட்டிக் கொண்ட அழகிய சந்நியாச நாமங் களைச் சொல்லவே அம்மாவால் முடி யாது! ''சந்நியாசம்னா அப்பா—அம் மாவை விட்டுட்டுப் போறதுதானே? உங் களைச் சந்நியாச நாமத்தாலே கூப்பிட றதுன்னா எனக்கு மனசு புண்ணாறது'' என்பாள் அவள். ஒருமுறை வீரேசுவரா னந்தர், 'எங்கள் துறவுப் பெயரையே உங்களால் சொல்ல முடியவில்லையே! எங்களை எப்படிப் பார்க்கிறீர்கள்?' என்று கேட்டார். 'பிள்ளைகளாக'

இரவில் வானத்தில் எண்ணற்ற நட்சத்திரங்களைப் பார்க்கிறாய். சூரியன் உதித்தவுடன் அவை அனைத்தும் பார்வையிலிருந்து மறைகின்றன. ஆனபடியால் நட்சத்திரங்களே கிடையாது என்று சொல்வாயா! இரவு வந்தால் அவை கண்ணுக்கு மறுபடியும் தெரியும். உனது அஞ்ஞானத்தின் பெரிய வெளிச்சத்தில் ஈசுவரனைக் காண முடியாததால், கடவுளே கிடையாது என்று சாதிக்காதே. உனக்கே ஞானதசை வரும்போது அவனைக் காண்பாய்.

— பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

என்று அவள் கூறுவாள் என்று அவர் எதிர்பார்த்தார். அம்மாவோ ''உங்களை யெல்லாம் நாராயணனாகப் பார்க்கிறேன்'' என்றாள். ''அப்படின்னாப் பிள்ளைகளாகப் பார்க்கலியா?'' என்று அவர் கேட்டார். ''நாராயணனாகவும் பிள்ளைகளாகவும் சேர்த்துப் பார்க்கிறேன்'' என்றாள் அம்மா. இவளிடம் தெய்விகமும் மனிதத்தன்மையும் ஒன்றிக் கிடந்ததுபோலவே இவளது உறவு முறைகளும் இருந்தன!

இவள் எப்படிப் பார்த்தாலும் இவளை மிகப் பெரும்பாலான சீடர்கள், திவ்விய மாதாவாக இல்லா விட்டாலும் அம்மாவாகவே பார்த்தனர் — அதாவது பெற்ற தாயாகப் பார்த்தனர். மகாதேவானந்தர், பஞ்சானன கோஷ் முதலியவர்கள் அவளைப் பார்த்தபோது தங்களைப் பெற்றெடுத்த ஜனகமாதாவின் உருவத்தையே கண்டிருக்கின்றனர். இன்னொரு சிறுவன் இவ்விதமே அம்மாவைத் தன் பெற்ற தாயின் வடிவாகப் பார்த்து, மிகுந்த சுவாதீனத்துடன் அவளுடனேயே உண்ண அமர்ந்தான். உண்ண அமர்ந்ததும் உரிமை இன்னும் அதிகமாயிற்று. ''நீயேதான் ஊட்ட வேண்டும்'' என்றான். அம்மாவும் அவ்விதமே செய்தாள்!

பெற்ற பிள்ளையின் மனத்தையும் வயிற்றையும் ஒரு தாய் எப்படி அறிந்திருப்பாளோ, அப்படியே இவளும் அவர்களைப் பூரணமாக உள்ளும் புறமும் அறிந்திருந்தாள். முன் பழக்கமில்லாத பிள்ளைகள் வந்தாலும், அவர்களுக்கு எந்த உணவு வகை மிகவும் பிடிக்குமோ அதையே தயாரிப்பாள். பரிமாறும்போது மிகச் சரியாக அவரவருக்குப் பிடித்த பதார்த்தங்களையே நிறையப் போடுவாள்! அவர்களுக்கு அதிசயமாக இருக்கும்!

இப்படிப்பட்ட அம்மாவிடம் ஒரு படு அசடான பிள்ளை, ''நான் உங்களை அம்மான்னு கூப்பிடறேன். இருந்தாலும் அது சரிதானான்னு தெரிஞ்சுக்கணும்'' என்றது.

அம்மா சற்றும் சிணுங்காமல் ''ஏண்டாப்பா! நான் உன்னோட மெய்யான அம்மா இல்லேன்னா, நான் வேறு யாரு? உன் உண்மை அம்மாதான் வேறு யாரு?'' என்றாள்.

''நீங்க அப்படிச் சொன்னாலும் எனக்குப் புரியவில்லே'' என்று கூறிய அசட்டுப் பிள்ளை, அசத்துப் பிள்ளையாகவே மாறி, ''பெற்ற தாயைப் பார்க்கறச்சே உண்டாகிற உணர்ச்சி உங்ககிட்டே எனக்கு உண்டாகலே'' என்றது.

''ஆகா, என்ன பரிதாபம்'' என்று அம்மா பெருமூச்செறிந்தாள். ''மகனே, ஏக வஸ்து ஒண்ணு இருக்கு. அதுதான் எல்லாத்துக்கும் அம்மா, அப்பா'' என்று கூறி முடித்தாள்.

பிரம்மசாரி ராஸவிஹாரி கேட்டான்: ''அப்படீன்னா நீங்க **எல்லாருக்கும்** அம்மாவா?''

''ஆமாம்'' என்றாள் அம்மா கெட்டியாக.

''**எல்லாத்துக்கும்கூட** அம்மாவா?''

''ஆமாம் ஆமாம் ஆமவே ஆமாம்.''

ஜகத்தாத்ரி பூஜை முடிந்த பின் பசங்கள் அம்மாவிடம் கண்ணும் கண்ணீருமாக விடை கொண்டனர்.

மாட்டு வண்டிகள் வெகு தூரம் சென்ற பின் காளி கிருஷ்ணன் உடன் இருந்தவரிடம் கேட்டான்: ''அதோ பாடுஜ்யேபுகுர் ஏரிக் கரையிலே நின்னுண்டு இங்கேயே பார்க்கிறது...?''

ஆம், அம்மாதான்!

காளி கிருஷ்ணன் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான்: 'அம்மாவுடைய அன்புபுயல் என்றால் புயல்தான். ஒருத்தரை அடியோடு பிடுங்கித் தன்னிடம் சாய்த்துக் கொள்கிறாளே! என்னைப் பெற்ற தாயிடம் எத்தனையோ ஆசை வைத்திருந்தேன் என்பது உண்மைதான். ஆனால் இங்கு பார்த்தால், சென்று போன ஜன்மங்கள், வரப்போகும் பிறவிகள் எல்லாவற்றுக்கும் அம்மாவாக இருந்த, இருக்கப் போகிற சாசுவத மாதா தெரிகிறாளே?'

அவர்களுடனேயே அம்மாவும் வந்திருக்கலாம். சிஷ்யர்கள் அவளுக்கு ஆசிரமம் கட்டிக் கொடுத்து, அவளை உட்கார்த்தி வைத்து ஏவல் செய்யத் தயாராக இருந்தனர். ஆனால் இதையெல்லாம் ஏற்க அவள்தான் தயாராக வில்லை. இரண்டரை ஆண்டுகள் ஜயராம்பாடியிலேயே அநுதாபம் இல்லாத பிறந்த வீட்டாருக்காக உழைத்துக் கொண்டு கிடந்தாள். கடைசி வரை இப்படியே பிறந்த வீடும், 'பிள்ளைகளின்' வீடுமாக மாறி மாறி இருந்தாள்.

அம்மாவுக்கு ஏறக்குறைய வயசு நாற்பதானபோது, கிராமத்தை விட்டு கல்கத்தாவுக்கு வந்து, அவ்வப்போது தங்கலானாள். நாலு தலைமுறைகளுக்கு

முந்தி பாரத மக்களின் சராசரி ஆயுள் இன்றைவிட மிகக் குறைவு. அஞ்சாறு வயசிலேயே கல்யாணமாகிவிடும். நாற்பது வயசிலேயே கிழக் கோஷ்டியில் சேர்ந்து விடுவார்கள். அம்மாவும் இப்படிக் கிழக் கோஷ்டிக்கு வந்த பின்தான் வெளியடியார்கள் அவளை ஓரளவு பார்க்க அநுமதிக்கப்பட்டனர்.

பக்தர் விருப்பத்துக்கிணங்கி பேலூரிலிருந்த நீலாம்பர் பாபுவின் தோட்ட வீட்டுக்கு வந்து தங்கினாள் அம்மா.

இங்கு ஒருநாள் காளிகிருஷ்ணன் அம்மாவின் அன்பு வெள்ளத்தின் ஆழத்தைக் காணும்பேறு பெற்றான். அவனைக் கண்டவுடன் அம்மா, "மகனே! எப்படிக் 'கஷுக் முஷு'க்குன்னு இருந்தவன் இப்படி இளைச்சுப் போயிட்டியே! நீ மடத்திலேயே இருக்க ஆரம்பிச்சுட்டே! கூட இருக்கிற குருபாயிக்கள் என்ன இருந்தாலும் புருஷப் பசங்க. அவா எப்படி உன்னைக் கவனிச்சுப் போஷாக்குப் பண்ணுவா? இங்கே எனக்கு யாரையும் வைச்சுக்க முடியாமலிருக்கு மகனே! இப்படி இளைச்சுட்டியே! மடத்தை விட்டுட்டு ஆத்துக்குப் போ! அகத்து மனுஷாதான் உன்னை நன்னாப் பார்த்துப்பா! உடம்பு தேறின விட்டு மடத்துக்கு வா" என்றாள்.

வீட்டைத் தொலைத்து முழுகி, துறவு பூண அவாவிய காளி கிருஷ்ணனுக்கு அழுகை வந்தது. "வீட்டிலே போய் என்ன பண்ணறது?" என்று விம்மினான்.

"ஏன், மடத்துலே பண்ணற தியானம், ஜபம், பூஜை, பாராயணம் எல்லாத்தையும் ஆத்திலே பண்ணேன்."

தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்தான் காளி கிருஷ்ணன். அம்மா ஜபம் செய்யச் சொன்னாளே! தனக்கு ஒரு மந்திரமும் தீக்ஷையாக வில்லையே! விஷயமறிந்த யோகானந்தர், "அம்மாகிட்டே விஞ்ஞாபனம் பண்ணிக்கோ, அம்மாவே ஜபம் எடுத்து வைப்பா" என்றார்.

ஆனைப்பட்ட அம்மாவிடம் மந்திரோபதேசத்துக்குப் பிரார்த்திப்பதா என்று தயங்கினான் காளிகிருஷ்ணன். பிறகுதான் யோகானந்தர் சொல்லத் தெரிந்தது, அநேகமாக மடத்திலிருந்த எல்லோருமே அம்மாவிடம் உபதேசம் பெற்றிருக்கிறார்கள் என்பதும், இந்த உண்மை பரம ரகசியமாகக் காக்கப் பட்டது என்பதும்.

அம்மாவிடம் மந்திரம் கோரினான் காளிகிருஷ்ணு.

பெய்யெனப் பெய்யும் மழையாக அந்த அருள்மூர்த்தி உடனே தீக்ஷை அளித்தாள். ஆனால் காளிகிருஷ்ணனுக்கு மனத்தில் சிறிய உறுத்தல் உண்டாயிற்று. அம்மா எடுத்து வைத்த மந்திரம் அவனது இஷ்ட தெய்வம் குறித்ததல்ல. "பிள்ளையே! இப்போ நான் உனக்குத் தந்த மந்திரம்தான் உனக்கு அதைவிட நல்லது" என்று தீர்மானமாகக் கூறினாள் அம்மா. காளி கிருஷ்ணனுக்குள் ஓர் அதிசயம் நடந்தது. அவனது சாதனை மார்க்கம் அந்தக் கணமே சூரியோதயம்போல் புத்தொளி பெற்றது. பழைய அபிப்பிராயங்கள், அபிமானங்கள், சித்தாந்தங்கள் யாவும் சூரியோதயத்திலே நட்சத்திரங்கள் போல் மறைந்தன. அம்மா தந்த 'இஷ்டா' அவனை நிரப்பி ஆட்கொண்டு விட்டது!

காளி கிருஷ்ணனின் முகவாயைப் பிடித்து அம்மா விடை கூறினாள். அவன் தாய்ப் பசுவைப் பிரிந்த கன்றுபோல் பாசத்தின் ஈரத்தில் கனத்த மனத்துடன் பரிசில் கரைக்கு வந்தான். பூஞ்சிதறலாகத் தூறல் விழுந்தது. காளிகிருஷ்ணன் பரிசில் பிடித்துக் கங்கையில் மிதந்து வருகையில், நிலாம்பர் பாபுவின் வீட்டுக்கு எதிரே வந்தபோது தன்னை அறியாமல் தலையைத் தூக்கிப் பார்த்தான். அந்த வீட்டு வெளி மாடியில் அம்மா தூறலில் நின்றுகொண்டு பரிசலையே பார்த்துக் கொண்டிருந்தாள். காளி கிருஷ்ணனின் இதயம் விம்மியது. தாபமெல்லாம் ஓடித் தண்ணென்று ஆயிற்று.

"அம்மா எத்தனை நாழியாக மழையிலே நிக்கிறேள்! உங்களோட வாத ரோகத்துக்கு இது மகா கெடுதலாச்சே! உள்ளே வரமாட்டேளா?" என்று கத்தினாள் கோலாப்-மா.

"என்னை விட்டுப் போகக் குழந்தைக்கு மனசே இல்லை. அதனோட உணர்ச்சி எனக்குத்தான் தெரியும். அதுதான் பார்த்துண்டே நிக்கறேன்" என்றாள் அம்மா, தன் கண்களும் தூறல் பொழிய.

கங்கைக் கரையில் கங்குகரையற்ற கனிவுக் கடலாக நின்றாள்! (தொடரும்)

நீங்கள் ஓர் இல்லத்தரசியோ—
நாகரிக கல்லூரி வனிதையோ
உங்கள் எழில்மிக்க
சருமத்தை, மிருதுவாகவும்,
புத்துணர்ச்சியுடனும்,
பாதுகாப்பது சந்திரிகா
ஆயுர்வேதிக் டாய்லெட்
சோப் ஒன்றேதான்.




aries

# சந்திரிகா

## ஆயுர்வேதிக் டாய்லெட் சோப்

சந்திரிகா பிராடக்ட்ஸ் கோயம்பத்தூர்-2. சென்னை-10.

ளாவது ஆகும். அதுக்குள்ள இந்த 'சம்போ மகாதேவ தேவா'வை வைத்துக் கொண்டு காலம் தள்ளலாம். பப்ளிசிடிக்கு பப்ளிசிட்டியு மாச்சு!''

ஆக, அப்போது கூடைக் கிராப்புத் தலை யர்களாகப் பிரிந்த மாலி, பரசு, சுப்பாமணி எல்லோரும் செல்லப்பாவின் 'பாணி'யைப் பின்பற்றத் தொடங்கினர்.

செல்லப்பா மொட்டைத் தலையும் ருத்தி ராட்ச மாலையுமாக வீட்டுக்குள் நுழைந்த போது, ''யாரய்யா அது? இங்கே தர்மம் ஒன் றும் போடுகிறதில்லை'' என்று அவன் தகப்ப னார் சம்பூர்ணம் விரட்டிக் கொண்டு வந்தார்.

''அப்பா, நான்தானப்பா, உங்கள் செல் லப்பா!'' என்று அவனே அறிமுகம் செய்து கொள்ள வேண்டி வந்தது. சம்பூர்ணம் திணறிப் போய்க் கத்தினார். ''என்னடா கோலம் இது?''

''காலம் செய்த கோலம் அப்பா!''

''உன் அம்மா தினம் வாசலில் போடற கோலம்தான் அலங்கோலமா யிருக்கு. உன் கோலம் அதைவிட மோசமா இருக்கேடா செல்லப்பா! இது என்னடா பைத்தியக்கார வேஷம்? உனக்குப் பைத்தியம் பிடிச்சுப் போச்சா?''

இதே கேள்வியை வேறு யாரேனும் கேட் டிருந்தால் செல்லப்பா அவன் முஷ்டியால் கேட்டவரின் முகத்தில் முத்திரை போட் டிருப்பான். கேட்டது அப்பா. எப்படியப்பா அடிக்க முடியும்!

''டேய் உன்னோட புஸு புஸு கிராப்பும் ஸைட் பர்ன்ஸும் பார்க்கச் சகிக்கலை என்று சொன்னேன். உண்மைதான். அதுக்காக இப் படியாடா மொட்டை அடிச்சுண்டு பரதேசி யாட்டம் நிக்கணும்? உனக்கு எவண்டா வேலை கொடுப்பான்? எவண்டா பொண் கொடுப்பான்?''

செல்லப்பாவின் ஆறு வயதுத் தம்பி டகுபடி (ரகுபதி), அம்மா அபீதகுசாம்பாள், பாட்டி எல்லோரும் இதற்குள் ஹாலில் பிர வேசித்துச் செல்லப்பாவின் (அலங்)கோலத் தைக் கண்டு மூர்ச்சை போட்டு விழாத குறைதான்.

''ஏண்டா செல்லம், மண்டைக்கு உள்ளே தான் ஒண்ணுமே இல்லேன்னு நீ பேசினத் தெரியறதே. வெளியேயும் ஒண்ணுமில் லேன்னு பார்த்தாலே தெரிஞ்சுக்கணுமா?'' என்றாள் அம்மா.

''உன்னைப் பார்த்தா உங்க தாத்தாவோட ஞாபகம் வரது எனக்கு!'' என்று பாட்டி கண்களைத் துடைத்துக் கொண்டாள்.



''அண்ணு, உலகம் உருண்டை. உன் மண்டையும் உருண்டை. என் பந்தும் உருண்டை'' என்று டகுபடி (கூட!) செல்லப்பாவைக் கேலி பண்ண, ''உன் தலே மண்டை!'' என்று கையை ஓங்கிக் கொண்டு அவனே அடிக்கப் போஞன் செல்லப்பா.

டகுபடி ஓடி பாட்டியின் பின்ஞல் ஒளிந்து கொள்ளப் போஞன். பாட்டி ''நான் மடிடா. என்னேத் தொட்டுடாதே!'' என்று ஒதுங்கிக் கொள்ளவே, ''நிலவைப் பார்த்து வானம் சொன்னது என்னேத் தொடாதே!'' என்று கத்திக் கொண்டே உள்ளே ஓடி விட்டான் டகுபடி.

''குடும்பத்தில் ஒருவன் சந்நியாசியாகப் போகக் கொடுத்து வைக்கனும்டா, குழந்தே!'' என்ருள் பாட்டி.

''ஐயையோ, நான் சாமியாராயிடலே பாட்டி, ஐ ஆம் நாட் எ சந்நியாசி!''

''பின்னே எதுக்குடா கழுத்திலே ருத்திராட்சம்?''

''சும்மா, வேஷம் போட்டுக் கொண்டால் சரியாப் போட்டுக்க வேண்டாமா? அதுக்குத் தான்!''

''எப்படிடா இது மாதிரி ஒரு காரியம் செய்யணும்னு தோணித்து உனக்கு?''

''என்னப்பா இது, பத்திரிகைக்காரர் மாதிரி பைத்தியக்காரக் கேள்வி கேட்டுண்டு! இது ஓர் இயக்கம். அசோஸியேஷன் ஃபார் சிவா கான்ஷியஸ்னெஸ்னு வைச்சுக் கோங்கோ. நாளேக்கே இது பெரும் இயக்கமா வளர்ந்துடும். நான் பெயரைக் கூட இப்போ மாத்திக்கிண்டு சிவபாதம்னு வச்சுக்கலாம்னு பார்க்கிறேன்!''

''என்னேக் கேட்டா நீங்க ஆடற ஆட்டத்துக்கு நீங்க எல்லோருமே ஆடியபாதம்னு வச்சுண்டுடலாம்!''

''அப்பா! எனக்கு அர்ஜண்டா இருநூறு ரூபாய் தேவை. தயவு செய்து இல்லேங்காமக் குடுத்துடுங்கோ!'' என்று விண்ணப்பித்துக் கொண்டான் செல்லப்பா.

இல்லேயென்ருல் விட்டுவிடப் போவதில்லே என்று அவருக்குத் தெரியும். அதனுல் ரூபாயைக் கொடுத்து ''ஒழி!'' என்று ஆசீர்வாதமும் செய்தார் சம்பூர்ணம்.

**ம**றுநாள் காவி வஸ்திரங்களும் ருத்திராட்ச மாலேகளும் விபூதி டப்பாக்களும் மாலியின் வீட்டு மொட்டை மாடியில் அமர்க்களப்பட்டன. கல்லூரி நண்பர்கள் கிட்டப்பா, சாம்ராஜ், ஜெர்ரி என்கிற ஜெயராம் எல்லாரும் கூடியிருந்தார்கள்.

''இதோ பாருங்கள்! நாளேக்கு ஜெமினியிலிருந்து நம் ஊர்வலம் ஆரம்பிக்கும். எல்லாரும் தயாரா வந்துடணும்!'' என்ருன் செல்லப்பா.

மாலி எழுந்திருந்து, ''செல்லப்பா! ஊர்வலத்துக்கு அவர்கள் மாதிரி டோலக், பக்கவாஜ், எல்லாம் வேண்டாம். நமக்குன்னு ஒரு வாத்தியம் வேறே வேணும்!'' என்ருன்.

''ஒய் நாட் தவில்?'' என்ருன் பரசு.

''எக்ஸலன்ட் ஐடியா! வாட் அபௌட் ஹிப்பீஸ்? கிடைச்சாங்களா இல்லேயா?''

''கிடைக்காமையா? மாலி நாலு பேரைத் தயார் பண்ணி வச்சிருக்கான். தலேக்கு ஒருக்ளீன் ஷேவ் பண்ணிக் கூட்டிண்டு வரேன்னு போயிருக்கான். இப்போ வந்துடுவான்.''

**ம**றுநாள் மாலே நாலு மணிக்குத் தவில் சத்தம் காதைப் பிளக்க, சம்போ மகாதேவ தேவா இயக்கத்தின் காவி 'பானர்'களே முன்ஞல் இரண்டு பேர் பிடித்துக் கொள்ள, சுமார் அறுபது பேர் நாமசங்கீர்த்தனம் மாதிரி, சம்போ மகாதேவ தேவா — சிவ சம்போ மகாதேவ தேவா என்று இயக்கத்தின் 'தீம் ஸாங்'கை உரத்த குரலில் பாடிக்கொண்டு வந்தார்கள். தவில் சத்தத்தில் அது அமுங்கிப் போய்விடாமல் இருக்க, தொண்டையைக் கிழித்துக் கொண்டு கத்திஞர்கள், செல்லப்பா மாலி, ஜெர்ரி, ஹிப்பிகள் எல்லாம்.

போட்டோ எடுக்கத் தெரிந்தவர்கள் எல்லாம் போட்டோ எடுத்தனர். மூவி காமிராவில் இரண்டு வெளி நாட்டுப் பிரயாணிகள் ஆரம்பத்திலிருந்து நிகழ்ச்சிகளேப் படமெடுத்துக் கொண்டிருந்தனர். மவுண்ட்ரோட்டில் போக்குவரத்துத் தடைப்பட்டது. போகிற வருகிற ஜனங்கள் எல்லாம் வேறு கும்பல் கும்பலாகச் சேர்ந்து கொள்ள, ஊர்வலம் பெரிதாக நீண்டு விட்டது.

பஸ்ஸில் போய்க் கொண்டிருந்தவர்கள் கழுத்து வலிக்க வெளியே தலே நீட்டி ஊர்வலத்தைப் பார்த்தார்கள். ''எல்லாம் கல்லூரி மாணவர்கள் ஸார். நம்பவே முடியலே, இல்லே?'' என்று கேட்டார் ஒருவர்.

''என்னமோ ஸார், அவங்களுக்குத் 'தம்' அடிக்க இது ஒரு புதிய வழி. புது இயக்கம். தம் மாரோ தம்!'' என்று ஒருவர் பாட்டுப் பாடிக் கிண்டல் செய்தார்.

செல்லப்பாவின் லட்சியம், கூட்டம் அண்ணு சிலேயை அடைந்ததும் நிறைவேறி விட்டது போல இருந்தது. அதோடு அங்கே ஊர்வலத்தை முடித்துக் கொள்ளலாம் என்று செல்லப்பா அறிவித்தான்.

பத்திரிகை நிருபர்கள் படம் எடுத்தார்கள். பேட்டி கண்டார்கள்.

''இப்படி ஓர் இயக்கம் ஆரம்பிக்க வேண்டும் என்று எப்போது உங்களுக்குத் தோன்றியது?''

''எல்லோரும் இப்படி ஹரே ராமா இயக்கத்தில் மூழ்கிவிட்டால் அப்புறம் சிவனேப் பற்றி நினேக்கிறவர்கள் யார் என்று ஒருநாள் எனக்குத் தோன்றியது. மர்யையான இந்த உலகத்தில், நாளே நாம் போய்ச் சேரப் போவது எங்கே? ருத்ரன் தாண்டவமாடும் மயான பூமி. அதனுல் அவனே இங்கேயே வழிபட ஓர் இயக்கம் தோன்றிஞல் எத்தனே பேருக்குச் சௌகரியமாய் இருக்கும் என்று யோசித்தேன். என் நண்பர்கள் எல்லாம் என்னுடன் ஒத்துழைத்தார்கள்.''

''உண்மைதான் மிஸ்டர் செல்லப்பா! நீங்கள் சிவபாதர் என்று பெயர் மாற்றிக் கொள்ளப் போவதாகச் சொல்லுகிருர்களே, மெய்யாகவா?''

''என் ஃபாதர் எனக்கு வைத்த பெயர் செல்லப்பா. நான் வைத்துக் கொள்ளப் போகும் பெயர் சிவபாதர்.''

''உங்கள் நண்பர்களும் பெயர் மாற்றிக் கொள்ள மாட்டார்களோ?''

''நிச்சயம், நிச்சயம். ஆளையே மாற்றிக் கொண்ட பிறகு பெயரை மாற்றிக்கொள்வதா பெரிய காரியம்?''

''உங்கள் இயக்கத்தின் நோக்கம் என்ன?''

''சிவ நாமத்தைப் பரப்புவது.''

நிருபர்களின் 'சுவை'யான கேள்வி பதில்களெல்லாம் பத்திரிகைகளில் புகைப்படங்களுடன் வெளியான பிறகு செல்லப்பாவும் அவன் சகாக்களும் மிகவும் பிஸியாக இருந்தார்கள். ஒரொரு நாளைக்கு ஓரொரு இடத்தில் பஜனை, கூட்டம் என்று நேரமே போதவில்லை அவர்களுக்கு.

செல்லப்பாவின் அம்மா அபீதகுசாம்பாளுக்கோ ஆத்திரமான ஆத்திரம். ஒரு வேலை பார்த்துக் கொண்டு ஒரு கல்யாணம் பண்ணிக் கொண்டு, பிள்ளையாய் லட்சணமாய் இராமல், இது என்ன சாமியார் வேஷம் வேண்டியிருக்கிறது என்று அலுத்துக் கொண்டாள்.

''ஏண்டா செல்லப்பா! இப்படி எத்தனை நாளைக்குத்தான் மொட்டைத் தலையாய் உட்கார்ந்திருக்கப் போகிறாய்?'' என்று கேட்டாள் பொறுக்க மாட்டாமல்.

''என்னம்மா இது! தலையை வளர்த்துக் கொண்டால் இது என்னடா அசிங்கமாய் இருக்கிறது, வெட்டித் தொலைடா என்கிறீர்கள். ஒரேயடியாய் வெட்டித் தொலைத்தால் இது என்னடா சாமியார் வேஷம் என்கிறீர்கள். உங்களிடம் எப்படிச் சமாளிப்பது என்று தெரியவில்லை.''

''இந்த விதண்டவாதம்தான் வேண்டாம் என்கிறது! சம்மரில் சம்மர்கிராப் வெட்டிக் கொள்ளலாம் இல்லையா?''

''ஆமாம், சம்மரில் சம்மர் கிராப், வின்டரில் வின்டர் கிராப், ஆட்டமில் ஆட்டம் கிராப். எங்கள் தலையென்ன கரும்பும் நெல்லும் சோளமும் மாதிரிப் பயிரிடற பூமியா?'' என்று சத்தம் போட்டான் செல்லப்பா. அபீதகுசாம்பாளுக்கு அதற்கு மேல் அவனிடம் மல்லுக்கு நிற்க நேரம் இல்லை.

''ஹரே ராமா ஹரே கிருஷ்ணவை வைத்து தேவ் ஆனந்த் படம் எடுத்தார். நம் இயக்கத்தைப் பற்றியும் ஒரு படம் எடுக்க வேண்டாமா?'' என்று செல்லப்பாவின் நண்பர்கள் அவனை நச்சரிக்கத் தொடங்கினார்கள்.

''யாரோ ஒருத்தன் கன்னபின்னன்னு நடிக்கிறானே அவனைப் போட்டுப் படம் எடுத்தால் என்ன?''

''ஸ்டுபிட்! கன்ன பின்னன்னு யாரும் நடிக்கலே. ராஜேஷ் கன்னன்னு ஒருத்தன் ஆக்ட் பண்றான். ஆல் ஆர் மாட் ஆப்டர் ஹிம். தெரியுமோ?''

''ஓகே, அவனையே வேண்டிக் கேட்டுக் கொள்வோம்.படமும் பிரமாதமா ஓடும்!''

இவர்கள் சினிமாப் படம் எடுக்கிற செய்தி பரவியதும் சம்போ மகாதேவ தேவாவுக்கு அங்கத்தினர் எண்ணிக்கை ஏராளமாகப் பெருகியது. எல்லோரும் நான் நீ என்று போட்டி போட்டுக் கொண்டு சேர்ந்தார்கள்.

ஹரே கிருஷ்ண இயக்கத்தி லிருந்து பதினைந்து பேர் திடீரென்று ஹரே கிருஷ்ணவுக்கு முழுக்குப் போட்டு விட்டு, சம்போ மகாதேவ தேவாவில் சேர்ந்தனர். இதைத் தினசரிகள் பிரமாதமாக வெளியிட்டன.

செல்லப்பாவுக்கு உண்மையில் மூச்சு விடக் கூட நேரமில்லை. அவன் தகப்பனாரும் தாயாரும் பாட்டியும் கூட அவனிடம் முன்கூட்டியே அப்பாயின்ட்மெண்ட் எடுத்துக் கொண்ட பிறகுதான் பார்க்க முடிந்தது. நாளாக நாளாக, வருகிறவர்களின் கூட்டமும் இரைச்சலும் தாங்க முடியாத அளவுக்குப்போயிற்று.

செல்லப்பாவின் அப்பா சம்பூர்ணத்துக்கு அசாத்திய கோபம். அவர்கள் கேட்கிறபோதெல்லாம் நூறும் இருநூறுமாகக் கொடுத்துப் பணமும் காலியாகிக் கொண்டிருந்தது. விளையாட்டுத்தனமாக இந்தப் பயல்கள் இப்படி ஆரம்பித்து வைத்துப் பிராணனை வாங்குகிறார்களே என்று ஓர் ஆத்திரம் வேறு. இதற்கு என்ன பண்ணுவது என்று மண்டையைக் குடைந்து கொண்டார் சம்பூர்ணம்.

ஒரு வாரத்துக்குப் பிறகு செல்லப்பாவின் நண்பர்கள் எல்லோரும் அன்றைக்கு வந்திருந்தார்கள். மொட்டை மாடியில் அவர்கள் அரட்டை அடித்துக் கொண்டிருந்தபோது அவர்களைப் போலவே மொட்டைத் தலையும் காவித் துணியுமாகச் செல்லப்பாவின் தகப்பனார் மேலே வந்து, ''நானும் இந்த இயக்கத்தில் சேர்ந்து உங்களுடன் பணியாற்றத் தீர்மானித்து விட்டேன்!'' என்றார்.

''யு டு அப்பா?'' என்று ஸீஸர் ஸ்டைலில் ஓரடி முன்னால் வந்தான் செல்லப்பா.

''நான் மட்டுமல்ல. உங்கள் தகப்பனார்களுக்கெல்லாம் என் கைப்பட ஒரு கடிதம் போட்டு நாளைக்கு இங்கே வரச் சொல்லியிருக்கிறேன். நாம் எல்லோருமே இனி கவலையற்று இருப்போம். ஒன்றாகச் சுத்துவோம். நன்றாகக் கத்துவோம். என்னுடை வக்கீல் பிராக்டீஸைத் தலை முழுகி விட்டேன். சம்போ மகாதேவ தேவா !''

'' தகப்பன்மார்கள் எல்லாரும் இதில் எங்களோடு சேர்ந்து தொழில் நடத்துவதை விட்டு விட்டால் நாங்கள் அப்புறம் பணத்துக்கு எங்கே போவோம்? சம்போ மகாதேவ தேவாவுக்கு இன்றோடு ஒரு கும்பிடு. ஹே, சிவ பெருமானே! எங்களை மன்னியும். ஏனென்றால் நாங்கள் என்ன செய்வது என்று தெரியாமல் செய்து விட்டோம்!'' என்று ஒட்டு மொத்தமான பாவமன்னிப்பு வேண்டுகோள் விடுத்தார்கள் செல்லப்பாவும் நண்பர்களும்.

கீழே இறங்கி வந்து, மேக்கப்காரர் மோகன்ராஜ் மொட்டைத் தலைக்காக ஒட்டியிருந்த தோல் நிறத் துணியைக் கிழித்துப் போட்டார் சம்பூர்ணம்!

## சொத்து!



உனக்குப் பின் உன் சொத்தை யார் அடைய வேண்டும் என்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றி எழுதி வை. இல்லையேல் வக்கீல்கள்தாம் உனக்கு வாரிசாக அமைவார்கள்.

- ஆல்பர்ன், உதவி: நாடோடி




## 33. செந்தணல் பிழம்பும் சந்தனக் குழம்பும்

**கொடியிடை நாயகியான உமை கொடிய செந்தழல் நாற்புறமும் சூழ்ந்திருக்க அதனிடை தூய சிரிப்புடன் தவமியற்றப் புகுந்தாள். கண்களின் கூச்சத்தை வென்று பார்வையை சூரியனிடத்தில் விலகாமல் பதித்தாள். வெகுவாகத் தாபம் தரும் சூரியனை நோக்கியபோதிலும் அவளது முகம் தாமரையின் எழிலையே பெற்றிருந்தது. நீண்ட நயனக் கோடிகளில் மட்டுமே மெல்ல மெல்லக் கருவளையம் பரவலாயிற்று.**

**காளிதாஸனின் குமார சம்பவம் 5-10, 11**

அம்மா பேலூர் தோட்ட வீட்டிலிருந்தபோது யோகாநந்தரும் திரிகுணாதீதரும் அவளுக்குத் துணையாக இருந்து பணிவிடை செய்தனர். அவளிடம் அவர்கள் எத்தனை ஈடுபாடு கொண்டிருந்தனர் என்பதற்கு ஓர் உதாரணம்: அந்தத் தோட்டத்தில் சேபாலிகா என்ற மலர் விருட்சம் பூக்களைச் சொரியும். அம்மா அவற்றால் டாகூருக்கு அர்ச்சனை செய்வாள். அம்மாவின் கரம் ஸ்பரிசிக்கும் அப்பூக்களில் மண் ஒட்டிக் கொண்டிருத்தல் தகாது என்பதால் திரிகுணாதீதர் இரவில் மரத்தின் அடியில் தூய மடித் துணியை விரித்து, அது பறக்காமல் கல் வைப்பார். அதிலே விழுகிற பூக்களை — அப்பழுக்கற்ற மலர்களை — காலையில் திரட்டி அப்பழுக்கற்ற அம்மாவின் அர்ச்சனைக்குச் சேர்ப்பார்.

இந்தத் தோட்ட வீடு மிகுந்த பாக்கியம் செய்தது. மகாபுருஷர்கள் தவமியற்றும் இடங்கள் பாக்கியம் செய்தனவே அன்றோ? பரமேசுவரனுக்காகக் கௌரி பஞ்சாக்கினி மத்தியில் நின்று தவம் இயற்றியதால் இமாலயமே புதுப் புனிதம் கொண்டது. பயங்கரமான இந்தப் பஞ்சாக்கினித் தவத்தை நம் அம்மா பேலூர் தோட்ட மாளிகையில் அநுஷ்டித்தாள்.

தலைக்கு மேல் சூரியன் கொளுத்துகையில், நாற்புறமும் அக்னி குண்டங்களை மூட்டிக் கொண்டு தவம் இயற்றுவதே பஞ்சாக்கினி மத்தியத் தவம். 'பஞ்ச தபம்' என்றே சொல்வர். தபம் என்றாலே தவிப்பது, எரிப்பது என்றுதான் பொருள்.

அம்மா முன்பு காசி சென்றிருந்த போது அங்கொரு நேபாள பிக்ஷுணி அம்மாவிடம் பஞ்சதபம் புரியுமாறு கூறினாள். கணவரை இழந்த துயரம் அப்போது அம்மாவுக்குள்ளே நெருப்பாக எரிந்தது. வெளியிலே நெருப்பை மூட்டிக் கொள்கிற 'பஞ்சதபம்', தாபமாக உள்ளே எரியும் பிரிவாற்றாமையைச் சமனப்படுத்தும் என்று அவளுக்குத் தோன்றியது. ஆயினும் 'பஞ்ச தபம்' என்ற பெரிய விஷயத்தை அச்சமயத்தில் மேற்கொண்டால், 'ராமகிருஷ்ணர் காலமானவுடனேயே அவரது பாரியாள் தபஸ், கிபஸ் என்று ஆடம்பரம் செய்கிறாள்' என்று ஊரார் இகழ்ந்துரைக்கக் கூடும் என்பதால் ஆசையை அடக்கிக் கொண்டாள். பிறகு, காமார்புகுரில் அவள் இருந்தபோது பரட்டைத் தலையுடன் ருத்ராட்ச மாலையும், காஷாயமும் அணிந்து ஒரு கன்னிகை தன்னைச் சூழ்ந்திருப்பதைப் பலமுறை கண்டிருக்கிறாள். இந்தக் காட்சி ஏற்படும்போதெல்லாம், மழுங்க முண்டனம் செய்து கொண்ட ஒரு சாதுவும் அவள்முன் தோன்றி, 'பஞ்ச தபம் பண்ணம்மா' என்பார்.

அம்மா தன் பசங்களிடம் எத்தனையோ அன்பு வைத்திருந்தாலும் உள்ளூற உலகை விட்டுப் போய்விடும் விராகமும் இருந்துகொண்டேயிருந்தது. தன்னுள் குமுறிக் கொண்டிருக்கும் விராகத்தின் உருவமே அந்தக் காஷாயக் கன்னி என்று அம்மாவுக்குத் தெரிந்தது. அன்று கணவரைப் பிரிந்தவுடன் விரகத் தீயை எரித்து அழிப்பதற்காக வெளியிலே தீ மூட்டித் தவமிருக்க விரும்பினாள். இப்போது விராகத் தீயை எரித்துவிட்டு, சரீரம் தானாக விழுகிற வரை நிம்மதியுடன் தன் பசங்களுக்காக வாழ்கிற பான்மையைப் பெறப் பஞ்ச தபம் உதவும் என்று எண்ணினாள். கங்கையை வருவிக்க பகீரதன் பஞ்ச தபம் செய்தான். அம்மா தன் வைராக்கியம் தீய்ந்து அன்பு கங்கை ஊற்றெடுப்பதற்காகப் பஞ்ச தபம் செய்யத் தீர்மானித்தாள்.

யோகின் மாவும் அம்மாவோடு சேர்ந்து பஞ்ச தபம் புரிந்தாள்.

பேலூர் தோட்ட வீட்டின் திறந்த மாடியில் மண்ணைப் பரப்பினார்கள். ஒன்றுக்கொன்று ஐந்து முழ இடைவெளியில் நாலு பெரிய அக்னி குண்டங்கள் மூட்டப்பட்டன. கோடைக்காலக் கதிர

வன் உதிக்கும்போதே வெம்மையுடன் வெளி வந்தான் ஐந்தாவது அக்கினியாக.



கங்கையில் நீராடி விட்டு அம்மா வந்தாள். தூய்மைக்கு இரண்டு உதாரணம் சொல் வார்கள். ஒன்று கங்கை, மற்றது அக்கினி. தூய அன்னை கங்கையில் முழுகிவிட்டு, இப்போது அக்கினியின் வெப்பத் தில் முழுக வந்தாள்.

நாலு குண்டங்களிலும் அக்கினி மிகப் பெரிதாக ஜொலித்துக் கொண்டு நாக்குகளை அசைத்து நாற்புறமும் உஷ்ணத்தை அள்ளி வீசியது. அத னிடைய பிரவேசிக்க ஒரு கணம் அம்மாவே தயங்கினாற் போலிருந்தது.

''ஏனம்மா, வாங்கோ உள்ளே!'' என்று சாவதானமாகச் சொல்லிக் கொண்டு குண்டங்களின் நடுப் பகுதியில் நுழைந்தாள் யோகின்மா.

'ராமனின் தெய்விகத் துணை இருந்த தால் ஆஞ்சநேயன் கடலை ஒரே தாவில் கடந்து விட்டான். ஆனால் ராமன் இலங்கை செல்லும்போது அணை கட்ட வேண்டியதாயிற்று. ஏனெனில், ராம னுக்கு ராமனின் அநுக்கிரகம் இல்லை' என்று பௌராணிகர் சொல்வர். அது போல், அம்மா தயங்கியபோது அம்மா வின் அருட் துணையில் துணிவு பெற் றிருந்த யோகின்மா முதலில் பஞ்ச தபத்துக்கு அமர்ந்து விட்டாள். அம்மா தயங்கியது க்ஷண காலம்தான். தனது அருந்துணையான டாகூரை ஸ்மரித்தாள். கலக்கமின்றி அக்னி குண்டங்களின் மையத்துக்குச் சென்று அமைதிமய மாக அமர்ந்தாள். அதன்பின் அக்கினி யின் வெப்பத்துக்கு அவளிடம் சக்தியே இல்லை என்று தோன்றியது. சீதா தேவியை அக்கினி தேவன் தகிக்கவில் லையே! சீதையின் அருள் பெற்ற அநுமன் வாலில் தீ வைத்தபோது அக்கினி அவனை வதைக்கவில்லையே!

உதயசூரியனாக இருந்த செம்பிழம்பு, உச்சி சூரியனாக உயர்ந்து உக்கிரமாகத் தகித்தது. அம்மாவின் தவம் ஆனந்த மாகத் தொடர்ந்தது. இவளிடம் தன் கை வரிசை பலிக்காது என்று வெட்கிச் சிவந்து மேலை மலை வாயில் போய் ஒளிந்து கொண்டான் ஒளித்தேவன்.

இப்படி ஒரு நாள் மட்டும் இல்லை, ஏழு நாட்கள் தொடர்ந்து தவமிருந் தாள் அம்மா. அதோடு காஷாயக் கன்னி வருவதும் நின்றுவிட்டது. உலகை விட்டு ஓடி எல்லாரும் தவம்புரி வார்கள். உலகைவிட்டு ஓடாதிருக் கவே அம்மா தவம் செய்தாள்! தன் அடி மனத்திலிருந்த தீ வெளித் தீயால் சமனமாகிவிட்டதென்று அம்மா கூறி

ளுள். பௌதிகத்துக்கும், ஆத்மிகத்துக்கும் உள்ள தொடர்பை நமக்கு அறிவுறுத்துவது இந்த பஞ்ச தபம். வெளியில் ஐந்தழலாக மூட்டிய செந்தணல் பிழம்பு அம்மாவின் உள்ளத்தைச் சந்தனக் குழம்பாக்கி விட்டது — அவளது பிள்ளைகளிடம்.

பஞ்சதபம் என்ற பெரிய சாதனையை அம்மா பெரிதுபடுத்திப் பேசியதில்லை. எப்போதாவது இந்தப் பேச்சு எழுந்தாலும், தான் செய்கிற அன்றாடக் காரியங்களில் ஒன்றுபோலவே இதைப் பற்றியும் எளிதாகப் பேசுவாள். நமக்குத்தான் அது சாதனை! சாதனைகளின் முடிவான ஒன்றுக்கு அது எம்மாத்திரம்?

சிறிதளவு சாதனைகளில் முன்னேறியவர்களும், தங்களின் ஆன்ம பரிபக்குவ நிலையில் பலவித சமய ஆசரணைகளை அநாவசியம் என்று கருதி ஒதுக்கிவிடும் போது, ராமகிருஷ்ணரின் சக்தியான தேவி ஏழு நாட்கள் கடுந்தவம் மேற்கொண்டது ஒருவருக்கு வியப்பாக இருந்தது. ''உங்களை போன்ற சிரேஷ்டமான வியக்திக்கு இந்தத் தபஸெல்லாம் ஏதுக்கம்மா?'' என்று அவர் கேட்டார்.

அம்மா சொன்னாள்: ''தபஸ் எல்லாருக்கும் தேவைதான்.... சிவனை அடையறதுக்காக சாக்ஷாத் பார்வதி தேவியே தபஸ் பண்ணினாளே.....''

'அம்மா எதை அடையத் தவமிருந்தாள்?' என்ற எண்ணம் பக்தரின் உள்ளத்தில் தோன்றுவதை உணர்ந்த அம்மா தொடர்ந்தாள்: ''ஜனங்களோட க்ஷேமத்துக்காக இதெல்லாம் செய்ய வேண்டியிருக்கு. இன்னொரு காரணமும் சொல்றேன். நீங்களெல்லாம் என்னைப் பெரிய ஸ்தானத்திலே வைச்சிருக்கேள். நான் தேகத்தைத் தேகம்னு நினைக்காம வருத்திண்டு தபஸ் இருந்தாத்தான் அந்த ஸ்தானத்தில் இருக்கலாம். ஏன், பொதுஜனங்களையே எடுத்துக்கோங்களேன். ''என்னமோ பெரிசா 'தூய அன்னையார்' என்கிறா. அந்த அம்மாளும் நம்ம மாதிரி தான் சாப்பிடறா, தூங்கறா. என்ன பெரிசாப் பண்ணிப்பிட்டா?''ன்னு சொல்லுவா. அப்படிச் சொல்றது எங்களைப் பாதிக்கிறதில்லே. ஆனால் சிஷ்யாளை அது ரொம்ப பாதிக்கும். அதனாலே குரு ஸ்தானத்திலே இருக்கிறவா உடம்பை வருத்திண்டு தவயோகங்களை அப்பியசிச்சிண்டு இருக்கணும். குரு மகராஜ் எத்தனையோ சாதனைகளையும் சடங்குகளையும் செய்து காட்டலையா? ஸ்திரீகளுக்குப் பல விரதங்களுக்குள் பஞ்சதபம் விசேஷமானது.''

இன்னோர் அணுக்கத் தொண்டர், ''நீங்கள் எதை உத்தேசிச்சுப் பஞ்ச தபம் இருந்தேள்?'' என்று கேட்ட போது, அம்மா பளிச்சென்று, ''குழந்தைகளா! உங்க க்ஷேமத்தை உத்தேசிச்சுத்தான் இருந்தேன். உங்களாலே எல்லாம் இப்படிப் பண்றதுக்குத் தாங்குமா?'' என்றாள்.

அம்மா உலகில் ஒட்டிக் கொண்டிருப்பதற்குப் பஞ்ச தபம் உதவி செய்தது. அந்த உதவியை ஆழமாக உறுதிப்படுத்தியது இன்னொரு நிகழ்ச்சி. தபிக்கிற நிகழ்ச்சி அல்ல. மிகவும் குளிர்ந்த நிகழ்ச்சி: முழுமதியின் சீதகிரணங்கள் கங்கையின் மீது களிநடம் புரிகின்றன. அம்மா அந்த அழகில் மனம் சொக்கிப் படித்துறையில் விடுவிடுவென இறங்குகிறாள். பின்னால் சரேலென்று ஒரு காலடிச் சத்தம். அடுத்த விநாடி அவளை முந்திக் கொண்டு ராமகிருஷ்ணர் பிரவாகத்தில் பிரவேசிக்கிறார். அவரது திவ்விய மேனி கங்கையில் கரைந்தே போகிறது. ''ஆயிரமாயிரம் ஆண்டுகளாகக் கோடாநு கோடி ஜீவர்களின் பாபங்களைப் போக்கிவரும் பாகீரதீ! இன்று பகவானை உன்னுள் கொண்டு மேலும் பாவனமானாயா?'' என்றெண்ணுகிறாள் அம்மா. அவளுக்கு மயிர்க்கூச்செடுக்கிறது. ராமகிருஷ்ணர் நதியில் புகுந்து மறைந்த இடத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருக்கிறாள். திடீரென்று அங்கு அவளது அருமை நரேன் வந்து நிற்கிறார். ''ஜேய் ராமகிருஷ்ண'' என்று கோஷித்தபடி அந்தப் புண்ணிய நீரை எடுத்து நாற்புறமும் வீசுகிறார். நானு தேசத்து மக்களின் மீது திவலைகள் விழுகின்றன.

இந்தச் சம்பவம் நடந்து சில மாதங்களுக்குள் நரேன் அமெரிக்காவில் சிகாகோ சர்வமத மகாசபையில் வேதாந்த சாம்ராஜ்யத்துக்குக் கொடி ஏற்றினார். ஆனால் அம்மா இக்காட்சி காண்கையில் நரேனின் இருப்பிடமே தெரியாமலிருந்தது.

ராமகிருஷ்ண தர்மத்தை உலகில் பரப்ப நரேனைப்போலவே தானும் உயிர் வாழ்ந்துதானாக வேண்டும் என்று அம்மா ஐயம் திரிபறப் புரிந்து கொண்டாள். வெளியே தெரியும் சூரிய வெளிச்சம்போல் நரேன் அந்தத் தருமப் பயிரை வளர்த்தார். பூமிக்கடியே ஓடும் நீரோட்டம்போல் மறைந்திருந்து பயிருக்கு உயிர் தந்தாள் அம்மா.

இங்கே அம்மா திவ்வியக் காட்சி கண்டபோது, தேச சஞ்சாரம் செய்து கொண்டிருந்த நரேனும் அம்மாவைத் தான் நினைத்துக் கொண்டிருந்தார். அமெரிக்காவுக்குச் சென்று வேதாந்தத்தை எடுத்தியம்ப வேண்டுமென்று

# நேர்த்தியும் நம்பிக்கையும் கொண்டது



இதோ ஈடுஇணையற்ற இரண்டு ஓரியண்ட் டேபிள் மாடல்கள். இரண்டும் நேர்த்தியானவை, நம்பத்தகுந்தவை. ஒவ்வொரு இல்லத்திலும், வாழ்நாள்முழுதும் சௌகரியத்திற்காக நாங்கள் உங்களுக்கு வாய்ப்பு அளிக்கின்றோம். ஓரியண்ட்டின் புதுமையான டெஸ்க் மின்விசிறி அல்லது பிரசித்தி பெற்ற டிலக்ஸ் டேபிள் மின்விசிறி.

## தேர்ந்தெடுங்கள்

டெஸ்க் விசிறி



டிலக்ஸ் டேபிள் விசிறி

இந்தியாவின் நீண்ட அனுபவமிக்க மின்விசிறி தயாரிப்பாளர்களால் தேர்ந்து அளிக்கப்படும் இந்த நேர்த்தியான வலிமை மிக்க மின்விசிறிகள் உங்களுக்கு பல வருடங்களுக்கு மென்மையான, அடக்கமான உழைப்பைத் தருகின்றன.

ஓரியண்ட்-இன்றைய மின்விசிறிகளில் மிக நம்பிக்கை வாய்ந்த பெயர்.

இரண்டு வருடங்களுக்கு உத்தரவாதம்.



CC/O-1/2/72

## ஓரியண்ட்

விசிறி

ஓரியண்ட் விசிறி

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.
கல்கத்தா-54

உலக முழுவதும் தேர்ந்தெடுக்கப்படுபவை



> நீ ஈசுவரானுக்கிரகம் பெற வேண்டுமாயின் அகிலாண்டேசுவரியும் பிரம்மாண்டநாயகியுமான என் அன்னைக்குப் பிரார்த்தனை செய்வாயாக. அவள் மகாமாயை. ஆத்ம சொரூபத்தை அறிய முடியாமல் அனைவர் மீதும் அறியாமை வலையை வீசி மயக்குவது அவளே. உலகை ஆக்கியும், காத்தும், அழித்தும் விளையாடுபவள் அவளே. அவளது விளையாட்டான இந்த உலகை விட்டு நாம் விடுபடுவதற்கு அவள் தயை வைத்தாலே முடியும். மோக்ஷ சாம்ராஜ்யத்தை அம்பிகை திறந்து வைத்தாலொழிய நாம் அதில் பிரவேசிக்க முடியாது. நாம் அவளுடைய கிருபா கடாக்ஷத்தைப் பிரார்த்தித்துப் பெறுகிற வரையில் வெளித் தோற்றமான அநித்திய வஸ்துக்களைத்தான் நம்மால் உணர முடியும். அவள் அருளைப் பெற்றாலே சச்சிதாநந்த வஸ்துவை அநுபவிக்க முடியும்.
>
> - ஸ்ரீ பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

ஆர்வத் துடிப்புக் கொண்டிருந்தார் அவர். அந்தப் பணி இடையூறின்றி நிறைவேறும் என்ற தெளிவை அவருக்குத் தரவல்லவர் யார்? அம்மா தானே? அதுதான் அம்மாவை நினைத்துக் கொண்டார். 'குரு மகராஜ் அம்மாவில் அடக்கம். அவள் எப்படிச் சொல்கிறாளோ அப்படிச் செய்வேன்' என்று எண்ணினார். அம்மாவுக்குக் கடிதம் எழுதினார்.

அந்நிய தேசம் செல்வது சென்ற நூற்றாண்டில் சாதாரண விஷயமா? அருமைப் பிள்ளை பல்லாயிரம் காதங்கள் கடல் கடந்து போகிறேன் என்கிறானே என்றுதான் முதலில் தாய் மனசு கலங்கியது. அன்று அவளது கனவிலே டாகூர் தோன்றினார். அலைகளின் மீது நடந்து சென்றார் அவர். திரும்பிப் பார்த்துத் தம் பின் இருந்த நரேனிடம் தம்மைத் தொடருமாறு சைகை காட்டினார். மறு நாளே அம்மா, நரேன் அமெரிக்கா செல்வதற்கு அநுமதியும் அநுக்கிரகமும் தெரிவித்து எழுதிவிட்டாள். 'அம்மா சொற்படி' எழுதப்பட்ட (அம்மாவுக்குத்தான் சுயமாக எழுத வராதே!) அந்தக் கடிதத்தைப் பார்த்து நரேன் பேரானந்தம் கொண்டார். ''இனிமேல் எல்லாம் ஜாம் ஜாம் என்று நடந்து விடும்'' என்று பூரித்தார்.

தருமப் பயிருக்கு உயிர் தரும் நீரோட்டம் பூமிக்கு மிகவும் அடியிலே ஓடினால் வேருக்கே எட்டாது அல்லவா? எனவே, வயதிலும் ஸ்தானத்திலும் கௌரவம் பெற்றுவிட்ட சாரதை, பாரத ஸ்திரீ தர்மத்துக்கு விரோதமின்றியே, சிறுகச் சிறுக வெளி அடியார்களை அநுமதிக்கலானாள்.

இந்தப் பாக்கியத்தை முதலில் பெற்ற ஒருவர் நாக மகாசயர் எனப்படும் துர்காசரண நாகர். இவர் ராமகிருஷ்ணரின் நெருங்கிய பக்தர்.

அன்று ஏகாதசி. பிற்பகல் நேரம். அம்மா சர்க்கரை வள்ளிக் கிழங்கும், எண்ணெயில் வறுத்த 'தட்டை'யும் உண்பதற்காக அமர்ந்தபோது வேலைக்காரப் பெண் வந்து, ''யாரோ நாகர்னு வந்திருக்காரு. தலையைத் தரையிலே ஓயாம முட்டிக்கிட்டிருக்காரு. மவராசு (யோகாநந்தரை யோகின் மகராஜ் என்பார்கள்) எத்தனையோ தடுத்தும் கேட்காம அவரு தலையை மோதிக்கிட்டேயிருக்காரு. பைத்தியமாங்காட்டியும்!'' என்றாள்.

''அவரை இங்கே அழைச்சிண்டு வரச் சொன்னேன்னு யோகின்கிட்டே சொல்லும்மா'' என்றாள் அம்மா. அவ்வளவாகப் பழக்கமில்லாத ஒருவரைத் தன் சந்நிதிக்கு அம்மா அநுமதிப்பது வேலைக்காரிக்கே வியப்பாக இருந்தது.

யோகாநந்தர், நாகரின் கையைப் பிடித்து அழைத்து வந்தார். நாகரின் நெற்றி வீங்கியிருப்பதைப் பார்த்த அம்மாவுக்கு உள்ளமுருகி விட்டது. நீர் நிறைந்த நாகரது கண்களுக்கு அம்மாவே தெரியவில்லை. அவருக்கு வெளி உணர்வு இருக்கிறதா என்றும் புரியவில்லை. தள்ளாடிக் கொண்டு நின்றார். அம்மா எழுந்திருந்து அவரிடம் சென்று அவரது கைகளைப் பற்றி, தன் அருகே அமர்த்திக் கொண்டாள்.

''அம்மா அம்மா'' என்று தேம்பினார் நாகர்.

அம்மா அவரது கண்களைத் தானே துடைத்து விட்டாள். வள்ளிக் கிழங்கில் சிறிதைப் புட்டுத் தன் வாயில் போட்டுக் கொண்டு, மீதத்தை அப்பரவசப் பிள்ளையின் வாயில் போட்டாள்.

நாகருக்கோ அதை விழுங்கக்கூடத் தெரியவில்லை. குதப்பிக் கொண்டே இருந்தார். ''அம்மா அம்மா'' என்கிற அரற்றல் மட்டும் ஓயவில்லை. அவளது இரு பாதங்களையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தார்.

நீண்ட நேரம் இப்படிச் சென்றது.

''அம்மா, நீங்க காலமேயிருந்து சுத்த உபவாசம். இப்பவும் சாப்பிட விடாமப் பண்ணறார் இவர். மகராஜோடு இவரை அனுப்பிச்சுடுங்கோ'' என்று அம்மாவுடன் இருந்த பெண்டுகள் கூறினர்.

''முதலிலே அவர் தணியட்டும். இப்போ என் சாப்பாடுதானா முக்கியம்?'' என்று கேட்ட அம்மா அவரது தலையையும் முதுகையும் தடவிக் கொடுத்தாள். எதற்குமே அவரது

பரவசம் வசப்படவில்லை என்று கண்ட பின் கடைசியாகப் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தாள் அம்மா. அவளது டாகூரின் திருநாமம்தான் அந்தப் பிரம்மாஸ்திரம். நாகரின் செவியில் அம்மா, 'ஸ்ரீ ராமகிருஷ்ணு, ஸ்ரீ ராம கிருஷ்ணு' என்று ஓதியது அவர் செய்த மகாபாக்கியம். அவருக்கு 'ஜன்னி' உடனே தணிந்தது.

அம்மா தானும் பலகாரம் உண்டு, நாகரையும் உண்பித்தாள்.

வெளியே அழைத்துச் செல்லப்படு முன் அவர் அம்மாவிடம் திரும்பத் திரும்ப, "நான் என்கிறது எதுவுமே கிடையாது. எல்லாம் நீதான். நானே கிடையாது; சர்வமும் நீதான்" என்றார்.

"என்ன பூரண ஞானம் பாருங்கள்" என்று அருகிலிருந்தோரிடம் பூரிப்புடன் கூறினாள் தேவி. அதாவது, சகலத்தை யும் ஆட்டிப் படைத்துக் கொண்டிருக் கும் சக்தியாகத் தன்னை ஒப்புக்கொண்டு விட்டாள்!

நாகர் சுற்றிலும் இருந்தவர்களைப் பார்த்து, "அம்மா தன் கையாலே உணவூட்டினாளே! அப்பா (ராமகிருஷ் ணர்) வைவிட அம்மா பெரிய தயா மூர்த்தி" என்று தட்டுத் தடுமாறிக் கூறிவிட்டு விடைகொண்டார்.

இன்னொரு நாள் நாகர் இதே போன்ற பரவச நிலையில் கொண்டு வந்து சமர்ப்பித்த மாம்பழங்களை நறுக்கி ராமகிருஷ்ணருக்கு நிவேதித்துவிட்டு, அவருக்கும் அதைப் பிரசாதமாக வழங் கினாள் அம்மா. அதில் ஒரே ஒரு துண்டை ஸ்வாதீனமற்ற தம் கையால் எப்படியோ எடுத்து, தலையில் தேய்த் துக் கொண்டார் நாகர்!

மற்றொரு சமயம் அம்மா தேக்கிலை யில் வைத்து அவருக்குப் பிரசாதம் வழங்கியபோது, அவர் அந்த இலையை யும் சேர்த்து உண்டார். 'அம்மாவின் கைப்பட்ட இலையும் திவ்யப்பிரசாதமே. அதைக் குப்பையில் எறிவார்களோ?' என்றார்! பிறிதொரு சந்தர்ப்பத்தில் அம்மா அவருக்கு ஒரு வேட்டி அளித்த போது, அந்தப் புனித வஸ்திரம் தம் காலில் படக்கூடாது என்பதால் ஒன்பது முழத்தையும் சும்மாடுபோல் தலையில் சுற்றிக் கொண்டார்!

பிற்காலத்தில் நரேன், கிரீஷ், நாகர் ஆகியோரது படங்களைத் தன் அறையில் மாட்டி வைத்துக் கொண்டிருந்தாள் அம்மா. தெய்வப் படங்களுக்குச் சந்தன மிடும்போது இம்மூன்று படங்களுக்கும் சந்தனம் வைப்பாள் அம்மா. ஒரு வித்தியாசம், இம்மூவரின் முகவாயை

> ஆத்ம விசாரம் என்பது ஞான மார்க் கம். ஞான மார்க்கத்தாலேயே உருவம், பெயர், குணங்கள் அற்ற பிரம்மத்துடன் நம்மை அபேதமாக உணர முடியும். ஆனால் இந்த ஆத்ம விசாரத்தில் ஒருவன் ஈடுபடுவதும் என் அம்பிகையின் விருப்பம் இருந்தாலே நடக்கும். ஆத்ம விசாரம் செய்யாவிட்டாலும், அவளிடம் பக்தி செய் தாலேகூட பிரம்மாநுபவம் பெற முடியும். ஏனெனில், ஜீவர்களைத் தோற்றுவித்த சக்திக்கு அவனைச் சார்ந்த அஞ்ஞான மலத்தை அகற்றி, அவனுக்குப் பிரம்ம ஞானம் தரும் ஆற்றல் மட்டும் இல்லையா?
>
> -- ஸ்ரீ பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

யும் தொடுவாள்! ஒரு நாள் இவ்விதம் செய்துவிட்டு நாகரின் படத்தையே வெகுநேரம் உற்று நோக்கினாள். "எத் தனையோ பேர் வரா, போரு. ஆனு இந்தமாதிரி இன்னொருத்தர் உண்டா?" என்று தன்னையுமறியாமல் முனகினாள்.

கிருஷ்ண பவானி தேவி, அருமைக் கணவர் பலராம் பாபுவைப் பறி கொடுத்த துயரப் புண் ஆறு முன்பே, ஆருயிர் மகள் புவனமோகினியை இழந் தாள். இப்போது அம்மாதான் அவ ளுக்கு ஆறுதலின் ஒரே உறைவிடமாக இருந்தாள். அம்மா அவளுடன் கைல் வார் என்ற கிராம வீட்டுக்குச் சென்று சின்னாட்கள் தங்கி யிருந்தாள். சூழல் மாறியதிலும், அம்மாவின் சாந்நித்தியத் திலும் கிருஷ்ணபவானி ஓரளவு தெளிவு பெற்றாள். அங்கே காட்டு மான் குட்டிகள் முக்கோண அமைப்பில் அணிவகுத்து நிற்பதும், சிறிது ஆளரவம் கேட் டாலும் அவை திசைக்கொன்றாக மின் னல் துணுக்குகளென ஓடுவதும் அம்மா வுக்கு நேத்திரானந்தமாக இருந்தன.

1895ம் ஆண்டுத் தொடக்கத்தில் நம் அம்மா, தன் அம்மாவையும், வேறு சில சிஷ்யர்களையும் அழைத்துக்கொண்டு மீண்டும் காசிக்கும் பிருந்தாவனத்துக் கும் யாத்திரை சென்று வந்தாள். பிருந்தாவனத்தில் அவள் கோபாலன் பொம்மை ஒன்று வாங்கினாள். அதை ஜயராம்பாடியில் ஒரு புரையில் வைத் தாள். பூஜையில் சேர்க்கவில்லை. ஒரு நாள் அம்மா கட்டிலில் படுத்திருக்கை யில் பாலகோபாலன் கட்டிலருகே தவழ்ந்து வந்தான். "நீதான் காசு குடுத்து என்னை வாங்கினே! ஆனு என்னை ஒதுக்கி வைச்சுட்டியே! எனக்குச் சாதம் போடமாட்டேங்கிறே; நமஸ் காரம் பண்ணமாட்டேங்கிறே. நீயே எனக்குப் பூஜை பண்ணலைன்னு, இந்தக் காலத்திலே அப்புறம் யார் எனக்குப்

அறிவோடு, அன்போடு, ''உன்னிடம் சரணாகதி செய்கிற பான்மையைத் தா'' என்று இடைவிடாது தேவியிடம் பிரார்த்திக்க வேண்டும். பிரார்த்தனையின் மூலம் முதலில் உருவும் குணமும் பெற்றவளான என் அம்பிகையை அடைய முயல்க. பிரார்த்தனை உள்ளத்தின் ஆழத்திலிருந்து எழுந்தால், சிறிது காலதாமதமாயினும் சரி, அம்மா நிச்சயம் அருள்பாலிப்பாள்; நான் உறுதி கூறுகிறேன். அதன்பின் அவளை நிர்குணமாக அநுபவிக்க விரும்பினால் அவளிடமே பிரார்த்திப்பாய். அவள் செவி சாய்த்தால் தன் நிர்குண நிலையையும் உனக்கு அருள்வாள்.

-- ஸ்ரீ பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

பூஜை பண்ணுவா ?'' என்று வெடுக்கெனக் கேட்டு மறைந்தான்.

அம்மா பதறி ஓடிச் சென்று, கோபாலன் பொம்மையை எடுத்து முகவாயை வழித்து முத்தமிட்டாள். ராமகிருஷ்ணரின் படத்துக்குப் பக்கத்தில் அதை வைத்தாள். அப்போதே புஷ்பம் எடுத்து வந்து அர்ச்சனையும் செய்தாள். அன்றிலிருந்து கோபாலனுக்குத் தினமும் ஜம்மென்று ரஸகோள (ரசகுல்லா) ங்கள் கிடைத்தன.

அமெரிக்காவில் அமோகப் பெயரும் புகழும் பெற்றுவிட்டார் விவேகாநந்தர். அங்கு வேதாந்த ஸ்தாபனங்களை நிறுவினார். அதற்குத் துணையாகப் பணியாற்ற சாரதாநந்தரும் புறப்பட்டார். அமெரிக்கா போகுமுன் ஜயராம்பாடிக்கு வந்து அம்மாவை வணங்கினார்.

ஒரு கையால் கண்ணீரை வழித்துக்கொண்டே, இன்னொரு கையை சாரதாநந்தரின் தலையில் வைத்தாள் சாரதை. ராமகிருஷ்ணப் பணி அவள் மனக் கண் முன் விசாலமாக விரிந்தது. ''ஷரத்! டாகூர் உன்கூடவே எப்பவும் இருக்கார். நிச்சிந்தையாகப் போய் வா'' என்றாள்.

அவ்விதமே வெளிநாட்டில் அரும் பணியாற்றிவிட்டுத் திரும்பி வந்து சாரதா தேவியின் பிரதான கிங்கரர் ஆனார் சாரதாநந்தர்.

அம்மா கல்கத்தாவுக்கு வந்தாள். விவேகாநந்தரிடமிருந்து சகாக்களுக்கு வந்திருந்த ஒரு கடிதம் அம்மாவுக்குப் படித்துக் காட்டப்பட்டது. நரர்களை நாராயணர்களாகக் கருதிச் சமூக சேவை செய்வது ராமகிருஷ்ண மடத்தின் முக்கிய பணிகளில் ஒன்றாக வேண்டும் என்று இக்கடிதத்தில் வலியுறுத்தியிருந்தார் ஸ்வாமிஜி. ''நரேன் டாகூருடைய கருவி. டாகூரேதான் தம் காரியத்தைச் செய்யறத்துக்காக—அதாவது லோகத்து ஜனங்களுக்கெல்லாம் நல்லது செய்யறத்துக்காக — நரேனுக்கு இந்த வார்த்தைகளைக் கொடுத்து எழுத வைச்சிருக்கார். அவன் ஆசைப்படற மாதிரியே எதிர்காலத்திலே ஆகப் போறது'' என்று தீர்க்கதரிசனத்துடன் கூறினாள் அம்மா.

காளி பூஜைக்காக அம்மா ஜயராம்பாடிக்குப் புறப்பட்டாள். கிளம்புகிற சமயத்தில் கிரீஷ் வந்தார். அம்மாவை வணங்கினார். கைகுவித்துச் சொன்னார்: ''உங்ககிட்டே வரச்சே பச்சைக் குழந்தையா ஆயிடறேன். பச்சைக் குழந்தை அம்மாவுக்கு என்ன உதவி பண்ணும்? உங்களுக்கு நான் ஒரு பணிவிடையும் பண்ணல்லை. நீங்கதான் எனக்குப் பண்ணறேள். எனக்காகச் சமைக்கிறேள், பரிமாறுகிறேள், இலை எடுத்துச் சுத்தி செய்யறேள். நான் மட்டுமில்லை. எல்லாருமே உங்களுக்குப் பச்சைக் குழந்தைகளாகவே இருக்கா. இப்போ ஜயராம்பாடிக்குப் போறேளே! அங்கே மட்டும் பிறந்தகம்னு ஓய்வா எடுத்துக்கப் போறேள்? இங்கேயிருக்கிறதைவிட மோசமான அடுக்களையிலே சமைக்கப் போறேள்! ஆனா... **உங்களுக்கு** யார் என்ன பணிவிடை பண்ண முடியும் ?''

அவர் கண்களிலிருந்து மாலை மாலையாக நீர் வழிந்தது.

பின்னால் திரும்பி, மற்றவர்களைப் பார்த்து, உணர்ச்சி பொங்கச் சொன்னார்: ''நம்ப மாதிரியே ஒரு மநுஷ்ய சரீரத்தை எடுத்துண்டு பரம்பொருள் பூலோகத்துக்கு வந்து நம்மோடே இருக்கும்னு நம்பறது கஷ்டம்தான். ஆனா இதோ, பிரத்தியட்சமாப் பாருங்கோ! கிராமாந்தர ஸ்திரீ மாதிரி நிற்கிற இந்த உருவம் விசுவஜனனின்னு உங்களுக்கு உணர முடியல்லை? ஆமாம், இவா மகாமாதா, மகாமாயா, மகாசக்தி. ஜீவராசிகளுக்குக் கதிமோக்ஷம் கிடைக்கறதுக்காகவும், ஆதரிச அம்மாவை வாழ்ந்து காட்டறதுக்காகவும் ஆதிபராசக்தி இப்படி வந்திருக்கா.''

அந்தச் சூழலிலேயே ஓர் உன்னதம் பொங்கிப் பாய்ந்தது. மந்திரத்தில் கட்டுண்டாற்போல் எல்லோரும் அம்மாவைப் பார்த்துக் கொண்டே நின்றனர்.

மகாமாதா, மகாமாயா, மகாசக்தி ஒரு பழைய துணி மூட்டையைக் கையில் எடுத்துக் கொண்டு கீழே இறங்கினாள்—ஊருக்குப் போவதற்காக!

(தொடரும்)

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam



தலைமைவகித்த ஆனந்த ராவ், ஆடிடோரியம் திறந்த சென்னை பிரதம நீதிபதி வீராசாமி, விடுதியின் சொந்தக்காரர் ராமசாமி உடையார்



# ஏற்றமிகு ஏர்க்காடு!

தமிழ் மக்களிடையே கோடை வாசஸ்தலம் என்றால் ஊட்டியும் கொடைக்கானலும்தான் நினைவு வரும். ஆனால் இவைகளுக்கு ஈடாகத் திகழக்கூடிய இன்னோர் இடமும் நம் தமிழ் நாட்டில் இருக்கிறது. அதுதான் ஏர்க்காடு. உள்ளத்தை மகிழ்விக்கும் இயற்கைக் காட்சிகளுக்குக் குறைவில்லை. சேலத்திலிருந்து முப்பத்திரண்டு கிலோமீட்டர் தொலைவில் கடல் மட்டத்திலிருந்து 4,500 அடி உயரத்தில் அமைந்துள்ளது ஏர்க்காடு. கோடைக் குடியிருப்புக்கு ஏற்ற அழகான இடம். ஆனால் விளம்பரம் இல்லாமையால் இந்த இடம் ஊட்டி கொடைக்கானலைப் போலப் பிரபலமடையவில்லை. "தங்கி இருக்க வசதிகள் இல்லாமையால் அதிகப் பிரயாணிகள் அங்கு போவதில்லை." — "உல்லாசப் பிரயாணிகள் அதிகம் பேர் வராததால் வசதிகள் பெருகவில்லை."—இப்படி இரு விதமான வாதங்கள் "கல்யாணம் செய்தால் பைத்தியம் தெளியும், பைத்தியம் தெளிந்தால்தானே கல்யாணம் செய்யலாம்" என்று சொல்லப்படும் பழமொழியை நினைவுபடுத்துகின்றன. இச்சூழ்நிலையில் உல்லாசப் பயணிகள் தங்கும் உயர்ந்த விடுதி ஒன்றைக் கட்டுவித்து ஏர்க்காட்டில் பயணிகளுக்கு வசதிகளைப் பெருக்க முன்வந்திருக்கிறார் திரு ராமசாமி உடையார் அவர்கள். சேலம்வாசியான இவர் பெரிய தொழிலதிபர். இவருக்கு ஏர்க்காட்டில் எஸ்டேட் இருக்கிறது. எம். எல். ஏ.வாக ஐந்து வருஷங்கள் இருந்திருக்கிறார். ஆயினும் இதெல்லாவற்றையும்விட திரு ராமசாமி உடையாருக்கு மகிழ்ச்சி அளிக்கக் கூடிய விஷயம் ஏர்க்காட்டின் வளர்ச்சியும் அது தமிழ் நாட்டின் சிறந்த ஒரு சுற்றுலாப் பயணிகளின் கேந்திரமாவதும்தான்.

ஊட்டி, கொடைக்கானல்போலவே இங்கும் ஏரி இருக்கிறது. ஜெர்மனியைச் சேர்ந்த பாதிரியார் ஒருவரால் 1870ல் வெட்டப்பட்டது இந்த ஏரி. 'மரங்கள் சூழ்ந்த ஏரி' என்ற பெயரே ஏர்க்காடாகி இருக்கிறது. (ஏரி-காடு) இருபது கொண்டை ஊசி வளைவுகளைக் கொண்ட பக்காவான மலைப் பாதை — வழி. வழியெல்லாம் காப்பி, ஆரஞ்சுத் தோட்டம், காட்டு மலர் மணம் கண்கொள்ளாக் காட்சிகள். 'லேடீஸ் ஸீட்' என்ற ஒரு முகப்பு இயற்கை வனப்பு முழுவதையும் கண்டுகளிக்கத் தக்க இடம். ஏரி நிரம்பியதும் அதிலிருந்து பெருகும் அதிகப்படியான தண்ணீர் ஒன்றரை மைல்கள் ஓடி நூறு அடி உயரத்திலிருந்து கீழே விழுகிறது. இதுவே கிள்ளியூர் நீர்வீழ்ச்சி. பகோடா பாயிண்ட், சன்யாசி மலை, ஆர்தர் ஸீட், காவேரி முனை, சேர்வராயன் கோயில் என்று ஏர்க்காட்டில் கண்டு களிக்க வேண்டிய இடங்களுக்குப் பஞ்சமில்லைதான்.

உடையார் 'ஹோட்டல் சேர்வராய்' என்ற அழகான விடுதியை மிகக் கலையுணர்வோடு அமைத்திருக்கிறார். மூன்றாண்டுகளாக இது இயங்கி வருகிறது. ஆண்டுக்கு ஆண்டு அதில் பல அபிவிருத்திகளைச் செய்து கொண்டு வருகிறார். இந்த ஆண்டு அவரது மறைந்த தம்பி திரு வைத்தியலிங்கம் அவர்களின் நினைவாக ஒரு பெரிய 'ஆடிடோரியம்' அமைத்து, அதைச் சென்னை பிரதம நீதிபதி திரு வீராசாமி அவர்களைக் கொண்டு திறக்கச் செய்திருக்கிறார். உல்லாசப் பயணிகளை வருக வருக என்று அழைக்கிறது ஏர்க்காடு.

— 'கௌசிகன்'

# அம்மா

ரா. கணபதி

## 34. அமெரிக்க குருவாயினும் அமரிக்கைப் பிள்ளைதான்

அரக்கர் வதம் முடித்து, அயோத்தி திரும்பி வந்து நமஸ்கரித்த ராம லக்ஷ்மணர்களை அவர்களது தாய்மார் கண்ணால் காண முடியாமல் நீர் மறைத்தது. பிள்ளைகளை ஸ்பரிசித்து அந்த சுகத்திலிருந்தே அவர்கள் திரும்பி வந்ததை உணர்ந்தனர்.

-- ரகுவம்சம் 14, 2

அம்மாவின் செல்ல நரேன் உலகம் போற்றும் ஸ்ரீமத் விவேகாநந்த ஸ்வாமியாகத் திரும்பி விட்டார். அவர் வேதாந்த தர்மத்தைப் பாரெங்கும் பரப்பி, ராமகிருஷ்ணரின் திருநாமத்தை மேல்நாட்டினரிடம் உலவ விட்டதில் அம்மா அடைந்த ஆனந்தம் பெரியது தான். 'சான்றோன் எனக் கேட்ட தாயாக'ப் புளகித்தாள். ஆனால் அதை விட வேறொன்றிலேயே அவளுக்கு அதிக இன்பமும், திருப்தியும், நிம்மதியும் உண்டாயின. விவேகாநந்தரின் நாவசைந்தால் டாலர்களைக் கொட்டக் கூடிய பக்தர்கள் ஏற்பட்டுவிட்டனர். ''அப்பாடா, இனி என் குழந்தைகள் பரதேசிகளாகத் தவிக்க வேண்டாம். என் பிரபுவை அண்டி வந்த குழந்தைகள் ஆண்டிப் பண்டாரங்களாகத் திரியறதிலே துளிக்கூட முகம் சுளிக்கவேமாட்டா என்கிறது வாஸ்தவம். ஆனால் அந்தத் தெய்வக் குழந்தைகளுக்கு வயிறு ரொம்ப ஆகாரம், மானத்தைக் காப்பாற்ற வஸ்திரம், குளிர் வெயிலுக்குக் காப்பா ஒரு குடிசைக்கு எந்நாளும் குறைவு இருக்கப் படாதுன்னு டாகூரை ஓயாமல் வேண்டிண்டே இருந்தேன். காசி, பிருந்தாவனத்திலே வசதியா இருக்கிற சந்நியாசிகளைப் பார்க்கறச்சே எல்லாம் என் தரித்திரக் குழந்தைகளை நினைச்சுத்தான் அழுவேன். கடைசிலே டாகூர் என் பிரார்த்தனையைக் கேட்டுட்டார். நரேன் மூலமாகக் குழந்தைகள் எல்லாருக்கும் நியாயமான தேவைகளை எல்லாம் பூர்த்தி பண்ணிட்டார்'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினாள் அம்மா.

விவேகாநந்தர் உள்ளிட்ட ராமகிருஷ்ண மட சந்நியாசிகளுக்காக இச்சமயத்தில் அம்மா செய்துவந்த தியாகம் அற்புதமானது.

தங்களால் சமாளிக்க முடியாத பாபாத்மாக்களான அடியார்களையும், மடத்தின், கட்டுப்பாட்டுக்கு அடங்காத ஊழியர் பிரம்மசாரி ஆகியோரையும் அந்தத் துறவிப் பசங்கள் அம்மாவிடமே அனுப்பி வைக்கலானார்கள். அன்பையும் அநுதாபத்தையும் பொழிந்தே அவர்களைச் சீர்திருத்தி விடுவாள் அம்மா. பிரேமாநந்தர் அம்மாவைக் குறித்துச் சகாக்களுக்குச் சொன்னார்: ''நம் புனித மாதாவைப் பூரணமாகப் புரிந்து கொண்டவர் யார்? அவளிடம் மகோந்நதத்தின் இழையைக் கூடக் காண முடியாது. டாகூரிடமாவது வித்யாசக்தி வெளிப்பட்டது. ஆனால் அம்மா! அவளது ஞான பூரணம் மறைந்தே உள்ளது. இப்படிச் சக்தியை அடக்கியதே மகா சக்தியாக இருக்கிறது! ஜெய் மாதா! ஜெய் மாதா! ஜெய் மகாசக்தி மாதா! நம்மால் செரிக்க முடியாத விஷ ஜந்துக்களை எல்லாம் அம்மாவிடம் அனுப்பி வைக்கிறோம். அவள் அதையும் மடியில் எடுத்துப் போட்டுக் கொள்கிறாள். எல்லையற்ற சக்தியோடு கூடிய உவமையற்ற தயை! ஜெய் மாதா! அவள் எங்கே, நாம் எங்கே? டாகூரும்கூட இப்படி விஷத்தை எல்லாம் வாரி எடுத்துக் கொண்டு நாம் பார்த்ததில்லையே! அவர் தமது அத்தியந்த சீடர்களை எத்தனை சோதனைகளுக்குப் பிறகு எத்தனை ஜாக்கிரதையோடு ஏற்றுக் கொண்டார்? இங்கு அம்மாவின் சந்நிதியில் என்ன பார்க்கிறோம்? அற்புதம்! அவள் அனைவருக்கும் தஞ்சம் தருகிறாள். அத்தனை கைகளிலிருந்தும் விஷத்தை எடுத்து உண்டு அப்படியே ஜீரணித்துக் கொள்கிறாள். ஜெய் மாதா!''

ஆதியில் ஈசுவரன் விஷத்தை உண்ட போது, வேண்டாம் எனத் தடுத்துத் தொண்டையைப் பிடித்தாள் தேவி. இப்போது அதற்குப் பிரதியாக ஈசுவரனும் ஏற்கத் தயங்கிய விஷத்தை, தான் மகிழ்ச்சியுடன் ஏற்றாள் போலும்! ராமகிருஷ்ணரிடம் செல்லத் தயங்கியிருக்கக் கூடியவர்களும் அம்மாவிடம் வரத் தொடங்கினர்.

**மரம் பழுத்தால் வௌவாலை வா என்று கூவி**
**இரந்தழைப்பார் யாவருமங்கில்லை -**
**சுரந்தமுதம்**
**கற்றா தரல்போல் கரவா தளிப்பரேல்**
**உற்றார் உலகத் தவர்.**

தனது அமுத தரிசனமும், அமுத நல்லுபதேசமும், அமுத மந்திரோபதேச மும் தந்து பலரது விஷத்தை வாங்கிக் கொள்ளலானாள் அம்மா. ராமகிருஷ்ணர் அவளுக்கென்று குறிப்பிட்டிருந்த அவதாரப் பணி மல்லிகை மலர்வது போல் பொல்லென்று விகசிக்கலாயிற்று.

டாகூர் மறைந்தபோது அவளுக்கு வயது முப்பத்து மூன்றுக்குச் சிறிது குறைவு. அவர் போனபின் முப்பத்து மூன்று வருஷங்களுக்குச் சிறிது அதிகம் ஜீவித்தாள். இதில் முதல் பதினோராண்டு குடத்துள் விளக்கு; அடுத்த பதினோராண்டு கூடத்து விளக்கு; கடைசிப் பதினோராண்டு குன்றின்மேல் விளக்கு.

கல்கத்தாவில் அவதாரப் பணியைத் தொடங்கியபோதே அவளிடம் ஓர் அரிய மாறுதல். கிராம மக்களுக்குத் தனிக் கொச்சை அகராதி உண்டு. மேலும் வார்த்தைகளின் இறுதியில் இழுத்துப் பிராஸம் போடுவார்கள். அம்மாவும் இப்படிப் பேசியவள்தான். இப்போது, கல்கத்தா நகர வாசிகள் அவளை வந்தடைந்தபோது, அழகாக அந்த நாகரிக பாணியிலேயே பேசினாள். கிராமத்துக்குப் போனால் அங்கே இந்த மேட்டிமையைக் காட்ட மாட்டாள். பழைய கொச்சைக்கே திரும்பி விடுவாள்.

ஆடவர்களை அம்மா அதிகம் அநுமதிக்காததால் பெண் பக்தைகள் நிறைய வந்தனர். அவர்களுக்கு அம்மா பெரிய ஆறுதலாக இருந்தாள். அவர்களுக்குத் தெரிந்திருந்த மற்ற சந்நியாசிகளையும் ஞானிகளையும் போலன்றி அம்மா அவர்களிடம் சுமுகமாக, சுலபமாக, சகஜமாக, சரஸமாக, சரளமாகப்



பழகியது அவர்களுக்குப் பாலைவன ஊற்ருக இருந்தது. வந்தவர்களுக்கெல்லாம் உபசாரம் செய்த மகாபுருஷி அல்லவோ அம்மா? அதோடு, முதல் முறையே பக்தர்களின் வீட்டு விஷயங்களைச் சொந்த சமாசாரம் போன்ற நெருக்கத்துடன் விசாரிப்பாள். பக்தையிடம், ''உங்கள் நாட்டுப் பெண் எங்கே, உங்கள் பேரன் எங்கே?'' என்று கேட்க மாட்டாள். ''என் நாட்டுப் பெண் எங்கே, என் பேரன் எங்கே?'' என்றே கேட்பாள். ''சரியான வெயிலில் வந்திருக்கேளே!'' என்று சொல்லிக் கொண்டு, தானே அவர்களுக்கு விசிறி விடுவாள். ''ஓய்வு எடுத்துக்கோங்கோ'' என்று சொல்லித் தன் தலையணையை அவர்களுக்கு எடுத்துப் போடுவாள். சமய சரித்திரமே கண்டிராத நேசநெருக்கத்தைப் பெருக்கவிட்ட அம்மாவிடம் அடியார்கள் திரண்டு வந்ததில் அதிசயம் என்ன?

விவேகாநந்தருடன் நிவேதிதா தேவியும், ஸ்ரீமதி ஓல்புல், குமாரி மக்லியாட் ஆகிய மேல்நாட்டு சிஷ்யைகளும் வந்திருந்தனர். இவர்களை அம்மா தன் புத்திரிகளாகவே வரவேற்ருள். அம்மா அவர்களோடு சேர்ந்து அமர்ந்து உண்டதை அறிந்து விவேகாநந்தரின் மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை. அம்மாவுக்கு ஆங்கிலம் தெரியாது. மொழி பெயர்ப்பாளரை வைத்துக் கொண்டு பேச்சு நடக்கும். ஆனல் அதுவும் இரண்டாம் பட்சம்; அன்புக்கு மொழி அவசியமில்லை அன்ருே?

''பகவான் விவேகாநந்தருடைய தர்மபுத்திரி...ஸ்ரீமதி நிவேதிதா தேவி'' என்று மகாகவி பாரதியார் போற்றும் மாதரசி நம் அம்மாவின் அசட்டுக் குழந்தை—''கூகி''—என்றே தன்னைச் சொல்லிப் பெருமை கொண்டாள்.

''ஸ்ரீ ராமகிருஷ்ணர் விளக்கிய ஆதரிச பாரத ஸ்திரீ தர்மத்தைப் பூர்த்தி செய்யும் கடைசி வார்த்தை அம்மாவே'' என்பாள் நிவேதிதை.

''பாரத ஸ்திரீ தர்மம்'' என்று அவள் சொன்னது குறிப்பிடத்தக்கது. அம்மாவிடம் நமக்குள்ள பக்தி காரணமாக, **உலகுக்கெல்லாம்** அவளே பெண்குல உதாரணம் என்று சொல்லத் தோன்றலாம். அவளது அன்பு, உழைப்பு, எளிமை, ஆன்மிகம் இவை உலகப் பெண் குலம் முழுதுமே பின்பற்ற வேண்டியது என்பதும் உண்மை தான். இருப்பினும் இந்தியச் சூழ்நிலையில் பெண்களுக்கென விசேஷமாக ஒரு கற்பு நெறியும், அடக்கம், நாணம்—இவையும் தொன்றுதொட்டு வளர்க்கப் பட்டு வந்திருக்கின்றன. இவற்றையே அம்மா சிறப்பாக மூர்த்திகரித்தாள்.

ஒரு நாள் அம்மா, ''உனக்காகத்தான் இதைப் பண்ணினேன்'' என்று கூறித் தனது ஓயாத அலுவல்களுக்கிடையே கம்பளி நூலால் அலங்காரப் பின்னலிட்டுச் செய்த விசிறியை நிவேதிதைக்கு அளித்தாள்.

நிவேதிதை நெகிழ்ந்து போனுள். அந்த விசிறியைச் சிரசில் ஒற்றிக் கொண்டாள். மார்போடணைத்துக் கொண்டாள். ''என்ன நேர்த்தி, என்ன கவர்ச்சி!'' என்று பாராட்டினுள்.

நிவேதிதை ஓர் அழகிய நிக்கல் பேடகத்தை அம்மாவுக்கு அளித்தாள் — அன்பு நிவேதனமாக. அதிலே அம்மா ராமகிருஷ்ணரின் கேசத்தைப் போட்டு வைத்தாள். நிவேதிதைக்கு நெஞ்சு நிறைந்தது. ''அம்மா, நாங்கள் பூர்வ ஜன்மத்திலே ஹிந்துக்களாகத்தான் இருந்தோம். மேல்நாடுகளில் குருமஹராஜின் உபதேசத்தைப் பரப்ப வேண்டுமென்றே இப்போது அங்கே பிறந்திருக்கிறோம்'' என்ருள்.

இன்னெரு முறை அஸ்ஸாம் பட்டுத் துணி ஒன்றை அம்மாவுக்கு அளித்தாள் நிவேதிதை. அம்மா தனக்கு அன்புடன் வழங்கப்படும் அளிப்புக்களை எந்நாளும் போற்றி வைத்திருப்பாள். ''பண்டம் முக்கியமில்லை. அது ஏற்படுத்தற ஞாபகம்தான் முக்கியம்'' என்று அழகொழுகச் சொல்வாள். வெகு காலத்துக்குப் பின் — நிவேதிதை மண்ணுலகைவிட்டுப் பொன்னுலகு புகுந்தபின் — ஒரு நாள் கௌரீசுவராநந்தர் அம்மாவின் பெட்டியிலிருந்த துணிமணிகளைக் காயப் போடும்போது, மட்கிக் கிடந்த இந்தப் பட்டுத் துண்டை வெளியில் எடுத்தாள். ''அம்மா! இது அள்ளுகந்தலாயிடுத்து. வெளியிலே எறிஞ்சுட வேண்டியதுதான்'' என்ருர். ''குழந்தே, அப்படிச் சொல்லாதேடா! அது நிவேதிதா கொடுத்தது. எத்தனை பிரியத்தோடு கொடுத்தா? எங்கே, அதைக் கொண்டா'' என்ருள். ஒரு குழந்தையை வாங்கிக் கொள்வது போல் அதை வாங்கிக் கொண்டாள். அப்பளமாக நொறுங்கியிருந்த மடிப்புக்களிடை பூச்சி அரிக்காமலிருக்க ஏதோ வாசனைப் பொடியைக் கவனமாகத் தூவினுள். ''இந்தா, ஜாக்கிரதையாப் பெட்டியிலே வை'' என்று கொடுத்தாள்.

நிவேதிதா காலமானபோது அம்மா ஆருத் துயரம் அடைந்தாள். அவளது கண் மட்டும் அழவில்லை. உள்ளத்தின் உள் பகுதியே அழுதது. '''மகாத்மா மாண்டா அந்தராத்மாவே அலறும்'னு

உலக வாழ்வின் தத்தளிப்பில் இருந்து கொண்டே ஆத்ம சாந்தி காண்பது கடினம். எனவே, அனைவரும் அவ்வப்போது உலக ஆரவாரத்தைவிட்டு, குறைந்தபட்சம் பன்னிரண்டு நாட்களாவது வேறெந்த சிந்தையுமின்றிச் சாந்தமான ஓரிடத்தில் தனிமையாக இருந்து பக்தியில் பழக வேண்டும். அப்போதுதான் மனம் பகவானிடம் தோய்ந்து நிற்கும். பாலைப்புறையிட்ட பானையைக் குலுக்கிக் கொண்டே இருந்தாலோ, அல்லது அந்தப் பாலைப் பானைக்குப் பானை மாற்றிக் கொண்டேயிருந்தாலோ அது தோய்ந்து தயிராவதில்லை அல்லவா? உலக விஷயங்களில் தாவிக் கொண்டேயிருக்கும் மனத்திலும் பகவான் தோய்ந்து உறைவதில்லை.

பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

பழமொழி சொல்ருளே, எத்தனை உண்மை!'' என்ருள்.

ஒரு நாள் கிறிஸ்துவத் திருமணச் சடங்கை விவரிக்குமாறு மேல் நாட்டு சிஷ்யைகளிடம் அம்மா கேட்டாள். அம்மா அன்பு மயமாக, இன்ப மயமாக அமர்ந்திருந்ததால் அந்தப் பெண் குழந்தைகளுக்கு மிகுந்த உத்ஸாகமாயிற்று. ஒரு சிறிய நாடகமாகவே தங்களது திருமணச் சடங்கை நடத்திக் காட்டினர். ஒருத்தி மணமகன் ஆனுள். இன்னெருத்தி மணமகள் ஆனுள். மூன்ருமவள் திருமணம் நடத்தி வைக்கும் பாதிரி ஆனுள். ''பண்ணி வைக்கிற சாஸ்திரிகள்'' என்ருள் அம்மா சிரித்து.

'சாஸ்திரிகள்' கிறிஸ்துவத் திருமணத்தில் தம்பதி செய்யும் சத்தியப் பிரதிக்ஞையை ஓதினர்: ''மேன்மையுற்ற போதும் தாழ்வுற்ற போதும், செல்வம் மிகும்போதும் வறுமை வந்துற்ற போதும், ஆரோக்கியத்திலும் பிணியிலும், — மரணம் நம்மைப் பிரிக்கிற வரையில் நாம் ஒன்று சேர்ந்திருப்போம்.''

இந்த வாக்குகளைக் கேட்டு அம்மா குதூகலித்துப் பூரித்தாள். ''மறுபடி சொல்லுங்கள், மறுபடி சொல்லுங்கள்'' என்று பன்முறை அதைக் கூறக் கேட்டு மகிழ்ந்தாள். ''ஆஹாஹா! என்ன தர்ம மயமான வார்த்தைகள்!'' என்ருள்.

நிவேதிதை மேரியன்னையைத் தியானித்தபோது நம் அம்மாவின்முகமே அவளுக்கு மறுபடி மறுபடி தோன்றியதாம்.

ஸ்ரீமதி ஓல்புல், விவேகாநந்தரின் அமெரிக்க சிஷ்யர்களில் முக்கியமான இன்னொருத்தி. இவள்தான் நம் அம்மாவைப் புகைப்படத்துக்கு அமருமாறு வற்புறுத்தியவள். நிவேதிதா அம்மாவின் சேலையை அவள் திருமேனி படிய நீவிவிட்டு, முக்காட்டுக்குள் மூழ்குவதிலேயே முனைப்பாக இருந்த அவளது சாந்த வதனத்தைப் பிடிவாதமாக வெளிப்படச் செய்தாள். கோலாப்—மா அம்மாவின் முதுகுப் புறத்தில் தொங்கும் நீண்ட கேசத்தைப் படத்தில் விழச் செய்வதற்கு என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தாள். நிவேதிதா அந்தக் கூந்தலை எடுத்து அம்மாவின் முன் புறமாக நீள நெடுகப் படிந்து விழுமாறு செய்தாள். அம்மாவும் 'பரப்பிரம்மம், ஜகந்நாதம்' என்று அவர்கள் இழுத்த இழுப்புக்கெல்லாம் இசைந்து உட்கார்ந்திருந்தாள். அப்போது, அதாவது 1898ல், எடுத்த படம்தான் இப்போது பெருமளவில் எங்கும் காணப்படுவது. அப்போது அம்மாவுக்கு வயது நாற்பத்தைந்து.

நிவேதிதை பெண்களுக்காக ஒரு பள்ளியை கல்கத்தா போஸ்பரா சந்தில் ஆரம்பித்தபோது அம்மா மகிழ்ச்சியுடன் அதைத் திறந்து வைத்தாள். பெண்களுக்கு எழுத்தறிவு அவசியம் என்பது அம்மாவின் தீர்மானமான கருத்து. அக்காலத்தில் பெண்கள் பள்ளிக்குப் போனுல் உலகமே புரண்டுவிடும் என்று பயந்தவர்கள் உண்டு. அம்மா புரட்சி மனப்பான்மை அற்றவள் எனினும் தன் மனத்துக்கு நிச்சயமாகச் சரியென்று தோன்றுவதைத் தயங்காமல் செய்வாள் என்பதற்கு இந்தப் பள்ளியை அவள் திறந்து வைத்தது ஒரு சான்று. பள்ளியை மௌனமாகவே திறந்து வைத்தாள். சொற்பொழிவு எதுவும் நிகழ்த்தவில்லை. அம்மா தன் ஆயுள் முழுதும் மேடை ஏறிப் பேசியதில்லை.

**ஸ்**வாமி விவேகாநந்தர் 1898 அக்டோபர் மாதம் பேலூருக்குத் திரும்பினுர். துர்கா பூஜை கொண்டாடப்பட்டது. ஸ்வாமிஜிக்குக் காய்ச்சல் கண்டிருந்தது. எனினும், பூஜையின் இரண்டாம் நாள் பிரத்தியட்ச துர்க்கையை வணங்க விவேகாநந்தர் மற்ற குருபாயிக்களுடன் அவளது இருக்கைக்குச் சென்ருர். இதுதான் அவர் அமெரிக்க விஜயத்துக்குப் பின் அம்மாவிடம் முதன் முறையாக வருவது. அவரது இதயம் எப்படி அதைத் தாங்க முடியாமல் நைந்து கிடந்ததோ அதனிலும் நைந்திருந்தது அம்மாவின் இதயம். அவளுடைய சொந்த நரேன் வருகிருன் என்றபோது, யாரோ அசலார் வந்தால் ஓர் அச்சமும் பயிர்ப்பும் கொள்வாளே அதுபோல் உணர்ந்தாள். தலையிலிருந்து கால் வரையில் சேலையை இழுத்து மூடிக் கொண்டு ஒரு மூலையில் ஒடுங்கி நின்ருள் தேவி. தன் ஸ்வரூபத்தைத் திடுமெனக்

கண்டால் அந்தப் பிள்ளை திணறி விடுமென்றே அப்படிச் செய்தாளோ?

அமெரிக்க மாகண்டத்தையும், பாரத உப கண்டத்தையும் தன்னிடம் புரட்டிக் கொண்ட ஞான சிம்மமான ஸ்வாமிஜி பெண் மான் குட்டி என மருண்டு வந்தார் அவள் முன்னால். அப்படியே சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டார். அவர் எழுந்தபோது அம்மாவால் தன் அம்மாத்துவத்தைத் தடுக்க முடிய வில்லை. அருமைப் பிள்ளையின் தலையைத் தொட்டுக் கோதினாள். ஆசி சொன்னாள். ஆனால் அவள் குரல் அவளுக்குள்ளேயே ஒடுங்கிக் கொண்டது. ஸ்வாமிஜி சற்றுத் தொலைவில் சென்று நின்றார். அம்மா அவரது சௌக்கியத்தைப் பற்றி வினவிய ஓரிரு வார்த்தைகளையும், அருகில் இருந்த கிருஷ்ணலால் தான் கேட்டு, விவேகாநந்தருக்கு உரக்கக் கூறினார்.

''காச்மீரிலே எல்லாம் சௌகரியமாயிருந்துதா? டாகூர் கிருபையிலே உடம்பு சரியா இருக்கியா, அப்பனே!'' என்று அம்மா வினவியதுதான் தாமதம், விவேகாநந்தர் பழைய செல்லப்பிள்ளையாக மாறிவிட்டார். ஞான மலையானவர் பச்சைப் பாலகனாகிப் பேசினார் :

''போ, அம்மா! உன் டாகூர் லக்ஷணத்தை உன்கிட்ட சொல்லாமல் வேறே யாருகிட்டே சொல்வேன்? கேட்டுக்கோ! காச்மீர்லே என்கிட்ட ஒரு சாதாரண பக்கிரிக்கு அசூயை வந்துடுத்து. 'வயிற்று உபாதி வந்து நீ மூணு நாளிலே நீ இங்கே யிருந்து கிளம்பாட்டாப் பாரு'ன்னு என்னைச் சபிச்சான். அவன் சொன்ன மாதிரியே எனக்கு வயிற்று நோய் வந்து தவிச்சேன். அந்த இடத்தைவிட்டே ஓடோடி வந்துட்டேன். உன் டாகூர் இந்த அல்பப் பக்கிரிகிட்ட ஒண்ணும் பண்ணிக்க முடியலை'' என்றார்.

அம்மா தனக்குள் சிரித்துக் கொண்டாள். மெல்லிய குரலில் அவள் சொன்னதை கிருஷ்ணலால் பலமாக மொழிந்தார்: ''மாந்த்ரீகம், சூனியம், ஆபிசாரகம் எல்லாம் ஒரு ரகசியமான சாஸ்திரம்டா குழந்தை! அதுக்கு உரியபடி ஒருத்தர் அதுகளைப் பண்ணினா அது பலன் தரத்தான் செய்யும். அதுவும் ஒரு தர்மப்படி நடக்கிறதுன்னு நாம் அதுக்குத் தலை வணங்கித்தான் போகணும். டாகூரைப் பார்த்ததில்லையா? ஒரு பல்லி சொல்லுக்குக்கூட அவர் மதிப்புத் தந்தார். யாராவது தும்மினால் காரியத்தை நிறுத்திவிடுவார். ஆனைப்பட்ட ஆதி சங்கரரே சூனிய மந்திரத்துக்குக் கட்டுப்பட்டுத் தம் சரீரம் அவஸ்தைப்படறதுக்கு அநுமதிச்

> விடு கட்டி முடிந்தபின் சாரத்தைப் பிரித்துவிடுகிறோம். எனினும், முதலில் சாரம் கட்டிக் கொண்டாலே வீட்டை எழுப்ப முடிகிறது. இவ்விதமே சாதனை முடிவில் சடங்கும், உருவ வழிபாடும் அவசியமில்லாமற் போனாலும் இவற்றை வைத்தே ஆத்மிகப் பயிற்சியைத் தொடங்க வேண்டியிருக்கிறது.
>
> பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

சார்னு சொல்வாளே! ஹாலதரர் சாபம் கொடுத்ததாலே நம்ம டாகூர் ரத்த வாந்தி எடுக்கலியா? அதேமாதிரிதான், உன் சரீரமும் அந்த சாஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டு அவதிப்பட்டிருக்கு.''

''போம்மா நீ என்னமோ சொல்றே! என்னை நான் எப்படிக் கவனிச்சுக்கிறேன் என்கிறது பற்றி இப்போ கேள்வி இல்லை. டாகூர் தம்மையே சாபத்துக்கு ஆளாக்கிண்டதைப் பற்றியும் கேள்வி இல்லை. என்னைச் சாபம் தாக்கினபோது உன் டாகூர் என்னை ஏன் காப்பாற்றலைன்னு கேட்கிறேன்'' என்று அம்மாவிடம் ரோஷத்துடன் கேட்டார்.

அம்மா மலர்ந்து சிரித்தாள், வாய் விட்டுச் சொன்னாள்: ''சரிடா, குழந்தை! டாகூர் கையாலாகாதவர்னே வைச்சுக்கோ. அதுக்காக என்ன பண்ண முடியும்? அவர்கிட்டேயிருந்து நீ மீளறத்துக்கு வழியே இல்லையே! அவர் உன்னைத் தம் பஞ்சகச்சத்தோடே சேர்த்துக் கொசுவிச் சொருகிண்டிருக்காரே!'' என்றாள்.

இச்சரிதத்தில் பிற்பாடு நிகழ்ந்த ஒரு சம்பவத்தையும் இங்கேயே பார்த்து விடலாம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் துர்கா பூஜையை விமரிசையாகக் கொண்டாட ஏற்பாடு செய்தார் விவேகாநந்தர். ''அம்மா பேரிலேதான் பூஜாசங்கல்பம் பண்ணணும். நாமெல்லாம் காசில்லாத ஆண்டிகள். அம்மாதான் இத்தனைக்கும் யஜமானி. நம்ம பேரிலே பூஜை செய்யக் கூடாது'' என்றார்.

அம்மாவுக்கு அழைப்பு விடுக்கச் சென்றார். இப்போது ஸ்வாமிஜி இரண்டாம் முறை மேல் நாடு சென்று, தாம் முதலில் தூவிய விதைகள் களகளவென முளைத்திருப்பதைப் பார்த்துத் திருப்தியுடன் திரும்பியிருந்தார். முதல் முறை அவர் அந்நியச் சீமை போய் வந்தபோது, பேசவொண்ணாமல் உணர்ச்சி மோதலில் சிக்குண்டிருந்த அம்மா இந்த முறை ரஸமாகப் பேசினாள்: ''பாரத தர்மத்துக்கே தூதனாகப் போயிட்டு வந்திருக்கே. மகாவீரரை(ஆஞ்சநேயர்)ப் போல் கடல் தாண்டிப் போய்த் தூது

சொல்லி வெற்றி வீரனாக வந்திருக்கே'' என்றாள்.

அவளைவிட அதிநயமாக விடைபகர்ந்தார் விவேகானந்தர்: ''இல்லையம்மா, நான் மாருதியில்லை; மாருதியைவிட பாக்கியசாலி. மகாவீரனுக்குக் கிடைக்காத உன்னோட கிருபைஎனக்குக் கிடைச்சுதோன்னோ? அதனாலே, அவருக்கு இருந்த சிரமம் எதுவும் எனக்கில்லை. அவர், தானாக சமுத்திரத்தைத் தாண்ட வேண்டியிருந்தது. என்னையோ நான் எந்தத் தேசங்களுக்குப் போனேனோ, அவாளைச் சேர்ந்த கப்பல்களே சௌகரியமாக அழைச்சுண்டு போச்சு. மகா வீரருக்குப் போன இடத்திலே எதிர்ப்பு இருந்தது. ராம துவேஷிகளைப் பார்த்தார். ஆனால் நான் போன இடத்திலே எல்லாம் டாகூர் மகிமை ஜனங்கள் கிட்ட நன்றாகப் பரவியிருந்தது. அவா என்னை அன்போடு ஆர்வத்தோடு வரவேற்று, டாகூருடைய தூதுமொழியைக் கேட்டுண்டா.''

துர்கா பூஜையன்று அம்மா மடத்துக்குச் சென்றாள்.

மௌனத்தின் மதுரமும் மகிமையும் அவளைச் சூழ்ந்திருக்கப் பரம சாந்தையாக ஸ்ரீ ராமகிருஷ்ணரின் திருஉருவப் படத்தை எடுத்துக் கொண்டு சென்றாள். அங்கோர் இடத்தைத் தன் கையாலேயே பெருக்கி மெழுகிச் சுத்தம் செய்தாள். அங்கு டாகூரின் படத்தை வைத்துப் பூஜை செய்தாள்.

சுற்றிலும் நடந்து கொண்டிருக்கும் கட்டுமான வேலைகளைக் காட்ட விவேகானந்தர் அவளை அழைத்துச் சென்றார். அவருக்குப் பின்னாலேயே, பசுபோல் சென்றாள் அம்மா. ''அம்மா, நீ சுதந்திரமா இங்கே சஞ்சாரம் பண்ணும்மா. இது முழுக்க உன் சொந்தப் பூமி'' என்றார் ஸ்வாமிஜி தொண்டையடைக்க.

''ரொம்ப நாள் முன்னாடியே டாகூர் இங்கே வந்து குடிபுகுந்துட்டதாகக் காட்சி கொடுத்திருக்கார்'' என்றாள்.

விவேகானந்தரைப் பெற்ற புவனேசுவரி தேவிதான் அங்கு சுதந்திரமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்தாள். ''எல்லாம் நரேன் காரியம்'' என்று வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டு தோட்டத்திலிருந்த காய்கறிகளைப் பறித்துக் கொண்டிருந்தாள்.

விவேகானந்தர் அவளிடம் வேகமாக வந்தார். ''இங்கே என்ன பண்ணிண்டிருக்கே! அம்மா வந்திருக்காளே, அவாளை வந்தனம் பண்ணிக்காமல், காய்கறி சேகரிச்சுண்டிருக்கியே! எல்லாம் உன் பிள்ளை பண்ணினதுன்னு நினைச்சு ஸ்வாதீனம் கொண்டாடறே போல இருக்கு. அம்மா தாயே, நீ அப்படி நினைச்சா அது தப்பு. இதையெல்லாம் செஞ்ச சக்தி வேறே தெரியுமா? இந்த நரேன் அதன் எதிரில் ஒண்ணுமேயில்லை, தெரிஞ்சுக்கோ'' என்றார்.

தன் மெய்யான அம்மாவாக அவர் கருதிய சாரதையிடத்தில் நெருங்கி நின்றார் விவேகானந்தர். ''அம்மா, எனக்கு ஒரு வரம் தருவாயா?'' என்றார்.

அம்மா புன்முறுவலுடன் நின்றாள்.

''எனக்கு ஜுரம் வரணும்னு வரம் தா'' என்றார் ஸ்வாமிஜி.

அவ்வளவுதான்! இவள் வரம் தர வேண்டும் என்று காத்திராமல், அவரே அவளிடமிருந்து வரத்தை எடுத்துக் கொண்டுவிட்டார். ''அம்மா, ஜுரம் வந்துடுத்து'' என்றார்.

சாரதை அந்த மகாபுத்திரனின் விரிந்த நெற்றியில் விரலை வைத்துப் பார்த்தாள். தணலாகக் காய்ந்தது. ''இது என்னடா குழந்தே!'' என்றாள்.

''கவலைப்படாதேம்மா. இங்கே குருபாயிக்களெல்லாம் பூஜைக்காக அற்புதமாக உழைக்கறதுகள். ஆனாலும் என் அவசரத்துக்கு அவா உழைப்பும் போதவில்லை. முன்கோபத்திலே எதையாவது சுள்ளுனு சொல்லி அந்தக் குழந்தைகளைக் கஷ்டப்படுத்துகிறேன். ஜுரம் வந்துடுத்துன்னு நான்பாட்டுக்குப் போய்ப் படுத்துக்க வேண்டியது தானே! அவா என் உபத்திரவ மில்லாமல் ஜமாய்ச்சிடுவா'' என்றார். சொன்னவாறே படுக்கப் போய்விட்டார்.

அன்றைய விழாக்கள் பூர்த்தியானதும் அம்மா நேரே விவேகானந்தர் படுத்திருந்த இடத்துக்குச் சென்றாள்.

''என் அன்பு நரேன். பூஜை முடிஞ்சுடுத்துப்பா! எழுந்திரு'' என்றாள்.

ஜுரம் வருவதற்கு மனமறிந்து வரம் தராவிட்டாலும் அது போவதற்கு வரம் தந்துவிட்டாள். உடனே விவேகானந்தர், ''காய்ச்சல் போயிடுத்து பார்த்தியா?'' என்று கூறிக் கொண்டே துள்ளி எழுந்தார்.

மடத்தில் முக்கியமான பகுதிகள் கட்டி முடிந்ததும் 1898 டிஸம்பர் 9ந் தேதி, விவேகானந்தர் தமது திருத்தோளில் டாகூரின் அஸ்தி கலசத்தை எடுத்துச் சென்று, பேலூரில் நிரந்தரமாகப் பிரதிஷ்டை செய்தார். அம்மாவின் பாததூளியையும் பிரதிஷ்டை செய்தார். சில சாதுக்களும் அங்கேயே வாசம் தொடங்கினர். ''என் குழந்தைகளுக்குச் சொந்த இடம் கிடைச்சுது. அப்பாடா!'' என்று அம்மா ஆசுவாசப் பெருமூச்சுவிட்டாள்.

மகிழ்ச்சிகரமாகச் சிறிது காலம் உருண்டுவிட்டதே! கருமுகில்கள் வந்து சூழ்ந்தன, பயங்கரமாக இடித்துக் கொண்டு!

(தொடரும்)

# ராக்:போர்ட்
# பொருளாதார அமைப்பை வலுப்படுத்துகிறது



நமது கிராமங்களில் பொருளாதாரப் புரட்சி நிகழ்ந்துவருகிறது. நீர்ப்பாசன அமைப்புக்-களின் பயனுக மேலும் செழுமையான பயிர்கள் நாட்டுப்புறங்கள் முழுவதிலும் புதுச் செல்வத்தைப் பரப்பிவருகின்றன. மண் குடிசைகள் இருந்த இடங்களில் செங்கல் கட்டடங்கள் தோன்றிவருகின்றன. நமது விவசாயச் செல்வத்தைப் பத்திரமாகப் போற்றிககாக்க அங்கங்கே கிடங்குகள் தோனறிவருகின்றன.

இந்த முன்னேற்றப் பாதையின் ஒவ்வொரு அடியிலும், பொருளாதாரத்திற்குத் திண்மையை-யும், வலுவையும் தந்து, புரட்சிககுப் புத்தூக்கம் அளிக்கிறது ராக்:போர்ட்.





## ராக்:போர்ட்
டால்மியா சிமெண்ட்







**டால்மியா சிமெண்ட் (பாரத்) லிட்.,**
பதிவுபெற்ற அலுவலகம் மற்றும் ஆலைகள் :
டால்மியாபுரம், தமிழ் நாடு.

தலைமை அலுவலகம், சிந்தியா ஹவுஸ், புது டெல்லி-1.

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்,
சிமெண்ட் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிட்.,
டால்மியாபுரம், தமிழ் நாடு.

# அம்மா

## ரா. கணபதி

## 35. லோகமாதாவை மயக்க யோகமாயா!

தேவி பகவதியான அந்த மகாமாயை
ஞானிகளின் சித்தத்தையும் வலுவிலே
இழுத்து மோகத்தில் ஆழ்த்துகிருள்!
- துர்கா ஸப்த சதீ

**யோ**காநந்தருக்கு அடித்த விசேஷ யோகத்தை முன்பு பார்த்தோம். அம்மாவிடம் முதன் முதலில் மந்திரோபதேசம் பெற்ற பாக்கியசாலி அவரே அன்றோ? அன்றிலிருந்து பன்னிரண்டாண்டுகள் அம்மாவின் அத்தியந்த கிங்கரராகப் பணிபுரிந்தார். அவர் ஒருவருக்கே இப்படி யோகம் அடிக்கக் கூடாதென்று போலும், விதி சதி செய்தது. விஷக் காய்ச்சலில் விழுந்தார் யோகாநந்தர்.

அம்மாவின் மனத்தில் கருமுகில்கள் குமுறின.

யோகாநந்தரின் நோய் முற்றியது. பிழைப்பது துர்லபம் என்ருயிற்று.

அம்மா பதறினுள். அந்தப் பதற்றத்திலும் அவளுக்கு இருந்த பரிவுப் பண்பு காரணமாக ஒரு தெளிவான யோசனைக்கு வந்தாள். யோகாநந்தர் பூர்வாசிரமத்தில் திருமணம் ஆனவர். இப்போது அம்மா அவரது பூர்வாசிரம மனைவியை அங்கு அழைத்து வந்தாள். தன் பதியின் மூச்சு நீங்கும் வரையில் உடன் இருந்து பணி செய்த அம்மாவுக்குத்தானே இன்னொரு பெண் மனம் தெரிய முடியும்? ''யோகின்! எந்த மருந்து எப்போ தரணும், உனக்கு வேறே என்னெல்லாம் செய்யணும்னு இந்தப் பெண்ணுக்கு எடுத்துச் சொல்லப்பா'' என்ருள். யோகாநந்தரோ விரக்தியுடன் கண்களை மூடிக் கொண்டார். ''உங்கள் இஷ்டப்படி பண்ணுங்கோ. எனக்கு ஒண்ணும் சொல்லணும்னு இல்லை'' என்ருர்!

நோயாளியின் பராமரிப்போடு, நோயாளியின் மனைவியை மனம் நோகாமல் பராமரிக்கிற பொறுப்பையும் அம்மாவாக இழுத்துப் போட்டுக் கொண்டாள்!

ஒரு நாள் காலை அவள் செய்கிற பூஜைக்காகப் பூ எடுத்துச் சென்ற பணியாள், அவள் கால்களை நீட்டிக்கொண்டு திக்பிரமை பிடித்தாற்போல் அமர்ந்திருப்பதைப் பார்த்தார். அவளது கன்னத்தில் கண்ணீர்க் கோடுகள் உலர்ந்திருந்தன. ''பிள்ளாய்! விடியக்காலம் டாகூர் யோகினை அழைச்சிண்டு போக வந்திருக்கிறதைப் பார்த்தேன். நான் என்னடா செய்வேன்?'' என்று கூறி 'ஹோ'என்று அழுது விட்டாள்.

ஆம், டாகூர் யோகாநந்தரை அழைத்துச் சென்றே விட்டார்! ''பிரம்மா, விஷ்ணு, சிவன் எல்லோருடனும் டாகூர் வந்திருக்கார் அம்மா'' என்று சொல்லிக் கொண்டே இறுதி மூச்சை விட்டார் யோகாநந்தர்.

அம்மா வயிறு துடிக்கப் புரண்டழுதாள்.

அருமை யோகினைப் பற்றி அம்மா உள்ளம் மெழுகாகக் கரையப் பேசுவாள். அவள் தன்னைக் கவனித்துக் கொண்ட பாரிஷதர்களுக்குச் சிரமமே கொடுக்காதவள். இருந்தாலும், ''எனக்கு ஊழியம் செய்யறது லேசான காரியமில்லை. என் பாரம் முழுவதையும் அந்தக் குழந்தை தாங்கிண்டுது. இரண்டு பேர் என் சுமை தாங்கிகள். முதல்லே யோகின்; அப்புறம் ஷரத் (சாரதாநந்தர்)'' என்பாள்.

''அவன் சாதாரண ஜீவகோடி இல்லை. ஈசுவரகோடியைச் சேர்ந்தவன். கிருஷ்ண பகவான் நம்ம ராமகிருஷ்ண பகவானு வந்தார்; இப்போ அர்ஜுனனே யோகினு வந்தான். ஆமாம், டாகூரே அப்படிச் சொல்லியிருக்கார்'' என்று அம்மா மொழிவதுண்டு.

அம்மாவிடம் யோகாநந்தருக்கு இருந்த பக்திக்கு ஓர் உதாரணம் போதும். அவர் ஒரு நாளிலும் அவள் நிற்கும்போது அவளுக்கு நமஸ்கரித்ததில்லை. அவள் நகர்ந்தபின்பே அந்த இடத்தில் தமது தலையை உருட்டி, இதயம்பட வணங்குவார். தாம் நமஸ்காரம் செய்கிற ஒரு சில விநாடிகள் அம்மாவை நிறுத்தி வைப்பதும் அபசாரமாகும் என்று அவர் கருதியதே காரணம்!

யோகாநந்தர் தேக வியோகமான சிறிது காலத்தில் இன்னோர் இடியும் விழுந்தது. சாரதையின் வக்கிர சோதரர்களிடையே விலக்காக இருந்தவர் கடைக்குட்டி அபய சரணர். படிப்பிலும் துடிப்பாக இருந்து முன்னேறி கல்கத்தாவில் வைத்தியக் கல்வி படித்து வந்தார் அபயன். இச்சமயத்தில் பிரஸன்னர், வரதன் ஆகிய அம்மாவின் இரு சகோதரர்கள் கல்கத்தாவில் புரோகிதத் தொழில் செய்து வந்தனர்.

அவர்களோடு அபயனும் இருந்து வந்தார். அந்நாள் வழக்கப்படி அந்த இளைஞனுக்குத் திருமணமாகி, மனைவி ஸுரபாலா கருவுற்றிருந்தாள். இச்சமயத்தில் காலரா நோயை அனுப்பிக் காலன் அபயனை அபகரித்துப் போய்விட்டான். ''அக்கா, ஸுரபாலா மேலே எப்படியும் ஒரு கண் வைச்சிரு'' என்று அருமைத் தம்பி மரணப் படுக்கையிலிருந்து சொல்லிப் போய்விட்டான்! ''அப்படியே செய்கிறேன்'' என்று அம்மா கண்ணீர் வழிய வாக்குத் தந்தாள்.

அதிலிருந்து சாரதாமணியின் சரிதையே ஒரு புதுத் திருப்பம் பெற்று விட்டது!

யோகாநந்தரும், அபய சரணும் மறைந்தபின் அம்மாவுக்கு வாழ்வே சப்பிட்டுவிட்டது. முன்பு ராமகிருஷ்ணர் காலமானபோது தானும் உயிரை விட்டு விட எண்ணியது போல் இப்போதும் எண்ணலானாள்.

முன்பு மரண உத்தேசம் எழுந்த போது பதிதேவர் வந்து தடுத்ததுபோல், இப்போது ஒரு பத்து வயசுப் பெண் அவள் முன் தோன்றினாள். 'இவள் யார்?' என்று அம்மாவின் வெளி மனம் யோசிக்கும் போதே, அவளது உள் மனம் எந்த யோசனையுமின்றி அந்தப் பெண்ணை இறுகப் பற்றிக் கொண்டது. இதை விளக்கி வைக்கப் பதிதேவரும் வந்தார். ''இவளையே உன் ஜீவனத்துக்கு மையமான பிடிப்பாக வைச்சுக்கோ. இவள் கிட்ட இருக்கிற ஆசையினால் உன்னை உலகத்திலே கட்டிப் போட்டுக்கோ. இன்னும் எத்தனை பசங்கள் உன்கிட்டே வரவேண்டியிருக்கு? நீ இப்போ புறப்படறதாவது?'' என்று கூறி மறைந்தார். அந்தச் சிறுமியும் மறைந்து விட்டாள்.

'யார் அந்தப் பெண்? தன் மனத்தை அப்படிச் சுண்டி இழுத்துக் கொண்டாளே! அந்த இழுப்பில் தெய்விகம்



இழையோடவில்லை. அதிலே ஓர் அஞ்ஞான பாசமே இருந்தது! அப்படி ஒரு பாசத்தை வீசி மறைந்த பாலகி யார்? அவளிடம் பாசத்தை வளர்த்துக் கொண்டாலே அதை முன்னிட்டு உலகத்தில் தனக்குப் பிடிப்பு ஏற்படும் என்று கூறி டாகூரும் இதற்கு அநுமதி தந்து போனாரே!' — இதை எண்ணி அம்மா அடிக்கடி வியந்த வண்ணம் இருந்தாள்.

கருவுற்றிருந்த ஸுரபாலா பிறந்தகத்தில் இருந்தாள். அபயனுக்கு அபய வாக்குத் தந்ததற்கேற்ப அவளைத் தன்னுடனேயே வைத்துக் கொள்ள எண்ணினாள் அம்மா. பாலிய விதவையைக் கல்கத்தாவுக்கு அழைக்க விரும்பாததால் ஜயராம்பாடிக்குச் சென்றாள். ஸுரபாலாவையும் தன் பொறுப்பில் ஏற்றுக் கொண்டாள்:

ஸுரபாலாவைப் போன்ற துரதிருஷ்டசாலியைப் பார்க்க முடியாது. அவள் குழந்தையாக இருந்தபோதே அன்னையை இழந்தாள். பிறகு தாய் வழிப் பாட்டியின் வீட்டில் வளர்ந்தாள். பாட்டியும் பெரியம்மாவும் தாயில்லாக் குழந்தையான ஸுரபாலாவைச் செல்லம் கொடுத்து வளர்த்தார்கள். இதனால் அவள் முரட்டுப் பிடிவாதக் காரியாக உருவானாள். சூல் கொண்டிருந்ததால் இயல்பாக உண்டாகும் சிரமங்கள் அவளை மேலும் புத்தி கோணலாக்கி யிருந்தது. இச்சமயத்தில் கண்ணிறைந்த கணவன் மண்ணிலே மட்கிவிட்டான். போதாக் குறைக்கு இதை அடுத்தே அவளது அருமைப் பாட்டியும் கண்ணை மூடிவிட்டாள்.

ஸுரபாலா ஜயராம்பாடிக்கு வந்த சிறிது காலத்திலேயே அந்தத் துர்ப்பாக்கியவதியை இன்னொரு வாதனை துரத்தி வந்தது. அவளது பெரியம்மாவும் காலமாகி விட்டாள். அடுத்தடுத்து மூன்று மின் விளக்குகள் ஃப்யூஸ் போனால்கூட எவருக்கும் துணுக்கம் ஏற்படும். கணவன், பாட்டி, பெரியம்மை ஆகிய மூவரையும் அடுத்தடுத்துப் பறிகொடுத்த ஸுரபாலா — ஏற்கனவே 'ஒரு மாதிரி' பேர்வழியாக இருந்தவள் — அசல் பைத்தியமாகிவிட்டாள். இந்தப் பைத்தியத்தைப் பேணுகிற பொறுப்பை இழுத்துப் போட்டுக் கொண்டிருந்தாள் அம்மா.

புத்தி தடம் புரண்டவளின் புத்திரியாக வந்து பிறந்தாள் ராதாராணி, 1900ம் ஆண்டு ஜனவரி இருபத்தியாறும் தேதி. நமது குடியரசு பிறந்ததற்குச் சரியாக ஐம்பதாண்டுகளுக்கு முன்பு அம்மாவின் மோட்ச சாம்ராஜ்யக் குடியரசு பறிபோயிற்று! ஆம், அம்மாவின் வாழ்க்கையில் பரமஹம்ஸ ராமகிருஷ்ணருக்கு எவ்வளவு முக்கியத்துவம் உண்டோ, அவ்வளவு முக்கியத்துவம் இந்த ராதாராணிக்கு உண்டு! **அது** பரம ஞானமான முக்கியத்துவம்; **இது** பரம அஞ்ஞான முக்கியத்துவம்! ஆனால் அம்மாவின் பரம ஞானம் உலகுக்குத் தொடர்ந்து கிட்ட இந்த அஞ்ஞான பந்தம்தான் காரணம். ராது என்று மற்றவர்களால் செல்லமாகவும், ராதி என்று அம்மாவினால் அதி செல்லமாகவும் அழைக்கப்பட்ட ராதாராணி பிறந்த மாத்திரத்திலேயே அம்மாவுக்கு அதனிடம் பொங்கி எழுந்தது பாசம்; அன்றொரு நாள் அவள் கண்ட பத்து வயசுப் பாலகியிடம் பெருகிய அதே பாசம்! இந்தப் பாசமே அம்மாவை உலகத்துடன் கட்டிப் போட்டது.

ராதியின் சொந்தத் தாய், சித்த ஸ்வாதீனமிழந்திருக்க, குஸும குமாரி என்கிற காசி நகரப் பெண் செவிலித் தாய் போல் அவளைப் பார்த்துக் கொள்ள, சத்தியத் தாயான சாரதை அவளைத் தன் குழந்தைகளிடையே முதற் குழந்தையாக்கிக் கொண்டாள்!

ஒரு நாள் துணிகளைக் கிழித்துப் புஜத்தின் கீழ் இடுக்கிக் கொண்டு, ஏதோ பெரிய காரியம் சாதிப்பது போல் வாசலுக்கு ஓடினாள் ஸுரபாலா. 'வீல் வீல்' என்று கத்திக் கொண்டு ராதுவும் அவளுக்குப் பின்னால் தன் மெல்லிய உடல் முரட்டுத் தரையில் உராய இழுத்துக் கொண்டே போயிற்று. ஸுரபாலாவிடமிருந்து தாய்மை அடியோடு விடை பெற்றுவிட்டது. அவள் ராதியை லட்சியம் செய்யாமல் போய்க் கொண்டிருந்தாள். குழந்தை வராந்தா ஒட்டிலிருந்து கீழே விழுகிற நிலை! அம்மாவுடைய இதயத்தின் உட்கருவுள் பரிவும் பரிதாபமும் அம்புகளாகப் புகுந்து வதைத்தன. ''அப்படியானால், என்னுடைய விசித்திர பாசத்தை வளர்த்துக் கொண்டு இந்தக் குழந்தையை நான்தான் வளர்க்க வேண்டுமா? தகப்பனை இழந்ததோடு தாயையும் உயிருடனேயே இழந்த குழந்தைக்கு யார் கதி? அம்பிகே, உன் திருவுள்ளம் இதுதானா? டாகூர், என்னை உலகத்திலேயேதான் கட்டிப் போடுகிறீர்களா?'' என்று குழம்பியவாறே அம்மா அந்தக் குழந்தை பின் ஓடி அதை எடுத்துக் கொண்டாள். ஏனோ அந்த ஸ்பரிசமே அவளை இனம் புரியாத பந்தத்தில் கட்டியது. ''இது எனக்குத் தகுமா?'' என்று தடுமாறினாள்.

அவள் எதிரே பிரஸன்னமானார் ராமகிருஷ்ணர். ''அதே பெண்தான் இது. இவளையே உன் ஜீவனத்துக்குப் பிடிப்பா வைச்சுக்கோ. இதுதான் யோகமாயை'' என்று கூறி அந்தர்தானமானார்.

# ஹென்ஞல்

## மீண்டும் கிடைக்கிறது

**வெகுகாலமாகவே அமோகமாக விற்பனையாகி வரும் கேசத்தை கருமையாக்கும் சாதனம். உங்கள் கேசத்தை இயற்கையான மற்றும் நிரந்தரமான கருமையுடனும் பளபளப்பாகவும் இருக்கச் செய்கிறது.**

உடல்நலக் குறைவினுல் ஏற்படும் இளமை நரையைப்பற்றியோ, அல்லது வயோதிகத்தில் ஏற்படும் நரையைப்பற்றியோ கவலையடைய வேண்டாம். ஹென்ஞல் தற்போது உங்களுக்கு மீண்டும் கிடைக்கிறது. அது உங்களது கேசத்துக்கு இயற்கையான கருமை நிறத்தை அளிப்பதுடன், பூரண ஆரோக்கியத்துடன் இளமையான தோற்றத்தை அளிக்கிறது.

கேசத்தின் அடி வேர்களுக்கு போஷாக்கு அளித்து, செழிப்பாக வளரவும், காலக்கிரமத்தில் கேசம் இயற்கையான கருமையுடன் கூடியதாக இருக்க உதவுமாறும், அனேக பொருட்கள் சேர்ந்து தயாரிக்கப்படுவது ஹென்ஞல்.

சாதாரணமாக கடைகளில் கிடைக்கும், கேசத்தை கருமையாக்கும் இதர சரக்குகளை போல அல்ல, ஹென்ஞல். இது தனித்தன்மை வாய்ந்தது.

1. நிரந்தரமாக நரையை தடுப்பதுடன், உங்களைப் பல வருடங்கள் இளமையான தோற்றத்துடன் விளங்கச் செய்கிறது.

2. இயற்கையான கருமையுடன் செழிப்பாக புது கேசம் வளர உதவுவதோடு, அதை வலுவடையவும் செய்கிறது.

**ஹென்ஞல் உபயோகிக்கும் முறை!**

ஹென்ஞலில் உள்ள, கேசத்துக்கு போஷாக்கு அளிக்கும் சத்துக்கள் கேசத்தின் வேர்க்கால்களில் நன்கு ஊறி, கேசத்துக்கு இயற்கையான கருமை நிறத்தை அளிக்க வேண்டி, போதிய கால அவகாசம் அளிக்க வேண்டும். மூன்று மாத காலம் போதுமானது. இந்தக் கால கெடுவில் கேசம் இயற்கையான கருமை நிறத்தை அடைகிறது. ஹென்ஞல், கேசத்தை கருமையடையச் செய்வது மட்டுமல்ல, அது கேசத்திற்கு போஷாக்கும் அளிக்கிறது; கேசத்தை அழகுறச் செய்ய மிகவும் முக்கியமான சாதனம்.

ஹென்ஞலை உபயோகிக்க ஆரம்பித்த ஒரு சில வாரங்களிலே ஒரு புதிய மாறுதலைக் காண்பீர்கள். இதற்கு முன்பு காணப்படாத ஒரு பளபளப்புடன் உங்களது கேசம் பிரகாசிக்கும். உங்களது நண்பர்கள் உங்களைக் கண்டு பிரமித்துப் போவார்கள். உங்கள் தன்னம்பிக்கையின் சக்தி வளர்ந்து பல மனிதர்களையும், விஷயங்களையும் நிர்வ்கிக்கும் திறமையைப் பெறுவீர்கள். எவ்வளவு வயது அடைந்தவராக இருப்பினும், ஹென்ஞல் கைவசமிருந்தால் கவலை வேண்டாம். உங்களது தொழிலில் மற்றும் சமூகத்தில் வெற்றி வாய்ப்பு நிச்சயம்.

உங்களது கேசம் தொடர்ந்து கருமையாக இருக்க ஹென்ஞலை வழக்கமாக உபயோகியுங்கள். நீங்கள் தேர்ந்து எடுக்க மூன்று ரக ஹென்ஞல் உள்ளன. ஹென்ஞல் (எண்ணெய்) ஹென்ஞல் (பசையற்றது) ஹென்ஞல் பொமேட் இந்த மூன்று ரகங்களும், யாவருக்கும் ஏற்றவாறு, வாசனை சேர்க்கப்பட்டுள்ளது. ஹென்ஞல் (எண்ணெய்) வறட்சியான, மற்றும் குத்திட்ட கேசத்திற்கு விசேஷமாக ஏற்றது. நீண்டகால நரைக்கு நல்ல பலனளிக்கக் கூடியது ஹென்ஞல் பொமேட்.

நல்ல பயனை அடைய தலையை சுத்தமாகக் கழுவ வேண்டும். வாரம் இருமுறை பியர்லைன் பாரிஸின் விசேஷ தயாரிப்பான சில்கோ ஹேர் ஷாம்பு போட்டுத் தலையை சுத்தம் செய்யுங்கள்.

இன்றே ஹென்ஞல் வாங்குங்கள். வருங்காலத்தில் இளமையுடன் விளங்குவீர்கள்

**தயவுசெய்து கடிதப் போக்குவரத்தை ஆங்கிலத்தில் வைத்துக் கொள்ளவும்**

ஹென்ஞல் தயாரித்து வெளியிடுபவர்கள் :

**பியர்லைன் - பாரிஸ் பிரைவேட் லிமிடெட், தபால் பெட்டி எண். 493, பம்பாய்-1**

**Pearline - Paris Private Limited, P. O. Box 493, Bombay -1**

> கிருபை என்பது எப்போதும் உள்ளூற இருப்பதாயினும், பகவானை நாம் சதா சிந்தித்தாலே அதை உணர முடியும். பூவுக்கு மணம் உண்டு எனினும் நாம் அதை மூக்கில் வைத்து இழுத்தால்தானே வாசனை தெரிகிறது? சந்தனத்தின் மணத்தை இழைத்துப் பார்த்தால் தானே அறிய முடிகிறது?
>
> - தூய அன்னை ஸ்ரீ சாரதாதேவி

மனிதர்களுக்கு யோக ஞானம் மட்டுமே உண்டு. பரம்பொருளுக்கோ யோக மாயை என்று ஒன்று உண்டு. யோகம் என்றால் 'சேர்ந்திருப்பது'. மனிதர்கள் பரமனோடு சேர்ந்திருப்பது யோகம். யோகத்தில் நிலைத்துவிட்டால் பிறகு 'சேருவது' என்கிற இருமை போய் ஒன்றே நிற்கும். ஒன்றேயான பரம்பொருளின் யோகம் என்ன? அது வேறு எதோடு சேர்ந்திருக்க முடியும்? தன் ஒருமையைத் தானே மறைத்துக் கொண்டு பலவாகக் காட்டுகிற மாயையுடன் அது சேர்கிறது. இந்த யோக மாயைதான் நமது லோக மாதாவை இப்போது மயக்குகிறது. எதற்காக? அவளை உலகோடு சேர்த்து வைக்கத்தான். மாயையான பராசக்தி ஞானிகளையும் மயக்கத்தில் தள்ளுவாள் என்கிறது துர்கா ஸப்த சதி. அப்படித் தள்ளுவது கொடூரமல்லவா என்று தோன்றலாம். அது கொடூரம் அல்ல, பரம கருணையே என்று சாரதையின் சரிதை எடுத்தியம்புகிறது. ஞானிகளும் யோகிகளும் உலகத்தை வெறும் மாயையாகவே உணருகிற நிலையில், இதற்கு நல் வழி காட்டும் பணியிலும் விருப்பம் இழந்து, மூலத்தில் ஒன்றிவிட எண்ணுவார்கள். அச்சமயங்களில் உலக உத்தாரணத்துக்காகவே அவர்களையும் ஏதோ ஒரு மாயையில் ஈடுபடுத்தி வாழச் செய்து, அவர்கள் மூலம் உலகை வாழ வைக்கிறாள் பராசக்தி.

ராமகிருஷ்ணர் புவிக்குத் திரும்பி வராமல் நிர்விகல்ப சமாதியில் கரைந்து விடாமலிருக்கவே அவருக்குள் சில அற்ப மயக்குகளைத் தூவி இருந்தாள் தேவி. புகைக் குழாய் பிடிக்க வேண்டும், பொன்னாங்கண்ணிக் கீரை உண்ணவேண்டும் என்பது போன்ற சிறிய ஆசைகள் அவரைப் புவிக்குப் பிடித்திழுத்து வந்தன. அம்மாவுக்குச் சிறிய பல ஆசைகளை வைக்காமல் ஒரே ஒரு பெரிய பாசமாக ராதாராணியை அனுப்பி வைத்திருந்தாள் அகிலாண்ட நாயகி. ஆகாய விமானத்தின் வேகத்தை மட்டுப்படுத்த பல சிறிய கருவிகள் அதற்குள்ளேயே இருப்பதுபோல், ராமகிருஷ்ணருக்குள்ளேயே சிறிய ஆசைகள் இருந்தன. பெருந் தேரை நிறுத்த வெளியிலிருந்து பெரிதாக ஒரே ஒரு முட்டுக்கட்டை போடுவது போல், அம்மாவின் உள்ளம் பரம்பொருளுக்குத் தாவாமல் தடுக்கும் ஒரே முட்டுக்கட்டையாக வந்தாள் ராது. சீதாதேவியின் சரிதத்தில் மாயமானுக்கு உள்ள முக்கியத்துவம், சாரதையின் வாழ்வில் யோக மாய மருமானுக்கு உண்டு.

''ராதி, ராதி'' என்று அல்லும் பகலும் அவளே நினைவாக அம்மா வாழத் தொடங்கி விட்டாள்.

''உங்களுக்கு இத்தனை பற்று இருப்பது நல்லதா தாயே?'' என்று அவளிடமே பலர் கேட்டதுண்டு.

''என்ன செய்யலாம்? நாங்க பொம்மனாட்டிகள். எங்களுக்குப் பாசமே சுபாவமாயிருக்கு'' என்று கூறி அம்மா மழுப்பிவிடுவாள்.

பிறிதொரு சந்தர்ப்பத்தில் ''ரொம்பப் பேர் சொல்கிறா, நான் ராதிகிட்ட மகத்தான பாசம் வைச்சிருக்கேன்னு. ஆனால் அந்தப் பாசம் இல்லேன்னா இந்தச் சரீரம் பூலோகத்திலே தங்கியிருந்திருக்காது. அவரிட்ட காரியத்தை நான் செய்யணும் என்கிறதுக்காகவே சதா ராதுவைப் பற்றிய சிந்தனையிலே, என்னை இழுத்து விட்டிருக்கார்'' என்றாள். தொடர்ந்து உறுதியோடு கூறினாள்: **''என் மனசு எப்போ ராதியைவிட்டு விலகுமோ, அப்போ இந்த சரீரமும் போயிடும்.** நான் உலகத்திலே தொடர்ந்து இருக்கணும்னே இவளைப் பற்றிக் கவலைப்படுகிற மாயையை நானாக அங்கீகாரம் பண்ணிண்டிருக்கேன்.''

இரண்டும் கெட்டானாக முரண்டு பிடிக்கும் ராது, பைத்திய ஸுரபாலா, பணத்துக்குப் பறக்கும் சகோதரர்கள் இவர்களிடையே சாரதாமணியின் ஜயராம்பாடி வாழ்வு ஓடிக் கொண்டிருந்தது. இது போதாதென்று உலகத் துயரங்கள் வேறு ஜயராம்பாடியைத் தேடி வந்தன. 'ஹோலி மதரா'கப் பிரசித்தி பெற்றுவிட்ட சாரதைக்குத் தங்கள் குறைகளை முறை யிட்டுப் பலர் கடிதம் எழுதலானார்கள். இத்தனை துயருக்கிடையில், இன்முகத்துடன் வாழ்ந்து வந்தாள் தேவி. தன் சொந்த சிரமம் காரணமாக அவள் ஒருபோதும் எரிச்சல் கொண்டு இன்னொருவர் மனத்தைப் புண்படுத்தியதே கிடையாது.

சகோதரர்கள் தன்னிடம் ஓயாமல் பணம் பிடுங்கியும் திருப்திப்படாமல் நச்சரிப்பது குறித்து ஒரு நாள் அம்மா சீடப் பிள்ளையிடம் வேதனைச் சிரிப்புடன் சொன்னாள்: ''வேடிக்கைதான், என் உடன் பிறப்புக்கள்னு பேரு, தொண்டைத் தண்ணி காயற மட்டும் 'பணம்

பணம்'னு அடிச்சுக்கறதுகளே ஒழிய, தப்பித் தவறிக்கூட, 'பக்தி வரணும், ஞானம் வரணும்'னு கேட்கிறதில்லே.''

தமக்கையைக் கவனித்துக் கொள்வதில் — அதாவது, கவனித்துக் கொள்ளாமலிருப்பதில் — அவர்களுக்குள் போட்டி வேறு! ஒருவர் அவளிடம் சிறிது அதிகமாகக் கரிசனம் காட்டினால், மற்றவர் அவரிடம் 'அக்காளைக் காக்காய் பிடித்தாயோ?' என்று சண்டை பிடிப்பான்! ஒரு முறை அம்மா கல்கத்தாவிலிருந்து ஜயராம்பாடிக்கு மாலை மங்கும் சமயத்தில் வந்தபோது, முன் கூட்டியே அறிவித்திருந்தும், ஆமோதர் ஆற்றங்கரைக்குச் சோதரர் எவரும் வரவில்லை. வீட்டுக்கு வந்த அம்மா பிரஸன்ன குமாரிடம், ''என் பசங்கள் கூட வந்ததாலே நல்லபடியா ஆச்சு! நீ வராவிட்டாலும் யாரையாவது அனுப்பிச்சு வச்சிருக்கக் கூடாதோ?'' என்று கேட்டாள். ''எனக்கு மட்டும் மனசிலே இல்லையா அக்கா! கேளே எதையாவது சொல்லுவான்னுதான் பயம். அதை எதிர்த்துண்டு காரியம் செய்யற பலத்தை பகவான் எனக்குக் கொடுக்கல்லே. உன் மகிமையும், உன் பசங்களான இந்த சாதுக்களின் பெருமையும் எனக்குத் தெரியாமல் போகலே'' என்று கூறிய பிரஸன்னரின் உள்ளத்தில் தன்னையுமறியாமல் தழுதழுப்பு உண்டாயிற்று. ''அக்கா! ஜன்ம ஜன்மத்துக்கும் உன் தம்பியா நான் பிறக்கணும். ஆசீர்வாதம் பண்ணு'' என்றார்.

அம்மா கூசினாள்; தோளைக் குலுக்கிக் கொண்டாள். ''மறுபடி இந்த அகத்திலேயா? போதும், போதும்! 'இந்தக் கௌசல்யை இன்னொரு ஜன்மா எடுக்காம இருக்கணுமே! இவ தபஸ் பண்ணி நான் மறுபடி இவ வயிற்றிலே வந்து பிறக்காமல் இருக்கணுமே' என்று ஸ்ரீ ராமசந்திரனே அலுத்துண்டாராம்'' என்றாள்.

''அக்கா, எத்தனையோ பக்தாளுக்கு நீ சொப்பனத்திலே போயே மந்திரோபதேசம் பண்ணி, 'நான் காப்பாத்தறேன்'னு வாக்குக் கொடுக்கறே. உன் மடியிலே போட்டுண்டு வளர்த்த நாங்க மட்டும் இப்படி அஞ்ஞான பிண்டமாவே இருக்கப் போறோமா?''

பிரஸன்னர் இப்படி இளகிப் பேசிய போது அம்மா பட்டுக் கொள்ளாமலே சொன்னாள்: ''பகவத் சங்கற்பப்படிதான் நடக்கும். கிருஷ்ணனோடே விளையாடினவாளுக் கெல்லாம் அவன் யாருன்னு தெரிஞ்சுதா என்ன?''

''அக்கா, நாம ஒரு தாய் வயிற்றிலேயிருந்து வந்தவா. எங்க கதிதான் என்ன?''

> உன் இதயத்தின் அடி ஆழத்தில் எப்போதும் பகவந் நாமத்தை ஜபித்துக் கொண்டேயிரு. குருநாதனிடம் அந்தரங்கமாக அடைக்கலம் புகு. உய்வு பெறுவது திண்ணம். ''வெளி விஷயங்களைக் குறித்து என் மனம் எப்படிப் பாதிக்கப்படுகிறது; ஆத்மிகத்தில் முன்னேறி வருகிறேனா?'' என்றெல்லாம் ஓயாமல் கணக்குப் போட்டுக்கொண்டு கவலைப்படாதே. தனக்குத்தானே முன்னேற்றத்தை எடை போட்டுக் கொள்வதும் ஒருவித அகங்காரம் தான். குருவிடமும், இஷ்டதேவதையிடமும் அசையா நம்பிக்கையுடன் நாம ஜபம் செய்து வந்தால், தன்னால் லட்சியம் கைகூடும்.
>
> - தூய அன்னை ஸ்ரீ சாரதாதேவி

சடேரென்று சாரதையைக் கருணைப் புயல் வந்து புரட்டியது: ''ஆமான்டா கண்ணு! நாம்ப ஒரே வயிற்றிலிருந்து வந்தோம். அதுவே போறுமே! உனக்கு ஏன் இனியும் பயம்?''

'நானிருக்கப் பயம் ஏன்?' என்கிறாள்.

சியாமசுந்தரிக்கு வயோதிகம். அவளது மாற்றுப் பெண்கள் ஏனோதானோதான். அம்மாவே அந்தப் பெரிய குடும்பத்துக்காக ஓயாமல் உழைத்தாள். நெல் விளைந்து வந்தது. அதையெல்லாம் கோட்டை அடுப்படியில் நாள் கணக்காக அமர்ந்து புழுக்கினாள். உரலில் குற்றிப் புடைத்தாள். இது தவிர சமையல், நீர் சேந்துவது, பாத்திரம் தேய்ப்பது போன்ற 'ஜாடுமாரி'கள் வேறு. வேலை மிகுதியினால் அம்மாவின் கால்கள் தூண் தூணாக வீங்கியிருந்தன. சிறிது சிரம பரிகாரமாக அம்மா காமார்புகுரில் இருந்து வருவதற்காகச் சென்றாள். அவள் சிரம பரிகாரம் கொள்வது ஆண்டவனுக்கு அடுக்கவில்லை. காலராக் கண்டு ஜீவனொடுங்கி விழுந்தாள். முன்பு நமக்குப் பரிசயமான ஸாகரம்மாதான் வந்து பணிவிடை செய்தாள். ''அன்பே, அசிங்கம் பார்க்காம எல்லாத்தையும் சுத்தி பண்ணறியே! எனக்குக் கூச்சமாயிருக்கு'' என்றாள் அம்மா நெகிழ்ந்து.

''என்னம்மா! ஒனக்கு ஸெய்யறதுக்கா அசிங்கம் பார்ப்பாங்க? நீ ஸும்மா இரு'' என்றாள் ஸாகரம்மா.

அம்மா காலராக் கண்டு கிடக்கிறாள் என்றறிந்து பேலூர் மடத்திலிருந்து இரு பசங்கள் வந்தனர். ஆனால் அம்மா அந்த ஸ்திதியில் கல்கத்தாவுக்குச் சென்று பக்தர்களை உபத்திரவிக்க விரும்பாமல் ஜயராம்பாடிக்கே திரும்பினாள். போகு முன் ஸாகரம்மாவிடம், ''உனக்கு அன்ன வஸ்திரத்துக்கு ஒரு நாளும் குறைவு வராது'' என்று மனமார வாழ்த்தினாள்.

பிற்காலத்தில் ஸாகரம்மா சொன்னாள்: ''அம்மா வாய் முகூர்த்தம், அதுக்கப்புறம் ஸோறு, துணி எனக்கு செழுத்தியாக் கிடைச்சுக்கிட்டே இருக்குது. அம்மா பூசை பண்ணுவாங்களே, அந்த டாகூருதான் எனக்காக எல்லாம் செஞ்சுட்டிருக்காரு.''

ஜயராம்பாடியில் சாரதைக்கு இன்னொரு பொறுப்பும் வந்து சேர்ந்தது. எங்கேயோ சமையல் வேலை செய்து வந்த ஒன்றிக்கட்டையான அவளது சித்தப்பா நீலமாதவர், தள்ளாமை வந்ததால் வேலையை விட்டு, நம் அம்மாவிடம் வந்து விட்டார். அவருக்கும் மனம் கோணாமல் பார்த்துப் பார்த்துப் பணி செய்தாள் அம்மா.

ராதியையும் சுரபாலாவையும் உத்தேசித்து ஜயராம்பாடியிலேயே தங்கி விட்ட அம்மாவுக்குக் கல்கத்தா பக்தர்கள் அன்புத் தொல்லை இழைத்தனர். அம்மாவுக்கும் அந்தக் குழந்தைகள் தன் வீடு தேடி வந்தால்தான் அநுக்கிரகம் செய்வேன் என்று விட்டேற்றியாக இருப்பது நியாயமாகத் தோன்றவில்லை. ராதி ஒருத்திக்காக மற்ற அத்தனை குழந்தைகளைத் தியாகம் செய்ய முடியுமா? பக்தர்கள், ''கல்கத்தாவுக்கு உங்கள் தம்பி மனைவி, மருமகள், சிற்றப்பா எல்லோரையும் அழைத்து வரலாமே! எல்லோருக்குமே வசதி செய்து தருகிறோம். அவ்வப்போது இப்படி எங்களிடை வந்து அநுக்கிரகிக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனர். அவ்வாறே அம்மா இந்தப் பரிவாரங்களுடன் கல்கத்தாவுக்குச் சென்று போஸ்பரா சந்தில் வசிக்கலானாள்.

கல்கத்தாவில் அம்மாவைப் பார்க்க மரியாதைப்பட்டவர்கள் பலர் வந்த போது ஸுரபாலா செய்த அநாகரிகத் தொல்லையைச் சொல்லி முடியாது. அம்மாவும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள். கடைசியில் ஸுரபாலாவின் வெறியாட்டம் அதிகரித்ததால் அவளோடு ஜயராம்பாடிக்குத் திரும்பினாள் அம்மா.

அடுத்த இரண்டாண்டுகள் அம்மா நரக வாசமே செய்தாள் எனலாம். இரண்டாவது, மூன்றாவது வயதில் எல்லாக் குழந்தைகளுமே இனம் புரியாமல் படுத்தும் அல்லவா? பொதுவாக ராது சமர்த்துப் பெண். எனினும் ஒவ்வொரு சமயங்களில் மகா அடங்காப் பிடாரியாக ஆகிவிடுவாள். அவளையும் ஸுரபாலாவையும் சமாளிப்பதற்கு அம்மா பட்டபாடு சொல்லத்தரமன்று.

பணத்தாசையே ஒரு பைத்தியம் போலும்! பணப் பைத்தியம் என்று சொல்கிறோம் அல்லவா? ஸுரபாலா இதை நிதரிசனமாக்கினாள். மூளை தடம் புரண்டுவிட்ட அவளுக்குப் பணத்திடம் மட்டும் இழை புரளாத பற்றுதல் இருந்தது. அம்மாவிடம் அடியார் செலுத்தும் காணிக்கைக்குத் தானும் ராதுவும் மட்டுமே பாத்தியதைப் பட்டவர்கள் என்பது ஸுரபாலாவின் கட்சி. சாரதாமணியை அவளது தாயாரோ, தம்பிகளோ, அவர்களது மனைவி மக்களோ நெருங்க விட மாட்டாள் ஸுரபாலா. ''அவாளுக்கு ஏதாவது கொடுத்தேளோ தெரியும் சேதி!'' என்று நாத்தியிடம் உருமுவாள். யாராவது பக்தர்கள் வீட்டுக்கு வந்தால், ''எனக்கும் என் பெண்ணுக்கும் சேர வேண்டியதை யெல்லாம் கொட்டிண்டு போகப் பாவிகள் வந்திருக்காளே!'' என்று பிரலாபிப்பாள். அம்மா கண்ணீரைக் கட்டுப்படுத்திக் கொண்டு வாயடைத்து நிற்பாள். இந்தச் சூழலில் அம்மாவைத் தாங்களும் சிரமப்படுத்த வேண்டாம் என்று கருதிப் பக்த கோடிகள் ஒதுங்கியே இருந்தனர்.

ஸுரபாலா தன் பெண்ணிடம் ''உன் அத்தை ராட்சஸி. அவ கிட்டே போகாதே. உன் பெரியப்பா பசங்களுக்குத்தான் அவ வாரி வழங்குவா'' என்றெல்லாம் உபதேசிப்பாள். ஆனால் ராதுவோ அத்தையை ''அம்மா'' என்றழைத்து அவளிடமே ஒட்டிக் கொண்டது. ஸுரபாலா கைம்பெண் என்பதால் கூந்தலைக் களைந்திருந்தாள். அவளை ''வழுக்கைத் தலை அம்மா'' என்று கூப்பிடுவாள் ராது. சாரதையின் குடல் மண்டி எழும்.

அம்மா அக்ஞாத வாசம் செய்த இந்தக் காலத்தில்தான் பாரத மாதாவின் தவப் புதல்வரும், நம் அம்மாவின் ஆசை மகனுமான ஸ்வாமி விவேகாநந்தர், நாற்பது யுகங்களில் சாதிக்க வொண்ணாத ஆத்ம மறுமலர்ச்சியை நாற்பதே ஆண்டுகளுக்குள் முடித்துவிட்டு, ''என் பணி தீர்ந்தது'' என்று பராசக்தியிடம் போய்விட்டார். டாகூரின் பணி தீர்ந்தது; நரேன் பணி தீர்ந்தது; அவர்கள் விடுதலை கண்டனர்; அம்மாவின் பணிதான் தீருவதாக இல்லை. அவர்களுக்கில்லாத அத்தனை தொல்லைகளையும் அந்த மெல்லியலே தாங்கிக் கொண்டிருக்க வேண்டும் என்பது திவ்விய சங்கற்பமாயிற்று. பதியும் பிள்ளையும் மாயையைக் கடந்து போயாச்சு! மனமிடிந்த சாரதையோ மாயையே உருவான ராதியுடன் மல்லுக் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)

நிலவறை முதல்
கூரைவரை உங்கள்
கட்டிடத்தை
வாட்டர்ப்ரூ:ப்
தன்மையுடையதாக
வைத்திருக்க
உபயோகியுங்கள்-



# அக்கோப்ரூ:ப்

கான்க்ரீட் மற்றும் சிமெண்ட் மார்ட்டரும் கூட தன் வேலையைத் திறம்பட செய்கிறது—முழு நிறைவு மற்றும் வலுவுப் பண்புகளை ஒரு சிறிதும் குறைக்காமல். **அக்கோப்ரூ:ப்** கட்டிடங்களைக் காக்கிறது. நிலவறைகளை நீர்புகாதவையாகவும், ஓதமற்றவையாகவும் வைத்திருக்கிறது.

**அக்கோப்ரூ:ப்,** குறிப்பாக கீழ்க்கண்டவை போன்ற நீர்த்தேக்க அமைப்புகளைக் கட்டுவதில் உபயோகிக்கச்சிபாரிசு செய்யப்படுகிறது—

- **நீர்த் தொட்டிகள்**
- **நீர்க் குழாய்கள்**
- **ரிசர்வாயர்கள்**
- **சாக்கடைகள்.**

உங்கள் தேவைகளுக்கு அருகாமையில் உள்ள தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கோ ஆ:ப் இந்தியா லிமிடெட்டின் கிளையையோ அவர்களுடைய வினியோகஸ்தர்களையோ அணுகுங்கள்:

**ஏஸிஸி**
**தரம்சிறந்த சிமெண்டிற்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்**

**தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்**
**தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆ:ப் இந்தியா லிட்.,**

SISTAS CMI-479 TM

# அம்மா

ரா.கணபதி

## 36. 'அவரது' அடிமை; அம்சம்; 'அவரே'யும்!

ஒவ்வொருவனும் தன்னுடைய மதத்தையே பின்பற்ற வேண்டும். கிறிஸ்துவர் கிறிஸ்து மார்க்கத்தையும், மகமதியர் மகமதிய மார்க்கத்தையும் அநுசரிக்க வேண்டும். ஹிந்துக்களுக்கோ ரிஷிகள் ஏற்படுத்திய புராதன மார்க்கம்தான் உத்தமமானது.

- பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

அம்மாவால் குழந்தைகளை எத்தனை காலம்தான் விட்டுப் பிரிந்திருக்க முடியும்? குழந்தைகளும் எத்துணை காலம் அம்மாவைக் காணாதிருக்க முடியும்? பக்தர் மனம் அம்மாவிடம் பள்ளத்து நீராகப் பாய, அம்மாவின் அருளும் அவர்களிடம் வெள்ளமாகப் பாய, 1904ஆம் ஆண்டில் மீண்டும் கல்கத்தாவுக்கு வந்தாள் அம்மா. பக்பஜார் சாலையில் அம்மாவுக்கு ஜாகை அமர்த்தப்பட்டது. யோகாநந்தருக்குப் பிறகு அம்மாவால் 'என் சுமை தாங்கி' என்று போற்றப்பட்ட சாரதாநந்தர் அவளுடனேயே துணையாகத் தங்கியிருந்தார். சாரதாநந்தர் உண்மையில் நம் சாரதைக்கு ஆனந்தராகவும், அவளுக்குத் தொண்டு புரிவதில் ஆனந்திப்பவராகவும் இருந்தார். அம்மாவின் பிரிய 'ஷரத்' அவரே.

அம்மாவின் புகழ் இப்போது வெளியுலகில் பரவிவிட்டது. நிறைய பக்தர்கள் வரலாயினர். அம்மாவும் தன் ஜன்மப் பணிகளில் ஒன்றான மந்திரோபதேசத்தைப் பலருக்கு அருளினாள். தவமிருந்து வேண்டினாலும் கிடைத்தற்கரிய மந்திரங்களை, சற்றும் எதிர்பாராது வந்தோருக்கும் தானே வலிய உபதேசிக்கலானாள் அம்மா. அது ஏதோ வெறும் வார்த்தைகளை இன்னொருத்தருக்குச் சொல்கிற விஷயமாக இல்லை. அம்மா தனது அம்மாத் தன்மையையே உருக்கி, அந்த அட்சரங்களில் திணித்து, அவற்றை மதுர மோதகங்களாக்கிப் பிள்ளைகளுக்கு ஊட்டினாள். அம்மாவிடமிருந்து மந்திரோபதேசம் பெற்ற பலரது அகவாழ்விலும் புறவாழ்விலும் அற்புத மாறுதல்கள் நிகழ்ந்தன. ஆதியில் இந்த மந்திரங்கள் எந்த ஞானவெளியில் தாமாக உதித்தனவோ, அந்த சிதாகாசத்தில் அம்மாவின் சித்த ஆகாசம் ஒன்றிவிடுமாதலால், மந்திரங்கள் அவற்றின் மூல சக்தி முழுவதுடனும் அவளினின்று வெளிப்பட்டன. ''உரியபடி ஜபித்தால், மந்திராக்ஷரங்கள் தாமே உள்ளிருந்து கொப்புளித்துக் கொண்டு வரும்'' என்று அம்மா சொன்னது ஸ்வாநுபூதி வாக்கியமாகும்.

இவள் அவர்களுக்கு மந்திரத்தைத் தந்த அதே சமயத்தில், அவர்களிடமிருந்து இவள் ஒன்றை வாங்கிக் கொண்டாள்—அவர்களது பாவத்தை வாங்கிக் கொண்டாள்; அநாயாசமாக வாங்கிக் கொண்டாள். அவளே சொல்லியிருக்கிறாள் — ஒருவருக்குத் தீக்ஷை அளித்து வீட்டுக்கு அனுப்புவதோடு தன் பொறுப்பு முடிந்துவிடவில்லை என்றும், அவரை உண்மையான, சாசுவதமான பேரின்ப வீட்டில் சேர்க்கிற வரைக்கும் அவரது வாழ்க்கைப் பொறுப்பு முழுவதும் தனதாகி விடுகிறது என்றும். அவரவருக்கு உரிய இஷ்ட தெய்வத்தையும் மந்திரத்தையும் தனது தெய்விகத்தால் பளிச்செனப் புரிந்து கொண்டு அதற்கேற்ப உபதேசம் தருவாள். அவர்களில் யாராவது அதன் பின் சரியாக ஜபம் செய்யவில்லை என்றாலும் அது அம்மாவுக்குத் தெரிந்துவிடும். அவர்கள் செய்யத் தவறியதற்கு ஈடாக, அம்மாவே தனது ஓயாத அலுவலுக்கிடையில் அவர்கள் பொருட்டு ஜபித்தவாறு இருப்பாள். இரவிலெல்லாம்கூட, கடும் காய்ச்சலின் போதும், எழுந்திருந்து அமர்ந்து ஜபம் புரிவாள். தனது சரீரம் விழுந்தபின்னும்கூட, தான் பொறுப்பேற்றுக் கொண்டவர்களை விடுவிக்கும் வரையில், தனக்கு ஓய்வு கிடையாது என்றும் தேவி திருவாய் மலர்ந்திருக்கிறாள். இப்படிப்பட்ட பெரும் பளுவை விரும்பி ஏற்ற ஓர் அவதாரம் எங்கு பார்க்க முடியும்?

மந்திர ஜபம், ராமகிருஷ்ண பூஜை இவற்றையே அடியார்களுக்கு முக்கியமாக வலியுறுத்தினாள் அம்மா. தத்துவ விசாரத்தில் அதிகம் இறங்கியதில்லை. ஆத்மாவை நிச்சயமாகக் காப்பாற்றும் உபாயம் தெரிந்தபின் அது எதற்கு? ''மந்திரம் காப்பாற்றும், நன்றாக ஜப யோகத்தில் ஈடுபடுங்கள்; டாகூர் காப்பாற்றுவார், அவரை ஆராதியுங்கள்'' என்பாள்.

அவள் டாகூருக்குச் செய்த வழிபாடு அழகு நிறைந்தது, அன்பு நிறைந்தது. காலையில் சிறிது கங்கா ஜலத்தை எடுத்துச் சென்று டாகூரின் படத்தின் மீது தெளிப்பாள். ''எழுந்திருங்கோ'' என்று சொல்லிக் கொண்டு, முன்னிரவு படுக்கப் போட்டிருந்த படத்தை, மறுபடி செங்குத்தாக எடுத்து வைப்பாள். பிறகு வீட்டு வேலைகளைக் கவனிப்பாள். ஒன்பது மணி அளவில் பதிக்குப் பூஜை தொடங்குவாள். பகட்டும், படாடோபமும், ஆடம்பரமும், அதியான ஆசார விதிகளும் இல்லாமல் எளிமையான பூரண பக்தி கமழ நடக்கும் அந்தப் பூஜை. படம் வைத்திருந்த ஆசனத்துக்குப் பக்கத்திலேயே ஸ்நானத்துக்கான கங்கை, சந்தனக் கல் — கட்டை, பஞ்ச பாத்திரம், தூபதீபக் கால்கள் இருக்கும். படத்தை அறை மத்தியில் வைத்து கங்கையை அதன் மீது புரோட்சித்து ஸ்நானம் செய்விப்பாள். சந்தனமிடுவாள். புஷ்பங்களால் அர்ச்சிப்பாள். அவருக்குப் பிடித்த சேமியா சொஜ்ஜி, ஜீராப் பாகு, பழங்கள் வைத்து நிவேதிப்பாள். அம்மாவின் வழிபாட்டைப் பிடிவாதமாகக் கேட்டுப் பெற்ற பிருந்தாவன கோபாலனும் டாகூரின் பக்கத்திலிருந்து இவற்றில் பங்குபெறுவான்.

மடியில் திருக் கரங்களைச் சாந்தமாக விரித்து, நிச்சலனமாகச் சிறிது போது தியானம் செய்வாள் அம்மா. அச் சமயங்களில் வெளி உணர்வு அவளை விட்டு நீங்கிவிடும். பிறகு பக்திமயமாகப் பதிக்கு நமஸ்கரிப்பாள். படத்தைப் பழைய இடத்திலேயே வைப்பாள். பதிக்கு அபிஷேகமான புனித நீரில் சிறிதைப் பருகி, அர்ச்சித்த துளஸி அல்லது வில்வ தளத்தைப் பிரசாதமாக உட்கொள்வாள். ஜயராம்பாடியில் புஷ்பம் அதிகம் கிடைக்காது. ஆனால் இது போன்ற விஷயங்களைக் குறித்து அம்மா அலட்டிக் கொள்ள மாட்டாள். துளசியோ, அட்சதையோ எது கிடைக்குமோ அதோடு திருப்தி அடைவாள். துளஸியிடம் அவளுக்கு அலாதிப் பற்றுதல். ''துளஸி மகா பவித்திரமானது.



அது இருக்கிற இடத்துக்கே ஒரு சாந் நித்தியம் உண்டு'' என்பாள்.

டாகூரின் முன் நைவேத்தியத்தை வைத்து, புது மணப் பெண் போல் பட்டுக் குரலில் பாங்குடனே, ''ம், ம், சாப்பிடுங்கோன்னு!'' என்று அவள் கொஞ்சுவதைக் கேட்டவர்களுண்டு. ''கோபாலா, சாப்பாட்டுக்கு வர யாடா?'' என்று பிருந்தாவன பிம்பத்திடம் செல்லமாகக் கேட்பாள்.

பூஜை காலையில் பத்தரை மணிக்குள் முடிந்துவிடும். பூஜைப் பிரசாதம் காலைப் பலகாரமாக யாவருக்கும் தரப்படும். அதற்கு மேல் பக்தர்களைக் காக்க வைக்கக் கூடாது என்றே பூஜையை முடித்துவிடுவதாக அம்மா சொல்லியிருக்கிறாள். பகல் ஒரு மணிக்குச் சாப்பிடுவது அவர்கள் வழக்கம். பரிமாறுமுன், சமையலறையிலே, டாகூரின் திருநாமத்தைச் சொல்லி, அன்னம், குழம்பு, கறி முதலியவற்றை நீரால் சுற்றுவாள் அம்மா. அதே போல் மாலையில் அப்பம், சப்பாத்தி, பால் முதலியவற்றைப் பதிக்கு நிவேதித்தபின்பே, பிறருக்கு அளிப்பாள்.

''நீங்க வாஸ்தவமாகவே டாகூரைப் பார்க்கறேளா?'' என்று வினவியவர்களிடம் ''ஆமாம்'' என்று தெளிவாகச் சொன்னாள் தேவி. ''எனக்கு மட்டுமில்லை. யார் அந்தரங்கசுத்தமாகப் பூஜை பண்ணினாலும் அதை அவர் உயிரும் உடலுமா வந்து அங்கீகரிக்கிறார்'' என்று தேவி கூறினாள்.

தான் நிவேதனம் செய்கையில் படத்திலுள்ள டாகூரின் கண்களிலிருந்து ஓர் ஒளி புறப்பட்டு வந்து, நைவேத்தியத்தைத் தீண்டிச் செல்வதாகவும், அதுவே அவர் உண்டதாக அர்த்தம் என்றும் அம்மா சொல்வாள். அவளுக்குள்ளேயே வாழ்ந்த ராமகிருஷ்ணர், அவளை பக்தையாக்கிப் பார்த்து மகிழ்வதற்காக, பூஜா காலங்களில் அந்தப் படத்தில் எழுந்தருளி யிருந்தார்! பாலகோபாலன் கிண்கிணி சலசலக்க எழுந்திருந்து வந்து தன் நிவேதனத்தை ஏற்பதாகக் கூறுவாள்.

பிற்காலத்தில் அம்மாவின் அத்தியந்த சிஷ்யைகளில் ஒருத்தியான ஸரளா தேவி. ''அம்மா, என்ன மந்திரங்கள் சொல்லி, என்ன நியமங்களை அநுஷ்டிச்சால், டாகூர் நிவேதனத்தை ஏற்றுக் கொள்வார்?'' என்று வினவினாள்.

''என் கண்ணே, பெரிய பெரிய தெய்வம்னு உசத்தி வைத்துப் பூஜை பண்ணறச்சேதான் ஏகப்பட்ட மந்திரங்களும், நியமங்களும் வேண்டியிருக்கு. பகவான் நமக்கு ரொம்ப ரொம்பச் சொந்தம். அவன் நம்ம உடைமை இல்லையா? அவன் நமக்கே நமக்குன்னு, நம் சொந்துன்னு நினைக்கணும். நம்ம சொந்த மனுஷ்யாளுக்கு எதற்குப் பெரிய மந்திரங்களும் சடங்கும்? மனப்பூர்வமான அன்போடே, ''டாகூர் வாங்கோ, வந்து உட்காருங்கோ, இதைச்சாப்பிடுங்கோ'ன்னு சொல்லு. வந்து குதிப்பார். தன் வீட்டுக்கே வர சொந்தக்காரருக்குப் பிரியம் ஒண்ணே போதும். நீ எதைச் சமர்ப்பிச்சாலும் டாகூர் அங்கீகரிப்பார். அன்பு வேணும் என்கிறதாலே ஆசாரமே வேண்டாம், மந்திரங்கள் வேண்டாம்னு சொல்றதா நினைக்காதே. அடிப்படையாக அன்பை வைச்சுண்டு, இதுகளையும் அதன் மேலே எழுப்பிண்டா விசேஷம்தான்'' என்றாள். ஸரளாவுக்குச் சில மந்திரங்களையும், பூஜா கிரமங்களையும் போதித்தாள்.

இன்னொரு பக்தரிடம், ''எனக்குத்தான் பக்தி இருக்கேன்னு சொல்லிண்டு சாஸ்திர விதிகளை அலட்சியம் பண்ணக் கூடாது. பூஜா திரவியங்கள் கூடியவரை சுத்தமா இருக்கணும். சந்தனத்திலே திப்பி இருக்கக் கூடாது. புஷ்பம், பத்திரம் பூச்சி அரிக்காததா இருக்கணும். பூஜை பண்ணுகிறவர் தன் உடம்பையோ, சிகையையோ, வஸ்திரத்தையோ தொட்டுக்கக் கூடாது. நேரம் தப்பாமல் நைவேத்தியம் முதலானதுகளைப் பண்ணணும். தவிர்க்க முடியாமல் இடைஞ்சல் உண்டாகும்போது பகவான் க்ஷமிப்பார். அதே மாதிரி நம் மோட அறியாமையாலோ, இயலாமையாலோ நேருகிற தோஷங்களையும் கருணாமூர்த்தி மன்னிப்பார்.''

ராமகிருஷ்ணரை இறைவனாக வைத்துப் பூஜிப்பது, அவரது நாமத்தை பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரம் போல் ஒரு மந்திரமாக ஜபிப்பது — ஆகிய இவ்விரண்டுக்கும் அம்மாவே மூல ஆசாரியர். சர்வ சாமானியமாக இருந்து கொண்டு எவ்வளவு பெரிய ஆத்மிகப் பணியைச் செய்திருக்கிறாள்! ராமகிருஷ்ணரின் மற்ற சீடர்கள் வேதாந்த தத்துவத்தை முழக்கம் செய்தனர். அம்மா பூஜையும் மந்திரமும் தந்தாள். தத்துவத்தால் மெய்ப் பொருளை உணர்ந்தவர் அதிகமிருப்பரா, பூஜையாலும் ஜபத்தாலும் சாந்தி அடைந்தவர் அதிகம் இருப்பரா என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஆனால் இந்தப் பூஜையும் ஜபமும் தற்கால சாந்திமட்டுமல்ல, அவை நிச்சயமாக மோக்ஷத்தையே அளிக்கும் என்று அம்மா பன்முறை அறுதியிட்டு உறுதி கூறியிருக்கிறாள். பூஜையாலும் ஜபத்தாலும் தங்களிடம் எவ்வித விசேஷ முன்னேற்றமும் காணாமல் அலைப்புண்டு அம்மா

# இலவசம்!




## புத்தம் புதிய
## போர்ஹென்ஸ் புத்தகம்—'பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'.

இந்த விவரமான வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெறுங்கள்!
இன்றே இக் கூப்பனை அனுப்புங்கள்.

மானேர்ஸ டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய் 1.

''பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'' என்னும் போர்ஹென்ஸ புத்தகத்தின்* ஒரு பிரதியை இலவசமாக எனக்கு அனுப்பவும். தபால செலவுககாக 25 காசு தபால தலை அனுப்பியுளளேன.

K 6 BA

பெயர் ______________________ வயது ________

முகவரி ______________________________

______________________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும்.
ஆங்கிலம், இநதி, மராட்டி, குஜராததி, உருது, வஙகாளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுஙகு, மலையாளம் அலலது கனனடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பறபசை

100F-152 TAM

> உலக ஆசைகள் மனத்தை மேக மூட்டமாகக் கவ்வுவது உண்மை. ஆனல் மேகத்தை அடித்து விரட்டும் காற்று ஒன்று உண்டு. பகவந் நாமமே அந்தக் காற்று.
>
> தூயஅன்னை சாரதாதேவி

விடம் முறையிட்டவர்களிடம், ''அதனுல் என்ன? தொடர்ந்து செய்து வாருங்கள். நிச்சயம் பலன் இருக்கும். கடைசி மட்டும் பலன் இல்லாவிட்டாலும் இறுதி சுவாசத்தின் போதாவது சர்வ நிச்சயமாக டாகூர் வந்து அழைச்சுண்டு போவார்'' என்பாள்.

அம்மா மந்திரம் அளித்தவுடன், ''இது நான் தரல்லே; டாகூராக்கும் தந்தார்'' என்பாள். ஆஞ்சநேய ஸ்வாமி, ''சில சமயங்களில் நான் ராமனுக்குப் பணி புரிகிற தாஸனுக அவனிடமிருந்து பிரிந்து நின்று துவைதத்தை ருசிக்கிறேன். சில சமயங்களில் ராமன் எனக்கு ஆதாரமாக உட்புகுந்து அவனது அங்கமாக என்னை இயக்குவதாகப் பாவித்து விசிஷ்டாத்வைதத்தை ரசிக்கிறேன்; சில சமயங்களில் ராமனன்றி வேறெதுவுமே இல்லாததால், ராமனே நான் என்று உணர்ந்து அத்வைதத்தில் ரமிக்கிறேன்' என்று கூறினுர். இவ்விதமே சாரதைக்கும் டாகூருக்கும் மூன்று நிலைகளில் தொடர்பு இருந்தது; அவரது ஏதுமறியாச் சரண தாஸியாக இருந்தாள்; அவரது அம்சம் போலவும் இருந்தாள்; அவராகவேயும் இருந்தாள். அடியார்களின் பக்குவத்தைப் பொறுத்து இந்த மூன்று நிலைகளில் ஒன்றை வெளிப்படுத்துவாள். சில அபூர்வப் பிறவிகளிடமே தனக்கும் டாகூருக்கும் உள்ள சர்வசாம்யத்தை அம்மா வெளியிட்டாள். தாஸ் குப்தா என்பவர் டாகூரை விட அம்மாவைத் தியானிப்பதிலேயே தமக்கு மனம் பூரணமாக ஈடுபடுகிறது என்று அவளுக்கு எழுதியபோது, ''குரு மஹராஜ் யாரோ, அவரேதான் நான்'' என்று அம்மா வியக்தமாகப் பதில் எழுதச் செய்தாள். பிற்பாடு, தாஸ்குப்தா அம்மாவை நேரில் கண்டபோது ''குருநாதர் நாமத்தையும் நான் ஜபிக்க வேண்டுமா?'' எனக் கேட்டார்.

''ஜபிக்கத்தான் வேண்டும்.''

''ஏனம்மா! உங்கள் நாமத்தை ஜபித்தால் போதாதோ? நீங்களிருவரும் வேறு வேறில்லையே!''

''என்னதான் இருந்தாலும் குருமஹராஜ் நாமத்தை விட்டுவிடும்படி என்னுல் கூற முடியாது.''

தன்னைப் பற்றி அவள் பலவிதமாகக் கூறிக் கொண்டாலும், ஸ்ரீ ராமகிருஷ்ணர் கடவுளேதான் என்பதைத் தவிர வேறெவ்விதத்திலும் அவரைப் பற்றிப் பேசியதில்லை. அவரைக் கடவுள் ஸ்தானத்திலிருந்து இறக்கி, ஞானி, மகான், குரு என்றெல்லாம் வைத்தால் அம்மாவுக்குப் பொறுக்காது.

ராமகிருஷ்ண பூஜை, மந்திரம், ராமகிருஷ்ண லோகம் என்பதை யெல்லாம் அம்மா வலியுறுத்தியதைப் பார்த்து அவள் அத்வைதத்தைச் சொன்னதேயில்லை என்று எண்ணிவிட வேண்டாம். அத்வைதமே பரம சத்தியம் என்று கருதியவள். இதில் அவள் ராமகிருஷ்ணரின் சாக்ஷாத் பத்தினி. சம்பிரதாய அத்வைதக் கொள்கைப்படி பக்தி என்பது மனத்தை ஒருமுகப்படுத்தும் என்றும், இந்த ஒருமைப்பாட்டுக்குப் பிறகு சாதகன் ஆத்ம விசாரத்தால் அகண்ட பிரம்மத்தை உணருவான் என்றும் கூறப்படும். அதாவது பக்தி என்பது முக்திக்கு நேர் சாதனம் அல்ல. அது ஓர் உபாங்கம்தான். ஆனல் ராமகிருஷ்ணரோ பெயரும், உருவும், குணமும் படைத்த இறைவனிடம் பக்தி செய்வதாலேயே நாம ரூபமற்ற நிர்குண பிரம்மத்தை நேராக எய்தலாம் என்றுர். ''நிர்குணம் தான் குணமாக வந்திருக்கிறது. அதனிடம், 'என்னை நிர்குணத்தில் சேர்ப்பிப்பாயாக' என்று வேண்டிக் கொண்டால் அது அந்த அநுக்கிரகத்தையும் நிச்சயம் அருளும்'' என்றுர்.

சம்பிரதாய ஞான மார்க்கத்தில் சாதகன் தானுக 'எடுத்துக் கொள்வதாக'ச் சொல்லப்படும் அத்வைத நிலையை, பக்தி புரிந்து பரமாத்ம சக்தியிடமிருந்து அவன் 'பெற்றுக் கொள்ள'வும் முடியும் என்றுர். நாம ரூபமற்ற பிரம்மத்தில் ஐக்கியமாவதையே அவர் மோட்சமாகக் கருதினுர். அம்மாவும் இதே கருத்துடையவள் என்பதற்கு ஓர் உதாரணம்: இமாலயத்தில் மாயாவதியிலே அத்வைத ஆசிரமம் அமைத்திருந்தார் விவேகாநந்தர். அங்கே முழுக்க முழுக்க ஆத்ம விசாரம்தான். அந்த ஆசிரமத்தில் உருவ வழிபாடே கூடாது என்று விதித்திருந்தார் விவேகாநந்தர். இதை ஏற்கவொண்ணுத ஒரு குருபாயி அம்மாளிடம் முறையிட்டார். அம்மா பூஜா மார்க்கத்தையே உபதேசித்தவளாயிற்றே! ஆனல் அம்மா சொன்ன பதிலைப் பாருங்கள்: ''ஸ்ரீ ராமகிருஷ்ணர் பூரண அத்வைதி. அவர் அத்வைதத்தைத்தான் உபதேசித்தார். நீ ஏன் அத்வைதத்தைச் சம்பிரதாயப்படி கடைப்பிடிக்கக் கூடாது? அவ

ரோடே சிஷ்யாளெல்லாம் அத்வைதிகள் தானே!''

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சித்தாந்தத்தை அம்மா இவ்விதம் தெளிவாகக் கூறியது போலவே, அவர் வாழ்ந்து காட்டிய மையமான சத்தியத்தையும் அம்மா ஸ்பஷ்டமாக எடுத்தியம்பி யிருக்கிருள். இந்த அம்சத்தில் ராமகிருஷ்ண பக்தர் பலருக்கு அம்மா சொல்வது புது மையாகத் தோன்றக் கூடும். ஏனெனில், ராமகிருஷ்ணர் இதர மதங்கள் உள்பட, சகல சமய ஆசாரணைகளையும் அநுஷ்டித்ததால், அவரது வாழ்வின் மைய தத்துவம் சர்வ மத சமரசம் என்றுதானே நாம் திரும்பத் திரும்பக் கேட்டிருக்கிறோம்? ஆனுல் அவரில் அவராக, இவளுள் அவர் மேவ, பாலும் சுவையும் போல் ராமகிருஷ்ணரின் அபின்ன 'சக்தியாக உள்ள அம்மா சொல்வதைக் கேளுங்கள்! கேசவாநந்த ஸ்வாமிகளிடம் பேசுகிருள் அம்மா: ''குழந்தே! எல்லா மதங்களுக்குள்ளும் ஐக்கியம் இருக்குன்னு நிரூபிச்சுக் காட்டணும் என்று நோக்கம் வைச்சிண்டு டாகூர் சகல மதங்களையும் அநுஷ்டிச்சதா எனக்குத் தோணறதே இல்லை. அவர் எப்போதும் திவ்விய போதையிலே இருக்கத் திருவுளம் கொண்டவர். அதனுலே பகவானுடை அநுக்கிரக லீலையைத் தினுசு தினுசாக ருசித்துப் பார்க்கணும்னே, கிறிஸ்துவ, முகமதிய, வைஷ்ணவ மார்க்கங்களையும் இன்னும் பல மார்க்கங்களையும் அப்பியாசம் பண்ணினுர். உண்மையிலேயே உலகத்துக்கு அவர் தம் வாழ்க்கையினுலே தந்த விசேஷமான உபதேசம் பற்றின்மைதான். தனக்குன்னு எதுவுமே இல்லாமல், சுய நலம் துளிக்கூடக் கலக்காமல் எப்படிப்பட்ட துறவறத்தை வாழ்ந்து காட்டினுர்? சமய சமரசம் என்கிறுர்களே, அதுவும் உண்மைதான். பூர்வ அவதாரங்களிலே ஒரு குறிப்பிட்ட மதக்காராளுக்கே பிடிப்பு ஏற்பட்டது. டாகூர் எல்லாருக்கும் பிடிப்பாக இருக்கிறுர். ஆனுலும் அவர் இன்னிக்கு உள்ள லோகத்துக்குப் பற்றின்மையைக் காட்டிப் பகவானை ஞாபகப்படுத்தவே முக்கியமாக அவதரிச்சார்.''

ராமகிருஷ்ணர் அவரவரும் தம் மதத்தை அந்தந்த ஒழுங்குப்படி அநுசரிக்க வேண்டும் என்றுர். அவர் ஒவ்வொரு சம்பிரதாயத்தையும் பின்பற்றிய போது அதன் விதிகளைப் பூரணமாகப் பின்பற்றினுர். ஆனுல் சர்வ மத சமரசம் என்கிற பெயரில் எல்லா மதங்களையும் கொட்டிக் கலந்து அவியல் செய்கிற காரியமும் அவர் பெயரிலேயே நடப்பதைப் பார்க்கும்போது அம்மா சொன்னதிலுள்ள அர்த்த புஷ்டி தெரிகிறது. பிற மதங்களைத் தாழ்வென்று எண்ணிப் பழிக்கக் கூடாது என்பதையே ராமகிருஷ்ணரின் வாழ்வில் படிப்பினையாகப் பெறுகிறேம். இதை எண்ணியே தேவி, அப்போது பிரமாதப் படுத்தப்பட்ட மத ஐக்கியத்தை இரண்டாம்பட்சமாகக் கூறினுள் போலும். நவயுகத்தின் தொழில் நுணுக்கம், விஞ்ஞானம் இவற்றுல் செய்துகொள்கிற சௌகரியம் எல்லாம் மனிதன் தன்னைப் பேணிக் கொள்வதற்குத்தானே? பகவானை அடைவதற்கு யத்தனிக்காமல் உலகாயத இன்பங்களையே பெருக்கிக் கொள்கிறுன் நவயுக மனிதன். இவனுக்குச் சுயநலனை மறந்து, பற்றற்று இருக்கப் போதிப்பதே தலையாய உபதேசம் அன்றே? ராமகிருஷ்ணர் இதைச் செய்யவே வந்தார் என்று நம் அம்மா சொன்னபின் பேச்சு ஏது?

> பெண்களே! எவரிடமும் அதிக பாசம் வைக்காதீர்! வீட்டில் நடக்கும் விழாக்களில் கூட மிதமிஞ்சி ஈடுபடாதீர்கள். "ஏ, மனமே! ஏகாந்தத்தைப் பயில்வாயாக" என்று சொல்லிக் கொண்டிருங்கள். பிறர் விவகாரங்களை அறிய ஆவல் படாதீர்கள். பிரார்த்தனை, தியான காலங்களைச் சிறுகச் சிறுக அதிகரித்துக் கொண்டே யிருங்கள். பகவான் ஒருவனிடமே பாசம் வையுங்கள்.
>
> தூயஅன்னை சாரதாதேவி

அம்மாவுக்கு மேலும் கால்கட்டுகள் ஏற்பட்டன. அவளது முதல் தம்பியான பிரஸன்னரின் மனைவி ராமப்ரியா தேவிக்குக் காலரா கண்டு பன்னிரண்டே மணி நேரத்தில் அவள் கண்ணை மூடிவிட்டாள். அவளது பெண்கள் நளினியும், மாகு எனப்படும் சுசீலாவும் நம் அம்மாவின் அரவணைப்பைத் தேடி வந்துவிட்டனர். நளினிக்கு விவாகமாகிவிட்டாலும் இன்னமும் அவள் விவரமறியாத பெண்தான். அவளுக்கு விவரமாகத் தெரிந்த ஒரே ஒரு விஷயம் ஆசாரம்தான். அளவுக்கு மீறிய மடிக்காரி அவள். நம் அம்மா ராமகிருஷ்ண சங்கத்தினருக்குள் அதிகமாக வித்தியாசங்கள் பார்ப்பதில்லையல்லவா? இதனுல் நளினி, அம்மாவுக்குத் தந்த தொல்லையும், அவளைப் பார்க்க வந்தவர்களுக்குத் தந்த மனக் கசப்பும் கொஞ்சநஞ்சமல்ல.

ஆசாரம் காரணமாகக் கணவரின் சங்கமும்கூட நளினிக்குப் பிடிக்காமற்

போயிற்று. பெரும்பாலும் அம்மாவுடவேயே இருந்தாள். "அத்தையைக் கொண்டிருக்கா" என்று அம்மாவும் இந்த ஓர் அம்சத்தில் பெருமையே கொண்டாள். ஆயினும் நளினியின் ஆசார வெறியில் அவள், இன்னார் இங்கே வந்தார், இன்னார் இதைப் பார்த்தார், இன்னார் இதைத் தொட்டார் என்றெல்லாம் ஓயாமல் குற்றம் சொல்லிக் கொண்டு ரகளை செய்தது வரம்பு மீறலாயிற்று. ஆசாரப் பித்து காரணமாக அவள் பட்டினி கிடந்த நாட்கள் பல; கடுங் குளிரில் திரும்பத் திரும்ப முழுகி அவஸ்தைப்பட்ட தினங்கள் பல. ஓர் இரவு தீட்டுப் பட்டு விட்டதாகச் சொல்லிக் கொண்டு உடல் விறைக்கும் குளிரில் அவள் வீட்டுக்குள் வராமல் வாசலிலேயே பட்டினியுடன் படுத்தபோது அம்மா அழகொழுக உபதேசித்தாள்: "அம்மா நளினி! நான் கலப்பு மணம் செஞ்சுக்கணும்னு சொல்லவில்லை. பிறர் சமைத்ததை நாம் சாப்பிடணும்னு சொல்லலை. ஆனால் இதுக்கு அதிகமாக மடிகொண்டாடறது நியாயமில்லை குழந்தை. பரம்பரையாக ஒவ்வொருத்தர் ஒவ்வொரு கர்மா செய்யறா. அவா கலந்து போயிடாமல் அப்படியே பண்ணிண்டு இருக்கறது நல்லதுதான். கலக்கக் கூடாது என்கிறதாலே, ஒருத்தர் உசத்தி இன்னொருத்தர் தாழ்த்தின்னு நினைக்கறது பாபம் பெண்ணே! உன்னைவிட இன்னொருத்தர் தாழ்த்தின்னு நினைச்சு நீ அவா மனசைப் புண்படுத்தினா, உன்னைவிட எத்தனையோ உசத்தியான பகவான் உன்னை எப்படித் தன்கிட்டே நெருங்க விடுவான்? ஆசாரம், ஆசாரம்னு சொல்லிண்டு ஜீவ காருண்யமே இல்லாமல் நெஞ்சீரத்தைப் பஞ்சால் துடைச்சுட்டியே! உன்னையும் வதைச்சுண்டு, பிறரையும் வதைக்கிறதாலே பகவான் எங்கேயாவது பிரீதி அடைவானா? நான் இருக்கிற இடத்திலே எல்லாரும்தான் வருவா. டாகூர் குழந்தைகள் எல்லாரும் சேர்ந்துதான் சாப்பிடுவா. என்னாலே வித்தியாசம் பார்க்க முடியாது. உனக்கு வித்தியாசமாத் தோணினால் கங்கையைப் புரோட்சணை பண்ணிண்டு, 'கோவிந்தா'ன்னு சொல். அது சர்வத்துக்கும் பிராயச்சித்தம்."

அம்மா இத்தனை சொல்லியும் அன்றொரு நாள் நளினி உள்ளே வந்து உண்டு படுத்தாலும், மீண்டும் தன் வழியிலேயேதான் சென்றாள். அன்பின் ஊற்றுக் கண்ணே இல்லாத இதயத்தில் அமுத உபதேசமும் எடுபடாது போலும்!

பிரஸன்னரின் மனைவியை இழந்த இரண்டு மாதங்களுக்குள் அருமைத் தாயை இழந்தாள் சாரதை. அன்று சியாமசுந்தரி வழக்கம்போலவே, கறிகாய்க்காரிக்கு நெல்லும் சடுகும் கொடுத்து, கீரைகள் வாங்கிக்கொண்டு உள்ளே வந்தாள். "இன்னிக்கு என்னமோ கொஞ்சம் ஓய்ச்சலா இருக்கு" என்று சொல்லிக் கொண்டே, தவிடு புடைக்கிற இடத்துக்கு வந்து, தானும் உதவி செய்தாள். பழங்கால மநுஷி என்பது அதுதான். வாசல் ஓரத்தில் போய்ப் படுத்துக் கொண்டாள். வழக்கம்போல் ஊர்க் குழந்தைகள் சியாமாப் பாட்டியிடம் வந்து விளையாடிக் கதை கேட்டன. ஆனால் இன்று சிறிது போதில் அவளுக்குப் பேசவும் அசக்தமாயிற்று.

வேலைக்காரரிடம், "என்னவோ பண்றது, தலை கிறுகிறுன்னு...." என்றாள். விஷயம் அறிந்த அம்மா விழுந்தடித்துக் கொண்டு வந்தாள்.

தன் அம்மாவை அணைந்து அமர்ந்தாள் நம் அம்மா. அவளுடைய காலம் முடிகிறது என்று நன்றாகத் தெரிந்தது. "அம்மா, அம்மா! உனக்கு என்ன வேணும், சொல்லு" என்றாள் மகள். பரம ஞானியான சாரதையைப் பெற்றவளும், கூடிய வரை தானும் ஞானத்துடனேயே நீண்ட நெடிய வாழ்க்கை நடத்தியவளுமான சியாமசுந்தரி, அந்த இறுதி நேரத்திலே, "பூசணிக்காய் கறி சாப்பிடணும்போல இருக்கு" என்றாள்! உலகத்தின் மயக்கை என்னென்பது?

"உடம்பு சொஸ்தமாகட்டும், பண்ணிப் போடறேன்" என்று கூறிய சாரதை கங்கா தீர்த்தத்தைக் கொண்டு வந்து தாயின் வாயில் மும்முறை வார்த்தாள். சியாமையின் சரீரத்தில் சலனம் நின்றது. அம்மா அவளது சிரசிலும், இதய பாகத்திலும் தன் கையை அழுந்த வைத்து ஜபத்தில் ஆழ்ந்து விட்டாள். ஸ்ரீரமண பகவான் தம் அன்னையின் நிர்யாண சமயத்தில் அவளது இதயத்தை அழுந்தத் தேய்த்து விட்டுக் கொண்டிருந்ததும், அவளது எஞ்சிய கர்மத்தை எல்லாம் அந்த ஒரு சிறிது காலத்தில் அவள் அநுபவித்துத் தீர்க்குமாறு தாம் செய்ததாகப் பிற்பாடு கூறியதும் நினைவில் வருகிறது. (சிறப்பா நீலமாதவர் காலமான பின்பும் அவரது உடலத்தின்மீது இவ்விதமே அம்மா ஜபம் புரிந்தாளாம்.)

படுக்கை போடாமல், எவரையும் பணிவிடை செய்ய வைக்காமல், தெய்வப் பெண்ணின் அண்மையில், நல்ல நினைப்புடன், அநாயாச மரணம் அடைந்தாள் அன்பே உருவான சியாமசுந்தரி. (தொடரும்)

பலவகையான ஹல்வாக்கள் தயாரிக்க, இலகுவான புட்டிங்குகள், பழத் தின்பண்டங்கள் முதலியவற்றைத் தயாரிக்க உதவுகிறது பிரவுன் & போல்ஸன் ஃப்ளேவர்டு கார்ன்ஃப்ளவர். தவிர இது இளங் குழந்தைகளுக்கும் நோயாளிகளுக்கும் போஷாக்கு அளிக்கும் ஆரோக்கிய உணவாகும். அருமையான பொருள்களிலிருந்து தயாரிக்கப்பட்டு, மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப்பட்டதால், மணம் ஊட்டப்பட்ட கார்ன்ஃப்ளவர்களிலேயே மிகச் சிறந்தது பிரவுன் & போல்ஸன்.




ஒவ்வொரு பேக்கிலும் ருசியான
5 சுவை வகைகள்

பக்குவ முறை: 300 கிராம் காரட்டு (*சீவி*, மெல்லியதாக நறுக்கப்பட்டது.) 2½ கோப்பை பால். 1 பேக்கெட் பிரவுன் & போல்ஸன் ஃப்ளேவர்டு கார்ன்ஃப்ளவர் (காரமெல்). 2 முழு தேக்கரண்டி பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர். 1 மேசைக் கரண்டி பிரவுன் & போல்ஸன் பேடெண்ட் கார்ன்ஃப்ளவர். 1 முட்டை. 300 கிராம் சர்க்கரை. 2–3 மேசைக் கரண்டி வெண்ணெ. 5–6 ஏலக்காய்கள் (பொடியாக்கப் பட்டவை). வனில்லா எஸ்ஸென்ஸ். 1 சிட்டிகையளவு ரெக்ஸ் பேகிங் பவுடர் (சுமார் ½ தேக்கரண்டி.) ¾ கோப்பை மைதா. 30 கிராம் வாதாம் பருப்பு (*சீவியது*). 50 கிராம் முந்திரிப் பருப்பு (*சீவியது*). 3 மேசைக் கரண்டி உலர்ந்த திராட்சை. 2 தேக் கரண்டி கறுப்புத் திராட்சை. சிறிது சாதிக்காய். 2 கிராம்புகள் [பொடியாக்கப்பட்டவை.]

1. காரட்டை 1 கோப்பை பாலில் மிருதுவாகும் வரை வேக வைக்கவும். மெல்லிய விழுதாக அரைத்துக் கொள்ளவும்.
2. ஃப்ளேவர்டு கார்ன்ஃப்ளவர், கஸ்டர்டு பவுடர், மற்றும் பேடெண்ட் கார்ன்ஃப்ளவரை 1 கோப்பை குளிர்ந்த பாலில் கலந்து கொள்ளவும்.
3. முட்டையை மிகவும் மிருதுவாகவும் மெல்லிழையாகவும் செய்துகொள்ளவும். தனியே வைக்கவும்.
4. சர்க்கரையை பாகாகச் செய்துகொள்ளவும். அது ஓரிழைபோல் ஆனதும், அரைத்துள்ள காரட்டை ½ கோப்பை பாலுடன் சேர்க்கவும். அதைக் கலந்து, கார்ன்ஃப்ளவர் மற்றும் கஸ்டர்டு பவுடர் கலவையைக் கொட்டி, 4-5 நிமிடங்கள் வரை விடாமல் கிளறவும். அத்துடன் 1 மேசைக் கரண்டி வெண்ணெயைச் சேர்க்கவும். கலவை பாதி திரவமானதும், அடுப்பிலிருந்து இறக்கி விடவும். ஏலக்காயையும், 3-4 துளி வனில்லா எஸ்ஸென்ஸையும் சேர்க்கவும்.
5. குளிர்ந்ததும், விழுதாகச் செய்திருக்கும் முட்டையைச் சேர்த்து, நன்றாகக் கிளறவும் (அல்லது கடையவும்.) பேகிங் பவுடரை சேர்த்து, கிளறவும்.
6. மைதாவையும் உலர்ந்த பழங்களையும் சேர்க்கவும். இப்போது அதை கேக் கலவையில் மெதுவாகக் கலக்கவும். சாதிக்காயையும் கிராம்புப் பொடியையும் தூவி, நன்றாகக் கிளறவும்.
7. மிஞ்சியுள்ள வெண்ணெயை கேக் தட்டில் தடவி, அதில் கேக் கலவையைக் கொட்டி, மிதமான சூட்டில் 1½ முதல் 2 மணிநேரம் வைத்து கெட்டியாக்கவும்.

**இதுபோல் இன்னும் பலவகையான தின்பண்டங்கள் தயார்செய்து, உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின்வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்.**

**இலவசம்! பக்குவ முறை நூல்.** இலவசப் பிரதி ஒன்றுக்கு எழுதுக (கவரின் மீது முகவரியை ஆங்கிலம் இந்தியில் மட்டுமே எழுதவும்): பப்ளிஸிடி டிபார்ட்மெண்ட், நெ. K—6



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**

ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1 (பி. ஆர்.)

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: **பாரி & கம்பெனி,** டேர் ஹவுஸ், சென்னை—1. மற்றும் அவர்களது கிளைகள்.

SHB 8484 T11




## 37. பாவத்தைப் பரிந்து ஏற்ற பாவனி

அம்பிகே! ஸ்பரிசவேதியில் வைத்த இரும்பும் உடனே பொன்னாவது போல், கங்கையில் கலந்த கழிவடை நீரும் புனித கங்கையே ஆகி விடுவது போல், எத்தனையோ பாவங்களால் மிகவும் மாசுற்ற என் உள்ளமும் உன்பால் கொண்ட அன்பால் கட்டுண்ட பின் எப்படி நிர்மலமாகாதிருக்கும்? - ஆதி சங்கரரின் ஆனந்தலஹரி

சியாமசுந்தரி மறைந்தவுடன் சாரதை கதறித் தீர்த்தாள். நீண்ட காலத்துக்கு முன்பே ராமகிருஷ்ணர் கூறியிருந்தது போல், அவ்வப்போது அம்மா உலகியல் இன்ப துன்பங்களில் ஒரேயடியாக மனத்தைக் கொடுத்து விட்டதாகத் தோன்றினாலும் அந்த ஆழ்ந்த உணர்ச்சி அதிசயமான விரைவில் சுவடே தெரியாமல் மறைந்து விடும். அவதாரங்களின் அப்ராக்ருத சரீரத்தைப் பிரகிருதி சம்பந்தமான பிருதிவியில் நிறுத்தி வைக்கவே அவ்வப்போது இந்த உணர்ச்சி எழுச்சிகள் நேருகின்றன என்பார் ராமகிருஷ்ணர்.

சாரதாநந்தர் சியாமாப் பாட்டியின் உத்தரக் கிரியைகளை ஒரு குறையுமின்றி, யதோக்தமாக நடத்தி வைத்தார். கிருகயக்ஞத்தன்று அம்மா, தன் அம்மாவின் இறுதி ஆசைப்படி பூசணிக்காய் கறி சமைத்து ஊராருக்கெல்லாம் அன்னதானத்துடன் வழங்கினாள்.

சாரதை தனது அன்னையின் ஸ்தானத்தில் வைத்திருந்த இன்னொரு புண்ணியசாலினி உண்டு. ராமகிருஷ்ணரைக் கோபாலனாகக் கண்ட கிழவி கோபால மாதாவே அந்தப் பாக்கியசாலி. பெற்ற தாயை இழந்த பின் கல்கத்தாவுக்கு வந்த சாரதை கோபால மாதாவை மரணப் படுக்கையில் கண்டாள்.

அம்மா உள்ளே நுழைந்ததும், ''கோபாலா, வந்தாயாடா, அப்பனே'' என்று கைகளால் துழாவினாள் அந்த மூதாட்டி.

சாரதை சிலை போல் நின்றாள்.

தலைப்பில் காண்பது அம்மா சென்னையில் தங்கியிருந்த இல்லம்.

பக்கலில் பணிமகளிடம் கோபாலமாதா ஏதோ ஜாடை செய்தாள். அந்தப் பெண் நம் அம்மாவிடம் ''உங்க பாத தூளி வேணும்கிறாங்க'' என்றாள்.

தன் 'மாமியார்' என்றே எல்லோரிடமும் கோபால மாதாவைக் குறிப்பிடுவாள் அம்மா. அந்தக் கிழவியும் ''மாட்டுப் பெண்ணே!'' என்று தான் நம் அம்மாவைக் கூப்பிடுவாள். இன்று 'மாமியார்' இவளது பாத தூளியைக் கேட்டபோது, சாரதை எவ்விதத் தயக்கமும் ஆட்சேபமும் செய்யாமல் தன் திருவடியை நீட்டினாள். பணிப்பெண் அதனை வஸ்திரத்தால் ஒற்றி எடுத்துக் கோபால மாதாவின் உடல் முழுதும் தேய்த்து விட்டாள்.

சிறிது காலத்தில் கோபால மாதா பூலோகத்தை விட்டுக் கோலோகம் சென்றடைந்தாள்.

அரசர்கள் 'காடு ஆறு மாதம், நாடு ஆறு மாதம்' என்று வாழ்ந்தது போல், கல்கத்தாவிலும் ஜயராம்பாடியிலும் மாறி மாறி வசித்த அம்மா பிறந்த ஊருக்குத் திரும்பினாள். எந்த அவதாரமும் அநுபவிக்காத பிக்கல் பிடுங்கலுடன், எந்த அவதாரமும் செய்திராத ஓயாத உழைப்புடன் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தாள்.

அதிசயத்திலும் அதிசயமாக அவளை விட்டுத் தாற்காலிகமாக ஓர் உபத்திரவம் விலகுவதாகத் தோன்றியது. ஸுரபாலாவின்

தகப்பனார் அவளைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். ஆதியில் ஸுரபாலா தாயை இழந்த பின் தாய்வழிப் பாட்டியிடம் வளர்ந்தாள். தந்தைக்கு அவளிடம் பற்றுதலே கிடையாது. எனவே இப்போது மூளைக் கோளாறு பிடித்த மகளை அவர் அழைத்துப் போனது ஆச்சரியமாகவே இருந்தது. பிறகுதான் மர்மம் வெளியாயிற்று. பொருளாசையே உருவான அந்தத் தகப்பனார், அநாதையும் அவலமுமான ஸுரபாலாவின் நகைகளை ஈவு இரக்கமின்றிக் கழற்றி வைத்துக் கொண்டு அவளைச் சாரதையிடம் திருப்பி ஓட்டி விட்டார். சித்தக் கோளாற்றிலும் பொருள் ஆசையை விடாத ஸுரபாலா நகைகளுக்காகப் புலம்பத் தொடங்கினாள்.

ஒரு நாள் அம்மா வீட்டிலே யாரோ பக்தரிடம் உரையாடிக் கொண்டிருந்தபோது திடீரென்று பேச்சை நிறுத்தினாள். ''நான் போறேன்; நான் போறேன். அந்தப் பைத்தியக்காரப் பொண்ணு **அம்மா**வை இம்சை பண்ணிண்டிருக்கு'' என்று சொல்லிக் கொண்டே வேகமாக வெளி வந்தாள். சிம்மவாஹினியின் கோவிலுக்கு வந்தாள். ஆம், அங்கு ஸுரபாலா சிம்மவாஹினியிடம் நகைக்



காகச் சண்டை பிடித்துக் கொண்டிருந்தாள்.

சாரதை அவளை நல்ல வார்த்தை சொல்லிக் கையைப் பிடித்து அழைத்து வந்தாள். சிம்மவாஹினியை சாரதை காப்பாற்றினாள்; சிம்மவாஹினி சாரதையைக் காப்பாற்றவில்லை! ஸுரபாலா தன் பல்லவியை மாற்றிக் கொண்டாள். சாரதையிடமே ''எங்கே என் நகை! திருடி! அதைத் திருப்பித் தரயா இல்லையா?'' என்று போர் தொடுக்கலானாள்.

அம்மாவைக் காண வந்திருந்த பக்தர் அவளது நிலை கண்டு உருகினார். அம்மா வேதனையோடு சிரித்துக் கொண்டே, ''கிரீஷ் சொல்வார்: சிவனையும் காளியையும் சுற்றிப் பேய் பிசாசுகள், பைத்தியங்கள் எல்லாம் இருக்கும்னு. இவ என் பைத்தியச் சேடி'' என்றாள்.

ஸுரபாலாவின் தந்தையை வரவழைத்தாள் அம்மா. பாரமார்த்திகப் பருவதங்களும் எவளைப் பணிந்து வணங்கினவோ அப்படிப்பட்ட சாரதை 'சம்பந்திப் பிராமணராகிய' ஸுரபாலாவுடைய தந்தையை நமஸ்கரித்து அவரது காலைப் பிடித்துக் கொண்டாள். ''மாமா, இந்தக் கஷ்டத்திலேயிருந்து என்னை விடுவிக்க மாட்டேளா?'' என்று பரிதாபமாக வேண்டிக் கொண்டாள்.

அந்தக் கொடூரச் சித்தரோ, ''என் காலில் விழுந்தால் காரியத்தைச் சாதிச்சுக்க முடியுமா என்ன? என் கிட்டேயிருந்து நகை நட்டு ஒண்ணும் பெயராது. நாளைக்கே காலம் எப்படி இருக்குமோ? நீங்கள்ளாம் இந்தப் பெண்ணையும் பேத்தியையும் என்ன செய்வேளோ?'' என்றார்.

அம்மாவுக்கு ஒரு வேகம் வந்தது. 'மயிலே மயிலே இறகு போடு' என்றால் இந்த மனிதர் மசிய மாட்டார். இவரைக் கேட்கிறபடி கேட்க வேண்டும் என்று தீர்மானித்தாள். லலித் சட்டர்ஜி என்று பக்தர் ஒருவர் இருந்தார். அவர் அஞ்சா நெஞ்சர். எதற்கும் துணிந்தவர். அவரைக் 'கெய்ஸர்' என்றே அழைப்பார்கள். அம்மா அவருக்குத் தகவல் தெரிவித்தாள். 'கெய்ஸர்' கல்கத்தாவின் பெரிய போலீஸ் அதிகாரி ஒருவரிடமிருந்து கடிதம் பெற்றுக்கொண்டு, போலீசார் சூழ, அமர்க்களமாக ஐரோப்பிய உடுப்பிலே, ஒரு பல்லக்கில் ஆரோகணித்து ஸுரபாலாவின் தந்தை வீட்டில் வந்திறங்கினார். அந்தப் பொல்லாத கிழவர் நடுநடுங்கிக் கொண்டு கெய்ஸரின் காலைப் பிடித்துக் கொண்டார்.

இங்கே அம்மா, சம்பந்தியின் வீட்டுக்குக் கெய்ஸர் வந்தாயிற்று என்று அறிந்ததும் விலவிலத்துப் போனாள். மகாசயர் எனப்படும் மகேந்திரநாத் குப்தாவிடம், ''நீங்களும் கூடப் போயிருங்கோ. சம்பந்தியைக் கெய்ஸர் அவமரியாதை பண்ணிவிடப் போறான். அவனுக்குக் கோபம் வந்ததுன்னா எல்லையே இருக்காது. நீங்க கூட இருந்தால் கொஞ்சம் பதமாயிருப்பான்'' என்று கையைப் பிசைந்து கொண்டு கூறி அனுப்பினாள். அதுதான் தாய் உள்ளம்!

நகைகளுடன் வெற்றி வீரராக வந்தார் லலித் சட்டர்ஜி. 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டாள் அம்மா. ''நகைக்காகக் கவலைப்படுவது போய் அந்தக் கிழவனாருக்காகக் கவலைப்பட்டு எனக்குக் கை காலே ஓடவில்லை. அவரை ரொம்பப் பயமுறுத்தி விடவில்லையே?'' என்று 'கெய்ஸரை'க் கேட்டாள்.

இச்சமயத்தில் தம்மைக் காணவந்த ஒரு பக்தரிடம் அம்மா பேசிய பேச்சு ரத்தினத்துக்கும் மேலே உயர்வானது.

அந்த பக்தர், ''ராமகிருஷ்ணர் சாட்சாத் பரம்பொருளா?'' என்று கேட்டார்.

''சந்தேகமில்லாமல்'' என்றாள் அம்மா.

''மனைவிக்குக் கணவன்தான் கடவுள் என்கிற ரீதியில் சொல்கிறேளா?''

''கணவர் என்கிற முறையிலும்தான்; வாஸ்தவத்திலும்தான்.''

''சரி. அப்படீன்னா ஸீதைக்கும் ராமனுக்கும், ராதைக்கும் கிருஷ்ணனுக்கும் இருந்த மாதிரி உங்களிருவருக்கும் ஐக்கியம் இருக்கணும். நீங்க சாதாரண மனுஷி மாதிரி சப்பாத்தி மாவை உருட்டிண்டு இருக்கிறேளே?''

''குழந்தே! இதுதான் மாயை, மாயை என்கிறது. வைகுண்டத்திலே நாராயணனுக்குப் பக்கத்திலே மகாலக்ஷ்மியாக உட்கார்ந்திருக்க வேண்டியவள்தான், இங்கே புகை மூட்டத்திலே சமையல் பண்ணிண்டு இருக்கேன். என்ன காரணம்னு கேக்கிறியா? தெய்வத்துக்கு மநுஷ்யாளா ஆகி விளையாடணும்னு ஆசை. அதுதான் காரணம்.''

''அப்படியானால் உங்களுக்கு அப்பப்போ உங்களுடைய ஈசுவரத்துவம் பளிச்சிடுமா?''

''ஆமாம். அந்தச் சமயங்களில் என்னை நானே, 'இதென்ன இந்தக் காரியங்களைப் பண்ணிண்டு இருக்கியே, நீ யார் தெரியுமா?'ன்னு கேட்டுப்பேன். ஆனால் மாயையைப் பாரு. உடனே இந்த வீடு, வாசல், குழந்தைகள் முதலானதெல்லாம் மனசுலே வந்து புகுந்துக்கிறது. மாயை என்னை ஆட்டி வைக்கிறதுன்னு அர்த்தமில்லை. நானேதான் மாயையை ஒப்புக் கொண்டு ஏத்துக்கறேன்.''

> கர்மத்தின் கட்டிலிருந்து விடுபடுகிற வழி என்ன? ஒரு காரியமும் இன்றிச் சோம்பிக் கிடப்பதல்ல. எதிலும் பற்றேயின்றி, மனம் சும்மாக் கிடக்கும் நிலையில் கர்மம் புரிய வேண்டியதில்லை. ஆனால் இந்த நிலை தொடக்கத்திலேயே சித்திக்காது. இந்த முதிர்ச்சி உண்டாகிற வரையில், சுயநலமின்றிக் கர்மம் செய்து கொண்டே யிருப்பதுதான் கர்மத்தின் கட்டிலிருந்து விடுபட வழியாகும்.
>
> — தூய அன்னை சாரதா தேவி

எதற்காக? நமக்காகத்தான்!

அந்த ஆண்டு நவராத்திரி துர்கா பூஜைக்காக அம்மா கிரீஷின் வேண்டுகோளை ஏற்று அவரது இல்லத்துக்கு எழுந்தருளினாள். அப்போது அவளுக்கு மலேரியா காய்ச்சல்.

கிரீஷ் பெரிய அளவில் விழா எடுத்தார், நடமாடும் துர்க்கை வந்தாள் என்ற பூரிப்பில். ஏராளமான பக்தர்களுக்குத் தரிசனமும், பாதஸ்பரிசனமும் தரும் பொருட்டு அவள் நெடு நேரம் போர்த்திக் கொண்டு நிற்க வேண்டியதாயிற்று. அஷ்டமி — நவமி கூடுகிற ஸந்தியில் அதி விசேஷமான வழிபாடு நடக்கும். அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மியாக ஆவிர்ப்பித்த தேவி, மகிஷாசுரனை வதைத்த பரம புண்ணிய முகூர்த்தம் அதுவே. ஆனால் அச்சமயத்தில் அம்மாவுக்கு ஜுரம் அதிகரித்து விட்டதால் அவள் தன் ஜாகையிலேயே முடங்கிக் கிடக்கும்படியாயிற்று.

கிரீஷுக்கு ஆற்ற மாட்டாத குறை. தன் வீட்டு மாடியில் துக்கத்துடன் அவர் அமர்ந்திருக்கையில், கீழேயிருந்து, ஸந்தி பூஜை தொடங்குவதற்காகப் புரோகிதர் குரல் கொடுத்தார். கிரீஷ் உடனிருந்தவர்களிடம் "எனக்கு மனசே சூன்யமாயிடுத்து. இதற்கென்றே ஊரிலிருந்து வந்த அம்மா இப்போது நம்மோடு இல்லை. அம்மா இல்லாத துர்கா பூஜையிலே அர்த்தமே இல்லை. கீழே என்ன வேணுமானாலும் பண்ணட்டும். நான் வரவில்லை" என்றார்.

அதே சமயத்தில் பின்புறக் கதவு மெல்லத் தட்டப்பட்டது. "யார்?" என்று கேட்டுக் கொண்டே வேலைக்காரி சென்றாள்.

வெளியிலிருந்து "நான்தான்" என்று மெல்லிய குரல் வந்தது.

ஆஹா, **அம்மா**! கிரீஷ் மூர்ச்சித்து விழாமலிருந்தது ஆச்சரியம்தான்.

"அங்கே எனக்கு இருப்பாகவே இல்லை. அதுதான் வந்துட்டேன்" என்று கூறிக் கொண்டு உள்ளே பிரவேசித்தாள் சாரதை. குழந்தைகளை ஏமாற்றக் கூடாதென்று காய்ச்சலைப் பொருட்படுத்தாமல் தன் விடுதியிலிருந்து நடந்தே வந்திருக்கிறாள்!

மின்னல் வேகத்தில் செய்தி பரவவே, திமுதிமுவென்று கூட்டம் சேர்ந்தது. ஒவ்வொருவராக அனைவரும் தன் பாதத்தில் மலரிட்டு வணங்கும் வரையில் அப்படியே நின்று கொண்டிருந்தாள். பொதுவில் மகான்கள் அநுமதிக்க மறுக்கும் கிரீஷின் நடிக—நடிகையர் கூட்டமும் அம்மாவை வணங்கி அருள் பெற்றது. தாபஜ்வரத்தை அம்மா தாங்கியது பெரிதே இல்லை; எத்தனையோ பேரின் பாப பாரத்தைப் பரம பவித்திர மாதா தாங்கினாளே, அதுதான் மகா பெரிசு! பாஸிடிவ் மின் சக்தி, நெகடிவ் மின்சக்தியை வாரி இழுத்துக் கொள்வதுபோல் அம்மாவின் புனித சக்தி, பாவியரின் தீய சக்தியை வாரி இழுத்துக் கொள்ளும். பாவிகள் அம்மாவின் காலைத் தொட்டு வணங்கியவுடன் அவர்களின் பாபம் அம்மாவுள் புகும். அவளது உடம்பு, குறிப்பாகத் திருப் பாதங்கள் பற்றி எரியும். அம்மா அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் சகிப்பு ஸ்வரூபிணியாக, சாந்த ஸ்வரூபிணியாக நிற்பாள். அனைவரும் அகன்ற பின்னரே கங்கா ஜலத்தால் திரும்பத் திரும்பக் காலை அலம்பிக் கொண்டு அந்தத் தாபத்தைத் தீர்ப்பாள் அம்மா. இப்படி அவதிப்பட்ட போதிலும் அடியார் தன் அடி தீண்டுவதை அவள் தடுக்கவேமாட்டாள்.

இவ்விதம் பிறரது பாதகங்களால் மலினமான தனது நளின பாதங்களை நள்ளிரவு வரையில் கழுவிக் கொண்டாலும், அவளது அருட்கங்கை வற்றாது. அந்த நடுநிசியில் நடுத்தெருவிலிருந்து ஒரு பதிதனின் குரல் கேட்டுவிட்டால் போதும், விரைந்தோடுவாள் வாயிற்புறச் சாளரத்துக்கு. பதிதனுக்கும் கருணாமயீயாகத் தரிசனம் தந்து, தரிசனத்துடன் அவனது பாபத்தையும் பறிந்து வாங்கிக் கொள்வாள்.

அன்பின் எல்லை நிலம் நம் அன்னை சாரதை!

ஜயராம்பாடிக்குத் திரும்பினாள் தேவி. மலேரியாக் காய்ச்சல் கண்டு ஜன்னி நிலைக்குப் போய்விட்டது. எப்படியோ பிழைத்தாள்.

அம்மாவைக் கல்கத்தாவுக்கு வருமாறு அழைத்தார் சாரதாநந்தர்.

அம்மா மெல்லப் பேசினாள்: "கல்கத்தாவிலேயும் பல தினுசு கஷ்டம் இருக்கு ஷரத். முன்னே நான் ஒன்றிக் கட்டையாயிருந்த மட்டும் சரி. இப்போ பிச்சி மாமி (ஸுரபாலா), ராதி எல்

லோரையும் இழுத்துண்டு விடா விடா வரது நன்னுயில்லே. நான் இங்கேயே கிடக்கேன்'' என்றுள்.

சாரதாநந்தரின் உள்ளத்தில் ஓர் உத்தேசம் உருவாயிற்று. ஆனுல் கர்ம வீரர்கள் உத்தேசத்தைச் சொல்லமாட்டார்கள்; அது பழுத்தபின் கனியைத் தான் கொண்டு வருவார்கள். ஏதும் பேசாமலே கல்கத்தாவுக்குத் திரும்பினுர் சாரதாநந்தர்.

அன்றிலிருந்து அந்தத் துறவி பைசா பைசாவாகச் சேமிக்கலானுர். விவேகாநந்தரின் உரைகளைப் புத்தகமாக வெளியிட்டதில் 2700 ரூபாய் கிடைத்தது. கங்கைக் கரையில் பாக் பஜாரில் ஒரு பக்தர் முன்னமே அன்பளிப்பாகத் தந்திருந்த மனைக் கட்டில் கடைகால் எடுத்தார். ''அம்மா, உன்னை நம்பி இதில் ஈடுபடுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு கடன் தேடலானுர். எட்டாயிரத்துக்கு மேல் கடனுகத் திரட்டினுர். கடைகாலின் மீது கட்டடம் எழும்பியது. பதினுயிரம் ரூபாய் செலவில் மூன்றடுக்குக் கட்டடம் எழும்பியது. ஆறு அறைகள் கொண்ட கீழ்ப் பகுதி 'உத்போதன்' என்ற சமய சஞ்சிகைக்கு அலுவலகமாயிற்று. முதன் மாடியிலிருந்த மூன்று அறைகளும், மேல் மாடியில் உள்ள அறையும் அம்மாவுக்கே சொந்தமாக வைக்கப்பட்டன.

பராசக்திக்கு ஜீவராசிகள் அனைத்துமே குழந்தைகள் என்றுலும் கணபதியும் கார்த்திகேயனும் விசேஷமாகக் குழந்தைகள் அன்றே? அம்மாவுக்கு இப்படி இரு சிறப்புப் புதல்வர்களாயிருந்தவர்கள், முதலில் யோகாநந்தரும் பிறகு சாரதாநந்தரும் ஆவர். ஸ்ரீராமகிருஷ்ண மடத்தை எதிர்பாராமல், தாமே பொருள் திரட்டி அம்மாவுக்கு ஆஸ்தானம் அமைத்துத் தந்த பெருமையைப் பெற்றவர் சாரதாநந்தர். எண்ணுயிரம் ரூபாய் கடனை அடைக்கவும் அவர் உபாயம் வைத்திருந்தார். அம்மாவுக்குக் கல்லால் வீடு கட்டியவர், 'அப்பா' வுக்குச் சொல்லால் வீடு கட்டிக் கொண்டிருந்தார். ஆம், ''ஸ்ரீராமகிருஷ்ண லீலாப் பிரசங்கம்'' என்ற அற்புத வாழ்க்கை வரலாற்றை இயற்றியவர் சாரதாநந்தரே. அந்த நூல் விற்பனையின்மூலம் பிற்பாடு கடனைத் தீர்த்தார்—குருமஹராஜுக்குப் பட்டிருந்த அன்புக் கடனையும்தான்! அன்புப் பணி மூலமே இன்ப நிலையான மோட்சத்தைத் தொட்டவர் சாரதாநந்தர்.

வீட்டு வேலை பூர்த்தியானதும் சாரதாநந்தரின் மனமும் பூரித்தது. அம்மாவை அழைத்து வர அவர் எண்ணிய அதே சமயத்தில் அவருக்கு அம்மாவின் அழைப்பு வந்தது. அதுகாறும் கூட்டுக் குடும்பமாக இருந்து வந்த சாரதையின் சோதரர்கள் இப்போது பாகப் பிரிவினை செய்து கொண்டு பிரிந்து போக முடிவு செய்திருந்தனர். வெறும் நாளிலேயே பூசலிட்டுக் கொள்ளும் அவர்களிடை இப்போது புயலாகக் கிளம்பிய சர்ச்சைகளைச் சொல்லி முடியாது. தன் குழந்தைகள் அனைவரிலும் தெளிந்த புத்தியும், நிதானமும், உறுதியும் கொண்ட 'ஷரத்' வந்தாலே சுமுகமான தீர்வு பிறக்கும் என்று அம்மா கருதி, அவரை அழைத்தாள். சாரதாநந்தர் ஜயராம்பாடிக்குச் சென்றுர்.

பாகப் பிரிவினை அடிதடி இல்லாமல் நடந்ததற்குச் சாரதாநந்தர்தான் காரணம். அவரது ஆத்மிக காம்பீர்யம் காரணமாக, அவரது தலை மறைவில் குஸ்தி பிடித்துக் கொண்ட அம்மாவின்

## ஆறுமுகமங்கலத்தில் ஆனைமுகன் திருப்பணி!

திருநெல்வேலி ஜில்லா, ஸ்ரீவைகுண்டம் தாலூகாவில் தாம்பிரபரணி நதிக் கரையில் உள்ள ஊர் ஆறுமுகமங்கலம். இங்கு ஸ்ரீ ஆயிரத்தெண் விநாயகர் திருக்கோயில் அமைந்திருக்கிறது. இந்த விநாயகராலயம் கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், மணிமண்டபம் முதலிய பலவிதமான மண்டபங்களுடன் நூல்களில் கூறிய விதிப்படியே அமைந்துள்ளன. அழகிய தேருண்டு. தேரோட்டம் உண்டு. கோயிலில் விலை உயர்ந்த வாகனங்கள் பல உண்டு. அவைகள் பந்தோபஸ்தாக வைப்பதற்குத் தகுதியாகப் பாதுகாப்பான இடம் இல்லை. மண்டபங்கள் எல்லாம் ஒழுக்குடையதாக இருக்கின்றன. அவசியமான திருப்பணிகளைச் செய்து முடிப்பதற்குத் திருப்பணிக் கமிட்டி நியமிக்கப் பெற்றுள்ளது. இந்தப் புண்ணிய கைங்கரியத்துக்கு எல்லோரும் பொருளுதவி செய்து பயனடையும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறுர்கள். திரு கா. சு. சண்முகவேல் நாடார், பொக்கிஷதார், ஆறுமுகமங்கலம் ஸ்ரீ ஆயிரத்தெண் விநாயகர் திருப்பணிக் கமிட்டி, தூத்துக்குடி என்ற விலாசத்துக்குப் பொருளுதவி அனுப்பலாம்.

சோதரர்கள், அவரைக் கண்ட மாத்திரத்தில் பெட்டிப் பாம்பாகி விடுவர். சகோதரர்கள் வெட்கக்கேடான முறையில் கணக்குப் போட்டுப் பிரிவினை செய்யும்போது, அம்மா சிறிதும் பட்டுக்கொள்ளாமல் ஒதுங்கி இருந்தாள். அவளது பற்றின்மையையும், நிச்சலனப் பாங்கையும் கண்டு அவளை நன்கு புரிந்துகொண்ட 'ஷரத்'துமே ஆச்சரியப்பட்டார்.

கல்லுக்குள் ஈரம் என்பார்களே, அது போல் சாரதையின் வறண்ட சகோதரர்களுக்குள்ளும் ஒரு குளிரிழை ஓடிற்று. வாழ்நாள் எல்லாம் தங்களுக்கு உழைத்துக் கொட்டியிருப்பவளும், பணத்தாலும் எவ்வளவோ செய்திருப்பவளுமான அக்காளுக்கெனப் பிதிரார்ஜிதக் குடிசைகளில் ஒன்றைத் தர அவர்கள் முடிவு செய்தனர். மத்தியஸ்தக் குழுவினர் அம்மா எந்தக் குடிலைத் தேர்ந்தெடுக்கிறாள் எனக் கேட்டனுப்பினர்.

அம்மாவின் முகத்தில் இகலோகத் தொடர்பில்லாத இளநகை அரும்பியது. ''இந்த எலிகள் இருக்கே, அதுகள் பாவம், தங்களுக்குன்னு வளை தோண்டிக்கும். அப்புறம் என்ன நடக்கும் தெரியுமோ? நாகப் பாம்பார் வந்து அந்த எலிகளைத் தின்னுட்டு, வளையிலே ஜம்முனு வாசம் பண்ணுவார்'' என்று பதில் சொல்லியனுப்பினாள்.

மத்தியஸ்தருக்கு இந்த வேதாந்தம் புரியவில்லை. அன்றாட உலகைக் கருத்தில் வைத்து அம்மா ஒரு முடிவுக்கு வர வேண்டுமென்று சொல்லியனுப்பினர்.

''எனக்குன்னு எதுவும் வேண்டாம். நான் பிரஸன்னன் அகத்திலேயும் கேலே அகத்திலேயும் மாறி மாறி இருந்துக்கறேன்'' என்று தீர்மானமாகச் சொல்லி விட்டாள் அம்மா.

பிறகு சாரதாநந்தரிடம், ''ஷரத், நான் கல்கத்தாவுக்கு வரேண்டாப்பா'' என்றாள் அன்பு மயமாக.

சாரதாநந்தரின் உள்ளத்தில் ஆனந்த ஊற்றெடுத்தது. கல்கத்தாவில் ஷரத் கட்டியிருப்பதுதான் தனக்குச் சொந்த வீடு என்பதை அம்மா எப்படிச் சொல்லாமல் சொல்லிவிட்டாள்?

1909-ம் ஆண்டு மே 23ந் தேதி சாரதா தேவி 'உத்போதன் சாலை' என்றே இப்போது பேர் பெற்றுவிட்ட — அந்த பாக்பஜார் வீதியில் சாரதாநந்தர் எழுப்பியிருந்த கட்டடத்தில் பொன்னடி வைத்தாள். அங்கும் சில அசௌகரியங்கள் இல்லாமலில்லை. ஆனால் சாரதாநந்தர் கூர்ந்த கவனத்துடன் அங்கு செய்திருந்த ஏற்பாடுகளைப் பார்த்து அம்மா அளவில்லா மகிழ்ச்சி அடைந்தாள். ''குழந்தே! உன்னை இருதயம் நிரம்பி ஆசீர்வதிக்கிறேன்'' என்றாள்.

**சா**ரதாநந்தரை அம்மா 'சொற்படி' நடப்பவர் என்று சொல்ல முடியாது. ஏனென்றால் அம்மா சொல்லுமுன்பே அவளுக்கான பணிவிடையைச் செய்து விடுவார் அவர். அதோடு அம்மாவே சாரதாநந்தரின் சொற்படி நடப்பவளாக ஆகிவிட்டாள். எந்த விஷயமானாலும், ''ஷரத் எப்படிச் சொல்றானோ, அப்படிச் செய்யலாம்'' என்பாள்.

ஆனால் இதுபோன்ற சந்தர்ப்பங்களில் எவருக்கும் ஏற்படக்கூடிய தலைக் கனம் சாரதாநந்தருக்கு இம்மியும் ஏற்பட்டது கிடையாது.

தம்மை யாராவது நமஸ்கரித்தால் கூட அதைச் சாரதாநந்தரால் தாங்க முடியாது. ''நீங்க அம்மாவோட பிரதம கிங்கரர் இல்லையா? அதுக்காக நமஸ்கரிக்கத்தான் வேணும்'' என்று யாரேனும் கூறினால், ''அந்த அம்மா உங்களுக்கும் அநுக்கிரகம் பண்ணுகிற அம்மாதானே? அவளோட கடாக்ஷத்துக்குக் காத்திருந்து பிரார்த்தனை பண்ணுகிறவன்தான் நான். அவள் திருஉள்ளம் கொண்டால் இந்த க்ஷணத்திலேயே நான் இருக்கிற இடத்திலே உங்களை அமர்த்த முடியுமே?'' என்பார் சாரதாநந்தர்.

அம்மாவுக்குச் சின்னம்மை வார்த்தது. கடுங் கோடை காலம் வேறு. அம்மாவின் சூழலையும் உள்ளத்தையும் குளிர்விக்க சாரதாநந்தர் சகலமும் செய்தார். தினமும் சீதளா (மாரியம்மன்) கோயில் அர்ச்சகர் வந்து வேப்பிலை போட்டார். அம்மா கழுத்தைச் சுற்றிப் புடவைத் தலைப்பை முடிந்தபடி சம்பிரதாயப்படி அவரை நமஸ்கரிப்பாள்.

ஒரு பக்தர், ''அம்மா, நீங்க ரொம்ப எளிமையானவர் என்பது உண்மை. ஆனாலும் குருமஹராஜ் பத்தினி என்கிறதுக்காகவாவது நீங்க இந்தப் பூஜாரிக்கு விழுந்து நமஸ்காரம் பண்ணாமை இருக்கணும். இவர் படு சாமானிய ஆள்'' என்றார்.

''அது எப்படி வேணுமானாலும் இருக்கட்டும். அவர் அம்பாளைத் தொட்டுப் பூஜை பண்ணுகிற பிராமணர். அவாளை நமஸ்காரம் பண்றது சம்பிரதாயம். அவாவாளுடைய ஸ்தானத்துக்கான மரியாதையைத் தரத்தான் வேணும். குரு மஹராஜ் பழைய ஆசாரங்களை அழிக்கிறதுக்காக வரலைன்னு புரிஞ்சுக்கோ'' என்றாள் தேவி.

(தொடரும்)

# அம்மா

## ரா. கணபதி

## 38. சென்னையில் அன்னை

ஆயிரக்கணக்கான மக்கள் நீண்ட காலமாக வழிபட்டுப்பிரார்த்தனையும், தவமும், ஜபமும், தியானமும் செய்த க்ஷேத்திரங்களில் அந்த ஆத்மிக எண்ணங்களே உருக்கொண்டு விடுமாதலால், அங்கு ஈசுவர சாந்நித்யம் நிறைய இருக்கும் என்பதைப் புரிந்து கொள். புராதன காலந்தொட்டு, எண்ணிலா அடியார்கள் இந்த க்ஷேத்திரங்களுக்கு வந்து உள்ளார்ந்த பக்தியோடு கதறியிருக்கிறார்கள். ஆகையால் எங்கும் இருக்கும் ஈசுவரன் இங்கெல்லாம் தன்னை விசேஷமாகத் தோற்றுவித்திருப்பதை உணரலாம். பூமியின் அடியில் எங்குமே நீர் ஓடினாலும், நமக்கு நீர் வேண்டியபோது உடனே எடுத்துக் குடிக்கக் கிணறும் குளமும் இருப்பது போல், எங்கும் உள்ள இறைவனை நாம் எளிதில் உணர க்ஷேத்திரங்கள் உள்ளன.

\- பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

*1910ம் ஆண்டு இறுதி.* கிருஷ்ண பாவினி தேவி அம்மாவையும், அவளது பெரிய கோஷ்டியையும் ஒரிஸ்ஸாவில் கோதார் என்ற ஊரில் இருந்த தனது எஸ்டேட்டுக்கு அழைத்துச் சென்று உபசரணை செய்தாள்.

கோதார் வாசத்தின்போது ஓர் அற்புத சம்பவம் நிகழ்ந்தது. அம்மாவுக்கு வந்திருந்த கடிதங்களைப் படித்துச் சொல்வதற்காகப் பாரிஷதர் ஒருவர், பகலில் அவள் போஜனம் செய்துவிட்டுச் சிரம பரிகாரம் செய்து கொள்கையில் அவளிடம் சென்றார். அம்மா காலை நீட்டிக்கொண்டு ஆகாயத்தைப் பார்த்தபடி அமர்ந்திருந்தாள். அவளது பார்வைக்குள்ளும் ஓர் ஆகாயம் இருந்தது. கால்மணி நேரத்துக்கு மேலாகியும் ஆடாமல் அசையாமல் அப்படியே இருந்தாள்.

பாரிஷதர் கனைத்துக் கொண்டார். அம்மா மோனம் கலைந்து அவரைத் திரும்பிப் பார்த்தாள். அவள் நினைவு எங்கோ உயரே ஓடிற்று. பூமிக்கு அடியே ஓடுகிற நீர்ச் சுனையின் நாதம் மேல் நிலத்தில் காதை வைத்துக் கொண்டவருக்குக் குமுகுமுப்பது போல் அம்மாவிடமிருந்து வார்த்தைகள் வெளிப்பட்டன. ''மறுபடி மறுபடி பூமிக்கு வந்துண்டே இருக்க வேண்டியிருக்கு. சிவனும் சக்தியும் சேர்ந்து சேர்ந்து வரா. இதிலேயிருந்து தப்பவே முடியாது. ஆமாம். ஆனா ஜனங்களுக்கு எங்கே புரியறது? புரிஞ்சாலும் புரியாட்டாலும் ஜனங்களெல்லாம் டாகூரோட சொந்தச் சொத்து. அதுக்காகத்தான் மறுபடி மறுபடி வரவேண்டியிருக்கு. சொத்து மட்டும்தானா? அவரே தானே எல்லாமும்? குருடன், நொண்டி எல்லாரும் கூட அவர்தான். யார் படுகிற கஷ்டத்தைப் பார்த்தாலும் அவர் கஷ்டப்படறார்னுதான் தோணறது. அதைப் பார்க்கறச்சேதான், அவர் கஷ்டத்தைப் பங்கு போட்டுக்கணும்னு துடிச்சுண்டு நானும் கூட வரேன். எல்லையில்லாத அன்பிலே இருதயத்தை முழுக்கிண்டு கஷ்டத்தை வாங்கிக்கறேன். தூக்கம், சாப்பாடு, சௌகரியம் இதெல்லாம் துச்சமாப் போயிடறது. எல்லாரும் ஒய்வு எடுத்துக்கறா. எனக்கு ஒய்ச்சல் ஒழிவே கிடையாது..... அவருக்கும் தான். தினம் தினம் அதே சூரியன் வர மாதிரி, அவரேதான் அத்தனை அவதாரத்திலேயும் வந்திருக்கார். நன்னா சிக்கிண்டாச்சே, எப்படித் தப்பறது? மநுஷனைப் பார்த்துக் கவி பாடினார் :

ஜன்மம் போனால் பின்னொரு ஜன்மம்
துன்பம் கன்மம் தொடரும் வன்மம்
இன்னலை நீக்கி இன்பம் தேக்கிட
இன்னமும் வழிநீ கண்டிலை அந்தோ!



''மநுஷா மட்டும்தானு? டாகூருக்கும் இதே அவஸ்தைதான். அவர் படற அவதி யாருக்குத் தெரியும்?''

அம்மாவின் பனித்த நயனங்களிலிருந்து முத்து முத்தாக நீர் உருண்டது.

'சிவனும் சக்தியும் சேர்ந்து வருவதாக அம்மா சொன்னுள். சிவன் போன பின்பும் இந்தச் சக்தியே அல்லவா அவதிப்படுகிருள்?' என்று எண்ணிய அந்தத் தொண்டர், ''டாகூரை மட்டும் சொல்றேளே, உங்க துயரத்தைச் சொல்லுங்கோ '' என்ருர்.

சிவன் வேறெங்கும் போகவில்லை, இந்தச் சக்தியுள்ளேயேதான் போயிருக்கிருர் என்று அந்தக் குழந்தை உணராததைக் கண்டாள் தேவி. உடனே தன் மனத்தை இந்த உலகுக்கு இறக்கிக் கொண்டு, '' அ ச டு ! அவரைச் சொல்லிட்டுப் போயும் போயும் என்னையும் அவரோடு சேர்த்துப் பேசறதாவது? நான் அவரோட சரணதாஸி, அவ்வளவுதான். 'அமீ யந்த்ர, துமீ யந்த்ரீ'ன்னு (நான் வெறும் கருவி, நீயே அதை இயக்கும் சக்தி) வசனம் சொல்வாளே, நீ கேட்டதில்லே?'' என்ருள்.

இதே வசனத்தை ராமகிருஷ்ணர் காளியிடம், அதாவது சாரதையிடம் சொல்வதுண்டு. சிவனைத்தான் சக்தி இயக்கி வைக்கிறது என்பது உலகப் பிரசித்தம் !

ராதா சியாமன் ஆலயத்தில் மணி முழங்கியது. ''என்ன, சாயரட்சையா ஆயிடுத்து ! சரி, கடிதாசுகள் படி '' என்ருள் அம்மா கிங்கரரிடம்.

கிருஷ்ண பாவினிக்கு ஓர் அற்புத ஆசை எழுந்தது. அது தமிழகம் செய்த பாக்கியம்! ''அம்மா! இங்கேயிருந்தே ராமேசுவரத்துக்கு யாத்திரை போய் வரலாமே'' என்ருள்.

அதைக் கேட்டதும் அம்மா துள்ளிக் குதித்தாள். ''நிச்சயமாப் போகலாம். என் மாமனுர் ராமேசுவரம் போயிட்டு வந்தவர் தெரியுமோ ? இப்போ மாதிரி சௌகரியமா ரயில் இல்லாத காலத்திலே நடந்தே போயிட்டு வந்தார். ஒரு வருஷம் ஆச்சாம் அவர் திரும்பறத்துக்கு. சேது பந்தத்திலேயிருந்து பாணலிங்கம் கொண்டு வந்தார். இப்பவும் எங்காத்துப் பூஜையிலே இருக்கு. அவர் திரும்பி வந்தவிட்டுப் பிறந்ததாலேதான் என் மச்சினருக்கு ராமேசுவர்னு பேரு. எனக்கும் ரொம்ப சந்தோஷம் அங்கே போறதிலே'' என்று கூறினுள்.

இப்போது பெரிதாகப் பிரகடனம் செய்யப்படும் தேசிய ஒருமைப்பாட்டை அப்போது காசியும் ராமேசுவரமும் மௌனமாகச் சாதித்து வந்தன !

இரண்டாம் வகுப்பு ரயில் பெட்டியில் அமர்ந்து அம்மா காட்சிகளைப் பார்த்துக் கொண்டு வந்தாள்.

விசாகப்பட்டினத்தில் ஒரு நாள் ஓய்வு கொண்டனர். குன்றின் மீதிருந்து அந்தத் துறைமுகப்பட்டினத்தைப் பார்த்து' ''சித்திரத்தில் எழுதினுப்பலே இருக்கு'' என்று வியந்தாள் தேவி.

அடுத்த நாள் நண் பகலில் சென்னை சென்டிரல் ஸ்டேஷனுக்குள் 'அன்னையை ஏற்றி வந்திருக்கிறேன்' என்று கூவிக் கொண்டே நுழைந்தது ஹவ்ரா-மெட்ராஸ் மெயில்.

எதிரொலியாக ''மாதாஜிகி ஜேய்'' என்று வானளாவ கோஷமிட்டனர், திரண்டு வந்திருந்த சென்னைவாசிகள்.

வங்கம் தந்த விவேகாநந்தரை உலகுக்குத் தந்த பெருமை தமிழகத்துக்கே அதிகம் உண்டு. அமெரிக்கா செல்லுவதற்கு அவருக்கு ஊக்கமும் பொருளுதவியும் பெருமளவில் செய்தது தமிழகமே. சென்னையில் அம்மாவின் அன்புப் பிள்ளை 'சசி'யான ஸ்ரீமத் ராமகிருஷ்ணுநந்த



ஸ்வாமிகள் மடம் அமைத்து அற்புத சேவை செய்து கொண்டிருந்தார்.

மயிலையிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துக்கு அருகிலேயே அம்மாவுக்கென ஒரு வீடு அமர்த்தப்பட்டது. அம்மா இங்கு 1911ம் ஆண்டு பிப்ரவரியிலிருந்து சுமார் ஒரு மாத காலம் வசித்தாள். 'மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலை'யில் அவளது வாசம் மட்டிலா மகிழ்ச்சியுடன் நடைபெற்றது. அவளுக்கும் மகிழ்ச்சி. தமிழ் மக்களுக்கும் மகிழ்ச்சி. 'மலிவிழா வீதி மடவல்லார் மாமயிலை'யில் அம்மா இருந்த வீதி விழாக் கோலம் கொண்டது. ஏராளமான பக்தர்கள் வந்தனர். அவர்களில் எத்தனையோ பேருக்கு அம்மாவே மந்திரோபதேசமும் அளித்தாள். இதில் ஒரு விந்தை! அம்மாவும் தமிழ் மக்களும் உரையாடுகையில் மொழிபெயர்ப்பாளர் உடன் இருப்பார். ஆனால் அம்மா ஒருவருக்கு மந்திர தீக்ஷை அளிக்க எண்ணியவுடன், மொழிபெயர்ப்பாளரை அப்பால்போய்விடச் சொல்வாள். இதன் பின் அவள் மந்திரத்தை அளித்து, அதன் செய்முறையை வங்க மொழியிலேயே கூறினாலும்கூடக் கேட்போருக்கு அது தெற்றெனப் புரிந்துவிடும். அதே போல் அவர்கள் தமிழில் கேட்கிற சந்தேகங்களையும் அம்மா புரிந்து கொண்டு விளக்கம் தந்தாள்!

சென்னை வாசத்தில் பல கோஷ்டிகள் அம்மாவை வந்து தரிசித்த போதிலும், அவள் மிகவும் ரசித்தது, பள்ளிச் சிறுமிகள் வந்து பைந்தமிழில் பாடி, வயலின் வாசித்ததைத்தான்.

கபாலீச்சுரத்திலும், திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி ஆலயத்திலும் அம்மா வழிபாடு செலுத்தினாள்.

பிரசித்திபெற்ற மெரீனா பீச்சில் உலவினாள். அப்போது அரைகுறையாகக் கட்டப்பட்டிருந்த மீன் காட்சிச் சாலைக்கு முதன் முறையாக ரிக்ஷா ஏறிச் சென்றாள்.

அம்மா தன் மீது பாதம் பதித்து, ஒரு மாதம் வசித்த பாக்கியம் தமிழகத் தலைநகருக்கு உண்டு என்பதே நமக்குப் பெருமை ஊட்டுகிறதல்லவா?

## 39. மதுரையில் மாதா; சேதுவில் சீதா!

மகா சமுத்திரத்தில் இதோ காணப்படும் இதுவே சேதுபந்தனம் என்று கியாதி பெற்ற தீர்த்தமாகும். இது மூவுலகிலும் விசேஷமாகப் பூஜித்தற்குரியது. பரம பவித்திரமானது. மாபாதகங்களையும் போக்குவது. இங்குதான் முன்பு பிரபுவான மகாதேவன் பிரசன்னமாகி அருள்புரிந்தனன்.

-வால்மீகத்தில் ஸ்ரீராமவசனம்

**மீ**னாட்சி அருளாட்சி புரியும் மாமதுரையில் வந்திறங்கினாள் நம் மதுர மாதா.

அம்மாவுக்கும் பரிவாரத்துக்கும் நகர சபைத் தலைவர் வீட்டில் இருக்கை தயார் செய்யப்பட்டது.

பிற்பகலில் அம்மா பொற்றாமரைக் குளத்தில் விதிவத்தாக நீராடி விட்டு, ஆலவாய் அண்ணலையும் அங்கயற் கண்ணியையும் உள்ளம் குழைந்து தரிசித்தாள். 'இங்குள்ள அம்பாள் விக்கிரகம் ஜீவசக்தியுடன் திகழ்வது. காண்போர் உள்ளத்தில் புதியதோர் எழுச்சி அளிப்பது. இதற்கு நிகராக இன்னொன்றைக் காண்பது கடினமே' என்கிறார் அம்மாவின் சரிதையைக் கூறும் ஸ்வாமி கம்பீரானந்தர்.

மீண்டும் பொற்றாமரைக் குளத்துக்கு வந்தாள் அம்மா. நிறைய அகல் விளக்குகள் வாங்கி, தன்னுடன் வந்த ஒவ்வொருவர் பெயரையும் சொல்லி அவர் க்ஷேமத்தைக் கோரித் தீபமேற்றிக் கரையில் வைத்தாள். உடன் வந்தவர்களும் இவ்விதமே செய்தனர்.

உத்தர பாரதத்தில் எங்குமே கண்டிராத மாபெரும் கோபுரங்களையும் மண்டபங்களையும், சிற்பச் செல்வங்களையும் மதுராபுரியில் கண்டு வியந்தாள் அம்மா. திருமலை நாயகர் மகால், தெப்பக் குளம் இவற்றைக் கண்டு பிரமித்தாள். "ஆஹா, டாகூர்தான் என்னென்ன அற்புத லீலைகள் பண்ணியிருக்கார்!" என்றாள்.

அம்மா கோஷ்டியினர் ராமேசுவரத்தை அடைந்தபோது இரவு பதினொரு மணி. அர்த்த ஜாமமாகிக் கோயிலை மூடி இருந்தும், கோபுரத்துக்கு வெளியே நின்று வணங்கி வந்தாள் அம்மா. மறு நாள் அதிகாலையிலே சங்கற்பத்துடன் சேது ஸ்நானம் முடித்து, ராமநாதஸ்வாமியின் ஆலயத்தை அடைந்தாள். உலகப் புகழ் கொண்ட அந்த மாபெரும் பிராகாரம் உலகப் புகழ் கொண்ட அம்மா தன் மீது பிரதட்சிணம் செய்கிற பேற்றை அடைந்தது.

விவேகாநந்தரது அந்நியப் பயணத்துக்கு ஒரு முக்கிய ஊன்றுகோலாக இருந்து உதவிய ராமநாதபுரம் மன்னர், "தமது குருவுக்குக் குருவாகிய" அம்மாவுக்கு விசேஷ வரவேற்பு அளிக்க வேண்டும் என்று தேவஸ்தானத்துக்குத் தெரிவித்திருந்தார். அதன்படி ஆலய நிர்வாகிகள் அம்மாவை விசேஷமாக உபசரித்து அழைத்துச் சென்றனர். அம்மாவையும் உடன் வந்தோரையும் கர்ப்ப

கிருகத்துக்குள்ளேயே அநுமதித்தனர். அம்மாவே நேராகத் தன் திருக் கரத்தால் ஸ்ரீராமநாதலிங்கத்துக்கு கங்காபிஷேகம் செய்து, அர்ச்சனை புரியலாம் என்றும் விண்ணப்பித்துக் கொண்டனர்.

ராமலிங்கத்தின் மீது அணிவிக்கப்பட்ட பொற் கவசம் கழற்றப்பட்டது. லிங்கத்தின்மீது பார்வை பதிந்ததும் குப்பென்று அம்மாவின் சரீரம் சிலிர்த்தது. அந்தச் சிலிர்ப்பிலே பதினாயிரம் ஆண்டுகள் உதிர்ந்தோடின. ''ஆஹா! அன்னிக்கு நான் வைச்சுட்டுப் போன மாதிரியே இருக்கே!'' என்று வெகு லலிதமான குரலில் வாய்விட்டுச் சொல்லிக் கொண்டாள் அம்மா.

கங்காதரனுக்குக் கங்கை நீராட்டினாள். தயாராகக் கொண்டு வந்திருந்த நூற்றி எட்டு சுவர்ண வில்வதளங்களால் அர்ச்சனை செய்தாள்.

ராமேசுவரத்தில் தங்கியிருந்த மூன்று நாட்களும் காலை மாலை இரு வேளையும் ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டாள் அம்மா. கடைசி தினத்தன்று கோயில் அர்ச்சகர் அனைவருக்கும் போஜனம் செய்வித்தாள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் தீர்த்தபாத்திரம் தானம் செய்தாள். 'ராமேசுவர மாகாத்மியம்' படிக்கச் சொல்லி சிரவணம் செய்தாள். அதில் விதிக்கப்பட்டிருந்தபடி, புராணத்தைக் கேட்கும் நேரம் முழுதும் தன் கையில் தாம்பூலம் வைத்திருந்து பிறகு அதை விநியோகித்தாள்.

அம்மாவுக்கு ஆலயத் திருவாபரணங்களை எல்லாம் காட்ட வேண்டுமென்றும், அதோடு மட்டுமின்றி அவற்றில் அவள் எதையேனும் விரும்பினால் அதை அவளுக்குக் காணிக்கையாகச் செலுத்த வேண்டும் என்றும் ராமநாதபுரம் அரசர் உத்தரவிட்டிருந்தார். ஆபரணங்களைப் பார்த்து மகிழ்ந்தாள் அம்மா.

''அம்மா, தாங்கள் இதுகளில் எதையேனும் எடுத்துக்கலாம். ராஜாவுடைய விருப்பம்'' என்று நிர்வாகிகள் கூறினர்.

''எனக்கு ஏதுக்கப்பா, இதெல்லாம்? என் தேவை என்னவோ அதை எல்லாம் சசி (ராமகிருஷ்ணாநந்தர்) கவனிச்சுக்கறான். இந்த யாத்திரையிலே எனக்கு ஒரு குறையும் இல்லை.''

''அப்படிச் சொல்லக் கூடாது. மகாராஜா விருப்பத்துக்காகவாவது..''

அம்மா சிறிது யோசித்தாள். பிறகு ராதுவைக் காட்டி, ''இந்தக் குழந்தைக்கு ஏதாவது வேணும் என்றால் எடுத்துக்கட்டும்'' என்றாள்.

இப்படிச் சொன்னவுடனேயே அம்மாவுக்குத் 'திக்' 'திக்' என்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. 'ஐயோ, டாகூர்! யோசனையில்லாமல் என்ன

> பெண்ணாகப் பிறந்தவர்கள் எளிதில் கோபத்துக்கு இடம் தரலாகாது. அவர்கள் சகிப்புத் தன்மையை விடாமல் பயில வேண்டும். சிறு வயதில் பெற்றோரின் காப்பிலும், நடு வயதில் கணவனின் காப்பிலும் இருக்க வேண்டிய பெண்கள், எத்தனை கஷ்டம் ஏற்பட்டாலும் பொறுத்துக் கொண்டு இவர்களோடு ஒத்து வாழவேண்டும். ஆனால் பொதுவில் பெண்கள் தான் எளிதில் உணர்ச்சி வசமாகிறார்கள். ஒரு சிறு சொல்லும் அவர்களை நிலை குலைத்துவிடுகிறது. இந்தக் காலத்திலோ, சொற்களுக்கு மதிப்பே இன்றி அவை வாரி வீசப்படுகின்றன. அதெப்படியாயினும் பெண்களுக்குப் பொறுமை அத்தியாவசியம். —தூய அன்னை சாரதா தேவி

காரியம் பண்ணிட்டேன்? இந்தப் பெண் விலை உசந்ததாக எதையாவது எடுத்துண்டுதுன்னா என்ன செய்வேன்? நீங்க தான் ராதிக்குச் சபலம் ஏற்படாமல் ரட்சிக்கணும்' என்று அழமாட்டாக் குறையாக முறையிட்டாள்.

முறையீட்டை டாகூர் கேட்டுவிட்டார். பொன்னும் மணியுமாக ஜொலிக்கும் அத்தனை குவியலையும் குப்பையாக ஒதுக்கினாள் ராது. ''நேக்கு இது ஒண்ணுமே பிடிக்கலை. என் காயித பென்சில் காணாமல் போயிடுத்து. எனக்கு அது தான் வேணும்'' என்றாள்.

அம்மா நிம்மதியாக நெடுமூச்சுவிட்டாள். அரையணாவுக்கு ஒரு பென்சில் வாங்கி வரச் சொல்லி மருமாளைத் திருப்தி செய்வித்தாள்.

கோயிலைவிட்டு ஜாகைக்கு வந்தபின் பசங்கள் அனைவரும் அவளை முற்றுகையிட்டனர்: ''லிங்கத்தின் கவசத்தைக் கழட்டினதும் நீங்க சொன்னேளே, அதுக்கு என்ன அர்த்தம்?''

அம்மா அந்தக் காலப் புது மாட்டுப் பெண் போல் தலை குனிந்தாள்.

பிரம்மசாரி கிருஷ்ணலால், ''உங்களை விடமாட்டோம்.'அன்னிக்கு நான் வைச்சுட்டுப் போன மாதிரியே இருக்கே'ன்னு சொன்னேள். நாங்க நன்னாக் கேட்டுண்டோம். நீங்க மறுக்க முடியாது. அதை விளக்கினால்தான் ஆச்சு'' என்றார்.

''குழந்தைகளா, என்னை ஏன் துளைக்கறேள்? சில சமயத்திலே என் உதட்டிலே ஏதாவது உளறல் வந்துடறது. அதுக்கு அர்த்தம் கேட்டா என்ன பண்ணுவேன்?'' — அம்மா அவர்களை மேலே பேச விடவில்லை.

அவர்கள் கல்கத்தாவுக்குத் திரும்பிய பிறகு கேதார்நாத் தத்தா (பிற்காலத்தில் கேசவாநந்த ஸ்வாமிகளாகிய பக்த சிரேஷ்டர்)வுக்கு தட்சிண யாத்திரை பற்றிய விவரங்களை அம்மா உற்சாகமாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். உற்சாகத்தில் மீண்டும் அவள் உதட்டி

லிருந்து இதே 'உளறல்' உதிர்ந்துவிட்டது. ''குழந்தே! ராமேசுவரத்திலே, அடாடா, ராமநாதன்தான் எப்படியிருக்கான், தெரியுமோ? அன்னிக்கு நான் எப்படி வச்சிட்டு வந்தேனே அப்படியே இருக்கான்'' என்று கூறியவள் நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

கோலாப்-மா அம்மாவைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டாள். அம்மாவோ, ''என்ன கோலாப், ஒண்ணுமில்லாத துக்கு அமர்க்களப் படுத்தறேள்?'' என்றாள்.

''ஒண்ணுமில்லாததோ? 'ஆதியில் எப்படி வைச்சேனோ அப்படியே இருக்கான்'னு சொன்னேளாக்கும்.''

''இல்லவே இல்லே. 'ராமேசனைப் பற்றி ஆதியில் எத்தனையோ கேள்விப்பட்டிருக்கேன். எப்படிக் கேட்டிருக்கேனோ அப்படியே இருக்கான்'னு சொல்னேன்.''

''பொய், பொய். ஆனனப்பட்ட அம்மா பொய் சொல்றேளே!''

கோலாப் வெளியே போய் மற்ற சிஷ்யர்கள் எல்லோரிடமும் ஆர்த்துக் கூறினாள்: ''சேதுவிலே ராம்ஜியோடு கூட சீதா மாதாவும் சேர்ந்து லிங்கம் பிடிச்சு, அர்ச்சனை பண்ணி, பிரதிஷ்டை பண்ணிட்டு வந்தா தெரியுமோ? அதைத்தான் அம்மா ஒரு தடவைக்கு இரண்டு தடவையாகச் சொல்லிட்டா. மாடியில் இருக்கிற நம்ப மாதா யார் தெரியுமா, சீதாவாக்கும்.''

தநுஷ்கோடிக்குப் போக அம்மாவுக்குச் சௌகரியப்படவில்லை. ஆயினும், இரண்டு சிஷ்யர்களை அனுப்பி வைத்து, தன் பெயரில் வழிபட்டு வரச் சொன்னாள். அவர்களிடம் வெள்ளியிலான சிறிய வில்லும், அம்பும் கொடுத்து, ''தநுஷ்கோடியிலே சமுத்திர ராஜனுக்கு தநுசும் பாணமும் அர்ப்பணம் பண்ணணும்'' என்றாள்.

க்ஷேத்திரங்களைக் குறித்த சாத்திரங்களில் அம்மாவுக்கு அவ்வளவு சிரத்தை.

மதுரை வழியாக மதராசுக்கு மீண்டும் வந்தாள் அம்மா. அவளது முன்னிலையில் அவ்வாண்டு ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அன்று இந்தச் சென்னைக்கு டாகூரும் ஸூக்ஷ்ம ரூபத்தில் வந்திருக்கத்தான் வேண்டும்! அந்தப் புண்ணிய தினத்தில் அம்மாவிடம் மந்திரம் பெற்றனர் சில அதிருஷ்டசாலிகள்.

1911ம் ஆண்டு மார்ச் கடைசியில் அம்மா பெங்களூர் சென்றாள். விஸ்தாரமான பழமரத் தோட்டத்தோடுகூடிய பெங்களூர் ராமகிருஷ்ண மடத்தில் ஒரு வாரம் தங்கியிருந்தாள். அங்கு பக்தர் கூட்டம் அர்ப்பணிக்கும் மலர்கள் மலையாகக் குவியுமாம்.

ஆசிரமத்துக்குப் பின்புறத்திலே ஒரு குன்று உண்டு. ஒரு நாள் அஸ்தமன சமயத்தில் அம்மா அதன் உச்சிக்குப் போனாள். மலை வாயில் விழுகிற செக்கர் கோளத்தைக் கண்டு சொக்கிப் போனாள். தன்மயமாக, சின்மயமாக, குன்றுச்சியில் அமர்ந்தாள்.

இச்செய்தி அறிந்ததும் ராமகிருஷ்ணாநந்தர் பரவசமுற்றார். 'ராமேசுவரத்தில் பர்வதவர்த்தினியைப் பார்த்து வந்த அம்மா பர்வதவாசினியாகவேஆனாளா?' என்று பூரித்தார். தமது பெரிய தேகத்தைத் தூக்கவொண்ணமல் தூக்கிக் கொண்டு வேகமாகக் குன்றேறினார்.

அம்மாவின் அடியில் தம் முடிபட, உடல் முழுவதும் அவள் நடந்த பொடிபட விழுந்தார்.

**ஸர்வ மங்கல மாங்கல்யே சிவே**
**ஸர்வார்த்தஸாதிகே**
**சரண்யே த்ரியம்பகே கௌரி**
**நாராயணி நமோஸ்துதே**
**ஸ்ருஷ்டி ஸ்திதி விநாசானும் சக்திபூதே**
**ஸநாதனி**
**குணாச்ரயே குணமயே நாராயணி**
**நமோஸ்துதே**
**சரணாகத தீனார்த்த பரித்ராண**
**பராயணே**
**ஸர்வஸ்யார்த்திஹரே தேவி நாராயணி**
**நமோஸ்துதே**

சகல பிரபஞ்சங்களையும் இயக்கும் மகாசக்தியே சாக்ஷாத்தாக எதிரே அமர்ந்திருக்கிறது என்ற விழுமிய உணர்வுடன் சுலோகங்களை மொழிந்து வணங்கினார் ராமகிருஷ்ணாநந்தர்.

அம்மா அவர் சிரஸை அழுந்தத் தொட்டு ஆசி கூறினாள்.

பெங்களூரில் நடந்த வேடிக்கை நிகழ்ச்சி ஒன்றினைப் பாருங்கள்:

அம்மா சாமானியப் புடவை அணிந்து சாதாரண ஸ்திரீ போல் அறையோரத்தே அமர்ந்திருக்க அவளைத் தரிசிக்க வந்த பணக்கார பக்தை ஒருத்தி பட்டும் பூஷணமுமாக மையத்தில் உட்கார்ந்திருந்தாள். பெண்கள் கோஷ்டியொன்று 'நடுநாயகி'யை சாரதா தேவி என்றெண்ணி அவள் எதிரே காணிக்கைகளை வைத்து நமஸ்கரித்தனர். அந்த அம்மை விலவிலத்துப் போனாள். ''என்னை நமஸ்கரிக்காதீர்கள்'' என்று உடலை நெளித்தாள். அம்மா மிகவும் அடக்கமானவள் என்று கேள்விப் பட்டிருந்த அப்பெண்கள், அடக்கம் காரணமாகவே தன்னை வணங்கவும் கூடாது என்று சொல்கிறாள் என்றெண்ணிப் பிடிவாதமாக நடுநாயகிக்கு வணக்கம் செலுத்தினர். அதோடு நில்லாமல், ''பாத ஸ்பரிசம் தரணும்'' என்று வேறு கைநீட்ட ஆரம்பித்து விட்டனர்.

அடுத்த இதழ்

# சிறுகதைச் சிறப்பு மலர்

- ஆர்வி
- குயிலி
- சுஜாதா

ஆகியோரின் சிறப்புச் சிறுகதைகள்

(அதிக பக்கங்கள்)

குறுநாவல்:

ர.சு.நல்லபெருமாள் எழுதிய

## திருமணம் ஓர் ஒப்பந்தம்

அந்த அம்மாள் துள்ளி எழுந்து, படாத பாடு பட்டுக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு வெளியேறினள். இத்தனை யையும் பார்த்துக் கொண்டு அம்மா மாருத முறுவலுடன் ஓரத்தே அமர்ந் திருந்தாள்.

பெங்களூரிலிருந்து சென்னை மார்க்க மாக ராஜமகேந்திரபுரம் சென்று கோதாவரியில் நீராடினுள் அம்மா. அங்கு ஸ்ரீமான் எம். ஏ. பார்த்தசாரதி அய்யங்கார் என்ற ஜில்லா நீதிபதியின் வீட்டில் தங்கினுள். ஜகந்நாதபுரியைத் தரிசித்துக் கொண்டு 1911 ஏப்ரல் மத் தியில் கல்கத்தாவுக்குத் திரும்பினுள்.

ஒரு நாள் சாதுக்கள் சமூகப் பணி செய்வது பற்றிப் பேச்சு வந்தது. ராம கிருஷ்ண மடத்தில் சமயப் பணியோடு சமூகப் பணியை விவேகாநந்தர் பிணைத் ததிலிருந்து வாக்குவாதங்கள் நடந்த துண்டு. சாதுக்கள் முற்றிலும் பாரமார்த் திகத்திலேயே ஈடுபட்டிருக்க வேண்டும் என்றும், விவேகாநந்தர் வகுத்துள்ள சமூக சேவைத் திட்டம் டாகூரின் ஒப்பு தலைப் பெற்றிருக்குமா என்பதும்கூட சந்தேகத்துக்கு இடமானதே என்றும் குருபாயிக்கள் உள்படப் பலர் கருத்துத் தெரிவித்திருக்கிறுர்கள். எனவே, இவ் விஷயத்தில் அம்மாவின் அபிப்பிராயத் துக்கு மிகுந்த முக்கியத்துவம் உண்டு. தனக்கே உரிய தெளிவுடன், பிரத்தி யட்ச கண்ணேட்டத்துடன் பட்டுக் கத்திரித்தாற்போல் அம்மா பேசினுள்: '' ஒருவர் இருபத்து நாலு மணியும் ஜபம், தியானம் இதுகளையே செய்வது நடக்கிற காரியமா? அவையில்லாத போது புத்தியை வெறுமனேவிட்டால் அது கண்டபடி சஞ்சரிக்கும். அதனுல் ஆத்ம ஆரோக்கியத்துக்கே ஹானி வரும். ஆகையால் சாதுக்களும்கூட வேறே உபயோகமான காரியங்களில் மனசைச் செலுத்தத்தான் வேணும். அதுதான் மனசு சுத்தமாயிருக்க வழி. டாகூர் இப்படியெல்லாம் ஊழியம் பண்ணினுரான்னு கேட்கிறு. அவர் ஒரு விதிவிலக்கு. அது சரி, அவருக்கு மதுர்பாபு இருந்தார், வேளா வேளைக்கு சுசி ருசியா ஆகாரம் அனுப்பறதுக்கு. இந்தக் காலத்திலே எல்லா சாதுக்களும் வீடு வீடா பிட்சை கேட்டுண்டு போறது நடக்கிற காரியமா? தங்கள் வயிற்றுக்காக ஏதோ ஒரு தினுசில் உழைக்கத்தான் வேணும். அபூர்வமா சில பேர்தான் எப்பவும் தியானத்திலே முழுகியிருக்க முடியும். மற்றவா அது போக மற்ற வேளையிலே ஏதோ ஒரு வேலையிலே மனசைச் செலுத்தத்தான் வேணும். இதையெல்லாம் நன்னுப் புரிஞ்சுண்டுதான் நரேன் சுயநலமில் லாத தொண்டு பண்ணணும்னு ஆரம் பிச்சான்.''

அம்மா இப்படிச் சொன்னது ராம கிருஷ்ண சங்கத்தினருக்கே ஒரு புதிய தெளிவையும், ஆர்வத்தையும் அளித் தது. இதுபோல் பல இனங்களில் அம்மா கண்ணுக்கு இடருமலே வெகு பக்குவமாக சங்கத்தைப் பேணினுள்.

**ரா**மேசுவரத்தில் ராது 'காயித பென்சில்' கேட்டுக் கொண்டிருந்த போதே, இங்கே ஜயராம்பாடியில் அவ ளுக்குக் கல்யாண ஏற்பாடு நடந்து வந்தது.

தாஜ்பூரில் செல்வச் செழிப்புள்ள சட்டர்ஜி குடும்பத்தைச் சேர்ந்த மன்மதநாத்தை வரனுகத் தேர்வு செய் தார்கள். '' அவா ரொம்பப் பணக் காரா. நிறைய எதிர்பார்ப்பா. நமக்குச் சரிப்படுமா?'' என்றுள் அம்மா. உடனே சாரதாநந்தர், ''பண விஷயத்தைப் பற்றி நீங்க ஏனம்மா அலட்டிக்கணும் ? எங்கிட்டே விடுங்கோ'' என்றுர். அம்மாவுக்கு வீடு எழுப்பிய அந்த அரு மைப் புத்திரர் ராதியின் திருமணத் துக்கு வேண்டிய நிதியத்தையும் சேர்த்து வைத்திருந்தார். மன்மத நாத்துக்கே நிச்சயம் செய்தார்கள்.

1911ம் வருஷம் ஜ்யேஷ்ட மாதம் 27ந் தேதி சுப முகூர்த்தத்தில் பதி னேரு வயதான ஸௌபாக்கியவதி ராதாராணியைப் பதினைந்து வயதான சிரஞ்சீவி மன்மதநாத் பட்டாசாரியருக் குக் கன்யாதானம் செய்தனர். 'கன்யாம் கனகஸம்பந்நாம்' என்று சாஸ்திரம் விதிக்கிறபடியும், பிள்ளைவீட் டாருக்குத் திருப்தி தருகிற விதத்தி லும், ராதுவைத் தலையிலிருந்து கால் வரையில் கிண்டு கிண்டான தங்க, வெள்ளி நகைகளால் இழைத்திருந்தார் அம்மாவின் பிரிய 'ஷரத்'.

திருமண விருந்தின்போது, அம்மா இந்தப் பாரத தேச உபசரிப்புப் பண்பே உருவெடுத்து வந்ததுபோல் பந்தியில் இருப்போரிடம், '' சமையல் எல்லாம் சரியாயிருக்கா ? பார்த்துப் பரிமாறு கிறுளா ? சங்கோசம் இல்லாம நன்னு சாப்பிடுங்கோ '' என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

மாப்பிள்ளை மன்மதநாத் அம்மா விடம் மந்திரோபதேசம் கோரினுர். முதலில், '' நான் உறவுக்காராளுக்கு உபதேசம் தருகிறதில்லையே !'' என்று கூறிய அம்மா மனத்தை மாற்றிக் கொண்டு அவருக்குத் தீக்ஷை தந்தாள். அதற்குக் காரணத்தை அத்தியந்த சீட ரிடம் சொன்னுள்: ''பகவத் சங்கற்பத் தில் யாரும் குறுக்கிடக் கூடாதுதான்.

இருந்தாலும் இந்த ராதி மந்திரோபதேசத்தின் சக்தியினுலே பாலிய விதவையாகிறதிலிருந்து தப்பினுலும் தப்பலாம்'' என்ருள்.

(ராது பாலிய விதவையாகவில்லை தான். ஆனுலும் பிற்காலத்தில் அவள் கணவனுல் தள்ளி வைக்கப்பட்டே காலம் கழித்தாள்.)

> எவ்வித சொந்த அநுபவமும் இன்றிச் சமயப் புத்தகங்களை மட்டும் படித்து விட்டுச் சிலர் ஈசுவரனை விவரிக்க முயல்கிருர்களே, இது எத்துணை விசித்திரம்! இது தேசப்படத்தில் மட்டும் காசியைப் பார்த்துவிட்டு அந்த ஸ்தலத்தைப் பற்றி விவரிப்பது போன்றதே!
>
> - பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

**ரா**மகிருஷ்ணுநந்தர் கல்கத்தா உத்போதனுக்கு வந்து மரணப் படுக்கையில் விழுந்தார். அம்மாவை அழைத்து வர ஜயராம்பாடிக்கு ஆள் பறந்தது. தட்சிண தேச விஜயத்தின் போது அம்மாவின் ஆதிசேஷனுகவும் அனந்தாழ்வானுமாக இருந்த ஸ்வாமிஜியின் நிலை கேட்டு அவள் பதறி ஓடி வருவாள் என்றே எதிர்பார்த்தனர். ஆனுல் அவளோ, ''நான் வரல்லை. நான் அங்கே வந்தால் எனக்காகக் கூட்டம் கூடறதும், என்னைச் சவரணை செய்யறதும் தான்பெரிசா இருக்கும். குழந்தை சசிக்குக் கவனிப்புக் குறைஞ்சுடும்'' என்ருள்.

குழந்தை சசி அம்மாவை வெகு ஆவலாக எதிர்பார்த்தார். அம்மா இப்படிச் சொல்லி விட்டாளே என்று ஏமாற்றத்துடன் தூதர் திரும்பினுர்.

அடி அடியாக அந்திமத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்த ராமகிருஷ்ணுநந்தர், குழந்தை சசியாகவே ஆனுர். குழந்தையின் ஆனந்த நகை முகத்தில் பரவ, ''இதோ அம்மா வந்துட்டாளே! எங்கிட்ட உட்கார்ந்திருக்காளே!'' என்ருர்.

பக்கத்திலிருந்த கிரீஷ் பரவசமானுர். அம்மா தந்த அந்த 'ரகசிய தரிசன'த்தைக் கவிதையாக்கிப் பாடினுர். அந்தப் பாட்டைக் கேட்டுப் புளகித்தார் ராமகிருஷ்ணுநந்தர். ராமகிருஷ்ணரில் நிரந்தரமாகக் கரைந்தார்.

அம்மாவுக்குச் சோகச் செய்தி தெரிவிக்கப்பட்டபோது, ''என் சசி போய் விட்டானு? என் முதுகெலும்பு முறிஞ்சு போச்சு'' என்று தேம்பி அழுதாள்.

**ரா**தியின் திருமணம் நடந்து ஐந்து மாதங்களுக்குப் பிறகு அம்மா மீண்டும் கல்கத்தா செல்வதாக முடிவாயிற்று. வழியிலே கொயால்பரா ஆசிரமத்துக்கு அவளை அழைப்பதற்காக கேதார் பாபு வந்தார்.

அம்மா வெற்றிலைச் சுருள் தயாரித்துக் கொண்டே பேசினுள்: ''குழந்தே! உன் ஊரிலே டாகூருக்காக ஜாகை வைச்சுட்டே! எனக்கும் அதைச் சிரம பரிகாரத்துக்கு ஆசிரமமாக்கிட்டே! அதனுலே இப்போ அங்கே வரச்சே என் கையாலே டாகூரைப் பிரதிஷ்டை பண்ணப்போறேன். அதுக்கு எல்லாம் தயார் பண்ணு. நீயும் மற்றவாளும் பிரதி தினமும் ஒழுங்கு தப்பாமல் பூஜை நடத்திண்டு வரணும். ஹவிஸ் வைச்சு நிவேதனம் பண்ணணும். சாயரட்சையும் தூப தீபம் காட்டி ஆராத்ரிகம் பண்ணணும்.'' குரலில் திடுமென உறுதி தொனிக்கத் தொடர்ந்தாள்: ''மகனே! 'சுதேசி சுதேசி'ன்னு இருக்கிறதாலே மட்டும் நீ என்ன அடைஞ்சுட முடியும்? நமக்கு டாகூர்தான் கதி. நம்மோட சகல காரியத்துக்கும் அவர்தான் மூலாதாரம்'' என்ருள்.

கேதார் பாபுவுக்கு நெஞ்சம் குறுகுறுத்தது. அம்மாவுக்கு எல்லாம் தெரிந்திருக்கிறதே என்று ஆச்சரியப்பட்டார். வைஸராய் கர்ஸனின் யதேச்சாதிகாரப் போக்குகளை — குறிப்பாக வங்காளத்தைப் பிளக்கும் உத்தேசத்தை—எதிர்த்து அப்போது அரசியல் இயக்கம் வலுப்பெற்றிருந்தது. அந்நிய வஸ்துக்களைப் பகிஷ்கரிக்கும் சுதேசி இயக்கமும் தொடங்கி விட்டது. கொயல்பாரா ஆசிரமவாசிகளுக்கு அதில் ஈடுபாடு அதிகம். எனவே அங்கு ஓரளவு போலீஸின் கண்காணிப்புக்கூட இருந்தது.

அம்மா சொன்னதைக் கேட்டுக் கேதார் வாயடைத்துப் போனுர். ராமகிருஷ்ணதாசர்கள் சமயத்தை விட்டு அரசியலில் சேருவதற்கில்லை என்கிருள். அரசியல் அலையில் அடித்துச் செல்லப்படவிருக்கும் ஆசிரமத்துக்கு நங்கூரம் பூட்டவே டாகூர் படத்தைப் பிரதிஷ்டித்து, அன்ருட வழிபாட்டை விதிக்க உள்ளம் கொண்டிருக்கிருள்.

அம்மா சொல்லுக்குத் தலைவணங்கினுர் கேதார்.

கடுங் குளிரையும் பொருட்படுத்தாமல் பிராம்ம முகூர்த்தத்திலேயே சிவிகை ஏறிக் கொயால்பாராவுக்குச் சென்ருள் அம்மா. நீராடிவிட்டு ஆசிரம மண்டபத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் திருவுருவப் படத்தைத் தனது பொற்கரங்களால் பிரதிஷ்டை செய்தாள். அதன் பக்கத்தில் தனது சித்திரத்தையும் தானே பிரதிஷ்டை

செய்தாள்-ஸ்ரீராமாநுஜர் தாமே உகந்த திருமேனியாக ஸ்ரீபெரும்பூதூருக்குத் தமது விக்கிரகத்தை அனுப்பினுர் என் பார்களே அதுபோல்! பிரதிஷ்டை செய்தது மட்டுமல்ல. ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர், ஸ்ரீ சாரதாமணி தேவி இரு வருக்கும் சாரதையே விதிப்படி கந்த, புஷ்ப, தூப, தீப, நிவேதனங்களும் செய் தாள். இதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது? அவள் வேறு ஒரு தெய்வ உருவை வைத்துப் பூஜை செய்தபோதும் கூட, அது வேறு தான் வேறு என்று நினைத்தா செய்தாள்?

துரதிருஷ்டவசமாக நம் அம்மா பன்முறை புத்திர சோகத்துக்கு ஆளாக நேரிட்டது. அவளைப் பராசக்தி யாக அன்றி வேறெவ்விதத்திலும் கருத அறியாத கிரீஷ் சந்திர கோஷ் காலகதி அடைந்து விட்டார். அம்மா தனக்குள் அமுங்கிப் போனுள். அபர காரியங் களுக்கு அம்மாவை அழைத்தனர். ''என் கிரீஷ் இல்லாத அந்த வீட்டிலே என்னுல் கால் எடுத்து வைக்க முடியுமா? அது சாத்தியமா?'' என்று விம்மினுள் அம்மா.

பேலூர் மடத்தில் நவராத்திரி கடைசி மூன்று தினங்களில் நிகழும் துர்கா பூஜைக்கு முன்பு அம்பாளுக்குத் திருப் பள்ளி எழுச்சி செய்தார்கள். 'போதன்' என்று இந்த விழாவுக்குப் பெயர். நீண்ட நேரம் அம்மாவுக்காகக் காத் திருந்தும் அவள் வராததால் மிகுந்த வருத்தத்துடன் போதன் செய்தனர். அம்பாள் விழிப்புறுகிற அதே விநாடி யில் அம்மா உள்ளே பிரவேசித்தாள். அனைவருக்கும் ரோமாஞ்சனம் உண் டாயிற்று. பிரேமாநந்தர் (பாபுராம்) கீழேயே விழுந்து விடுவார் போலிருந் தது. அம்மா அநாயாச கம்பீரத்துடன் ''ஏற்பாடு எல்லாம் கனஜோரா யிருக்கு. நானும் துர்காதேவி மாதிரியே ஜம்முனு வந்து சேர்ந்திருக்கேன்'' என்றுள்.

இரண்டாம் நாள் பூஜையின்போது மகான் பிரம்மாநந்தர் நூற்றியெட்டு மலர்ந்த கமலங்களால் அம்மாவை அர்ச் சித்தது கண்கொள்ளாக் காட்சி!

துர்கா பூஜை நடந்தபோது மூன்று தினங்களும் உணவு வேளையில் மழைச் சூல் கொண்ட கார்முகில்கள் மந்தை மந்தையாகத் திரண்டு வந்தன. மூன்று தினங்களும் அம்மா, ''வெட்ட வெளி யில் என் குழந்தைகள் எப்படி மழை யிலே சாப்பிடுவா?'' என்று கேட்டுக் கொண்டு பத்மாசனத்திலமர்ந்து துர்கா மந்திரத்தை ஜபித்தாள். அவர்கள் உண்டு முடியும்வரை, மூன்று நாட் களும் ஒரு தூறல் கீழே விழவில்லை.

மூன்றும் முறையாகக் காசியம்பதிக் குச் சென்றுள் அம்மா, தன் கோஷ்டி யுடன். இம்முறை அங்கு சுமார் மூன்று மாதங்கள் வாசம் செய்தாள்.

விசுவேசுவரன், விசாலாக்ஷி, அன்ன பூர்ணியைக் கண் குளிரத் தரிசித்துத் திரும்புகையில் அம்மா, ''எப்பேர்ப் பட்ட க்ஷேத்திரம்! இங்கே மரிச்சாலே ஈ, எறும்பு உள்பட எல்லா ஜீவராசிக் கும் முக்தியாச்சே!'' என்று வியந்தாள்.

உடன் வந்த பிச்சி மாமி ஸுரபாலா, ''ஏ சாரதாக்கா! அப்போ நீ இங்கேயே செத்துப் போ. முக்தியடையலாம்'' என்றுள்.

அம்மா பரிதாபமாகச் சிரித்தாள்.

''சாரதாக்கா, என்ன கேடு உனக்கு? சிரிக்கவா சிரிக்கறே? என்னையும் என் பெண்ணையும் நடுத் தெருவிலே நிறுத் திட்டு, ஊரிலே இருக்கிறவாளுக்கெல் லாம் வாரி விடறயே ராட்சஸி! இப்பவே செத்துத் தொலை'' என்று ஏகக் கூச்சலிட்டாள் பிச்சி மாமி.

அம்மா சிரித்துக் கொண்டே இருந் தாள். தம்பி மனைவிக்குப் பைத்தியமா, நாத்திக்குத்தான் பைத்தியமா என்று அடியார் சந்தேகிக்குமளவுக்கு அம்மா சிரித்தாள். உடனிருந்தவர்களுக்குக் கிலி எடுத்துவிட்டது. ''ஏம்மா இப்படிச் சிரிக்கிறேள்?'' என்றுள்.

''சிரிக்காமல் என்ன பண்ணுவது? இந்தச் சாரதா சாகிறதாவது? சாகவே முடியாத ஒரே ஒருத்தி நான்னு என் தம்பி பெண்டாட்டிக்குத் தெரியலையே! அவ ஆசையை நான் எப்படிப் பூர்த்தி பண்ணறது?'' என்றுள்.

அனைவருக்கும் ஆகாயத்தில் பறக் கும் உணர்ச்சி உண்டாயிற்று. சட் டென்று அம்மா அதல பாதாளத் துக்கு வந்தாள். ''என்னைப் போல் துர்ப்பாக்கியசாலி பதினுலு லோகத் திலேயும் இருக்க முடியாது. டாகூர் ஒருமுறை ஸ்பரிசித்த மாத்திரத்திலேயே எத்தனையோ மகா பாவிகளுடைய கர் மாவெல்லாம் தொலைஞ்சே போய், அவா வாழ்க்கை ஆனந்த மயமாச்சு. நான் பிறந்த நாளாக ஒரு பாவம் பண்ணினதாக எனக்கு நினைவில்லை. என் அஞ்சாம் வயசிலே அந்த மகாப் பிரபு இதோ இந்தக் கையைப் பிடிச்சுப் பாணிக் கிரஹணம் பண்ணினுர். அப் படியிருந்தும் என் கஷ்டம் ஏன் இன்ன மும் தீரவில்லை?'' என்றுள் தீனமாக.

பொங்கி எழுந்த உள்ளங்கள் அனைத் தும் சாம்பி விழுந்தன. **(தொடரும்)**

கிளம்பி டவுனுக்குப் போயிடலாம். எங் கிட்டே நாலு ரூபாய் இருக்கு. செலவுக்குப் பணம் வச்சுக்க. சோமு இருக்கானே, அவன் உனக்குக் கொஞ்சம் இடம் தரமாட்டானா? நாளை ஒரு நாளைத் தள்ளு பார்க்கலாம்.''

''சரி, அப்படியே செய்யறேன்.''

அன்று இரவு அந்த ஊரை விட்டுக் கிளம் பியவன்தான். சோமு வீட்டில் மறுநாள்கூட இருக்க முடியாமல், கையில் மூன்றே ரூபாய் மிச்சத்தோடு, ரயில் டிக்கெட்கூட எடுக்கா மல் மெயிலில் ஏறிவிடுகிறேன். சென்னைக்குப் போனதும் டில்லிக்குப் போகிற மிலிடெரிக் காரர்கள் சிலபேரைப் பார்க்கிறேன்.. கோவிந்தராஜா கோவிலுக்கு மண்டகப்படி செய்கிற ஒருவருடைய நினைப்பு வரவே அவர் களோடு சேர்ந்து புறப்பட்டு விடுகிறேன். நான் போய் இறங்கிய வேளை, எனக்குக் கண் கண்ட தெய்வமாக வந்து வாய்க்கிறான் சுகு மாரன் நாயர்.

கண் முன் ஓடிய காட்சி அத்துடன் முடி கிறது.

''கரோல்பாக்கிலே நய்வாலாகல்லி எங்கே இருக்கு?'' என்று ஒரு குரல் யாரையோ விசாரிப்பது காதில் விழுந்ததும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

காரணம், அது நம்பிராஜன் குரல்தான்!

திரும்பிப் பார்த்தவன் என்னையும் நடு ரோட்டையும் மறந்து, ''நம்பீ!'', என்று பெரிதாகக் கத்திவிட்டேன்.

அவன் தயக்கத்துடனேயே என்னை நெருங்கி வந்தான். உற்றுப் பார்த்தான். உடனே ஓங்கி என் தோளில் அறைந்தான். மறு கணம் என்மீது தாவி என்னை அப்படியே இறுகத் தழுவிக் கொண்டான்.

''ஏண்டா பழி, இங்கேயா இருக்கே?''

''ஆமாண்டா. நீ எப்ப இங்கே வந்தே?''

''மூணு மாசமாச்சு. கிருஷி பவன்லே வேலை. மோதிபாக்கிலே ஜாகை. ஒரு நண்ப னோடு தங்கியிருக்கேன். இங்கே நம்ம ஊர்க் கோவிலுக்கு மண்டகப்படி செய்கிறவர் ஒருத்தர் இருக்கார். அவரைத் தேடிண்டு வந்தேன்.''

''நான் உன்னை மத்தியானமே கான்டீன்லே பார்த்தேன். நீதானுன்னு கவனிச்சுப் பார்க்கறதுக்குள்ளே நீ யாரோடேயோ பேசிக் கிண்டே போயிட்டே. அதிலேருந்து மனசே சரியில்லே. மறுபடியும் உன்னை எப்பப் பார்க் கப் போறேனோன்னு கவலையோட வந்திண் டிருக்கேன். பாரேன், பெருமாளோட கிரு பையை, உன்னை வழியிலேயே கொண்டு வந்து நிறுத்திப்புட்டாரே! இப்ப என் மனசு எப்படி இருக்கு தெரியுமா? சந்தோஷம் தாங்காமே அப்படியே வெடிச்சுப் போயிடும் போல் இருக்கு!''

''உனக்குச் சந்தோஷத்தாலே வெடிச் சுடும் போலிருக்கு. ஆனா ஊரிலே வேதனை யாலே வெடிச்சுப் போயிண்டே இருக்காங்க ரெண்டு பேர், தெரியுமோ உனக்கு? படுபாவி, ஒரு பத்துப் பைசா கார்டுக்குக்கூடவா உனக் குப் பஞ்சமாப் போயிட்டுது?''

''என்னமோ போடலே. பணம்கூட அனுப் பணும்னுதான். என்னமோ அனுப்பலே. அது



## மாட்டின் தீவனம்!

போஸ்டர் தாளைக் கிழித்துத் தின்னும் சென்னை மாடுகள் நமக்குத் தெரியும். அமெரிக்க மாடுகளே காகிதம் தின்றால் அதிசயம்தானே!

'மிசௌரி' பல்கலைக் கழக ஆராய்ச்சி ஒன்றின்படி செய்தித் தாள் அச்சாகும் 'நியூஸ் பிரிண்ட்' காகிதம் மாடுகளுக்கு நல்ல தீவனமாம்! இந்தச் செய்தித் தாள்களைச் சாப்பிடும் மாடுகள் கூடுதலான பால் கறக்குமாம்! இதற்காக இனி வைட்டமின், இரும்புச் சத்து முதலியவை கொண்ட தாள்களைத் தயாரிக்கப் போகிறார்கள்! இனி விற்காத பத்திரிகைகளும் பழைய தினசரிகளும் மாட்டுத் தீவனமாகப் பயன்படும்.

- சம்பத்குமாரி

ஆதாரம்: 'ஹிம்மத்'

யாரு ரெண்டு பேரு? எங்கம்மா ஒண்ணு. இன்னொருத்தர் யாரு?''

''சொன்னா நீ நம்பவே மாட்டே!''

''நான் நம்பறேன், நம்பல்லே, நீ சொல் லேன்!''

''உனக்கே தெரியல்லியே?''

''ஊகும்.''

''உனக்குத் தெரியாது. சொன்னாக்கூட உனக்கு ஆச்சரியமா யிருக்கும். எனக்கே அதைக் கேட்டதும் முதல்லே அப்படித்தான் இருந்தது....''

''யாரு, கனகாவைச் சொல்றியா?''

''அடப் பாவி, உனக்கு எப்படிடா தெரிஞ் சுது? எப்படிக் கண்டுபிடிச்சே?''

''நான் கண்டுபிடிக்கிறதாவது, மண்ணாங் கட்டி! எனக்கு வந்து அவளா இருந்தாத் தேவலாமேன்னு இப்பத்தான் பட்டுது. அவ மனசை நான் பிடிவாதமா தெரிஞ்சுக்கல்லி யேன்னுதான் அவளுக்கு என்மேலே கோபம். அந்தக் கோபத்திலேதான் என்னை அப்படிக் கேவலமாப் பேசியிருக்காள். இத்தனை நாளாகி யிருக்கு, அது எனக்குப் புரியறதுக்கு. நீகூட அன்னிக்கே சொல்லல்லியா, 'அவள் ஒண் ணும் பேசக்காணும், இருக்கிறவனுகதான் ரகளை செய்யறானுக'ன்னுட்டு... எம்மேலே அவளுக்கு ஆசை-எனக்குத் தெரியும். ஆனால் அவமேலே இருக்கிற ஆசை எனக்கே இப்பத் தான் தெரிஞ்சுது.''

''அப்ப என்ன செய்யப் போறே?''

''அப்பவே சொன்னேன் நாயர், நானும் ஒரு நாள் புறப்பட்டுப் போய்த்தான் ஆக ணும்னு. அந்த நாள் இப்ப வந்திட்டுது. போக வேண்டியதுதான்!'' என்றேன் நான்.

# அம்மா

ரா. கணபதி

## 40. தீனரக்ஷகி, பதிதபாவனி!

கெட்ட பிள்ளை பிறப்பதுண்டு. ஆனால் கெட்ட அம்மா என்ற ஒருத்தி ஒருபோதும் இருந்தது கிடையாது.

— தேவீ அபராதக்ஷமாபன ஸ்தோத்திரம்

காசி யாத்திரை முடிந்து ஜயராம் பாடிக்குத் திரும்பிய அம்மாவுக்கு ரத்தக் கடுப்புக் கண்டது. அது ஒரு மாதிரியாகக் குணமாயிற்றோ இல்லையோ உடம்பெல்லாம் வேர்க்குரு போன்ற கொப்புளங்கள் தோன்றின. அவை மிகவும் எரிச்சல் தரும். மூன்று ஆண்டுகளுக்கு மேல் இவ்விதம் இம்சையுற்றாள் அம்மா. 'மாசு மறுவில்லாத சரித்திரம் பெற்ற, மாசு மறுவற்ற தேகம் கொண்ட மாதாவுக்கு ஏன் இப்படி வந்திருக்கிறது' என்று கலங்கிய ஒரு பக்தரிடம் அம்மா ''பல பேர் இங்கே வந்து தங்களோட குறைகளைத் தள்ளிவிட்டுப் போறாளோன்னோ, அந்தக் குறைகள்தான் கொப்புள ரூபம் எடுத்திருக்குகள்'' என்றாள்.

பக்தர் பலர் அம்மாவைத் தேடி ஜயராம்பாடிக்கு வந்து அவளுடன் தங்கியதால் சாரதை தன் மூத்த சகோதரர் பிரஸன்னரின் வீட்டில் இருப்பதற்குச் சௌகரியப்படவில்லை.

முன்பு தன் பங்குக்குத் தனி வீடு வேண்டாம் என்று அம்மா நிராகரித்தது நினைவிருக்கலாம். இப்போது சிஷ்ய கோடிகள் அம்மாவுக்கெனப் புண்ணிய புகுர் ஏரியின் மேற்குக் கரையில் பூமி வாங்கி வீடு கட்டத் தொடங்கினார்கள்.

புது வீடு கட்டுகையில் அம்மாவுக்கு ஒரு திருட்டு முஸ்லிம் அருமைப் பிள்ளையாக ஆனது இந்த அமர காவியத்தில் ஓர் அமிருதச் சுனையாகும்.

நீண்ட காலமாக ஜயராம்பாடியை அடுத்த சிரோமணிபூரில் முகமதியர் பலர் குடிசைத் தொழிலாகப் பட்டு உற்பத்தி செய்து வந்தனர். பட்டுப் புழுக்களின் உணவான மல்பரி அங்கு செழித்து வளரும். பட்டுப் புழுக் கூட்டை நுட்பமான இயந்திர உதவியின்றியே நூலாகப் பிரித்து நெசவு செய்வதில் இந்த முஸ்லிம்கள் கெட்டிக்காரர்கள். ஆனால் 'கும்பெனி' ஆட்சியில் இயந்திர முறையில் ஆலைகள் வைத்துப் பட்டு உற்பத்தி செய்ய ஆரம்பித்த பின் இந்தக் குடிசைத் தொழில் தலை தூக்க முடியாமல் படுத்துப் போயிற்று. இத்தொழிலில் ஈடுபட்டிருந்த குடும்பத்தினரில் பெரும்பாலோர் வேறு தொழில் கிடைக்காததால் திருடர்களாக மாறினர். மல்பரித் திருடர்கள் (துந்தே — தாகாத்) என்றே இவர்களுக்குப் பெயர் ஏற்பட்டது.

அம்மாவுக்காகப் புது வீடு எழுப்புகையில் இந்த துந்தே — தாகாத்துக்களில் சிலரையும் கொல்லத்து வேலைக்காக அமர்த்தினர், மனிதாபிமானம் மிக்க



ராமகிருஷ்ணமட சாதுக்கள். ஜயராம்பாடிவாசிகள் இதைக் குறித்து அஞ்சி ஆட்சேபம் தெரிவித்தனர்.

''நீங்க பயப்படாதேள். நான் பார்த்துக்கறேன்'' என்றாள் அம்மா.

அம்மாவிடம் மாய மந்திரம் ஒன்று இருந்தது அல்லவா? அதைப் பிர

யோகித்தாள். அன்பு என்கிற மந்திரம் தான்! கள்வரும் கனிந்தனர்! ஆதியிலேயே பகடித் தம்பதியிடம் அம்மாவு கு அநுபவம் உண்டே!

அம்மா கொல்லத்துக்காரர்களுக்குக் கூலி தவிர, அவல், பட்சணம் எல்லாம் கொடுப்பாள். சமுதாய விரோதிகளாகக் கருதப்பட்ட தங்களிடம் காட்டப்பட்ட அற்புத அநுதாபத்தைக் கண்டு மல்பரித் திருடர்கள் அம்மாவிடம் தேவதா விசுவாசம் கொண்டனர். அக்கம்பக்கத்தில் வழக்கம் போலவே திருட்டுப் புரட்டுச் செய்தாலும் ஐயராம் பாடியில் அவர்கள் கைவரிசை காட்டவே இல்லே.

ஊராருக்கு மகிழ்ச்சியாயிற்று.

ஆம்ஜத் என்பவன் பலே திருடன். ஒடிசலாக, கன்னங்கரேலென்று இருப்பான். அள்ளு கந்தலேக் கட்டியிருப்பான். ஒரு நாள் இவன் வீடு கட்டும் இடத்தில் வயிறு ஒட்ட நின்று வேலே செய்வதைக் கண்டு வீட்டுக்கு அழைத்தாள் அம்மா. வராந்தாவில் அவனே உட்கார வைத்து இலே போட்டாள். மருமாள் நளினியைக் கூப்பிட்டுப்பரிமாறச் சொன்னுள். மடிக்காரியான நளினி பத்தடி தள்ளி நின்று கொண்டே ஆம்ஜத்தின் இலேயில் உணவுவகைகளே எறிந்தாள். அம்மாவுக்குக் கோபம் வந்தது. ''அம்மாடி, இந்த மாதிரியா அன்னலக்ஷ்மியை விட்டெறியறது? சாப்பிடறவாளுக்கு எத்தனே அவமரியாதை? உன்னுலே முடியாதுன்னு வேண்டாம்; நானே பரிமாறுகிறேன்'' என்ருள்.

'மானதன்' என்பது திருமாலின் ஆயிரம் நாமங்களில் ஒன்று. பிறரது மானத்தை மதிப்பவன் இறைவன்.

தெரியாத்தனத்தால் ஆம்ஜத், தான் உண்ட இடத்தைச் சுத்தம் செய்யாமலே போய் விட்டான். அம்மாவே முகம் கோணுமல் எச்சிலிட்டாள். ''அத்தை, விஷயம் தெரிந்தால் உன்னே ஊரார் ஜாதிப் பிரஷ்டம் பண்ணிப்பிடுவா'' என்ருள் நளினி.

அம்மா நிதானமாகச் சொன்னுள்: ''என்னே விட்டா வேறே யாரு இதைச் சுத்தம் செய்ய வருவா? எனக்கு ஒண்ணும் பேதகமாகப்படலே. ஷரத் எப்படியோ, அப்படியே ஆம்ஜத்தும் என் சாட்சாத் பிள்ளே.''

அம்மாவுக்கு ஜுரம் வந்தது. வராந்தாவுக்கு அடுத்த அறையில் அம்மா கட்டிலில் படுத்திருந்தாள். வராந்தாவுக்கு மூங்கில் சிம்புகள் அடித்திருந்தது. ஒரு நாள் காலே ஆம்ஜத் ஒரு தடியை ஊன்றிக்கொண்டு துயரத்தோடு தடுமாறி வந்தான். விரல் நுனியில் நின்றுகொண்டு மூங்கில் தடுப்புக்கு மேலாக அம்மாவை எட்டிப் பார்த்தான். ஜுர வேகத்தில் தலேயைப் புரட்டிக் கொண்டிருந்த அம்மாவின் கண்களில் அவனது முகத்தின் மேல் பாதி பட்டுவிட்டது. ''குழந்தே ஆம்ஜத்! உள்ளே வாப்பா'' என்ருள்.

முகமெல்லாம் பல்லாக வராந்தாவைக் கடந்து வந்து அறைக் கதவருகே



நின்று கொண்டான் ஆம்ஜத். அம்மா விடம் வழக்கப்படி அக்கப்போர் தொடங்கி விட்டான். அவளும் காய்ச் சலைப் பொருட்படுத்தாமல் அந்த நச் சரிப்பைச் சந்தோஷமாகச் சகித்துக் கொண்டாள்.

பகலெல்லாம் ஆம்ஜத் அங்கேயே தான் இருந்தான். ''அவன் உடம்பு எப்படிக் காய்ஞ்சு கருவாடா இருக்கு! எண்ணெய் கொடுத்துத் தேய்ச்சுக்கச் சொல்'' என்று மருமாளுக்கு உத்தர விட்டாள் அம்மா. ஆம்ஜத் எத் தனையோ காலத்துக்குப் பின் தைல ஸ்நானம் செய்து திரும்பினான். அன்று சம்பிரமமாகச் சாப்பாடும் அம்மா வீட்டு வராந்தாவிலேயே நடந்தது. அவனுக்குப் பீடா கொடுக்கச் சொல்லி அம்மாவின் ஆக்ஞை பிறந்தது. மாலை வீடு திரும்புகையில் அவன் பையில் பழ வகைகளுடனும், கையில் ஏதோ ஒரு புட்டியுடனும் சென்றான். அது என்ன புட்டி என்கிற பாவனையில் பார்த்துக் கொண்டிருந்த பிரம்மசாரியிடம் அம்மா சொன்னாள்: ''இந்த அசட்டுப் பிள்ளை லாகிரி வஸ்துக்கள் நிறையச் சாப்பிட்டு இவனோட மூளையே கொதிச் சுப் போயிருக்கு. ராவெல்லாம் தூக்கம் இல்லேன்னான். எங்கிட்ட நாராயண தைலப் புட்டி ஒண்ணு இருந்தது. அது மூளைக்கு ரொம்பக் குளிர்த்தி. அதைத் தான் கொடுத்து விட்டேன்'' என்றாள்.

நாராயண தைலத்தை விடக் குளிர்ந்த அம்மாவின் இதய விசேஷத்தால் விரை விலேயே ஆம்ஜத்தின் மூளைச் சூடு நீங்கி அவன் ஆரோக்கியம் பெற்றான்.

அம்மா எள் என்னும் முன் எண்ணெ யாக நிற்பான் ஆம்ஜத். 'அம்மாவுக்கு' என்று சொல்லி விட்டால் புலிப்பாலானா லும் கொண்டு வந்து விடுவான். ஒரு முறை அம்மாவுக்குப் பசி அடியோடு மந்தித்துப் போனபோது அன்னாசிப் பழ ரசம் சாப்பிடுமாறு டாக்டர் கூறினார். அந்தக் காலத்தில் அந்தப் பகுதியில் அன்னாசி கிடைப்பது அரிதிலும் அரிது. ஆனால் என்ன மாயம் செய்தானோ அல்லது திருட்டுத்தான் செய்தானோ, ஆம்ஜத் ஒரு கூடை அன்னாசி கொண்டு வந்து விட்டான்.

அம்மா தன் இறுதிக் காய்ச்ச லின்போது ஆம்ஜத்தைப் பற்றி விசா ரித்தாள். ஏதோ ஒரு திருட்டு வழக்கில் நீண்ட காலமாக அகப்படாமல் தலை மறைவாக இருந்து விட்டுக் கடைசி யில் சிக்கிவிட்டான் என்று யாரோ தெரி வித்தார்கள். ''த்ஸொ த்ஸொ!'' என் றாள் அம்மா. ''அவன் திருட்டுலே நிபு ணன்னு எனக்குத் தெரியும்'' என்றாள். அதையும் அவளது தாயுள்ளம் ஒரு குற்ற மாக நினைத்துப் பேசவில்லை. தன் பிள்ளை பொறிஇயல் நிபுணன், மருத் துவ நிபுணன் என்று ஓர் அன்னை சொல் கிற முறையில் பேசினாள் அம்மா!

அம்மாவின் மறைவுக்குப் பிறகு ஆம்ஜத் திருட்டு நடத்தியபோது, கத் திக் குத்துப் பெற்றான். அதுவே ஆருத ரணமாகி அவனை அம்மாவிடம் அனுப்பி விட்டது!

# 41. தொல்லையும் துயரமும்

அவதார புருஷர்களுக்கும் துக்கம் வரும், கோபம் வரும். மற்ற மநுஷ்யர்களுக்கு வழி காட்டவே இவை அவர்களுக்கும் ஏற்படும். ஆனால் இந்த உணர்ச்சிகளை அவர்கள் இச்சா மாத்திரத் தில் போக்கிக்கொண்டு விடுவார்கள்.

— ஸ்ரீ காமகோடி பெரியவாள்

**1916**ம் ஆண்டு மே 15ந் தேதி யன்று அம்மா புதுமனை புகுந்தாள். சாரதா தேவியின் அருளில் செயல்கள் பல நடைபெற்ற அற்புதக் கோயில் அது!

அம்மா கிருகப் பிரவேசம் செய்த போது அவளது அருமை 'ஷரத்' பிருந் தாவனத்தில் இருந்தார். அவர் திரும்பி வந்ததும் அம்மா அந்த வீட்டின் எதிர் காலத்தைக் குறித்து ஏற்பாடு செய் தாள். சியாமசுந்தரி தொடங்கி வைத்த ஜகத்தாத்ரி பூஜை தொடர்ந்து நடை பெறவேண்டும் என்று கருதிய அம்மா அந்த வீட்டை பேலூர் மட நிர்வாகத் தின் கீழ் ஒரு டிரஸ்டாக்கி, ஜகத்தாத்ரி பூஜைக் கென்றே நிவந்தம் செய்தாள். அதோடு சிறிது நிலமும் வாங்கி ஜகத்தாத்ரி பூஜைக்கு மூலதனமாக வைத்தாள்.

**ரா**மகிருஷ்ண சங்கத்தில் அநேகர் ஏனோ தீர்க்காயுள் வரம் பெற்றிருக்க வில்லை. அம்மாவின் அருமந்த பாபுராம்-ஸ்வாமி பிரேமாநந்தர் — உலக யாத் திரையை முடித்து விட்டார். அப்போது அம்மா கல்கத்தா உத்போதனில் இருந் தாள். அவருக்கு உடல் நிலை மிக மோசமான அன்று காலையிலிருந்தே அம்மா சிவந்த கண்களுடன் துடித் துக் கொண்டிருந்தாள். பிற்பகல் அந்தக் கொடிய செய்தி வந்தது. ''பாபுராம்! உன்னை என் இருதயத்துக்கு ரொம்பப் பக்கத்திலே வெச்சிண்டிருக் கிறதாக நெனைச்சேனே! எப்படி என்னை ஏமாற்றிவிட்டு ஓடினே? பேலூர் மடம்

என்கிறதே நீதானே? உன் சக்தியும் பக்தியும் புத்தியும்தானே அந்த மடத்தை நடத்திண்டு இருந்தது? அதை விட்டுட்டு எங்கே போனே?'' என்று தேவி கதறினாள். நடு ஹாலில் இருந்த ராமகிருஷ்ணர் படத்தில் தலையை முட்டிக் கொண்டு ''டாகூர்! அவனேயும் எங்கிட்டேருந்து பறிச்சுண்டுட்டேளே!'' என்று புலம்பினாள்.

அம்மாவுக்கு உலக வாழ்க்கை அடியோடு வெறுத்துப் போக அப்போதும் விடவில்லை ராமகிருஷ்ணர். யோக மாயையை முடுக்கி விட்டார். ராதாராணிக்கு அம்மாவின் தேவை மிக அவசியமாகி விட்டது!

ஆஹா! ராது எப்படி மாறி விட்டாள்! குழந்தையா யிருந்தவள் இன்று பதினெட்டு வயது மங்கையாக மாறியது பெரிய விஷயமில்லை. அது இயற்கை எவருக்கும் நிகழ்த்தும் மாற்றம். ஆனல் அந்தக் கள்ளம் கபடமற்ற ராது, எப்போதும் சிரித்த முகத்துடன் எல்லோரிடமும் இனித்துப் பழகும் ராது—இப்போது எத்தனை அவ குணங்களுக்கு இருப்பிடமாகி விட்டாள்? எதிரிடை சக்திகள் பலவற்றின் நெரிசலில் தேன் கதலிக் கனி எட்டிக் காயாக மாறி விட்டது! முதலாவதாகக் கிராமாந்தரத்துக்கும் கல்கத்தா பட்டணத்துக்குமாக மாறி மாறி இருந்ததில் பலவிதக் கோளாறுகள் ஏற்பட்டன. கிராமத்துக் கட்டை என்று தன்னைப் பட்டண வாசிகள் எண்ணிவிடுவரோ என்ற எண்ணத்தில் தாழ்வு மனப்பான்மை கொண்டு அதன் விபரீத விளைவாக, அம்மாவைக் காண வருவோரை அவமதித்தாள். பிறக்கு முன்பே பிதாவை இழந்து, அன்னையையும் பைத்தியமாகப் படைத்திருந்த ராது அத்தையையே அம்மாவாகக் கருதியவள். அதேபோல் அடியார்களில் பலர் அவளை அம்மாவாகக் கொள்வது ராதுவுக்கு அசூயையை உண்டாக்கிற்று. அம்மாவுடைய தனிச் சலுகை அவளுக்குக் கிடைத்தாலும் அது போதவில்லை. மேலும் அதிகச் சலுகை பெறவேண்டுமென்பதால் ராது பதின்மூன்றும் வயதிலிருந்து தனக்கு ஓயாத வியாதிகளைக் கற்பித்துக் கொண்டு அம்மாவை அதன் மூலம் இழுத்து ஏகபோக்கியமாக்கிக் கொள்ளப் பார்த்தாள். எல்லோரிடமும் இன்முகமாக இருந்து துள்ளித் திரிய வேண்டிய பருவத்தில், தன்னை மூதேவியாக்கிக் கொண்ட மருமாளிடம் சாரதைக்கு விசேஷ ஈடுபாடு உண்டாகவில்லை. நேர்மாருக ஏற்கனவே இருந்த தனிப்பாசமும் குறையலாயிற்று.

> குளத்தில் மீன்கள் எவ்வளவு தூரத்திலிருந்தாலும், ஓர் இரையைப் போட்டதும், நாலா பக்கங்களிலிருந்தும் அதனிடம் ஓடி வருகின்றன. அதுபோல நம் மனத் தடாகத்தில் பக்தி சிரத்தையைப் போட்டோமானல் பகவான் அதைத் தேடி ஓடி வருகிறன்.
>
> — பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

டாகூரிடம் அவள், ''அப்பனே! இந்தப் பெண்ணைக் கவனித்துக் கொள்ள யாருமில்லை. நான் இன்னும் கொஞ்ச காலம் மயக்கம் தெளியாமல் பாச பந்தத்தில் கட்டுண்டிருக்க நீதான் கிருபை பண்ணணும்'' என்று வேண்டும்படியாயிற்று. அம்மாவின் பாசம் கொஞ்சம் குறைவதாகத் தெரிந்ததால் ராதி இப்போது கணவனிடம் உள்ளத்தை உடும்புபோல் திருப்பினாள். பதின்ரு வயதுப் பெண்ணன ராதி கணவன் வரவை எதிர்பார்த்து வாசல் கிராதியைப் பிடித்துக் கால் கடுக்க நிற்பது கண்டு நம் அம்மாவுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. ''கடைசியில் நான் வளர்த்த பெண் இப்படியா விசித்திரமாக உருவெடுக்க வேண்டும்? இப்படியும் ஒரு மோகமா?'' என்றாள், பொங்கும் இளமையிலும் தபஸ்வினியாகவே வாழ்ந்த தேவி.

ராதியின் வேட்கைத் துடிப்பும் தீவிரமும் அவளது கணவர் மன்மத நாத்துக்கே பிடிக்காமற் போயிற்று. அவர் வீடு திரும்பக் காலம் கடத்தியதால், அம்மாவிடம் ராது, ''நான் வியாதிப் பிண்டமாயிட்டேன். அவர் வேறே தகாத சகவாசம் வைச்சுண்டிருப்பார்'' என்றாள். அம்மாவின் காது கொப்புளித்தது.

மனோ வியாதியினல் உண்மையாகவே ராதுவின் உடலும் நலியலாயிற்று. தளதளப்பெல்லாம் போயிற்று. பலவீனம் காரணமாக எரிச்சலும், ஆத்திரமும், அதிகமாயின. மனோ வியாதி முற்றிற்று. தாயின் புத்திக் கோளாறு புத்திரிக்கும் வந்துவிடுமோ என்று பயப்படும்படியாயிற்று. இந்த லட்சணத்தில் அவளது உதரத்தில் ஓர் உயிர் வந்து கனத்தபோது ராதுவால் தாங்கவே முடியாமல் ஆயிற்று! 'ஏற்கனவே துர்க்குணி, அதிலும் கர்ப்பிணி' என்பார்களே, அது நூற்றுக்கு நூறு மெய்யாயிற்று. அம்மாவைப் பாடாகப் படுத்திப் பம்பரமாகச் சுழலவைத்தாள் ராதி. தன்னையன்றிப் போக்கிடமில்லாத அநாதை என்று அம்மாவும் அபரிமிதமான பொறுமை காட்டிச் சகித்துக் கொண்டாள்.

இப்போது ராதுவுக்கு எந்தச் சப்தமும் தாங்குவதில்லை. தெருவிலே வண்டி

ஓடினால் இவளது இதயம் சம்மட்டி போட்டதுபோல் அடித்துக் கொள்கிறது. இத்தனை பலவீனத்தில் பிடிவாதம் மட்டும் இரும்புத் தூண்போல் உறுதியாக இருந்தது. அவள் பேறுகாலத்தில் வைத்திய வசதி உள்ள கல்கத்தாவில் இருப்பதே நல்லதென்று அம்மா கருதினாள். ராதுவோ உத்போதன் இரைச்சல் தன்னைக் கொல்கிறது என்றாள்.

ராதுவின் விருப்பப்படி ஜயராம்பாடிக்குப் புறப்பட்டாள் அம்மா.

வழியில் விஷ்ணுபூரில் அவர்கள் தங்கியிருந்த வீட்டுக்கு உரியவர், ஒரு பிரபல சோ தி ட ரை அறிமுகப்படுத்தினார். உடனே எல்லாருக்கும் சபலம் தட்டியது. ராதுவின் ஜாதகம் அவரிடம் காட்டப்பட்டது. ''கஷ்டப் பிரசவம் தான் ஆகும்'' என்று அவர் திருவாய் மலர்ந்தார்.

ராதியின் 'போட்டி'யான மற்றொரு மருமாள் மாகு தன் ஜாதகத்தைக் காட்டினாள். அவ வாக்குச் சோதிடர் அவளிடம், ''உன் குழந்தைகளில் ஒண்ணு இன்னொண்ணைப் பார்க்காது'' என்றார்.

எல்லோருக்கும் எப்படி இருக்கும்? மாகுவின் முதற் குழந்தை நேதா அனைவருக்கும் செல்லம். இப்போது மாகுவும் (ராதியிடம் போட்டியிலோ என்னவோ) கருத்தரித்திருந்தாள். இந்தப் பிரசவத்துக்குள் நேதாவுக்கு.....?

அம்மாவே கதிகலங்கினாள். தன் குடும்ப விஷயத்தில் தீர்க்க திருஷ்டியை அவள் பிரயோகிப்பதில்லை. 'ஊருக்கெல்லாம் ஒளி தரும் சந்திரன் தன்னிடமுள்ள களங்கத்துக்கு ஒளி தந்து கொள்ளாததுபோல், மகாபுருஷர்கள் பிறருக்குச் செய்கிற அருளைத் தங்களுக்கே செய்து கொள்ள மாட்டார்கள்' என்றொரு சுபாஷிதம் உண்டு. அம்மா அப்படித்தான் இருந்தாள்.

அம்மா கோஷ்டியினர் அடுத்தபடியாகத் தங்கிய இடம் கோயால்பாரா ஆசிரமம். காட்டை அடுத்த அப்பகுதி மிகவும் அமைதியாக இருந்தது.

''அம்மா, ஜயராம்பாடிக்குப் போக வேண்டாம். எனக்கு இங்கேயே இரைச்சல் இல்லாம நிம்மதியாயிருக்கு'' என்றாள் ராது.

''அப்படியே'' என்றாள், வளைத்த படி எல்லாம் வளைந்து கொடுத்த தேவி.

நேதாவின் அம்மா மாகுவுக்கு, ராதுவைக் கவனிக்கிற அளவுக்கு அத்தை தன்னை இலட்சியம் செய்யவில்லை என்ற எண்ணம் அதிகரிக்கலாயிற்று. இந்தத் துர் எண்ணத்துக்குத் தூபம் போட்டாள் அக்காள் நளினி.

இந்தச் சிறிய பெண்களைக்கூட அம்மா மதித்து, எத்தனையோ விஷயங்களில் ஆலோசனை கேட்டிருக்கிறாள். உதாரணமாக இம்மூன்று மருமாள்களின் புக்ககங்களுக்கும் பொங்கல் முதலிய விசேஷங்களில் சீர் அனுப்புகையில் வித்தியாசம் இருக்கக் கூடாது என்பதால் அவர்களையே கலந்து கொண்டு பொருட்களை வாங்குவாள். 'ஒண்ணும் தெரியாத இந்தப் பட்டிக்காட்டுக் குட்டிகளிடம் அம்மா இப்படி யோசனை கேட்கிறாளே'. என்று எண்ணிய சிஷ்யரிடம் அம்மா அமரவாசகங்களைச் சொன்னாள்: ''சகலமான பேரையும் நன்றாகக் கவனித்து, மதிப்புத் தரணுமப்பா. எல்லார் அபிப்பிராயத்தையும் கேட்டறியணும். இதிலே மற்றவாளுக்குக்கொஞ்சம் அதிகமாகவே சுதந்திரம் தந்து நாம் பின்னாடி ஒதுங்கிண்டு பார்க்கணும். ஏதாவது எக்கச்சக்கமா தப்பு நடந்துட்டா, ஒதுங்கின இடத்திலிருந்து ஓடி வந்து சரி பண்ணணும். நம்மையே தாழ்த்திண்டுகூடப் பிறத்தியாருக்குச் சுதந்திரம் தரணும்.''

பட்சபாதம் என்பது அருகிலேயே வர முடியாத, தருமத் துலாக் கோலாகிய அம்மா ஒரு நாள் பகலுணவு கொண்டு இளைப்பாறும்போது, நளினியும் மாகுவும் அவளை மாக்கு மாக்கென்று தாக்கினார்கள்.

''இந்த ராதுவுக்கு என்ன உடம்புக்கு? சும்மா மாய்மாலம் பண்ணறா! அதை வைச்சுண்டு, நீயும் அவளையே சீராட்டிப் பாராட்டிண்டு இருக்கே, அதனாலேயே அவள் பாழாப் போயிண்டிருக்கா. உடனுடத்தவள் மாகுவும் பிள்ளைத்தாச்சிதானே? அவள் தேமேன்னு இல்லே? ராதுவுக்கு நீ கொடுக்கிற இடம் தான்! உனக்கு ஒரு கண்ணுலே வெண்ணெய்; ஒரு கண்ணுலே சுண்ணாம்பு'' என்று பொரிந்து தள்ளினாள் நளினி.

'எண்ணமில்லார் சொல்லே மிகவும் சுடும்' அன்றோ! நளினியின் அக்கிரமமான குற்றச்சாட்டில் அம்மாவின் நளின உள்ளம் வெந்துவிட்டது. வாயே திறக்காமல் சிலையாக இருந்தாள்.

அம்மா எதற்கும் வாய் திறவாததில் நளினிக்கு ரோஷம் பொத்துக் கொண்டு வந்து விட்டது. ஒரு பல்லக்கைக் கொண்டு வந்தாள்.

''ஏ மாகு, மூட்டை முடிச்செல்லாம் எடுத்து பல்லக்கிலே வை. வாஞ்சையே இல்லாத இந்த அத்தை கிட்டேயும், பித்துச் சித்தி கிட்டேயும் அவதிப்படறதை விட, அங்கே அப்பன் வீட்டிலேயே போய் இளையாள்காரிகிட்ட அவதிப்படறது சிலாக்கியம்'' என்று கத்தினாள்.

அம்மா பேசாமல் தான் இருந்த இடத்திலேயே சுருட்டிக் கொண்டாள். அம்மாவுக்கு அறுபத்திநாலு வயசாகி

விட்டது. உண்ட களைப்பும், நேற்று முளைத்த சிறுக்கிகளிடம் வார்த்தை வாங்கிக் கொண்ட வேதனையும் அவள் வாயை அடைத்து அவளைக் கீழே சாய்த்தன.

வாசலிலிருந்து நளினியின் பிளிறல் கேட்டது. ''ஏ சனியனே, மாகு! உனக்கு வெட்கமில்லே? இங்கே அலட்சியத்துக்கு ஆளாயிண்டேதான் கிடக்கப் போறியா? 'ஏன் போறேள்?'னு ஒரு வார்த்தை கேட்காதவர் வீட்டிலேயே தண்டசோறு தின்னுண்டு கிடக்கப் போறியா என்ன?''

விசுக் விசுக் என்று மாகு வாசலுக்குப் போகும் ஓசை கேட்டது. அதைவிடப் பரிதாபம், ''பாட்டி, பாட்டி'' என்று கதறும் நேதாவையும் அவள் கரகர வென்று இழுத்துப் போனுள்!

பிற்பகலில் கடிதங்களுடன் வந்த பிரம்மசாரி வரதனிடம் அம்மா, ''என் மகனே வரது! இப்போ நீங்கள்ளாம் எனக்குச் செஞ்சு தந்திருக்கிற வசதியிலே நூற்றில் ஒரு பங்கு தட்சிணேசுவரத்திலே கிடையாது. அப்போ நான் உழைச்ச உழைப்பும் சொல்லி முடியாது. ஆனுல் அந்தப் பிரபுவின் பிரேமையில், எனக்கு ஒரு குறை தெரியலேயடா, கண்ணு! இப்போ நான் படற அவஸ்தை தாளல்லேயடா! இந்த மருமாள்களுக்காக என் பொழுது, பணம், தேக சிரமம் எல்லாம் வீணுறது போருதுன்னு, என் ஜபத்தையும், தபத்தையும்கூடப் பாழாக்கிக்க வேண்டியிருக்கு. அந்தப் பெண்கள் ரொம்பப் பேசிப்பிட்டா அப்பனே! எனக்கு அதையெல்லாம் பற்றிக்கூட இல்லே. என் காலில் விழுந்து நமஸ்காரம் பண்ணுமல் குழந்தை நேதா ஓரிடத்துக்கும்போகாது. அதைக்கூடத் தடுத்து இழுத்துண்டு போனுளே மாகு! யார் தலேயிலே எப்படி எழுதியிருக்கோ, அப்படித்தானே நடக்கும்? நான் என்ன பண்ணலாம்!'' என்றெல்லாம் சொல்லி வருந்தினுள்.

அவர்கள் அந்தப் பாடுபடுத்தியும் தினம் அவர்கள் க்ஷேம லாபத்தை வரதன் மூலம் அறிந்து வந்தாள். அம்மாவை அப்படி அபசாரமாகப் பேசியபின் க்ஷேமமும் லாபமும் ஏது? நேதாவுக்கு ஜுரம் வந்தது. அம்மாவுக்கு ராதுவைவிட்டு எப்படிப் போவது என்று புரியவில்லே. இருந்தாலும் டாக்டருக்கு அவளே ஏற்பாடு செய்தாள்.

மறு தினம் எப்படியும் தானே போக வேண்டும் என்று தீர்மானித்தாள் அம்மா. அம்மாவை முந்திக் கொண்டான் காலன். அநுதாபமற்ற சுற்றத்திடை அன்பே உருவாக மூன்றுண்டுகள் அம்மாவை வளேய வந்த மோகன நேதாவை டிஃப்தீரியாக் காய்ச்சல் பறித்துக் கொண்டு போய்விட்டது. ஜோஸியர் சொன்னது பலித்துவிட்டது!

கண்களிலிருந்து கண்ணீர் வற்ருத அருவியாக வடிய அம்மா நீண்ட நேரம் அமர்ந்திருந்தாள்.

இரவு டாகூருக்கு நிவேதனம் செய்ய வேண்டுமே! அம்மாவிடம் சொல்வதா, வேண்டாமா என்று தயங்கித் தயங்கி வந்து நின்ருன் ஒரு சிடப் பிள்ளே.

''என்னப்பா?'' என்ருள் தேவி.

''டாகூருக்கு.....''

அம்மா அமைதியாக எழுந்திருந்தாள். அசாதாரணமான நிம்மதியுடன் பதிக்கு நிவேதனம் செய்தாள்.

பிறகு தன் அறையில் வந்து முடங்கிக் கொண்டாள்.

சிறிது பொழுதுக்குப் பிறகு அவளுக்கு என்ன தோன்றியதோ, அடுக்களைக்குச் சென்று எட்டிப் பார்த்தாள். அவள் நினேத்தது சரிதான்! அவள் உண்ணுததால் எவருமே உண்ணவில்லே. அங்கே நேதாவை அக்னி தேவன் உண்டு முடித்தானே இல்லேயோ, இங்கே அம்மா மற்றவர்களின் பொருட்டு மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு, ஒரு அப்பத்தை விண்டு வாயில் போட்டுக் கொண்டாள். ''இருக்கிறவா க்ஷேமமாக இருக்கட்டும்'' என்றெண்ணி ஒரு வாய் பாலேப் பருகினுள். அதன்பின் மற்றவர்கள் உணவு கொண்டனர்.

## 42. சோதனையின் சிகரம்

சினம் கொள்வார் தம்மைத் தாமே தீயார் சுட்டுச்
செத்திடுவார்; ஒப்பாவார்.....
சினம் பிறர்மேல் தாம்கொண்டு கவலேயாகச்
செய்த(து) எண்ணித் துயர்க் கடலில் வீழ்ந்து சாவார்
மகாளி பராசக்தி துணேயே வேண்டும்.

**பாரதியார் சுயசரிதை**

சினத்தின் வயப்படாமலிருப்பதற்கு மாகாளி பராசக்தியின் துணேயை வேண்டினுர் கவி. அந்த மாகாளி பராசக்தியே பொறுமையவதாரமான சாரதையாக வந்து வாழ்ந்து, ஒரே ஒரு முறை தன்வயமிழந்து சினம் கொண்டதையும், பிறகு வெந்து நொந்ததையும் என்னென்பது?

சாரதா தேவியின் பொறுமையை மிக மிகச் சோதிக்கலானுள் ராது. கருவுற்றபின் ராதுவின் முரட்டுப் பிடிவாதம் எல்லே கடந்து சென்றது.

ராதுவுக்குப் பேற்றுக் கால அறிகுறிகள் ஏற்பட்டன. அப்படியே மூர்ச்

மூங்கிலில் நெருப்பு மூட்டினுல் அது நிலைத்து ஜொலிப்பதில்லை. அது அணையாமல் நாம் தூண்டிக் கொண்டே யிருக்க வேண்டும். நம் மனம் என்கிற மூங்கிலில் தெய்வ சிந்தனை நிலைத்து ஜொலிப்பதில்லை. அது அணைந்து விடாமல் நாம் இடைவிடாத சிரத்தையின்மூலம் தூண்டிக் கொண்டே யிருக்கவேண்டும்.

—பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

சித்துப் போனுள். கல்கத்தாவிலிருந்து டாக்டர் வைகுந்தர் வந்தார். அம்மா டாகூரே கதி என்று குலை நடுங்கி உட்கார்ந்து விட்டாள். டாகூரும் அப்போதைக்குக் கைகொடுத்தார். ராதுவுக்கு சுகப்பிரசவமாயிற்று. ஆண் குழந்தை பிறந்தது. கொயால்பாரா காட்டிலே பிறந்த அந்தக் குழந்தைக்கு பன பிஹாரி (வன விஹாரி) என்று அம்மா பெயரிட்டாள். 'பனு' என்று சுருக்கி அதைக் கொஞ்சினுள்.

பிரசவமான பின் ராது சவம் போலானுள். முன்னிலும் துர்ப்பலமானுள். தன்னுல் ஆடையும் அணிய முடியவில்லை என்று சொல்லிக் கொண்டு அந்தக் குழந்தை போலவே அவளும் கிடந்தாள். அந்த அதிசயமான பெண்ணுக்கு—அனைவருக்கும் அம்மாவான சாக்ஷாத் சாரதையின் ஸ்வீகாரப் பெண்ணுக்கு—தாய்ப்பாசம் என்பதே இல்லை. ஆதியில் தம்பி அபயனை எடுத்து வளர்த்து, மத்தியில் அவன் மகள் ராதியை எடுத்து வளர்த்த அம்மா, இப்போது முடிவில் அவள் மகன் பனுவையும் வளர்த்தாள்.

ராது எத்தனையோ மரியாதைக் குறைவாகப் பேசியதை யெல்லாம் பொறுத்து வந்த அம்மா, இன்று அவள் ஒரு வார்த்தையைச் சொன்னவுடன் பொறுக்கமுடியாமல் தவித்தாள். 'அபின்' என்பது தான் அந்த வார்த்தை. ராது தனக்கு அபின் வாங்கித் தருமாறு அம்மாவைக் கேட்டாள். தூய அன்னையிடம் வளர்ந்த அந்தப் பெண்ணுக்கு எப்படியோ இந்த தீய பழக்கம் சில நாட்களாகவே இருந்திருக்கிறது. இப்போது கறி காய் நறுக்கிக் கொண்டிருந்த அம்மாவிடமே தவழ்ந்து வந்து (தனக்கு நடக்கச் சக்தி இல்லை என்று அவளுக்கு ஒரு கற்பனை!) அபின் வாங்கித் தருமாறு நச்சரித்தாள்.

'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தன்னை இகழ்வாரைப் பொறுத்து' வந்த அம்மாவுக்கு இப்போது ராது தன்னைத் தானே இழிவுபடுத்திக் கொள்வதைப் பொறுக்க முடியவில்லை. அந்த பூமி தேவியும் பொங்கிவிட்டாள். ''போறுமடியம்மா! உன்னேடு எனக்குப் போறும்! இன்னும் எத்தனை நாள் இப்படியே பண்ணிண்டிருக்கப் போறே? எழுந்திரு, சுருசுருன்னு ஓடி ஆடி வேலை பண்ணு. உனக்காக நான், என் மற்ற குழந்தைகளுக்குச் செய்ய வேண்டிய கடமையைத் தொலைச்சதும், என் பூஜை புரஸ்காராதிகளைத் தொலைச்சதும் போறும். சகல தினுசுலேயும் இனியும் பக்கிரியாக என்னுலே முடியாது'' என்று சொல்லிக் கொண்டு காய்கறி நறுக்கிக் கொண்டே இருந்தாள் அம்மா.

சேலை கட்டிக் கொள்வதற்கும் நடப்பதற்கும் கூடத் தனக்குச் சக்தி இல்லை என்று கருதிய ராது அப்போது ஒரு பெரிய பேரிக்காயை எடுத்து ராட்சஸ பலத்துடன் சுழற்றி, தேவியின் நடு முதுகில் படுமாறு ஓங்கி எறிந்தாள். அது குறி தவருமல் அம்மாவின் மீது திம்மென்று விழுந்தது.

அம்மா சுருண்டு விழுந்தாள். முதுகில் அடிபட்டு வீங்கிச் சிவந்தது. இதயத்தில் அதைவிடப் பெரிய அடி!

முதுகை அழுந்தத் தேய்த்துக் கொண்டே பூஜை அறைக்கு ஓடினுள் தேவி. ராமகிருஷ்ணரின் சித்திரத்துக்கு முன் கைகுவித்து, ''என் டாகூர், ராதி அறியாக் குழந்தை! நீங்க இதை அபசாரமா எடுத்துக்கப் படாது'' என்று கண்ணீர் வழிய மன்றுடினுள்.

தனக்குச் சிறிய தலைவலி வந்தால் கூடப் பொறுக்காத டாகூர், தன் முதுகு சிவந்தது கண்டு ராதுவிடம் சினந்து விடுவாரோ என்று அம்மாவுக்கு அச்சம். அவரது கோபத்துக்கு மருந்து யார்? அவளேதான். வேத வாக்கின்படி சிவாதானே ''ருத்ரஸ்ய பேஷஜீ''? ராதுவை அம்மா வாரி மடியில் போட்டுக்கொண்டு, தன்னுடைய பாத தூளியை எடுத்து அவளது தலையில் தேய்த்தாள். ''ராதீ! இந்தக் கட்டையைப் பற்றி அந்த மகாப் பிரபு ஒரு கடுஞ் சொல் சொன்னதில்லை. நீ இந்த சரீரத்துக்கு எத்தனை வலி உண்டாக்கி விட்டே? ஆமாம், உன்னைச் சொல்லி என்ன? உனக்கெப்படி என் மதிப்புத் தெரியும்? நானே மனசு வெச்சு வந்து உங்களுக்கெல்லாம் மத்தியிலே வாழறதாலே என்னை இத்தனை லேசா நினைச்சுட்டேள்! ராதி, நான் எதையாவது அபசாரமாக எடுத்துண்டேனே, அப்புறம் மூணு லோகத்திலேயும் உனக்குப் புகல் கிடையாது; மும்மூர்த்திகளும் உன்னைக் காப்பாற்ற முடியாது.'' இப்படிச் சொன்ன தேவி, மீண்டும் கைகுவித்து, ''டாகூர், இவள் பண்ணினதை அபசாரமா நினைக்காதேள். அறியாக் குழந்தை, அறியாக் குழந்தை'' என்று விம்மினுள். ராதுவும் விக்கினுள்.

உடல் வீங்கித் துடித்த போதும், 'இந்தக் கட்டை!', 'இந்தச் சரீரம்!' என்று அதனிடமிருந்து அம்மா பிரிந்திருந்தே பார்க்கிருள். தனக்கு இழைத்த தவற்றைத் தான் பொருட்படுத்தாவிடினும், டாகூர் தண்டிப்பார் என்று அஞ்சும் அம்மா அந்த டாகூரும் தானேயல்லவா என்ற உணர்விலும் ஊறியிருக்கிருள்! மகா துயர சம்பவத்திலும் இப்படியொரு மகிமை!

மகாலட்சுமியே ஓர் அடியாரின் குற்றத்தைக் கூறிஞலும், திருமால் அதை ஏற்க மாட்டாராம் என்ருர் ஆழ்வார். அம்மாவோ, டாகூரிடம், ''ராது செய்த குற்றத்தைப் பொருட்படுத்தாதீர்கள்'' என்று மன்ருடியும் அவரால் ராதுவை மன்னிக்க முடியவில்லை. ராது அவரது அடியார் அல்ல; யோகமாயை அல்லவா? அம்மாவை உலகில் கட்டிப் போடவே வந்தாள் அவள். அம்மா அவளுக்கு அத்தனை ஊழியம் செய்தும் அவள் இப்படி அட்டூழியம் செய்த பின், டாகூர் அம்மாவை அவளிடமிருந்து — அதன் மூலம் உலகிடமிருந்து — விடுவிக்கத்திரு உளம் பற்றி விட்டார்! அன்றிலிருந்து அம்மாவின் மனம் ராதுவிடமிருந்து கழலத் தொடங்கி விட்டது.

ராதுவும் அப்போதைக்கு அழுதாளே தவிர, மீண்டும் தனது சொரூபத்தைக் காட்டத் தொடங்கி விட்டாள். கோயால்பாரா வாசத்தை முடித்து ஜயராம்பாடிக்குக் கிளம்பிஞர்கள். வண்டியில் போகும்போது, தனக்கு இடைஞ்சலாக அம்மா இடத்தை அடைத்துக் கொண்டு அமர்ந் திருப்பதாகக் குற்றப் பத்திரிகை படித்தாள் ராது. அம்மா வண்டியின் ஒட்டுக்கு வந்து ஒடுங்கி அமர்ந்த பின்னும் அந்த மூடப் பெண் — எழுதவே கை கூசுகிறது—தேவியைக் காலால் உதைத்து, ''வண்டியிலேருந்தே இறங்கித் தொலை'' என்ருள்.

''வண்டியை விட்டுப் போறேன்; சம்ஸார சகடத்தை விட்டும் கழண்டு போகிறேன். ஆனல் அப்புறம் உனக்காகப் பிராயச்சித்தம் செய்யறது யார்?'' என்ருள் தேவி. அம்மாவுக்கு ராது தவறு இழைத்தால் அதற்கான கழுவாயாக அந்த அம்மாவே தவமிருந்திருக்கிருள்! இப்படி எந்த இதிஹாஸ புராணத்திலாவது கண்டதுண்டா?

ஜயராம்பாடியில் ஒருநாள் பிச்சி மாமி, மாப்பிள்ளை ஏரியில் விழுந்து விட்டதாகக் கற்பனை செய்து கொண்டு, தானும் ஏரிக்குள் இறங்கித் தேடிஞள். பிறகு ஈரம் சொட்டச் சொட்ட அம்மாவிடம் வந்து, ''பாவி! இன்னிக்கு உன் வயிறு குளிர்ந்ததா? மன்மத்தை ஏரியிலே அமுக்கிக் கொன்னுட்டியே, உன் க்ஷாத்திரம் தீர்ந்ததா?'' என்ருள்.

ராதுவுக்குக் களத்ர தோஷம் உண்டு என்று முன்னரே அம்மா அறிந்திருந்தால் ஸுரபாலா சொன்னதைக் கேட்டதும் அம்மாவுக்கு சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. அருகிலிருந்தவர்களை ஏரிக்கரைக்கு ஓடச் சொன்ஞள். அதற்குள் யாரோ மன்மதநாத் பக்கத்திலேயே தான் மளிகைக் கடையில் சீட்டாடிக் கொண்டிருக்கிருர் என்று உறுதிப்படுத்திஞர்கள்.

அம்மாவுக்கு நிம்மதி பிறந்தது.

ஆனல் பிச்சி மாமிக்குத் தான் 'தோல்வி' அடைந்து விட்டதால் அம்மாவின் மேல் ஆத்திரம் அதிகரித்தது. அம்மாவைப் பற்றியும் அவளது தெய்விகப் பெற்ருேரான ராம முகர்ஜி, சியாமசுந்தரி பற்றியும் எழுதக்கூடாத நாராசப்பழிகளை அள்ளி வீசிஞள். ராதுவைத் தன்னிடமிருந்து பிரித்து அம்மா அவள் மேல் ஏகாதிபத்தியம் செய்வதாகச் சொல்லம்புகளைத் தொடுத்தாள்.

''ஸுரபாலா! என் அம்மாவைப் பற்றி, என் அப்பாவைப் பற்றி இப்படிப் பேசிஞல் பொறுக்க மாட்டேன். இருந்தாலும் இதெல்லாம் புத்தி பூர்வமான பேச்சில்லை என்று கோபத்தை அடக்கிண்டு இருக்கேன். உன் பெண்ணை நான் பெட்டியில் வைச்சுப் பூட்டியிருக்கவில்லை. இந்தப் பிருகிருதியையும் ஒரு உருவமாக்க முடியுமான்னு பாடுபட்டேன். அவ்வளவே! நான் மனசு வைச்சேன்ஞ இப்பவே கற்பூரம் மாதிரி மறைஞ்சு போயிடுவேன். ஆனல் உங்களுக்குச் செய்ய வேண்டியது இன்னும் கொஞ்சம் பாக்கி யிருக்கு'' என்ருள் அம்மா.

''பின்னே ஏண்டி, ராதுவுக்கு அபின் கொடுத்துப் பழக்கப்படுத்தினே? அவ மூளையைக் கெடுத்து, உடம்பைக் கெடுத்து, உன் கட்டை விரல் கீழேயே அவளை நசுக்கி வைக்கணும்னுதானே?'' என்ருள் பிச்சி.

இது பைத்தியத்தின் பேச்சாகவா இருக்கிறது? ராது உடல் நலக் குறைவு இருப்பதாக மிகைப்படுத்தியது போல், ஸுரபாலாவும் வேண்டுமென்றே தன் புத்திக் கோளாற்றை மிகைப்படுத்திக் காட்டி, பிறர் கண்டனத்திலிருந்து தப்பிக்க முயன்ருளோ என்று தோன்றுகிறது.

கடைசியில் அவள் அம்மாவின் கண்டனத்துக்கே ஆளானதும், அதற்காக அம்மா தன்னையே தண்டித்துக் கொண்டதும் தான் மகா பரிதாபம்!

**(அடுத்த இதழில் முடியும்)**

போஸ்டர்
கலர்கள்
வாட்டர் ப்ரூஃப்
டிராயிங் இங்க்
மற்றும் இன்ஸ்ட்ரு-
மெண்ட் பாக்ஸ்.










வாட்டர் கலர்
டியூபுகள், கட்டிகள்.






கலைஞர்களின் ஆயில்
கலர்கள், மாணவர்களின்
ஆயில் கலர்கள்



உங்கள் வாழ்க்கைக்கு வண்ணப் பொலிவைக்
கூட்டுங்கள்...

# கேமல்

ஆர்ட் கலர்களை
உபயோகியுங்கள்





கேம்லின் பிரைவேட் லிட்.
ஆர்ட் மெடீரியல் டிவிஷன்
(கலைப் பொருள்கள் பிரிவு)
ஜே.பி. நகர், பம்பாய்-59.
ஏ.எஸ். இந்தியா.

PRATIBHA 1711-29 Tam

# அம்மா



## ரா. கணபதி

தன் மகள் ராது, தன்னைப் பொருட்படுத்தாமல் சாரதையிடம் ஒட்டிக் கொண்டிருக்கிறாளே என்ற ஆத்திரத்தில் ஸுரபாலா தகாத பழியைச் சுமத்தினாள் திவ்விய மாதாவின்மீது.

அம்மா மிகவும் தெளிவாக, ''சரி ஸுரபாலா! இதோ உன் பெண் கண் எதிரிலேயே படுத்திண்டிருக்கா. நான் உங்களுக்குக் குறுக்கே நிற்கவில்லை. இப்பவே இவளை அழைச்சுண்டு போய்ச் சேரேன்'' என்றாள்.

இப்படி அம்மா தீர்மானமாகச் சொன்னதும் ஸுரபாலாவுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அவள் சற்றும் எதிர்பாராத பேச்சு அது. திகைத்தாள். பிறகு முன்னிலும் கொதிப்படைந்து, ''எங்களையா போகச் சொல்றே? எங்களோட சொத்தையெல்லாம் அமுக்கிட்டு வெளியிலேயும் துரத்தறியா, ராட்சஸி! நீ தொலை இங்கேயிருந்து! ஓடு இந்த வீட்டை விட்டு'' என்று கூச்சலிட்டாள். அவள் முகம் செந்தணலாயிற்று. அடுக்களைக்குச் சென்றாள். அடுப்பிலிருந்து ஒரு கொள்ளிக்கட்டையை எடுத்துக் கொண்டு அசுர பலத்துடன், அம்மாவை நோக்கிப் பாய்ந்தாள் சுரபாலா.

வீட்டிலிருந்த பெண்டுகள், பிரம்மசாரிகள், அடியார் அனைவரும் ''ஹா ஹா'' என்று பேயறைந்தாற் போல் ஸ்தம்பித்து நின்று விட்டார்கள்.

இதோ, அம்மாவின் தலையில் கொள்ளிக்கட்டையின் பலத்த அடி விழப் போகிறது! ''ஒரு பைத்தியத்தின் கையாலே இதோ சாகிறேன். யாரும் இங்கே இல்லையா?'' என்ற தீனமான அலறலுடன் நம் மாதா சாய்ந்தாள்.

பிரம்மசாரி வரதனுக்கு ஓர் ஆவேசம் வந்தது. மின்னல் வேகத்தில் பாய்ந்து ஸுரபாலாவின் கையிலிருந்த கொள்ளியைப் பிடுங்கினார். அதை அவளை நோக்கியே ஓங்கினார். அவள் மகா பீதிகரமாகக் கூச்சலிட்டுக் கொண்டே வெளியில் ஓடினாள்.

அம்மா உடல் படபடக்க எழுந்து அமர்ந்தாள். ''பைத்தியக்காரி! என்ன காரியம் பண்ண இருந்தே! அந்தக் கை உன் உடம்பிலே தரிச்சு நிற்குமா?'' என்ற வார்த்தைகள் அவள் வசமில்லாமலே உதட்டிலிருந்து உதிர்ந்தன.

''நான் என்ன சொன்னேன்?'' என்றாள் அடுத்த விநாடி. ''என்ன சொன்னேன், என்ன சொன்னேன்?'' என்று பைத்தியம்போல் சிறிது நேரம் கேட்டுக் கொண்டேயிருந்தாள். ஒரு பரம பரிதாபமான விம்மல் அவள் தொண்டையிலிருந்து வெடித்தது. நடக்க முடியாமல் நடந்து சென்று டாகூரின் படத்தின் முன் கைகுவித்து அஞ்சலி செய்தாள். கண்கள் மழையாகப் பொழிந்தன. டாகூரின் பாதத்தில் விழுந்து உடலே பிளந்து போவதுபோல் தேம்பித் தேம்பி அழுதாள். உடைந்து உடைந்து வார்த்தைகள் வெளியாயின: ''என் பிரபோ! நான் அபராதியாகி விட்டேன். ஜன்மா எடுத்ததுக்கு ஒரு பெரிய குற்றமும் பண்ணிவிட்டேன்! என்ன காரியம் செய்துட்டேன்! இதுக்

---

தலைப்பில் காண்பது ஜயராம்பாடியில் அம்மாவின் ஜன்ம ஸ்தலத்தில் அமைந்துள்ள ஆலயம்.

எதிர்ப் பக்கத்தில்: பேலூரிலுள்ள அம்மாவின் சமாதி ஆலயம்.

குத் தண்டனை என்ன? டாகூர், டாகூர், என்னுடை இந்த வாயிலிருந்து சாபம் வந்துடுத்தே, நான் என்ன பண்ணுவேன்? அறுபத்தைஞ்சு வருஷமா ஈ எறும்பைக் கூடத் தூஷிக்காமல் இருந்ததெல்லாம் சொப்பனமாப் போச்சு அப்பனே! நான் அம்மாவாக மட்டுமே இருக்க முடியும்னு நினைச்சுண்டிருந்தேன். இன்னிக்கு அம்மாத் தன்மை என்னை விட்டுப் போச்சே! இனி இந்தச் சரீரமும் போயிட வேண்டியதுதான், பிரபு. உங்களோட உலகத்துலே அம்மாவாக வாழத் தெரியாத எனக்கு ஏது இடம்? போறும் ஸ்வாமி போறும். இன்னமும் பராமுகம் பண்ணுதேள். இனியும் காலம் கடத்திச் சோதிக்காதேள், ஸ்வாமீ....'' கேட்கிறவர்களின் நெஞ்சமெல்லாம் கரைந்துருகக் கதறினுள் அம்மா.

டாகூர் செவி சாய்த்து விட்டார்! அன்று அம்மா படுத்த படுக்கையானது தான். அதுவே அவளை மீளா நித்திரைக்கு இட்டுச் சென்றது.

## 43. உடலை உகுத்தாள்; உலகை உகுப்பாளா?

அனைத்திலும் நிறைந்துள்ள பொருள் எதுவோ அது அழிவதே யில்லை என்று உணர்வாய். என்றும் மாரு அப்பொருளை அழிக்கும் ஆற்றல் எதற்கும் இல்லை. நித்திய வஸ்துவாய், நாசமற்றதாய், அளவிடற்கரியதாய் உள்ளவன் சரீரி. அவன் எடுக்கும் சரீரங்களுக்கே அழிவுண்டு.

—பகவத்கீதை 2-17,18

**1919** டிசம்பர் பதின்மூன்றும் தேதி. ஜயராம்பாடியில் ஒரே ஜய கோஷம். அம்மாவின் ஜயந்தித் திரு நாள் அல்லவா? உடல் நலமிழந்த அம்மா நீராடவும் முடியாமல் கடற் பஞ்சைத் தோய்த்து உடம்பைத் துடைத்துக் கொண்டாள். பக்தி தரும் சக்தியை கொண்டு டாகூருக்குப் பூஜை செய்தாள். பிறகு அன்பு தரும் பலத்தைக் கொண்டு நீண்ட நேரம் தரிசனம் தந்தாள். அடியார் பலர் அவளுக்குச் சந்தன குங்குமம் மட்டித்தனர். மெலிந்த தோளில் ஏராளமான மலர் மாலைகள் ஏறின. மகா சுமங்கலியாக, நித்திய கல்யாணியாகக் கட்டிலில் அமர்ந்து அனைவருக்கும் பாத ஸ்பரிசன பாக்கியத்தை வழங்கினுள்.

அடியார் எல்லோரும் உண்டு முடிந்த பின்பே ஆகாரம் கொள்ளுவதை ஒரு விரதமாக வைத்திருந்த அம்மா இன்று அதிசயத்திலும் அதிசயமாக, டாகூரின் பிரசாதத்தில் ஒரு சிறிதைத் தானே முதலில் உட்கொண்டாள். உணவு வகைகளைத் தனது பிரசாதமாகவும் ஆக்கி, இரட்டிப்புப் புனிதமாக்கி அடியாருக்கெல்லாம் பரிமாறச் செய்தாள். இது நாள்வரை அம்மாவிடம் எத்தனையோ அநுக்கிரகங்களை எளிதிலே பெற்றவர்களுக்கும் அவள் உண்டு எஞ்சிய பிரசாதத்தைப் பெறும் பாக்கியம் மட்டும் கிடைத்ததில்லை. இன்று அந்தக் குறையைத் தீர்த்து விட்டாள் தேவி. இதில் ஆனந்தம் கொள்ளும்போதே சில உள்ளங்கள், 'அம்மா வழக்கத்துக்கு மாருக நடந்து கொண்டாளே! இந்த ஜயந்தி தான்...?' என வேதனையில் சிந்தித்தன.

அதன் பின் அம்மாவின் காய்ச்சல் உக்கிரமாயிற்று. அப்போதும் அடியார்கள் வந்த வண்ணமிருந்தனர். முன்னிலும் அதிகமாகவே வந்தனர்—அம்மா இந்தப் புவியில் இருப்பதற்குள் அவளைக் கண்டுவிட வேண்டும் என்பதால். எல்லையிலா அசக்தியுற்றிருந்த போதிலும் அம்மாவுக்கு அவர்களை ஏமாற்ற மனம் வருவதில்லை. அவர்களிடம் பேச முடியாமல் பேசினுள். ஏன், மந்திரோபதேசம்கூடச் செய்தாள். சிதைந்து கொண்டே யிருக்கும் சரீரத்தில் அவர்களது பாவத்தை வாங்கிப் புதைத்துக் கொண்டு மேலும் துயர் அநுபவித்தாள்.

காசியில் ஏதோ முக்கியமான பணியில் ஈடுபட்டிருந்த சாரதாநந்தர், அம்மாவைக் கல்கத்தா உத்போதனில் 'கடுங் காவல்' வைத்தாலே பக்தர்களின் படையெடுப்பைத் தடுக்க முடியும் என்று தீர்மானித்தார். அப்படிச் சொன்னுல் அம்மா வரமாட்டாள் என்பதால் அவளுக்கு நிபுணர்களைக் கொண்டு சிகித்சை செய்ய வேண்டியது தங்கள் கடமை என்றும் அதன் பொருட்டு அவள் கல்கத்தாவுக்கு வந்தாக வேண்டும் என்றும் தகவல் அனுப்பினுர். அம்மாவும் சம்மதித்தாள்.



ராது, ஸுரபாலா, நளினி, மாகு, பிரம்மசாரி வரதன் ஆகியோர் புடைசூழ அம்மா ஜயராம்பாடியை விட்டுப் புறப் பட்டாள். (இடைக் காலத்தில் அம்மா விடம் அநியாயமாகச் சண்டை போட் டுப் பிரிந்த நளினி, மாகு ஆகியோரை யும், சகிப்பு சொரூபிணியான சாரதை ஜயராம்பாடியில் தன்னுடன் சேர்த்துக் கொண்டு விட்டாள்.)

'ஸ்வர்காதபி கரீயஸீ' (பொன்னுல கினும் மேலானது) என்று சொல்லி எந்தப் பிறந்தவூர் மண்ணை அம்மா தலை யில் தூவிக்கொள்வாளோ அந்த ஜன்ம ஸ்தலத்திலிருந்து அம்மா விடை கொண் டது அன்பும் சோகமும் இழையும் நிகழ்ச்சி. ஊர்த் தெய்வங்களைத்திட மும், ''போகிறேன், போகிறேன்'' என்று சொல்லிக் கொண்டாள்.

குழந்தைப் பிராயத்தி லிருந்து எத் தனையோ முறை தன் புண்ணிய மேனி திளைக்க நீராடிய புண்ணியபுகுர் ஏரிக் கரைக்குச் சென்று நிமலமாக நின்றாள். அங்கிருந்து திரும்புகையில் படித் துறை யில் தடுக்கி விழுந்தாள் தேவி. ஊரா ருக்கு நெஞ்சிற் சுட்டாற் போலிருந்தது.

டாகூருக்குப் பூஜை செய்துவிட்டு, அந்தப் படத்தைத் துணியில் சுற்றி ஒரு பெட்டியில் வைத்தாள். விழுந்து நமஸ் கரித்தாள். அந்தப் பூஜாக் கிருகத்தில் பிரேமைச் சிகரமான அம்மாவின் சிரம் கடைசி முறையாகப் படிந்தது.

வாசலில் பல்லக்கு வந்து நின்றது.

அம்மா சிரித்தாள். ''என் சிம்ம வாஹினியோட எல்லைக்குள் நான் பல் லக்கிலே ஆரோகணிச்சுப் போவேனா? ஊஹூம்! கிராம எல்லை முடிகிற வரை நடந்தே வருவேன்'' என்று கிளம்பினாள். வயோதிகம், வியாதி, அதோடு காலையில் குளக்கரையில் தடுக்கி விழுந்த வலி வேறு. உடலெல்லாம் வியர்த்துக் கொட்டியது. ஆயினும் பல்லக்கில் ஏறாமல் பாத மலர் நோக நடந்தாள்.

ஊர் ஜனங்கள் வந்து மொய்த்துக் கொண்டனர்.

''தேவீ, காளீ! உடம்பெல்லாம் குண மாகி, சீக்கிரமே திரும்பி வா, தாயே! எங்க கண்கண்ட தெய்வமே!'' என்று கூறி அவர்கள் நமஸ்கரித்தார்கள்.

''சகலமும் டாகூர் கையிலே இருக்கு; அவர் விட்டபடியாகும்'' என்று அம்மா விட்டேற்றியாக விடை பகர்ந்தாள்.

''அப்படிச் சொல்லாதே மகராஜி! எங்களை மறந்துடாதே தாயே!'' என்று மக்கள் முறையிட்டனர்.

''உங்களை மறக்கறதா? அது நடக் காத காரியமாச்சே'' என்று கருணை கொட்டச் சொல்லிக் கொண்டே நடந் தாள் அம்மா.

கிராம எல்லை கடந்ததும் ஜயராம் பாடி என்ற அந்தப் பரம பாக்கியம் செய்த கிராமத்தைத் திரும்பிப் பார்த் துக் கைகுவித்தாள். ''ஸிம்மவாஹினி, நமஸ்காரம்; யாத்ராஸித்திராயா, நமஸ்காரம்; ஷஷ்டி மாதா, நமஸ் காரம்'' என்று ஊர்த் தெய்வங்களின் பெயரையெல்லாம் சொல்லி வணங் கினாள்.

அவள் பல்லக்கிலே அமருகிற தரு ணத்தில் தம்பி பிரஸன்னரின் இரண் டாவது மனைவி ஸுவாஸினி, அம்மாவுக் குத் தாம்பூலம் அர்ப்பணித்து நமஸ்கரித் தாள். ''ஸுவாஸின்யர்சன: ப்ரீதா'' என்று லலிதா சகஸ்ரநாமம் சொல் வதற்கேற்ப, அதை அம்மா பிரீதி யுடன் ஏற்று அவளைத் தழுவி ஆசி வழங் கினாள். அம்மாவின் பிறந்தக உறவி னருள் அவளது மகிமையை ஓரளவு புரிந்து கொண்ட ஒரே ஒருத்தி சுவாஸினி. அவள் கொண்டு வந்திருந்த கும்ப தீர்த்தத்தால் தன் பாதத்தைக் கழுவுமாறு பிரம்மசாரி ஹரியைப் பணித் தாள் அம்மா. அவர் அவ்விதமே செய் தார். ''இந்தா, என் ஞாபகார்த்தம்'' என்று அவரிடம் தான் போர்த்திக் கொள்ளும் துப்பட்டாவை வீசினாள்.

கிராம மக்கள் அனைவரும் நனைந்த கண்களுடன் பார்த்துக் கொண்டிருக்கை யில், 'ஜய் மாதாஜி' என்ற கோஷத் துடன் போயிக்களின் தோள் மீது பல்லக்கு உயர்ந்தது; விருவிருவென்று நகர்ந்தது; பார்வையிலிருந்து மறைந்தது!

பல்லக்குக் குலுக்கலில் அம்மா வின் உடல் ஆடிக் களைத்துவிட்டது. வழியில் சாந்திநாதர் ஆலயம் வந்த வுடன் இறங்கினாள். சுவாஸினி செய்து அனுப்பியிருந்த பட்சணங்களை சாந்திநாத சிவனுக்கு நிவேதனம் செய் தாள். அங்கு கூடியிருந்த ஏழைப் பாலகர்களுக்குத் தானே அதை விநி யோகம் செய்தாள். உடன் வந்த மற்ற வர்களுக்கும் அளித்தாள். ராது வேறு ஒரு பல்லக்கில் முன்னமே சென்றுவிட் டதால் ''ராதுவுக்கு'' என்று சொல்லிக் கொண்டு சிறிது பட்சணத்தைப் புட் லைத் தலைப்பில் முடிந்து கொண்டாள். பாச முடிச்சு இன்னும் பூரணமாக அவிழவில்லைதான். முற்றிலும் அவிழ்ந் திருந்தால் அம்மாவின் உடல் இந்த உலகில் இருந்திருக்கவே முடியாதே!

மேலும் பல காதங்கள் சென்றபின் அம்மா மீண்டும் பல்லக்கை விட்டிறங்கி னாள். மரத்தடியில் ஜமுக்காளத்தை

விரித்து அமர்ந்து கொண்டாள். பல்லக்குத் தூக்கிகளுக்கு அவல் வாங்கி வருவதற்காக வரதனிடம் இரண்டு ரூபாய் கொடுத்து அனுப்பினுள். அங்கிருந்த சுள்ளிகளைக் கொளுத்தி மாகுவின் கைக் குழந்தைக்குப் பால் காய்ச்சிக் கொடுத்தாள். அன்பும் ஊழியமும் அவளது உடலோடு அப்படி ஊறிப் போயிருந்தன!

கல்கத்தா உத்போதனில் வந்திறங்கிய அம்மாவைக் கண்டதும் யோகின்—மாவும் கோலாப்மாவும் பதறிவிட்டனர்.

''அம்மா, இப்படி எலும்புக் கூடாக ஆயிட்டேளே! உங்களுக்கு இத்தனை 'உடம்பு'ன்னு எங்களுக்கெல்லாம் தெரிவிக்காமலே கிராமத்தில் இருந்துட்டேளே'' என்று அவ்விருவரும் அரற்றினர். அம்மா அவர்களைத் தடவிக் கொடுத்து ஆசுவாசம் செய்தாள்.

டாக்டர் கஞ்ஜிலால் என்ற ஹோமியோபதி வைத்தியர், கவிராஜ் சியாமதாஸ் வாசஸ்பதி என்ற ஆயுர்வேத நிபுணர், டாக்டர் விபின் விஹாரி கோஷ் என்ற ஆங்கில முறை மருத்துவர் ஆகியோர் அம்மாவுக்கு சிகித்சை செய்தனர். என்ன செய்து என்ன? அம்மாவின் நோய் அவர்களுக்குப் பிடிபடவே இல்லை. வறுத்தெடுத்தது அவளை தாப ஜுரம். தினமும் மாறி மாறித் தேக உஷ்ணம் ஏறுவதும் இறங்குவதுமாக, வாரக் கணக்கில் ஓடியது.

எப்பேர்ப்பட்ட இனிய அம்மாவுக்கு எப்படிப்பட்ட கொடூர சித்திரவதை! உடல் வதையை விட உள்ளத்தின் வதைப்பே அதிகமாக இருந்தது. அவளைப் பொறுத்த மட்டில் அது தாப ஜுரம் அல்ல. சாப ஜுரமாகவே இருந்தது. அன்று கொள்ளிக்கட்டையை ஓங்கி வந்த ஸுரபாலாவைச் சபித்ததற்காகத் தனக்குள்ளேயே கொள்ளியைச் சொருகிக் கொண்டு மாதக் கணக்கில் கடுங் காய்ச்சலை அநுபவித்தாள். அவளே பகர்ந்ததுபோல், நினைத்த மாத்திரத்தில் தன் உடம்பைக் கற்பூரமாகக் கரைத்துச் செல்லக் கூடியவள்தான் அம்மா! ஆயினும் உலக நியதிப்படி தவற்றுக்குத் தண்டனை அநுபவிக்க வேண்டும் என்றே, பிறரது பாபங்களை வாங்கிக் கொண்டதற்காகவும், தன் வாய் திறந்து சபித்ததற்காகவும் அநுபவித்தாள்! மனித காயம் படைத்த எவரும் அம்மாவைப் போல் உழைக்க முடியாது, பொறுமை காட்ட முடியாது, அன்பு செய்ய முடியாது என்பது மட்டுமின்றி, அவளைப் போல் எந்த மனித காயத்தாலும் அத்தனை காய்ச்சலைத் தாங்கியிருக்கவும் முடியாது!

> ஸ்வர்க்கமும் நரகமும் நமக்குள்ளேயே இருக்கின்றன. காமத்தையும் குரோதத்தையும் வளர்த்துக் கொண்டால் நரகத்தில் இருக்கின்றோம். அவற்றைக் குறைத்துக் கொண்டால் ஸ்வர்க்கத்தில் இருக்கிறோம்.
>
> - ஸ்ரீ ரமண மகரிஷிகள்

ஆனாலும் அந்தச் சாபம் அதனால் சக்தி இழக்கவில்லை. தன்மீது கொள்ளி வீச வந்த கை சரீரத்திலிருந்து இற்று விழும் என்று அம்மா மறைமுகமாகச் சொன்னது மெய்யாகத் தொடங்கியது. அம்மா உலகிலிருந்து மறைந்தவுடனே ஸுரபாலாவின் கையில் குஷ்டம் கண்டு அது அழுகத் தொடங்கியது. இது அம்மாவுக்கு முன்னரே தெரியாதா என்ன? ஸுரபாலாவின் கை அழுகி அவள் காணவிட்டாலும் தன் மனசு அழுகிற்றே என்று அழுது கொண்டாள்.

வாலி வதத்துடன் ராமாயணம் முடிந்தால் எத்துணை மாளா வேதனையாக இருக்கும்? அம்மாவின் பரம புண்ணியமான சரிதையின் முடிவில் இப்படி ஒரு பயங்கர சோதனை ஏன்தான் நிகழ்ந்ததோ? ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியாவது வாலி வதத்தில் தன் நடத்தை முற்றிலும் தர்மமானது என்று உறுதியாகக் கருதியதாகவே காண்கிறோம். ஐயனைப் போலவே மநுஷ்ய தர்மத்துக்கு ஆதரிச மூர்த்தியாக வந்த நம் அம்மாவோ தன்னைக் குற்றவாளியாகவே கருதிக் குமைந்தாள். இந்தச் சரிதையைப் படிப்பவர் யாவரும் அந்த விசுவ வேதனையில் பங்கு பெறுவதால் ஒருவேளை உலகின் பாப பாரம் சிறிது குறையுமோ என்னவோ? உலக வாழ்வில் பங்கு கொண்டு உலகத் துயரையும் பாபத்தையும் வாங்கிக் கொண்ட அம்மா, தன் குழந்தைகளான நம்மை அவளுக்குக் கடனாளியாக நிறுத்திவிடக் கூடாது என்று காருண்ய மனத்தில் எண்ணினாளோ? அதற்காகவே அவளது துயரத்திலும் பாபத்திலும் நாம் பங்கு கொள்ள வேண்டும் என இப்படி ஒரு நாடகம் நடித்தாளோ? நம் அம்மாவின் தவற்றுக்காக, பச்சாத்தாபத்துக்காக இன்று நாம் வடிக்கும் கண்ணீரே பரம புனிதமானது. வாழ்நாள் முழுதும் சாரதை புரிந்த அநுக்கிரகத்தைப் போலவே, வாழ்நாளில் ஒரே முறை அவளிட்ட சாபமும் நம்மிடம் உண்டாக்கும் உணர்வினால் நம்மைத் தூய்மைப் படுத்துகிறது.

பராசக்தியின் சங்கற்பத்தை நாம் அறிய வொண்ணாது. எக்காரணத்தாலோ அம்மாவால் தானிட்ட சாபத்துக்கு விமோசனம் தர முடியாமலிருந்

தது. ஆயினும் அம்மா உடலே உகுத்த சிறிது காலத்திலேயே அவளது ''வெறித் தோழி'' ஸரபாலாவும் அவளைச் சென்றடைந்துவிட்டாள். குஷ்டரோகியாக அவள் நீண்ட காலம் தவிக்காமல் அம்மா அவளைத் தன்னிடம் சேர்த்துக் கொண்டாள்.

ராதியிடம் அம்மாவின் பாச முடிச்சு பெருமளவு அவிழலாயிற்று.

'அத்தை படுத்து விட்டாள். இனி எழுந்திருக்க மாட்டாள். துர்க்குண முண்டமாகவும், துர்ப்பல பிண்டமாகவும் உள்ள தன்னைக் கணவனும் பிரியமாக வைத்து நடத்த மாட்டான்' என்று ராதுவுக்குத் தெரிந்துவிட்டது. ஆத்திரத்திலும், அவலத்தனத்திலும் அடியோடு அறிவிழந்தாள் ராது. தான் பெற்றெடுத்த பச்சைக் குழந்தையையே கரித்தாள். அம்மாவுக்கு அற்புதமாக சுசுரூஷை செய்த சரளாதேவிதான் ராதுவின் குழந்தைக்கும் செவிலித் தாயாக இருந்தாள். தாய் கொடுமைப்படுத்திய சேய் நோய்வாய்ப்பட்டது. டாக்டர் கஞ்ஜிலால், ''ராது ஒரு வழியாக இந்தக் குழந்தையை விட்டுப் போனாலொழிய நான் வைத்தியம்செய்து பயன் இல்லை'' என்று அம்மாவிடம் கூறினார். அந்நியர் அசலார் அனை வருக்கும் அன்னையாக இருந்த சாரதைக்கு, ராதியின் போக்கு சொல்லொணா வேதனையை — ஏன், தோல்வி உணர்ச்சியையே — கொடுத்தது. ''ராதி! உன்னை நானாக்கும் எடுத்து அரும்பாடு பட்டு வளர்த்தேன். உனக்காக என் மற்றக் குழந்தைகளை எல்லாம் ஓரளவு அலட்சியம் செஞ்சேன். அப்படியிருந்தும் உன்னை உத்தம ஸ்திரீயாக உருவாக்க என்னாலே முடியலையே! நீ எங்கிட்டேயிருந்து எதையுமே எடுத்துக்கலியே!'' என்று கண்ணீர் முட்டக் கூறினாள்.

பரிதாபம்!

கலியின் கோரதாண்டவத்துக்கு இடையில் பாரத ஸ்திரீ தர்மத்தைப் பூரணமாக வாழ்ந்து காட்டி ஜயக் கொடி நாட்டிய தேவி, தோல்வி உணர்ச்சியும் கொண்டாள்! அரற்றினாள்: ''டாகூர் சித்தத்திலே என்ன இருக்குன்னே புரியலை. தன்னையே ரட்சிச்சுக்கத் தெரியாத ராதிக்குக் குழந்தை வரம் வேறு ஏன் கொடுத்தாரோ?''

அம்மா ஒருவிதத்தில் அமாநுஷ்யமானவள் எனில், அவளையே உலகில் கட்டிப்போட வந்த ராதியும் இன்னொரு விதத்தில் அமாநுஷ்யமானவள்தான். அம்மாவே புரிந்து கொள்ளாத அந்தப் புதிரை நாம் எப்படி விளங்கிக்கொள்ள இயலும்?

அன்று புத்தாண்டு தினம். உத்போதனில் மாலை வழிபாடு அப்போதுதான் முடிந்திருந்தது. ராதுவின் குழந்தை தீனமாக அழுகிறது. ''சரளா எங்கே போய்த் தொலைஞ்சா? அவளைக் கூப்பிட்டு இந்தப் பீடைக்குப் பால் போட்டச் சொல்லுங்கோ'' என்று ராது கத்துகிறாள்.

அம்மா தன் படுக்கையிலிருந்தே, ''இப்போ பால் கொடுக்கிற வேளையில்லை. சித்த முன்னாடிதான் பால் கொடுத்துட்டுப் போனா...'' என்று ஈன சுவரத்தில் குரல் கொடுக்கிறாள். ராது ரௌத்திராகாரமாக இடைமறிக்கிறாள்: ''இந்த வீட்டிலே மூணு தலைமுறையா உனக்கு அடிமையாயிட்டோம். முதலில் எங்கம்மா, அப்புறம் நான். இப்போ இந்தக் குழந்தையும் உன் அடிமை. நீ மனசு வைச்சாத்தான் அதன் பசிக்கற வயித்துக்குப் பால்!'' குழந்தையன்பே அறியா ராது சொல்லத்தகாத வார்த்தைகளால் அம்மாவைச் சுட்டெரிக்கிறாள்.

''போறும், போறும், எனக்கு உங்களோடு போறும். மகாராஜி! உன் பிள்ளையை எடுத்துண்டு நீ இந்த நவ கண்டத்திலே எங்கே வேணா போய் க்ஷேமமா யிரு'' என்றாள் அம்மா.

''நான் ஏன் போவேன்? நீதான் போயேன்! ஒரேயடியா உலகத்தை விட்டுப் போ. என் குழந்தை வாயை நனைச்சுக்கப் பால் கிடையாதுன்னு சொன்ன உன்னைச் சிதையிலே வைச்சு உன் வாயிலே எல்லாரும் அரிசி கொட்டட்டும்'' — மனிதர்களால் பேச முடியாத கொடூரத்தை அன்புத் தத்துவமான அம்மாவின் தத்துப் பெண் மொழிந்தாள்.

அம்மா கரை கடந்த வேதனையும், எல்லையற்ற அநுதாபமும் பொங்க, ''பெண்ணே! என்னைப் போகச் சொல்லிட்டே. நான் போக வேண்டியவள் தான். ஆனால் என்னைத் தவிர உன்னை யார் பார்த்துக்க முடியும்? நான் போனவிட்டு உனக்கு என்ன கதி என்கிறது என் கண் முன் தெரியறது. அதை நினைக்கிறச்சே, வருஷப் பிறப்பா இருக்கிற இன்னிக்கு, 'எனக்கு முன்னாடி இந்த அவலப் பெண் போய்ச் சேராதா?'ன்னு வேண்டிக்கிறேன். உன்னை விட்டுட்டு நிம்மதி யில்லாமல்தான் சாகப் போகிறேன். நீ போயிட்டா நிம்மதியாப் போவேன். ஆனால் டாகூர் சித்தத்தை யார் மாற்ற முடியும்?'' என்றாள்.

பக்கத்திலிருந்த பக்தையிடம் திரும்பி, ''மகளே! என் எலும்புக்குள்ளேகூட இவாளுடைய உபாதை ஜ்வாலை வீசித் தகிக்கிறதம்மா! விசிறியைத் தண்ணி

யிலே தோய்ச்சுண்டு வந்து கொஞ்சம் விசிறுவியா?'' என்றாள்.

(அம்மா மறைந்து ஒன்பது மாதத்துக்குள் ராதுவை அவளது கணவர் ஒதுக்கி வைத்து மறுமணம் செய்து கொண்டு விட்டார். ஸ்வாமி சாரதா நந்தர் கருணையுடன் வழங்கி வந்த மானியத்தைக் கொண்டு அவள் ஜயராம்பாடியில் நடைப்பிணமாகக் காலம் தள்ள வேண்டியதாயிற்று. ஆனால் இது ஸுரபாலாவுக்கு அம்மா கொடுத்தது போன்ற சாபமல்ல. 'இப்படி நடக்க வேண்டும்' என்று அம்மா சபிக்கவில்லை. 'இப்படித்தான் டாகூர் நடத்தப் போகிறார்' என்று முன்கூட்டியே கண்டு அதை வெளியிட்டாள்!)

உலகெல்லாம் திவ்விய மாதாவாகப் போற்றிய சாரதையைச் சுற்றத்தினர் புரிந்துகொள்ளாமல் பாடாகப் படுத்தியது விந்தையாகத் தோன்றலாம். இதில் விந்தையில்லை. அதுவே அவதார உத்தேசம். ஓயாத தொந்தரவுக்கிடையிலும் ஆத்ம சுதந்திரத்தையும் அன்புச் சுந்தரத்தையும் வாழ்ந்து காட்ட வந்தாள் அம்மா. அப்படியானால் அவளைச் சுற்றி யிருந்தவர் ஓயாமல் உபாதைப் படுத்தித்தானே ஆகவேண்டும்? அவதாரமும் ஒரு நாளில் முடிந்தாக வேண்டும். அன்பு குறைந்தாலொழிய உலகை விட்டுப் புறப்பட முடியாது! எனவேதான் அம்மாவும் அலுப்புக் கொண்டாள்!

பிரபல வைத்திய டாக்டர் பிராண தனபோஸ் அம்மாவின் முக்கியவைத்தியரானார். ஆனால் அவரால்கூடப் பிராணனைத் தர முடியுமா என்ன? அம்மா நலிந்து கொண்டே வந்தாள்.

வைத்தியர்களிடம் அம்மா காட்டிய அன்பு அபரிமிதமானது. அவர்களுக்குப் பிரசாதமும் பட்சணமும் வாரி வாரி அளிக்கச் செய்வாள். கிறிஸ்துவரான பிராணதன போஸ் ஆரம்ப காலத்தில் எக்கச்சக்கமாகப் பணம் வாங்கி வந்தார். ஆனால் நாளடைவில் அம்மாவின் அன்பில் உருகி, தமக்குப் பணம் ஏதும் வாங்கிக்கொள்ளாததோடு தம் செலவிலேயே டாக்ஸி வைத்துக் கொண்டு வரலானார்.

காய்ச்சலோடு கடுங் கோடையும் சேர்ந்து தேவியைத் தகித்தது. ''எங்கேயானும் ஜலத்துக்கு அடியிலே கொடி அடர்ந்த இடத்திலே முழுகிக் கிடக்கணும் போலிருக்கு. என்னைக் கங்கைக் கரையிலே கிடத்துங்கோ'' என்பாள். உலகுக்குத் தண்மை சொறிந்த அம்மாவைச் சுற்றி ஐஸ் மயமாக்குவார் அருமை ஷரத். தமது ஜிப்பாவைக் கழற்றிவிட்டு முதுகைக் குனிந்து கொண்டு அம்மாவின் கையை எடுத்து அதில் வைத்துக் கொள்வார். ''குளிர்ச்சியாக இருக்கடா குழந்தை'' என்பாள் மாதா.

> ஓர் அடியார், தாம் ராமகிருஷ்ணரையும் சாரதையையும் சரணடைந்து நீண்ட காலமாகியும் தமக்குப் பரிபக்குவமேற்படவில்லை என்று குறைப்பட்டுக் கொண்டார். அப்போது அம்மா அர்த்த புஷ்டியுடன் கூறினாள்: ''சாதகனுக்குத் தன் ஆத்ம அபிவிருத்தி உடனுக்குடனே தெரிய வேணும் என்பதில்லே, குழந்தே! நீ தூங்கிக் கொண்டிருக்கும்போது, இன்னொருத்தர் உன்னைத் தூக்கிக் கொண்டு போய் இன்னொரிடத்தில் சேர்ப்பதாக வைத்துக் கொள். உன்னை இடம் மாற்றும்போதோ, அல்லது புதிய இடத்தில் நீ கண் விழித்துக் கொண்ட உடனேயோ உனக்கு இடம் மாறியிருக்கிறோம் என்று தெரிந்து விடுமா?''

இப்போதெல்லாம் பக்தர்களை அம்மாவிடம் அநுமதிப்பதில்லை. இருப்பினும் சிலர் அம்மாவின் அண்மைக்கு வந்துவிடுவர். இத்தனை இன்னலிலும் அம்மா இன்முகம் காட்டுவாள். அவர்களது க்ஷேம லாபங்களை வினவுவாள். ஜுர வேகத்தில் தன் வயமிழந்தபோது யாரார் வந்திருந்தார்கள் என்று கேட்டறிந்து, ''அவாளை விசாரிக்காமல் போயிட்டேனே என்று வருத்தப்பட்டுண்டு போயிருப்பா. நான் அவாளுக்கெல்லாம் ஆசீர்வாதம் பண்ணறேன்னு தெரிவியுங்கோ'' என்பாள்.

இச்சமயத்தில் அவளுக்குச் சுசுரூஷை செய்வதைப் பரம பாக்கியமாக எண்ணிப் பலர் போட்டி போட்ட போதிலும் அவள் அத்தியாவசியம் தவிர வேறெதற்கும் எவரது பணிவிடையையும் ஏற்க மறுத்தாள். ஊழியம் புரியவே வந்த அவளால் 'பிறர் ஊழியத்தை ஏற்க முடியுமா? பசு எங்கேனும் பால் குடிப்பதுண்டா?

அம்மா இறுதிப் படுக்கையில் மும்முறை புத்திர சோகத்துக்கு ஆளானாள். காசியில் அத்புதாநந்தர் (அம்மாவின் அத்தியந்த 'லாடு') காலகதி அடைந்தார். பலராம் போஸின் மகன் ராமகிருஷ்ண போஸும் ராமகிருஷ்ணரிடம் போய் விட்டார். தம்பி என்பதைக் காட்டிலும் பிள்ளை என்றே கருதி அம்மா எடுத்து வளர்த்த வரதாப் பிரசாத் நிமோனியா காய்ச்சலில் கண் மூடிவிட்டார். அம்மா தானும் கண்ணை மூடுகிற நாளுக்கு அவாவலானாள்.

''இந்தச் சரீரத்தாலே டாகூருக்கு என்ன காரியமெல்லாம் பண்ணணும்னு இருந்ததோ, அத்தனையும் பண்ணித் தீர்த்தாச்சு. **மற்றவாளுக்கு வழிகாட்டறதுக்கு எவ்வளவு செய்யணுமோ அதுக்கும்**

**அதிகமாகவே செஞ்சு காட்டியாச்சு.** இப்போ என் மனசு **அவர்** ஒருத்தரைத்தான் தேடிப் போறது. பாருங்களேன், ஒரு காலத்தில் இந்த ராது கிட்ட எத்தனை பாசம் வைச்சிருந்தேன்? இப்போ அவள் என்கிட்ட வந்தாலே எங்கே மறுபடி இந்த மனசைக் கீழே இழுத்துடுவாளோன்னு கிலியாயிருக்கு. டாகூர் தானே தன் காரியத்தை நடத்திக்கிறதுக்காக என்னைத் தளையாலே லோகத்துலே பிணைச்சிருந்தார்? இல்லாட்டா அவர் போனவிட்டு க்ஷண காலம் என்னாலே ஜீவிச்சிருக்க முடியுமா?'' என்று நிச்சலனமாகக் கூறினாள் அம்மா.

ராதுவை ஜயராம்பாடிக்கு உடனே அனுப்பிவிட வேண்டும் என்று அம்மா கட்டளை யிட்டபோது அனைவரும் அதிர்ந்து விட்டனர். அதன்பின் அம்மாவின் முடிவு வெகு வெகு நெருக்கமாகி விடும் என்பது அவர்கள் அறிந்ததே. ''நீங்கள் இப்படி மனசை எங்க கிட்டேயிருந்து நீக்கி, உள்ளுக்கு வாங்கிண்டா அப்புறம் எங்கள் கதி?'' என்றனர்.

''இதென்ன பேச்சு? பக்தாள் என்னிக்கும் தேடி வந்துண்டேதான் இருப்பா. அதுக்காக, சரீரம்னு ஏற்பட்ட ஒரு வஸ்து அழியாமலே இருக்க முடியுமா? என் காரியம் ஆச்சு, பாசம் போச்சு. குறுக்கே வராதேள்'' என்று கண்டிப்பாகச் சொன்னாள் அன்னை.

ராதுவின் குழந்தை வனு தவழ்ந்து கொண்டே வந்து அவள் மீதேற முயன்றபோது, ''யாரங்கே, இந்தக் குழந்தையை எடுத்துண்டு போங்கோ'' என்றாள். குழந்தையைப் பார்த்து, ''அப்பாடா! நான் எல்லா ஆசைகளிலிருந்தும் விடுபட்டுட்டேன். உன் ஜாலக்கு இங்கே பலிக்காது'' என்றாள்.

ராது, நளினி முதலியவர்களை ஊருக்கு அனுப்பிவிட வேண்டியது தான என்று சாரதாநந்தர் யோசித்த போது, நளினி அவரிடம் வந்து, ''அத்தைக்கு எங்களை அவ்வளவு கரிக்கிறதுன்னா நாங்க போகத்தான் வேணும். ஆனால் ஊரிலே என்ன சொல்லுவா? 'அந்த அம்மாகிட்டேயே வளர்ந்து ஆளான சிறுக்கிகள் அவளை மரணாவஸ்தையிலே விட்டுட்டு வந்துடுத்துகள்'னு சொல்ல மாட்டாளா?'' என்றாள்.

ஷரத் அம்மாவிடம் இதை விளக்கினார். ''சரி, சரி. அப்போ அதுகள் இங்கேயே இருந்துவிட்டுப் போகட்டும். ஆனா அவா நிழல்கூட என் மேலே விழாமல் பார்த்துக்கோ'' என்றாள் அம்மா.

சாரதாநந்தரின் கரத்தைப் பிடித்துக் கொண்டு ''ஷரத், எல்லோரையும் உன்கிட்டே விட்டுட்டுப் போறேன்'' என்று கூறினாள்.

இன்னொரு நாள், ''இந்த ஸரளாவுக்கு 'சாப்பிடு', 'சாப்பிடு'ங்கறதைத் தவிர வேறெதுவும் சொல்லத் தெரியலே ஷரத். இல்லாட்டா அந்தக் குச்சியை (தெர்மோ மீட்டர்) சொருகிறதுக்கு வரா. இம்சை தாங்கலே'' என்றாள்.

''அம்மா, இனிமேலே, உங்களை யாரும் இம்சைப்படுத்த மாட்டா. அது போகட்டும், ஒரு வாய் பால் நான் விடட்டுமா அம்மா?'' என்று பரிவு வழியக் கேட்டார் சாரதாநந்தர்.

''சரியப்பனே! உன் கையாலே நாலு சொட்டுப் பால் விடு. இந்த ஸரளா ஒண்ணும் பண்ண வேண்டாம்'' என்று குழந்தைபோல் கூறினாள் அம்மா.

மூக்கு வைத்த கோப்பையிலிருந்து சிறிது சிறிதாக தேவியின் திருவாயில் பால் வார்த்தார் சாரதாநந்தர். இரண்டு முழுங்கு முழுங்கியதும் அம்மா போதுமெனக் கையைக் காட்டினாள். உடனே நிறுத்திவிட்டார் சாரதாநந்தர். அம்மாவின் தலையணைகளைச் சரிசெய்து விட்டு, ''அம்மா, கொஞ்சம் தூங்குங்கோ. அப்புறம் இன்னொரு வாய் பால் சாப்பிடலாம்'' என்றார்.

''பார்த்துக்கோ சரளா! என் பிள்ளை எப்படி அமிருதமாப் பேசறான் பாரு. நீயும் நச்சுப் பண்ணறியே?'' என்றாள். ''என் மகனே! பாதி ராத்திரியிலே உனக்கு என்னாலே எத்தனை இம்சை? தூங்கப்பா'' என்று கூறி அவரைத் தட்டிக் கொடுத்தாள். அவர் கொசு வலையைப் படுக்கைக்குக் கீழே சொருகிவிட்டு, அம்மாவை வணங்கிச் சென்றார்.

அம்மாவின் 'சுமைதாங்கி' அவரே எனினும், தம் கைப்பட அம்மாவுக்கு உண்பித்ததில்லையே என்று அவருக்கு ஓர் ஆறாத குறை உண்டாம்! அதை இன்று ஆற்றிவிட்டாள் அம்மா!

அம்மா தன்னிடம் அதிருப்தி கொண்டதால் சரளா தேவி இரு தினங்கள் ஒதுங்கியே இருந்தாள். அரைப் பிரக்ஞையில் இருந்த அம்மா இதைக் கவனித்தவுடன் சரளாவை அழைத்து வரச் செய்தாள். அவள் தலையைத் தன் மார்பின் மீது சாய்த்துக் கொண்டு அவளது கன்னத்தை வருடினாள். ''செல்லப் பொண்ணூ! இந்த அசட்டு அம்மாகிட்ட கோவிச்சுண்டுட்டியா? நான் ஏதாவது ஏறுமாறாச் சொல்லி யிருந்தாக் கூட மனசுலே வைச்சுக்காதே, என் ராஜாத்தி'' என்று உருகிச் சொன்னாள். அம்மாவின் கொதிக்கும் உடலைச் சரளாவின் கண்ணீர் பன்னீராக நனைத்தது.

**உ**டல் வீக்கம் கண்டுவிட்டது! அருகே ஏதோ நிழலாடியதால் அம்மா தலையைத் திருப்ப முடியாமல் திருப்பிப்

பார்த்தாள். கதவருகே அன்னபூரணியம்மா தயங்கி நின்றாள். அருகில் வருமாறு சைகை காட்டினாள் அம்மா.

அம்மாவின் பக்கத்தில் வந்து நின்ற அன்னபூரணியம்மா தொண்டையடைக்க, ''அம்மா, எங்களை நிர்க்கதி ஆக்கிடுவேளா?'' என்றாள்.

குளிர்ந்த துளிர்க் குரலில் அம்மா, ''பெண்ணே! டாகூரைச் சரணடைஞ்ச பின் ஏதுக்குப் பயப்படணும்?'' என்றாள். பேச்சுத் தடைப்பட்டது. டாகூரைச் சரணடைந்து அறுபது ஆண்டுகளுக்குப் பின்னும் தான் ஒரு முறை தடுமாறி விழுந்து, ஸுரபாலாவைச் சபித்தது அந்த வேளையிலும் அவளது உள் மனத்தை அரித்தது போலும்! முன்னிலும் மிருதுவான குரலில், ''மகளே! ஒண்ணு மட்டும் நிச்சயமாச் சொல்வேன். சாந்தம்தானே சகலத்துக்கும் முடிவு? நீ சாந்தமாக வாழணும்னு, பிறத்தியார் எத்தனை தப்பு பண்ணினாலும் அதை மனசில் வாங்கிக்காதே. மற்றவாளுடைய குற்றங்களைப் பாராட்டாமல் இரு அம்மா. அவா வாளும் தங்களுடைய குற்றங்களையே பார்த்துக்கணும். அதுதான் சிலாக்கியம். உலகம் முழுவதையும் உன்னுடையதாக ஆக்கிக்கணும். அப்படி ஆக்கிக்க முடியும். அதுக்கே அப்பியாசம் பண்ணிண்டிரு. ஆமாம், யாருமே அந்நியம் இல்லை, என் பிரிய மகளே! இந்த உலகம் பூராவும் உன்னுடையது'' என்றாள்.

அம்மாவின் வாழ்க்கைத் தத்துவமே அதுதான். எதை வாழ்ந்து காட்டினாளோ அதையே வார்த்தையிலும் தந்துவிட்டாள். தேவியின் மதுர அதரத்திலிருந்து உதிர்ந்த கடைசி உபதேச மொழி இதுவே. அதன் பின் மௌனத்தில் முழுகலானாள்.

1920ம் ஆண்டு, ஜுலை 21ந் தேதி — ஆடி மாதம் சுக்ல ஷஷ்டி, காலை ஒன்றரை மணி. ஆழ்ந்த சுவாசம் ஒன்று, சுவாசமூலமான ஹம்ஸத்திலே, பராசக்தி வடிவான ஸ்ரீ ராமகிருஷ்ண ஹம்ஸத்துள்ளே நம் அன்பு அம்மாவை இரண்டறக் கரைத்து விட்டது!

அம்மா போய்விட்டதாகச் சொன்னார்கள். அம்மா எப்படிப் போக முடியும்? ''இந்த சாரதா சாகிறதாவது?'' என்று அவளே ஒரு முறை சொல்லியிருக்கிறாளே! ''உலகம் எல்லாம் உன்னுடையது'' என்று சொன்ன அம்மா உலகத்தை விட்டுப் போவதுண்டா?

பஞ்சபூத சரீரம் ஒன்று உண்டானால் அது அழிந்தும் தீரவேண்டும். ஆனால் பஞ்சபூதங்களையும் செய்த அன்பு எப்படி அழிய முடியும்?

பஞ்சபூதத்திடை மாட்டிக் கொண்டதற்குக் கூலியாக அந்த அன்பும் ஒரு சமயத்தில் அலப்புறுகிறது. அப்போது உலகை வெறுத்து ஓட எண்ணுகிறது. சரீரச் சட்டையை அவிழ்த்து ஓடியும் விடுகிறது. அப்புறம்? பஞ்சபூதச் சட்டை கழன்று, பரமாகாசமாக ஆனவுடன் அலப்புற எதுவுமே இல்லை என்று அது உணர்கிறது. அரூபமாகவே மீண்டும் தன் அன்பைப் புரியத் தொடங்குகிறது.

நம் அம்மா சாரதாமணி நம்மை விட்டுப் போகவே யில்லை. தஞ்சம் புகுந்த நெஞ்சுக்கெல்லாம் அஞ்சல் பாலிக்கப் பக்கத்திலேயே நிற்கிறாள்!

'ராமராமராமராம' என்று தாரக நாமத்தைச் சொல்லிக்கொண்டே தேவியின் தேகத்தைச் சுமந்து சென்று பேலூர் மடத்தைத் தொடும் கங்கை விளிம்பில் இறக்கினார்கள். அம்மாவின் அருமைப் பெண்கள் புண்ணிய சரீரத்தை கங்கையால் நீராட்டினர்.

அறிவுக் கனலான ஸ்வாமி விவேகாநந்தர் அக்கினியில் கலந்த ஸ்தலத்துக்கு சில கெஜ தூரம் வடக்கே சந்தணக் கட்டைகள் அடுக்கியிருந்தது. சார்ந்தார்க்கு மட்டுமின்றி, சாராதார்க்கும் சந்தனமாக இருந்த சாரதா தேவியின் சரீரம் பாவன அக்கினியை மேலும் பாவனமாக்கிற்று.

விசுவதேவியின் சோகமூட்டம்போல் தலைக்கு மேலே மழைக் கொண்டல்கள் மண்டிக் கிடந்தன. தகன காரியம் தடையின்றி நடக்குமா என்று அடியார் ஐயுற்றனர். ஆயினும் முட்டிக்கொண்டு நிற்கும் மழையைப் பொழியாமலே கண்ணீரை அடக்கிக் கொண்டு பல மணி நேரம் காத்திருந்தாள் வானமா தேவி.

அக்கினி பகவான் தன் புனிதப் பணியை முடித்து விட்டு மௌனமாக அடங்கிப் போனான்.

வானம் தாரை தாரையாகப் பொழியலாயிற்று. அந்த மழை நீர் நிலத்திலே ஊறும்போது—

அன்புக்கு ஆசிரயமாகவும், உழைப்புக்கு உறைவிடமாகவும், பெண்மைக்குப் பேடகமாகவும், எளிமைக்கு உருவகமாகவும், அடக்கத்துக்கு அணிகலனாகவும், தூய்மைக்குத் தாயகமாகவும் பூவுலகில் அறுபத்தாறாண்டுகள் உலவிய பூஉடலின் நுண் அணுக்கள் புண்ணிய பாரத மண்ணினுள் ஊறி உறைந்தன.

**அங்கவர் மாய அவருடல் பூந்துகள்**
**ஆர்ந்ததும் இந்நாடே – இதை**
**வந்தே மாதரம் வந்தே மாதரம்**
**என்று வணங்கேனோ?**

**சக்தி ஓம்!**